# அயோத்தியா காண்டம்

(இரண்டாம் பகுதி)






அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

உ

கவிச்சக்கரவர்த்தி

## கம்பர்

இயற்றிய

# இராமாயணம்

## அயோத்தியா காண்டம்

(இரண்டாம் பகுதி)






அண்ணுமலைப் பல்கலைக் கழகம்

1960

# உள்ளுறை


| | | | | பக்கம் |
|---|---|---|---|---|
| | முன்னுரை | ... | ... | i |
| நூல் : | | | | |
| 6. | கங்கைப் படலம் | ... | ... | 1 |
| 7. | வனம்புகு படலம் | ... | ... | 72 |
| 8. | சித்திரகூடப் படலம் | ... | ... | 116 |
| 9. | பள்ளிபடைப் படலம் | ... | ... | 161 |
| 10. | ஆறுசெல் படலம் | ... | ... | 279 |
| 11. | குகப் படலம் | ... | ... | 334 |
| 12. | திருவடிசூட்டு படலம் | ... | ... | 408 |
| பிற்சேர்க்கை : | | | | |
| | ஒப்பு நோக்கப்பெற்ற சுவடிகளும் அச்சுப்பிரதிகளும், அவற்றின் குறியீடுகளும் | ... | ... | i |
| | பாட வேறுபாடுகள் | ... | ... | 1 |
| | பாட்டு முதற்குறிப்பு அகராதி | ... | ... | 237 |
| | பிழையும் திருத்தமும் | ... | ... | 244 |

# கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு

தலைவர் :

பேராசிரியர் டாக்டர் திரு. ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் B.A., B.L.

உறுப்பினர்கள் :

,, திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள்

,, திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் M.A., B.L.

,, திரு. கோ. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் M.A., B.L.

திருவாளர் பி. ஸ்ரீ. ஆச்சாரியார் அவர்கள்

,, நீ. கந்தசாமிப்பிள்ளை அவர்கள்

,, மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை அவர்கள்

,, பு. ரா. புருஷோத்தம நாயுடு அவர்கள்

செயலாளர் :

திரு. கி. இராமாநுஜையங்கார் அவர்கள்

# முன்னுரை

திருவாளர் T. M. நாராயணசாமி பிள்ளை அவர்கள் M.A., B.L.
(துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்)

"முடியொன்றி மூவுலகங்களும் ஆண்டு, உன்
அடியேற்கு அருள்" என்று அவன்பின் தொடர்ந்த
படியில் குணத்துப் பரத நம்பிக்கு அன்று
அடிநிலை யீந்தானைப் பாடிப் பற
அயோத்தியர் கோமானைப் பாடிப் பற".

(பெரியாழ்வார் திருமொழி)

அண்ணாமலைப் பல்கலைக் கழகம், கவிச்சக்கரவர்த்தி கம்பர் இயற்றிய இராமாயண நூலைப் பல ஓலைச் சுவடிகளுடன் ஒப்புநோக்கிப் பாட வேறுபாடுகளையெல்லாம் தொகுத்துப் பிற்சேர்க்கையாக்கிச் சிறந்த பாடங்களை மூலத்தில் இணைத்து உரையும் வரைந்து அச்சிட்டு வரும் முறை எல்லார்க்கும் தெரிந்தது. இம்முறையில் அயோத்தியா காண்டத்தின் இரண்டாம் பகுதி இப்பொழுது வெளியிடப்பெறுகிறது.

இதனுள், இராமன் அரசு துறந்து வனம் நோக்கிச் சென்று கங்கைக்கரையடைந்தமை பேசும் கங்கைப் படலம் முதல், பரதன், இராமன்பால் பாதுகை பெற்று மீண்டு அதற்கு முடி சூட்டியமை பேசும் திருவடிசூட்டு படலம் முடிய ஏழு படலங்கள் அமைந்துள்ளன.

அவற்றுள், கங்கைப் படலம், வனம்புகு படலம், சித்திரகூடப் படலம், குகப் படலம் என்பவற்றுக்குத் தமிழாராய்ச்சித்துறை விரிவுரையாளர் திரு. கி. இராமாநுஜையங்காரும், பள்ளிபடைப் படலம், ஆறு செல் படலம் என்பவற்றுக்குத் தமிழாராய்ச்சித்துறை விரிவுரையாளர் திரு. செ. வேங்கடராமச் செட்டியாரவர்களும், திருவடிசூட்டு படலத்துக்குத் தமிழாராய்ச்சித்துறைத் தலைவர் வித்துவான் திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளையவர்களும் உரை வரைந்துள்ளார்கள்.

அயோத்தியா காண்டத்தின் அச்சுப் புத்தகங்களோடு முப்பதுக்கு மேற்பட்ட ஓலைச் சுவடிகளை ஒப்புநோக்கித் தொகுத்த பாடவேறு பாடுகள் இதன்கண் பிற்சேர்க்கையாகத் தரப்பெற்றுள்ளன.

இப்பதிப்பு திருந்திய முறையில் வெளிவருதற்கு வேண்டிய ஆய்வுரைகளையும், குறிப்புக்களையும் அன்புடன் உதவிவரும் பதிப்பாசிரியர் குழுவின் தலைவர் பேராசிரியர், சொல்லின்செல்வர் டாக்டர்

ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களுக்கும் இக்குழுவின் உறுப்பினர்களாகிய பேராசிரியர்கள் தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, கோ. சுப்பிரமணிய பிள்ளை, லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், பி. ஸ்ரீ. ஆச்சாரியார், நீ. கந்தசாமிப் பிள்ளை, வித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை, வித்துவான் பு. ரா. புருஷோத்தம நாயுடு ஆகிய அன்பர்களுக்கும் பல்கலைக் கழகத்தின் நன்றி உரியதாகும்.

இக்குழுவின் உறுப்பினராயிருந்து உதவி புரிந்துவந்த பேராசிரியர் இராவ்சாகிபு மு. இராகவையங்கார் அவர்களும், பேரன்பர் A. C. பால் நாடார் அவர்களும் இவ்வுலகவாழ்வை நீத்தமை வருத்தந்தருகிறது. அவர்களுடைய குடும்பத்தார்களுக்கு ஆழ்ந்த துயரத்தைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அயோத்தியா காண்டத்தின் இரண்டாம் பகுதியாகிய இதற்கு விளக்கவுரை யெழுதியும் சுவடிகளை ஒப்புநோக்கிப் பாடவேறுபாடுகளைத் தொகுத்தும் உதவிய தமிழாராய்ச்சித் துறையினர்க்கு எனது வாழ்த்து உரியதாகும்.

இப்பதிப்புக்கு வேண்டிய ஏட்டுச் சுவடிகளைக் கொடுத்துதவிய மதுரைத் தமிழ்ச் சங்கத்தார்க்கும், தஞ்சைச் சரசுவதி மகால் நூல் நிலையத்தார்க்கும் பல்கலைக் கழகத்தின் நன்றி உரியதாகும்.

இத்தகைய தமிழ்த் தொண்டுகள் பல சிறப்பாக நிகழ்தற்கு வேண்டிய பொருளுதவியினைப் புரிந்துவரும் இந்தியப் பல்கலைக் கழக மானியக் குழுவினர்க்கு அண்ணாமலைப் பல்கலைக் கழகம் தனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றது. இவ்வாறே கம்பராமாயணத்தின் ஏனைய காண்டங்களும் திருத்தமாக வெளிவரும் வண்ணம் இந்தியப் பேரரசும் தமிழ்நாட்டு அரசாங்கமும் ஆவனபுரிந்து ஆதரித்துவரும் என நம்புகிறேன்.

இதனைக் கண்கவர் வனப்புடன் அச்சிட்டுதவிய சென்னைக் கமர்ஷியல் அச்சகத்தாரது பணி பாராட்டற்குரியதாகும்.

தி. மூ. நாராயணசாமி பிள்ளை

# 6. கங்கைப் படலம்

## I. கதைச் சுருக்கம்

சுமந்திரனை அயோத்திக்குச் செல்லும்படி அனுப்பிவிட்டு இரவிடை வனம் நோக்கி வழிக்கொண்ட இராமன், நெறியிடையே சீதாபிராட்டியாரோடு இனிய காட்சிகளைக் கண்டு மகிழ்ந்து, கங்கையின் வடகரையடைந்தான். அங்குள்ள தவச் செல்வர்கள் எதிர்கொண்டு வரவேற்கச் சென்று அம்முனிவர் பன்னசாலையில் தங்கிச் சீதையொடு கங்கையில் நீராடி, நித்தியக் கடன்களை முடித்து, அம்முனிவர்பால் விருந்துண்டு இனிது வீற்றிருந்தனன். அங்கே இராமன் வரவு அறிந்த வேடர்தலைவனும் கங்கை கடத்தும் ஓடக்காரர் தலைவனுமான குகன், அப்பெருமானைக் காணக் கையுறையோடு வந்தடைந்தான். அவனுடைய அன்பைப் பாராட்டிய பெருமான், அவனை நோக்கி, 'யாங்கள் நாளையே கங்கையைக் கடக்க வேண்டும். நீ இன்று உன் ஊர்க்குச் சென்று தங்கி, நாளைக் காலை நாவாயோடு இங்கு வருக' என்றனன். கேட்ட குகன், தன் ஊர்க்குச் செல்ல விரும்பாது, பெருமானொடு தங்கி இயன்ற பணிபுரிய விழைந்து தன் விருப்பத்தைப் பெருமானிடம் தெரிவித்துத் தன்னை யேற்றுக்கொள்ளுமாறு வேண்டினன். அது கேட்ட இராமன், அவனுடைய பேரன்பு கண்டு உவந்து அன்று தம்மொடு தங்க அருள்புரிதலும், அவன், பெருமான் நாடு துறந்து காடு புகுந்த செய்தி இலக்குவன் வாயிலாக அறிந்து, பெரிதும் வருந்தியிருந்தான். இரவும் வந்து நீங்கியது. காலைக் கடன்களை முடித்துக்கொண்ட பெருமான், நாவாய் கொணருமாறு பணிக்க, குகன், தன்னூரில் வந்து தங்கும்வண்ணம் பெருமானை வேண்டுவானுயினன். பெருமான் குகனுடைய அன்பு மிகுதி கண்டு, "என் உயிரனையாய் நீ, இளவல் உன் இளையான், இந் நன்னுதலவள் நின்கேள், நளிர்கடல் நிலமெல்லாம் உன்னுடையது, நான் உன் தொழில் உரிமையின் உள்ளேன்" என்று அவனொடு தோழமை கொண்டு 'நாங்கள் கான்புக்குப் புண்ணியப் புனலாடிப் பெரியோரை வழிபாடு இயற்றி விரைவில் உன்பால் வருவோம்; நீ விரைவிற் சென்று நாவாய் கொணர்க' எனக் குகனும் அவ்வாறே செய்தனன். பெருமான் முனிவரிடம் விடைபெற்றுச் சீதையோடும் இலக்குவனோடும் ஓடம் ஏறிக் குகன் ஓடம் செலுத்த, முனிவர் மனம் பின் தொடரக் கங்கையின் தென் கரையை அடைந்து, குகனை நோக்கிச் சித்திரகூடத்துக்குச் செல்லுதற்குரிய நெறியை வினயினன். குகன், வனத்தில் தனக்குள்ள பயிற்சி மிகுதியும் தன் ஆற்றல் மிகுதியும் கூறித் தன்னையும் உடன் அழைத்துச்

செல்லுமாறு வற்புறுத்தியதோடு, இராமன் இசைந்தால் தன் சுற்றத்தாரோடும் படைஞரோடும் உடன் வந்து எல்லாப் பணிகளையும் இனிதே செய்வதாகத் தெரிவித்தனன். அந்நிலையில், பெருமான், 'உடன் வருதற்கு இலக்குவன் ஒருவனே போதும்; அயோத்தியிலுள்ள நம் சுற்றத்தைக் காத்தற்கு உன் தம்பி பரதன் இருக்கிருன். இங்குள்ள நம் கிளைஞரைக் காத்தற்கு நீ இங்கிருத்தல் இன்றியமையாதது; என் கட்டளைப்படி நீ இங்கே தங்கி நம் சுற்றத்தாரைக் காத்துக் கொண்டிரு. நாங்கள் வனவாசம் முடிந்து அயோத்திக்குத் திரும்பும்போது உன் ஊர்க்கு வருவோம்' என்று கூறி, அவனிடம் விடைபெற்று வனத்தின் நெடுநெறியிற் செல்வானுயினன்: என்பது இப்படலத்தின் கதைச் சுருக்கம்.

## II. கதா பாத்திரங்கள்

நாடகக் காப்பியமாயும் அமைந்த இந்நூலுள் இப்பகுதியில் வரும் கதாபாத்திரங்கள், இராமபிரான், சீதாபிராட்டி, இலக்குவன், கங்கைக் கரைத் தவச் செல்வர், குகன் என்போராவர். இவருள், இராமபிரானும் சீதாபிராட்டியும் இலக்குவனும் இந்நூல் முழுதும் ஒவ்வொரு பகுதியிலும் தம் குண நலங்கள் விளங்க நின்ற பாத்திரங்களாவர்.

(1) இராமன் :—சீதையைத் திருமணம் புரிந்த நாளொடு திருமுடி புனைய மணியணி பூண்டு நின்ற நாளொடு தந்தை சொற்கொண்டு மணி முடி தவிர்ந்து கடுவனம் புகுந்த நாளொடு வாசியற என்றும் ஒரு தன்மைத்தான அழியாத வடிவழகுடையவன். 'இவன் வடிவென்பதோர் அழியா அழகுடையான்' என்று ஆசிரியர் இப்படலத் தொடக்கப் பாடலில் கூறியதும் இங்கு நோக்கத்தகும். கங்கைக்கரை முனிவரும் குகனும் ஈடுபட்டதும் இவ்வடிவழகிலே. இவ்வடிவழகொடு தன்பால் அன்புடையவர் மிகமிக இழிந்தாரேனும், அவரோடு ஒரு நிகராகக் கலந்து தோழமை கொள்ளும் குணநலமும் இப்பெருமானுக்கே யுரிய சிறப்பியல்பாய் அமைந்தது. குகனெடு உளதாய தோழமையும் இக் குணத்தின் விளைவே. குகனெடு தோழமை கொண்ட குண நலத்தினை நினைந்து நினைந்து சீதாபிராட்டி நெஞ்சுருகி நின்ற நிலை,

"ஆழ நீர்க்கங்கை அம்பி கடாவிய
ஏழை வேடனுக் கெம்பி நின் தம்பி நீ
தோழன் மங்கை கொழுந்தி யெனச்சொன்ன
வாழி நண்பினை யுன்னி மயங்குவாள்"

(சுந்தர. 352)

என்று ஆசிரியரால் பேசப்பட்டது.

"ஏழை யேதலன் கீழ்மகன் என்னது
இரங்கி மற்றவற் கின்னருள் சுரந்து
மாழை மான் மட நோக்கி யுன் தோழி
உம்பி யெம்பியென் றொழிந்திலை உகந்து
தோழன் நீ எனக் கிங்கொழி என்ற
சொற்கள்வந் தடியேன்மனத் திருந்திட
ஆழிவண்ண நின் அடியிணை யடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே"

(பெரிய திருமொழி. 5. 8. 1)

என்று திருமங்கையாழ்வார் ஈடுபட்டதும் இக்குணத்தினையுன்னி யன்றோ !

(2) சீதாபிராட்டியோ சனகன் மகள்; சம்பரனை வென்று இந்திரனுக்கு வாழ்வளித்த பெருந்தகையான தசரத சக்கரவர்த்தியின் அருமை மருகி; அறந்தலை நிறுவப் பிறந்த பெருமகன் மனையாள்; உயர்வறவுயர்ந்த அரசச்செல்வந் துய்த்துநின்ற நிலையில், அது துறந்து வனம்புகும் தலைவனைப் பிரிந்திருத்தலாற்றாது, அல்லலேற்ற கானக வாழ்வை விரும்பியேற்றுத் தலைவனுடன் போந்த மாண்புடையாள். 'இல்லதென் இல்லவள் மாண்பானல்' என்ற திருக்குறட்கு எடுத்துக் காட்டாகும் நங்கை. இவர் வழிச் செலவில் வருந்தாது மகிழ்ந்து சென்றமை இப்படலத் தொடக்கத்துச் சில பாடல்களால் அறியத்தகும்.

(3) இலக்குவன் :—இராமபிரான் பக்கல் அடிமைநிலை தலைநின்றவன்; தலைவனைப் பிரிந்து உயிர்தரியாத மாண்பினன்; இராமபிரானுக்கு "எல்லா இடத்திலும் என்றும் எப்போதிலும் எத்தொழும்பும் சொல்லால் மனத்தால் கருமத்தினல் செய்வன் சோர்வின்றியே" என்னும் பாரிப்புடையவன். இராமபிரான் தந்தை சொல் தலைமேற்கொண்டு வனம்புக்க பெருந்தகை யென்றால், இவன் அப்பெருமானுக்குத் தொண்டுசெய்தலாகிய தான் விரும்பிய செயலுக்கே, அன்பு ஊற்றெடுக்க நின்ற தாயால், "மகனே ! ஆகாததன்றால் உனக்கு அவ்வனம்; மாகாதல் இராமனம்மன்னவன், வையமீந்தும் போகா உயிர்த்தாயர் நம் பூங்குழற் சீதை என்றே ஏகாய், இனி இவ்வயின் நிற்றலும் ஏதம்; இவன் பின்செல்; தம்பி என்னும்படியன்று; அடியாரினின் ஏவல் செய்தி, மன்னும் நகர்க்கே இவன் வந்திடின் வா; அதன்றேல் முன்னம் முடி" என்று கட்டளையும் பெற்றுப் போந்த பெருந்தகை. இவன் பணி இப்படலத்தில் தொடங்குகிறது. 'பருவிலேந்திக் காலை காண்பளவும் தம்பி இமைப்பிலன் காத்து நின்றான்' என்று குறித்தது இவன் பணியினையே.

(4) கங்கைக்கரை முனிவர் :—இவர் ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும் வல்ல தவச் செல்வர்; மறைவல்லார்; இன்ப துன்பங்கள் அற்ற சமநிலை கைவரப்பெற்றோர். பிறர்க்குக் காண்டற்கரிய இறைவனை யோக முதிர்ச்சியால் அகக் கண்ணால் கண்டு மகிழ்ந்ததேயன்றி, அவ்விறைவனமிசமாய்த் தோன்றிய இராமபிரானை முகக் கண்ணாலும் கண்டு வரவேற்று மகிழ்ந்து விருந்தூட்டிய மேலவர்.

(5) குகன் :—கங்கைக் கரையில் வாழ்ந்த வேடர்தலைவன்; எல்லையற்ற நாவாய்களையுடையவன்; வழிச் செல்வோர் கங்கை கடத்தற்கு இடர்ப்படாதவாறு தன் ஓடங்களிலேறிக் கங்கை கடந்தேற வுதவும் உபகாரி; இராமபிரான் வடிவழகில் துவக்குண்ட மனம் உடையான்; அப்பெருமானருட்கு இலக்கான சிறப்புடையவன்; உயிர்கள் பிறவிக் கடல் கடக்க உதவும் அடிப்புணையுடைய இறைவன் அமிசமான அப்பெருமானைத் தன் ஓடத்திலேற்றிக் கங்கை கடத்துவித்தவன். அப்பெருமானைப் பிரியாது உடனிருந்து எல்லாப் பணிகளும் செய்யும் பெருவிருப்புடையவன். இவன் இயற்பெயர் இன்னதென்று புலப்படவில்லை. குகன் என்பது இவனுக்குக் காரணப் பெயராய் அமைந்ததென்று தோன்றுகிறது. குகன் என்னும் வடசொல் (குகை முதலிய இடங்களில்) மறைந்திருப்பவன் என்று பொருள்படும் என்பர். குகைபோல அறிதற்கரிய பெருமையுடையான் எனலும் அமையும். நாவாய் வேட்டுவன் இராமபிரானடிமைநிலை விரும்பி அப்பெருமான் அருட்கு இலக்காய்க் குகனான செய்தி இப்படலத்தே பேசப்பட்டது. இவன் இராமபிரான் பக்கல் வளர்ந்த பத்திமையால் இலக்குவனையும் ஐயுற்று நோக்கி நின்றனன்; பின்பு பரதாழ்வானையும் சங்கித்துத் தெளிவானாயினன். அவ்வாறு தெளிந்து அடியார் பத்திமையும் நிறைந்து குகப்பெருமாள் ஆயினமை இக்காண்டத்தின் 11-ஆம் படலத்தாற் பேசப்படும்.

## III. சந்தங்கள்

இப்படலத்துப் பயின்ற சந்தங்கள் நான்கு; அவை சந்தருப்பத்துக்கு ஏற்றனவாய் அமைந்தவை. கற்போருள்ளத்தே களிப்பும் கனிவும் மிகுவிப்பவை.

## IV. இப்பகுதியில் வான்மீகத்துக்கும் இராமாவதார நூலுக்கும் உள்ள வேற்றுமைகள்

இராமபிரான் கங்கையை அடைந்து குகன் உதவியால் அதனைக் கடந்து வனத்துள் புகுந்த செய்தி வான்மீகத்தில் அயோத்யா காண்டத்து 50, 51, 52-ஆம் சருக்கங்களில் பேசப்பட்டது வான்மீகத்தில் இராமபிரான் முதலியோர் கங்கை கடந்த பின்பே சுமந்திரன் திரும்பி அயோத்தி சென்றமை பேசப்படுகிறது. இராமபிரான் கங்கையை

அடைதற்குமுன்பே சுமந்திரனை அயோத்திக்கு அனுப்பிய செய்தி பேசுகிறது இராமாவதாரமாகிய இக்காப்பியம். கங்கைக் கரையில் இராம பிரான் முனிவர்பக்கல் விருந்தருந்திய செய்தி வான்மீகத்தில் இல்லை. குகனுடைய பணியாட்கள் ஓடம் செலுத்த இராமன் முதலியோர் கங்கை யின் தென்கரையை அடைந்தனர் என்பது வான்மீகம். குகனே இராம பிரான் முதலியோர் வீற்றிருந்த ஓடத்தைச் செலுத்தினுன் என்பது இந்நூல் கூறுவது. இராமபிரான் சித்திரகூடஞ் செல்லுதற்குரிய நெறி யினைப் பரத்துவாச முனிவர்பக்கல் அறிந்தார் என்பது வான்மீகம்; குகனிடம் கேட்டறிந்தார் என்பது இந்நூல் கூறுவது. இவையே இவற் றிடை வேறுபாடு.

## V. படலப் பெயரமைதி

பழஞ்சுவடிகள் பலவற்றில் கங்கைப் படலம் என்ற தலைப்பே உள்ளது. பழம் பதிப்புக்கள் எல்லாவற்றிலும் அத்தலைப்பே காணப் படுகிறது. சில ஏட்டுச்சுவடிகளில் குகப் படலம் என்றும் வேறு சில சுவடிகளில் குகன் நட்புப்புரி படலம் என்றும் மற்றும் சில சுவடிகளில் வழிநடைப் படலம் என்றும் தலைப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. குகப்படலம் குகன் நட்புப்புரி படலம் என்று இங்கே தலைப்புக் கொடுக் கப்பட்ட சுவடிகளில் இக்காண்டத்தின் 11ஆவது படலம் கங்கைப் படலம் அல்லது கங்கை காண்படலம் என்ற தலைப்பின் கீழ் வரையப்பட்டுளது. இது கொண்டு ஆருவது கங்கைப் படலமாகிய இது குகப் படலமாகவே இருக்கவேண்டும் என்றும், பின் பதினொன்ருவதாகவுள்ள குகப்படலம் கங்கைப் படலமாகவே இருக்க வேண்டும் என்றும் உறுதியாகக் கருதி யவர்களும் உண்டு. மேலும் சில சுவடிகளில் இந்த ஆரும் படலத் தின் முதல் 27 செய்யுட்களும் கங்கைப் படலம் என்ற தலைப்பின்கீழும் 28 முதல் 72 முடியவுள்ள 45 செய்யுட்களும் குகப்படலம் என்ற தலைப்பின் கீழும் பதினொராம் படலம் கங்கை காண் படலம் என்ற தலைப்பின்கீழும் வரையப்பட்டுள்ளன. இது கொண்டு இந்த ஆரும் படலத்தின் முன் 27 செய்யுட்களையும் கங்கைப் படலம் என்ற தலைப்பின் கீழும் பின் 45 செய்யுட்களையும் குகப்படலம் என்ற தலைப்பின் கீழும் பதினொராம் படலத்தைக் கங்கை காண் படலம் என்ற தலைப்பின் கீழும் பதிப்பித் தோரும் உளர். ஆதலால் இப்படலத்தின் பெயர்ப் பொருத்தம் ஆராயத்தகும்.

குகப்படலம், குகன் நட்புப்புரி படலம் என்னும் தலைப்புக்கள், இப் பகுதியில் நுவலப்படும் கதையில் ஒரு பகுதியையே வரைந்து சுட்டு வனவாயுள்ளன. மேலும், இப்பகுதியில் நிகழும் செயல்களுக்குக் குகன் வினைமுதலுமாகான்; கதாநாயகனை இராமபிரானுல் நட்புக் கொள்ளப் பட்டவனேயன்றிக் கதாநாயகனெடு நட்புக் கொண்டவனும் ஆகான்; அன்றியும், இக்காண்டத்தின் பதினொராம் படலக் கதை நிகழ்ச்சி குகன்

செயலாய், அவன் பெயரால் குகப்படலம் என்று அடிப்பட வழங்கப் பட்டு வருதலும் நோக்கத்தகும். வழி நடைப் படலம் என்பது வழக் காற்றில் வந்த பெயராயில்லை. ஆற்றுப்படலம் அல்லது ஆறு செல் படலம் என்ற பொருளுடையது எனின், இக்காண்டத்தின் பத்தாம் படலம் ஆற்றுப் படலம் என்று வழங்கப்படுதலும் சிந்தித்தற்குரியது.

ஆகவே, இந்த ஆருவது படலம் 72 பாட்டும், இக்கதா நாயகனை இராமபிரான் கங்கையை அடைந்தான் ; அங்கு முனிவரால் வரவேற்கப் பட்டு அவர்பால் விருந்துண்டு தங்கினுன் ; குகனெடு தோழமை கொண்டான்; அவனுதவி கொண்டு கங்கை கடந்து தென்கரை அடைந் தான் : என்று இக்காப்பியத் தலைவன் கங்கைக் கரையில் நிகழ்த்திய செயல்களையே பேசுதலின், கங்கைப் படலம் என்ற தலைப்பின் கீழ் அமைதலே பொருந்துவதாகும்.

'விரிதிரைப் புனற் கங்கையை மேவினுன்,' (2024)

'அறிஞர் காதற் கமை விருந்தாயினுன்,' (2041)

'யாதினுமினிய நண்ப இருத்தியீண் டெம்மொடென்றுன்,' (2060)

'என் உயிரனையாய் நீ இளவல் உன் இளையான் இந்
நன்னுதலவள் நின்கேள் நளிர்கடல் நிலமெல்லாம்
உன்னுடையது நான் உன்தொழில் உரிமையின் உள்ளேன் '

'வடதிசை வருமந்நாள் நின்னுழை வருகின்றேன் '

'விடுநதி கடிதென்றுன்.'

'அத்திசையுற்றையன் '

என்ற தொடர்கள் கதாநாயகன் செயலைச் சுட்டுவனவாய் ஆசிரியர் கூற்றில் அமைந்தமையும் காணலாம்.

மேலும், கங்கைப் படலம் என்ற தலைப்பே அமைதியுடையதென்பது வேருெராற்ருனும் புலனுகும். அது வருமாறு :—இராமாவதாரம் முதலியவை, திருமாலின் ஐவகை நிலைகளுள் விபவம் என்ற பெயரால் வழங்கப்படும். இந்த விபவநிலைக்குப் பெருக்காற்றினை உவமை கூறுவர் பெரியோர் ; 'பெருக்காறு போலே விபவங்கள்' (1·39) என்பது ஸ்ரீவசநபூஷணம். பெருக்காறு, செல்லும் நெறியில் தன்னுடன் வந்து கலந்த சிற்ருறுகளையும் வேறு பிரித்தறியலாகாதவாறு தன்னுட் கொண்டு தூயனவாக்கும் இயல்புடையஃது; அது போலப் பெரியோரும், தம்மை அடைந்தாரைத் தம்மோடொப்பக் கொண்டு தூயராக்கி உலகம் பாராட்டும் நிலையில் வைப்பர். பெருக்காறு போல்பவனுன இராமன் தன்னையடைந்த குகனெடு தோழமை கொண்டு அவனை யாவர்க்கும் தொழுகுலமாக்கின செய்தி பேசுதலின், இதற்குக் கங்கைப்

படலம் என்ற தலைப்பு அமைவுடையதே யாகும். பெருக்காறு என்பது வற்றாத நீர்ப் பெருக்குடைய கங்கையையும் குறிக்கும்.

இராமன் அடைந்த இடவகையால் வனம்புகுபடலம் சித்திரகூடப் படலம் என்று தலைப்பு அமைந்தமை போல, அவன் கங்கைக்கரை யடைந்தமை பேசும் பகுதிக்குக் கங்கைப் படலம் என்று தலைப்பு அமைந்தது என்று கொள்ளுதலும் அமையும்.

## VI. இடைச்செருகற்பாடல்கள்

இப்படலத்துள் புகுந்த இடைச் செருகற் பாடல்கள் ஆறு. அவற்றுள் சில பாடல்களை ஆசிரியர் இயற்றியவை யென்று கொண்டு மூலத்தொடு சேர்த்து அச்சிட்டவர்களும் உண்டு. அவையெல்லாம் பின்னோரால் ஆங்காங்கு இயற்றிச் சேர்க்கப்பட்டன என்று தெரிதலால் அவற்றை மூலத்தொடு சேர்க்காமல் உரைமுடிவிற் காட்டிக் குறிப்பும் வரையலாயிற்று.

---

# 6. கங்கைப் படலம்

## இராமபிரான் சீதாபிராட்டியுடனும் இலக்குமணனுடனும் செல்லுதல்

**2016.** வெய்யோனொளி தன்மேனியின்
★ விரிசோதியின் மறையப்
பொய்யோவெனு மிடையாளொடு
மிளையானொடும் போனான்
மையோமர கதமோமறி
கடலோமழை முகிலோ
வையோவிவன் வடிவென்பதொ
ரழியாவழ குடையான்.

**வெய்யோன் ஒளி தன் மேனியின் விரி சோதியின் மறையப்
பொய்யோ எனும் இடையாளொடும் இளையானொடும் போனான்;
மையோ ! மரகதமோ ! மறிகடலோ ! மழை முகிலோ !
ஐயோ ! இவன் வடிவு என்பது ஓர் அழியா அழகு உடையான்.**

பொழிப்பு :—அஞ்சனமோ! மரகத மணியோ! அலை மடங்கிவரும் கடலோ! மழை (பொழிய எழுந்த) மேகமோ! என்று சொல்லத்தக்க ஒப்பற்ற அழியாத வடிவழகுடையவனாகிய இவன் (இராமன்), தன் திருமேனியினின்று பரவியெழுகிற (பசிய) ஒளியினால் சூரியனுடைய (செய்ய) ஒளி மறையும்படி, இல்லையோ என்று கருதத்தக்க (நுண்ணிய) இடையையுடைய சீதாபிராட்டியோடும் இளைய (வனான இலக்கு)வனோடும் (கானகம் நோக்கிச்) சென்றான்; ஐயோ!

குறிப்பு :—மையோ மரகதமோ மறிகடலோ மழைமுகிலோ என்பது ஓர் அழியா வடிவழகுடையான் இவன், தன்மேனியின் விரி சோதியின் வெய்யோனொளி மறைய, இடையாளொடும் இளையானொடும் போனான்; ஐயோ! என இயைக்க. மை-கண்ணுக்கு இடும் அஞ்சனம். மரகதம்-பச்சை; மணி வகையின் ஒன்று. மறிதல்-மடங்குதல். வடிவு-திருமேனி. மக்கள் உடலழகு வளர்ந்து தேய்ந்து அழியுந்தன்மைத்தாகலின் இராமபிரான் வடிவழகு அழியா அழகு எனப்பட்டது. மை நிறத்தாலும், மரகதம் நிறத்தோடு ஒளியாலும், கடல் அவற்றொடு அளத்தற்கரிய தன்மையாலும், முகில் அவற்றொடு-

தண்மையாலும் இராமபிரானுடைய திருமேனிக்கு உவமமாகும். இராம பிரான் வனம் நோக்கிச் சென்ருன் என்று சொல்லப்புகுந்த கவி யின் உள்ளத்தே அப்பெருமானுடைய திருமேனியின் பேரெழில்கள் ஒன்றின்மேல் ஒன்ருகத் தோன்ற, அவை பிறர்க்கும் புலனுமாறு ஒப் புடைப் பொருள்களால் விளக்கியவாறு. 'மைவண்ணம் கரு முகில் போல் திகழ்வண்ணம் மரதகத்தின்-அவ்வண்ண வண்ணன்' (5-6-9), 'மைவளர்க்கும் மணியுருவம் மரதகமோ மழைமுகிலோ' (8-1-7), 'மையார் கடலும் மணிவரையும் மாமுகிலும்.........போன்றிருண்ட மெய்யான்' (11-7-5) என்னும் பெரியதிருமொழிப் பாசுரங்களும் இங்கு நோக்கத்தகும். பிராட்டியின் இடையின் நுண்மை, 'மருங்கிலா நங்கை' (601), 'இல்லையுண்டென்ன நின்ற இடை' (1213) என முன் னும் கூறப்பட்டது. இடையழகு கூறியதுகொண்டு, பிராட்டியின் ஏனை வடிவழகு அனைத்தும் கொள்ளத்தகும். இத்தகைப் பேரழகு வாய்ந்த இராமபிரான் அரசுதுறந்து, திருநகர் தீர்ந்து, சீதாபிராட்டி யுடனும் இளவலுடனும் கொடுவனம் புகுதல் முறையோ என்பது பட ஐயோ என்ருர். இது கவிக்கூற்று. ஐயோ வென்பது இரக்கம் குறித்து நின்றது. இங்கே, 'நெய்வாய வேல் நெடுங்கண் நேரிழை யும் இளங்கோவும் பின்பு போக எவ்வாறு நடந்தனை எம் இரா மாவோ' (பெருமாள் திருமொழி 10-2.) என்ற அருளிச் செயற்பகுதி ஒப்புநோக்கத்தகும்.

இனி, ஐயோ என்பதனை வியப்புக் குறித்ததாகக் கொண்டு, 'மையோ! மரகதமோ! மறிகடலோ! மழைமுகிலோ! என்பது ஓர் அழியா அழகுடையான்; ஐயோ! என்று கூட்டி, இராமபிரான் வடி வழகினை வியந்துகூறியதாக உரைத்தலுமாம். (1)

1, 3, 7, 19, 20, 25, 41, 47. என்னும் குறியீடுள்ள சுவடிகளில் குகப்படலம் என்றும், 28 என்னும் குறியீடுள்ள சுவடியில் குகன் நட்புப் புரிந்த படலம் என்றும், 45ல் குறிப்பில் வழிநடைப் படலம் என்றும், 2, 5, 12, 17, 18, 23, 42–44, 49, 50 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் கங்கைப்படலம் என்றும் தலைப்புக் கொடுக்கப்பட்டுள்ளது.

40, 45 என்னும் சுவடிகளில் 'வெய்யோனொளி' என்னும் முதற் குறிப்புடைய செய்யுள் முதல் 'வருந்தித்தான்தர' என்னும் முதற் குறிப்புடைய பாடல் முடியவுள்ள 27ம் கங்கைப்படலம் என்றும், பின் 'ஆயகாலையில்' என்பது முதல் 'பணிமொழிகடவாதான்' என்பது இறுதியாகவுள்ள 45 செய்யுட்களும் குகப்படலம் என்றும் இரண்டு படலமாகப் பிரித்து வரையப்பட்டுள்ளன.

பெருமானும் பிராட்டியும் நெறியிடைக் கண்ட காட்சி 2017-2023

**2017.** அளியன்னதொ ரறறுன்னிய
குழலாள்கட லமுதின்
றெளிவன்னதொர் மொழியாணிறை
தவமன்னதொர் செயலாள்
வெளியன்னதொ ரிடையாளொடும்
விடையன்னதொர் நடையான்
களியன்னமு மடவன்னமு
முடனாடுவ கண்டான்.

அளி அன்னது ஓர் அறல் துன்னிய
குழலாள், கடல் அமுதின்
தெளிவு அன்னது ஓர் மொழியாள், நிறை
தவம் அன்னது ஓர் செயலாள்,
வெளி அன்னது ஓர் இடையாளொடும்
விடை அன்னது ஓர் நடையான்
களி அன்னமும் மட அன்னமும்
உடன் ஆடுவ கண்டான்.

பொ :—வண்டுபோன்ற சிறந்த நெறிந்தடர்ந்த கூந்தலையுடையவளும் திருப்பாற்கடலிலே தோன்றிய அமுதின் தெளிவையொத்த (இனிய) மொழியினையுடையவளும் நிறைந்த தவத்தினையொத்த தூய ஒழுக்கமுடையவளும் ஆகாயம் போன்ற இடையினையுடையவளும் ஆகிய சீதாபிராட்டியோடு காளையின் நடைபோலும் நடையினையுடைய இராமபிரான், களிப்புடைய சேவலும் இளம்பெடையும் ஆகிய அன்னங்கள் (தம்முட்) சேர்ந்து விளையாடுவனவற்றை நோக்கினன்.

கு :—அளி–வண்டு; கூந்தலுக்கு வண்டு நிறத்தால் உவமை. அறல்-மயிரின் நெறிப்பு. அறல் துன்னிய குழல் என்பதனுள் அறல் என்பதற்குக் கருமணல் என்று பொருள் கொண்டு அறல் போலச் செறிந்த குழல் என்று பொருள் உரைத்தலும் ஆம். உருவு புலப்படாத இடையின் நுண்மைபற்றி 'வெளியன்னதொர் இடை' என்றார். 'பொய்யோ எனும் இடையாள்' என முன் செய்யுளிற் கூறியதும் இக்கருத்தே பற்றி. மிடுக்கும் செருக்கும் பற்றிக் காளையின் நடை இராமபிரான் நடைக்கு உவமிக்கப்பட்டது. (2)

**2018.** அஞ்சம்பையு மையன்றன
தலகம்பையு மளவா
நஞ்சங்களை வெலலாகிய
நயனங்களை யுடையா
டுஞ்சுங்களி வரிவண்டுகள்
குழலின்படி சுழலக்
கஞ்சங்களை மஞ்சன்கழ
னகுகின்றது கண்டாள்.

அஞ்சு அம்பையும் ஐயன்தனது அலகு அம்பையும் அளவா
நஞ்சங்களை வெலல் ஆகிய நயனங்களை உடையாள்,
துஞ்சும் களி வரி வண்டுகள் குழலின்படி சுழலக்
கஞ்சங்களை மஞ்சன் கழல் நகுகின்றது கண்டாள்.

பொ :—(மன்மதனுடைய) ஐந்து அம்புகளின் ஆற்றலையும் வியக்கத்தக்கவனான இராமபிரானுடைய கூர்மையான அம்பின் ஆற்றலையும் அளந்து (-முடிவுகண்டு அவற்றினும் மேம்பட்டு) நஞ்சினையும் வெல்லும் வன்மைமிக்க கண்களையுடைய சீதாபிராட்டி, களிபொருந்தியனவும் உடலில் அமைந்த வரிகளையுடையனவுமான வண்டுகள், பாவில் நெய்குழல்போல (தாமரை மலருக்கும் இராமன் அடிமலருக்கும் வேறுபாடு தெரியாமல் மயங்கி, ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குத் தாவித் தாவி)த் திரிதலால், தாமரைமலர்களை இராமனுடைய அடிமலர்கள் எள்ளி நகையாடுதலைக் கண்டாள்.

கு :—ஐந்து, மைந்தன் என்பவை எதுகைநோக்கி, முறையே அஞ்சு, மஞ்சன் எனப் போலியாய்நின்றன. மன்மதனுடைய ஐந்து அம்புகள், தாமரை மா அசோகு முல்லை நீலம் என்பவற்றின் மலர்கள். அலகு-கூர்மை; இலைவடிவுமாம். மன்மதன் அம்புகளும் இராமன் அம்புகளும் செய்யும் செயல்களையெல்லாம் தம் நோக்கினாலேயே ஆற்ற வல்லன என்று முன் இரண்டடிகளால் பிராட்டிகண்களின் ஆற்றல் மிகுதி கூறியவாறு. நஞ்சும் பிராட்டியின் கண்களும் கருமை நிறமுடைமையால் ஒக்கும். நோக்கினாரை உய்வித்தலின் பிராட்டி கண்கள் நஞ்சினை வெல்வனவாயின. நஞ்சங்களையும் என்பதில் உம்மை தொக்கது; விகாரம். குழல்-நெய்குழல் ; ‘பாவிடையாடு குழல்போல்’ (அடைக்கலப்பத்து. 8) என்பது திருவாசகம். மென்மை முதலிய தன்மைகளால் இராமனுடைய அடிகள் தாமரை மலர்களை ஒக்குமேனும், பனியால் தேம்பியும் மதியால் குவிந்தும் தாமரைமலர்கள் அழகழிதல் போலன்றி, என்றும் ஒருபடியே அழியாத அழகுடையவாய் விளங்கு

தலாலும், பூவின் இயல்பு நன்கறியும் வண்டுகளும் பூவென்றுமயங்கி மொய்க்கும்படி யிருத்தலாலும் இராமன் அடிகள் தாமரைமலர்களை வென்று நகுவனவாயின என்க. ‘இராமன் திருமுகச் செவ்வி நோக்கின் ஒப்பதே முன்பு பின்பு.........அப்பொழுது அலர்ந்த செந்தாமரையினை வென்றது’ (1691) என்று ஆசிரியர் முன்னே கூறியதும் இங்கு நோக்கத்தகும். ‘கஞ்சங்களை மஞ்சன் கழல் நகுகின்றது கண்டாள்’ என்றது, இராமனுடைய திருமேனியுறுப்புக்களுக்குப் போலியான பொருள்களையும் கண்டு மகிழும் இயல்புடைய பிராட்டி, அல்லலேற்ற கானகத்து நடத்தலால் இராமனுடைய அடிகள் கன்றிப் பொலிவழிந்தனவோ என்று கலங்கி, தாமரைமலர்களையும் இராமன் அடிகளையும் ஒருங்கு நோக்கி அவன் கழலின் செவ்விமிகுதி கண்டு வியந்தவாறு. ‘வண்டுகள் குழலின்படிசுழலும்’ என்று பாடங்கொண்டு, வண்டுகள் குழலோசைபோலும் இசையுடையவாய், மலரும் அமயம் நோக்கிச் சுழன்று கொண்டிருக்கின்ற என்று பொருள் உரைத்தலும் அமையும். (3)

**2019.** மாகந்தமு மகரந்தமு
மளகந்தரு மதியின்
பாகந்தரு நுதலாளொடு
பவளந்தரு மிதழான்
மேகந்தனி வருகின்றது
மின்னேடென மிளிர்பூ
ணாகந்தனி வருகின்றது
பிடியோடென நடவா.

மா கந்தமும் மகரந்தமும் அளகம் தரும் மதியின்
பாகம் தரும் நுதலாளொடு பவளம் தரும் இதழான்
மேகம் தனி வருகின்றது மின்னேடு என மிளிர் பூண்
நாகம் தனி வருகின்றது பிடியோடு என நடவா.

பொ :—பவளத்தின் தன்மை வாய்ந்த இதழ்களையுடைய இராமபிரான், நறுமணம் தருகின்ற கூந்தலையும் சுண்ணத்தையும் பிறைமதி போன்று விளங்கும் நெற்றியையும் உடைய சீதாபிராட்டியோடு, மேகம் மின்னெடு தனியே வருதல்போலவும், விளங்குகின்ற கிம்புரிகளையுடைய களிற்றியானை பிடியொடு தனித்துவருதல்போலவும் நடந்து.

கு :—இதுவும் பின்வரும் ‘தொளைகட்டிய’ என்று தொடங்கும் பாடலும் ஒரு தொடர். நடவா கண்டான் என முடியும். மேகமும் நாக

மும் இராமபிரானுக்கும் மின்னும் பிடியும் பிராட்டிக்கும் உவமை. மா கந்தம்-மிக்க நறுமணம். மகரந்தம்–சுண்ணம். அளகம்-கூந்தல். மதியின்பாகம்-பிறைமதி. நுதல்–நெற்றி. இதழ்–உதடு. நாகம்–யானை. (4)

2020. தொளைகட்டிய கிளைமுட்டிய
சுருதிச்சுவை யமுதின்
கிளைகட்டிய கருவிக்கிள
ரிசையிற்பசை நறவின்
விளைகட்டியின் மதுரித்தெழு
கிளவிக்கிளி விழிபோற்
களைகட்டவர் தளைவிட்டெறி
குவளைத்தொகை கண்டான்.

தொளை கட்டிய கிளை முட்டிய சுருதிச் சுவை அமுதின்
கிளை கட்டிய கருவிக் கிளர் இசையின் பசை நறவின்
விளை கட்டியின் மதுரித்து எழு கிளவிக் கிளி விழி போல்
களை கட்டவர் தளை விட்டு எறி குவளைத் தொகை கண்டான்.

பொ :—தொளை அமைக்கப்பட்ட வேய்ங்குழலில் உந்தியினின்றெழுந்த காற்றுத் தாக்குதலால் எழுந்த இசையாகிய இனிய அமுதினும், நரம்புகள் இணைக்கப்பட்ட யாழினின்று எழும் இசையினும், சாரமாகிய தேனினும், கருப்பஞ்சாற்றால் உண்டாகிய வெல்லத்தினும் மிக்க இனிமையுடையதாய் எழுகின்ற சொல்லையுடைய கிளிபோல் வாளாகிய பிராட்டியின் கண்களைப்போல, களைபறித்தவர்களால் வயலினின்றும் வரம்பிலே எறியப்பட்ட குவளைகளின் மிகுதியைக் கண்டான்.

கு :—தொளைகட்டிய கிளை–வேய்ங்குழல். கிளைகட்டிய கருவி-யாழ். பசை-சாரம். நறவு-தேன். மதுரித்து–இனித்து. கிளி என்பது ஆகு பெயராய்ச் சீதாபிராட்டியை உணர்த்தியது. விழிபோல் குவளை, களை கட்டவர் தளைவிட்டு எறிகுவளை என இயையும். 'வட்ட நாண்மரை மலரின்மேல் வயலிடை மள்ளர், கட்ட காவியங்கட்கடை காட்டுவ கழனி' (542), என்னும் ஆசிரியர் கூற்றும் 'கோதை பரிந்தசைய மெல்விரலாற் கொண்டோச்சுங் குவளை மாலைப் போது சிறங்கணிப்பப் போவார்கண் போகாப் புகாரே எம்மூர்' (கானல்வரி. 7) என்னும் சிலப்பதிகாரப்பாடலும் இங்கு நோக்கத்தகும். களைகட்டல்–களைபறித்தல். தளை-வயல். பவளம் தரும் இதழான் கண்டான் என முன் பாட்டொடு இணைத்து முற்றுவிக்க. (5)

**2021.** அருப்பேந்திய கலசத்துணே
யமுதேந்திய மதமா
மருப்பேந்திய வெனலாமுலே
மழையேந்திய குழலாள்
கருப்பேந்திர முதலாயின
கண்டாளிடர் காணுள்
பொருப்பேந்திய தோளாளுெடு
விளேயாடினள் போனுள்.

அருப்பு ஏந்திய கலசத் துணே, அமுது ஏந்திய மத மா
மருப்பு ஏந்திய எனலாம் முலே, மழை ஏந்திய குழலாள்,
கருப்பேந்திரம் முதலாயின கண்டாள்; இடர் காணுள்;
பொருப்பு ஏந்திய தோளாளுெடு விளேயாடினள் போனுள்.

பொ :—சிறந்த (தாமரை) அரும்புகளும், அமுதைக்கொண்ட இணேக்கலசங்களும், மதயானேகள் தாங்கிய கொம்புகளும் ஒப்பென்று சொல்லத்தக்க தனங்களேயும் மேகத்தின் தன்மையைக் கொண்ட கூந்தலேயும் உடைய சீதாபிராட்டி, கரும்பாலே முதலியவற்றைக் கண்டு, (வனம்புக நேர்ந்தமையால் உண்டான) துன்பம் நீங்கியவளாய், மலேபோலுயர்ந்த தோள்களேயுடைய இராமபிரானுடன் விளேயாடிக்கொண்டு சென்ருள்.

கு :—ஏந்திய அரும்பு என இயைக்க. ஏந்துதல்-சிறத்தல்; 'ஏந்தியகொள்கையார்' (899) என்பது திருக்குறள். அரும்பு கரும்பு என்பவை எதுகை நோக்கி வலிந்து நின்றன; விகாரம். வேறு வேறு தன்மையால் தனத்துக்கு அரும்பும் அமுதகலசமும் யானேக் கொம்பும் உவமமாவன. மழை-மேகம். கருப்பேந்திரம்-கரும்பாலே கருப்பேந்திரம், சிங்கத்தையும் கொல்லும் வலியுடையதொரு விலங்கு என்று கொண்டு, அதைக் கண்டும் வருந்தாதவளாய்ச் சென்ருள் என்று பொருளுரைப்பாரும் உளர். இங்கே கூறப்படுவது மருத நிலக் காட்சியாதலின் அதற்கேற்பக் கரும்பாலே என்று கொள்ளுதலே சிறக்கும். (6)

**2022.** பன்னங்துகு தரளங்தொகு
படர்பந்திகள் படுநீ
ரன்னந்துயில் வதிதண்டலே
யயனந்துறை புளினஞ்

சின்னந்தரு மலர்சிந்திய
செறிநந்தன வனநன்
பொன்னந்திய நதிகண்டுள
மகிழ்தந்தனர் போனார்.

பல் நந்து உகு தாளம் தொகு படர் பந்திகள் படு நீர்,
அன்னம் துயில்வதி தண்டலை, அயல் நந்து உறை புளினம்,
சின்னம் தரு மலர் சிந்திய செறி நந்தனவனம், நன்
பொன் நந்திய நதி, கண்டு உளம் மகிழ்தந்தனர் போனார்.

பொ :—பல சங்குகள் சிந்திய முத்துக்கள் தொக்க பெரிய வரிசைகள் பொருந்திய நீர்த்துறைகளையும், அன்னங்கள் துயிலும் சோலைகளையும், அயலே சங்குகள் தங்கிய மணற்குன்றுகளையும், விடு பூவாக அணியத்தக்க மலர்கள் சிந்திச் செறிந்த நந்தனவனங்களையும், நல்ல பொற்பொடிகளை மிகுதியாகவுடைய ஆறுகளையும் நோக்கி (இராமபிரான் முதலிய மூவரும்) மனமகிழ்ந்து சென்றனர்.

கு :—நந்து-சங்கு. தாளம்-முத்து. படர்பந்தி-பெரியவரிசை. நீர் என்றது-நீர்த்துறையினை. தண்டலை-சோலை. புளினம் மணற்குன்று. சின்னம்-விடுபூ; 986, 1019-ம் நோக்குக. நந்துதல்-மிகுதல். (7)

2023. கால்பாய்வன முதுமேதிகள்
கதிர்மேய்வன கடைவாய்ப்
பால்பாய்வன நறைபாய்வன
மலர்வாயளி படரச்
சேல்பாய்வன கயல்பாய்வன
செங்கான்மட வன்னம்
போல்பாய்புனன் மடவார்படி
நெடுநாடவை போனார்.

கால் பாய்வன முது மேதிகள், கதிர் மேய்வனகடைவாய்ப்
பால் பாய்வன நறை பாய்வன மலர்வாய் அளி படரச்
சேல் பாய்வன கயல் பாய்வன செங்கால் மட அன்னம்
போல் பாய் புனல் மடவார் படி நெடுநாடவை போனார்.

பொ :—நெற்கதிர்களை மேய்வனவாகிய பெரிய எருமைகள், தம் கடைவாயிலுள்ள கதிர்களினின்று பெருக்கெடுப்பனவான பாலிலும் அக்கதிர்களோடு செறிந்த குவளை முதலிய பூக்களினின்று பெருக்கெடுப்

பனவான தேனிலும் (நீர்ப்பூக்களிலுள்ள) வண்டுகள் செல்லும்படி கால்களாற் பாய்வனவாயுள்ளனவும் சேல்கள் பாய்வனவாயுள்ளனவும் கயல்கள் பாய்வனவாயுள்ளனவும் ஆன விரைபுனலின்கண், சிவந்த அடிகளையுடைய இளமைவாய்ந்த அன்னத்தை ஒத்த மகளிர் படிகின்ற பெரிய மருதநிலப்பகுதிகளை, (இராமபிரான் முதலியோர்) கடந்து சென்றனர்.

கு :—கதிர்மேய்வன முதுமேதிகள், கடைவாய்ப் பால்பாய்வன நறைபாய்வன மலர்வாய் அளி படரக் கால் பாய்வன நெடுநாடு, சேல் பாய்வன கயல்பாய்வன புனல் அன்னம்போல் மடவார்படி நெடுநாடு என இயையும். நாடு - மருதநிலம். (8)

## இராமன் முதலியோர் கங்கைக்கரையை அடைதல்

2024. பரிதி பற்றிய பல்பகன் முற்றினர்
★ மருத வைப்பின் வளங்கெழு நாடொரீஇச்
சுருதி கற்றுயர் தோமிலர் சுற்றுறும்
விரிதி ரைப்புனற் கங்கையை மேவினர்.

பரிதி பற்றிய பல் பகல் முற்றினர்,
மருத வைப்பின் வளம் கெழு நாடு ஒரீஇச்
சுருதி கற்று உயர் தோம் இலர் சுற்றுறும்
விரி திரைப் புனல் கங்கையை மேவினர்.

பொ :—ஒளி பொருந்திய பல பகல் வழி நடத்தலிற் கழித்தவர்களான இராமன் முதலியோர், மருதமாகிய வளம் மிக்க நிலத்தைக் கடந்து, வேதங்களைக் கற்று உயர்ந்தவரும் குற்றம் அற்றவருமான முனிவர்கள் சூழ்ந்த விரிந்த அலைகளையுடைய நீர்ப்பெருக்குள்ள கங்கையாற்றை அடைந்தார்கள்.

கு :—பரிதி - ஒளி. ஒரீஇ - கடந்து. சுருதி – வேதம். தோம் – குற்றம். முதலடியில், 'பரிதிபற்றிய பல்கலன் முற்றினர்' என்று பாடம் கொண்டு, 'சூரியனை யொத்த பல அணிகளையும் வெறுத்தவராகிய மூவரும்' 'சூரியன் போல விளங்குகின்ற பல ஆபரணங்களையும் நிரம்ப அணிந்த இராமன் முதலிய அம்மூவரும்' என்றும் உரை கண்டாரும் உண்டு. 'பரிதி பற்றிய பல் கலன் முற்றினர்' என்பதற்கு விளக்கம் பொருந்திய பல ஆயுதங்களையும் நிரம்பத் தாங்கிய இராம லக்குமணர்' என்று பொருளுரைத்தலும் அமையும். கலன் கலம் என்பதன் போலி; கலம்–ஆயுதம்; 'கையினும் கலத்தினும் மெய்யுறத் தீண்டி' (70) என்னும் பட்டினப் பாலை அடியுள், கலம் ஆயுதம் என்ற

பொருளில் பயின்றமை காணலாம். இனி, 'பரிதி பற்றிய பல்கலன் முற்றினர் மருதவைப்பு' என்று கொண்டு ஒளி பொருந்திய பல அணி கலன்களேயும் நிரம்ப அணிந்த மக்கள் வாழும் மருத நிலம் என்று பொருள் கொள்ளலும் ஆகும். (9)

கங்கைக்கரையில் உள்ள தவச்செல்வர் இராமனைக் காண வருதல்

2025. கங்கை யென்னுங் கடவுட் டிருநதி
தங்கி வைகுந் தபோதனர் யாவரு
மெங்கள் செல்கதி வந்ததென் றேமுரு
வங்க ணுயகற் காணவந் தண்மினர்.

கங்கை என்னும் கடவுள் திரு நதி
தங்கி வைகும் தபோதனர் யாவரும்,
'எங்கள் செல்கதி வந்தது' என்று ஏம் உரு
அம் கண் நாயகற் காண வந்து அண்மினர்.

பொ :—கங்கை என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற தெய்வத் தன்மை வாய்ந்த உயர்ந்த ஆற்றின் கரையில் தங்கி வாழ்கின்ற தவச் செல்வர் எல்லாரும், 'நாங்கள் சென்று அடையும் புகலிடம் (எங்களை நோக்கி) வந்தது' என்று மகிழ்ந்து, அழகிய கண்களையுடைய தலைவனை இராமபிரானைக் காணும் பொருட்டு வந்தடைந்தவராய்;

கு :—இது முதல் ஆறு பாட்டும் ஒரு தொடர். தபோதனர் யாவரும் அண்மினர், களிக்கின்றார், ஏத்தினர், பாடினர், ஆடினர், மாந்துவார், எய்தினர், ஆட்டினர், சூட்டினர், ஊட்டினர், கொணர்ந்தனர், என்றனர் என முடியும். அண்மினர் என்பது முதல் கொணர்ந்தனர் என்பது வரையுள்ளவை முற்றெச்சம். கங்கையின் தெய்வத் தன்மை, 'கங்கை கங்கையென்ற வாசகத்தாலே கடுவினை களைந்திடகிற்கும் கங்கை', 'எழுமையுங்கூடி யீண்டியபாவம் இறைப் பொழுதளவினில் எல்லாம் கழுவிடும் பெருமைக் கங்கை' (பெரியாழ்வார் திருமொழி 4-7. 1, 5) என்ற பாசுரங்களால் அறியலாம். தபோதனர் – தவச் செல்வர். செல்கதி – சென்று அடையும் புகலிடம். ஏம் - மகிழ்ச்சி. அண்முதல் - அடைதல். (10)

## இராமனைக் கண்ட தவச்செல்வர் செயல் 2026—2029

**2026.** பெண்ணி னோக்குஞ் சுவையிற் பிறர்தமக்
கெண்ணி னோக்கி யியம்பரு மின்பத்தைப்
பண்ணி னோக்கும் பராவமு தைப்பசுங்
கண்ணி னோக்கின ருள்ளங் களிக்கின்றார்.

**பெண்ணில் நோக்கும் சுவையில், பிறர் தமக்கு**
**எண்ணின் நோக்கி, இயம்பரும் இன்பத்தைப்**
**பண்ணின் நோக்கும் பர அமுதைப் பசும்**
**கண்ணின் நோக்கினர், உள்ளம் களிக்கின்றார்.**

பொ :—(ஓர் ஆடவன் ஒத்த காதலுடைய) ஒரு மகள் பால் துய்த்தறியும் இன்பம் போல(த் தாமே துய்த்து இத்தன்மைத் தென்று உணர்ந்தாலன்றி)ப் பிறர்க்கு (இத்தன்மைத்தென்று) மனத்தால் எண்ணி (வாயால்) உணர்த்தற்கரிய பேரின்ப வடிவும், இசையமைதியுடைய வேதங்களால் அறியப்படும் அமுதவுருவும் ஆக விளங்கும் இராமனை, தம் நோக்குக்கு இலக்காயினாரைக் குளிர்விக்கவல்ல கண்ணாற் கண்டு மனம் களிக்கின்றவராய் ;

கு :—எண்-மனம். பண்-இசை; இங்கே ஆகுபெயராய் வேதத்தை உணர்த்திற்று. பராவமுதம் - மேலான அமுதம் ; பர அமுதம் என்பது பராவமுதம் என்றானது வடமொழித் தீர்க்கசந்தி முடிவு. பராவு அமுதம் என்று கொண்டு புகழப்படுகின்ற அமுதம் என்று பொருளுரைத்தலும் ஆம். இராமன் இறைவனமிசமாகத் தோன்றியவனாதலின் இறைவனுக்குரிய இன்பவடிவும் அமுதவுருவும் இராமனுக்கும் கூறினர். தவச் செல்வர்களுடைய கண் அருள்தவழும் கண்ணாதலின் பசுங்கண் என்றார்.
(11)

**2027.** எதிர்கொ டேத்தின ரின்னிசை பாடினர்
வெதிர்கொள் கோலின ராடினர் வீரனைக்
கதிர்கொ டாமரைக் கண்ணனைக் கண்ணினன்
மதுர வாரி யமுதென மாந்துவார்.

**எதிர்கொடு ஏத்தினர், இன் இசை பாடினர்,**
**வெதிர் கொள் கோலினர், ஆடினர், வீரனைக்**
**கதிர் கொள் தாமரைக் கண்ணனைக் கண்ணினால்**
**மதுர வாரி அமுது என மாந்துவார்.**

போ :—மூங்கிலாற் கொண்ட திரிதண்டத்தையுடைய அக் கங்கைக் கரைத் தவச் செல்வர், வீரனும் ஒளி கொண்ட தாமரைமலர் போலும் கண்களையுடையவனுமான இராமபிரானை எதிர்கொண்டு வாழ்த்தி, இனிய இசைப் பாடல்களைப் பாடி, ஆடி, அப்பெருமானை இனிய (பாற்) கடலில் தோன்றிய அமுது போலக் கண்ணினால் பருகுவாராய்.

கு :—எதிர்கொடு-எதிர்கொண்டு. ஏத்துதல்-வாழ்த்துதல்; (சீவக சிந்தா. 324 நச் உரை). வெதிர்-மூங்கில். மாந்துதல் - பருகுதல். (12)

2028. மனையி னீங்கிய மக்களை வைகலு
நினையு நெஞ்சினர் கண்டிலர் நேடுவா
ரனையர் வந்துற வாண்டெதிர்ந் தார்கள்போ
லினிய மாதவப் பள்ளிகொண் டெய்தினர்.

மனையின் நீங்கிய மக்களை வைகலும்
நினையும் நெஞ்சினர், கண்டிலர், நேடுவார்,
அனையர் வந்துற ஆண்டு எதிர்ந்தார்கள் போல்
இனிய மா தவப் பள்ளி கொண்டு எய்தினர்.

போ :—வீட்டினின்று நீங்கிய மக்களை நாளும் நினையும் நெஞ்சின ராய்த் தேடிக் காணாது அம்மக்கள் (தாமே) வந்து சேரச் சந்தித்த பெற்றோர்களைப் போல (மகிழ்ந்து இராமபிரானைத் தம்முடைய) இனிய பெரிய தவச்சாலைக்கு அழைத்துச் சென்று.

கு :—நேடுதல் - தேடுதல்; இச்சொல், சுந்தர காண்டத்து 425ஆம் செய்யுளிலும் இப்பொருளிற்பயின்றமை காணத்தகும். எதிர்தல் - சந் தித்தல்; 'தானினி தெதிர்ந்த தானத்தருகே' (3. 8. 38) என்பது பெருங் கதை. (13)

2029. பொழியுங் கண்ணீர்ப் புதுப்புன லாட்டினர்
மொழியு மின்சொலின் மொய்ம்மலர் சூட்டின
ரழிவி லன்பெனு மாரமு தூட்டினர்
வழியின் வந்த வருத்தத்தை வீட்டினர்.

பொழியும் கண்ணீர்ப் புதுப் புனல் ஆட்டினர்,
மொழியும் இன் சொலின் மொய்ம் மலர் சூட்டினர்,
அழிவு இல் அன்பு எனும் ஆர் அமுது ஊட்டினர்,
வழியின் வந்த வருத்தத்தை வீட்டினர்.

பொ :—சொரிகின்ற கண்ணீராகிய புதுப்புனலால் நீராட்டி, பேசும் இனிய சொல்லாகிய நிறைந்த மாலைகளைச் சூட்டி, கெடாத அன்பாகிய அமுதினை ஊட்டி, வழி (நடந்து) வந்தமையால் உளதாகிய துன்பத்தைப் போக்கினராய்.

கு :—'கண்ணிற்புதுப்புனல்' என்ற பாடத்தினும், 'இன்சொலின் மொய்ம்மலர்', 'அன்பெனும் ஆரமுது' என்பவற்றோடு இயைய உருவக வாய்பாடுபட அமைந்த 'கண்ணீர்ப் புதுப்புனல்' என்ற பாடமே அமைவுடையதாகும். 'மாதர்க் கண்ணீர் மஞ்சனமாட்டி' (4-14-154) என்ற பெருங்கதையடியும் "பொழிந்த கண்ணீர்ப் புதுப்புனல்" (குகப்படலம். 72) "தனது கண்ணருவி நெடியகாதலங்கலச நீராட்டினன்" (யுத்த மீட்சிப் 186) என்று ஆசிரியர் பின்னே கூறும் பாடற் பகுதியும் இங்கு நோக்கத்தகும். 'சொலின்' என்பதனுள் இன் சாரியை. 'இன்சொலின் மொய்ம் மலர் சூட்டினர்' என்பது, 'புனையும் கண்ணி எனதுடைய வாசகம் செய் மாலையே' (திருவாய் மொழி 4 3.2), 'என்னுடைச் சொற்களென்னும் தூயமாமாலைகொண்டு சூட்டுவன்' (திருக் குறுந்தாண்டகம். 16), என்னும் அருளிச் செயற் பாசுரங்களை அடியொற்றி எழுந்தது. (14)

### தவச்செல்வர் இராமனை நீராடி அமுதுசெய்க எனல்

2030. காயுங் கானிற் கிழங்குங் கனிகளுந்
தூய தேடிக் கொணர்ந்தனர் தோன்றனீ
யாய கங்கை யரும்புன லாடினை
தீயை யோம்பினை செய்யமு தென்றனர்.

காயும் கானில் கிழங்கும் கனிகளும்
தூய தேடிக் கொணர்ந்தனர்; 'தோன்றல்! நீ
ஆய கங்கை அரும் புனல் ஆடினை,
தீயை ஓம்பினை, செய் அமுது' என்றனர்.

பொ :—காட்டிலுள்ள தூய காய்களையும் கனிகளையும் கிழங்குகளையும் தேடிக் கொணர்ந்து, 'தலைவனே! நீ நல்லதாகிய கங்கைநீரின் முழுகி, எரியோம்பி அமுதுசெய்க' என்றனர். (15)

### இராமன் சீதாபிராட்டியுடன் நீராடுதல்

2031. மங்கை யர்க்கு விளக்கன்ன மாதையுஞ்
செங்கை பற்றினன் றேவருந் துன்பறப்

பங்க யத்தயன் பண்டுதன் பாதத்தி
னங்கை யிற்றருங் கங்கையி னாடினன்.

மங்கையர்க்கு விளக்கு அன்ன மாதையும்
செங்கை பற்றினன், தேவரும் துன்பு அறப்
பங்கயத்து அயன் பண்டு தன் பாதத்தின்
அம் கையின் தரும் கங்கையின் ஆடினன்.

பொ :—(இராமபிரான்) பெண்களுக்கு விளக்குப்போலும் சீதா பிராட்டியையும் செவ்விய கையாற் பற்றிக்கொண்டு தேவரும் துன்பம் ஒழியும்படி, பண்டு தன் திருவடிகளில் பிரமன் அழகிய கையால் திருமஞ்சனம் செய்த நீராகிய கங்கையில் நீராடினன்.

கு :—மங்கையர்க்கு விளக்கன்ன மாது என்றது, மங்கையர்தம் தூய ஒழுக்கத்தால் தாம் பிறந்தமனையும் புக்கமனையும் புகழுறச் செய்தலின் மனைக்கு விளக்காயிருப்பர்; 'மனைக்கு விளக்கம் மடவாள்' என்பது நான்மணிக்கடிகை. சீதாபிராட்டியோ தன் தூய ஒழுக்கத்தால் பெண்ணினம் புகழுறச் செய்யும் தனிவிளக்காய்த் திகழ்வள் என்றவாறு. தேவரும் என்பதனுள் உம்மை உயர்வு குறித்தது. தேவரும் துன்பற அயன் தரும் கங்கை என இயையும். பண்டு—உலகளந்த முற்காலத்து. உலகளந்த பெருமானும் இராமபிரானும் திருமாலின் அவதார மூர்த்திகளாதலின் முன்னை நிலையில் ஒற்றுமை கருதித் தன் பாதத்தின் என்றார். பிரமன் உலகளந்தபிரான் திருவடி விளக்கியநீரே கங்கையாகப் பெருகுதலின், 'அயன் பண்டு தன் பாதத்தின் அங்கையிற்றரும் கங்கை' என்றார். அங்கை—அகங்கை; உள்ளங்கை என்று கொள்ளலும் ஆம். "சதுமுகன் கையில் சதுப்புயன் தாளில் ......... ............தங்கிக், கதிர்முகமணிகொண்டிழிபுனல் கங்கை" (பெரியாழ்வார் திருமொழி. 4, 7, 3) என்னும் அருளிச் செயலும், "அகிலமன்றளந்த புண்டரீகமென்பதத்திடைப் பிறந்து பூமகனுர் கொண்ட தீர்த்தமாய் அரன்கொளப் பகிரதன் கொணர மண்டலத்து வந்தடைந்த திம்மாநதி" (537) என ஆசிரியர் முன்னே கூறியதும் இங்கு நோக்கத் தகும். (16)

## கங்கை இராமனைப் போற்றுதல்

**2032.** கன்னி நீக்கருங் கங்கையுங் கைதொழாப்
பன்னி நீக்கரும் பாதகம் பாருளோ
ரென்னி னீக்குவர் யானுமின் றெற்றந்த
வுன்னி னீக்கினெ னுய்ந்தனெ னமென்றாள்.

கன்னி நீக்கருங் கங்கையும் கைதொழாப்
'பன்னி நீக்கரும் பாதகம் பார் உளோர்
என்னின் நீக்குவர், யானும் இன்று எற்றந்த
உன்னின் நீக்கினென் உய்ந்தனென் ஆம்' என்ருள்.

பொ :—கன்னித்தன்மை நீங்காத கங்கையும் (இராமபிரானை) வணங்கி, சொல்லி முடியாத (மிக்க) பாவங்களை உலகத்தார் என்னல் போக்கிக்கொள்வர்; (அப்படிப் பிறர்பாவம் கழுவும்) யானும், என்னைப் பெற்ற உன்னால் இன்று என் பாவங்களை நீக்கி உய்ந்தனன் என்ருள்.

கு :—கன்னி–அழியாத்தன்மை. கங்கைக்கு அழியாத்தன்மையாவது, என்றும் வற்ருது பாயும் நீர்ப்பெருக்குடைமை. 'அகிலம் அன்றளந்த புண்டரீகமென் பதத்திடைத்'தான் பிறந்தமையால் 'எற்றந்த' என்றனள். உய்ந்தனெனும் என்பதனுள் ஆம் அசை. (17)

## கங்கையில் நீராடிய இராமன் தோற்றம் 2033—2034

**2033.** வெங்க ணுகக் கரத்தினன் வெண்ணிறக்
கங்கை வார்சடைக் கற்றையன் கற்புடை
மங்கை காணநின் ருடுகின் ருன்வகிர்த்
திங்கள் சூடிய செல்வனிற் ருேன்றினுன்.

வெம் கண் நாகக் கரத்தினன், வெள் நிறக்
கங்கை வார் சடைக் கற்றையன், கற்புடை
மங்கை காண நின்று ஆடுகின்ருன், வகிர்த்
திங்கள் சூடிய செல்வனில் தோன்றினுன்.

பொ :—கொடிய கண்ணையுடைய நாகக்கரத்தினனுய், வெண்மை நிறமுடைய கங்கை ஒழுகும் சடைத்தொகுதியுடையனுய், கற்புடைய மங்கை காணநின்று, ஆடுகின்றவன் (-இராமபிரான்), இளம்பிறைசூடிய செல்வனுகிய சிவபிரான் போல விளங்கினுன்.

கு :—நாகக்கரமும், கங்கைவார் சடைக்கற்றையும் உடைமையும் மங்கைகாண நின்று ஆடுதலும் சிவபிரானுக்கும் இராமபிரானுக்கும் உரிய பொதுத்தன்மைகள். சிவபிரான்மேற் சொல்லுங்கால், கொடிய கண்களையுடைய பாம்புகளை அணிந்த கைத்தலங்களை யுடையவன்; கங்கையொழுகும் நீண்ட சடைத்தொகுதி யுடையவன்; கற்பின் மேம்பாட்டையுடைய மங்கை (உமாதேவி) காண நின்று கூத்தாடுகின்றவன் எனவும், இராமபிரான்மேற் சொல்லுங்கால், கொடிய கண்களையுடைய யானையின் கைபோன்ற கைத்தலங்களையுடையவன்; (தான் மேற்

கொண்ட தவவொழுக்கத்துக்கு இயையப் புனைந்த சடைக்கற்றையோடு கங்கையில் முழுகி எழுந்தமையால்) கங்கைநீர் ஒழுகும் சடைத்தொகுதியுடையவன்; கற்புடைய மகளாகிய சீதாபிராட்டி காணக் கங்கையில் நீராடுகின்றவன் எனவும் பொருள்படும். நாகம்-1 பாம்பு, 2 யானை. கரம்-கை. ஆடுதல்-1 கூத்தாடுதல், 2 முழுகுதல். திங்கள் வகிர் என மாற்றிக் கூட்டுக. திங்கள் வகிர்-மதித்துண்டம். இராமபிரான் கைக்கு யானையின் கை உவமை. 'கரிக்கரம் பொருகைத்தலத்து' (1633) என்றார் முன்னும். இது செம்மொழிச்சிலேடை என்னும் அணி தழுவியது. (18)

**2034.** தள்ளு நீர்ப்பெருங் கங்கைத் தரங்கத்தான்
வள்ளி நுண்ணிடை மாமல ராளொடும்
வெள்ளி வெண்ணிறப் பாற்கடன் மேலைநாட்
பள்ளி நீங்கிய பான்மையிற் றோன்றினான்.

தள்ளும் நீர்ப் பெருங் கங்கைத் தரங்கத்தான்,
வள்ளி நுண் இடை மா மலராளொடும்
வெள்ளி வெள் நிறப் பாற்கடல் மேலை நாள்
பள்ளி நீங்கிய பான்மையில் தோன்றினான்.

பொ :—மிக்க நீரையுடைய கங்கையின் மோதுகின்ற அலைகளினிடையே (சீதாபிராட்டியோடு முழுகியெழுந்த) இராமபிரான், வல்லி போலும் நுண்ணிய இடையையுடைய சிறந்த தாமரைமலரை இடமாகக் கொண்ட இலக்குமியோடு வெள்ளிபோலும் வெண்மைநிறமுடைய பாற்கடலினிடையே பண்டு பாயலினின்றெழுந்தாற்போலத் தோன்றினான்.

கு :—வெள்ளிய அலைவீசுகின்ற கங்கையாற்றினிடையே கரிய திருமேனியனான இராமபிரான் சீதாபிராட்டியோடு நின்றநிலை, தேவர் வேண்டுதலால் பண்டு திருமகளோடு பாற்கடலிடைப் பள்ளி நீங்கியெழுந்த தன் முன்னை நிலைபோலும் என்றவாறு. தள்ளுதல்-மோதுதல்; தரங்கம்-அலை. வள்ளி-வல்லி=கொடி. பள்ளி-படுக்கை. பாற்கடற் பள்ளிநீங்கிய செய்தி, 'வெள்ளி வெண்கடலின் மேனாள் விண்ணவர் தொழுது வேண்டப் பள்ளி தீர்ந்திருந்தான்' (விபீடணன் அடைக்கலப். 133) எனப் பின்னும் பேசப்படுதல் காணத்தகும்.

இராமபிரான் முதலியவர்களை மானிடவுருவிற் காணாது அவர்தம் முன்னைத் தெய்வவுருவிற் கண்டு மகிழ்வதும் ஆங்காங்கு வாய்த்த இடங்களில் பேசி மகிழ்வதும் ஆசிரியர் இயல்பு. இங்கே இராமபிரானுடைய முன்னைநிலைபேசியவாறு. 2039-ஆம் பாடல் பிராட்டியின்

பண்டைநிலை சுட்டியது. 1807-ஆம் செய்யுள் இலக்குவனின் பண்டை நிலை சுட்டியது. இவ்வாறு பேசும் இடங்கள் பல. (19)

## சீதாபிராட்டி கங்கையில் நீராடுதல் 2035—2038

**2035.** வஞ்சி நாணி வணங்க மடநடைக்
கஞ்சி யன்ன மொதுங்க வடிக்குமென்
கஞ்ச நீரி லொளிப்பக் கயல்புகப்
பஞ்சி மெல்லடிப் பாவையு மாடினாள்.

**வஞ்சி நாணி வணங்க, மட நடைக்கு**
**அஞ்சி அன்னம் ஒதுங்க, அடிக்கு மென்**
**கஞ்சம் நீரில் ஒளிப்பக் கயல் புகப்**
**பஞ்சி மெல் அடிப் பாவையும் ஆடினாள்.**

பொ :—செம்பஞ்சுக் குழம்பு ஊட்டிய மென்மைத் தன்மைவாய்ந்த அடிகளையுடைய பாவைபோல்வாளாகிய சீதாபிராட்டியும், (தன் இடைக்குத் தோற்றமையால்) வஞ்சிக்கொடி நாணி வணங்குமாறும், தன் மென்னடைக்குத் தோற்றமையால் அன்னம் அஞ்சி, (கரையில்) ஒதுங்குமாறும், தன் அடிக்குத் தோற்றமையால்) மெல்லிய தாமரைமலர்கள் அஞ்சி நீரில் ஒளிக்குமாறும், (தன் கண்ணுக்குத் தோற்றமையால்) கயல் அஞ்சி நீரில் புகுமாறும் நீராடினாள்,

கு :—பாவையும், வஞ்சி நாணி வணங்க, அன்னம் மடநடைக்கு அஞ்சி ஒதுங்க, கஞ்சம் அடிக்கு அஞ்சி நீரில் ஒளிப்ப, கயல் அஞ்சி நீரில் புக, ஆடினாள் என இயையும். இடைக்குத் தோற்றமையால் என்பதும், கண்ணுக்குத் தோற்றமையால் என்பதும் விரித்துரைக்க. அஞ்சி என்பது மீட்டும் இருமுறை கூட்டியுரைக்கப்பட்டது. பஞ்சி-செம்பஞ்சு. பாவை-உவம ஆகுபெயராய்ச் சீதாபிராட்டியைச் சுட்டி நின்றது. வஞ்சி-வஞ்சிக்கொடி. மடநடை-மென்னடை (சீவகசிந்தா. 2125). கஞ்சம்-தாமரை; இங்கு முதலாகுபெயராய்த் தாமரைப்பூவை உணர்த்திற்று. கயல்-ஒருவகை மீன். மேல் இராமபிரான் நீராடியமை கூறினார். இங்கே பாவையும் ஆடினாள் என்றார். மகளிர் இடைக்கு வஞ்சிக் கொடியையும் நடைக்கு அன்னநடையினையும் அடிக்குத் தாமரைமலரையும் கண்ணுக்குக் கயல்மீனையும் உவமை கூறுவதுண்டு. பிராட்டியின் இடைமுதலியவை வஞ்சிக்கொடி முதலியவற்றினும் அழகால் விஞ்சிநின்றமை இங்கே குறிக்கப்பட்டது. பிராட்டி நீராடுகையில் எழுந்த அலையால் கரையிலுள்ள வஞ்சி அசைந்து வளைந்தது; அன்னம் கரையில் ஒதுங்கியது; தாமரை மலர்கள் நீருள் மறைந்தன;

கயல்மீன்கள் நீருள் புக்கன. இவ்வாறு, அலைமோதுதலாகிய ஒரு காரணத்தால் நிகழ்ந்த செயல்களைப் பிராட்டியின் இடை முதலிய வற்றுக்குத் தோற்றமையால் நிகழ்ந்தனவாகப் பிறிதொரு காரணம் காட்டிய கற்பனை, தற்குறிப்பேற்றம் என்னும் அணி தழுவியமைந்தது. நாணி வணங்குதலும், அஞ்சி ஒதுங்குதலும், அஞ்சி ஒளித்தலும், வலியவரைக்கண்ட மெலியவர்பால் நிகழும் செயல்களாம். 'மட நடைக்கு அஞ்சி அன்னம் ஒதுங்க' என்பது, அன்னம் நன்னுதல் மென்னடைக் கழிந்து, நன்னீர்ப் பண்ணை நளிமலர்ச்செறியவும்' (சிலப், மனையறம், 55,56.) என்பதனோடு ஒப்பு நோக்கத்தக்கது. (20)

### சீதாபிராட்டிகூந்தலின் நறுமணம் கங்கை கமழ்தல்

**2036.** தேவர் தேவன் செறிசடைக் கற்றையுட்
கோவை மாலை யெருக்கொடு கொன்றையின்
பூவு நாறலள் பூங்குழற் கற்றையி
னாவி நாண்மலர் கங்கையு நாறினாள்.

தேவர்தேவன் செறி சடைக் கற்றையுள்
கோவை மாலை எருக்கொடு கொன்றையின்
பூவும் நாறலள், பூங்குழல் கற்றையின்
நாவி நாள் மலர் கங்கையும் நாறினாள்.

பொ :—கங்கையும்,தேவர் தேவனாகிய சிவபெருமானுடைய அடர்ந்த சடைத்தொகுதியுள் அணிந்த பல கோவையாக இணைக்கப்பட்ட மாலையிலுள்ள எருக்கம் பூவும் கொன்றைப் பூவும் ஆகியவற்றின் நறு மணம் கமழ்ந்தாளில்லை; சீதாபிராட்டியின் பொலிவுமிக்க குழற்றொகுதி யில் அணிந்த கத்தூரிக் குழம்பின் நறுமணமும் செவ்விப் பூக்களின் பரிமளமுமே கமழலாயினள்.

கு :—சிவபெருமான் திருமுடியிற் சடையினின்று பெருக்கெடுத்து வருதலால் அம்முடியிலணிந்த எருக்கு கரந்தை மத்தம் கூவிளம் கொன்றை முதலியவற்றைக் கொண்டு அவற்றின் நறுமணங் கமழ்ந்து நின்ற கங்கை, தன் கண் சீதா பிராட்டி நீராடிய அளவில் அக்கொன்றை முதலியவற்றின் மணம் கமழாது, அப்பிராட்டி கூந்தலில் அணிந்த கத்தூரிக் குழம்பின் நறுமணமும் செவ்விப் பூக்களின் பரிமளமுமே கமழ்ந்தனள் என்றவாறு. எருக்கும் கொன்றையும் கூறியது கொண்டு கூறாத கரந்தை மத்தம் கூவிளம் முதலியனவும் கொள்ளலாம். "கரந்தை மத்தமொ டெருக்கலர் கூவிளை கடுக்கை நிரந்த பொற்சடை நின்மலக் கொழுந்து (529) என்று ஆசிரியர் கூறுதல் நோக்கத்தகும்.

கங்கை சிவபிரான் சடையினின்று கொன்றை முதலியவற்றை ஈர்த்து வருதல், "நலந்திகழ் சடையான் முடிக் கொன்றை மலரும்.........கலந் திழிபுனலால் புகர்படு கங்கை' (பெரியாழ்வார் திருமொழி 4. 7 2) என்னும் அருளிச் செயலாலும், "செங்க ணேற்றவன் செறிசடைப் பழுவத்தின் நிறைதேன் பொங்கு கொன்றையீர்த் தொழுகலால் பொன் னியைப் பொருவும் கங்கை" (509) என்று ஆசிரியர் முன்னே கூறுத லாலும் விளங்கும். சீதாபிராட்டியின் "குழற்கற்றையின் நாவி நாண் மலர் கங்கையு நாறினள்" என்பதனுடன், "புதுப் புனல் குடையுமாதர் பூவொடு நாவிபூத்த கதுப்புறு வெறியே நாறுங் கருங்கடல்" (42) என்பது ஒப்பு நோக்கத்தகும். கங்கையும் என்பதனுள் உம்மை உயர்வு குறித்தது; பூங்குழற் கற்றை சீதாபிராட்டியினுடைய தென்பது முன் கவியின் தொடர்பால் விளங்கும். ஆற்றைப் பெண்ணாகக் கூறுவது மரபு. தெய்வத் தன்மை கொண்டு கங்கையும் நாறினள் என்று உயர் திணை முடிபு கொடுத்தது வழுவமைதியின் பாற்படும். (21)

**2037.** நுரைக்கொ ழுந்தெழுந் தோங்கி நுடங்கலா
னரைத்த கூந்தலி னங்கைமந் தாகினி
யுரைத்த சீதை தனிமையை யுன்னுவா
டிரைக்கை நீட்டிச் செவிலியி னாட்டினாள்.

நுரைக் கொழுந்து எழுந்து ஓங்கி நுடங்கலால்
நரைத்த கூந்தலின் நங்கை மந்தாகினி,
உரைத்த சீதை தனிமையை உன்னுவாள்,
திரைக் கை நீட்டிச் செவிலியின் ஆட்டினாள்.

பொ :—நுரையின் கொழுந்து அலைகளின் மேல் எழுந்து, உயர்ந்து அசைதலால் நரைத்த கூந்தலையுடைய முதியமகள்போல விளங்குபவ ளாகிய கங்காதேவியானவள், யாவராலும் பாராட்டிப் பேசப்பட்ட சீதாபிராட்டியின் மகளிர் துணையற்ற நிலையை எண்ணியவளாய், தன் அலைகளாகிய கைகளை நீட்டிச் செவிலித்தாய் போல அப் பிராட்டியை நீராட்டினாள்.

கு :—அலைகளின் மீது எழுந்தோங்கும் நுரைக் கொழுந்து நரைத்த கூந்தலுக்கு உவமை. சீதாபிராட்டி கங்கையாற்றுள் அலையெழுந்து மறைக்க முழுகியெழுந்த நிலையை, முழுகுவிப்பார் இல்லாத தனிமை கண்டு, அப்பிராட்டியைக் கங்கையானவள் முதிய செவிலித்தாய் போல நின்று நீராட்டுவித்தாள் என்று தற்குறிப்பேற்ற அணிதோன்ற நயம்படக்கூறியவாறு. நுடங்குதல் - அசைதல். மந்தாகினி - கங்கை. (22)

### சீதையின் குழற்கற்றை கங்கைநீரிடைத் தாழ்ந்து குழைந்த காட்சி

2038. மங்கை வார்குழற் கற்றை மழைக்குலந்
தங்கு நீரிடைத் தாழ்ந்து குழைப்பன
கங்கை யாற்றுட ஞடுங் கரியவள்
பொங்கு நீர்ச்சுழி போவன போன்றவே.

மங்கை வார் குழல் கற்றை மழைக் குலம்
தங்கும் நீரிடைத் தாழ்ந்து குழைப்பன,
கங்கையாற்றுடன் ஆடும் கரியவள்
பொங்கும் நீர்ச்சுழி போவன போன்றவே.

பொ :—சீதாபிராட்டியின் நீண்ட குழற்றெகுதியாகிய மேகக் கூட்டம், கங்கை நீரிலே தாழ்ந்து குழைபவை, கங்கை யாற்றுடன் கலக்கும் காளிந்திநதியின் மிக்க நீர்ச்சுழி போதலைப் போன்றன.

கு :—மங்கை யென்றது இங்கே சீதா பிராட்டியை. மழைக் குலம் - மேகக் கூட்டம். ஆடுதல் - கலத்தல். கரியவள் – யமுனை. வெள்ளிய கங்கை நீரில் பிராட்டியின் கரிய குழற்கற்றை யளைந்து குழைந்த தோற்றம், கங்கையினிடைக் கரிய யமுனையினீர் கலந்து சுழியொடு போவது போலும் என்றவாறு. (23)

### சீதை பாற்கடலிடைத் தோன்றிய திருமகள்போல விளங்குதல்

2039. சுழிபட் டோங்கிய தூங்கொலி யாற்றுத்தன்
விழியிற் சேலுகள் வானிற வெள்ளத்து
முழுகித் தோன்றுகின் ருண்முதற் பாற்கட
லழுவத் தன்றெழு வாளென வாயினுள்.

சுழி பட்டு ஓங்கிய தூங்கு ஒலி ஆற்றுத் தன்
விழியில் சேல் உகள் வால் நிற வெள்ளத்து
முழுகித் தோன்றுகின்ருள், முதல் பாற்கடல்
அழுவத்து அன்று எழுவாள் என ஆயினுள்.

பொ :—சுழியொடு கூடி உயர்ந்த செறிந்த ஒலியையுடைய கங்கையாற்றின்கண் தன் விழிபோலச் சேல் என்னும் மீனினம் பிறழும் வெள்ளிய நிறமுடைய நீர்ப் பெருக்கில் நீராடி எழுந்து தோன்றுகின்ற

பிராட்டி சிறந்த திருப்பாற்கடற் பரப்பில் பண்டு தோன்றிய திருமகள் போல விளங்கினள்.

கு :—வெள்ளிய நீர்ப் பெருக்கும் அலையும் உடைய கங்கையில் முழுகியெழுந்த சீதாபிராட்டி பண்டு அமுதங் கடைந்த காலத்துப் பாற்கடலிடையெழுந்த திருமகள் போல விளங்கினள் என்றவாறு. தூங்கு ஒலி - செறிந்த ஒலி. தூங்குதல் - செறிதல்; 'தூங்கிருளிறும்பில்' (126) என்பது புறநானூறு. உகளுதல் - பிறழ்தல். வால்நிறம் - வெண்மை நிறம். பாற்கடற்குச் சிறப்பு, 'கடல்களுள் பாற்கடலாக விளங்குகின்றேன் யான்' என்று கண்ணன் கூறுதலால் விளங்கும். அழுவம் - பரப்பு. (24)

## கங்கையின் பேறு

2040. செய்ய தாமரைத் தாள்பண்டு தீண்டலால்
வெய்ய பாதகந் தீர்த்து விளங்கின
ளையன் மேனி யெலாமளைந் தாளினி
வைய மாநர கத்திடை வைகுமோ.

செய்ய தாமரைத் தாள் பண்டு தீண்டலால்
வெய்ய பாதகம் தீர்த்து விளங்கினள்;
ஐயன் மேனியெலாம் அளைந்தாள்; இனி
வையம் மா நரகத்திடை வைகுமோ?.

பொ :—செந்தாமரை மலர் போலும் திருவடிகளை முன்பு (உலகளந்த காலத்தில்) பரிசித்தமையால், கங்கை தன்னையடைந்தாருடைய கொடிய பாவங்களைப் போக்கி விளங்கினள்; அவள், இன்று வியக்கத்தக்க குணநலம் வாய்ந்தவனாகிய இராமனுடைய திருமேனி முழுதும் அளையப் பெற்றாள்; இனி உலகத்து உயிர்கள் கொடிய நரகின் கண் தங்குமோ ? தங்கா.

கு :—வையம் என்பது ஆகுபெயராய் உலகத்துயிர்களை யுணர்த்தி நின்றது. 2032-ஆம் செய்யுள் கங்கை தன் பேறு தான் கூறியது; இது கவிக் கூற்று. (25)

## இராமன் முனிவர் விருந்தினனாதல்

2041. துறைந றும்புன லாடிச் சுருதியோ
யுருறை ளெய்தி யுணர்வுடை யோருண

ரிறைவற் கைதொழு தேந்தெரி யோம்பிப்பின்
னறிஞர் காதற் கமைவிருந் தாயினன்.

துறை நறும் புனல் ஆடிச் சுருதியோர்
உறையுள் எய்தி, உணர்வு உடையோர் உணர்
இறைவற் கைதொழுது, ஏந்து எரி ஓம்பிப் பின்
அறிஞர் காதற்கு அமை விருந்தாயினன்.

பொ :—வேதம் வல்ல முனிவர் நீராடும் துறையின்கண் நன்னீராடி, அம்முனிவர் உறையுளை அடைந்து, மெய்யுணர்வுடையரால் அறியப்படுகிற இறைவனை வணங்கி, (இல்லறத்தார்க்கு உரிய) சிறந்த எரியினை வளர்த்து (ச் செய்தற்குரிய கடன்களைச் செய்து), பின் அம் முனிவர்களுடைய அன்புக்கு ஏற்ற விருந்தினனானான்.

கு :—சுருதியோர் என்பதனை இடைநிலைவிளக்காக்கிச் சுருதியோர் துறை நறும்புனல் ஆடி என முன்னும் கூட்டி உரைக்கலாயிற்று. உலகளந்த பெருமான் திருவடியில் தோன்றியமையால் வந்த பெருமையோடு சுருதியோர் நீராடுதலால் எய்திய தூய்மையும் கொண்டு துறைநறும்புனல் என்றார். சுருதியோர், அறிஞர் என்ற இரண்டும் கங்கைக்கரைத்தவச் செல்வரைக் குறித்து நின்றன வெனினும், அவற்றுள் முன்னையது பெயராயும், பின்னது அவர் என்னும் சுட்டளவாயும் நின்றன. 'உணர்வுடையோர் உணர் இறைவன்' என்பதனோடு "கேள்வியாற் செவிகண் முற்றும் தோட்டவர் உணர்வின் உண்ணும் அமுதத்தின் சுவையாய் நின்றான்" (3.11.7) என்று ஆசிரியர் பின் கூறுவதும் நோக்கத்தகும். காதல்-அன்பு, பத்திமையும் ஆம். (26)

### இராமன் முனிவர்சாலையில் விருந்துண்டு மகிழ்தல்

2042. வருந்தித் தான்றர வந்த வமுதையு
மருந்து நீரென் றமரரை யூட்டினான்
விருந்து மெல்லட குண்டு விளங்கினான்
றிருந்தி னார்வயிற் செய்தன தேயுமோ.

வருந்தித் தான் தர வந்த அமுதையும்
'அருந்தும் நீர்' என்று அமரரை ஊட்டினன்,
விருந்து மெல் அடகு உண்டு விளங்கினன் ;
திருந்தினர் வயின் செய்தன தேயுமோ ?

பொ :—தான் வருந்திக் கடைந்து உண்டாக்கத் தோன்றிய அமுதத்தையும், 'நீவிர் அருந்துமின்' என்று பண்டு உண்பித்தவன், இன்று (முனிவர்) விருந்துணவாகப் படைத்த மெல்லிய கீரையினையும் உண்டு விளங்கினன்; நல்லோர்திறத்துச் செய்தவை குறைபடுமோ? குறைபடா.

கு :—திருமாலாகிய முன்னை நிலைகொண்டு, 'தான் தரவந்த அமுது' என்றார். பெறுதற்குச் செய்த முயற்சியின் மிகுதியும் அருமையும் தோன்ற 'வருந்தித்தான்தர' என்றார். "மாயிருங் குன்றம் ஒன்று மத்தாக மாசுணம் மதனெடுமளவிப், பாயிரும் பௌவம் பகடு விண்டலறப் படுதிரை விசும்பிடைப் படரச், சேயிருவிசும்புந் திங்களும் சுடரும் தேவரும் தாமுடன் றிசைப்ப, ஆயிரந்தோளால் அலைகடல் கடைந்தான்" (பெரிய திருமொழி, 5.7.4.) என்னும் அருளிச்செயலை உட்கொண்டு, 'வருந்தித்தான்தர' என்றார். 'திறல்கொளாமையாய் முதுகினில் மந்தரந்திரிய, விரல்கொளாயிரந் தடக்கைகள் பரப்பி மீ வலிப்ப' (501) என ஆசிரியரால், கடல்கடைந்த செய்தி முன்னும் பேசப்பட்டது. 'தாழி தரையாகத் தண்தயிர் நீராகத் தடவரையே மத்தாகத் தாமரைக்கை நோவ ஆழிகடைந்து' (ஆரணிய. சரபங்கர். 29.) என்று பின்னும் பேசப்பட்டது. அருமுயற்சி செய்து பெற்றது, நரை திரை மூப்புப் பிணி சாக்காடுகள் நீக்கி வாழ்வளிக்க வல்லது எனப் பெற்ற பொருளின் பெருமை தோன்ற அமுது என்றார். அதனையும் தான் உண்ணாது தேவரை ஊட்டிய பெருவண்மைதோன்ற அமுதையும் அருந்தும் நீர் என்று அமரரை ஊட்டினன் என்றார். அருந்துமின் என்பது அருந்தும் எனக் குறைந்து நின்றது. அடகும் உண்டு விளங்கினன் என உம்மைவிரிக்க. விருந்து-விருந்துணவு. அடகு-இலை=கீரை. திருந்தினர் வயிற் செய்தன தேயா என்னும் பொதுப் பொருள்கொண்டு திருந்தினவனான இராம பிரானுக்கு முனிவர் படைத்தது புல்லிய அடகுணவேனும் உண்ட அப்பெருமான் பெருமையால் அவ்வுணவும் உயர்ந்தவுணவாயிற்று என்னும் சிறப்புப்பொருள் துணிய நின்றமையால் இச்செய்யுள் வேற்றுப்பொருள்வைப்பு என்னும் அணிதழுவி அமைந்ததாகும். பின் இரண்டடிகள், "இனைத் துணைத் தென்பதொன்றில்லை விருந்தின் துணைத்துணை வேள்விப்பயன்" (87) என்னும் திருக்குறளும், "உறக்குந்துணையதோர் ஆலம்வித்தீண்டி இறப்ப நிழற் பயந்தாஅங்கு, அறப்பயனும், தான் சிறிதாயினும் தக்கார்கைப் பட்டக்கால் வான் சிறிதாப் போர்த்துவிடும்" (38) என்னும் நாலடிப்பாடலும் தழுவியமைந்தவை. (27)

12, 17, 18, 23, 43, 45, 49 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இச்செய்யுட்குப்பின், கங்கைப் படலம் முற்றும் என்று வரையப்பட்டுளது.

45. என்னும் குறியீடுள்ள அடையாற்றுப்பதிப்பில், "ஒரு பிரதியில்

2042 (a) 'அன்ன காரணத் தையனு மாங்கவர்
உன்னு பூசனை யாவு முவந்தபின்
மின்னு செஞ்சடை மெய்த்தவர் வேண்டிடப்
பன்ன சாலையின் பாடிருந் தானரோ.'

என்னும் பாடலும், 'வழிநடைப் படலம் முற்றும்' என்ற தொடரும் காணப்படுகின்றன" என்ற குறிப்பு உளது.

36-ஆம் பாடலுள் 'இருந்தவள்ளல்' என்ற தொடர் உளது; ஆதலால் இராமபிரான் முனிவர் சாலையில் இருந்தமை ஒரு செய்யுளால் பேசுவது இயைபுடையதாகு மென்று கருதிய பிற்காலத்தார் ஒருவர் 'அன்னகாரணத்' தென்று தொடங்கும் செய்யுளை இயற்றி இடையே செருகிவிட்டார் என்று தோன்றுகிறது.

## குகன் இயல்பு 2043—2050

**2043.** ஆய காலையி னுயிர மம்பிக்கு
நாய கன்போர்க் குகனெனு நாமத்தான்
றூய கங்கைத் துறைவிடுந் தொன்மையான்
காயும் வில்லினன் கற்றிர டோளினன்.

ஆய காலையின் ஆயிரம் அம்பிக்கு
நாயகன், போர்க் குகன் எனும் நாமத்தான்,
தூய கங்கைத் துறை விடும் தொன்மையான்,
காயும் வில்லினன் கல் திரள் தோளினன்.

பொ :—(இராமபிரான் முனிவர்பள்ளியில் விருந்துண்டு மகிழ்ந்திருந்த) அப்பொழுது, எண்ணற்ற ஓடங்களுக்குத் தலைவனும், போர்த்தொழில் வல்ல குகன் என்னும் பெயரையுடையவனும், தூயதாகிய கங்கைத் துறையில் படகு செலுத்தும் பழையோனும், (பகைவரை) வருத்தும் விற்படையுடையவனும், மலைபோலத் திரண்ட தோள்களையுடையவனும்.

கு:—இச்செய்யுள் முதல் முப்பத்தாருஞ் செய்யுள்வரை ஒரு தொடர். அப்பொழுது, ஆயிரம் அம்பிக்கு நாயகனும் கங்கைத் துறைவிடும் தொன்மையானும்..............தேனெடு மீனுபகாரத்தனுமான குகனெனும் நாமத்தான், வள்ளலைக்காண வந்து எய்தினன்

என முடியும். அம்பி–ஓடம். ஆயிரம் இங்கே அளவிறந்தமை சுட்டி நின்றது; ‘கணக்கிறந்த நாவாயான்’ (குகப். 25) என்று பின்னும் கூறுதல் காணத்தகும். உடையானது சினம் உடைமையாகிய வில்லின்மேல் ஏற்றிக் கூறப்பட்டது. கல்-மலை; ‘கல் சேர்பு மாமழை தலைஇ’ (பதிற்றுப். 84.23) என்பதனுள், கல் மலையென்னும் பொருளில் பயின்றமை காணலாம். (28)

12, 17, 18, 23, 43, 45, 49 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இச் செய்யுளின் முன்னே குகப்படலம் என்று தலைப்புக் கொடுக்கப்பட்டுளது.

**2044.** துடிய ஞயினன் றோற்செருப் பார்த்தபே
ரடிய னற்செறிந் தன்ன நிறத்தினு
னெடிய தானை நெருக்கின னீர்முகி
லிடியி னேடெழுந் தாலன்ன வீட்டினன்.

துடியன், நாயினன், தோல் செருப்பு ஆர்த்த பேர்
அடியன், அல் செறிந்தன்ன நிறத்தினன்,
நெடிய தானை நெருக்கினன், நீர் முகில்
இடியினேடு எழுந்தால் அன்ன ஈட்டினன்.

பொ :—துடி என்னும் பறையையுடையவனும், நாயையுடையவனும், தோலாலாகிய (வார்ச்) செருப்பணிந்த பெரிய கால்களையுடையவனும், இருள் செறிந்தாற்போன்ற கரிய நிறத்தையுடையவனும், பெரிய படைச்செறிவுடையவனும், காளமேகம் இடியொடு எழுந்தாற் போன்ற ஆற்றலுடையவனும்,

கு :—துடி-ஒருவகைப்பறை. ஆர்த்த என்றமையால் இங்கே குறித்தது வார்ச்செருப்பு என்பது பெறப்படும்; நெடுந்தூரம் விரைந்து செல்வார் காலினின்றும் கழலாதபடி வாரால் காலொடு செறியப் பிணித்துக் கொள்ளுதல் வழக்கம். ஆர்த்தல்–கட்டிக் கொள்ளுதல். முகில்.........எழுந்தால் அன்ன ஈட்டினன் என்றது முகில்போல ஆக்கலும் அழித்தலும் வல்லன் என்றவாறு. (29)

**2045.** கொம்பு துத்தரி கோடதிர் பேரிகை
பம்பை பம்பு படையினன் பல்லவத்
தம்ப னம்பிக்கு நாத னழிகவுட்
டும்பி யீட்டம் புரைகிளை சுற்றினன்.

கொம்பு துத்தரி கோடு அதிர் பேரிகை
பம்பை பம்பு படையினன், பல்லவத்து
அம்பன், அம்பிக்கு நாதன், அழிகவுள்
தும்பி யீட்டம் புரை கிளை சுற்றினன்.

பொ :—ஊது கொம்பாகிய துத்தரியும் சங்கும் முழங்குகின்ற பேரிகையும் பறையும் நிறைந்த படையினையுடையவனும், இலைவடிவான அம்புகளையுடையவனும், ஓடங்களுக்குத் தலைவனும், மதநீர் கசிகின்ற கன்னங்களையுடைய யானைக்கூட்டத்தை ஒத்த சுற்றத்தாராற் சூழப்பட்டவனும்.

கு:—துத்தரிக்கொம்பு என்க; இருபெயரொட்டு. கோடு – சங்கு. பம்பை-பறை. பல்லவம்–இலை. கவுள் - கன்னம். தும்பியீட்டம்–யானைக்கூட்டம். புரை உவமவுருபு. (30)

2046. காழ மிட்ட குறங்கினன் கங்கையி
னாழ மிட்ட நெடுமையி னனரை
தாழ விட்டசெங் தோலன் றயங்குறச்
சூழ விட்ட தொடுபுலி வாலினன்.

காழம் இட்ட குறங்கினன், கங்கையின்
ஆழம் இட்ட நெடுமையினன், அரை
தாழ விட்ட செந்தோலன், தயங்குறச்
சூழ விட்ட தொடு புலி வாலினன்.

பொ :—சல்லடம் அணிந்த துடையையுடையவனும், கங்கையாற்றின் ஆழத்தை அளவிட்டறிந்த நெடியவனும், இடுப்பினின்று தாழத் தொங்கவிட்ட நல்லதோலுடை யுடையவனும், (அரையைச்சூழ) விளக்கம் மிக அணிந்த ஒன்றோடொன்று தொடுக்கப்பட்ட அரைக்கச்சையாகிய புலிவாலையுடையவனும்,

கு :—காழம்-உடைவகையில் ஒன்று ; அரையிலிருந்து தொடைவரை மறைக்கும்படி கருப்புத்துணியால் தைத்து அணியப்படும் சல்லடம் என்பர். குறங்கு-துடை. தயங்குதல்-விளங்குதல். (31)

2047. பற்றை டுத்தன்ன பல்கு கவடியன்
கற்றை டுத்தன்ன போலுங் கழலின
னற்றை டுத்தன்ன குஞ்சிய னளியி
னெற்றை டொத்து நெரிபுரு வத்தினன்.

பல் தொடுத்தன்ன பல்கு கவடியன்,
கல் தொடுத்தன்ன போலும் கழலினன்,
அல் தொடுத்தன்ன குஞ்சியன், ஆளியின்
நெற்றொடு ஒத்து நெரி புருவத்தினன்.

பொ :—பற்களை (உடலுறுப்புக்களில்) தொடுத்துவைத்தாற் போன்ற பலவாகிய பலகறை மாலைகளை அணிந்தவனும், மணிகளை வரிசையாக அழுத்திய வீரக்கழலையுடையவனும், இருளை இணைத்தாற் போன்ற குழற்கற்றையையுடையவனும், ஆளியென்னும் செடியின் வற்றியுலர்ந்த காய்போன்று வளைந்த புருவத்தையுடையவனும்,

கு :--பல்குதல் - மிகுதல். கவடி - பலகறை; கவடி பல் போல்வது. வேடர், தம் தோள் மார்பு கழுத்து இடை கால் முதலியவுறுப்புக்களில் கவடியைத் தொடுத்து அணிந்து கொள்வர்; 'கவடி மெய்க்கலன்கள் பூண்டு' (கண்ணப்ப. 37) என்பது பெரிய புராணம். 'வெய்ய ஊன் உணத் தந்தங்கள் மேனியும் கையும் காலும் மொய்த்தன்னகவடியான்' (திருக்குற்றலத் தலபுராணம் க. 17. வேடன் வலம் வந்த சருக்கம் 11) என்பது, 'பற்றொடுத்தன்ன பல்கு கவடியன் என்பதன் விளக்கமாய் அமைந்தமை காணத்தகும். கல்-இங்கே மணிகளை உணர்த்தி நின்றது. போலும் உரையசை. அல்-இருள். குஞ்சி - குழல். ஆளி - கீரை வகையுள் ஒன்று. நெற்று - வற்றி உலர்ந்த காய். நெரிதல் - வளைதல். (32)

2048. பெண்ணை வன்செறும் பிற்பிறங் கிச்செறி
வண்ண வன்மயிர் வார்ந்துயர் முன்கையான்
கண்ண கன்றட மார்பெனுங் கல்லின
னெண்ணெ யுண்ட விருள்புரை மேனியான்.

பெண்ணை வன் செறும்பில் பிறங்கிச் செறி
வண்ண வன் மயிர் வார்ந்து உயர் முன்கையான்,
கண் அகன் தட மார்பு எனும் கல்லினன்
எண்ணெய் உண்ட இருள் புரை மேனியான்.

பொ :—பனையின் வலிய செறும்பு போல விளங்கி அடர்ந்துள்ள கரிய நிறமுடைய வலிய உரோமம் நீண்டு வளர்ந்த முன் கைகளையுடையவனும் மிக அகன்ற பெரிய மலைபோலும் மார்பையுடையவனும், எண்ணெய் ஊட்டிய இருள்போலும் வடிவுடையவனும்.

கு :—பெண்ணை - பனை, செறும்பு சிரும்பு எனவும் வழங்கும். பனஞ் செறும்பு உரோமத்துக்கு உவமம். 'பனஞ் செறும்பன்ன பன்

மயிர் முன்கை' (பெருங்கதை, 2. 8. 107), 'இரும்பனஞ் செறும்பி னன்ன பரூஉ மயிர்' (அகநானூறு 277) என்பனவும் இங்கு ஒப்பு நோக்கத்தகும். வார்தல் - நீளுதல். மார்பெனுங்கல் - மார்பென்று சொல்லப்படுகிறமலை ; உருவகம். கல் - மலை. மார்புக்கு மலை உவமை; 'மலையார் மணிமார்பன்' (சீவகசிந்தாமணி. 216) என்பது காண்க. (33)

2049. கச்சொ டார்த்த கறைக்கதிர் வாளின
னச்ச ராவி னடுக்குறு நோக்கினன்
பிச்ச ராமன்ன பேச்சின னிந்திரன்
வச்சி ராயுதம் போலு மருங்கினன்.

கச்சொடு ஆர்த்த கறைக் கதிர் வாளினன்,
நச்சு அராவின் நடுக்கு உறும் நோக்கினன்,
பிச்சர் ஆம் அன்ன பேச்சினன், இந்திரன்
வச்சிராயுதம் போலும் மருங்கினன்.

பொ :—கச்சொடு பிணித்த குருதிக் கறை விளங்கும் வாட்படை யுடையவனும், விட முடைய பாம்பின் நோக்குப் போல் நடுக்கம் விளைக்கும் நோக்குடையவனும், பித்தர் பேச்சுப் போலும் இயை பற்ற பேச்சுடையவனும், இந்திரனுடைய வச்சிராயுதம் போலும் வலிய இடையை யுடையவனும்.

கு :—கச்சு - இடையில் உடையை இறுகப்பிணிக்கும் ஒருவகை உடை. 'நச்சராவும் நடுக்குறும் நோக்கினன்' என்ற பாடத்தினும், 'நச்சராவின் நடுக்குறு நோக்கினன்' என்ற பாடமே அமைவுடைய தென்பது, 'நச்செயிற்றரவினேக்கின் மன்னரை நடுங்க நோக்கி' (சீவகசிந்தாமணி. 2494) என்ற திருத்தக்க தேவர்வாக்கானும் அறிய லாம். பிச்சர் - பித்தர்; போலி. ஆம் அசை. மருங்கு - இடை. 'வச்சிரா யுதம் போலும் மருங்கினன்' என்பது பெரும்பான்மையான சுவடி களில் கண்ட பாடம். இனி ஒரு சில சுவடிகளிலுள்ளபடி வச்சிரம் புரைகின்ற வலியினன்', 'வச்சிராயுத மன்ன மனத்தினன்' என்று பாடங் கொண்டு, வச்சிராயுதம் போன்ற கெடாத வலிமையுடையான், வச்சிரா யுதம் போன்ற உறுதியான மனம் உடையவன் என்று பொருள் கொள்ளலும் அமையும். (34)

2050. ஊற்று மொய்ந்நற வூனொடு மீனுகர்
நாற்ற மேய நகையின் முகத்தினன்
சீற்ற மின்றியுந் தீயெழ நோக்குவான்
கூற்ற மஞ்சக் குமிறுங் குரலினன்.

**ஊற்று மொய் நறவு ஊனொடு மீன் நுகர்**
**நாற்றம் மேய நகை இல் முகத்தினன்,**
**சீற்றம் இன்றியும் தீ எழ நோக்குவான்,**
**கூற்றம் அஞ்சக் குமிறும் குரலினன்.**

பொ :—வார்க்கின்ற (ஈக்கள்) மொய்க்கின்ற கள்ளும் ஊனும் மீனும் உண்ணுதலால் உண்டாகிய தீய நாற்றம் பொருந்திய சிரித்தல் இல்லாத முகத்தையுடையவனும், சினம் இல்லாத நிலையினும் நெருப்பு எழும்படி நோக்குபவனும் இயமனும் அஞ்சும்படி முழங்கும் குரலை யுடையவனும்.

கு :—ஊற்றுதல் – வார்த்தல். நறவு - கள். எண்ணொடு முன்னும் பின்னும் கூட்டப்பட்டது. நகை – சிரிப்பு. கூற்றம் – யமன். (35)

## குகன் இராமனைக் காண வருதல் 2051—2052

2051. சிருங்கி பேர மெனத்திரைக் கங்கையின்
மருங்கு தோன்று நகருறை வாழ்க்கைய
னொருங்கு தேனொடு மீனுப காரத்த
னிருந்த வள்ளலைக் காணவந் தெய்தினன்.

**சிருங்கிபேரம் எனத் திரைக் கங்கையின்**
**மருங்கு தோன்றும் நகர் உறை வாழ்க்கையன்,**
**ஒருங்கு தேனொடு மீன் உபகாரத்தன்,**
**இருந்த வள்ளலைக் காண வந்து எய்தினன்.**

பொ :—சிருங்கிபேரம் என்ற பெயரால் வழங்கும்படி கங்கையை அடுத்துத்தோன்றிய நகரில் உறையும் வாழ்வுடையவனும், தேனும் மீனும் ஆகிய கையுறைப் பொருள்களை ஒருங்கு கொண்டவனும் ஆன குகன், முனிவர் பள்ளியில் விருந்தினனாகத் தங்கியிருந்த இராமபிரானைக் காணும்பொருட்டு வந்து அடைந்தான்.

கு :—' சிருங்கிபேரியர்கோன் ' (குகப்படலம் 47) என்பர் பின்னும். நாயகன், தொன்மையான், வில்லினன், தோளினன், துடியன்,

நாயினன், அடியன், நிறத்தினன், ஈட்டினன், படையினன், அம்பன், அம்பிக்கு நாதன், சுற்றினன், குறங்கினன், நெடுமையினன், தோலன், புலிவாலினன், கவடியன், கழலினன், குஞ்சியன், புருவத்தினன், முன்கையான், மார்பெனும் கல்லினன், மேனியான், வாளினன், நோக்கினன், பேச்சினன், மருங்கினன், முகத்தினன், நோக்குவான், குரலினன், வாழ்க்கையன், உபகாரத்தன் (ஆன) குகன் எனும் நாமத்தான், வள்ளலைக் காண வந்து எய்தினன் என முன் கவிகளோடு இணைத்து முடிக்க. இங்கே வள்ளல் என்றது இராமனை. (36)

2052. சுற்ற மப்புற நிற்கச் சுடுகணை
விற்று றந்தரை வீக்கிய வாளொழித்
தற்ற நீத்த மனத்தின னன்பின
னற்ற வப்பள்ளி வாயிலை நண்ணினன்.

சுற்றம் அப்புறம் நிற்கச் சுடு கணை
வில் துறந்து, அரை வீக்கிய வாள் ஒழித்து,
அற்றம் நீத்த மனத்தினன், அன்பினன்,
நல் தவப் பள்ளி வாயிலை நண்ணினன்.

பொ :—குறையற்ற (நிறைந்த) மனம் உடையவனும் அன்புடையவனுமான குகன், தன் பரிவாரங்கள் அப்பால் நிற்க, காயும் கணையினையும் வில்லையும் நீக்கி, அரையிற் கட்டிய உடை வாளையும் ஒழித்து, நல்ல தவஞ்செய்வார் உறையும் சாலையின் வாயிலை அடைந்து.

கு :—இதுவும் அடுத்து வரும் செய்யுளும் ஒரு தொடர். அற்றம் - குறை. குற்றமும் ஆம்; 'உள்ளம் தூயவன்' (2054) என்பர் பின்னும். நற்றவமாவது இறைபணியே பயனாகக் குறிக்கொண்டு செய்யும் தவம். முனிவர் சூழலிலும் அரசர் பக்கலிலும் கொலைக் கருவிகளோடு செல்லலாகாதாகலின் அவற்றை நீக்கிச் சென்றான் என்க. நண்ணினன் முற்றெச்சம். நண்ணிக் கூவாமுன் என வரும் பாடலோடு இயையும். (37)

இச்செய்யுளின் பின் சில பிரதிகளில் பின்வரும் செய்யுள் காணப்படுகிறது. அது நடையால் இடைச் செருகலென்று கொள்ளத்தக்கதாயிருக்கிறது.

2052 (a) நின்ரு னெஞ்சி னிரம்புறு மன்பால்
இன்றே நின்பணி செய்திட விறைவா
நன்றே வந்தன னயடி யேன்யான்
என்றே கூவின னெயினரி னிறையோன்.

## குகன் இலக்குவனிடம் தன்னை அறிவித்தல்

2053. கூவா முன்ன மிளையோன் குறுகிநீ
யாவான் யாரென வன்பி னிறைஞ்சினன்
றேவா நின்கழல் சேவிக்க வந்தனெ
னுவாய் வேட்டுவ னுயடி யேனென்ருன்.

கூவாமுன்னம் இளையோன் குறுகி, 'நீ
ஆவான் யார்?' என, அன்பின் இறைஞ்சினன்,
'தேவா! நின் கழல் சேவிக்க வந்தனென்,
நாவாய் வேட்டுவன் நாய் அடியேன்' என்ருன்.

பொ :—(தன் வரவு தெரிவிக்கும் பொருட்டு) அழைக்குமுன், இலக்குவன் (குகனைக்) கிட்டி, 'நீ யார்?' என்று வினவ, (அவன்) அன்பால் வணங்கி, 'அரசே! நாய்போல் ஏவின செய்தற்குரிய அடியனுன யான், ஓடங்களையுடைய வேடன்; உன் அடி வணங்க வந்தேன்' என்ருன்.

கு :—நண்ணிக் கூவாமுன் என இயைக்க. நீ யார்? என்ற வினு உன் பெயர் யாது? தொழில் யாது? எது கருதி வந்தனை? என அறிதற்குரிய பலவற்றையும் பற்றி எழுந்த தாதலின், அவற்றுக்கு முறையே (யான்) உன் அடியன், நாவாய் வேட்டுவன், நின்கழல் சேவிக்க வந்தனென் என்று குகன் விடைகூறுவானுயினன். சேவித்தல்-வணங்குதல். நின் என ஒருமையாற் கூறியது அடியாரை வணங்கியே இறைவனை வணங்க வேண்டும் என்னும் முறை பற்றியதாகலாம்; இராமனுக்கும் இலக்குவனுக்கு மிடையே பேதமின்மை கருதி எனலுமாம். 'இலக்குமணனையே இராமனுகக் கொண்டு கூறினன்' என்பாரும் உளர். வணங்கல் காரியம்; பயனும் அதுவே. "கூடும் அன்பினிற் கும்பிடலே அன்றி, வீடும் வேண்டாவிறலின் விளங்கினர்," (திருக்கூட்டச்சிறப்பு. 8) என்பது திருத்தொண்டர் புராணம். (38)

## இலக்குவன் இராமனிடம் குகன்வரவு கூறுதல்

2054. நிற்றியீண் டென்று புக்கு
★ நெடியவற் றொழுது தம்பி
கொற்றவ நின்னைக் காணக்
குறுகின னிமிர்ந்த கூட்டச்

சுற்றமுந் தானு முள்ளந்
தூயவன் றாயி னல்ல
னெற்றுநீர்க் கங்கை நாவாய்க்
கிறைகுக னொருவ னென்றான்.

'நிற்றி ஈண்டு' என்று புக்கு,
நெடியவற் றொழுது, தம்பி,
'கொற்றவ! நின்னைக் காணக்
குறுகினன்; நிமிர்ந்த கூட்டச்
சுற்றமும் தானும், உள்ளம்
தூயவன், தாயின் நல்லன்,
எற்றும் நீர்க் கங்கை நாவாய்க்கு
இறை, குகன், ஒருவன்' என்றான்.

பொ :—இலக்குவன் (குகனை நோக்கி) 'இங்கே நில்' என்று கூறிப் பள்ளியுட் சென்று, பெரியோனான இராமபிரானை வணங்கி, 'அரசே! தூயமனத்தினனும், தாயினும் நல்லவனும், அலையெறிகின்ற நீர்ப் பெருக்குடைய கங்கையில் செல்லும் ஓடங்களுக்குத் தலைவனுமான குகன் என்று சிறப்பித்துச் சொல்லப்படும் ஒருவன், உன்னைக் காணும் பொருட்டு, அளவிறந்த கூட்டமான பரிவாரமும் தானும் வந்தனன்' என்றான்.

கு :—ஈண்டு நிற்றி என இயைக்க. சுற்றமும் தானும் குறுகினன் என்பது திணைவிரவி உயர்திணை முடிபேற்றது; தானும் தேரும் பாகனும் வந்தென் நலனுண்டான் என்பது போல. உள்ளத் தூய்மை சுற்றத்துக்கும் கொள்ளலுமாம். இஃது வந்தவன் தன்மையைத் தலைவன்பால் உரைக்கும் தலைவனோடு தொடர்புடையார் செயலாகிய உலகியன்முறையாவதே யன்றி, உய்தி பெறத் தக்கவுயிரின் மாண்பை இறைவன்பால் எடுத்துரைக்கும் குரவர் செயலாகிய அறிவனூன் முறையாயும் அமைந்தமை காணலாம். (39)

### குகன் இராமனைக் கண்டு மனமுருகுதல்

**2055.** அண்ணலும் விரும்பி யென்பா
லழைத்திநீ யவனை யென்னப்
பண்ணவன் வருக வென்றான்
பரிவினன் விரைவிற் புக்கான்

கண்ணனைக் கண்ணி னோக்கிக்
கனிந்தன னிருண்ட குஞ்சி
மண்ணுறப் பணிந்து மேனி
வளைந்துவாய் புதைத்து நின்றான்.

அண்ணலும் விரும்பி, 'என்பால்
அழைத்தி நீ அவனை' என்னப்
பண்ணவன் 'வருக' என்றான்;
பரிவினன் விரைவிற் புக்கான்;
கண்ணனைக் கண்ணின் நோக்கிக்
கனிந்தனன்; இருண்ட குஞ்சி
மண் உறப் பணிந்து, மேனி
வளைந்து, வாய் புதைத்து நின்றான்.

பொ :—இராமபிரானும், (குகனைக் காண) விழைந்து, (இலக்குவனை நோக்கி), 'நீ அவனை என்னிடம் அழைத்து வருக' என்று கூற, வலியனை இலக்குவன், (குகனை நோக்கி) 'வருக' என்றானாக, அன்புடையனை குகன் விரைந்து புக்கு, (யாவர்க்கும்) கண்போல்பவனான இராமனைத் தன் கண்ணால் நோக்கி, மனம் நெகிழ்ந்து, கரிய மயிர்த் தொகுதியையுடைய முடி படியுற வணங்கி, உடல் வளைந்து வாய் பொத்தி ஒடுங்கி நின்றான்.

கு :—அண்ணல் என்றது இராமனை. உம்மை, குகனை இலக்குவனும் விரும்பினமை குறித்தது. பண்ணவன் — வலிமையுடையவன். புக்கான், கனித்தனன் என்பவை முற்றெச்சம். கண்ணன் என்பதற்கு, கண்ணுள் உறைபவன் என்றும் கண்ணழகுடையவன் என்றும் பொருள் உரைத்தலும் ஆம். கண்ணின் நோக்கி என்பதற்கு (அருளுக்கு உறைவிடமாகிய அவ்விராமபிரானுடைய) கண்களாற்கண்டு என்று பொருளுரைத்தலும் ஆகும். குஞ்சி இங்கே ஆகுபெயராய்த் தலையை உணர்த்தி நின்றது. குகன் செயலால், இறைவன் அல்லது பெரியோர் பக்கல் செல்லுவார் செல்லுமாறு உணரலாம். (40)

### குகன் கையுறை யேற்குமாறு இராமனை வேண்டுதல்

2056. இருத்திநீ யென்ன லோடு
மிருந்தில னெல்லை நீத்த
வருத்தியன் றேனு மீனு
மமுதினுக் கமைந்த வாகத்

திருத்தினென் கொணர்ந்தே னென்கொ
    றிருவுள மென்ன வீரன்
விருத்தமா தவரை நோக்கி
    முறுவலன் விளம்ப லுற்ருன்.

'இருத்தி நீ' என்னலோடும்
    இருந்திலன்; எல்லை நீத்த
அருத்தியன், 'தேனும் மீனும்
    அமுதினுக்கு அமைந்த ஆகத்
திருத்தினென், கொணர்ந்தேன்; என்கொல்
    திருவுளம்'? என்ன, வீரன்,
விருத்த மாதவரை நோக்கி
    முறுவலன், விளம்பலுற்ருன்.

போ:—அளவுகடந்த அன்புடைய குகன், 'நீ இருத்தி' என்று இராமன் கூறிய அளவில் இராமல், 'தேனும் மீனும் உண்ணத் தக்கனவாகத் தூயனவாக்கிக் கொண்டுவந்துள்ளேன்; திருவுள்ளம் யாதோ ?' என்று கூற, இராமன், பெருந்தவத்தினரான முதியோரை நோக்கிப் புன்னகை பூத்தவனய்ச் சொல்லலுற்ருன்.

கு:—எல்லை நீத்த அருத்தி - அளவுகடந்த அன்பு=பேரன்பு. வீரன் என்பது இராமனுக்குரிய பெயர்களில் ஒன்று. (41)

குகன் கையுறையை இராமன் பாராட்டுதல்

2057. அரியதா முவப்ப வுள்ளத்
    தன்பின லமைந்த காத
றெரிதரக் கொணர்ந்த வென்ரு
    லமுதினுஞ் சீர்த்த வன்றே
பரிவினிற் றழீஇய வென்னிற்
    பவித்திர மெம்ம னேர்க்கு
முரியன வினிதி னுமு
    முண்டனெ மன்ரே வென்ருன்.

'அரிய, தாம் உவப்ப, உள்ளத்து
    அன்பினல் அமைந்த, காதல்
தெரிதரக் கொணர்ந்த, என்ருல்
    அமுதினும் சீர்த்த! அன்றே

பரிவினில் தழீஇய என்னில்,
பவித்திரம்; எம் அனோர்க்கும்
உரியன; இனிதின் நாமும்
உண்டனெம்; அன்றோ!' என்றான்.

பொ :—'கிடைத்தற்கு அரியனவும், தம்மால் விரும்பப்படுவனவும், உள்ளன்போடு கூடியனவும், அன்புவெளிப்படும்படி கொணரப்பட்டனவும் என்றால், அவை அமுதத்தினும் சிறந்தனவாம்; அன்பொடு கூடியவை என்றால் அவை தூயனவும் ஆகும். மேலும் எங்களுக்கும் எங்களைப் போன்றவர்க்கும் உரியனவும் ஆம். ஆயினும் நாமும் இனிதாக உண்டோம் அன்றோ!' என்று கூறினான்.

கு :—தாம் என்றது கையுறை கொடுவருவாரை; அசையெனினும் ஆம். உவப்ப, அன்பினால் அமைந்த, காதல் தெரிதரக் கொணர்ந்த எனின், (அவை) அரிய; அமுதினும் சீர்த்த என இயைத்து முடித்தலுமாம். உள்ளத்தன்பினால், அமைந்த காதல் தெரிதரக் கொணர்ந்த என்பதற்கு உள்ளன்பினால், அமைவுடைய பத்திபுலப்படக் கொணரப்பட்டவை என்று உரைகொள்ளலும் ஆம். குகன் அன்பொடு கொணர்ந்த கையுறையினை இராமன் அமுதினும் சிறந்ததாகவும் தூயதாகவும் பாராட்டினனென்றவாறு. ஏ, அன்று, ஓ என்பவை அசைகள். 'நின்னன்பு பிணித்தபோதே இருந்தேன் நுகர்ந்தேன் இதன்மேல் இனி யீவதென்னோ?', 'அன்பிற் சிறந்தாயதோர் பூசனை யார்கண் உண்டே' (சுந்தர. 60, 61) என்று அனுமன் கூற்றாக ஆசிரியர் கூறுவனவும் இங்கு நோக்கத்தகும். இராமன் தவவொழுக்க மேற்கொண்டமையானும், குகன் வருமுன்னமே அப்பெருமான் கங்கைக்கரையில் வாழும் முனிவர் ஈந்த விருந்துணவுண்டமையானும், குகன் தந்தவற்றை உண்ணும்நிலை யேற்படவில்லை; ஆதலால் குகன் கொணர்ந்த கையுறையை முனிவரைநோக்கிப் பாராட்டுவானாயினான். (42)

கங்கை கடக்க நாவாயொடு வழிநாள் வருமாறு
குகனிடம் இராமன் கூறுதல்

**2058.** சிங்கவே றனைய வீரன்
பின்னருஞ் செப்பு வான்யா
மிங்குறைந் தெறிநீர்க் கங்கை
யேறுது நாளை யாணர்ப்

பொங்குநின் சுற்றத் தோடும்
போயுவந் தினிது னூரிற்
றங்கிநீ நாவா யோடுஞ்
சாருதி விடிய லென்றான்.

சிங்க ஏறு அனைய வீரன்,
பின்னரும் செப்புவான், 'யாம்
இங்கு உறைந்து, எறி நீர்க் கங்கை
ஏறுதும் நாளை : யாணர்ப்
பொங்கும் நின் சுற்றத்தோடும்
போய், உவந்து, இனிது உன் ஊரில்
தங்கி, நீ நாவாயோடும்
சாருதி விடியல்' என்றான்.

பொ :—மேலும் கூறுபவனான ஆண்சிங்கம் போன்ற இராமன், 'நாங்கள் இங்கே (இன்று) தங்கி, அலைமோதுகின்ற நீர்ப் பெருக்குடைய கங்கையை நாளைக் கடப்போம்; நீ அழகுமிக்க நின்பரிவாரத்தோடும் இன்று உன் ஊர்க்குச் சென்று மகிழ்ந்து நன்குதங்கி, (நாளை) விடியற்காலத்தே நாவாயோடும் இங்கே வருக' என்றான்.

கு :—சிங்கவேறு நடையால் உவமமாயிற்று. உயர்புகழ்க் கொருத்தியாய இல்லாளையடைந்ததனால் உளதாகிய பீடுநடை கொண்டு, 'சிங்கவேறனைய வீரன்' என்றார். 'புகழ்புரிந்தில்லி லோர்க்கில்லை யிகழ்வார் முன் ஏறுபோற் பீடுநடை' (59) என்ற திருக்குறளும் இங்கு நோக்கத்தகும். யாம் என்றது இலக்குவனையும் பிராட்டியையும் உளப்படுத்தி என்க. யாணர்–அழகு; புதுவருவாயும் ஆம். (43)

### குகன் வேண்டுகோள்

2059. கார்குலா நிறத்தான் கூறக்
காதல னுணர்த்து வானிப்
பார்குலாஞ் செல்வ நின்னை
யிங்ஙனம் பார்த்த கண்ணை
யீர்கிலாக் கள்வ னேன்யா
னின்னலி னிருக்கை நோக்கித்
தீர்கிலே னான தைய
செய்குவெ னடிமை யென்றான்.

கார் குலாம் நிறத்தான் கூறக்
காதலன் உணர்த்துவான், 'இப்
பார்குலாம் செல்வ! நின்னை
இங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வனேன் யான்,
இன்னலின் இருக்கை நோக்கித்
தீர்கிலேன்; ஆனது, ஐய!
செய்குவென் அடிமை' என்றான்.

பொ :—மேகம்போல விளங்கும் கருநிறமுடைய இராமன், கூற, (அது கேட்ட) பேரன்பினனான குகன், (தன் கருத்தைத்) தெரிவிப்பவனாய், 'இவ்வுலகம் விரும்பும் செல்வனே! வியக்கத்தக்க குணநலம் வாய்ந்தவனே! உன்னை இப்படி (மணிமுடி துறந்து சடைமுடி புனைந்த கோலத்துடன்) பார்த்தகண்ணை அகழ்ந்தெடுத் தெறியாத கள்வனான யான், துன்பம் தரும் உன் இருப்பை நோக்கியும் செத்தேனில்லை; என்னால் இயன்ற தொண்டு செய்வேன்' என்று கூறுவானாயினன்.

கு :—குலாவுதல் – 1. விளங்குதல், 2. விரும்புதல். பார்குலாம் செல்வ என்பதற்கு நிலமகள் விரும்பும் செல்வனே! எனப் பொருளுரைத்தலும் ஆம். பார்குலாம் செல்வ! ஐய! என்ற விளிகள், நீ நாடு துறந்து காடு புகுந்தமை பொருந்தாது என்னும் குறிப்புடையன. இன்னலின் இருக்கை நோக்கித் தீர்கிலேன் என்பதற்கு (உன்னை இக் கோலத்திற் பார்த்த) துன்பத்தோடு என் ஊர் நோக்கிப் பிரிந்து செல்லேன் எனவும், (இன்பத்துக்கு உறைவிடமாகிய உனைப் பிரிந்து) துன்பத்துக்கு உறைவிடமாகிய என் ஊர் நோக்கிச் செல்லேன் எனவும் பொருளுரைத்தலும் ஆம். தீர்தல்–நீங்குதல். ஆனது அடிமை செய்குவென் என இயையும். ஆனது அடிமை-பொருந்திய தொண்டு. இதனால், இராமனுக்குப் பிரியா அடிமை செய்யக் குகன்விரும்பினமை புலனாகும். இச்செய்யுளின் இரண்டு மூன்றும் அடிகளுடன், 'கண் செய்த பாவம் கடலிற் பெரிதென்பார்', (1796) 'சுரிகையிற் கண்மலர் சூன்று நீக்கினார்,' (1868) 'சீதை மணவாளன் றன்னோடுந் தீக்கானம் போதும், அதுவன்றேற் புகுதும் எரியென்பார்' (1798) என்னும் பாடற் பகுதிகளும் நோக்கத்தகும். (44)

## குகன் கருத்தறிந்த இராமன் கூறுதல்

2060. கோதைவிற் குரிசி லன்னான்
கூறிய கொள்கை கேட்டான்
சீதையை நோக்கித் தம்பி
திருமுக நோக்கித் தீராக்

காதல னுகு மென்று
கருணையின் மலர்ந்த கண்ணன்
யாதினு மினிய நண்ப
விருத்தியீண் டெம்மொ டென்ருன்.

கோதை வில் குரிசில் அன்னுன் கூறிய கொள்கை கேட்டான்,
சீதையை நோக்கித் தம்பி திருமுகம் நோக்கித் 'தீராக்
காதலன் ஆகும்' என்று கருணையின் மலர்ந்த கண்ணன்,
'யாதினும் இனிய நண்ப! இருத்தி ஈண்டு எம்மொடு' என்ருன்.

பொ :—மாலையணிந்த வில்லையுடைய ஆடவருட்சிறந்தோனுகிய இராமன், அந்தக் குகன் கூறிய கோட்பாட்டைக் கேட்டு, சீதா பிராட்டி திருமுகத்தைநோக்கி, இலக்குவனுடைய திருமுகத்தையும் பார்த்து, (அவர்முகக்குறியால்) அவன் நீங்காத அன்புடையவனென்று துணிந்து, கருணையால் மலர்ந்த கண்களையுடையனுய், 'எல்லாவற்றி னும் இனிய நண்பா! இவ்விடம் எங்களுடன் இருப்பாயாக' என்று கூறினுன்.

கு :—கோதை-மாலை. குரிசில்-புருடரிற் சிறந்தோன். கேட்டான்-கேட்டு; முற்றெச்சம். பிராட்டி திருமுகமும் இலக்குவன் திருமுகமும் நோக்கியது குகனையேற்றுக் கொள்வது பற்றி அவர் உள்ளக்கருத்து அறிதற்பொருட்டு. இஃது, ஒருதலைவன் ஒருவனைப் பணியாளாகக் கொள்ளுங்கால், தன் மனையாள் கருத்தும் உடன்பிறந்தார் முதலி யோர் கருத்தும் அறிந்து ஏற்றுக்கொள்ளும் உலகியல் முறையொடும் இறைவன் ஒருவனை உய்விக்கக் கருதினுல், அவனைத் தன்பாற் சேர்ப்பிக்கும் குரவன்கருத்தும் பிராட்டியின் இசைவும் கொண்டு உய்விக்கும் அறிவனூன் முறையொடும் பொருந்தியமைதல் காணத் தகும். யாவதினும் என்பது யாதினும் என்ருனது விகாரம். ஒருவற்கு இனியனவாகவுள்ள எல்லாவற்றினும் அவன் உயிர் இனி தாதல்போல், இராமபிரானுக்குக் குகன் அப்பெருமான் உயிர்போல இனியனுயினன் என்றவாறு. இராமபிரான் குகனை, 'என்னுயிரனை யாய் நீ' (2083) என்று பின்னும் கூறுதல் காணலாம். "என்னில் யாரும் எனக்கினியாரில்லை, என்னிலும் இனியான் ஒருவன் உளன்" (தேவாரம் 5. 21. 1), "கனியினும் கட்டிபட்ட கரும்பினும், பனிமலர்க்குழற் பாவை நல்லாரினும் தனிமுடி கவித்தாளும் அரசி னும், இனியன் தன்னடைந்தார்க்கு இடைமருதனே" (தேவாரம், 5. 14. 10) என்னும் அப்பர் திருவாக்கு இங்கு நோக்கத்தகும். (45)

இதன்பின் 1, 3-5, 7, 12, 13, 15-20, 22-29, 33, 39-41, 43-45, 47, 49. என்னும் குறியீடுள்ள சுவடிகளில்,

2060 (a) அடிதொழு துவகை தூண்ட வழைத்தன ஞழியென்னத்
துடியுடைச் சேனே வெள்ளம் பள்ளியைச் சூழ வேவி
வடிசிலே பிடித்து வாளும் வீக்கிவா யம்பு பற்றி
இடியுடை மேக மென்ன விணையடி யெய்தி நின்ருன்.

என ஒரு செய்யுள் காணப்படுகிறது. இதனே மூலத்தோடு சேர்த்து அச்சிட்ட பதிப்பும் உண்டு. முன் 43 முதல் 45 முடியவுள்ள செய் யுட்களில், தன்னேவந்து கண்ட குகனே, 'இன்று நின் ஊர்க்குச்சென்று தங்கி, நாளே யாம் கங்கை கடத்தற்கு ஓடத்தோடும் வருக' என்று இராமபிரான் கூற, அவன், 'நின்னேப் பிரியாது இயன்ற அடிமை செய்வேன்' என்ருனுக, அப்பெருமான், 'இன்று நீ இங்கே எம்மொடு தங்குக' என்ருன் என்று கூறப்பட்டது. அதுகேட்ட குகன், பெரு மானே நோக்கி, 'நீ வளநகர் துறந்து கடுவனம் புகுந்தவாறு என்' என்ருனுக, இலக்குவன் நிகழ்ந்ததுகூறக் கேட்டு, அவன் கண்ணீர் பெருக வருந்தி அங்கே தங்கினுன் என, 'திருநகர் துறந்தவண் ணம்' என்னும் முதற்குறிப்புள்ள 46-ஆம்பாடலில் மேற்செய்தி தொடர்ந்து இயைபுறப் பேசப்பட்டுள்ளது. ஆனல் மேலே காட்டிய 'அடிதொழுது' என்று தொடங்கும் செய்யுளோ, இன்று இங்கே நீ எம்மொடு தங்குக என்று பெருமான் கூறக்கேட்ட குகன், 'உடனே அவனே வணங்கி உவகைதூண்டத் தன்படையை அழைத்து இராம பிரானிருந்த முனிவர் பள்ளியைச் சூழ்ந்து காவல்புரியும்படி ஏவித் தானும் வில்லும் அம்பும் கொண்டு வாளும் வீக்கி இடியொடு கூடிய மேகம்போல வந்து அவன் அடியிணேகளே அடைந்தான்' என்று பேசுகிறது. சுற்றத்தை அப்பால் நிறுத்தி, அம்பும் வில்லும் வாளும் அகற்றி முனிவர் பள்ளிவாயிலே அடைந்த குகன், பெருமான் இன்று இங்கே எம்முடன் நீ இருத்தி என்றவுடன், பள்ளியைச்சூழப் படை யினே ஏவி, வில்லும் வாளும் அம்பும் கொண்டு, பெருமானேயடைந் தமைக்குக் காரணம் புலப்படவில்லே. பாதுகாப்புக் கருதிப் படையை யேவித் தானும் வில்லும் அம்பும் வாளும் கொண்டு ஆயத்தமானுன் எனின், இடம் முனிவர்பள்ளி காலம் பகல் இந்த நிலேயில் பாதுகாப்பு வேண்டிய அவசியமில்லே. அவசியமென்று கருதினுல், பின் 2082-ஆம் பாடலில், 'திருவுளமெனின் மற்றென் சேனேயும் உடனேகொண்டு... உறைகுவென்' என்ருற்போல அதற்குப் பெருமான் இசைவை வேண்டிச் செய்திருப்பன். அவ்வாறில்லாமையால் 'அடிதொழுது' என்று தொடங் கும் இச்செய்யுள் இடைச்செருகல் என்று தோன்றுகிறது.

## திருநகர் தீர்ந்த செய்தியறிந்து குகன் வருந்தல்

2061. திருநகர் தீர்ந்த வண்ணம்
மானவ தெரித்தி யென்னப்
பருவர றம்பி கூறப்
பரிந்தவன் பையு ளெய்தி
யிருகணீ ரருவி சோரக்
குகனுமாண் டிருந்தா னென்னே
பெருநிலக் கிழத்தி நோற்றும்
பெற்றிலள் போலு மென்னா.

திருநகர் தீர்ந்த வண்ணம்,
மானவ! தெரித்தி! என்னப்
பருவரல் தம்பி கூறப்
பரிந்தவன் பையுள் எய்தி,
இருகண் நீர் அருவி சோரக்
குகனும் ஆண்டு இருந்தான்; 'என்னே!
பெரு நிலக் கிழத்தி நோற்றும்
பெற்றிலள் போலும்' என்னா.

பொ :—(குகன் இராமனை நோக்கி,) பெருமையுடையோய்! 'வளநகரைத்துறந்தவாறு தெரிவித்திடுக' என்றுகூற, இலக்குவன் அத்துன்பவிளைவைக் கூற, அன்புடையவனான குகனும், (அதுகேட்டுத்) துன்புற்றுப், பெரிய பூமியாகிய நங்கை இராமனை நாயகனாகப் பெறுதற்குரிய தவத்தைச் செய்தும் அந்தப் பேறு பெற்றிலள்; இஃது என்னே! என்று இருகண்களும் அருவிபோல நீரைப் பெருகவிட அங்கே தங்கினான்.

கு :—தீர்தல்-நீங்குதல். மானவன்-பெருமையுடையோன்; இராமன். தெரித்தல்-தெரிவித்தல். பருவரல்-துன்பம். பரிந்தவன்-அன்பு செய்தவனாகிய குகன். பையுள்-துன்பம். குகனும் என்பதனுள் உம்மை அக்குகன் சிறப்புணர நின்றது. ஆண்டு-அங்கே=முனிவர் பள்ளியில். நிலக்கிழத்தி - பூமிதேவி. நோற்றல் - தவஞ்செய்தல் போலும் அசைநிலை. "யாதினும் இனியநண்ப. இருத்தி யீண்டு எம்மொடு" (2060) என்ற இராமன் கட்டளைப்படி குகன் அங்கே (முனிவர் பள்ளியில்) தங்கினமை இதனாற் கூறப்பட்டமை காணத் தகும். (46)

## கதிரவன் மறைதல்

2062. விரியிருட் பகையை யோட்டித்
திசைகளை வென்று மேனின்
றொருதனித் திகிரி யுந்தி
யுயர்புகழ் நிறுவி நாளு
மிருநிலத் தெவர்க்கு முள்ளத்
திருந்தருள் புரிந்து வீந்த
செருவலி வீர னென்னச்
செங்கதிர்ச் செல்வன் சென்றான்.

விரி இருட்பகையை ஓட்டித்
திசைகளை வென்று, மேல் நின்று,
ஒரு தனித் திகிரி உந்தி,
உயர் புகழ் நிறுவி, நாளும்
இரு நிலத்து எவர்க்கும் உள்ளத்து
இருந்து அருள் புரிந்து வீந்த
செரு வலி வீரன் என்னச்
செங்கதிர்ச் செல்வன் சென்றான்.

பொ :—பரவிய இருளாகிய பகையைத் துறத்தி, எல்லாத்திசைகளையும் வெற்றிகொண்டு, மேலாகநின்று, ஒப்பற்ற சிறந்த திகிரியைச் செலுத்தி, உயர்ந்தபுகழை நாட்டி எந்நாளும் பெரிய பூமியிலுள்ளாரெல்லார்க்கும் மனத்திலே தங்கி அருள்புரிந்து இறந்தபோர்வலி மிக்க வீரனாகிய தசரதசக்கரவர்த்தி போலச் சூரியன் மறைந்தான்.

கு :—இது செம்மொழிச் சிலேடையுவமை என்னும் அணிதழுவியது. இருட்பகையை ஓட்டுதலும் திசைகளை வெல்லுதலும் மேனிற்றலும் ஒருதனித்திகிரியுந்தலும் புகழ்நிறுவுதலும் இருநிலத்து எவர்க்கும் உள்ளத்து இருந்து அருள் புரிந்து வீதலும் தசரதனுக்கும் கதிரவனுக்கும் பொதுவான தன்மைகள். தசரதன் மேற் சொல்லுங்கால், விரி இருட்பகையை ஓட்டித் திசைகளை வென்று-பரவிய இருள் போன்ற பகைவரை வலியழிந்து ஓடச்செய்து அவர் சென்று தங்கி நிலைபெறாதபடி திசைகளையெல்லாம் தன்ன தாக்கி எனவும், ஒரு தனித்திகிரி உந்தி-ஒப்பற்ற ஆணையாகிய ஏகசக்கரம் செலுத்தி எனவும், சூரியன் மேற் சொல்லுங்கால் பரவிய இருளாகிய பகையைத் துறந்து அவை எங்கும் தங்காதபடி திசைகளிலெல்லாம் தன்னொளி பரப்பி எனவும், ஒற்றையாழி பூண்டதேரைச் செலுத்தி எனவும் உரைக்க. ஏனையவை வெளிப்படை. (47)

## சீதாபிராட்டியும் இராமனும் தருப்பைப்புல்லில் உறங்க இலக்குவன் காத்து நிற்றல்

2063. மாலைவாய் நியமஞ் செய்து
மரபுளி யியற்றி வைகல்
வேலைவா யமிர்தன் னளும்
வீரனும் விரித்த நாணன்
மாலைவாய்ப் பாரின் பாயல்
வைகினர் வரிவி லேந்திக்
காலைவா யளவுந் தம்பி
யிமைப்பிலன் காத்து நின்றான்.

**மாலைவாய் நியமம் செய்து, மரபுளி இயற்றி, வைகல் வேலைவாய் அமிர்து அன்னாளும் வீரனும் விரித்த நாணல் மாலைவாய்ப் பாரின் பாயல் வைகினர், வரி வில் ஏந்திக் காலைவாய் அளவும் தம்பி இமைப்பிலன் காத்து நின்றான்.**

பொ :—மாலைக்காலத்திற் செய்யவேண்டிய கடமைகளை முறைப்படிசெய்து, நாளும் (பாற்) கடலில் தோன்றிய அமுதம் போல்பவளான சீதாபிராட்டியும் மகாவீரனை இராமனும் வரிசையாகப் பரப்பிய தருப்பையில் தரைப்பள்ளியில் தங்கி உறங்க, இலக்குவன், கட்டமைந்த வில்லைக் கைக்கொண்டு விடியுமளவும் கண்ணிமையாது காத்து நின்றான்.

கு :—மாலை விரித்த நாணல்வாய் என இயையும். (48)

பல சுவடிகளில் பின்வரும் பாடல்கள் மூன்றும் காணப்படுகின்றன. அவை பழைய பதிப்புக்களில் இல்லை; இங்கே வேண்டற் பாலனவும் அல்ல; ஆதலால் மூலத்தோடு சேர்க்கப்படவில்லை.

2063 (a) வெயில்விரி கனகக் குன்றத் தெழில் கெட விலகு சோதிக்
கயில்விரி கனகப் பைம்பூட் கடுந்திறன் மடங்க லன்னான்
துயிலெனு மணங்கு வந்து தோன்றலு மவளை நீ நாம்
எயிலுடை யயோத்தி மூதா ரெய்துநா ளெய்து கென்றான்.

2063 (b) மறக்கண்வா ளிளைய வீர னணையை மறுத்தல் செல்லா
உறக்கமா மாது மன்ன னுபயபங் கயங்கள் போற்றித்
துறக்கமா மென்ன லாய தூமதி ளயோத்தி யெய்தி
இறுக்குநா ளெந்தை பாத மெய்துவ னென்னப் போனாள்.

2063 (c) மற்றவ ளிறைஞ்சி யேக மாமலர்த் தவிசி னீங்காப்
பொற்றொடி யோடு மையன் றுயிறரு புன்மை நோக்கி
இற்றதோர் நெஞ்ச ளுகி யிருகணீ ரருவி சோர
உற்றவோ வியம தென்ன வொருசிலை யதனி னின்றான்.

## குகன் இராமலக்குவர்களை நோக்கி வருந்திநிற்றல்

2064. தும்பியின் குழாத்திற் சுற்றுஞ்
சுற்றத்தன் றொடுத்த வில்லன்
வெம்பிவெந் தழியா நின்ற
நெஞ்சினன் விழித்த கண்ணன்
றம்பிநின் றானை நோக்கித்
தலைமகன் றனிமை நோக்கி
யம்பியின் றலைவன் கண்ணீ
ரருவிசோர் குன்றி னின்றான்.

தும்பியின் குழாத்தில் சுற்றும்
சுற்றத்தன், தொடுத்த வில்லன்,
வெம்பி வெந்து அழியாநின்ற
நெஞ்சினன், விழித்த கண்ணன்,
தம்பி நின்றானை நோக்கித்
தலைமகன் தனிமை நோக்கி
அம்பியின் தலைவன் கண்ணீர்
அருவி சோர் குன்றில் நின்றான்.

பொ :—யானைக்கூட்டம்போலச்சூழவளைந்த பரிவாரங்களையுடையவனும், அம்பு ஏறிட்டவில்லையுடையவனும், சூடுண்டு கொதித்து அழிகின்ற மனம் உடையவனும் விழித்த கண்களையுடையவனும் ஓடங்களுக்குத் தலைவனும் ஆன குகன், இலக்குவன் நின்றானைப் பார்த்து, இராமனுடைய தனிமையையும் பார்த்துக் கண்ணீராகிய அருவி வழிகின்ற மலையைப்போல நின்றான்.

கு :—தும்பியின் குழாம்–யானைக்கூட்டம். குகன் சுற்றத்தைத் 'தும்பியீட்டம் புரைகிளை' (2045) என்றார் முன்னும். (49)

## கதிரவன் தோற்றம்

2065. துறக்கமே முதல வாய
தூயன யாவை யேனு
மறக்குமா நினைய லம்மா
வரம்பில தோற்று மாக்க
ளிறக்குமா றிதுவென் பான்போன்
முன்னைநா ளிறந்தான் பின்னாட்
பிறக்குமா றிதுவென் பான்போற்
பிறந்தனன் பிறவா வெய்யோன்.

துறக்கமே முதல ஆய
தூயன யாவையேனும்
மறக்குமா நினையல்; அம்மா!
'வரம்பு இல தோற்றும் மாக்கள்
இறக்கும் ஆறு இது' என்பான்போல்
முன்னை நாள் இறந்தான், பின்னாள்
'பிறக்கும் ஆறு இது' என்பான்போல்
பிறந்தனன் பிறவா வெய்யோன்.

பொ :—தோற்றம் அற்றவனான கதிரோன், 'எல்லையற்றனவாகத் தோன்றும் உயிர்கள் இறந்துபடும்விதம் இப்படி' என்று தெரிவிப்பவன் போல முதல்நாள் (அத்தமனகிரி) கடந்து மறைந்தவன், அவ்வுயிர்கள் தோன்றும்விதம் இப்படி என்று தெரிவிப்பவன்போல மறுநாள் (உதயகிரியில்) தோன்றினான்! (ஆதலால் பிறப்பிறப்புக்களால் உண்டாகும் துன்பம் நீங்கும் விழைவுடையார், ஒரு குறிப்பிட்டகாலம்வரை துய்த்தொழியும் இன்பம் உள்ள) துறக்கம் முதலிய நல்லவுலகம் எவையாயினும் அவற்றை மறக்கும்படி நினைக.

கு :—துறக்கம்-சுவர்க்கம். மறக்குமாறு என்பது மறக்குமா என நின்றது விகாரம். நினையல்-நினைக; அல்லீற்றுவியங்கோள், 'மக்கட்பதடி எனல்' (திருக்குறள். 196) என்பதனுட்போல உடன்பாட்டில் வந்தது. அம்மா அசைநிலை; வியப்புப் பொருள் குறித்து நின்றதும் ஆம். (நிலையாத இன்பம் தரும்) துறக்க முதலியவற்றை மறக்குமாறு நினைக எனவே, ஒழியாத பேரின்பம் உள்ள வீட்டைய எண்ணி முயலுக என்றவாறு. 'பிறவா வெய்யோன்' எனவே அவன் இறவாமையும் பெறப்படும். பெறவே, இறந்தான் பிறந்தான் என்பன மறைந்தான் தோன்றினான் என்று பொருள் கொள்ள நின்றன. இச்செய்யுளின் பின்னிரண்டடிகளும், "உறங்குவதுபோலுஞ் சாக்காடு

உறங்கி, விழிப்பது போலும் பிறப்பு" (339) என்னும் திருக்குறட் கருத்தமைந்தவை. "தேய்தலுண்மையும் பெருகலுண்மையும், மாய்தலுண்மையும் பிறத்தலுண்மையும், அறியாதோரையும் அறியக் காட்டித், திங்கட்புத்தேள் திரிதரும் உலகத்து" (புறநானூறு. 27) என்று சந்திரனது தோற்றம் மறைவு முதலியவை கொண்டு, உயிர்கள் சாதலும் பிறத்தலும் விளக்கி நின்றபாடலும் இங்கு நோக்கத்தகும். (50)

### கதிரவன் தோன்றும் காலை நிகழ்ச்சி

**2066.** செஞ்செவே சேற்றிற் றோன்றுந்
தாமரை தேரிற் றோன்றும்
வெஞ்சுடர்ச் செல்வன் மேனி
நோக்கின விரிந்த வேறோ
ரஞ்சன நாயி றன்ன
வையனை நோக்கிச் செய்ய
வஞ்சிவாழ் வதன மென்னுந்
தாமரை மலர்ந்த தன்றே.

செம் செவ்வே சேற்றில் தோன்றும்
தாமரை, தேரில் தோன்றும்
வெம் சுடர்ச் செல்வன் மேனி
நோக்கின விரிந்த; வேறு ஓர்
அஞ்சன நாயிறு அன்ன
ஐயனை நோக்கிச் செய்ய
வஞ்சி வாழ் வதனம் என்னும்
தாமரை மலர்ந்தது அன்று ஏ.

பொ :—சேற்றில் முளைத்த தாமரைகள், (வானத்தில்) ஒற்றை யாழித் தேரில் தோன்றும் வெவ்விய ஒளிமிக்க சூரியன் வடிவை நோக்கி மிக்க அழகுடையவாய் மலர, அச் செஞ்சுடர்ச் செல்வனின் வேறான (குளிர்ந்த ஒளிமிக்க பாரில் தோன்றிய) கருஞாயிறு போலும் வியக் கத்தக்க இராமன் திருமேனியை நோக்கி, (ஒழுக்க மேம்பாடுடைய சனகமன்னனது வேள்விநிலத்தில் தோன்றிய) செவ்விய வஞ்சி (போல்வாளாகிய சீதாபிராட்டி)யின் செழித்த முகமென்னும் தாமரையும் மலர்ந்தது.

கு :—தாமரை சுடர்ச்செல்வன் மேனி நோக்கின செஞ்செவே விரிந்த என இயைக்க. நோக்கின, விரிந்த என்பவை நோக்கி, விரிய என எச்சப்பொருள்பட நின்றன. தாமரைக்கும் சூரியனுக்கும் கொடுத்த அடைமொழிகளுக்கியையப் பிராட்டியின் முகத்தாமரைக்கும் இராமனுகிய கருநாயிறுக்கும் ஏற்ற அடைமொழிகள் விரித்துரைக்க லாயிற்று. இதனுல் செங்கதிர்த் தோற்றங்கண்டு மலர்ந்த சேற்றுத் தாமரை மலரினும், அந்த நாயிற்றின் ஒளியையும் மறைக்கும் அழி யாத பேரொளியுடைய கருஞாயிறுபோலும் இராமன் திருமேனி கண்டு மலர்ந்த பிராட்டியின் திருமுகச் செவ்விமிகுதி கூறியவாறு. செஞ்செவ்வே என்பது செஞ்செவே என நின்றது விகாரம். செம் செவ்வே-மிக்க அழகுடையவாக. "செஞ்செவே கமலக்கையால் தீண் டலும்" (981) "செஞ்செவே படர்வர் என் படைஞர்" (யுத்த. வருணனை வழி. 13) என இத்தொடரை ஆசிரியர் வேறிடங்களிலும் வழங்குதல் நோக்கத்தகும். "செஞ்செவே யாண்டாய் சிவபுரத்தரசே" (28-6) என்பது திருவாசகம். ஒரு தாமரை மலர்ந்தமை கூறத்தொடங்கிய வர், அத்தாமரையினும் சிறந்த பிறிதொரு தாமரை மலர்ந்ததனையும் உடன் கூறுவாராயினுர். சீதாபிராட்டி, 'தெய்வந்தொழாள் கொழுநற் றெழுதெழுவா'ளாதலின், ஐயனை நோக்கிச் செய்ய வஞ்சி வாழ் வதன மென்னும் தாமரை மலர்ந்த தென்ருர். இராமனைக் கருஞாயிறென்று கூறுதல், 'கருநாயிறு போல்பவர்' (1248) என்ற ஆசிரியர் கூற்ருனும், "செந்தண் கமலக்கண் கை கால் சிவந்த வாயோர் கருநாயிறு, அந்தமில்லாக் கதிர்பரப்பி யமர்ந்த தொக்குமம்மானே" (திருவாய்மொழி. 8. 5. 7) என்னும் அருளிச்செயலாலும் விளங்கும். (51)

### இராமன் குகனை விரைவில் நாவாய் கொணர்க எனல்

**2067.** நாண்முதற் கமைந்த யாவு
நயந்தன னியற்றி நாமத்
தோண்முதற் கமைந்த வில்லான்
மறையவர் தொடரப் போனு
ஞண்முதற் கமைந்த கேண்மை
யன்பனை நோக்கி யைய
கோண்முதற் கமைந்த நாவாய்
கொணருதி விரைவி னென்ருன்.

நாள் முதற்கு அமைந்த யாவும்
நயந்தனன் இயற்றி, நாமத்
தோள் முதற்கு அமைந்த வில்லான்,
மறையவர் தொடரப் போனன்,
ஆள் முதற்கு அமைந்த கேண்மை
அன்பனை நோக்கி, 'ஐய!
கோள் முதற்கு அமைந்த நாவாய்
கொணருதி விரைவின்;' என்ருன்.

பொ :—அச்சம் விளைக்கும் தோளின்கண் பொருந்திய வில்லை யுடைய இராமன், காலைப் பொழுதிற் செய்யத்தக்கனவான கடன்களையெல்லாம் விரும்பிச் செய்து, வேதம்வல்ல முனிவர் பின்பற்றி வரச்சென்று, ஆண்மையாகிய சிறந்தபண்புக்கு இயைந்த கேண்மையினை உடைய அன்பனுகிய குகனை நோக்கி, 'ஐய! கொண்டு செல்லுதற் கேற்ற சிறந்த ஓடத்தை விரைவிற் கொணர்க' என்று கூறினன்.

கு :—நாள் முதல்-நாளின் முற்கூறு=காலை. முதல், முன்னது முதற்பகுதியையும் இரண்டாவது ஏழனுருபையும் மூன்றும் நான்கும் சிறப்பு என்னும் பொருளையும் உணர்த்தின. அயோத்தியிலுள்ளார் வந்து தான் வனம்போதலைத் தடைசெய்யவும் கூடும் என்று கருதி அவ்வாறு நேராதபடி விரைந்து நாவாய் கொணர்க என்ருன். (52)

## இராமனிடம் குகன் வேண்டுகோள் 2068—2072

**2068.** ஏவிய மொழிகேளா
★ விழிபுனல் பொழிகண்ணு
ஞவியு முலேகின்ரு
னடியிணை பிரிகல்லான்
காவியின் மலர்காயா
கடன்மழை யனையானைத்
தேவியொ டடிதாழாச்
சிந்தனை யுரைசெய்வான்.

ஏவிய மொழி கேளா, இழி புனல் பொழி கண்ணன்,
ஆவியும் உலைகின்ருன், அடியிணை பிரிகல்லான்,
காவியின்மலர் காயா கடல் மழை அனையானைத்
தேவியொடு அடிதாழாச் சிந்தனை உரை செய்வான்.

பொ :—இராமனல் கட்டளையிடப்பட்ட ('நாவாய் விரைவிற் கொணர்க' என்ற) சொற்களைக்கேட்டு, ஒழுகுகின்ற கண்ணீரைப் பொழியும் கண்ணையுடையவனும் உயிரும் உலைகின்றவனும் இராமனுடைய திருவடிகளைப் பிரிந்து உயிர் தரித்திருக்கும் வலிமையற்றவனும் ஆகிய குகன், சீதாபிராட்டியுடன் நீலமலரும் காயாம்பூவும் கடலும் மழையும் போன்ற (கரிய) திருமேனியுடைய இராமனையும் அடிவணங்கித் தன் மனக்கிடக்கையைச் சொல்லுவானாயினன்.

கு :—நாவாய் விரைவிற் கொணருதி என்பதனல் இராமன் பிரிந்து செல்லுங்கருத்தினன் என்பதைத் தெரிந்து அது தனக்கு விருப்பமன்மையின் புனல் பொழிகின்ற கண்ணினனாய், காவியின் மலர் காயா கடல் மழை யனையானை அடியிணை பிரிந்து தரிக்ககில்லானாகி, அதனல் உயிரும் உலைகின்றவனானன் என்க. ஆவியும் உலைகின்றான் என்பதில் உம்மை உடல் உலைதலையும் உணர்த்திநின்றது. தேவியொடு அடிதாழ்ந்தது, தன் உள்ளக்கருத்து நிறைவேறற்கு. 'காவியின்மலர் காயா கடல் மழை அனையான்' என்பதனுடன், 'பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற காவிமலர்...........எல்லாம் பிரானுருவே என்று' (இயற்பா, பெரியதிருவந்தாதி. 73) என்னும் அருளிச்செயற் பகுதியும் நோக்கத்தகும். (53)

**2069.** பொய்ம்முறை யிலராலெம்
புகலிடம் வனமேயாற்
கொய்ம்முறை யுறுதாராய்
குறைவிலெம் வலியேமாற்
செய்ம்முறை குற்றேவல்
செய்குது மடியோமை
யிம்முறை யுறவென்னு
வினிதிரு நெடிதெம்மூர்.

'பொய்ம் முறை இலர், ஆல் எம் புகலிடம் வனமே, ஆல்,
கொய்ம் முறை உறு தாராய்! குறைவு இலெம்; வலியேம்; ஆல்
செய்ம் முறை குற்றேவல் செய்குதும்; அடியோமை
இம்முறை உறவு என்னு இனிது இரு, நெடிது எம் ஊர்.

பொ :—'பறித்து ஒழுங்குபடத் தொடுத்த பூமாலையணிந்தவனே! (என் சுற்றத்தாரும் படையினரும்) பொய்யுறவுபூண்டு ஒழுகும் இயல்புடையரல்லர்; எங்கள் இருப்பிடமும் வனமே; எங்களுக்கு ஒரு குறையும் இல்லை; சுகமாக வாழ்கின்றோம். உன் அடியர்களாகிய

எங்களை இந்த அடிமை முறையால் உன்னோடு உறவுடையேம் என்று கொண்டு, எங்கள் ஊரில் நீ இனிதே நெடுங்காலம் இருப்பின், செய்யும் முறையால் உனக்குச் சிறுதொண்டுகள் செய்வோம்.'

கு :—தாராய் ! என்றது இராமனை நோக்கிய விளி. இராமபிரான் குகனுடைய அன்பு முதலியவற்றை அறிந்து, அவனை இனிய நண்பனாக ஏற்றுக் கொண்டமை 2060-ஆம் பாடலாற் பெறப்பட்டது, இங்கே தன் சுற்றத்தாரும் படைஞரும் ஆயினர் தன்மையைப் 'பொய்ம் முறையிலர்' என்று கூறுவானாயினன். எம்புகலிடம் வனமே என்றது, எங்கள் இருப்பிடம் உன் விரத வொழுக்கத்துக்கு ஏற்றதாய் அமைந்தது என்றவாறு. குறைவு இலெம் என்றது அடிமையொழிந்து வேறு ஒன்றை உன்னிடம் விரும்பிப் பெறும் குறையுடையேமல்லேம் என்றவாறு. வலியேம்—சுகவாழ்வுடையேம். வலியேம் என்பதற்கு இப்பொருள் அமைவுடையதென்பது, 'தீதிலன்கொல் திருமுடியோன்?' (பள்ளிபடை. 2) என்ற பரதன் வினவுக்கு, தூதுவர்கூற்றாக 'வலியனென்று அவர் கூற' (பள்ளிபடை. 3) என்று ஆசிரியர் ஆளுதலால் விளங்கும். நீ ஆண்டான்; நாங்கள் அடியோம்; ஆதலின் ஆண்டானை அடியர் அணுகும் முறையால் உன்னை அணுகினேம்; நீ எங்களை அடியராக ஏற்று எங்களோடு எங்கள் ஊரில் நெடிது தங்கவேண்டும்; அதுவே எங்கள் விழைவு என்பது, போதர, 'அடியோமை இம்முறை உறவென்னா இனிதிரு நெடிதெம்மூர்' என்றான். நீ எங்களோடு தங்கின் உனக்குச் செய்யவேண்டிய முறைப்படி குற்றேவல் செய்யும் வாய்ப்பு எங்களுக்குக்கிட்டும் ; அது எங்களுக்குப் பெறலரும் பேருகும் என்பது போதர, 'செய்ம்முறை குற்றேவல்' செய்குதும் என்றான். (54)

**2070.** தேனுள தினையுண்டாற் றேவரு நுகர்தற்கா
மூனுள துணைநாயோ முயிருள விளையாடக்
கானுள புனலாடக் கங்கையு முளதன்றோ
நானுள தனையுங்நீ யினிதிரு நடவெம்பால்.

'தேன் உள, தினை உண்டு, ஆல் தேவரும் நுகர்தற்கு ஆம்
ஊன் உள, துணை நாயோம் உயிர்உள, விளையாடக்
கான் உள, புனலாடக் கங்கையும் உளது, அன்று ஓ
நான் உள தனையும் நீ இனிது இரு ; நட, எம்பால்'.

பொ :—'எங்கள் வனத்தில் தேன்கள் உள்ளன; தினையும் உண்டு; தேவரும் உண்ணத்தக்க ஊன்கள் உள்ளன. துணையாக நாய் போற் கடைப்பட்ட எங்கள் உயிர்கள் உள்ளன ; விளையாடுவதற்குக் காடுகளும் உண்டு ; நீராடுதற்குக் கங்கையும் உளது ; ஆதலால்

நான் இருக்கும்வரை நீ எங்கள் ஊரில் சுகமே தங்குக ; எங்கள் ஊர்க்கு வருக.'

கு :—எம்மூரில் இனிதே நெடிதிரு என்று வேண்டிய குகன், தங்கள் ஊரில் இனிது வாழ்வதற்கு வேண்டிய உணவு முதலியவை நிரம்பவுள்ளன வென்று கூறியமை இதனாலும் அடுத்த செய்யுளாலும் பேசப்படுகிறது. இருற்றேன் முதலாகத் தேனில் பலவகை யுண்டு; நீர்வாழ்வனவும் பறப்பனவும் விலங்குகளும் முதலியவற்றின் உடலாய் ஊனும் பலவகைப்படும் ; ஆதலால் உள எனப் பன்மை படக்கூறினன் ; அன்றி, உளது என்பது ஈறுகெட்டுநின்றது எனி னும் ஆம். தேவரும் என்பதனுள் உம்மை உயர்வுசிறப்புணர நின் றது. தேவரும் நுகர்தற்காம் ஊன் என்றது சுவைமிக்க அமுதினை உண்பவர்களான தேவரும் விரும்பியுண்ணத்தக்க சுவையுடைய ஊன் என்றவாறு. நான் உளதனையும் என்றது நான் உயிரோடிருக்கும் வரை என்றவாறு. (55)

**2071.** தோலுள துகில்போலுஞ்
சுவையுள தொடர்மஞ்சம்
போலுள பரண்வைகும்
புரையுள கடிதோடுங்
காலுள சிலைபூணுங்
கையுள கலிவானின்
மேலுள பொருளேனும்
விரைவொடு கொணர்வேமால்.

'தோல் உள துகில் போலும், சுவை உள தொடர் மஞ்சம்
போல் உள பரண், வைகும் புரை உள, கடிது ஓடும்
கால் உள, சிலை பூணும் கை உள, கலி வானின்
மேல் உள பொருளேனும் விரைவொடு கொணர்வேம் ஆல்.

பொ :—'நல்லாடைபோலும் தோல் (உடை)கள் உள; இன்பமுள்ள தொடர் பூட்டிய தூங்கு மஞ்சம்போன்ற பரண்களும் உள ; தங்கு தற்குரிய (இலை வேய்ந்த) குடில்களும் உள; இவையன்றி, விரைந்து ஓடும் கால்களும் (எங்களுக்கு) உண்டு; வில்லைத் தரித்த கைகளும் உண்டு ; (ஆதலால்) ஒலியினைப் பண்பாகவுடைய ஆகாயத்திலுள்ள பொருளாயினும் விரைந்து கொணர்வேம்.'

கு :—துகில்-மெல்லிய ஆடை. சுவை இங்கே இன்பம் என்பதுபட நின்றது. தொடர்-கயிறு, சங்கிலியுமாம். பரண்-தினைமுதலியவற்றைக்

காவல் புரியும் பொருட்டு உயர்ந்த கால்களை நாட்டி மேலே குறுக்காகக் கிளை முதலியவற்றைப் பரப்பி அமைத்த உயர்ந்த இருக்கை. வைகுதல் - தங்குதல். புரை - குறுகியதாக இலை புல் முதலியவற்றால் வேய்ந்த சிறுவீடு. பின்னிரண்டடிகளால், தங்கள் காட்டிற் கிடைக்காத அரிய பொருள்கள் எங்கிருந்தாலும் விரைந்து சென்று கொணர்ந்து தரும் ஆற்றல் தங்களுக்குண்மை விளக்கியவாறு. கலி-ஒலி. ஆகாயத்துக்கு ஒலி பண்பாதலின் 'கலிவான்' என்றார். (56)

**2072.** ஐயிரு பத்தோடைந்
தாயிர ருளராணை
செய்குநர் சிலைவேடர்
தேவரின் வலியாரா
லுய்குது மடியோமெங்
குடிலிடை யொருநாணீ
வைகுதி யெனின்மேலோர்
வாழ்விலை பிறிதென்றான்.

'ஐயிருபத்தோடு ஐந்தாயிரர் உளர் ஆணை
செய்குநர், சிலை வேடர், தேவரின் வலியார், ஆல்
உய்குதும் அடியோம், எம் குடிலிடை ஒருநாள் நீ
வைகுதி எனின், மேல் ஓர் வாழ்வு இலை பிறிது' என்றான்.

பொ :—'தேவரிலும் மேம்பட்ட வலிமையுடையவர்களும், நின் கட்டளையை நிறைவேற்றுபவர்களுமாக ஐந்துலக்ஷம் என்னும் தொகையினரான விற்பிடித்த வேட்டுவர்கள் உள்ளனர்; எங்கள் இருக்கையில் நீ ஒருநாள் தங்குவாயாயின் நின் அடியோமாகிய யாங்கள் உய்திபெறுவோம்; நீ அவ்வாறு தங்குவதினும் சிறந்த வாழ்வு எங்களுக்கு வேறு இல்லை' என்று குகன் கூறினான்.

கு :—ஐயிருபது ஐயிருபத்து என விகாரமாயிற்று. ஐயிருபது-நூறு. நூற்றொடு ஐந்து=நூறால் பெருக்கிய ஐந்து=ஐந்நூறு. ஐந்நூறு-ஆயிரம்—ஐந்திலக்கம் என்க. ஐயிருபத்தோடைந்தாயிரர் என்பதற்கு வேறு பொருள் கூறுவாரும் உண்டு. எனினும், பின் குகப்படலத்து 'ஐயைநூறாயிரம் உருவம் ஆயின மெய்யுறு தானையான்' என்பதற்கு அழகிய ஐந்து நூறாயிரம் (ஐந்துலக்ஷம்) என்று பொருள் கொள்ளுமாறு அமைந்தமைக்கேற்ப இங்கும் பொருள்வரையலாயிற்று. இனிதிரு நெடிது எம்மூர், நான் உளதனையும் நீ எம்பால் இனிதிரு என்று வேண்டிய குகன், எம் குடிலிடை ஒரு நாள் நீ வைகுதி

யெனின் உய்குதும் என்றது, அவன் தங்குதலால் தாங்கள் அடையும் பெரும் பயன் உணர்த்தியவாறு. (57)

## குகனிடம் இராமன் கூறுதல்

2073. அண்ணலு மதுகேளா
வகநிறை யருண்மிக்கான்
வெண்ணிற நகைசெய்தான்
வீரநின் னுழையாமப்
புண்ணிய நதியாடிப்
புனிதரை வழிபாடுற்
றெண்ணிய சிலநாளிற்
குறுகுது மினிதென்றான்.

அண்ணலும் அது கேளா அகம் நிறை அருள் மிக்கான்,
வெள் நிற நகை செய்தான், 'வீர! நின் உழை யாம் அப்
புண்ணிய நதி ஆடிப் புனிதரை வழிபாடு உற்று
எண்ணிய சில நாளில் குறுகுதும்; இனிது' என்றான்.

பொ :—பெருமையின் மேம்பட்டவனான இராமனும், குகன் கூறிய வுரைகளைக்கேட்டு, அவனைநோக்கி மனத்தின்கண் நிறைந்த பேரருளுடையனாய், வெள்ளிய (பற்கள் தோன்ற) புன்முறுவல்பூத்து, வீர ! நாங்கள் அந்தப் புண்ணிய நதிகளில் நீராடி, தூயவராகிய பெரியோர்களை வழிபட்டு, அறுதியிட்ட சில நாட்களின் முடிவில் உன்னிடம் சுகமே வந்து சேர்வோம்' என்று கூறுவானாயினன்.

கு :—அப்புண்ணியநதி என்றது, 'புண்ணியத்துறைகள்' (1690), என்று கைகேயி கூறியவற்றை. மிக்கான், செய்தான் என்பவை முற்றெச்சம். (58)

## குகன் கொணர்ந்த ஓடத்தில் இராமன் முதலியோர் ஏறுதல்

2074. சிந்தனை யுணர்கிற்பான்
சென்றனன் விரைவோடு
தந்தன னெடுநாவாய்
தாமரை நயனத்தா

னந்தணர் தமையெல்லா
மருளுதிர் விடையென்று
விந்துவி னுதலாளோ
டிளவலொ டினிதேரு.

சிந்தனை உணர்கிற்பான், சென்றனன், விரைவோடு
தந்தனன் நெடுநாவாய்; தாமரை நயனத்தான்
அந்தணர்தமையெல்லாம் 'அருளுதிர் விடை' என்று,
இந்துவின் நுதலாளோடு இளவலொடு இனிது ஏறு.

பொ :—இராமன் நினைவை அறிந்த குகன் விரைந்துசென்று பெரிய ஓடங்களைக் கொண்டுவரத் தாமரை மலர்போலும் கண்களை யுடைய அப்பெருமான், (தன்னைத் தொடர்ந்து) வந்த தண்ணளி யுடைய முனிவர்களை யெல்லாம் (நோக்கி) 'விடை தருக' என்று கூறி, திங்களை யொத்த முகமுடைய சீதாபிராட்டியோடும் தம்பியாகிய இலக் குவனோடும் அவ்வோடத்தில் இனிதே ஏறி (வீற்றிருந்து).

கு :—இதுவும் பின்வரும் செய்யுளும் ஒரு தொடர். ஏறு விடு நதி கடிதென்றான் என அடுத்த கவியில் முடியும். (59)

## இராமன் குகன் நாவாயில் கங்கை கடத்தல் 2075—2077

**2075.** விடுநதி கடிதென்றான் மெய்யுயி ரனையானு
முடுகின னெடுநாவாய் முரிதிரை நெடுநீர்வாய்க்
கடிதினின் மடவன்னக் கதியது செலநின்றா
ரிடருற மறையோரு மெரியுறு மெழுகானார்.

'விடுநதி கடிது' என்றான்; மெய் உயிர் அனையானும்
முடுகினன் நெடு நாவாய்; முரி திரை நெடுநீர்வாய்க்
கடிதினின் மட அன்னக் கதி அது செல, நின்றார்
இடர் உற, மறையோரும் எரி உறும் மெழுகு ஆனார்.

பொ :—'ஆற்றின்கண் (படகை) விரைந்து செலுத்துக' என்று இராமன் கூறினனாக, அப்பெருமானுக்கு உடலிலுள்ள உயிர் போன் றவனான குகனும், மடங்கி வருகின்ற அலைகளையுடைய பெரிய கங்கை நீர்ப்பெருக்கில், பெரிய ஓடத்தை விரைந்து செலுத்த, அவ்வோடம், இளவன்னத்தின் நடையில் விரைந்து செல்ல, (கரையின்கண்) நின்றவ (ராகிய குகன் சுற்றத்தா)ர் இராமன் பிரிவால் துன்புற, மறைவல்ல முனிவர்களும் எரியிடைப்பட்ட மெழுகுபோல் உருகினர்.

கு :—விடு நதி கடிதென்ருன் என்பதற்கு, முன் செய்யுளிலிருந்து 'தாமரை நயனத்தான்' என்னும் எழுவாய் வருவித்துரைக்க. முடுகுதல்-விரைந்து செலுத்துதல். கதி-நடை. மறையோரும் என்பதனுள் உம்மை உயர்வுசிறப்புணர நின்றது; உண்மை நூலறிவு நிரம்பி, பருவரல், இன்பம் என்று இரண்டும் ஒக்க நோக்கிய கங்கைக் கரை முனிவரும் இராமன் பிரிவால் துன்புற்றனர் என்றவாறு. (60)

**2076.** பாலுடை மொழியாளும்
பகலவ னனையானுஞ்
சேலுடை நெடுநன்னீர்
சிந்தினர் விளையாடத்
தோலுடை நிமிர்கோலிற்
றுழவிட வெழுநாவாய்
காலுடை நெடுஞெண்டிற்
சென்றது கடிதம்மா.

பால் உடை மொழியாளும் பகலவன் அனையானும்
சேல் உடை நெடு நல் நீர் சிந்தினர் விளையாடத்
தோல் உடை நிமிர் கோலில் துழவிட, எழும் நாவாய்
கால் உடை நெடு ஞெண்டில் சென்றது கடிது; அம்மா!

பொ :—இனிமையால் பாலும் தோல்வியுறும் மொழியையுடைய சீதாபிராட்டியும், எங்கும் வெறுப்பின்றி ஒரு தன்மையனாகி விளங்கும் சூரியனை ஒத்த இராமனும் சேல் என்னும் மீனுள்ள வெள்ளநீரை இறைத்து விளையாட, தோல் கைப்பிடியில் இணைக்கப்பட்ட நீண்ட துடுப்புக்களால் துழாவுதலால் எழுகின்ற ஓடமானது, பலகால்களை யுடைய பெரிய நண்டுபோல விரைந்து சென்றது.

கு :—கைகளால் இறுகப்பற்றித் துழாவுங்கால் கைகளில் அழுத்தாதிருக்கும்படி துடுப்புக்களில் கைப்பிடியில் தோல் இணைக்கப்படுதலால், 'தோலுடை நிமிர்கோல்' என்ருர். (61)

ஓடம் கங்கையின் தென்கரை சேர்தல்

**2077.** சாந்தணி புளினத்தின்
றடமுலை யுயர்கங்கை
காந்தின மணிமின்னக்
கடிகமழ் கமலத்திற்

சேந்தொளி விரியுந்தெண்
டிரையெனும் நிமிர்கையா
லேந்தின ளொருதானே
யேற்றின ளினிதப்பால்.

சாந்து அணி புளினத்தின் தடம் முலை உயர் கங்கை
காந்து இன மணி மின்னக் கடி கமழ் கமலத்தில்
சேந்து ஒளி விரியும் தெண்திரை எனும் நிமிர் கையால்
ஏந்தினள் ஒரு தானே ஏற்றினள் இனிது அப்பால்.

பொ :—மணற்குன்றுகளாகிய, சந்தனம் அணிந்த பெரிய தனங்களையுடைய உயர்ந்த கங்கையாகிய நங்கை, தான் ஒருத்தியாகவே, விளக்கம் மிக்க கூட்டமான மணிகள் ஒளிவிட, நறுமணம் கமழ்கின்ற தாமரை மலர்போலச் சிவந்து ஒளிபரவும் தெளிந்த அலை என்னும் நீண்ட கையால் தாங்கி அந்த ஓடத்தை இனிதே அக்கரை அடைவித்தாள்.

கு :—தனத்துக்குச் சந்தனச் சாந்தும் புளினத்துக்குக் கங்கையாறு மலையிலிருந்து ஈர்த்துவந்தொதுக்கிய சந்தன மரமுமாகக் கொள்க. புளினம்-மணற்குன்று. அத்தும் இன்னும் சாரியை; பேராழமும் பேரலைகளும் பெருஞ் சுழியும் மிக்க வேகமும் வாய்ந்த கங்கையை ஓடத்தால் கடத்தல் எளிதன்று; நீண்டநாளாக வழிச் செல்வாரை இக்கரையினின்று அக்கரைக்கும் அக்கரை நின்று இக்கரைக்கும் ஓடத்தேற்றிச் சேர்ப்பித்துப் பயின்று தேர்ந்த குகன் திறமை, ஓடத்தின் உறுப்புக்களின் அமைதி, திண்மை முதலியவற்றால் மட்டும் ஓடம் கங்கை கடந்து கரையடைந்து விடவில்லை; கங்காதேவியே தன் அலைகளாகிய கையால் தாங்கிக் கரையேற்றுவித்தாள் என்று வியந்து கூறியவாறு. (62)

## இராமன் குகனிடம் சித்திரகூடத்துக்குச் செல்லும் நெறி வினவுதல்

**2078.** அத்திசை யுற்றைய னன்பனை முகநோக்கிச்
சித்திர கூடத்திற் சென்னெறி பகரென்னப்
பத்தியி னுயிரீயும் பரிவின னடிதாழா
வுத்தம வடிநாயே னோதுவ துளதென்றான்.

அத்திசை உற்று, ஐயன், அன்பனை முகம் நோக்கிச்
'சித்திரகூடத்தில் செல் நெறி பகர்' என்னப்
பத்தியின் உயிர் ஈயும் பரிவினன் அடி தாழா,
'உத்தம! அடிநாயேன் ஓதுவது உளது' என்றான்.

பொ :—இராமன், கங்கையின் அக்கரையடைந்து, அன்பனுன குகனை முகம் பார்த்துச் 'சித்திரகூடவரையில் சேர்தற்குரிய வழியைச் சொல்லுக' என்று கூற, அன்பினல் உயிரையும் கொடுக்கும் இரக்க முடையவனுய், அவன் அப்பெருமானை அடிவணங்கி, 'நல்லோய்! உன் அடித் தொண்டனுன யான் (நின்னிடம்) சொல்லத்தக்க தொன்று உளது' என்ருன்.

கு :—அத்திசை-அவ்விடம்; திசை ஏழன் உருபு. இங்கே அத்திசை என்பது கங்கையின் அக்கரையைச் சுட்டி நின்றது. பரிவு-இரக்கம். அடி நாயேன்-அடித்தொண்டன். (63)

## தன்னை உடனழைத்துச் செல்லுமாறு இராமனிடம் குகன் வேண்டுதல் 2079—2082

**2079.** நெறியிடு நெறிவல்லே
   னேடினென் வழுவாம
னறியன கனிகாயு
   நறவிவை தரவல்லே
னுறைவிட மமைவிப்பே
   னொருநொடி வரையும்மைப்
பிறிகிலெ னுடனேகப்
   பெறுகுவெ னெனினுயேன்.

'நெறி இடுநெறி வல்லேன்; நேடினென் வழுவாமல்
நறியன கனி காயும் நறவு இவை தரவல்லேன்;
உறைவிடம் அமைவிப்பேன்; ஒரு நொடிவரை உம்மைப்
பிறிகிலென்; உடன் ஏகப் பெறுகுவென் எனில், நாயேன்.'

பொ :—'உன்னடியனுன யான், உன்னுடன் வரும் பேறு பெறு வேனுயின், பெருவழியும் சிறுவழியுமாகியவற்றை அறிந்து சொல்ல வல்லனுவேன்; நல்ல கனிகளையும் காய்களையும் தேனையும் தேடி மாசுபடாமல் தருவேன்; தங்குமிடம் நன்ருக அமைப்பேன்; ஒரு நொடிப் பொழுதளவும் உம்மைப் பிரியேன்.'

கு :—நெறி-பெருவழி. இடுநெறி-சிறுவழி; இடும் நெறி-அடியிடு தலால் உளதாய வழி. இதனை ஒற்றையடிப்பாதை என்பர். இனி நெறி இடும் நெறி வல்லேன் என்பதற்கு வழியமைக்கும் முறை அறிவேன் என்று பொருளுரைத்தலும் ஆம். நெறியிடுதல்-வழி

யமைத்தல். உடனேகப் பெறுகுவென் எனில் என்றது உடனேகுதற்கு நீ அருள்புரிய வேண்டும் என்றவாறு. (64)

2080. தீயன வவையாவுந்
திசைதிசை செலநூறித்
தூயன வுறைகானந்
துருவினென் வரவல்லேன்
மேயின பொருணுடித்
தருகுவென் வினைமற்று
மேயின செயவல்லே
னிருளினு நெறிசெல்வேன்.

'தீயன அவை யாவும் திசைதிசை செல நூறித்
தூயன உறை கானம் துருவினென் வர வல்லேன்,
மேயின பொருள் நாடித் தருகுவென், வினைமற்றும்
ஏயின செய வல்லேன், இருளினும் நெறி செல்வேன்.'

பொ :—'கொடிய விலங்குகளாகிய அவை யெல்லாம் திசை தொறும் ஓடி ஒழிய அழித்து, நல்ல விலங்குகள் உறையும் காடு களைத் தேடி அறிந்துவரும் ஆற்றலுடையேன்; நீங்கள் விரும்பிய பொருள்களைத் தேடிக் கொணர்ந்து கொடுப்பேன்; மேலும், நீங்கள் கட்டளையிட்ட பணிகளையெல்லாம் செய்யவல்லேன்; இருட்போதிலும் வழியறிந்து செல்வேன்.'

கு :—பின் தூயன உறைகானம் என்றமையால் முன் தீயன அவை யென்றது கொடியனவாகிய விலங்கு என்று கொள்ளலா யிற்று. தீயன-புலி, கரடி, சிங்கம் முதலியவை. தூயன-பசு, மான் முதலியவை. மற்றும் ஏயின வினை என இயைக்க. (65)

2081. கல்லுவென் மலைமேலுங்
கவலையின் முதல்யாவுஞ்
செல்லுவெ னெறிதூரஞ்
செறிபுன றரவல்லேன்
வில்லின முளனென்றும்
வெருவலெ னிருபோது
மல்லினு முயர்தோளாய்
மலரடி பிரியேனல்.

'கல்லுவென் மலைமேலும் கவலையின் முதல் யாவும்,
செல்லுவென் நெறி தூரம், செறிபுனல் தரவல்லேன்,
வில்லினம் உளென், ஒன்றும் வெருவலென், இருபோதும்
மல்லினும் உயர் தோளாய்! மலர் அடி பிரியேனல்.

பொ :—'மற்றொழிலினும் உயர்ந்த தோள்களையுடையவனே! மலைமேலும் கவலை முதலிய கிழங்குவகைகளை யெல்லாம் கிண்டி யெடுப்பேன், நெடிய வழி செல்வேன், மலைமேலுள்ள தண்ணீர் கொணர்ந்து தருவேன், விற்பிடித்த சுற்றம் உடையேன், சிறிதும் அஞ்சேன், பகலும் இரவும் உன் அடித் தாமரைகளைப் பிரியேன்,'

கு :—மல்லினும் உயர்தோளாய்! என்றது குகன் இராமனைத் தன்முகமாக்கிக் கொள்ளும் விளி. உன்பால் மற்போர்ப் பயிற்சி எவ்வளவு உயர்வுடையதாய் அமைந்ததோ அதனினும் உயர்ந்த தோள்களையுடையவனே என்பது பொருள். மல்-மற்போர். மலைமேலும் என்பதனைப் பின்வரும் தொடர்களோடும் இணைத்துக்கொள்ளலாம். கவலை-குறிஞ்சி நிலத்திற் கிடைக்கும் ஒருவகைக் கிழங்கு. 'குன்றவர் கொடிநெடுங் கவலை கல்லி வாங்கிய குழிகள்' (சித்திரகூடப். 15.) என்பர் பின். (66)

**2082.** திருவுள மெனின்மற்றென்
சேனையு முடனேகொண்
டொருவலெ னொருபோது
முறைகுவெ னுளராஞர்
மருவல ரெனின்முன்னே
மாள்குவென் மிகையல்லேன்
பொருவரு மணிமார்பா
போதுவெ னுடனென்றான்.

'திருவுளம் எனின், மற்று என் சேனையும் உடனே கொண்டு
ஒருவலென் ஒருபோதும் உறைகுவென்; உளர் ஆனர்
மருவலர் எனின், முன்னே மாள்குவென்; மிகையல்லேன்;
பொரு அரு மணி மார்பா! போதுவென் உடன்' என்றான்.

பொ :—"ஒப்பற்ற அழகிய திருமார்பையுடையவனே! நீ விரும்பினால் என் படைகளையும் உடன் கொண்டு, ஒரு கணமும் உன்னை விட்டு நீங்காது தங்குவேன்; பகைவர் உளராயினர் என்றால், (அவர்களை ஒழிப்பேன்; அஃது இயலாதாயின்) உனக்கு முன்னே இறந்து

படுவேன்; நான் உனக்குப் புறம்பானவனல்லேன்; உடன் வருவேன்'' என்று கூறினுன்.

கு :—ஒருவுதல்–நீங்குதல், ஒருவலென்—நீங்கேனுய்; முற்றெச்சம். மருவலர்-பகைவர்; மருவலர் உளராஞர் எனின் என இயையும். மிகை-என்ற சொல் புறம்பு அயல் குற்றம் குறை அதிகம் என்னும் பல பொருளில் வழங்கும் எனினும், இங்கே மிகையல்லேன் என்பதற்கு உனக்குப் புறம்பானவனல்லேன் என்று பொருள் கொள்ளலாயிற்று. மிகையல்லேன் என்பது புறம்பானவன் அல்லேன் என்ற பொருளில் பயின்றமை, ''சீவரமங்கல நகர் வீற்றிருந்த எந்தாய் உனக்கு மிகை யல்லேன் அங்கே'' (திருவாய்மொழி. 5.7.1.) என்னும் அருளிச் செய லாலும் விளங்கும். மிகையல்லேன் என்பதற்கு அயலானவனல்லேன்-என்று பொருள் கூறினும் அமையும். 'வசையில்லேன்', 'ஒழிகல் லேன்' என்று பாடம் கொண்டு அவற்றுக்கு இசைய உரையெழுதியவர் களும் உண்டு. இராமபிரானெடு, ''ஒழிவில் காலமெல்லாம் உடனுய் மன்னி வழுவிலா அடிமை செய்யவேண்டும்'' என்னும் பாரிப்புடைய குகன், அப்பெருமானிடம் தன்னை யேற்றுக்கொள்ளும்படி முடிவாக வேண்டும் இப்பாடலில் தன்பால் வசையின்மை கூறி, அதுவே காரணமாக ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டுதல் அமைவுடையதாகாது. பகைவர் உளராஞல் தோற்று ஒழியேன், முன்னே மாள்குவென் என்று தன் உதவி கூறி அது காரணமாகத் தன்னை ஏற்றுக்கொள்ளு மாறு வேண்டுதலும் இயைபுடையதாயில்லை. ஆகையால் சடகோபர் திருவாக்கிற் பயின்ற மிகையல்லேன் என்ற பாடம் கொள்ளலாயிற்று. இங்கே, வானமாமலை எம்பெருமானிடம், சடகோபர், தம் பால் ஒரு தகுதியும் இன்மை கூறித் தன்னை ஏற்றுக்கொள்ளும்படி வேண்டும் பாசுரத்தில் 'மிகையல்லேன்' என்னும் இத்தொடர் பயின்றமையும் நோக்கத்தகும். இனி மிகை என்பதற்கு, குறை குற்றம் அதிகம் என்று பொருள் கொள்ளலும் ஆம். 'உழைக்கு ஓர் புள்ளி மிகை யன்று கண்டாய்' (5. 1. 2.) என்பது பெரியாழ்வார் திருமொழி. ''காம்பறியுந்தோளாளைக் கைவிடீர் எனினும் யான் மிகையோ?'' (ஆரணிய. சூர்ப்பணகைப். 139) என மிகை என்பது அதிகம் என் னும் பொருளில் ஆசிரியரால் ஆளப்பட்டிருத்தலும் நோக்கத்தகும். எனினும், யான் நினக்குப் புறம்பானவனல்லேன், அல்லது அயலா னவனல்லேன் என்பதே ஆசிரியர் கருத்தொடுபட்ட தென்பது, நான் உனக்கு மிகையல்லேன் (புறம்பானவனல்லேன்) என்று குகன் கூறிய வுடன் இராமபிரான் கூற்ருக, அடுத்த கவியில், குகனை நோக்கி, நீ என்னின் வேறல்லை; 'என் உயிரனையாய் நீ, இளவல் உன் இளை யான், இந்நன்னுதலவள் நின்கேள்' என்று கூறியது கொண்டு அறியத்தகும். (67)

### குகனை நோக்கி இராமன் கூறுதல் 2083—2086

**2083.** அன்னவ னுரைகேளா
வமலனு முரைநேர்வா
னென்னுயி ரனையாய்நீ
யிளவலு னிளையானிந்
நன்னுத லவணின்கே
ணளிர்கட னிலமெல்லா
முன்னுடை யதுநானுன்
றொழிலுரி மையினுள்ளேன்.

அன்னவன் உரை கேளா, அமலனும் உரை நேர்வான்,
'என் உயிர் அனையாய் நீ; இளவல் உன் இளையான்; இந்
நல் நுதலவள் நின்கேள்; நளிர் கடல் நிலமெல்லாம்
உன்னுடையது; நான் உன் தொழில் உரிமையின் உள்ளேன்'

பொ.—அந்தக் குகன் மொழிந்தவைகளைக் கேட்டு, குற்றமற்றவனான இராமனும், மறுமொழி கூறுவானாய், 'நீ என் உயிர் போல்பவன்; என் தம்பி உன் தம்பி; இந்த நல்ல நெற்றியையுடைய சீதை உன் கொழுந்தி; குளிர்ந்த கடல் சூழ்ந்த நிலம் முழுதும் உன்னுடையது; நான் நட்புரிமையால் உன் பணியினை உரிமையோடு ஏற்றுக்கொள்ளும் நிலையில் உள்ளேன்'.

கு:—அன்னவன் – சுட்டு; குகனை யுணர்த்திற்று. அமலன் – குற்றம் அற்றவன்; இராமபிரான். நான் உன் தொழில் உரிமையின் உள்ளேன் என்பதற்கு, 'நான் நட்புரிமையால் உன் பணிகளைப் புரியும் நிலையிலுள்ளேன்' என்றும் பொருள் கொள்ளலாம். இராமபிரான் குகனைச் சிறந்த நண்பனாகக் கொண்டமை 45-ஆம் பாடலாற் பெறப் பட்டது. நண்பு பூண்டார் இருவருள் ஒருவர் மற்றவர்க்குச் செய்யத் தக்க பணிகளைப் பெறுவார் இசைவுபெறுமல் தாமே பழமை பற்றிச் செய்யவும் உரிமையுண்டு. இவ்வுரிமையே நட்புக்கு உறுப்பாவது. இவ்வாறு உரிமை பற்றிச் செய்யும் பணிகளை நண்பர் ஏற்றுக் கொள்வதும் கடன். இதனை, 'நட்புக்குறுப்புக் கெழுதகைமை, மற்றதற்கு உப்பாதல் சான்றோர் கடன்' (திருக்குறள் 802) என்று பொய்யாமொழியும் புகல்வது காணலாம். இக்குறட்பொருளைத் தழுவி, 'நட்புரிமையால் நீ எனக்குச் செய்ய விரும்பும் பணிகளை என் இசைவு பெறுமலே செய்யலாம்; (அதனை யேற்றுக்கொள்வது என் கடன்) என்று குகனை நோக்கி இராமபிரான் கூறியதாக ஒரு பொருளும், 'நட்புரிமையால் நான் உனக்குச் செய்யத்தக்க பணிகளை உன் இசைவு பெறுமலே செய்யும்

நிலையில் உள்ளேன் ; (அதனை ஏற்றுக்கொள்வது உன் கடன்) என ஒரு பொருளும் ஆக ஒரு தொடருள் இரு பொருள்பட அமைத்த கவித்திறம் ஊன்றி நோக்கத்தகும். இராமபிரான் குகனொடு நட்புப் பூண்ட செய்தி, இங்கே இராமபிரான் கூற்றாற் பேசப்பட்டதனை, 'ஆழநீர்க் கங்கை யம்பி கடாவிய, ஏழை வேடனுக் கெம்பியுன் றம்பிநீ, தோழன் மங்கை கொழுந்தி எனச் சொன்ன, வாழி நண்பினை யுன்னி மயங்குவாள்' (சுந்தர. 352) என்று பிராட்டி நினைவதாகக் கூறப்படுதலும் காணலாம். இவ்விரண்டு செய்யுளும், "ஏழையேதலன் கீழ்மகன் என்னா திரங்கி மற்றவற் கின்னருள் சுரந்து, மாழைமான் மடநோக்கி யுன்தோழி யும்பி யெம்பியென் றொழிந்திலை யுகந்து, தோழ னீயெனக் கிங்கொழி யென்ற சொற்கள்" (பெரிய திருமொழி 5. 8. 1.) என்னும் அருளிச் செயலை அடியொற்றி யெழுந்தவை. (68)

2084. துன்புள தெனினன்றோ
சுகமுள தறுவன்றிப்
பின்புள திடைமன்னும்
பிரிவுள தெனவுன்னேன்
முன்புளெ மொருநால்வே
முடிவுள தெனவுன்னா
வன்புள வினிநாமோ
ரைவர்க ளுளராஞோம்.

'துன்பு உளது எனின் அன்றோ சுகம் உளது; அது அன்றிப்
'பின்பு உளது இடை மன்னும் பிரிவு உளது' என உன்னேல்;
முன்பு உளெம் ஒரு நால்வேம், முடிவு உளது என உன்னா
அன்பு உள இனி நாம் ஓர் ஐவர்கள் உளர் ஆனோம்.'

பொ :—'துன்பம் உளதாயினன்றோ சுகம் உளதாவது; அவ்வாறு நினைப்பதன்றி, '(அச்சுகம் உன்னை மறுபடி கூடிய) பின்பு உளதாகும்; (இற்றைக்கும் வனவாசம் முடிந்து நான் உன்னை மறுபடி கூடும் நாட்கும்) இடையே (காலத்தாலும் தேயத்தாலும்) மிக்க பிரிவு (த்துன்பம்) உளது' என்று நினையற்க. (உன்னைக்) காணுமுன், நாங்கள் நான்கு பேர் உடன்பிறந்தவர்களாய் இருந்தோம்; இனி, எல்லையுண்டு என்று நினையலாகாத அன்புடைய நாம் ஐவர்கள் உளராயினோம்.'

கு :—'துன்புளதெனினன்றோ சுகமுளது' என்பது, துன்பமுற்ற வர்க்கலால் இன்பமில்லை' (சீவகசிந்தா. 579) என்னும் திருத்தக்கதேவர் வாக்கைத் தழுவியமைந்தது. (69)

2085. படருற வுளனும்பி
கானுறை பகலெல்லா
மிடருறு தகையாயோ
யானென வுரியாய்நீ
சுடருறு வடிவேலாய்
சொன்முறை கடவேனன்
வடதிசை வருமந்நா
ணின்னுழை வருகின்றேன்.

'படர் உற உளன் உம்பி கான் உறை பகல் எல்லாம்;
இடர் உறு தகையாயோ? யான் என உரியாய் நீ;
சுடர் உறு வடி வேலாய்! சொல் முறை கடவேன், நான்
வடதிசை வரும் அந்நாள் நின் உழை வருகின்றேன்.'

பொ:—'ஒளிபொருந்திய கூரிய வேற்படையுடையவனே! நான் காட்டில் தங்கும் நாள் முழுதும் உன் தம்பியாகிய இலக்குவன் என்னைத் தொடர்ந்துவர வுள்ளான்; என்னையொத்த உரிமையுடைய நீ (என்னைத் தொடர்ந்து வந்து) துன்புறத்தக்காயல்லை; நான் சொல்முறை கடவேன்; (கானுறை காலம் முற்றி) வடக்கு நோக்கி வரும் அக்காலத்து நின்னிடம் வருகின்றேன்.'

கு:—'கான் உறை பகல் எல்லாம் உம்பி படர் உற உளன்' எனவும், 'யான் என உரியாய் நீ இடர் உறு தகையாயோ' எனவும் இயையும். தகையாயோ என்பதில் ஓகாரம் எதிர்மறைப் பொருள் குறித்தது. கான் உறை பகல் எல்லாம் உம்பி படர் உற உளன் என்பதற்கு யான் காட்டில் வசிக்கும் நாள் எல்லாம் உன் தம்பியாகிய இலக்குவன் (எனக்குப் பணி செய்து) துன்புற இருக்கிறான் எனப் பொருளுரைத்தலுமாம். சொல் முறை கடவேன் என்பதற்கு அன்னை கூறிய தவவொழுக்கத்தினின்று நீங்கேனாகி என்றும் பொருள் உரைக்கலாம். 'சொல் முறை கடவேல்' என்று கொண்டு, யான் சொல்லும் கட்டளையினின்று நீங்காதே என்று உரைத்தலுமாம். வருவேன் என்னாது வருகின்றேன் என்றது வரவு எதிர்காலத்திலின்றி நிகழ்காலத்திலேயே அமையும் என விரைபொருளுணர்த்திநின்றது. (70)

2086. அங்குள கிளைகாவற்
கமைதியி னுளனும்பி
யிங்குள கிளைகாவற்
கியாருள ருரைசெய்யா

யுன்கிளை யெனதன்றோ
வுறுதுய ருறலாமோ
வென்கிளை யிதுகாவென்
னேவலி னினிதென்றான்.

'அங்கு உள கிளை காவற்கு அமைதியின் உளன் உம்பி;
இங்கு உள கிளை காவற்கு யார் உளர்? உரைசெய்யாய்;
உன் கிளை எனது அன்றோ? உறு துயர் உறல் ஆமோ?
என் கிளை இது கா என் ஏவலின் இனிது' என்றான்.

பொ :—'அயோத்தியிலுள்ள சுற்றத்தாரைக் காத்தற்குரிய நிறைவோடு உன் தம்பியாகிய பரதன் உள்ளான்; (நீ என்னொடு வரின்) இங்கே உள்ள சுற்றத்தாரைக் காத்தற்கு யார் உள்ளார்? சொல்லுக; உன் சுற்றம் என் சுற்றமன்றோ? (அச்சுற்றம் காப்பாரையின்றி) மிக்க துன்பம் அடையலாமோ? என் கிளைஞராகிய இவர்களை என் கட்டளையால் நன்கு காப்பாயாக' என்றான்.

கு :—அமைதியாவது காத்தற்கு உரிய அறிவு ஆற்றல் சூழ்ச்சி முதலியவற்றின் நிறைவு. குகனை நோக்கிய இராமன் கூற்றில், பரதனை 'உம்பி' என்று (குகனுக்குத் தம்பியாக்கிக்) கூறியது, பின் குகப்படலத்தில் சில செய்யுட்களுக்குப் பொருள் செய்வதில் இடர்ப்பாடு நேராதபடி முன்மொழிந்து வைத்ததாகும். (71)

## குகன் விடைபெறுதலும் இராமன் முதலியோர் கானகத்துப் புகுதலும்

**2087.** பணிமொழி கடவாதான்
பருவர லிகவாதான்
பிணியுடை யவனென்னும்
பேதினன் விடைகொண்டா
னணியிழை மயிலோடு
மையனு மிளையோனுந்
திணிமர நிறைகானிற்
சேணுறு நெறிசென்றார்.

பணிமொழி கடவாதான்; பருவரல் இகவாதான்,
பிணி உடையவன் என்னும் பேதினன், விடை கொண்டான்;

அணி இழை மயிலோடும், ஐயனும், இளையோனும்,
திணி மரம் நிறை கானில் சேண் உறும் நெறி சென்ருர்.

பொ :—இராமபிரான் இட்ட கட்டளையை மீருதவனும் அப்பிரானைப் பிரிதலால் உளதாகும் துன்பத்தினின்று நீங்காதவனும் நோயுற்றவன் என்று சொல்லத்தக்க மயக்கத்தையுடையவனும் ஆகிய குகன் அப்பெருமானிடம் (சிருங்கிபேரபுரம் செல்ல) விடை கொள்ள, அழகிய அணிகலன் அணிந்த மயில்போல்வாளான சீதாபிராட்டியுடன் வியக்கத் தக்கவனுன இராமபிரானும் இலக்குவனும் வலிய மரங்கள் நிறைந்த காட்டில் நெடுந்தூரம் செல்லுகின்ற வழியிற் சென்ருர்கள்.

கு :—பணிமொழி—கட்டளை; 'படையுள் படுவோன் பணிமொழி கூற' (8.13) என்பது சிலப்பதிகாரம். பருவரல்–துன்பம். பிணி-நோய். பேது – மயக்கம். திணி – திட்பம்; செறிவுமாம். (72)

கங்கைப் படலம் முற்றிற்று

# 7. வனம்புகு படலம்

குகன் உதவியால் கங்கை கடந்த இராமன் முதலிய மூவரும் வனத்தில் புக்க செய்தி பேசுதலின் இப்பகுதி வனம்புகு படலம் என்னும் தலைப்புடையதாயிற்று.*

இராமன் வனத்துட் புகுதலும் இளவேனிற்காலம் கார்காலம் போலத் தோன்றிற்று. வெயில் இளநிலவாக, மரங்கள் நெருங்கித் தழைத்து அரும்பி மலர்ந்து நிழலைத்தர, மேகம் குறுந்துளிதூவ, தென்றல் மலர்களின் மணத்தொடு உலாவ, மயில்கள் நடமாடும் இனிய நெறியில், சீதாபிராட்டிக்கு வழி நடத்தலால் வரும் சோர்வு முதலியவை நீங்கும்படி நெறியிடை ஆங்காங்கு இனிய காட்சிகள் பலவற்றைக் காட்டி மகிழ்வூட்டி அழைத்துச் சென்ற இராமபிரான், கதிரவன் மறையுங் காலத்துப் பரத்துவாச முனிவன் எழுந்தருளி யிருக்கும் தவப்பள்ளியை அடைந்தான். அம்முனிவன், எல்லையற்ற அன்புடையவன்; இராமன் வரவை நினைந்து நெடுநாள் இழைத்த தவம் பயன்தரும் நாள் வந்ததென்று மகிழ்பவன்; குடையும் முக்கோலும் கமண்டலமும் சடைமுடியும் மான்தோலுடையும் மரவுரியும் தரித்தவன்; எல்லா வுயிர்களையும் பேணியொழுகும் நடையுடையவன்; மறைபயிலும் நாவுடையவன்; எரியோம்புபவன்; மன்னுயிர் அனைத் தையும் தன்னுயிர்போலக் கொண்டொழுகும் தண்ணளியுடையவன்; எல்லா உயிர்வகைகளோடும் தேவர்களோடும் பிரமனோடும் ஏழுலகங் களையும் படைக்கும் ஆற்றல் மிக்கவன். அவன் பிறவிப்பிணி மருத் துவனான இராமன் வரவை அறிந்து எதிர்கொள்ள, இராமன் முனி வனை மலர்தூவி வழிபடுவானாயினன். முனிவன் இராமனைத் தழுவி, அவன் தவவேடம் கண்டு கசிந்து கண்ணீர் பெருக நின்று, இந்தக் கோலமோ நான் காண்பது? என்று வருந்தி, 'உலக முழுதும் நெடு நாள் ஆளத் தக்க அமைதியுடைய நீ, இப்பொழுது நாங்கள் தங் கும் வனத்திடைத் தவவேடந் தாங்கி வந்தது. ஏன்?' என, இரா மன் நிகழ்ந்தது கூறினான். முனிவன், "விதியின் விளைவை விலக்க லும் ஆமோ? நின் ஆட்சிக் கீழ் ஒதுங்க நிலமகள் நோற்றிலள்; நின்னை 'அரசு மேற்கொள்க' என்று கூறி, உடனே 'வனம்புகுக' என்று என் நண்பனான தசரதன் எவ்வாறு உயிர்தாங்கியிருந்தான்?" என்று வருந்தி, 'செய்யும் நல்வினை தீவினைகளுக்கு ஏற்ப இன்பதுன் பங்கள் எய்துதல் இயல்பே; ஆதலால் யான் வருந்துவதால் பய னில்லை' என்று நினைந்து, இராமன் முதலியோரை அழைத்துக்

* 4-ஆம் சுவடியில் 'வனம்போகு படலம்' என்றும், 1, 3, 16-ஆம் சுவடி களில் 'வனம்போக்கு படலம்' எனவும் தலைப்பு வரையப்பட்டுளது.

கொண்டு தன் பன்னசாலையை அடைந்து, அவர்களுக்குத் தங்குமிடம் தந்து, அவர்களை முறைப்படி பேணி, நல்ல கனி வகைகளையும் காய் களையும் வழங்கி, அறவுரைகளையும் இயம்பி, உயிர்போலும் மக்களிடத் துச் செய்யும் அருளை அவர் திறத்துச் செய்தனன். இராமன் முதலி யோரும் பரத்துவாசமுனிவன் பேணுதலால் மகிழ்வுற்று அங்கே தங்கி னர். இரவு கழிந்தது. செங்கதிர்ச் செல்வனும் தோன்றினன். அப் போது பரத்துவாசமுனிவன், 'இராமனுடன் வசித்தலால் யான் உய்திபெறுவேன்' என்று எண்ணி, நல்லனவற்றை யெல்லாம் செய்து இராமன் முகம் நோக்கி, தாமரை மலர்போன்ற செவ்விய கண்களை யும் அக்கண்களுக்கு அணிகலமான கண்ணோட்டத்தினையும் உடைய தலைவனே! 'நான் தங்கும் இவ்விடத்தில் நிறைந்த நீரும் பூவும் மிக்க கனிகளும் கிழங்குகளும் காய்களும் பொருந்தியுள்ளன; தீயவை தேயும்; நல்லவை மிகும்; தவஞ்செய்வாருக்கு இதையொழிய வேறு சிறந்த இடம் இல்லை; மேலும், இது, கங்கையாற்றோடு சரசுவதியாறும் யமுனையாறும் கலந்த முக்கூடல் என்னும் தீர்த்தத்துறையாதலின் எங்கள் அளவினதன்று; பிரமனுக்கும் பெறுதற்கு அரியதாகும். ஆத லால் இங்கே தங்குக' என்று விருப்பொடு பணித்தனன். அது கேட்ட இராமன், 'இது, கோசலநாட்டுக்கு நெடுந்தூரத்ததன்று; இடையே உள்ளது; யான் இங்கே தங்கினால் கோசல நாட்டு மக்கள் அனைவ ரும் இங்கே வந்து நிறைந்துவிடுவார்கள்; (அவ்வாறு நிறைந்தால்) நம் தவவொழுக்கம் தடைப்படும். ஆதலால் அத்தடை நிகழாததலம் ஒன்று கூறியருளுக' என்றனன். அது கேட்ட முனிவன் வியந்து, 'அது மெய். ஐய! பத்துக்காத அளவுடைய இவ்வனத்தைக் கடந்த பின், சித்திரகூடம் என்னும் மலையினைக் காண்பாய்; அது தேவருல கத்தினும் இனிது, தேவரும் வணங்கும் சிறப்புடையது; அங்கே விருப் பொடு தங்குக' என்று அன்பொடு விடைகொடுத்து அனுப்பினன். அவரும் முனிவனை வணங்கிச் சென்று கோவலர் வாழும் முல்லை நிலத்தை அடைந்து, கடந்து நண்பகற்போதில் மான்கன்றுகள் துள்ளி விளை யாடும் யமுனையாற்றங்கரையைக் கண்டு, மனமகிழ்ந்து வணங்கித் தாம் செய்யவேண்டியவற்றை எண்ணி, பெருமை வாய்ந்த யமுனைத் துறையில் நீராடிச் சுவை மிக்க மெல்லிய கனிகளையும் கிழங்குகளை யும் உண்டு, நீரும் பருகி இளைப்பாறி, 'இவ்வாற்றை எப்படிக் கடந்து செல்வது?' என்று சிந்தித்த அளவில், இலக்குவன் மூங்கில் கழி களை வெட்டி மாணைக்கொடியால் இணைத்துப் பிணைத்து ஒரு தெப்பம் அமைத்தனன். அதில் இராமன் பிராட்டியோடு இனிது தங்க, இளை யவன் அத்தெப்பத்தையும் செலுத்திக்கொண்டு நீந்தியவாறே யமுனையாற்றைக் கடந்தனன். இவ்வாறு இலக்குவன் நீந்திக் கடந்த போது அவன் தோள்களாகிய மந்தரம் திரிதலால் யமுனையாற்றின் செலவு தடைப்பட்டது; கடந்த நீர் கீழ்கடலிற் கலந்தது; மீண்டநீர் மேல்கடலிற் பாய்ந்தது. அவர்கள் யமுனையைக் கடந்து அக்கரை

யடைந்து, புனைந்த மரவுரியால் வாய்ந்த அழகுடன் நீண்ட வழிச் சென்று, வேரும் அடிமரமும் கிளையும் வெந்து நிலம் கொதித்து, நினையும் மனத்தையும் சுடுவதாகிய ஒரு பாலை நிலத்தை எதிர்ந்தார்கள்.

'இந்தப் பாலை நிலத்தைச் சானகி கடக்கவல்லளல்லள்' என்று இராமன் நினைந்தான்; நினைதலும் சூரியன், சந்திரன்போல் குளிர்ந்த கிரணங்களைச் சொரிந்தான்; வெய்ய அப் பாலைநிலத்தில் பட்டமரங்களும் தழைத்தன; எரி விரவிய நிலம் தாமரைக் காடாயிற்று; வறுத்து விதைத்தாற்போன்ற கூரிய கற்கள், பறித்துத் தூவிய மலர்களைப் போலத் தண்மையும் பசையும் உடையவாயின; ஒடிக்கப்பட்டுக் கரிந்த கொடிகள், இளந்தளிர்கள் உடையவாயின; சினந்த கொடிய பாம்புகள், பற்களில் நின்றும் அமுதம் சிந்தக் களித்தன; மேகங்கள் திரண்டு முழங்கிக் குளிர்ந்த நீர்த்துளிகளைத் தூற்றின; வில்லையேந்திய வேடரும் முனிவர்களைப்போல் சினமற்றவராயினர்; (முன்பு பகையுடையனவும் பசியுடையனவுமாயிருந்த) உயிரெல்லாம் பகையற்றனவும் பசியற்றனவும் ஆயின; இளைய மான்கன்றுகள் பெண் புலியின்பால் முலையுண்டன; கல் இடுக்குகளில் கிடந்து பசியால் வயிறு கொதித்துச் சோர்வுறுகின்ற சினங்கொண்ட பாம்புகள் அலையொடு கூடிய நீரில் கிடந்தவற்றைப்போல் துன்பற்றனவாயின; முத்துக்களோடு வாடிக் கரிந்து அழிந்து போகின்ற மேட்டில் உள்ள மூங்கில்கள் சிறிய பற்களையுடைய இளைய எயிற்றியரின் மாணிக்கமணிகள் (இழைத்த அணிகலன்கள்) பொருந்திய தோள்களைப் போலத் திகழ்ந்தன; பரவி வளர்ந்த புற்கள், பச்சைக் கம்பளம் விரித்தாற்போல் விளங்கின; அங்கே மயில்கள் நாடக மகளிரைப்போல இடந்தொறும் இடந்தொறும் தோகைகள் விரித்து நாடகம் நடித்தன; அந்த நாடகத்தைத் தொடர்ந்து பாணரைப் போலத் தும்பிகள் இசைபாடின; அந்நில முழுவதிலும் வேறுபட்ட பருவத்திலும் பழங்கள் மிகவும் பழுத்தன; கொடிகள் வேர் ஊன்றுத நிலையிலும் பெரிய கிழங்குகள் மிகவும் உண்டாயின; கோடையால் வாடித் தளிரும் இலையும் கருகி உதிர்ந்து நின்ற கொம்புகள், மிகவும் தளிர்த்துத் தழைத்து அரும்பி மலர்ந்து ஒப்பனை செய்யப் பெற்ற மகளிரை ஒத்துவிளங்கின; வேடர்கள் தங்கும் இடங்கள் முனிவர்கள் தங்கும் இடங்களைப்போலத் தூயனவாய் விளங்கின; மாணிக்க நிறம் வாய்ந்த இந்திரகோபங்கள் ஆங்காங்குப் பரவின; நெருங்கிய மரந்தொறும் பிரிந்த பேடையை அழைக்கும் குயில்களின் ஒலி எழுந்தது; குருந்த மரங்களில் மயிலிறகின் அடிக் குருத்துப்போலும் அரும்புகள் மலிந்தன; உற்றுழியுதவி காரணமாகவும் பொருளீட்டுதல் காரணமாகவும் பிரிந்து செல்லக் கருதித் தாம் மீண்டு வரும் பருவம் குறித்த நாயகரை உயிரொடு பொருந்தத் தழுவிப் பிரிந்த நறுமணம் வாய்ந்த கூந்தலையுடைய மகளிர் மனம்போலக் கொதித்த அப் பாலைநிலம், அவ்வாறு பிரிந்து சென்ற வீரக்கழலை

யணிந்த தலைவர் குறித்த பருவத்தே மீண்டு வந்தபோது அம் மகளிர் மனம்போலக் குளிர்ந்தது; ஒழுக்க மேம்பாடுடைய இராமன் நினைவால் இவ்வாறு பாலையின் வெம்மை முதலிய தீயதன்மை மாறி யமையின் நல்லொழுக்கமன்றியும் செய்யத்தக்க தவம் பிறிதொன்றும் இல்லை.

அந்தப் பாலையை மெல்லக் கடந்த இராமன் முதலியோர், விளக்கம் மிக்க வானில் உள்ள பிறைக்குழவி, தன் கருக்கொண்ட வயிற்றில் உதைத்தலால் முழங்குகின்ற மேகத்தைப் பிடியென்று கருதி, அதன் நோய் தீரத் தடவுவதுபோலக் களிறு பெரிய பனை போன்ற தன் கையை மேகத்தை நோக்கி நீட்டுகின்ற அந்தச் சித்திரகூட மலையைக் கண்டனர்: என்பது இப்படலத்தின் கதைச் சுருக்கமாகும்.

இப்படலத்துப் பயின்ற பாடல்கள் 47. சந்தம் இரண்டு. விசேட பாத்திரம் பரத்துவாச முனிவன். தலம் கங்கையொடு யமுனையாறும் சரசுவதி நதியும் கூடிய முக்கூடல் (திரி வேணீசங்கமம்). தீர்த்தம் முக்கூடற்றுறையும் யமுனைத்துறையும். நிலம் முல்லையும் பாலையும். பெரும்பொழுது—வேனில். சிறுபொழுது நண்பகல்.

இராமன் முதலியோர் வனத்திற் புக்கது முதல் சித்திரகூடத்தைக் கண்டமை வரையுள்ள பகுதி, வான்மீகத்தில் 54-ஆம் சருக்கம் முதல் 56-ஆம் சருக்கத்து முதல் 12 சுலோகம் வரை 91 சுலோகங்களில் பேசப்பட்டது.

வான்மீகத்துள் 53-ஆம் சருக்கத்துக் காணப்படும் இராம லக்குவர் களின் உரையாடல், இந்த இராமாவதார நூலுள் இல்லை. அவ்வுரை யாடல் இராமபிரான் பெருமைக்கு ஒவ்வாதென்று கருதிக் கம்பர் அதனை நீக்கிவிட்டனர் போலும். 55-ஆம் சருக்கத்து யமுனையாற்றிடையே தெப்பத்திற் செல்லும்போது பிராட்டி, யமுனையை வழிபட்டதாகக் காணப்படும் செய்தியும் யமுனையைக் கடந்த பின் இராமன் தங்கிய சியாமம் என்னும் ஆலமரத்தைப் பிராட்டி வழிபட்ட செய்தியும் கம்பர் காவியத்தில் பேசப்படவில்லை. இவ்வணக்கம், "தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்" ஆன பிராட்டியின் இயல்பொடு பொருந்தா தென்று ஆசிரியர் உரையாது விட்டிருக்கலாம். பாலை நில வருணனை யும் யமுனையை இலக்குவன் நீந்திக் கடந்த செய்தியும் வான்மீகத்துள் இல்லை; கம்பர் தாமே படைத்துக் கொண்டு கூறியவை.

இராமன் புக்கவனத்திடையே ஆசிரியர் பாலை நிலத்தைப் படைத் துக் கொண்டதற்கு, "போர்வேந்தன், தன்னுடைய தாதை பணியால் அரசொழிந்து, பொன்னகரம் பின்னே புலம்ப வலங்கொண்டு, மன்னும் வளநாடு கைவிட்டு, மாதிரங்கள் மின்னுருவில் வெண்டேர் திரிந்து வெளிப்பட்டுக் கல் நிறைந்து தீய்ந்து கழையுடைந்து கால்சுழன்று, பின்னும் திரைவயிற்றுப் பேயே திரிந்துலவாக், கொன்னவிலும் வெங்

கான்” (பெரிய திருமடல். கண்ணி 47—50) என்னும் திருமங்கையாழ்வார் பாசுரமும், ‘விரும்பாத கான்’ (பெருமாள் திருமொழி. 9.5) என்னும் குலசேகராழ்வார் பாசுரமும் மூலமாகக் கொள்ளல் தகும்.

பாலைநில வருணனை, முன் பாலகாண்டத்தும் வந்தது. அங்கே இராமலக்குவர் விசுவாமித்திர முனிவனைப் பின்பற்றிச் சென்று அந் நிலத்தை அடைந்தனர். ‘ஆற்றல் மிக்கவராயினும், மென்மைத் தன்மையும் வாய்ந்தவர்; ஆதலின் இராமலக்குவர் பாலை நிலத்திற் செல்லுங்கால், சிறிது வருந்துவர்’ என்று முனிவன் எண்ணி அவர்க்கு இரண்டு மந்திரங்களை உபதேசித்தான். அம்மந்திரங்களை அவர்கள் நினைந்தமையால் பாலை நிலம் குளிர்ந்தது. இங்கே சீதாபிராட்டியும் இலக்குவனும் இராமனைப் பின்பற்றி வந்து பாலையிற் புக்கனர். இளையள், மெல்லியலாகிய பிராட்டி பாலையை நடந்து கடக்கும் ஆற்றல் உடையளல்லள் என்று இராமன் நினைந்தான். நடையில் நின்று உயர் நாயகனான இராமன் நினைந்த அளவில் பாலை குளிர்ந்தது. மந்திரத்தால் பாலையைக் குளிர்வித்த விசுவாமித்திர முனிவனுடைய தவநிலையின் மாட்சி அங்கே வெளிப்பட்டது. நினைவால் பாலையைக் குளிர்வித்த இராமபிரானுடைய ஒழுக்க நிலையின் உயர்வு இங்கே புலனாயிற்று. மந்திரத்தால் பாலையைக் குளிர்வித்த விசுவாமித்திர முனிவனுடைய தவநிலையினும், நினைவாற் குளிர்வித்த இராமபிரானுடைய ஒழுக்கநிலை சிறந்தமை, இங்கே, “சீலமன்றியும் செய்தவம் வேறும் ஒன்று உளதோ” (44) என்னும் ஆசிரியர் கூற்றால் புலப்படுதல் காணலாம்.

இப்படலத்தில் வரும் சிறப்புடைக் கதாபாத்திரமான பரத்துவாச முனிவனைப்பற்றி ஆசிரியர் கூறும் பகுதி,

“நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங்காலை அந்தணர்க் குரிய” (தொல். பொருள். மரபு. 70)

“எறித்தரு கதிர்தாங்கி ஏந்திய குடைநீழல்
உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்” (கலித். 9)

என்னும் சான்றோருரைகளைத் தழுவியமைந்து அம்முனிவனையே நம் மனக்கண் முன் தோற்றுவிப்பதா யிருக்கிறது. அன்றியும், பாலகாண்டத்தில் விசுவாமித்திரமுனிவனாற்றலை “மன்னுயிரடங்கலும் உலகும் வேறமைத்துத் தேவரோடு, இடங்கொள் நான்முகனையும் படைப்பென் ஈண்டு எனாத் தொடங்கிய கோசிகமுனிவன்” (320) என்று உலகு படைக்குந் தொழில் கொண்டு புலப்படுத்திய ஆசிரியர், பரத்துவாச முனிவனாற்றல் கூறுமிடத்தும், “உலகேழும் அமையெனின் அமரேசன் உந்தியின் உதவாமே உதவிடு தொழில் வல்லான்” (22) என்று அவ்வுலகு படைக்கும் தொழில் கொண்டே கூறி, அவ்விருவருடைய ஆற்றலின் தகுதி விளங்கக் காட்டிய திறம் நோக்கத்தகும்.

———

# 7. வனம்புகு படலம்

## இராமன் வனம்புக்க காலநிலை

2088. பூரியர் புணர்மாதர் பொதுமன மெனமன்னு
மீரமு முளதில்லென் றறிவரு மிளவேனி
லாரியன் வரலோடு மமுதள வியசீதக்
காருறு குறிவானங் காட்டிய தவணெங்கும்.

பூரியர் புணர் மாதர் பொது மனம் என, மன்னும்
ஈரமும் உளது இல் என்று அறிவு அரும் இளவேனில்,
ஆரியன் வரலோடும், அமுது அளவிய சீதக்
கார் உறு குறி வானம் காட்டியது அவண் எங்கும்.

பொ :—கீழ்மக்கள் சேர்கின்ற (பொருள் கொடுப்பார்க்கெல்லாம் உரியரான) பொதுமாதர் மனம்போல, ஈரம் உளதென்றும் இலதென்றும் மிகவும் அறிவரிதாகிய இளவேனிற் பருவத்தில், இராமன் வனத்துள் வந்த அளவில், அமுதம் கலந்த குளிர்ந்த கார்காலம் வரும் குறியை வானம், அந்த வன முழுவதும் தோற்றுவித்தது.

கு :—பூரியர்-கீழ்மக்கள்; ‘பூரியர்கள் ஆழும் அளறு’ (919) என்பது திருக்குறள். பொது மாதர் மனம் என இயையும். ஈரம் என்பது அன்பும் நீர்க்கசிவும் ஆகிய இரண்டு பொருளும்பட நின்றது. விலை மகளிர் மனம் ஈரம் அற்றது என்பது, “பொன்விலைப் பாவையர் மனமும்போற் பசையும் அற்றதே” (356) என்று முன்னும் கூறப்பட்டது. அமுது என்றது இங்கே மழைத்துளியை; மழையை அமுதமென்பது, ‘வானின்றுலகம் வழங்கி வருதலால், தான் அமிழ்தம் என்று உணரற்பாற்று’ (11) என்னும் திருக்குறளாலும் அறியப்படும். கார் என்றது கார்ப்பருவத்தினை. இச்செய்யுளால் இராமன் வனம்புக்க காலம் இளவேனிற்பருவம் என்பது பெறப்படும். (1)

## இராமன் சென்ற வழியின் இயல்பு

2089. வெயிலிள நிலவேபோல் விரிகதி ரிடைவீசப்
பயின்மர நிழலினைப் பனிபுரை துளிமேகம்
புயறர விளமென்கால் பூவள வியதெய்த
மயிலின நடமாடும் வழியினி யனபோனார்.

வெயில் இளம் நிலவே போல் விரி கதிர் இடை வீசப்
பயில் மரம் நிழல் ஈனப் பனி புரை துளி மேகம்
புயல் தர, இள மென் கால் பூ அளவியது எய்த,
மயில் இனம் நடம் ஆடும் வழி இனியன போனார்.

பொ :—சூரியன் குழவிமதிபோல் (குளிர்ந்த) விரிந்த கிரணங்களை வனத்திடைப் பரப்ப, அடர்ந்த மரங்கள் நிழலைத் தர, பனித்துளி போன்ற நீர்த்துளிகளை மேகம் சிந்த, பூக்களின் நறுமணம் அளைந்த தாய்த் தென்றல் வர, மயிற் கூட்டங்கள் நடம்ஆடும் இனிய நெறியிற் செல்வாராயினர்.

கு :—வெயில்-சூரியன்; ஆகுபெயர். பயிலுதல்-செறிதல். புயல் மேகம் என மாறிக் கூட்டுக. புயல் மேகம் மீமிசைச்சொல். 'புயல் மேகம்போற் றிருமேனி அம்மான்' (திருவாய்மொழி. 8-10-2) என்பது அருளிச்செயல். இளமென்கால் ஒரு பொருட் பன்மொழி. வெயில் இளநிலவே போல் கதிர் வீசுதலாலும் மரங்கள் நிழல்தருதலாலும் மேகம் மழைத்துளிகளைத் தெறித்தலாலும் தென்றல் பூக்களின் நறு மணம் அளைந்து வருதலாலும் வழி இனிதாயிற்று. (2)

## இராமன் சீதாபிராட்டிக்கு வழியிடைக் காட்சி மகிழ்ந்து காட்டல் 2090-2105

**2090.** மன்றலின் மலிகோதை
மயிலியன் மடமானே
யின்றுயில் வதிகோபத்
தினம்விர வினவெங்குங்
கொன்றைகள் சொரிபோதின்
குப்பைகள் குலமாலைப்
பொன்றிணி மணிமானப்
பொலிவன பலகாணாய்.

'மன்றலின் மலி கோதை மயில் இயல் மடமானே!
இன் துயில் வதி கோபத்து இனம் விரவின எங்கும்
கொன்றைகள் சொரி போதின் குப்பைகள், குலம் மாலைப்
பொன் திணி மணி மானப் பொலிவன பல காணாய்.'

பொ :—' நறுமணம் மிக்க கூந்தலையும் மயிலின் சாயலையும் இள மான் ஒன்று பெற்றுளதாயின் அம் மான்போன்றவளே! வனத்தின் எல்லா இடத்தும் இனிதே உறங்குகின்ற தம்பலப் பூச்சிகள் விரவிய

கொன்றைகள் சொரிந்த மிக்க பூக்கள், சிறந்த மாலையின்கண், பொன்னிற் செறிந்த மாணிக்க மணிபோல விளங்குவன பலவற்றைக் காண்பாயாக.'

கு :—மன்றல் – நறுமணம்; இன் சாரியை. கோதை-கூந்தல். மருண்ட நோக்கால் மகளிர்க்கு மான் உவமையாகும். கோபம்-இந்திர கோபம்; முதற் குறை. இந்திரகோபம்-தம்பலப் பூச்சி. விரவுதல்-பொருந்துதல் ; 'புலியுரி விரவிய அரையினர்' (450-1) என்பது தேவாரம். கொன்றை மாலைகள் போன்ற பூக்களையுடையது; 'மாலிருஞ் சோலையிற் கொன்றைகள் மேல் தூங்கு பொன் மாலைகள்' (நாச்சியார் திருமொழி 9-9.) என்பது அருளிச் செயல். மஞ்சள் நிறம் வாய்ந்த கொன்றைப் பூவுக்குப் பொன்னலியன்ற மாலையும், அக்கொன்றைப் பூவிற் பொருந்திய இந்திர கோபங்களுக்குப் பொன் மாலையிற் பதிக்கப்பட்ட மாணிக்கங்களும் உவமை. (3)

**2091.** பாணின ஞிமிருகப் படுமழை பணையாக
நாணின தொகுபீலி கோலின நடமாடல்
பூணிய லினசாயல் பொலிவது பலகண்ணிற்
காணிய வெனலாகுங் களிமயி லிவைகாணாய்.

'பாண் இனம் ஞிமிறு ஆகப் படும் மழை பணை ஆக,
நாணின தொகு பீலி கோலின நடம் ஆடல்,
பூண் இயல்! நின சாயல் பொலிவது, பல கண்ணில்
காணிய எனல் ஆகும் களி மயில் இவை காணாய்.'

பொ :—'அணிகலனாக ஒழுக்கத்தை மேற்கொண்டவளே! (காரின் வரவு கண்டு) களிப்புற்ற மயில்கள், கூட்டமான வண்டுகள் பாணராகவும் முழங்குகின்ற மேகம் முழவாகவும் கொண்டு, (இளவேனிலால்) குவிந்து சுருங்கிய தோகைகளை விரித்து நடனமாடுதல், விளக்கம் மிக்க நின் மேனியழகைத் தம்முடைய பலவாகிய கண்களால் நன்கு காணும்பொருட்டு என்று சொல்லத்தக்க இந்தக் காட்சிகளை நீ காண்பாயாக.'

கு :—படுதல் - முழங்குதல். நாணுதல் – குவிதல்; 'பங்கயம்போல் நாணி' (210) என்பது தஞ்சைவாணன்கோவை. தொகுதல்-சுருங்குதல் கோலுதல்-விரித்தல்; 'கணமயில் தொக்கு எண்ணுழையாத் தழை கோலி நின்றாலும்' (திருக்கோவையார். 347) என்றார் மணிவாசகப் பெருமானும். இயல்-ஒழுக்கம். பல என்பது இங்கே அளவின்மை சுட்டி நின்றது. காரின் வரவாகிய ஒரு காரணத்தால் மயில்கள் ஆடினவாக, சீதாபிராட்டியின் திருமேனி அழகைத் தம்முடைய

தோகையிலுள்ள (இமைத்தலும் குவிதலும் அற்ற) அளவிறந்த கண்களால் காணும் வேட்கையால் ஆடின என்று அதற்கு வேறு ஒரு காரணம் கற்பித்தமையால் இச்செய்யுள் தற்குறிப்பேற்றம் என்னும் அணிதழுவி அமைந்ததாகும். இதனால் அல்லலேற்ற கானகத்தும் அழியாத பிராட்டியின் வடிவழகைப் பெருமான் வியந்து பேசியவாறு. பூணியல் நின சாயல் பொலிவது பல கண்ணில் காணிய எனல் ஆகும் என்றது, 'கமையாள் மேனிகண்டவர் காட்சிக்கரை காணார், இமையா நாட்டம் பெற்றிலம் என்றார், இருகண்ணால் அமையாதென்றார்' (588) என்று முன் கூறியதை நினைவூட்டுகிறது. (4)

2092. சேந்தொளி விரிசெவ்வாய்ப்
பைங்கிளி செறிகோலக்
காந்தளின் மலரேறிக்
கோதுவ கவினாரு
மாந்தளிர் நறுமேனி
மங்கைநின் மணிமுன்கை
யேந்தின வெனலாகு
மியல்பின விவைகாணாய்.

'சேந்து ஒளி விரி செவ்வாய்ப் பைங்கிளி செறி கோலக்
காந்தளின் மலர் ஏறிக் கோதுவ, கவின் ஆரும்
மாந்தளிர் நறும் மேனி மங்கை! நின் மணி முன்கை
எந்தின எனல் ஆகும் இயல்பின இவை காணாய்!'

பொ :—'அழகு பொருந்திய மாந்தளிர்போலும் நல்ல மேனியையுடைய மங்கையே! இதழ்கள் அடர்ந்த அழகிய காந்தள்மலரில் தங்கி, அம்மலரைத் தம் அலகால் கோதுவனவாகிய, சிவந்து ஒளி விரிகின்ற அழகிய வாயினையும் பசுமைநிறம்வாய்ந்த உடலினையும் உடைய இக்கிளிகள், உன்னுடைய அழகிய முன்கையில் ஏந்தப்பட்டவை என்று சொல்லத்தக்க இயல்பினையுடையவாயிருத்தலைக் காண்பாயாக.'

கு :—சேந்து-சிவந்து. காந்தள்மலரைக் கைக்கு உவமை கூறுவது வழக்கம். உன் முன்கையில் தாங்கியவற்றைப்போல் விளங்கும் இவற்றைக் காண் என்று, காந்தள் மலரில் தங்கிய கிளிகளை இராமன் சீதாபிராட்டிக்குக்காட்டினன் என்றவாறு. இச்செய்யுள் சில சுவடிகளில் 'அருந்ததியனையாளே' என்று தொடங்கும் எட்டாம் பாடலின் பின் வரையப்பட்டுளது. (5)

**2093.** நெய்ஞ்ஞிறை நெடுவேலி
னிறமுறு திறமுற்றிக்
கைஞ்ஞிறை நிமிர்கண்ணாய்
கருதின வினமென்றே
மெய்ஞ்ஞிறை விரிசாயல்
கண்டுநின் விழிகண்டு
மஞ்ஞையு மடமானும்
வருவன விவைகாணாய்.

'நெய்ஞ் ஞிறை நெடு வேலின் நிறம் உறு திறம் முற்றிக்
கைஞ் ஞிறை நிமிர் கண்ணாய்! கருதின இனம் என்றே,
மெய்ஞ் ஞிறை விரி சாயல் கண்டு நின் விழி கண்டு
மஞ்ஞையும் மடம் மானும் வருவன இவை காணாய்.'

பொ :—'எதிர்ப்பட்டார் மார்பை உருவும் நெய் நிரம்பப் பூசப் பட்ட நீண்ட வேற்படையின் ஆற்றல் நிரம்பி, உள்ளங்கையளவி னும் மிக்க பெரிய கண்களையுடையாய்! உன் உடலில் நிறைந்த மிக்க சாயலை நோக்கி மயிலும், உன் மருண்ட பார்வை கண்டு இள மானும், உன்னைத் தம் இனமென்றே கருதினவாய் உன்னை நோக்கி வருவனவாகிய இவற்றைக் காண்.'

கு :—கண்ணாய்! நின் மெய்ஞ்ஞிறை விரிசாயல் கண்டு மஞ்ஞை யும் நின் விழிகண்டு மானும் இனமென்றே கருதி வருவன இவை காணாய் என இயையும்; முறைநிரனிறை. நெய்ஞ்ஞிறை, கைஞ் ஞிறை, மெய்ஞ்ஞிறை என்பவற்றுள் நெய்ந்நிறை, கைந்நிறை மெய்ந் நிறை என்பவற்றின் நகரம் ஞகரமாகத் திரிந்துநின்றது; போலி. நிறம்-மார்பு. கை-உள்ளங்கை. கைஞ்ஞிறை நிமிர் கண் என்பத ஞெடு 'குடங்கையினெடிய கண்' (1290) என்னும் சிந்தாமணி அடி யும் நோக்கத்தகும். மஞ்ஞை-மயில். (6)

**2094.** பூவலர் குரவோடும்
புடைதவழ் பிடவீனும்
மாவலர் சொரிசூழற்
றுயிலெழு மயிலொன்றின்
றூவியின் மணநாறத்
துணைபிரி பெடைதானச்
சேவலொ டுறவூடித்
திரிவத னியல்காணாய்.

'பூவலர் குரவோடும் புடை தவழ் பிடவு ஈனும்
மா அலர் சொரி சூழல் துயில் எழும் மயில் ஒன்றின்
தூவி இன் மணம் நாறத் துணை பிரி பெடைதான், அச்
சேவலொடு உற ஊடித் திரிவதன் இயல் காணாய்.'

பொ :—'குராமரத்தின்கண் மலர்ந்த பூவோடு, பக்கங்களில் தழைத்துப் பரவிய பிடவின்கண் தோன்றிய நல்ல பூக்கள் சிந்திய இடத்தில் உறங்கி யெழுந்த ஒரு மயிலின் தோகை இனிய நறு மணத்தொடு விளங்குதலால், அந்த மயிற் சேவலைப் பிரிந்த பெண் மயிலானது, தன் சேவலோடு மிகவும் ஊடலைச் செய்து திரியும் இயல்பைக் காண்.'

கு :—குரவமலரும் பிடவமலரும் உதிர்ந்த நிலத்தே உறங்கி யெழுந்தமையால் ஆண் மயிலின் தோகை, அந்த மலர்களின் நறு மணம் உடையதாகக் கண்ட பெண் மயில், ஆண் மயிலின் தூவியில் உள்ள மணம் வேற்றுப்பேடையின் கூட்டுறவால் விளைந்ததென்று ஊடுவதாயிற்று. குரவு-குரா. குரவு பிடவு என்பவை மர விசேடங்கள். தூவி-தோகை. கண்ணாய்! என்னும் விளியினை முன்பாட்டிலிருந்து கொணர்ந்து இயைக்க. (7)

**2095.** அருந்ததி யனையாளே
யமுதினு மினியாளே
செருந்தியின் மலர்தாங்குஞ்
செறியித ழினசோகம்
பொருந்திய களிவண்டிற்
பொதிவன பொன்னூது
மிருந்தையி னெழுதீயொத்
தெழுவதொ ரியல்பாராய்.

'அருந்ததி அனையாளே! அமுதினும் இனியாளே!
செருந்தியின் மலர் தாங்கும் செறி இதழின் அசோகம்,
பொருந்திய களி வண்டில் பொதிவன, பொன் ஊதும்
இருந்தையின் எழு தீ ஒத்து எழுவது ஓர் இயல் பாராய்.'

பொ :—'கற்புடைமையால் அருந்ததியைப் போன்றவளே! அமு தத்தினும் மிக்க இனிமை வாய்ந்த மொழியினையுடையவளே! செருந்தி யின்பூவைத் தன்னிடத்துக் கொண்ட நெருங்கிய இதழ்களையுடைய அசோகின்பூக்கள், மகிழ்ச்சி பொருந்திய வண்டுகளால் மறைக்கப்

பட்டவை. பொன்னை வைத்து ஊதும் கரியிடை எழுகின்ற நெருப்பை ஒத்துத் தோன்றும் தன்மையைப் பார்ப்பாயாக.'

கு :—செருந்தி-பொன்போல மலரும் பூக்களையுடையதொரு மரம். செருந்திப் பூவுக்குப் பொன்னும் அசோகமலர்க்கு நெருப்பும் வண்டுக்குக் கரியும் உவமை. பொதிதல்—மூடுதல். இருந்தை-கரி. (8)

**2096.** ஏந்திள முலையாளே
யெழுதரு மெழிலாளே
காந்தளின் முகைகண்ணிற்
கண்டொரு களிமஞ்ஞை
பாந்தளி தெனவுன்னிக்
கவ்விய படிபாராத்
தேந்தள வுகள்செய்யுஞ்
சிறுகுறு நகைகாணாய்.

'ஏந்து இளம் முலையாளே! எழுதரும் எழிலாளே!
காந்தளின் முகை கண்ணில் கண்டு, ஒரு களி மஞ்ஞை,
'பாந்தள் இது' என உன்னிக் கவ்வியபடி பாராத்
தேம் தளவுகள் செய்யும் சிறு குறு நகை காணாய்.'

பொ :—'பூரித்த இளங்கொங்கையினையுடையாய்! எழுத அரிய அழகுடையவளே! களிப்புற்ற மயிலானது, காந்தளரும்பை நோக்கி, 'இது பாம்பு' என்று எண்ணி அதனைக் கவ்விய தன்மையைப் பார்த்து, தேனையுடைய முல்லைகள் செய்யும் புன்சிரிப்பைப் பார்.'

கு :—மஞ்ஞை காந்தள்முகை கண்டு, 'இது பாந்தள்' என உன்னிக் கவ்வியபடி பாராத் தளவுகள் செய்யும் சிறு குறு நகைகாணாய் என இயையும். எழுத அரும் எழிலாள் என்பது எழுதரும் எழிலாள் என்றானது விகாரம். எழுதரும் எழிலாள் என்பதற்கு (புதிது புதிதாகத்) தோன்றுகின்ற அழகுடையவள் என்று உரை கூறலும் ஆம். எழுதரல்-தோன்றுதல். முகை - அரும்பு. காந்தளரும்பு பாம்புபோல்வது; "காந்தளும் பாந்தளைப் பாரித்தலர்ந்தனவே" (324) என்பது திருக்கோவையார். மயிலுக்கும் பாம்புக்கும் பகை; 'மஞ்ஞை......பாம்பைப் பிடித்துப் படங்கிழித்தாங்கு' (21) என்பது திருக்கோவையார். வனத்தின் ஒருபால் காந்தள்கள் அரும்பெடுத்துள்ளன. அங்கே திரியும் மயில் காந்தளரும்பைப் பாம்பென்று மயங்கிக் கவ்வுகிறது. பக்கத்தே அரும்பொடுகூடிய முல்லைக்கொடிகள் மயிலின் மயக்கங்கண்டு நகைப்பதுபோலத் தோன்றுகின்றன.. 'காந்தளரும்பைப் பாம்பென்று கவ்விய

மயிலின் மயக்கங்கண்டு, முல்லே சிரிப்பதுபோலத் தோன்றும் இக்காட்சியைக் காண்' என்று பெருமான் பிராட்டிக்குக் காட்டி மகிழ்விப்பாளுயினன் என்றவாறு. முல்லேயரும்புகள் பற்களுக்கு உவமை. (9)

2097. குன்றுறை வயமாவின் குருளேயு மிருள்சிந்திப்
பின்றின வெனலாகும் பிடிதரு சிறுமாவு
மன்றல பிரிவொல்லா வண்டர்த மனேயாவின்
கன்ருெடு விளேயாடுங் களியன பலகாணுய்.

'குன்று உறை வயம் மாவின் குருளேயும் இருள் சிந்திப்
பின்றின எனல் ஆகும் பிடி தரு சிறு மாவும்
அன்றல பிரிவு ஒல்லா அண்டர்தம் மனே ஆவின்
கன்ருெடு விளேயாடும் களியன பல காணுய்.'

பொ :—'மலே(யின் குகை)யின்கண் தங்கும் சிங்கக்குட்டிகளும், இருளேத் துண்டித்து இணேத்துவைத்தாற்போல விளங்கும் பெட்டையானே ஈன்ற சிறிய யானேக்கன்றுகளும் பகையில்லாதனவாயும் ஒன்ருேடொன்று பிரியாதனவாயும் இடையர் வீட்டுப் பசுக்கன்றுகளுடன் மகிழ்ச்சியுடையனவாய் விளேயாடும் பலவற்றைக் காண்பாயாக.'

கு :—வயமா–சிங்கம்; புலியும் ஆம். குருளே–குட்டி. பின்றுதல்–பின்னுதல்=இணேத்தல். அன்று–பகை; 'அன்றிய வாணன் ஆயிரந் தோளும்' (பெரியதிருமொழி. 4. 3. 8.) என்பது அருளிச்செயல். அண்டர்–இடையர். வனம், குணமென்னுங் குன்றேறிநின்ற முனிவர் உறையும் இடம்; அன்றியும், குணக்கடலான இராமன் அவ்வனத்துள் புகுந்துளான்; ஆதலால் அங்கே உறையும் கொடிய விலங்குகளும் நல்ல விலங்குகளுடன் பகைநீங்கி இணேந்து விளேயாடுவனவாயின. (10)

2098. அகில்புரை குழன்மாதே
யணியிழை யெனலாகு
நகுமலர் நிறைமாலேக்
கொம்புக ணதிதோறுந்
துகில்புரை நுரைநீரிற்
ருேய்வன துறையாடு
முகிழிள முலேயாரின்
மூழ்குவ பலகாணுய்.

'அகில் புரை குழல் மாதே! அணி இழை எனல் ஆகும்
நகும் மலர் நிறை மாலைக் கொம்புகள், நதிதோறும்
துகில் புரை நுரை நீரில் தோய்வன, துறை ஆடும்
முகிழ் இள முலையாரில் மூழ்குவ பல காணாய்.'

பொ :—'அகிற்புகையின் நறுமணம் பொருந்திய கூந்தலையுடைய பெண்ணே! பூணும் அணிகலன்கள்போலும் மலர்ந்த பூக்களின் தொகுதியை மிகுதியாகவுடைய பல பூங்கொம்புகள், ஆற்றின் இடங்களிலெல்லாம் வெள்ளாடைபோலும் நுரையினையுடைய நீரில் படிவனவாய், நீர்த்துறையில் விளையாடும் தாமரை அரும்புபோலும் தனங்களையுடைய இளமகளிரைப்போல மூழ்குவனவற்றைக் காண்பாயாக.'

கு :—அகில் இங்கே ஆகுபெயராய் அகிற்புகையின் நறுமணத்தை உணர்த்தியது. புரைதல்–பொருந்துதல். துகில்–வெள்ளாடை. (11)

2099. முற்றுறு முகைகிண்டி முரல்கில சிறுதும்பி
விற்றிரு நுதன்மாதே யம்மலர் விரிகோங்கின்
சுற்றுறு மலரேறித் துயில்வன சுடர்மின்னும்
பொற்றக டுறுநீலம் புரைவன பலகாணாய்.

'முற்றுறும் முகை கிண்டி முரல்கில சிறு தும்பி,
வில் திரு நுதல் மாதே! அம் மலர் விரி கோங்கின்
சுற்று உறும் மலர் ஏறித் துயில்வன சுடர் மின்னும்
பொன் தகடு உறும் நீலம் புரைவன பல காணாய்.'

பொ :—'ஒளியுள்ள அழகிய நெற்றியையுடைய பெண்ணே! முற்றிய அரும்பைக் கிளைத்து ஒலியாதனவாய், அழகிய விரிந்த மலர்களையுடைய கோங்கமரச்சூழலில் உள்ள பூக்களில் ஏறி உறங்குகின்ற சிறு தும்பிகள் பல, ஒளிமிக்க பொன்தகட்டில் பொருந்திய நீலமணிகளை ஒத்திருத்தலைக் காண்பாயாக.'

கு :—முகை-அரும்பு முரலுதல்-ஒலித்தல். வில்-ஒளி. நுதல்-நெற்றி. கோங்கின்மலர்க்குப் பொற்றகடும், அம்மலரில் தங்கி உறங்கும் தும்பிகளுக்குப் பொற்றகட்டில் பதித்த நீலமணிகளும் உவமை. புரைதல்–ஒத்தல். (12)

2100. கூடிய நறைவாயிற் கொண்டன விழிகொள்ளா
மூடிய களிமன்னு முடுகின நெறிகாணு

வாடிய சிறைமாவண் டந்தரி னிசைமுன்னம்
பாடிய பெடைகண்ணு வருவன பலகாணுய்.

'கூடிய நறை வாயில் கொண்டன, விழிகொள்ளா
மூடிய களி மன்னும் முடுகின, நெறி காணு,
ஆடிய சிறை மா வண்டு அந்தரின் இசை முன்னம்
பாடிய பெடை கண்ணு வருவன, பல காணுய்.'

போ :—'மிக்க தேனைப் பருகினவையும் (அதனுல்) கண்விழிக்க மாட்டாமல் மூடப்பெற்றவையும், களிப்பால் மிக்க விரைவுடையனவும், செல்லும்நெறி அறியாதனவும் ஆன அசைந்த இறகினையுடைய கரிய வண்டுகள், குருடரைப்போலே, முன்னே இசை பாடிய(னவாய்ச் செல்லுகின்ற) பெடை வண்டுகள் கண்ணுக வருவனவற்றைப் பார்.'

கு :—நறை-தேன். மன்னும்-மிகவும். சிறை-இறக்கை. அந்தர்-குருடர். அளவிறந்த கட்குடியால் கண்மூடிய நிலை, 'ஒருத்தி இறந்த களியான் இதழ் மறைந்த கண்ணள்' (92-48) என்று கலித்தொகையிலும் பயின்றது. (13)

2101. கன்னிய ரணிகோலங்
கற்றறி குநரென்னப்
பொன்னணி நறவேங்கை
கோங்குகள் புதுமென்பூ
வன்னமென் னடையாய்நின்
னளிவள ரளகப்பூஞ்
சின்னநன் மலர்மானச்
சிந்துவ பலகாணுய்.

'கன்னியர் அணி கோலம் கற்று அறிகுநர் என்னப்
பொன் அணி நற வேங்கை கோங்குகள் புது மென் பூ,
அன்னம் மெல் நடையாய்! நின் அளி வளர் அளகப் பூம்
சின்ன நல் மலர் மானச் சிந்துவ பல காணுய்.'

போ :—'அன்னநடைபோலும் மெல்லியநடையையுடைய நங்காய்! வேங்கை மரங்களும் கோங்க மரங்களும், மகளிர் அணியும் கோலங்களைக் கற்றறிபவர்போலப் பொன்போலும் அழகிய தேனுள்ள மெல்லிய பல பூக்களை, நின்னுடைய வண்டுகள் தங்கிய அளகத்தில் உள்ள அழகிய நல்ல விடுபூவைப்போலச் சிந்துவனவற்றைக் காண்பாயாக.'

சின்னம்

கு :—நரு என்பது நற என்று ஆனது விகாரம். அளி - வண்டு. அளகம் - கூந்தல். சின்னம் - விடுபூ. 986–ஆம் பாட்டிலும் 2022–ஆம் பாட்டிலும் சின்னம் என்பது இப்பொருளில் பயின்றமை காணத்தகும். (14)

**2102.** மணங்கிளர் மலர்வாரு
மாருதம் வரவாசக்
கணங்கிளர் தருசுண்ணங்
கல்லிடையன கானத்
தணங்கினு மினியாயுன்
னணிவட முலேமுன்றிற்
சுணங்கின மவைமானத்
துறுவன பலகாணய்.

'மணம் கிளர் மலர் வாரும் மாருதம் வர, வாசக்
கணம் கிளர்தரு சுண்ணம் கல் இடையன கானத்து,
அணங்கினும் இனியாய்! உன் அணி வடம் முலே முன்றில்
சுணங்கு இனம் அவை மானத் துறுவன பல காணய்.'

பொ :—'திருமகளினும் இனியவளே! மணம் மிக்க பூக்களே அள்ளிக் கொண்ட காற்று வருதலால், நறுமணமுடையவாய்த் திரண்டு மிக்க மகரந்தங்கள், காட்டிற் கல்லிடையனவாய், உன்னுடைய அழகிய மாலே அணிந்த தனங்களினிடையே பரவிய தேமலேப்போலச் செறிவன பல வற்றைக் காண்பாயாக.'

கு :—கிளர்தல்–மிகுதல். மாருதம்-காற்று. கணம்-திரட்சி. சுண் ணம்–மலர்களிலுள்ள நறுமணப்பொடி. அணங்கு என்றது இங்கே திருமகளே. வடம்–மாலே. சுணங்கு-தேமல். துறுதல்-செறிதல். சுண் ணத்துக்குச் சுணங்கும் கல்லுக்குத் தனமும் உவமை. (15)

**2103.** அடியிணே பொறைகல்லா
வென்றுகொ லதரெங்கு
மிடையிடை மலர்சிந்து
மினமர மிவைகாணய்
கொடியினெ டிளவாசக்
கொம்புகள் குயிலேயுன்
றுடிபுரை யிடைமானத்
துவள்வன விவைகாணய்.

'அடி இணை பொறை கல்லா என்று கொல், அதர் எங்கும்,
இடையிடை மலர் சிந்தும் இனம் மரம் இவை காணாய்!
கொடியினொடு இள வாசக் கொம்புகள், குயிலே! உன்
துடி புரை இடை மானத் துவள்வன இவை காணாய்!'

போ :—'குயில் போல்பவளே! உன் கால்கள், (நெறிக் கண் பரல் உறுத்தலைப்) பொறுக்கலாற்றா என்று வழியெங்கும் இடையிடையே பூக்களை உதிர்க்கின்ற கூட்டமான இம்மரங்களைப் பார். உன்னுடைய இடையைப்போலத் துவள்வனவாகிய நறுமணம் உள்ள இளங்கொடிகளும் பூங்கொம்புகளுமாகிய இவற்றையும் காண்பாயாக.'

கு :—பொறைகல்லா-பொறுக்கலாற்றா. கொல்-அசை. அதர்-வழி. துடி-உடுக்கை. இடைக்குத் துடியினை உவமை கூறுவது கவிமரபு. (16)

**2104.** வாள்புரை விழியாயுன்
மலரடி யணிமானத்
தாள்புரை தளிர்வைகுந்
தகைஞிமி றிவைகாணாய்
கோள்புரை யிருள்வாசக்
குழல்புரை மழைகாணாய்
தோள்புரை யிளவேயின்
றொகுதிக ளிவைகாணாய்.

'வாள் புரை விழியாய்! உன் மலர் அடி அணி மானத்
தாள் புரை தளிர் வைகும் தகை ஞிமிறு இவை காணாய்!
கோள் புரை இருள் வாசக் குழல் புரை மழை காணாய்!
தோள் புரை இளவேயின் தொகுதிகள் இவை காணாய்!'

போ :—'வாள்போன்ற விழியையுடையவளே! உன்னுடைய விரிந்த அடியின்கண் அணிந்த அணிகலன்போலக் காம்பொடு கூடிய தளிரின்கண் தங்கிய தன்மையுள்ள இந்த வண்டுகளைக் காண்பாயாக; (மலர்கள் தைலம் முதலியவற்றைக்) கொள்ளுதல் பொருந்திய கரிய நறுமணம் உள்ள உன் கூந்தலையொத்த மேகங்களைப் பார்ப்பாயாக; உன்னுடைய தோளை ஒத்த இளைய இந்த மூங்கில் பண்ணைகளைப் பார்ப்பாயாக.'

கு :—அடி தளிருக்கும் அடியிலுள்ள அணிகலன் தளிரில் உள்ள வண்டுக்கும் உவமை. தாள்-காம்பு. புரை ஐந்தில் ஒன்றும் நான்கும்

ஐந்தும் உவமவுருபாய் நின்றன. இரண்டும் மூன்றும் புரை(தல்)-பொருந்துதல் என்னும் பொருளிற் பயின்றன. ஞிமிறு – வண்டு. கோள்–கொள்ளுதல். மழை-மேகம். வேய்–மூங்கில். (17)

2105. பூநனை சினைதுன்றிப்
புள்ளிடை யிடைபம்பி
நானிற நளிர்வல்லிக்
கொடிநவை யிலபல்கி
மானின மயின்மாலைக்
குயிலினம் வதிகானம்
தீநிகர் தொழிலாடைத்
திரைபொரு வனபாராய்.

'பூ நனை சினை துன்றிப் புள் இடையிடை பம்பி,
நால் நிற நளிர் வல்லிக்கொடி நவை இல பல்கி,
மான் இனம், மயில், மாலைக் குயில் இனம் வதி கானம்,
தீ நிகர் தொழில் ஆடைத் திரை பொருவன பாராய்!'

பொ:—'பூவும் அரும்பும் கிளைகளில் மிகுந்து, இடையிடையே பறவைகள் நிறைந்து, பலவகை நிறங்களையுடைய குளிர்ந்த வல்லியென்னும் கொடிகள் குற்றமற்றனவாய் மிக்கு, மான் கூட்டமும் மயில்களும் வரிசையான குயிற்கூட்டமும் வாழும் காடுகள், தீயை ஒத்து விளங்கும் சித்திர வேலைப்பாடமைந்த திரைச்சீலை போல்வனவற்றைக் காண்பாயாக.'

கு:—நனை - அரும்பு. சினை - கிளை. புள் - பறவை; வண்டுமாம். பம்பி-நிறைந்து. நவை–குற்றம். பல்கி-மிக்கு. மாலை–வரிசை. வதிதல்-தங்குதல், வாழ்தல். சிவந்த பூக்கள் அரும்புகள் தளிர்கள் இலைகள் முதலியவற்றைக் காட்டுதற்கு ஓவியர் தீட்டிய வண்ண வேலைப்பாடு, தீ நிகர் தொழில் என்று குறிக்கப்பட்டது. ஆடைத் திரை–திரைச் சீலை. பொருவன-ஒப்பன. இப்பாடலோடு, 'குரவமும் மரவமும்.............. எரிமலர் இலவமும் விரிமலர் பரப்பி, வித்தகரியற்றிய விளங்கிய கைவினைச், சித்திரச் செய்கைப் படாம் போர்த்ததுவே, ஒப்பத் தோன்றிய வுவவனம்' (3.160-169.) என்னும் மணிமேகலை யடிகளும் நோக்கத் தகும். (18)

## சூரியாத்தமனம்

2106. என்றுநன் மடவாளோ
டினிதினின் விளையாடிப்
பொன்றிணி திரடோளான்
போயின னெறிபோதுஞ்
சென்றது குடபாலத்
திருமலை யிதுவன்றோ
வென்றனன் வினைவென்றோர்
மேவிட மெனலோடும்.

என்று, நல் மடவாளோடு இனிதினின் விளையாடிப்
பொன் திணி திரள் தோளான் போயினன் நெறி; போதும்
சென்றது குடபால் ; அத்திருமலை இதுவன்றோ ?
என்றனன், வினை வென்றோர் மேவு இடம் எனலோடும்

பொ .—அழகு செறிந்த திரண்ட தோள்களையுடைய இராமன், நல்லழகுடைய சீதாபிராட்டியோடு, (நின் குழல்புரை மழை காணாய்...... தோள்புரை வேய் காணாய்) என்று கூறி விளையாடிக்கொண்டே வழியை இனிதே (கடந்து) சென்றனன் ; அப்போது, ஞாயிறும் மேற்றிசை யடைந்தது. இராமன், (நாம் சென்று அடையவேண்டிய) அச் சித்திர கூட மலை இதுவன்றோ? என்று (தன்னுள்) எண்ணி, முனிவர் எதிரே வரக்கண்டு, இது, இருவினைகளையும் வென்ற முனிவர் தங்கும் இடம் என்று (சீதாபிராட்டியை நோக்கிக்) கூறின அளவில்.

கு :—இச்செய்யுளும் அடுத்து வரும் பாடலும் ஒரு தொடர். என லோடும் பரமுனி வந்தான் என இயையும். மடம்–அழகு; 'மடக்கணீர் சோரும்' (சிலப். 17. உரைப்பாட்டு மடை) என்பதனுள் மடம் அழகு என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். பிராட்டியின் அழகு பிற மகளிரின் அழகு போல வளர்ந்து தேய்ந்து கெடுதலின்றி என்றும் ஒரு படித்தாயிருத்தலின் நன்மடவாள் என்றார். பொன்–அழகு. பொற் பூணும் ஆம். திணிதல்-செறிதல். போது-பொழுது = சூரியன். போதும் குடபால் சென்றது என்றது சூரியனும் அத்தமித்தான் என்றவாறு. குடபால்-மேற்றிசை. வினைவென்றோர்-முனிவர். (19)

## பரத்துவாச முனிவன் இராமனை எதிர்கொள்ளல்

**2107.** அருத்திய னகம்விம்மு
மன்பின னெடுநாளிற்
றிருத்திய வினைமுற்றிற்
றின்றென றெரிகின்றான்
பரத்துவ னெனுநாமப்
பரமுனி பவநோயின்
மருத்துவ னனையானை
வரவெதிர் கொளவந்தான்.

அருத்தியன் அகம் விம்மும் அன்பினன், 'நெடுநாளில்
திருத்திய வினை முற்றிற்று இன்று' எனல் தெரிகின்றான்,
பரத்துவன் எனும் நாமப் பரமுனி பவநோயின்
மருத்துவன் அனையானை வரவு எதிர்கொள வந்தான்.

பொ :—(இராமனைக் காணும்) ஆசையுடையவனும், மனம் நிறைந்த அன்புடையவனும் நெடுங்காலம் குற்றமறச் செய்த தவம் இன்று பயன் தரும் நிலையில் முற்றியது என்பதனை அறிகின்றவனும் ஆகிய பரத்துவாசன் என்னும் பெயருடைய உயர்ந்த முனிவன், பிறவிப்பிணிக்கு மருத்துவன் போல்பவனான இராமபிரானை வரவேற்கும்படி வந்து சேர்ந்தான்.

கு :—அருத்தி-ஆசை. திருத்துதல்-செவ்விதாக்கல். வினை–தவம்; நல்வினையும் ஆம். பவநோய்-பிறவிப்பிணி. பரமுனி – உயர்ந்த முனிவன். மருத்துவன்-வயித்தியன்; "பிரமனும் இந்திரனு மற்றும் ஒருத்தரும் இப்பிறவி யென்னும் நோய்க்கு மருந்தறிவாருமில்லை, மருத்துவனாய் நின்ற மாமணி வண்ணா" (பெரியாழ்வார் திருமொழி 5.3.6) என்னும் அருளிச்செயற் பாசுரம் இங்கே நோக்கத்தகும். புத்ததேவனைப் 'பிறவிப் பிணி மருத்துவன்' (மணிமேகலை. 9.6.) என்றார் சாத்தனாரும். (20)

## பரத்துவாச முனிவன் இயல்பு 2108-2109

**2108.** குடையினன் நிமிர்கோலன்
குண்டிகை யினன்மூரிச்
சடையின னுரிமானின்
சருமனன் மரநாரி

னுடையினன் மயிர்நாலு
முருவின னுயிர்பேணு
நடையினன் மறைநாலு
நடநவி றருநாவான்.

குடையினன், நிமிர் கோலன், குண்டிகையினன், மூரிச்
சடையினன், உரி மானின் சருமன், நல் மரநாரின்
உடையினன், மயிர் நாலும் உருவினன், உயிர் பேணும்
நடையினன், மறை நாலும் நடம் நவில்தரு நாவான்.

பொ :—(அப் பரத்துவாச முனிவன்) குடையையுடையான், ஓங்கிய முக்கோலினையுடையான், கமண்டலத்தையுடையான், பெரிய சடையினை யுடையான், உரித்த மான்தோலுடையான், நல்ல மரநாரினாலாகிய உடையினையுடையான், உரோமம் தொங்கும் உடலினன், உயிர்களைப் பாதுகாத்து (மெத்தென மெத்தென) நடக்கும் நடையினையுடையான், வேதங்கள் நான்கும் மகிழ்ந்து நடமாடும் நாவினையுடையான்.

கு :—இச் செய்யுளின் முதலடி, "நூலே கரகம் முக்கோல் மணையே, ஆயுங்காலை அந்தணர்க்கு உரிய" (தொல். பொருள். மரபியல். 70), "எறித்தரு கதிர் தாங்கி யேந்திய குடைநீழல், உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்" (கலித்தொகை. பாலைக்கலி. 9) என்னும் சான்றோர் உரைகளைத் தழுவியமைந்தது. நிமிர்கோல் – ஓங்கிய முக் கோல். குண்டிகை-கமண்டலம். மூரிச்சடை-பெரிய சடை. சருமம்-தோல். நாலுதல்-தொங்குதல். மயிர்வினை செய்து கொள்ளாமையால் உரோமம் நீண்டு வளர்ந்திருத்தலால் மயிர்நாலும் உருவினன் என லாயிற்று. நெறிபேணும் நடையினன் என்பதற்கு மெய்ம்மை நெறியை விரும்பும் ஒழுக்கமுடையான் என்று பொருள் கொண்டு, நெறியென்றது நிரதிசய வீட்டின்ப நெறியை: என்று விளக்கமும் வரைந்தனர் திருமயிலைச் சண்முகம் பிள்ளையவர்கள். மறை நாலும் நடம் நவில் தரும் நாவான் என்றது வேதங்களெல்லாம் மிகவும் பயிலும் நாவினை யுடையான் என்றவாறு. நடம் நவிலுதல்-நடனம் செய்தல்; 'நட்டமே நவில்வாய்' (2.2) என்பது தேவாரம். (21)

**2109.** செந்தழல் புரிசெல்வன்
றிசைமுக முனிசெவ்வே
தந்தன வுயிரெல்லாந்
தன்னுயி ரெனநல்கு

மந்தண னுலகேழு
　　மமையெனி னமரேச
னுந்தியி னுதவாமே
　　யுதவிடு தொழில்வல்லான்.

செந்தழல் புரி செல்வன், திசை முக முனி செவ்வே
தந்தன உயிர் எல்லாம் தன் உயிர் என நல்கும்
அந்தணன், 'உலகு ஏழும் அமை' எனின், அமரேசன்
உந்தியின் உதவாமே உதவிடு தொழில் வல்லான்.

பொ :—செவ்விய எரியை ஓம்புதலேயே செல்வமாக உடையவன், திசைதொறும் முகமுடைய முனிவனாகிய பிரமன் நன்கு படைத்த உயிர்களையெல்லாம் தன் உயிர்போல நோக்கியருளும் அழகிய தண்ணளியுடையான், 'ஏழுலகங்களையும் படைத்தி' என்றால், தேவர் தேவனாகிய திருமால் அவற்றைத் தன் உந்தியில் தோற்றுவிக்காமலே தோற்றுவிக்கும் தொழிலாற்றல் உடையவன்.

கு :—செந்தழல்புரி செல்வன் என்பதனால் பரத்துவாச முனிவனது ஒழுக்க நிறைவும், உயிரெல்லாம் தன் உயிர் என நல்கும் அந்தணன் என்றதனால் அவனது கருணை மிகுதியும், உலகேழும்........உதவிடு தொழில் வல்லான் என்றமையால் அவனது ஆற்றல் மிகுதியும் கூறப்பட்டன. உயிரெல்லாம் தன் உயிர் என் நல்கும் அந்தணன் என்பது, 'அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான்' (30) என்னும் வள்ளுவர் வாக்கைத் தழுவியமைந்தது. உலகேழும் அமையெனின் அமரேசன் உந்தியின் உதவாமே உதவிடு தொழில்வல்லான் என்றது, திருமால் தன் உந்தித் தாமரையில் உலகங்களைத் தோற்றுவிக்க, பின் அவ்வுலகங்களைப் படைக்கும் பிரமனைப்போலன்றித் தானே உலகங்களைத் தோற்றுவிக்கும் ஆற்றலுடையவன் பரத்துவாசமுனிவன் என்றவாறு. இதனால் பரத்துவாசன் பிரமனிலும் மேம்பட்ட ஆற்றலுடையவன் என்பதுமட்டுமின்றித் திருமாலை ஒத்தவன் என்பதும் பெறப்படும். (22)

பரத்துவாச முனிவன் வருந்தல்

**2110.** அம்முனி வரலோடு
　　மழகனு மலர்தூவி
மும்முறை தொழுதானம்
　　முதல்வனு மெதிர்புல்லி

யிம்முறை யுருவோநான்
காண்குவ தெனவுள்ளம்
விம்மின னிழிகண்ணீர்
விழிவழி யுகநின்ருன்.

அம்முனி வரலோடும், அழகனும் மலர் தூவி
மும்முறை தொழுதான்; அம் முதல்வனும் எதிர் புல்லி,
'இம்முறை உருவோ நான் காண்குவது?' என உள்ளம்
விம்மினன், இழி கண்ணீர் விழிவழி உக நின்ருன்.

பொ :—அப் பரத்துவாச முனிவன் எதிர் வந்த அளவில் அழக(ஞகிய இராம)னும் அம்முனிவனை மலர்களால் அருச்சித்து மூன்று முறை வணங்கிஞனக, தலைமைமிக்க அந்தப் பரத்துவாசமுனிவனும் இராமனை எதிர்நின்று தழுவி, இப்படிப்பட்ட வடிவத்தையோ நான் காண்பது என மனம் வருந்திப் புல்லிய கண்ணீர் கண்களிலிருந்து பெருகிச் சிந்த நிற்பாஞயினன்.

கு :—குடையினன்,............நடையினன் செந்தழல்புரி செல்வன் ............உலகேழும்............உதவிடு தொழில்வல்லாஞகிய அம்முனி என முன் செய்யுட்களோடு இணைத்துக்கொள்க. அழகன் என்றது இராமனை. அம்முதல்வன் என்றது பரத்துவாசமுனிவனை; அவற்கு முதன்மை தவத்தான் அமைந்த சிறப்புமிகுதி. விம்முதல்-வருந்துதல். 'இம்முறை யுருவோ நான் காண்குவது?' என உள்ளம் விம்மினன் என்றது, பொன்முடியும் பொற்பூணும் பொன்ஞடையும் பூண்டு விளங்கும் அரசக்கோலத்தையன்றிச் சடைமுடியும் மரவுரியும் மான்ருேலும் பூண்ட இத்துறவிக் கோலத்தையோ யான் காண்பது? என மனம் வருந்திஞன் என்றவாறு. பரத்துவாசன் தன்ஞல் அன்பு செய்யப்பட்ட இராமனுடைய தவக்கோலங் கண்டு வருந்திக் கண்ணீர் உக நிற்பாஞயினன்; "அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ் ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும்" (71) என்பது திருக்குறள். (23)

### பரத்துவாசன் வினவுதல்

2111. அகலிட நெடிதாளு மமைதியை யதுதீரப்
புகலிட மெமதாகும் புரையிடை யிதுநாளிற்
றகவில தவவேடந் தழுவினை வருவானென்
னிகலடு சிலைவீர வினையவ ஞெடுமென்ருன்.

"அகல் இடம் நெடிது ஆளும் அமைதியை, அது தீரப்
புகல் இடம் எமது ஆகும் புரையிடை, இது நாளில்,
தகவு இல தவ வேடம் தழுவினை வருவான் என்?
இகல் அடு சிலை வீர! இளையவனொடும்" என்றான்.

பொ :—'பகைவரையழிக்கும் வில்லை யேந்திய வீரனே! நீ அகன்ற நிலத்தை நெடுங்காலம் ஆளத்தக்க (ஆற்றல் முதலியவற்றின்) நிறைவுடையையாய் இருந்தும், அந்த ஆட்சிநிலை நீங்க, எங்கள் புகலிடமான வனத்தில் இந்நாள் இலக்குவனோடு பொருத்தமில்லாத தவவேடம் மேற்கொண்டு வருதற்குக் காரணம் யாது?' என்றான்.

கு :—'அகலிடம் நெடிது ஆளும் அமைதியை' என்றது, முதுமை காரணமாக அரசு துறந்து வனம் புகும் நிலையுடையையல்லை என்றவாறு. இகல் அடுசிலை வீர! என்பது, நீ வனத்திற் போந்தது பகைவர் செயலாலன்று என்பதனை உட்கொண்டு நின்றது. அமைதி-நிறைவு. தீர்தல்–நீங்குதல். இதுநாள்-இந்நாள். தகவு-தகுதி. (24)

## பரத்துவாசமுனிவன் இரங்குதல்

2112. உற்றுள பொருளெல்லா
முணர்வுற வுரைசெய்தா
னற்றவ முனியந்தோ
விதிதரு நவையென்பா
னிற்றது செயலுண்டோ
வினியென விடர்கொண்டான்
பெற்றில டவமந்தோ
பெருநில மகளென்றான்.

உற்றுள பொருள் எல்லாம் உணர்வுற உரைசெய்தான்;
நல் தவ முனி, 'அந்தோ! விதி தரும் நவை' என்பான்,
'இற்றது; செயல் உண்டோ இனி?' என இடர்கொண்டான்,
'பெற்றிலள் தவம் அந்தோ பெரும் நிலமகள்' என்றான்.

பொ :—(இராமன்) நிகழ்ந்த செயல் எல்லாவற்றையும் விளங்கச் சொல்ல, (அதுகேட்ட) நல்ல தவமுனிவனாகிய பரத்துவாசன், 'ஐயோ! (இது) ஊழால் விளைந்த தீங்கு என்று கருதி, முடிந்து விட்டது; இனி இதை மாற்றும் செயல் இல்லை' என்று வருந்தி, 'ஐயோ! பெருமை மிக்க நிலமகள் (இராமனை அரசனாகப்பெறுதற்குரிய) தவப்பேறு பெறாதவளாயினள்' என்றான்.

கு :—பொருள்-காரியம்=செயல்; 'ஒரு பொருள் சொல்லுவதுடையேன்' (கலித்தொகை. 8.) என்பதனுள் பொருள் காரியம் என்ற பொருளிற் பயின்றமை காணலாம். உற்றுளபொருள்—தாய்வரங்கொளத் தந்தை இயைந்தமை. செய்தான், என்பான், இடர்கொண்டான் என்பவை எச்சப்பொருளிற் பயின்றன. வீடுபேறளிக்கும் சிறப்புடைமையால் நற்றவம் என்றூர். இறுதல்-முடிதல். 'செயல் உண்டோ இனி' என்றது ஊழின்வலிமிகுதி கூறியது; ஊழால் நிகழ்ந்த இதனை மாற்றும் செயல் இல்லை என்றவாறு; 'ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற்பாலதோ ?' (1854) என்பதும் நோக்கத்தகும். (25)

## பரத்துவாச முனிவன் கூறுதல் 2113–2114

**2113.** துப்புறு துவர்வாயிற்
றூமொழி யிவளோடு
மப்புறு கடன்ஞால
மாளுதி கடிதென்று
வொப்பறு மகனுன்னை
யுயர்வன முறவேகென்
றெப்பரி சுயிருய்ந்தா
னென்றுணை யவனென்றான்.

"'துப்பு உறு துவர் வாயில் தூ மொழி இவளோடும்
அப்பு உறு கடல் ஞாலம் ஆளுதி கடிது' என்று,
ஒப்பு அறும் மகன் உன்னை, 'உயர் வனம் உற ஏகு' என்று
எப் பரிசு உயிர் உய்ந்தான் என் துணை அவன்?'' என்றான்.

பொ :—(பரத்துவாசமுனிவன்), "'எனது நட்பினனாகிய அத் தசரதன் ஒப்பற்ற புதல்வனாகிய உன்னை, பவழம்போற் சிவந்த வாயினையும், நல்ல மொழியினையும் உடைய இச்சீதாபிராட்டியோடு, நீர் நிறைந்த கடலாற் சூழப்பட்ட நிலமுழுவதையும் ஆட்சிபுரிதலை விரைந்து மேற்கொள்க' என்று கூறி, (உடனே) 'மரங்கள் ஓங்கிய காடேறச் செல்லுதி' என்று எவ்வாறு உயிர் தாங்கியிருந்தான் ?'' என்றான்.

கு :—என்றான் என்பதற்கு முனிவன் என்னும் எழுவாய் முன்பாட்டிலிருந்து கூட்டியுரைக்க. துப்பு-பவழம். துவர்-சிவப்பு. அப்பு-நீர். இங்கே பரத்துவாசமுனிவன், தசரதனை, 'என் துணையவன்' என்றும், இராமனை 'ஒப்பறும் மகன்' என்றும் கூறுவதனால் முனிவனுக்கும் சக்கரவர்த்திக்கும் நெருங்கிய தொடர்பு இருந்தமையும், முனிவர் இராமனை

நன்கு அறிந்திருந்தமையும் புலனாகும். அரசர் முடிசூட்டுவிழாவில் அவர் பட்டத்தரசியரும் அரியணையில் உடனிருத்தலும், அவ்வரசராட்சியில் அவருடைய பட்டத்தரசியரும் பங்குகோடலும் வழக்கு; "சிவந்த வாய்ச் சீதையும் கரிய செம்மலும் நிவந்த வாசனத்தினி திருப்ப" (1550) என ஆசிரியர் முன்னே கூறியதும், "விஜயாபிஷேகம் பண்ணி வீரசிம்ஹாசனத்து முக்கோக்கிழானடிகளோடும் வீற்றிருந்தருளிய...... ஸ்ரீ. விக்கிரமசோழதேவர்", "செம்பொன் வீரசிம்மாசனத்துத் திரிபுவன முழுதுடையாளொடும் வீற்றிருந்தருளிய......ஸ்ரீ. விக்கிரமசோழதேவர்" எனவரும் மெய்க்கீர்த்தி அடிகளும் இங்கே நோக்கத்தகும். (26)

2114. அல்லலு முளவின்ப
மணுகலு முளவன்றோ
நல்லவு முளசெய்யு
நவைகளு முளவன்றோ
வில்லையோர் பயனானின்
றிடருறு மிதினென்னாப்
புல்லின னுடனேகொண்
டினிதுறை புரைபுக்கான்.

'அல்லலும் உள, இன்பம் அணுகலும் உள, அன்றோ!
நல்லவும் உள, செய்யும் நவைகளும் உள, அன்றோ!
இல்லை ஓர் பயன் நான் இன்று இடர் உறும் இதின்,' என்னாப்
புல்லினன், உடனே கொண்டு இனிது உறை புரை புக்கான்.

பொ :—(பரத்துவாசமுனிவன், மக்கள் செய்யும்) 'நல்வினைகளும் உள; தீவினைகளும் உள்ளன (ஆதலால் மக்கள் அவ்வினைகளின் பயனாக) இன்பம் அடைதலும் உண்டு; துன்பம் அடைதலும் உண்டு. (இந்நிலையறிந்திருந்தும்) யான் இப்பொழுது துன்புறுமிதனால் ஒரு பயனும் இல்லை' என்று நினைந்து, இராமனைத் தழுவி உடன் அழைத்துக்கொண்டு சென்று நன்கு தங்கும் தன் பன்னசாலையிற் புக்கான்.

கு :—அன்று ஓ அசைநிலை. புல்லினன் முற்றெச்சம். (27)

### பரத்துவாச முனிவன் விருந்தோம்பல்

2115. புக்குறை யிடநல்கிப்
பூசனை முறைபேணித்
தக்கன கனிகாயுந்
தந்துரை தருமன்பாற்
றொக்கநன் முறைகூறித்
தூயவ னுயிர்போலு
மக்களி னருளுற்றான்
மைந்தரு மகிழ்வுற்றார்.

புக்கு, உறை இடம் நல்கிப் பூசனை முறை பேணித்
தக்கன கனி காயும் தந்து, உரை தரும் அன்பால்
தொக்க நல் முறை கூறித் தூயவன் உயிர்போலும்
மக்களின் அருளுற்றான்; மைந்தரும் மகிழ்வுற்றார்.

பொ :—தூயவனாகிய பரத்துவாசமுனிவன், தன் பன்னசாலையுள் இராமன் முதலியோரைக்கொண்டு புக்கு, அவர்க்குத் தங்குமிடம் கொடுத்து, முறையே உபசரித்துப் பூசித்து, நல்ல காய்களையும் கனிகளையும் (அவர்க்கு உணவாகக்) கொடுத்துப் பாராட்டத்தக்க அன்பொடு, நிறைந்த ஒழுக்கநெறிகளை உரைத்து, உயிரையொத்த மக்களிடத்துச் செய்தல்போல அருள்புரிந்தான்; ஆற்றல் மிக்கவராகிய இராமன் முதலியோரும் மகிழ்ச்சியுற்றவராய்.

கு :—உரை-புகழ்=பாராட்டு. தொக்க-நிறைந்த. நன்முறை-நல்ல ஒழுகலாறு. மகிழ்வுற்றார் என்பது முற்றெச்சம்; மகிழ்வுற்றவராய். வைகினர் எனப் பின்வரும் பாடலொடு இணைந்து முடியும். 'மக்களின் அருளுற்றான்' என்பதனோடு, 'மனையினீங்கிய மக்களை வைகலும் நினையும் நெஞ்சினர் கண்டிலர் நேடுவார் அனையர் வந்துற ஆண்டெதிர்ந்தார்கள்போல்' (2028) என ஆசிரியர் முன்கூறியதும், "வந்த மாதவத்தோனை அம்மைந்தனும், தந்தையாமெனத் தாழ்ந்து வணங்கினான் (திருவடிசூட்டு படலம். 1.) என்று பின்னே கூறுவதும், இராமன் முதலியவர்கள் சித்திரகூடம் நோக்கிப் புறப்பட்டது தெரிந்த பரத்துவாசமுனிவர், "ஒரு தந்தை புதல்வர்களை வழியனுப்புதல்போல(ச் சிறிதுதூரம்) அவர்களுடன் வந்து வழியனுப்பினார்" என்று பொருள்பட (ஸர்க்கம். 55. சுலோகம் 2.) வான்மீகிமுனிவர் கூறியிருப்பதும் நோக்கத்தகும். (28)

## பரத்துவாசன் நினைவும் செயலும்

2116. வைகினர் கதிர்நாறு
மளவையின் மறையோனு
முய்குவெ னிவனொடியா
னுடனுறை தலினென்பான்
செய்தன னினிதெல்லாஞ்
செல்வனை முகமுன்னுக்
கொய்குல மலர்மார்ப
கூறுவ துளதென்றான்.

வைகினர்; கதிர் நாறும் அளவையின் மறையோனும்,
'உய்குவென் இவனொடு யான் உடன் உறைதலின்' என்பான்,
செய்தனன் இனிது எல்லாம், செல்வனை முகம் முன்னுக்
'கொய் குலம் மலர் மார்ப! கூறுவது உளது' என்றான்.

பொ :—(மகிழ்வுற்று) தங்கினர். சூரியன் தோன்றுங்காலத்தில் வேதம்வல்ல பரத்துவாசமுனிவனும், 'இந்த இராமனுடன் நான் சேர்ந்து தங்குதலால், உய்திபெறுவேன்' என்று கருதி, (இராமன் அங்கே தங்குதற்கு வேண்டியவற்றை) எல்லாம் செவ்வையாய்ச் செய்து, திருவாளனை இராமனை முன்னே அணுகி, 'கொய்யப்பெற்ற சிறந்த மலர்மாலைகளை அணிந்த, மார்பையுடையவனே! சொல்லுவது ஒன்று உண்டு' என்றான்.

கு :—மகிழ்வுற்றார், வைகினர் என முன்பாட்டொடு இணைந்து முடியும். மறையோன் என்றது பரத்துவாசமுனிவனை. செல்வன் என்றது இராமனை. 2106–ஆம் பாடலில், 'போதும் சென்றது குடபால்' என்று சூரியாத்தமனம் கூறப்பட்டது. இப்பாடலில், 'கதிர் நாறும் அளவையின்' என்று சூரியோதயம் கூறப்பட்டது. கதிர் – சூரியன். நாறுதல் – தோன்றுதல். (29)

## பரத்துவாச முனிவன் வேண்டுகோள் 2117-2118

2117. நிறையு நீர்மலர் நெடுங்கனி
★ கிழங்குகாய் கிடந்த
குறையுந் தீயவை தூயவை
குறைவில வெம்மோ

டுறையு மிவ்வழி யொருங்கினி
லுயர்தவ முயல்வார்க்
கிறையு மீதலா தினியதோ
ரிடமரி தின்னும்.

'நிறையும் நீர் மலர் நெடுங்கனி கிழங்கு காய் கிடந்த;
குறையும் தீயவை; தூயவை குறைவு இல; எம்மோடு
உறையும் இவ்வழி, ஒருங்கினில் உயர் தவம் முயல்வார்க்கு
இறையும் ஈது அலாது, இனியது ஓர் இடம் அரிது; இன்னும்,"

பொ :—(யாம்) தங்கும் இவ்விடத்தில் நிறைந்த நீரும் பூக்களும் அளவற்ற கனிகளும் கிழங்குகளும் காய்களும் பொருந்தியுள்ளன; தீயவை தேயும்; தூயவை மிகும்; எம்முடன் சிறந்த தவத்தை ஒருங்கு முயல்பவர்களுக்கு இவ்விடம் அல்லாமல் நல்ல இடம் வேறு ஒன்றும் இல்லை ; மேலும்,

கு :—இச்செய்யுளும் இதன் பின்வரும் பாடலும் ஒருதொடர். (யாம்) உறையும் இவ்வழி, நிறையும் நீர் மலர் கனி கிழங்கு காய் கிடந்த எனவும், எம்மோடு உயர்தவம் ஒருங்கினில் முயல்வார்க்கு எனவும் இயையும். கிடத்தல்-பொருந்துதல். நெடுங்கனி—அளவற்ற (மிக்க) கனி; நெடுமை—அளவின்மை; 'நெடுங்கடல்' (திருக்குறள்-17) என்பது காண்க. ஒருங்கினில் என்பதனுள் இன் இல் என்பவை அசைகள். இறையும்-சிறிதும். அரிது—இல்லை; 'மனக்கவலை மாற்றல் அரிது' (திருக்குறள் 7), 'உறற்பால தீண்டாவிடுதல் அரிது' (நாலடி 109) என்பவற்றிற்போல இங்கே அருமை இன்மைப் பொருளுணர்த்தி நின்றது. இனி, இரண்டு மூன்றும் அடிகளில் உள்ள சொற்களை, 'இவ்வழி எம்மோடு ஒருங்கினில் உறையும்' என்று மாற்றிக் கூட்டி, 'இவ்விடத்தில் தானே எம்மோடு (ஒருசேர) நீங்கள் வாசஞ்செய்யுங்கள்' என்று பொருள் உரைத்தாரும் உண்டு. அது பொருந்தாமை பின்வருமாற்றால் விளங்கும். முன்பாட்டில் 'இவனோடு யான் உடன் உறைதலின் உய்குவென்' என்று நினைந்த பரத்துவாசமுனிவன், 'இவ்வழி எம்மோடு ஒருங்கினில் உறையும்' என்பது பொருந்துவதாயில்லை; அன்றியும் நீர் முதலியவை (இங்கே) நிறைந்துள்ளன என்று இடம் வருவித்துரைக்க வேண்டியதாயுளது; மேலும் ஒரு தொடராக வரும் இரண்டு பாடலில் பின்பாட்டில் 'இருத்தி ஈண்டு' என்று முனிவன் தன் விருப்பத்தை வெளியிடுதலால் இப் பாடலில் எம்மோடு உறையும் என்பது மிகையாகும்; ஆதலால் 'ஈண்டு இருத்தி' என்று கூறும் முனிவன் அதற்குரிய காரணங்களை விவரிக்கும் முறையில் முன்னே இயைத்துக் காட்டியுரைத்த பொருளே அமைவுடையதாதல் காணலாம். (30)

2118. கங்கை யாளொடு கரியவ
ளுமகள் கலந்த
சங்க மாதலிற் பிரியலென்
ருமரைச் செங்க
ணங்க ணுயக வயனுக்கு
மரும்பெறற் றீர்த்த
மெங்கள் போலியர் தரத்ததன்
றிருத்தியீண் டென்ருன்.

"கங்கையாளொடு கரியவள் நாமகள் கலந்த
சங்கம் ஆதலின் பிரியலென்; தாமரைச் செங்கண்
அம் கண் நாயக! அயனுக்கும் அரும்பெறல் தீர்த்தம்
எங்கள் போலியர் தரத்தது அன்று; இருத்தி ஈண்டு" என்ருன்.

பொ :—"செந்தாமரைக் கண்களையும் அழகிய கண்ணேட்டத்தினையும் உடைய தலைவனே! (இவ்விடம்) கங்கையாற்ருெடு யமுனையாறும் சரசுவதியாறும் கூடிய முக்கூடலாகும்; ஆதலால் யான் இவ்விடம் விட்டுப் பிரியேன்; இச்சங்கமத்துறைநீர் அயனுக்கும் பெறுதற்கரிய தீர்த்தமாகும்; எம்போல்வார் எளிதின் அடைதற்குரிய நிலைமையதன்று; ஆதலால் நீ இங்கே தங்குக" என்று கூறினன்.

கு :—இதனுல் தலச்சிறப்பும் தீர்த்தப்பெருமையும் கூறியவாறு. கடலை நாயகனுகவும் ஆறுகளை நாயகிமாராகவும் கூறும் முறைபற்றிக் கங்கையாள், கரியவள், நாமகள் எனப் பெண்பாலாகக் கூறினுர். கங்கை யமுனை சரசுவதி என்னும் மூன்று ஆறுகளும் கூடிய நீர்த்துறை திரிவேணீ சங்கமம் என்றும், கூடிய தலம் பிரயாகை என்றும் வழங்கப்படும். மூன்று ஆறுகள் கூடிய தலமும் நீர்த்துறையும் முக்கூடல் என்று வழங்குவது தமிழ்வழக்கு. தாமரைச் செங்கண் அங்கண் நாயக! என்றது, புருடோத்தமன் என்று காட்டும். செந்தாமரை மலர்போன்ற வெறுங் கண்ணழகு மட்டுமன்றி, அக்கண்ணுக்கு அணிகலமான கண்ணேட்டமும் உடைய தலைவனே! என்றவாறு. இராமன் பக்கல் கண்ணேட்டம் இயல்பாய் அமைந்தமை பின்வரும் கதைப்பகுதிகளாலும் அறியத்தகும். 'கருமஞ் சிதையாமல் கண்ணேடவல்லார்க்கு', 'ஒறுத்தாற்றும் பண்பினுர்' (578, 579) என்னும் குறட்பாக்களுக்கு எடுத்துக்காட்டாகத் தக்கவனும் அப்பெருமான் எனின் மிகையாகாது. அம்கண்—அழகிய கண்ணேட்டம். 'அங்கண் உடையன் அவன்' (37) என்னும் கலித்தொகையடிக்கு நச்சினுர்க்கினியர் எழுதிய உரையும் இங்கு நோக்கத்தகும். உன்னெடு பழகிய யான் கூறுவதை மருது ஏற்றுக்கொள்ள வேண்டும் என்னும் குறிப்பமைய 'அங்கண் நாயக' என்ருன். கண்

ணோட்டம் என்பதற்கு, "தன்னொடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறு வனவற்றை மறுக்கமாட்டாமை; இஃது அவர்மேற் கண்சென்றவழி நிகழ்வதாகலின் அப்பெயர்த்தாயிற்று" என்று பரிமேலழகர் தரும் விளக்கமும் நோக்குக. (31)

இராமன் கூறிய மறுமாற்றம்

2119. பூண்ட மாதவ னம்மொழி
விரும்பினன் புகல
நீண்ட தன்றிது நிறைபுன
னாட்டுக்கு நடுவா
மாண்ட சிந்தைய விவ்வழி
வைகுவெ னென்றா
லீண்ட யாவரு நெருங்குவ
ரென்றன னிராமன்.

பூண்ட மாதவன் அம்மொழி விரும்பினன் புகல,
'நீண்டது அன்று இது, நிறை புனல் நாட்டுக்கு நடு ஆம்;
மாண்ட சிந்தைய! இவ்வழி வைகுவென் என்றால்,
ஈண்ட யாவரும் நெருங்குவர்' என்றனன், இராமன்.

பொ:—பெருந்தவத்தை மேற்கொண்ட பரத்துவாசமுனிவன், அந்தமொழியை விரும்பிக்கூற, இராமன், (அம்முனிவனைநோக்கி) மாட்சிமைப்பட்ட மனம் உடையவனே! இம்முக்கூடல் நிறைந்த நீர்வள முடைய கோசலநாட்டுக்கு நெடுந்தூரத்தது அன்று; அந்நாட்டின் இடைப்பட்டது. இங்கே நான் தங்கினேனானால், (நாட்டுமக்கள்) யாவரும் வந்து நிறைவார்கள்' என்று கூறினான்.

கு:—அம்மொழி என்றது 'இருத்தியீண்டு' என்றதனை. 'சீதை மணவாளன்றன்னோடுந் தீக்கானம் போதும்', 'பிறந்துலகம் முற்றுடைய கோவைப் பிரியாது மொய்த்தீண்டி உற்றுறைதும் யாரும் உறையவே சின்னாளில் புற்றுடைய காடெல்லாம் நாடாகிப்போம்' (1798, 1802) என்று தன்னைத் தொடர்ந்துவந்த மக்கள் கருத்தை நன்கறிந்தவனாதலின் 'ஈண்ட யாவரும் நெருங்குவர்' என்றான். ஈண்ட—விரைவாக. 'ஈண்ட யாவரும் நெருங்குவர் என்றது, அவ்வாறு நெருங்குதலால் என் தவவொழுக்கத்துக்கும் நும் தவவொழுக்கத்துக்கும் இடர்ப்பாடு நிகழும் என்றவாறு. அவ்விடர்ப்பாடு நேராமல் தவம் இனிது செய்யத்தக்க தலமாக மொழிந்தருளுக என்பது பெறப்படும். (32)

பரத்துவாச முனிவன் மீட்டும் பகர்தல்

**2120.** ஆவ துள்ளதே யையகேள்
ஐயிரண் டமைந்த
காவ தப்பொழிற் கப்புறங்
கழிந்தபின் காண்டி
மேவு காதலின் வைகுதி
விண்ணினு மினிதாத்
தேவர் கைதொழுஞ் சித்திர
கூடமென் றுளதால்.

'ஆவது உள்ளதே! ஐய! கேள், ஐயிரண்டு அமைந்த
காவதப் பொழிற்கு அப்புறம் கழிந்தபின் காண்டி,
மேவு காதலின் வைகுதி, விண்ணினும் இனிதாத்
தேவர் கைதொழும் சித்திரகூடம் என்று உளது ஆல்.'

பொ :—(பரத்துவாச முனிவர் இராமனை நோக்கி), 'ஐய! நீ கூறியது பொருந்தியது; மெய்யே. நான் சொல்வதனைக் கேள்; பத்துக்காத அளவில் பொருந்திய இவ்வனம் கடந்தபின், (புண்ணியம் புரிந்தோர் இன்பந் துய்க்கும் இடமான) விண்ணுலகத்தினும் இனியதென்று தேவர்கள் வணங்கும் சித்திரகூடம் என்ற பெயரால் சிறப்பித்துப் பேசப்படுகிற ஒரு மலை உண்டு; அதனை நீ காண்பாய்; அங்கே விருப்பொடு தங்குக.'

கு :—'வைகுதி' என்று காதலின் ஏயினன்; என அடுத்த செய்யுளுடன் இயைத்து முடிவுகொள்க. அது என்றது, 'நீண்டதன்றிது நிறைபுனல் நாட்டுக்கு நடுவாம்; இவ்வழி வைகுவென் என்றால், ஈண்ட யாவரும் நெருங்குவர்' என்ற இராமன் கூற்றைச் சுட்டி நின்றது. காவதம் - காதம். இச்செய்யுளால் பரத்துவாசராச்சிரமத்திலிருந்து சித்திரகூடம் பத்துக்காத தூரத்துக்கு அப்பாலுள்ள தென்று தெரிகிறது. பரத்துவாசராச்சிரமத்திலிருந்து பத்துக்குரோச தூரத்தில் சித்திரகூடம் உள்ளதென்கிறது வான்மீகம். (33)

இராமன் முதலியோர் பரத்துவாசமுனிவனிடம் விடைபெற்றுச் சென்று யமுனைக்கரையடைதல்

**2121.** என்று காதலி னேயின
னடிதொழு தேகிக்
கொன்றை யங்குழற் கோவலர்
முல்லையுங் குறுகிச்

சென்று செங்கதிர்ச் செல்வனு
நடுவுறச் சிறுமான்
கன்று நின்றுகள் கரையுடைக்
காளிந்தி கண்டார்.

என்று காதலின் ஏயினன்; அடிதொழுது, ஏகிக்
கொன்றை அம் குழல் கோவலர் முல்லையும் குறுகிச்
சென்று, செங்கதிர்ச் செல்வனும் நடு உறச் சிறு மான்
கன்று நின்று உகள் கரையுடைக் காளிந்தி கண்டார்.

பொ :—என்று கூறி, அன்பொடு விடை கொடுத்தனன்; (இராமன் முதலியோர்) அம்முனிவனை அடிவணங்கிச் சென்று கொன்றைப் பழத்தாற் செய்த குழலையுடைய ஆயர்கள் உறையும் முல்லை நிலத்தையும் அடைந்து கடந்து, சூரியன் உச்சியையடைய (அந்நண்பகற் போதில்) சிறிய மான்கன்றுகள் நின்று துள்ளும் கரையையுடைய யமுனையாற்றைக் கண்டனர்.

கு :—ஏயினன்-(செல்ல) விடை கொடுத்தான். கொன்றை அம் குழல் என்பதனுள் அம் சாரியை. கொன்றைப் பழத்தைக் குடைந்து துளையிட்டுக் குழல் அமைத்தலும் உண்டு. 'கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழி' (ஆய்ச்சியர் குரவை) என்பது சிலப்பதிகாரம். முல்லையும் என்பதனுள் உம்மை எச்சப் பொருளில் பயின்றது. மருதம் கடந்ததோடு முல்லையையும் கடந்து சென்று என்றவாறு. உகளுதல்-துள்ளுதல். காளிந்தி-யமுனை. தொழுது, ஏகி, குறுகி, சென்று, கண்டார் என இயையும். இராமன் முதலியோர் என எழுவாய் வருவித்துரைக்க. (34)

## இராமன் முதலியோர் யமுனை நதியைக் கண்டு கடத்தல் 2122-2123

**2122.** ஆறு கண்டன ரகமகிழ்ந்
திறைஞ்சின ரறிந்து
நீறு தோய்மணி மேனியர்
நெடும்புனல் படிந்தா
ரூறு மென்கனி கிழங்கினோ
டுண்டுநீ ருண்டா
ரேறி யேகுவ தெங்ஙன
மென்றலு மிளையோன்.

ஆறு கண்டனர், அகம் மகிழ்ந்து இறைஞ்சினர், அறிந்து,
நீறு தோய் மணி மேனியர், நெடும் புனல் படிந்தார்,
ஊறும் மென் கனி கிழங்கினேடு உண்டு நீர் உண்டார்;
'ஏறி ஏகுவது எங்ஙனம்?' என்றலும் இளையோன்.

பொ :—வழி நடையால் புழுதிபடிந்த அழகிய மேனியையுடைய இராமன் முதலியோர் யமுனையாற்றைக் கண்டு மனமகிழ்ந்து வணங்கி, தாம் செய்ய வேண்டியவற்றை எண்ணி, அவ்வாற்றின் மிக்க நீரிலே நீராடி, சுவை மிக்க மெல்லிய பழங்களையும் கிழங்குகளையும் உண்டு நீரும் பருகினர்; பின் 'இவ்வாற்றைக் கடந்து செல்வது எப்படி?' என்று இராமன் கூறின அளவில், இளையோனை இலக்குவன்.

கு :—இதுவும் பின்வரும் பாடலும் ஒரு தொடர். இளையோன், இரு கையால் நீந்தி நீங்கினன் என அடுத்த பாடலில் முடியும். (35)

**2123.** வாங்கு வெங்கழை துணித்தனன்
மாணையின் கொடியா
லோங்கு தெப்பமொன் றமைத்ததி
னும்பரி னுலம்போல்
வீங்கு தோளண்ண றேவியொ
டினிதுவீற் றிருப்ப
நீங்கி னனந்த நெடுநதி
யிருகையா னீந்தி.

வாங்கு வெம் கழை துணித்தனன், மாணையின் கொடியால்
ஓங்கு தெப்பம் ஒன்று அமைத்து, அதின், உம்பரின் உலம்போல்
வீங்கு தோள் அண்ணல் தேவியொடு இனிது வீற்றிருப்ப,
நீங்கினன் அந்த நெடுநதி இரு கையால் நீந்தி.

பொ :—வளைந்த வலிய மூங்கில்களை வெட்டி (அவற்றை) மாணைக் கொடியாற் பிணைத்து நல்லதொரு தெப்பம் ஆக்கி, அதன் மீது திரண்ட கல்லை யொத்த பெருத்த தோள்களையுடைய இராமன் சீதா பிராட்டியாரோடு சுகமாக எழுந்தருளியிருக்க, (அந்தத் தெப்பத்தைச் செலுத்திக் கொண்டே) அந்தப் பெரிய ஆற்றைத் தன் இரண்டு கைகளாலும் நீந்திக் கடந்தான்.

கு ;—வாங்குதல்-வளைதல். கழை-மூங்கில். துணித்தனன் முற்றெச்சம். மாணை-ஒருவகைக்கொடி. உம்பர்-மேல். உலம்-திரண்ட கல். வீங்குதல்-பருத்தல். இளையோன் நீங்கினன் என முன் பாட்டிலிருந்து

எழுவாய் வருவித்து முடிக்க. தெப்பத்தைக் கைகளால் தள்ளிச் செலுத்திக்கொண்டே நீந்திக் கடந்தான் என்க. இராமனும் இலக்குவனும் தெப்பத்தை அமைத்தனர். இருவருமே தெப்பத்தைச் செலுத்திக்கொண்டு அக்கரையடைந்தனர் என்பது வான்மீகத்திற் கண்டது. (36)

### இலக்குவன் நீந்தியதன் விளைவு

**2124.** ஆலை பாய்வய லயோத்திய
ராண்டகைக் கிளையான்
மாலை மால்வரைத் தோளெனு
மந்தரந் திரியக்
காலை வேலையி னுற்றது
கழிந்தநீர் கடிதின்
மேலை வேலையிற் பாய்ந்தது
மீண்டநீர் வெள்ளம்.

ஆலை பாய் வயல் அயோத்தியர் ஆண்டகைக்கு இளையான்
மாலை மால் வரைத் தோள் எனும்மந்தரம் திரியக்
காலை வேலையின் உற்றது, கழிந்த நீர்; கடிதின்
மேலை வேலையில் பாய்ந்தது; மீண்ட நீர் வெள்ளம்.

பொ :—கரும்பாலைகளினின்று சாறு பாயும் வயல்களையுடைய அயோத்தியில் உள்ளார் தலைவனாகிய இராமனுக்குத் தம்பியான இலக்குவனுடைய மாலையையணிந்த தோளாகிய பெரிய மந்தர மலை திரிதலால், (அவ்விலக்குவன் இறங்கிய துறையைக்) கடந்து சென்ற நீர் கீழைக் கடலை அடைந்தது; திரும்பிய வெள்ளநீர், மேலைக் கடலிற் பாய்ந்தது.

கு :—ஆலையென்றது ஆகுபெயராய்க் கருப்பஞ்சாற்றினை உணர்த்தியது. மாலைத்தோள் எனும் மந்தர மால்வரை திரிய-என இயைக்க. பின் 'மேலை வேலை' என்றமையால் காலை வேலை என்றது கீழ்கடலை யுணர்த்திநின்றது. மீண்ட வெள்ள நீர் என்க. மேலை வேலை-மேல் கடல். தோள் தடுத்தமையால் மேலும் நீர் வரவின்மையின் கழிந்த நீர் என்றார். தோள் தடுத்தமையால் தடைப்பட்டுத் திரும்பிய நீரொடு மேலும் நீர்வந்து சேர்தலால் அதனை மீண்ட நீர் வெள்ளம் என்றார். (37)

சுரம் புகுதல்

2125. அனைய ரப்புன லேறின
ரக்கரை யணைந்தார்
புனையும் வற்கலைப் பொற்பினர்
நெடுநெறி போனார்
சினையு மூலமு முகடும்வெந்
திருநிலந் தீய்ந்து
நினையு நெஞ்சமுஞ் சுடுவதோர்
நெடுஞ்சுர நேர்ந்தார்.

அனையர் அப் புனல் ஏறினர், அக்கரை அணைந்தார்,
புனையும் வற்கலைப் பொற்பினர், நெடுநெறி போனார்,
சினையும் மூலமும் முகடும் வெந்து இரு நிலம் தீய்ந்து
நினையும் நெஞ்சமும் சுடுவதோர் நெடுஞ்சுரம் நேர்ந்தார்.

பொ :—அணிந்துகொண்ட மரவுரியாலுளதாய அழகினையுடையராகிய அவ்விராமன் முதலியோர், அந்த யமுனை நீரைக் கடந்து அக்கரை எய்தியவராய், நீண்ட (காட்டு) வழியிற் சென்று, கிளைகளும் வேரும் வான்முகடும் வெந்து, பெரிய நிலமும் கொதிப்புற்று, எண்ணும் மனத்தினையும் சுடும் ஒரு பெரிய பாலை நிலத்தை அடைந்தார்கள்.

கு :—புனையும் வற்கலைப் பொற்பினர் அனையர் என இயையும். வற்கலை–மரவுரி. சினை–கிளை. மூலம்-வேர். முகடும் வெந்து என்பதனோடு 'வான்முகடும்வேம்' (347) என்று பாலையை முன்னர்க் கூறியதும் காண்க. 'நினையும் நெஞ்சமும் சுடுவது' என்றமையால், அச்சுரம், காணும் கண்ணையும் பேசும் நாவையும் சுடும் என்பது போதரும். இங்கு, 'எரிசுடர்க் கடவுளும் கருதின்வேம் உள்ளமும் காணின்வேம் நயனமும்', 'படியின்மேல் வெம்மையைப் பகரினும் பகரும் நா-முடியவேம்' (346, 347) என ஆசிரியர் முன்னே கூறியதும், 'சுட்டினும் பனிக்கும் சுரம்' (மலைபடுகடாம் 310) என்ற சான்றோர் கூற்றும் நோக்கத்தகும். (38)

இராமன் நினைவால் பாலை மாறிய பரிசு 2126-2133

2126, நீங்க லாற்றலள் சனகியென்
றண்ணலு நினைந்தா
னோங்கு வெய்யவ னுடுபதி
யெனக்கதி ருகுத்தான்

ருங்கு வெங்கடத் துலவைக
டழைகொண்டு தழைத்த
பாங்கு வெங்கனல் பங்கய
வனங்களாய்ப் பரந்த.

'நீங்கல் ஆற்றலள் சனகி' என்று அண்ணலும் நினைந்தான்,
ஓங்கு வெய்யவன் உடுபதி எனக் கதிர் உகுத்தான்;
தாங்கு வெம் கடத்து உலவைகள் தழை கொண்டு தழைத்த;
பாங்கு வெம் கனல் பங்கய வனங்களாய்ப் பரந்த!

பொ:—பெருமையிற் சிறந்தோனான இராமனும், 'சானகி இந்தச் சுரநெறியைக் கடந்து செல்லும் ஆற்றல் உடையளல்லள்' என்று நினைய, மிக்க வெப்பத்தை விளக்கும் (கதிர்களையுடைய) சூரியன் சந்திரனைப் போலக் குளிர்ந்த கதிர்களைப் பொழிந்தான்; அதனால், வெம்மையேற்ற சுரத்தின்கண் உள்ள பட்டகட்டைகள் தழைகளையேந்தித் தழைத்தன; கொடிய எரிவிரவிய இடங்கள், தாமரைக் காடுகளாய்ப் பரவின!

கு:—இப்படலத் தொடக்கத்தே ஆரியன்வரலால் இளவேனில் 'கார் உறு குறிபோலக் காட்டியது' என்றார். இங்கே அண்ணல் நினைவால் வேனிலும் பாலையும் இனியனவாக மாறிய நிலை பேசப்படுகிறது. ஓங்கும் வெய்யவன் என்பதனால் நண்பகல் என்பது பெறப்படும். உடு-நாண்மீன்; உடுபதி–நாண்மீன்களுக்கு நாயகன்-சந்திரன். கடம்-பாலைநிலத்துவழி. உலவை-பட்டகட்டை. வெம்கனல் பாங்கு என இயையும். பங்கயவனம் தாமரைக்காடு. வெம்கனல்பாங்கு பங்கயவனங்களாய்ப் பரந்த என்றது எரிவிரவிய இடங்கள் தாமரை விரவிய தடங்கள்போலக் குளிர்ந்தன என்றவாறு. பாலகாண்டத்தில் ஒரு பாலைவனக் காட்சி பேசப்பட்டது. அங்கே விசுவாமித்திர முனிவனைத் தொடர்ந்து இராமனும் இலக்குவனும் சென்றனர். இப்பாலையைக் கடத்தலில் இவர் சிறிது வருந்துவரென்று அருந்தவன் நினைந்தான். நினைந்து இரண்டு மந்திரங்களை இராமலக்குவர்க்கு உபதேசித்தான்; அவர்கள் அம்மந்திரங்களை நினைந்த அளவில் சுரத்திடைச் செலவு புனலிடைச் சேறல் ஒத்தது. இங்கே இராமனைத் தொடர்ந்து பிராட்டியும் இலக்குவனும் செல்லுகின்றனர்; பாலை எதிர்ப்படுகிறது. சனகியால் வனங்கடத்தல் இயலாது என்று அண்ணலான இராமன் நினைகிறான். பாலைவனம் பங்கயவனமாகிறது. இங்கே பாலை எதனால் குளிர்ந்தது என்பது 2131–ஆம் பாடலிற் பேசப்படுகிறது. (39)

2127. வறுத்து வித்திய வனையன
வல்லயிற் பரல்கள்
பறித்து வித்திய மலரெனக்
குளிர்ந்தன பசைந்த
விறுத்தெ ரிந்தன வல்லிக
ளிளந்தளி ரீன்ற
கறுத்த வாளர வெயிற்றினூ
டமுதுகக் களித்த.

வறுத்து வித்திய அனையன வல் அயில் பரல்கள்,
பறித்து வித்திய மலர் எனக் குளிர்ந்தன பசைந்த;
இறுத்து எரிந்தன வல்லிகள் இளம் தளிர் ஈன்ற;
கறுத்த வாள் அரவு எயிற்றினூடு அமுது உகக் களித்த,

போ :—வறுத்துப் பரப்பிவைத்தனவற்றை ஒத்தனவான வலிய கூரிய பருக்கைக் கற்கள், பறித்துப் பரப்பிய மலர்போலக் குளிர்ந்து ஈரமும் உடையவாயின; ஒடிக்கப்பட்டுக் கரிந்துபோன கொடிகள், பசுந்தளிர்களையுடையவாயின; சினந்த கொடிய பாம்புகளும் பல்லினின்று அமுதம் சிந்த(ச் சினம்நீங்கி) மகிழ்ந்தன.

கு :—வித்தல்-பரப்புதல்; 'விளியாக் குணத்துதிநாம் வித்தாவாறென்னே' (1611) என்பது சீவகசிந்தாமணி. வல் அயில் பரல்கள் என்பதற்குக் கொடிய வேல்போலும் (-கூரிய) பரல்கள் என்று பொருளுரைத்தலும் அமையும். பாலை நிலத்துப் பரல்கள், "நுதிகொண்டன வெம்பரல் நுண்ணிலைவேல், பதிகொண்டு பரந்தன போன்றுள" (சீவகசிந்தாமணி. 1186) என்று திருத்தக்கதேவராலும், "கொடுங்கதிரோன் துன்னுவெயில் வறுத்த வெம்பரல்" (பெரியதிருமடல். 50) என்று திருமங்கையாழ்வாராலும், "பொருந்தார்கைவேல் நுதிபோல் பரல்" (பெருமாள் திருமொழி. 9-5.) என்று குலசேகராழ்வாராலும், "அரநுதியன்ன பரல்", "உளித்தலை வெம்பரல்" (பெருங்கதை. 1-52. 6, 53. 164) என்று கொங்கு வேளிராலும் பேசப்பட்டன. பசைதல்-ஈரமுடையவாதல். இறுத்தல்-ஒடித்தல். கறுத்தல்-வெகுளல். (40)

2128. குழுமி மேகங்கள் குமுறின
குளிர்துளி கொணர்ந்த
முழுவில் வேடரு முனிவரின்
முனிகில ருயிரைத்

தழுவி நின்றன பசியில
பகையில தணிந்த
வுழுவை யின்முலை மானிளங்
கன்றுக ளுண்ட.

குழுமி மேகங்கள் குமுறின குளிர் துளி கொணர்ந்த;
முழு வில் வேடரும் முனிவரின் முனிகிலர்; உயிரைத்
தழுவிநின்றன பசி இல பகை இல தணிந்த;
உழுவையின் முலை மான் இளங் கன்றுகள் உண்ட.

பொ:—(அப்பாலைவனத்தில்) மேகங்கள் திரண்டு முழங்கிக் குளிர்ந்த நீர்த்துளிகளைக் கொண்டு வந்தன; குறைவற்ற வில்லையுடைய வேடர்களும், முனிவர்களைப்போல் சினமில்லாதவராயினர்; உயிரோடு கூடியிருந்தவை, பசியற்றனவும் பகையற்றனவுமாய் நிறைந்தன; இளைய மான் கன்றுகள் பெண் புலியின்பால் முலையுண்டன.

கு:—குழுமுதல் - திரளுதல். தணிதல் – நிறைதல்; 'தணிபொன் சொரியும்' (25) என்பது தஞ்சைவாணன் கோவை. உழுவையென்பது இங்கே பெண்புலியை உணர்த்தி நின்றது. (41)

**2129.** கல்ல ளைக்கிடந் தகடுவெந்
தயர்கின்ற கதழ்பாம்
பல்ல லுற்றில வலைபுனற்
கிடந்தன வனைய
வல்லை யுற்றவேய் புற்றெடு
மெரிவன மணிவாழ்
புல்லெ யிற்றிளங் கன்னியர்
தோளெனப் பொலிந்த.

கல்லளைக் கிடந்து அகடு வெந்து அயர்கின்ற கதழ் பாம்பு
அல்லல் உற்றில, அலை புனல் கிடந்தன அனைய;
வல்லை உற்ற வேய் புற்றெடும் எரிவன, மணிவாழ்
புல் எயிற்று இளங்கன்னியர் தோள் எனப் பொலிந்த.

பொ:—கல்லிடுக்குகளில் கிடந்து (பசியால்) வயிறு கொதித்துச் சோர்வுறுகின்ற சினங்கொண்ட பாம்புகள், அலையொடு கூடிய நீரிற் கிடந்தவற்றைப் போல்வனவாய்த் துன்புறாதனவாயின; புற்றுக்களோடும் எரிவனவாகிய பெருங் காட்டிலுள்ள மூங்கில்கள், சிறிய பற்களை

யுடைய இளைய எயிற்றியருடைய மாணிக்க மணிகள் (இழைத்த அணி கலன்கள்) பொருந்திய தோள்களைப்போல் விளங்கின.

கு :—கல்லளை - கல்லிடுக்கு; மலைக் குகையும் ஆம். அகடு – வயிறு. கதழ்தல்-சினத்தல். அகடு வெந்தயர்கின்ற கதழ்பாம்பு என்பதனெடு ‘புழுங்கு வெம்பசியொடு புரளும் பேரரா’ (352) என முன்கூறிய தும் காண்க. வல்லை—பெருங்காடு. புல் எயிறு-சிறிய பல். ‘வல்லையுற்ற வேய் புற்றெடு மெரிவன’ என்பதனேடு, ‘தழையிலா வேய்பிளந்துக்க வெண்டரளமும்’ (349) என முன்னே கூறியதும் நோக்கத்தகும். (42)

**2130.** படர்ந்தெ ழுந்தபுல் பசுநிறக்
கம்பளம் பரப்பிக்
கிடந்த போன்றன கேகயந்
தோகைகள் கிளர
மடந்தை மாரென நாடகம்
வயின்றொறு நவின்ற
தொடர்ந்து பாணரிற் பாங்கிசை
முரன்றன தும்பி.

படர்ந்து எழுந்த புல், பசுநிறக் கம்பளம் பரப்பிக்
கிடந்த போன்றன; கேகயம், தோகைகள் கிளர,
மடந்தைமார் என நாடகம் வயின்றொறும் நவின்ற;
தொடர்ந்து பாணரில் பாங்கு இசை முரன்றன தும்பி.

பொ :—பரவி வளர்ந்த புற்கள், பச்சைக் கம்பளம் விரித்துக் கிடந் தவைபோல விளங்கின; அங்கே மயில்கள், நாடக மகளிரைப் போல, இடந்தொறும் இடந்தொறும் தோகைகள் விளங்க நாடகம் நடித்தன ; அந்நடனத்தைத் தொடர்ந்து பாணரைப் போலத் தும்பிகள் பக்கத்தே இசை பாடின.

கு :—கேகயம் – மயில். கிளர்தல் – விளங்குதல். வயின் – இடம். பாங்கு - பக்கம். (43)

பாலை வெம்மை நீங்கிய காரணம்

**2131.** கால மின்றியுங் கனிந்தன
கனிநெடுங் கந்தம்
மூல மின்றியு முகிழ்த்தன
நிலனுற முழுதும்

கோல மங்கைய ரொத்தன
கொம்பர்க ளிம்பர்ச்
சீல மன்றியுஞ் செய்தவம்
வேறுமொன் றுளதோ.

காலம் இன்றியும் கனிந்தன கனி; நெடுங் கந்தம்
மூலம் இன்றியும் முகிழ்த்தன; நிலன் உற முழுதும்
கோல மங்கையர் ஒத்தன கொம்பர்கள்; இம்பர்ச்
சீலம் அன்றியும் செய் தவம் வேறும் ஒன்று உளதோ?

பொ :—அந்தப் பாலை நிலம் முழுவதிலும், பழவகைகள், வேறுபட்ட பருவத்திலும் மிகவும் பழுத்தன; பெரிய கிழங்குகள் வேரில்லாத நிலையிலும் மிகவும் தோன்றின; (கோடையால் வாடித் தளிரும் இலையும் கருகி உதிர்ந்து நின்ற) கொம்புகள், மிகவும் தளிர்த்துத் தழைத்து அரும்பி மலர்ந்து ஒப்பனை செய்யப்பெற்ற மகளிரை ஒத்து விளங்கின; ஆதலால், நல்லொழுக்கமன்றியும் இவ்வுலகிற் செய்யத்தக்க தவம் பிறிதும் ஒன்று இல்லை.

கு :—காலம் இன்றியும் கனிந்தன கனி என்றது, (எல்லா மரங்களும் எல்லாக் காலத்தும் பழந்தருதல் இல்லை. ஓரொரு காலத்தில் ஓரொரு மரம் பழம் தருவது உண்டு.) இந்தச் சுரநெறியில் இராமன் புக்கபோது எல்லா மரங்களும் மிக்க பழங்களையுடையனவாயின என்றவாறு. காலமின்றியும் நிலன் முழுதும் உறக்கனிந்தன எனவும், நிலன் முழுதும் மூலம் இன்றியும் கந்தம் உற முகிழ்த்தன எனவும், (கோடையால் வாடித் தளிரும் இலையும் உதிர்ந்து கருகி நின்ற நிலையிலும்) நிலன் முழுதும் கொம்புகள், (மிகவும் தளிர்த்துத் தழைத்து அரும்பிப் பூத்துக்) கோலமங்கையர் ஒத்தன எனவும் இயைக்க. கனி கிழங்குகளுக்குக் கூறியவற்றுக்கு இசையக் கொம்புகளுக்கும் ஏற்றவை கூட்டியுரைக்கலாயிற்று. இவ்வாறு காலமல்லாத காலத்திலும் மரங்கள் கனியுதவியதும் பிறவும் எதனுல் விளைந்தன என்று ஆராயத் தொடங்கி, தவம் 'வேண்டிய வேண்டியாங் கெய்துவிக்கும்; அதனுல் விளைந்தன எனின் இராமன் துறவியல்லன்; பின் எதனுல் விளைந்தன எனின், 'நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்' என்றமையால் இந்நிகழ்ச்சி இராமன் மேற்கொண்ட நல்லொழுக்கத்தானுயது என்று துணிந்து, 'சீலமன்றியும் செய்தவம் வேறும் ஒன்றுளதோ' என்று முடிவு கூறுவாராயினர். உளதோ என்பதில் ஓகாரம் எதிர்மறைப் பொருள் உணர்த்தியது. துன்பம் தரும் நிலத்தையும் இவ்வாறு இன்பம் தரும் நிலமாக்கிய சீலமன்றி அதனினும் சிறந்த தவம் வேறு ஒன்றும் இல்லை. ஆதலால் அவ்வொழுக்கமே பேணிக் காக்கத்தக்கது என்று கதைப்போக்கில் அரும்பெறலுறுதியொன்றும் ஆசிரியரால் உணர்த்தப்பட்டது. 'சீலமன்றியும் செய்தவம்

வேறுமொன்றுளதோ' என்பது சிங்க நோக்காய் முன்பின் பாடல்க ளோடு இணைத்துக்கொள்ள நின்றது. நல்லொழுக்கத்தின் உயர்வு, "ஒன்றுரைத் துயிரினும் ஒழுக்கம் நன்றெனப், பொன்றிய புரவலன்" (திருவடிசூட்டு படலம். 24) என்று பின்னும் ஆசிரியரால் இவ்வாறே கூறப்படுதல் காணலாம். (44)

**2132.** எயினர் தங்கிட மிருடிக
ளிருப்பிட மேய்ந்த
வயின்வ யின்றொறு மணிநிறக்
கோபங்கண் மலர்ந்த
பயின்ம ரந்தொறும் பிரிந்தன
பேடையைப் பயிருங்
குயிலி ரங்கின குருந்தநின்
றரும்பின முருந்தம்.

எயினர் தங்கு இடம் இருடிகள் இருப்பிடம் ஏய்ந்த;
வயின் வயின் தொறும் மணி நிறக் கோபங்கள் மலர்ந்த;
பயில் மரம் தொறும் பிரிந்தன பேடையைப் பயிரும்
குயில் இரங்கின; குருந்தம் நின்று அரும்பின முருந்தம்.

பொ :—வேடர்கள் தங்கும் இடங்கள் முனிவர்கள் தங்கும் இடங் களைப் போல விளங்கின; இடந்தொறும் இடந்தொறும் மாணிக்க நிறம் வாய்ந்த இந்திரகோபங்கள் பரவின. நெருங்கிய மரந்தொறும் பிரிந்த பேடையை அழைக்கும் குயில்கள் ஒலித்தன; குருந்த மரங்களில் மயிலிற கின் அடிக்குருத்துப் போலும் அரும்புகள் நிலைத்தனவாய் அரும்பின.

கு :—எயினர்-வேடர்=பாலை நிலத்தில் வாழ்வோர். வேடர் முனி வரைப் போல முனிவற்றவராயினர் என்று 2128-ஆம் பாட்டில் கூறிய ஆசிரியர், இப்பாட்டில் எயினர் இருப்பிடம் முனிவர் இருப்பிடம் போலத் தூயதாயிற்று என்று கூறுவாராயினர். எயினர் இருப்பிடம், கொலைக் கருவிகள், ஊன் முதலியவையின்றி, முனிவர் தவப்பள்ளிபோல, மலரும் காய்கனிகளும் கிழங்குகளும் நிரம்பித் தூயவாயின என்றவாறு மலர்தல் – பரவுதல். பயிலுதல் – செறிதல். பயிர்தல் – அழைத்தல். குருந்தம்–மரவகையுள் ஒன்று. முருந்து-மயில் இறகின் அடிக்குருத்து. குருந்தின் அரும்புக்கு மயிலிறகின் அடிக்குருத்து உவமை. (45)

## பாலை வெம்மை நீங்கிக் குளிர்ந்தமை

**2133.** பந்த ஞாட்புறு பாசறை
பொருள்வயிற் பருவந்
தந்த கேள்வரை யுயிருறத்
தழுவினர் பிரிந்த
கந்த வோதியர் சிந்தையிற்
கொதித்ததக் கழலோர்
வந்த போதவர் மனமெனக்
குளிர்ந்ததவ் வனமே.

பந்தம் ஞாட்பு உறு பாசறை பொருள்வயின் பருவம்
தந்த கேள்வரை உயிர் உறத் தழுவினர் பிரிந்த
கந்த ஓதியர் சிந்தையில் கொதித்தது, அக் கழலோர்
வந்த போது அவர் மனம் எனக் குளிர்ந்தது அவ் வனமே.

பொ :—தொடர்புடைமையால் போரில் பாசறையில் தங்கும் உற்றுழி யுதவி காரணமாகவும், பொருளீட்டுதல் காரணமாகவும், செல்லக் கருதித் தாம் மீண்டு வரும் பருவத்தைத் தெரிவித்த நாயகரை உயிரொடு பொருந்தத் தழுவிப் பிரிந்த நறுமணம் வாய்ந்த கூந்தலையுடைய மனையுறை மகளிர் மனம்போலக் கொதித்ததாகிய அப்பாலைவனம், (அவ்வாறு பிரிந்து சென்ற) வீரக் கழலையணிந்த தலைவர் (குறித்த பருவத்தே) மீண்டுவந்தபோது அம்மகளிர் மனம் குளிர்ந்தது போலக் குளிர்ந்தது.

கு :—பந்தம் – தொடர்பு. ஞாட்பு – போர். பாசறை - படை வீடு. பாசறைவயின் பொருள்வயின்: என இயையும். பருவம் தந்த—தாம் செய்வினை முடித்தும் செய்பொருள் முற்றியும் மீண்டு வரும் காலம் தெரிவித்த. கேள்வர் - நாயகர். கந்தம் – நறுமணம். ஓதி—கூந்தல். அக்கழலோர் என்றது மீண்டுவரும் பருவந் தந்து பிரிந்த தலைவரைச் சுட்டி நின்றது. நாயகர், உற்றுழியுதவுதற்கும் பொருளீட்டுதற்கும் சென்ற காலத்து அவரைப் பிரிந்த மகளிர் மனம் போலக் கொதித்த பாலை, அவர் செய்வினை முற்றியும் செய்பொருள் முற்றியும் மீண்டுவரக் கண்ட நிலையில் அம்மகளிர் மனம் குளிர்ந்ததுபோலக் குளிர்ந்தது என்றவாறு. இங்கே, "பண்டுவருங் குறிபகர்ந்து பாசறையிற் பொருள் வயினிற் பிரிந்துபோன, வண்டுதொடர் நறுந்தெரியல் உயிரனைய கொழுநர்வர மனித்தேரோடும் கண்டு மனம் களி சிறப்ப ஒளிசிறந்து மெலிவகலும் கற்பினர்போல்" (715) என ஆசிரியர் முன்னே கூறியதும், 'பொருள்தரப் போயினர்ப் பிரிந்த பொய்யுடற்கு உருள்தரு தேர்மிசை உயிர்கொண் டுய்த்தலாவ்' (கிட்கிந்தா. கார்காலப். 22) எனப் பின்னே கூறுவதும் நோக்கத்தகும். (46)

இராமன் முதலியோர் சித்திரகூட மலையைக் காணுதல்

2134. வெளிறு நீங்கிய பாலையை
மெல்லெனப் போனா
ரொளிறு வான்மதிக் குழவிதன்
சூல்வயிற் றுதைப்பப்
பிளிறு மேகத்தைப் பிடியெனப்
பெரும்பனைத் தடக்கை
களிறு நீட்டுமச் சித்திர
கூடத்தைக் கண்டார்.

வெளிறு நீங்கிய பாலையை மெல் எனப் போனார்,
ஒளிறு வான் மதிக் குழவி தன் சூல் வயிற்று உதைப்பப்
பிளிறும் மேகத்தைப் பிடியெனப் பெரும் பனைத் தடக்கை
களிறு நீட்டும் அச் சித்திரகூடத்தைக் கண்டார்,

பொ :—குற்றம் நீங்கி (நல்லதாகி)ய பாலை நிலத்தை மெல்லக் கடந்தவர்களாகிய இராமன் முதலியோர், விளக்கம் மிக்க வானிலுள்ள பிறைக்குழவி தன் கருக்கொண்ட வயிற்றில் உதைத்தலால் முழங்கு கின்ற மேகத்தைப் பெட்டை யானை என்று எண்ணி, (அதன் நோவுதீரத் தடவுவதுபோலக்) களிறு, பெரிய பனை போன்ற தன் கையை (மேகத்தை நோக்கி) நீட்டுகின்ற அந்தச் சித்திரகூட மலையைக் கண்டனர்.

கு :—வெளிறு-குற்றம். பாலைக்கு வெளிறுவது வெம்மையுடைமை. ஒளிறுதல் – விளங்குதல். மதிக்குழவி - பிறை. சூல்-கரு. மதிக்குழவி என்றதற்கேற்ப 'உதைப்ப' என்ற பாடம் கொள்ளலாயிற்று; கால் உதைத்தல் குழவிக்கு இயற்கையாதலின். பிளிறுதல்-முழங்குதல். மதிக் குழவியும் மேகமும் வானிற் றிரிபவை. அவை திரியுங்கால் ஒன்றுடன் ஒன்று மோதிக்கொள்ளுதல் இயல்பு. இங்கே சூல்முதிர் மேகமும் பிறைமதியும் ஒன்றையொன்று கிட்டி நெருங்கிய நிலையில் மேகம் இயல்பாக முழங்குதலை, மதிக்குழவி சூல்வயிற்றுதைத்தமையால் நொந்து மேகம் முழங்கியதாகக் கற்பனை செய்தவாறு. மேகத்தைப் பிடியெனக் கருதிக் களிறு தன் பெரும் பனைத்தடக்கை நீட்டும் சித்திர கூடம் என்றது அம்மலையின் வளமும் உயரமும் கூறியவாறு. (47)

வனம்புகு படலம் முற்றிற்று

# 8. சித்திரகூடப் படலம்

இராமன் முதலியோர் சித்திரகூட மலையை அடைந்து அங்கே தங்கியமை பேசுதலின் இப்பகுதி சித்திரகூடப் படலம் என்று பெயர் உடையதாயிற்று.

சித்திரகூடவரையை நெருங்கிய இராமன், அம்மலையின் வளங்களை யெல்லாம் சீதைக்குக் காட்டிக்கொண்டு செல்லுகிறான். அம்மலையில் உறையும் முனிவரர் இராமன் வரவுகண்டு அவனை எதிர்கொள்கின்றனர். இராமன் அம்முனிவர்பால் விருந்தினனாகிறான். சூரியன் அத்தமிக்கிறான். இராமன் முதலியோர் மாலை வழிபாடு புரிந்து, அம்முனிவர் பள்ளியிலேயே இரவைக் கழிக்கின்றனர். பொழுது புலர்கிறது. இலக்குவனால் அமைக்கப்பட்ட சாலையுள் இராமன் குடிபுகுகிறான். இராமன், வழி நடையிற் சோர்வுறாத சீதையின் அடித்திறமும், சாலை சமைத்த தம்பியின் கைத்திறமும் கண்டு, ‘யாதும் இலார்க்கு இயையாதன யாவை?’ என்று எண்ணி, இலக்குவனை நோக்கி, அவன் சாலையமைத்த வேலைத்திறத்தினை வியந்து, ‘உனக்கு நெடுநாள் துன்பம் விளைப்பவன் ஆவேன்’ என்கிறான். அதுகேட்ட இலக்குவன், இராமனுக்கு நேர்ந்த வனவாசத் துன்பதை எண்ணி வருந்துகிறான். இராமன், வனவாசத்தால் உளவாகும் நலங்களை உரைத்து இலக்குவனைத் தேற்றி, அச் சித்திரகூட மலையில் தேவரும் வணங்கும்படி விரதவொழுக்கங்களை மேற்கொண்டு தங்கினான் என்பது இப்படலத்தின் நுவல் பொருளாகும்.

இப்படலம் இரண்டு வகையான சந்தங்கள் அமைந்த 56 பாடல்களால் முற்றுப்பெறுகிறது. இதன் முற்பகுதி இராமன் சீதைக்குச் சித்திரகூட மலைவளங்களைக் காட்டிக் கூறுவதாக அமைந்தது. அதனுள் வரைக்காட்சிகள் அழகாகப் பேசப்பட்டுள்ளன.

பாலகாண்டத்துள், இராமன் திருமணத்துக்கு மிதிலை நோக்கிப் புறப்பட்ட தசரதன் வழியிடையே தங்கிய சந்திரசயில வரைக்காட்சிகளை, மகிழ்ச்சியில் திளைத்த மைந்தரும் மகளிரும் கண்டு இன்புற்றமை காணலாம். இராமன், அரசு துறந்து வனம்புகுந்தகாலத்துத் துன்பநிலை சிறிதுமின்றிச் சித்திரகூட வரைக்காட்சிகளைக் கண்டு, அவற்றைச் சீதைக்குக் காட்டி மகிழ்விப்பதனை இங்கே காணலாம். இவ்வரைக் காட்சிகளைக் கூறும் பாடல்கள் படித்து இன்புறத்தக்கன.

இப்படலத்தின் பிற்பகுதி இலக்குவன் அமைத்த பன்னசாலையின் அமைதியினை விரிக்கிறது. அச்சாலையினை,

'மாயம் நீங்கிய சிந்தனை மாமறை
தூய பாற்கடல் வைகுந்தம் சொல்லலாம் ஆயசாலை'

என்று வியந்து பேசும் பாடலொடு,

'முன்னமே துயின்றருளிய முதுபயோததியோ!
பன்ன காதிபப் பாயலோ! பச்சையாலிலையோ!
சொன்ன நான்மறைச் சுருதியோ! கருதி நீ எய்த
என்ன மாதவம் செய்ததிச் சிறுகுடில்'

என்று அத்தினபுரியில் தன் மாளிகையில் கண்ணன் புக்க பொழுது விதுரன் அம்மாளிகையினை வியந்து பேசுவதாக உள்ள வில்லிபுத்தூரர் பாடலும் நோக்கத்தகும்.

இடையே பேசப்படும் சூரியாத்தமன வருணனையும் மாலைக்கால வருணனையும் தனிச்சிறப்புடையன.

இப்படலத்துள் புகுந்த மிகைப் பாடல்கள் நான்கு.

இராமன், சித்திரகூட வரையில் சென்று தங்கிய செய்தி, வான்மீகத்தில் 41 சுலோகம் உள்ள 56-ஆம் சருக்கத்தில் பேசப்பட்டது. இராமன் முதலியோர் சித்திரகூட மலையில் வான்மீகி முனிவரின் ஆசிரமத்தை அடைந்து அம்முனிவரை வழிபட்டு ஆசிபெற்றமையும், 'மாலியவதீ' என்னும் ஆற்றைக் கண்டு மகிழ்ந்தமையும் வான்மீகத்தில் பேசப்பட்டுள்ளன. கம்பர் காவியத்தில் அவை பேசப்படவில்லை. இலக்குவன் அமைத்த பன்னசாலையில் இராமன் குடிபுகுங்கால் நிகழ்த்திய 'வாஸ்துசாந்தி' முதலிய சில சடங்குகளை வான்மீகி முனிவர் விரித்துக் கூறியுள்ளார். 'பொன்னிறத் திருவொடுங் குடிபுக்கான்' என்று கம்பர் சுருக்கிக் கூறியுள்ளார்.

---

# 8. சித்திரகூடப் படலம்

## இராமன் சீதாபிராட்டிக்குச் சித்திரகூட மலைவளம் காட்டல் 1—38

2135. நினையுந் தேவர்க்கு நமக்குமொத்
★ தொருநெறி நின்ற
வனக னங்கண ணுயிரம்
பெயருடை யமலன்
சனகன் மாமட மயிற்கந்தச்
சந்தனஞ் செறிந்த
கனக மால்வரை யியல்பெலாந்
தெரிவுறக் காட்டும்.

நினையும் தேவர்க்கும் நமக்கும் ஒத்து ஒருநெறி நின்ற
அனகன் அம் கணன் ஆயிரம் பெயர் உடை அமலன்
சனகன் மா மட மயிற்கு அந்தச் சந்தனம் செறிந்த
கனக மால் வரை இயல்பு எலாம் தெரிவுறக் காட்டும்.

பொ :—தன்னை நினையும் தேவர்களுக்கும் நமக்கும் ஒக்க ஒப்பற்ற நெறியாய் நின்ற தூயோனும் அழகிய கண்ணோட்டம் உடையவனும் ஆயிரம் பெயர்களை உடையவனும் குற்றம் அற்றவனும் ஆன இராமன், சனகன் பெற்ற சிறந்த இளைய மயில்போல்பவளான சீதைக்குச் சந்தன மரங்கள் அடர்ந்த பொன்மயமான பெரிய அந்தச் சித்திரகூட மலையின் இயல்பு முழுவதும் தெரியும்படி காட்டுவானாயினான்.

கு :—நெறி - உபாயம். ஒரு நெறி நின்ற அனகன் என்பதனோடு, "மெய்ந்நெறி நன்மையன் (3) என ஆசிரியர் முன்னே கூறியதும், 'நினையும் தேவர்க்கும் நமக்கும் ஒத்து' என்பதனொடு 'நெறிநீர்மையர் நீள்வானவர் நினையும் நினைவாகி' (தேவாரம். 1. 17. 6) என்னும் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பாசுரமும் நோக்கத்தகும். அனகன்-தூயோன். அமலன் - குற்றமற்றவன். அமலன், மயிலுக்கு வரை இயல்பெலாம் காட்டும் என முடியும். (1)

2136. வாளும் வேலும்விட் டளாயின
வனையகண் மயிலே
தாளி னேலமுந் தமாலமுந்
தழைதரு சார
னீள மாலைய துயில்வன
நீருண்ட கமஞ்சூற்
காள மேகமு நாகமுந்
தெரிகில காணாய்.

வாளும் வேலும் விட்டு, அளாயின அனைய கண் மயிலே!
தாளின் ஏலமும் தமாலமும் தழைதரு சாரல்,
நீள மாலைய துயில்வன, நீர் உண்ட கமம் சூல்
காளமேகமும் நாகமும் தெரிகில காணாய்!

பொ :—வாளின் தன்மையும் வேலின் தன்மையும் அவ்வாளினையும் வேலினையும் விட்டு நீங்கி வந்து கலந்தாற்போன்ற கண்களையுடைய மயில் போல்பவளே! தண்டினையுடைய ஏலச்செடிகளும் பச்சிலை மரங்களும் தழைத்த பக்கவரையின்கண், நீண்டவரிசையுடையன வாய்த் தங்கிய நீரை உட்கொண்ட நிறைந்த கருக்கொண்ட காளமேக மும் யானையும் (இது மேகம்; இது யானை என்று) அறிய முடியாதன வாய் உள்ளவற்றைக் காண்பாயாக.

கு :—வாள் வேல் என்பன ஆகுபெயராய் அவற்றின் தன்மையை உணர்த்தின. வாளின்தன்மை ஈர்தல். வேலின்தன்மை பாய்ந்து அழுந் தல். அளாவுதல் – கலத்தல். தாள் - தண்டு. ஏலம் – ஏலச்செடிகள், தமாலம் - பச்சிலைமரங்கள். சாரல் - பக்கவரை. நீளமாலை - நீண்ட வரிசை. துயிலுதல் – தங்குதல். 'திருத்துயில் பெற்ற மார்பன்' (1504) என்பது சீவக சிந்தாமணி. கமம் – நிறைவு. சூல் – கருப்பம். நாகம் – யானை. 'நீருண்ட கமஞ்சூற் காளமேகம்' என்பது, 'கார்கோள் முகந்த கமஞ்சூன் மாமழை' (7) என்னும் திருமுருகாற்றுப்படை யடியை தழுவியமைந்தது. (2)

2137. குருதி வாளெனச் செவ்வரி
பரந்தகட் குயிலே
மருவி மால்வரை யும்பரிற்
குதிக்கின்ற வருடை

சுருதி போற்றெளி மரகதக்
கொழுஞ்சுடர் சுற்றப்
பருதி வானவன் பசும்பரி
புரைவன பாராய்.

குருதி வாள் எனச் செவ்வரி பரந்த கண் குயிலே!
மருவி மால் வரை உம்பரில் குதிக்கின்ற வருடை,
சுருதி போல் தெளி மரகதக் கொழுஞ்சுடர் சுற்றப்,
பருதி வானவன் பசும்பரி புரைவன பாராய்!

பொ :—இரத்தம் தோய்ந்த வாள்போலச் செவ்வரி பரந்த கண்ணை யுடைய குயில் போல்பவளே! பெரிய இச் சித்திரகூட மலையின் உச்சி யில் பொருந்தித் துள்ளுகின்ற வரையாடுகள், இசைபோலத் தெளிந்த மரகதமணியின் ஒளி சூழ்தலால், சூரியனுடைய (தேரில் பூட்டிய) பச்சைக் குதிரைகளை ஒத்திருக்கின்றன; அவற்றைப் பார்.

கு :—குருதி – இரத்தம். செவ்வரி பரந்த கண்ணுக்குக் குருதி தோய்ந்த வாள் உவமை. மால்வரை உம்பரின் மருவிக் குதிக்கின்ற வருடை என இயையும். உம்பர் – உச்சி. வருடை – மலையாடு. சுருதி - இசை. தெளிவுடைமையால் சுருதி மரகதமணியின் ஒளிக்கு உவமையா யிற்று. சித்திரகூட மலையின் உச்சியில் மரகதப் பாறையின் பச்சொளி பாய்தலால் பசுமைநிறம் வாய்ந்து துள்ளுகின்ற வரையாட்டுக்கு உதய வரை நின்றெழுந்து விரையும் சூரியனுடைய தேரிற்பூட்டிய பச்சைக் குதிரை உவமையாயிற்று. சூரியன் தேர்க் குதிரைகள் ஏழு என்பதும், அவை பசுமைநிறம் வாய்ந்தவை என்பதும் "மால்வரைப் பாழிமா முகட் டுச்சிப் பச்சைமா ஏழும் ஏற" (340) என ஆசிரியர் முன்னே கூறுதலாலும் விளங்கும். (3)

2138. வடங்கொள் பூண்முலை மடமயி
லேமதக் கதமா
வடங்கு பேழ்வயிற் றரவுரி
யமைதொறுந் தொடக்கித்
தடங்க டோறுநின் றுடுவ
தண்டலை யயோத்தி
நுடங்கு மாளிகைத் துகிற்கொடி
நிகர்ப்பன நோக்காய்.

வடம் கொள் பூண் முலை மடம் மயிலே! மதக் கத மா
அடங்கு பேழ் வயிற்று அரவுரி, அமை தொறும் தொடக்கித்
தடங்கள் தோறும் நின்று ஆடுவ, தண்டலை அயோத்தி
நுடங்கும் மாளிகைத் துகிற்கொடி நிகர்ப்பன நோக்காய்!

பொ :—மணிவடங்களையும் பிற அணிகளையும் அணிந்த தனங்களை யுடைய மயில் போல்பவளே! மதத்தினையும் சினத்தினையும் உடைய யானை ஒடுங்கும் பெரிய வயிற்றினையுடைய பாம்பின் உரிகள், மூங்கில்கள் தோறும் சிக்குண்டு பக்கவரைகளில் நிலைபெற்று அசைபவை, சோலைகள் சூழ்ந்த அயோத்தியில் உள்ள மாளிகைகளில் அசையும் துகிற்கொடிகளை ஒத்திருப்பனவற்றைக் காண்.

கு :—வடம் - முத்து முதலிய மணிகள் தொடுத்த மாலை. கதம் - சினம். பேழ் வயிறு - பெரிய வயிறு. யானைகள் பாம்பின் வயிற்றுள் ஒடுங்குதல், 'புழுங்குவெம் பசியொடு புரளும் பேரரா, விழுங்கவந் தெழுந்தெதிர் விரித்தவாயின்வாய், முழங்குதிண் கரிபுகும்' (352) என்று ஆசிரியர் முன்னே கூறினமையானும் புலப்படும். அரவுரி - பாம்பின் சட்டை. அமை – மூங்கில். தொடக்கி - சிக்கி; "புனற்சங்கம் துங்க இலைக் கதலிப் புதல்மீது தொடக்கிப்போய்" (ஆனாயர். 4) என்பது திருத்தொண்டர் புராணம். தடம் - பக்கமலை. தண்டலை - சோலை. நுடங்குதல் - அசைதல். சித்திரகூட மலையின் பக்கவரைகளுக்கு அயோத்தி நகரின் மாளிகைகளும், அவ்வரைகளிலுள்ள மூங்கில்களுக்கு மாளிகைகளிலுள்ள கொடிக்கம்பங்களும், அம்மூங்கில்களிற் சிக்கி அசை யும் அரவுரிகளுக்குக் கொடிக்கம்பங்களில் கட்டப்பட்டு அசையும் துகிற் கொடிகளும் உவமை. (4)

**2139.** உவரி வாயன்றிப் பாற்கட
லுதவிய வமுதே
துவரி னீண்மணித் தடங்தொறு
மிடங்தொறுந் துவன்றிக்
கவரி பானிற வால்புடை
பெயர்வன கடிதிற்
பவள மால்வரை யருவியைப்
பொருவிய பாராய்.

உவரிவாய் அன்றிப் பாற்கடல் உதவிய அமுதே!
துவரின் நீள் மணித் தடம் தொறும் இடம் தொறும், துவன்றிக்
கவரி பால் நிற வால் புடை பெயர்வன கடிதில்
பவள மால் வரை அருவியைப் பொருவிய பாராய்.

பொ :—உவர்க்கடலில் (தோன்றுதல்) அன்றிப் பாற்கடல் தந்த அமுதமே! (இச்சித்திரகூட மலையில்) இடந்தோறும் உள்ள செந்நிறம் வாய்ந்த பெரிய மாணிக்கப் பாறைகளின் இடந்தோறும் கவரிமான் களின் பால்போலும் வெண்ணிறமுள்ள வால்கள் நெருங்கி விரைந்து அசைபவை, பெரிய பவளமலைகளினின்று துள்ளிப் பாயும் அருவிகளை ஒத்திருப்பனவற்றைப் பார்.

கு :—உவரி – உப்புநீரையுடைய கடல். பாற்கடலுதவிய அமுது என்றது பிராட்டியை. பாற்கடல் உதவிய அமுது என்பதனுடன் "அமுதில் வரும் பெண்ணமுது" (பெரியதிரு. 6. 1. 2) என்னும் அருளிச் செயலும் நோக்கத்தகும். இடந்தொறும் துவரின் நீண்மணித் தடந் தொறும் பால்நிறக் கவரிவால் துவன்றிக் கடிதில் புடைபெயர்வன என இயைக்க. பொருவிய – ஒத்தன. (5)

**2140.** சலந்த லைக்கொண்ட சீயத்தாற்
றனிமதக் கதமா
வுலந்து வீழ்தலிற் சிந்தின
வுதிரத்தின் மடவார்
புலந்த காலையற் றுக்கன
குங்குமப் பொதியிற்
கலந்த முத்தென வேழமுத்
திமைப்பன காணாய்.

சலம் தலைக்கொண்ட சீயத்தால் தனி மதக் கதம் மா
உலந்து வீழ்தலின், சிந்தின உதிரத்தின், மடவார்
புலந்தகாலை அற்று உக்கன குங்குமப் பொதியில்
கலந்த முத்து என, வேழ முத்து இமைப்பன காணாய்.

பொ :—(பாற்கடல் உதவிய அமுதே!) மதத்தினையும் சினத்தினையும் உடைய தனித்த யானை, சினம்மிக்க சிங்கத்தால் (தாக்கப்பட்டுச்) செத்து வீழ்ந்தமையால் சிந்தின இரத்தத்தின்கண் அந்த யானையின் (உறுப்பிலிருந்து சிதறி விழுந்த) முத்துக்கள், மகளிர் தம் கொழுநரோடு ஊடிய காலையில் சிந்திய குங்கும வாசக் கலவையின்கண் அம்மடவார் அணிந்த முத்தவடம் அற்றுச்சிந்தின முத்துக்கள் கலந்தனவற்றைப் போல விளங்குதலைப் பார்.

கு :—பாற்கடல் உதவிய அமுதே! என்பது முன்பாட்டிலிருந்து வருவித்துரைக்கப்பட்டது. பின்னும் இவ்வாறு வரும் இடங்களிலும் இங்ஙனம் கொள்க. சலம் – சினம். தலைக்கொள்ளல் – மிகுதல். சீயம் –

சிங்கம். உலத்தல் – சாதல். புலத்தல் – ஊடல். உகுதல் – சிந்துதல். குங்குமப்பொதி - குங்குமக் குழம்பு. வேழமுத்து - யானையினிடம் தோன்றிய முத்து. இமைத்தல் – விளங்குதல். கணவரோடு ஊடிநின்ற மகளிர் தம் மார்பில் அணிந்த குங்குமக் குழம்பை அழித்துச் சிந்த, அக் குழம்பில் அவர் அணிந்த முத்த மாலையினின்று அற்றுச் சிந்தின முத் துக்கள், சிங்கத்தால் தாக்கப்பட்டு இறந்து வீழ்ந்த யானையினின்று பெருகிய இரத்தத்தில் அந்த யானையினின்று உதிர்ந்து சிந்திய முத்துக் களுக்கு உவமை. வேழமுத்து என்பதற்கு மூங்கில் முத்து என்று பொருள் கொள்வாரும் உளர். மாணிக்கப் பாறையில் உதிர்ந்துள்ள மூங்கில் முத்து, பின் 2161-ஆம் பாடலில் பேசப்படுதலால், இங்கே வேழமுத்தென்றது யானையின்பால் தோன்றிய முத்தினையே என்பது புலனாகும். யானையினிடம் முத்துத் தோன்றும் என்பது கவி மரபு. "தந்திவராக மருப்பிப்பிபூகம் தழைகதலி, நந்து சலஞ்சல மீன்றலை கொக்கு நளினம் மின்னார், கந்தரஞ் சாலி கழைகன்னல் ஆவின்பல் கட்செவிகார், இந்து வுடும்பு கரா முத்தம் ஈனும் இருபதுமே" என்னும் பாடலும் இங்கு நோக்கத்தகும். (6)

**2141.** நீண்ட மால்வரை மதியுற
நெடுமுடி நிவந்த
தூண்டு மாமணிச் சுடர்சடைக்
கற்றையிற் றோன்ற
மாண்ட வானிற வருவியம்
மழவிடைப் பாகன்
காண்ட குஞ்சடைக் கங்கையை
நிகர்ப்பன காணாய்.

நீண்ட மால் வரை மதி உற, நெடு முடி நிவந்த
தூண்டு மா மணிச் சுடர் சடைக் கற்றையில் தோன்ற,
மாண்ட வால் நிற அருவி அம் மழ விடைப் பாகன்
காண் தகும் சடைக் கங்கையை நிகர்ப்பன காணாய்!

பொ :—மிகப்பெரிய இச் சித்திரகூடமலையின் வளர்ந்த நீண்ட சிகரத்தின்கண் பிறைமதி தவழ, (அச்சிகரத்தில் உள்ள) சிறந்த மாணிக்க மணிகள் புறப்படவிடுகின்ற கதிர்க்கற்றை, சடைக்கற்றை போல் தோன்ற, (அச்சிகரத்தில் நின்று வீழ்கின்ற) சிறந்த வெள்ளிய அருவிகள், அழகிய இளைய ஆனேறூர்ந்த சிவபிரானுடைய காட்சிக் கினிய சடையினின்று பெருகும் கங்கையின் பிரிவுகளை ஒத்து விளங் குவனவற்றைக் காண்.

கு :—நீண்ட மால்வரை நிவந்த நெடுமுடி மதி உற என இயையும். மாமணி என்றது மாணிக்கத்தை. காண்தகும்-காணத்தக்க. சித்திர கூடவரையின் சிகரத்துக்குச் சிவபெருமானுடைய திருமுடியும், அச் சிகரத்தை அடுத்துத் தோன்றும் பிறைமதிக்கு அப்பெருமான் சடையில் விளங்கும் பிறைமதியும், அச்சிகரத்தில் எழும் மாணிக்க மணியின் ஒளிக் கற்றைக்கு அப்பெருமான் திருமுடியில் விளங்குகின்ற சடைக்கற்றையும், அச்சிகரத்தினின்று பெருகும் அருவிகளுக்கு அப்பெருமான் சடைக் கற்றையினின்று பெருகும் கங்கையின் பிரிவுகளும் உவமம். "நிரைகதிர் முத்தஞ் சிந்தி மலைமகள் கொழுநன் சென்னி வந்து வீழ் கங்கைமான, அலகில்பொன் அலம்பியோடிச் சாந்துசேர் அருவிமாலை" (942) என முன்னும் அருவிக்குக் கங்கையை உவமம் கூறினமை காணலாம். (7)

**2142.** தொட்ட வார்சுனை சுடரொளி
மணியொடுந் தூவி
விட்ட சென்றன விடாமத
மழையன வேழம்
வட்ட வேங்கையின் மலரொடுந்
ததைந்தன வயங்கும்
பட்ட நெற்றியிற் சுற்றிய
போல்வன பாராய்.

தொட்ட வார் சுனை சுடர் ஒளி மணியொடும் தூவி
விட்ட சென்றன, விடா மத மழையன வேழம்,
வட்ட வேங்கையின் மலரொடும் ததைந்தன வயங்கும்
பட்டம் நெற்றியில் சுற்றிய போல்வன பாராய் !

பொ :—பெரிய சுனைநீரை மிக்க ஒளியையுடைய மாணிக்க மணி களோடு (தம்மேல்) தூவிவிட்டுச் சென்றனவும் நீங்காத மதமழையைப் பொழிவனவுமாகிய யானைகள், நெற்றியில் வட்டமான வேங்கைப்பூக்கள் உதிர்ந்து நெருங்கிக் கிடக்கப்பெற்றனவாய், விளக்கம் மிக்க நெற்றிப் பட்டம் அணியப்பெற்றவைபோல்வனவாயிருத்தலைப் பார்.

கு :—தொடுதல் - கைக்கொள்ளுதல் ; 'பதுமுகன் சிலை தொட் டானே' (1862) என்பது சீவகசிந்தாமணி. வார்சுனை - நீண்டசுனை. சுனை இங்கே ஆகுபெயராய்ச் சுனைநீரை உணர்த்தியது. சுனைநீரை மாணிக்க மணிகளோடு கைக்கொண்டு, தம் தலைமேல் தூவிக்கொண்ட மதநீர்ப் பெருக்குடைய சித்திரகூடவரை யானைகள், வேங்கை மரங் களடர்ந்த சூழலிற் சென்று, அம்மரங்களினின்று உதிர்ந்த பூக்களோடு

மாணிக்க மணிகளும் நெருங்கித் தங்கி விளங்கும் நெற்றியை யுடையன வாய், நெற்றியில் பட்டம் அணியப்பெற்றவற்றை ஒத்திருந்தன என்ற வாறு. தன் கைப்பட்ட புழுதி மணல் முதலியவற்றைத் தன்மீது தூவிக் கொள்ளுதல் யானைகளின் இயல்பு. (8)

2143. இழைந்த நூலிணை மணிக்குடஞ்
சுமக்கின்ற தென்னக்
குழைந்த நுண்ணிடைக் குவியிள
வனமுலைக் கொம்பே
தழைந்த சந்தனச் சோலைதன்
செலவினைத் தடுப்ப
நுழைந்து போகின்ற தொக்கின்ற
மதியினை நோக்காய்.

இழைந்த நூல் இணை மணிக் குடம் சுமக்கின்றது என்னக்
குழைந்த நுண் இடைக் குவி இள வன முலைக் கொம்பே!
தழைந்த சந்தனச்சோலை தன் செலவினைத் தடுப்ப
நுழைந்துபோகின்றது ஒக்கின்ற மதியினை நோக்காய்.

பொ:—நுணுகிய நூலானது, இரண்டு இரத்தின கலசங்களைத் தாங்குகின்றது என்று சொல்லும்படி குழைந்த நுண்ணிய இடையி னையும் குவிந்த அழகிய இளமுலைகளையும் உடைய பூங்கொம்பு போல் பவளே! (இம் மலையில்) தழைத்துள்ள சந்தனச் சோலையானது தன் னுடைய வான்வழிச் செல்லுதலைத் தடைசெய்தலால் அச்சோலையுள் நுழைந்து செல்வதுபோலத் தோன்றுகின்ற சந்திரனைக் காண்பாயாக.

கு:—இழைதல் - நுணுகுதல். 'இழைத்துணர்ந்தீண்டிய கேள்வி யவர்' (417) என்னும் திருக்குறளில் 'இழைத்துணர்ந்து' என்பதற்கு 'நுண்ணிதாக ஆராய்ந்தறிந்து' என்னும் பரிமேலழகர் உரை இங்கே நோக்கத்தகும். முன்னிரண்டடியொடு 'உந்திச்சுழியின் முளைத்தெழுந்த உரோமப் பசுந்தாள் ஒன்றில் இரண்டு, அந்திக்கமலம் கொடு வருவீர்' (34) என்னும் கலிங்கத்துப்பரணிப் பாடலும் நோக்கத்தகும். நான் காம் அடியில் 'நுழைந்து போகின்ற மதியிறுலொப்பது நோக்காய்' என்பது சில சுவடிகளிற் கண்ட பாடம். இப்பாடத்துக்கு(ச் சந்தனச் சோலை தன் வான்வழிச் செலவைத் தடுத்தலால் அச்சோலையுள்) நுழைந்து செல்லு(வது போலத் தோன்று)ம் சந்திரன் அச்சந்தனச் சோலையுள் இழைத்த தேன்கூடுபோலத் தோன்றுதலைப் பார்ப்பாயாக என்று பொருள் கொண்டாரும் உண்டு. இறுல் - தேன்கூடு. மதியத் துக்குத் தேன்கூடு உவமை. (9)

**2144.** உருகு காதலிற் றழைகொண்டு
மழலைவண் டோச்சி
முருகு நாறுசெந் தேனினை
முழைநின்றும் வாங்கிப்
பெருகு சூலிளம் பிடிக்கொரு
பிறைமருப் பியானை
பருக வாயினிற் கையினின்
றளிப்பது பாராய்.

உருகு காதலில் தழை கொண்டு மழலை வண்டு ஓச்சி,
முருகு நாறு செந்தேனினை முழை நின்றும் வாங்கிப்
பெருகு சூல் இளம் பிடிக்கு ஒரு பிறை மருப்பு யானை,
பருக வாயினில் கையில் நின்று, அளிப்பது பாராய்.

பொ :—பிறைமதிபோலும் கொம்புகளையுடைய ஒரு களிற்றியானை, கசிந்த காதலோடு, மெல்லிய இசையெழுப்பும் வண்டுகளைத் தழைகளால் ஓட்டி, நறுமணம் கமழும் செந்நிறமுள்ள தேனை மலைமுழையினின்று கைக்கொண்டு, சூல் முதிர்ந்த இளைய பெண்யானையின்முன் நின்று, அது பருகும்படி அதன் வாயில் தன் கையால் ஊட்டுவதைக் காண்.

கு :—மழலை – மெல்லிசை. ஓச்சுதல் - ஓட்டுதல். முருகு - நறுமணம். முழை – குகை. சூல்–கருப்பம். களிறு பிடியினை உண்பித்தலை, "உம்பர் வானகத்துநின்ற ஒளிதரு தருவின் ஓங்கும், கொம்புகள் பனைக்கை நீட்டிக் குழையொடும் ஒடித்துக் கோட்டுத் தும்பிகள் உயிரேயன்ன துணைமடப் பிடிக்குநல்கும்" (929) என ஆசிரியர் முன்னே கூறினமை காணலாம். "பெருகுமத வேழம் மாப்பிடிக்கு முன்னின்-றிருகண் இளமூங்கில் வாங்கி-அருகிருந்த-தேன்கலந்து நீட்டும் திருவேங்கடம் கண்டீர்-வான்கலந்த வண்ணன் வரை" (திவ்யப்ரபந்தம். 2-ஆம் திருவந்தாதி. 75), "வரைசெய் மாக்களி றிளவெதிர் வளர்முளையளைமிகு தேன்தோய்த்துப் பிரசவாரிதன் இளம்பிடிக் கருள்செயும் பிரிதி" (திவ். பெரியதிரு. 1. 2. 5), "சந்தனப்பூம் பைந்தழையைச் செந்தேனில் தோய்த்தியானை, மந்த மடப்பிடியின் வாய்க்கொடுப்ப-வந்ததன் கண்களிக்கத் தான்களிக்கும் ஈங்கோய்" (ஈங்கோய் மலையெழுபது. 38) என்னும் ஆன்றோர் பாசுரங்களும் இங்கு நோக்கத்தகும். (10)

2145. அளிக்கு நாயகன் மாயைபுக்
கடங்கின னெனினுங்
களிப்பி லிந்தியத் தியோகியைக்
கரக்கில னதுபோ
லொளித்து நின்றுள ராயினு
முருத்தெரி கின்ற
பளிக்க றைச்சில பரிமுக
மாக்களைப் பாராய்.

அளிக்கும் நாயகன் மாயை புக்கு அடங்கினன் எனினும்,
களிப்பில் இந்தியத்து யோகியைக் கரக்கிலன் அதுபோல்
ஒளித்து நின்றுளர் ஆயினும், உருத் தெரிகின்ற
பளிக்கறைச் சில பரிமுகமாக்களைப் பாராய்.

பொ :—காக்கும் தலைவனை திருமால் மாயையுட் புகுந்து (தன்னைப் பிறர் அறியாதபடி) மறைந்தாலும், (பொறிகளைப் புலன்களின் வழியே செல்லவிட்டு) மகிழ்தல் இல்லாத (பொறியடக்கம் வாய்ந்த) யோகிக்குத் தன்னை மறைக்கமாட்டான்; அதுபோல, பளிக்கறையினுள் ஒளித்து நின்றார்களாயினும், தம் உருவு தெரிகின்ற குதிரை முகமுடைய சில கின்னரர்களைப் பார்.

கு :—திருமால் மாயையுள் ஒடுங்கி மறைந்தாலும் அவன் உருவு பொறியடக்கம் வாய்ந்த யோகியர்க்குப் புலனாவதுபோல, கின்னரர் பளிங்கினால் ஆன அறையுட் புகுந்து மறைந்தாலும் அவர் உரு காண் பார்க்குத் தானே புலப்படும் என்றவாறு. அளிக்கும் நாயகன்-காக்கும் தலைவனை திருமால். கரத்தல்-ஒளித்தல். பரிமுகமாக்கள்-கின்னரர். பளிக்கறை - பளிங்குக் கற்களால் ஆகிய அரங்கு. (11)

2146. ஆடு கின்றமா மயிலினு மழகிய குயிலே
கூடு கின்றிலர் கொடிச்சியர் தம்மனங் கொதிப்ப
ஊடு கின்றனர் கொழுநரை யுருகினர் நோக்கப்
பாடு கின்றன கின்னர மிதுனங்கள் பாராய்.

ஆடுகின்ற மா மயிலினும் அழகிய குயிலே
கூடுகின்றிலர் கொடிச்சியர் தம் மனம் கொதிப்ப
ஊடுகின்றனர், கொழுநரை உருகினர் நோக்கப்
பாடுகின்றன கின்னர மிதுனங்கள் பாராய்.

பொ :—ஆடுகின்ற சிறந்த மயிலினும் மேலான அழகுடைய பெண்ணே! (தங்கள் நாயகர்பால் தவறுகண்டு) மனம் வெதும்புதலால் அவரொடு கூடாமல் ஊடுகின்ற குறிஞ்சிநில மகளிர், அக்கொழுநரை மனங்கசிந்து (கூடல் விருப்பொடு) நோக்கும்படி நன்கு பாடுகின்ற கின்னர மிதுனங்களைப் பார்.

கு :—குயிலே என்பது பெண்ணே என விளியளவாய் நின்றது. கின்னர மிதுனங்கள் – கின்னரருள் இரட்டையர். மிதுனம் - இரட்டை. கின்னரராவார் தேவருள் ஒரு பிரிவினர்; ஆணும் பெண்ணுமாய் ஒன்றியவர்; இசை வல்லார்; "கின்னர மிதுனங்களும் தம் கின்னரம் தொடுகிலோம் என்றனரே" (3. 6. 5.) என்பது பெரியாழ்வார் திருமொழி. கின்னர மிதுனங்களின் இசை கணவரோடு ஊடிய மகளிரையும் கூடலிற்றலைப்படும்படி செய்யும் இயல்பினது என்பது, "கேடிலா மகர யாழிற் கின்னர மிதுனம் பாடும், பாடலால் ஊடல் நீங்கும் பரிமுக மாக்கள் கண்டார்" (943) என ஆசிரியர் முன்னே கூறியதால் புலனாகும். (12)

**2147.** வில்லி வாங்கிய சிலையெனப்
பொலிநுதல் விளக்கே
வல்லி தாங்கழை தாக்கலின்
வழிந்திழி பிரசங்
கொல்லி வாங்கிய குன்றவர்
கொடிநெடுங் கவலை
கல்லி வாங்கிய குழிகளை
நிறைப்பன காணாய்.

வில்லி வாங்கிய சிலை எனப் பொலி நுதல் விளக்கே!
வல்லிது ஆம் கழை தாக்கலின் வழிந்து இழி பிரசம்,
கொல்லி வாங்கிய குன்றவர் கொடி நெடுங்கவலை
கல்லி வாங்கிய குழிகளை நிறைப்பன காணாய்!

பொ :—விற்றொழில்வல்லோனால் வளைக்கப்பட்ட வில்லைப்போல் விளங்குகின்ற புருவத்தையுடைய விளக்குப் போல்பவளே! வலிய மூங்கில் தாக்குதலால் இறாலினின்று வழிந்து பெருகுகின்ற தேன், (பாய்ந்து), கொல்லி என்னும் பண்ணிசையைக் கேட்ட குறிஞ்சிநில மக்கள் நீண்ட கொடிகளையுடைய கவலைக்கிழங்கைத் தோண்டியெடுத்த குழிகளை நிரப்புதலைப் பார்!

கு :—வில்லி - விற்றொழில் வல்லோன். வாங்குதல் - 1. வளைத்தல், 2. கேட்டல்=செவிமடுத்தல், 3. எடுத்தல். சிலை-வில். நுதல்–புருவம். வல்லிது - வன்மையுடையது. கழை – மூங்கில். இழிதல் - கீழ்நோக்கி இறங்குதல். பிரசம் - தேன். கொல்லி – ஒருவகைப் பண். கவலை - ஒருவகைக் கிழங்கு. கல்லுதல் - தோண்டுதல். (13)

2148. ஒருவில் பெண்மையென் றுரைக்கின்ற
வுடலினுக் குயிரே
மருவு காதலி னினிதுட
னாடிய மந்தி
யருவி நீர்கொடு வீசத்தா
னப்புறத் தேறிக்
கருவி மாமழை யுதிர்ப்பதோர்
கடுவனைக் காணாய்.

**ஒருவு இல் பெண்மை என்று உரைக்கின்ற உடலினுக்கு உயிரே!**
**மருவு காதலின் இனிது உடன் ஆடிய மந்தி,**
**அருவி நீர் கொடு வீசத் தான் அப்புறத்து ஏறிக்**
**கருவி மா மழை உதிர்ப்பது ஓர் கடுவனைக் காணாய்!**

பொ :—நீங்காத பெண்மை என்று சொல்லப்படுகிற உடம்புக்கு உயிராக விளங்குபவளே! பொருந்திய அன்பினால் ஆண் குரங்கினோடு இனிதே விளையாடிய பெண் குரங்கானது, அருவி நீரைக் கைக்கொண்டு (தன் கடுவன்மீது) வீச, அக்கடுவன் அப்பால் மலைமேலே சென்று கூட்டமாகச் செறிந்த சிறந்த மழை நீரை அம்மந்திமீது சிந்துவதைக் காண்.

கு :—ஒருவுதல் என்பது ஒருவு எனப் பகுதிமாத்திரமாய் நின்றது. ஒருவுதல் - நீங்குதல். பெண்மை – பெண்ணின் தன்மை. கருவி – தொகுதி. கடுவன் - குரங்கின் ஆண். தானும் அவ்வருவி நீரையே கைக்கொண்டு வீசுதல் தன் ஆண்மைக்கு இழுக்காகுமென்று கடுவன் மழை நீரை மந்திமேல் வீசியது. மழை–மேகம்; இங்கே மழைநீரை உணர்த்திற்று. (14)

2149. வீறு பஞ்சின்றி யமுதநெய்
மாட்டிய விளக்கே
சீறு வெங்கதிர் செறிந்தன
பேர்கல திரியா

மாறின் மண்டில நிரம்பிய
மாணிக்க மணிக்கற்
பாறை மற்றொரு பரிதியிற்
பொலிவன பாராய்.

வீறு பஞ்சு இன்றி அமுதம் நெய் மாட்டிய விளக்கே!
சீறு வெம் கதிர் செறிந்தன, பேர்கல, திரியா,
மாறு இல் மண்டிலம் நிரம்பிய மாணிக்கமணிக்கற்
பாறை, மற்று ஒரு பரிதியில் பொலிவன பாராய்!

பொ :—சிறந்த திரியில்லாமல் அமுதமாகிய நெய் பெய்து ஏற்றிய விளக்குப் போல்பவளே! (இருளைச்) சீறுகின்ற விரும்பத்தக்க ஒளிக் கற்றை நிறைந்தனவும், இடம் பெயராதனவும், சுழற்சியற்றனவும், கோட்டம் அற்ற முழு வட்டம் நிரம்பியனவும் ஆன பதுமராகப் பாறை (ஒவ்வொன்றும்) வேறு ஒரு பரிதிபோல் விளங்குவனவற்றைப் பார்.

கு :—வீறு பஞ்சு என்றது பன்னிக் கோதுபோக்கிய உயர்ந்த வகைப் பஞ்சினாலாகிய திரியினை. மாட்டுதல் – கொளுத்தல். சீறுதல் – காய்தல். மண்டிலம் – வட்டம். பரிதி-சூரியன். அமுதநெய் மாட்டிய விளக்கே' என்பது, 'நெய் பெய்து மாட்டிய சுடர்' (குறுந்தொகை. 398. 4-5) என்பதைத் தழுவியமைந்தது. வட்டமும் ஒளியும் உடைமையால் மரகதப் பாறை பரிதியை ஒக்குமேனும், பரிதிக்குள்ள இடம் பெயர்தலும் சுழற்சியும் மரகதப் பாறைக்கு இன்மையால், மற்றொரு பரிதியிற் பொலிவன என்றார். (15)

**2150.** சில மின்னதென் றருந்ததிக்
கருளிய திருவே
நீல வண்டினம் படிந்தெழ
வளைந்தன நிமிர்வ
கோல வேங்கையின் கொம்பர்கள்
பொன்மலர் தூவிக்
காலி னிற்றெழு தெழுவன
நிகர்ப்பன காணாய்.

சீலம் இன்னது என்று அருந்ததிக்கு அருளிய திருவே!
நீல வண்டினம் படிந்து எழ, வளைந்தன நிமிர்வ

கோல வேங்கையின் கொம்பர்கள், பொன் மலர் தூவிக்
காலில் நிற்றெழுது எழுவன நிகர்ப்பன காணாய்!

போ :—ஒழுக்கம் இத்தன்மைத்து என்று அருந்ததிக்கும் கற்பித்த திருமகள் போல்பவளே! நீல நிறமுடைய வண்டின் கூட்டம் படிதலாலும் எழுதலாலும் வளைந்து நிமிர்வனவாகிய அழகிய வேங்கை மரத்தின் கிளைகள், நின் அடிகளில் பொன்மயமான பூக்களைத் தூவி வணங்கி எழுவன போல்வனவற்றைக் காண்.

கு :—சீலம் இங்கே மகளிர்க்குரிய ஒழுக்கங்களைச் சுட்டி நின்றது' கற்புடைமகளிர்க்கு எடுத்துக்காட்டாக விளங்கும் அருந்ததிக்கும் ஒழுக்கத்தை விளக்குபவள் என்றமையால் பிராட்டியின் ஒழுக்க மேம்பாடு கூறப்பட்டது. அருந்ததிக்கும் என்பதனுள் உம்மைதொக்கது. செல்லும் வழியிடையே வண்டுகள் படிந்தெழுதலால் வளைந்து நிமிரும் வேங்கையின் கொம்புகளினின்று பூவுதிர்தல், அக்கொம்புகள் பிராட்டியின் திருவடிகளிலே மலர்களைத் தூவி வழிபட்டெழுவதுபோலும் என்றவாறு. (16)

**2151.** விற்கொள் வாணுதல் விளங்கிழை
யிளந்தளிர்க் கொழுந்தே
யெற்கொண் மால்வரை யும்பரி
னிரும்புனங் காக்குங்
கொற்கொள் வேற்கணார் குரீஇயினத்
தெறிகுரு விந்தக்
கற்கள் வானிடை மீனென
விழுவன காணாய்.

வில் கொள் வாள் நுதல் விளங்கு இழை இளந்தளிர்க்கொழுந்தே!
எல் கொள் மால் வரை உம்பரின், இரும் புனம் காக்கும்
கொல் கொள் வேல் கணார் குரீஇ இனத்து எறி குருவிந்தக்
கற்கள், வானிடை மீன் என விழுவன காணாய்!

போ :—வில்லின் தன்மையைக் கொண்ட விளங்கும் புருவத்தையும் ஒளி மிக்க அணிகலங்களையும் இளந்தளிர்களையும் உடைய மருக் கொழுந்துபோல்பவளே! விளக்கம் வாய்ந்த பெரிய இச்சித்திரகூட மலையின் உச்சியில் பெரிய தினைப்புனங் காவல் புரிகின்ற கொற்றெழில் வாய்ந்த வேல்போலும் கண்களையுடைய கொடிச்சியர் குருவிக்கூட்டத்தில் அவை தினைப்புனத்தை அழிக்காது அகலுமாறு எறிந்த மாணிக்கக் கற்கள் ஆகாயத்தினின்று நாண்மீன்கள்போல விழுவனவற்றைக் காண்.

கு :—நுதல் – புருவம். புருவத்துக்கு வில் உவமை கொழுந்து – மருக்கொழுந்து. எல் - விளக்கம். கொல், கொல்லர் தொழிலைக் குறித்துநின்றது. குரீஇ - குருவி. குருவிந்தக்கல் - மாணிக்கக்கல். மீன் – நாண்மீன். (17)

**2152.** வரிகொ ணோன்சிலை வயவர்தங்
கணிச்சியின் மறிந்த
பரிய காரகில் சுடநிமிர்
பசும்புகைப் படல
மரிய வேதிய ராகுதிப்
புகையொடு மளவிக்
கரிய மால்வரைக் கொழுந்தெனப்
படர்வன காணாய்.

வரிகொள் நோன் சிலை வயவர்தம் கணிச்சியின் மறிந்த
பரிய கார் அகில் சுட, நிமிர் பசும் புகைப் படலம்,
அரிய வேதியர் ஆகுதிப் புகையொடும் அளவிக்
கரிய மால்வரைக் கொழுந்தெனப் படர்வன காணாய்.

பொ :—கட்டமைந்த வலிய வில்லையுடைய வீரராகிய வேடர்களுடைய கோடரிப்படையால் அழிந்த பெரிய கரிய அகிலை எரியூட்டினமையால் எழுந்தோங்கிய பசிய புகைப்படலம், பெருமை வாய்ந்த மறையோர் ஓமகுண்டத்திற் பெய்யும் ஆகுதியால் எழுந்த புகையொடும் கலந்து, மிகப் பெரிய இச்சித்திரகூடமலையின் சிகரம்போலச் செல்வனவற்றைக் காண்.

கு :—வரிகொள் நோன் சிலை – கட்டமைந்த வலிய வில். வயவர் - வீரர்; இது இங்கே வேடரைக் குறித்து நின்றது. தம் சாரியை கணிச்சி— கோடாலி. (18)

**2153.** நான நாண்மலர் நறையகி
லுவிதே னுறுஞ்
சோனை வார்குழற் சுமைபொறு
திடுகிடைத் தோகாய்

வான யாறுமீன் மலர்ந்தன
வெனப்புனல் வறந்த
கான யாறுகள் கணமணி
யிமைப்பன காணுய்.

நானம் நாள் மலர் நறை அகில் நாவி தேன் நாறும்
சோனே வார் குழல் சுமை பொருது இடுகு இடைத் தோகாய்!
வான யாறு மீன் மலர்ந்தன எனப் புனல் வறந்த
கான யாறுகள் கணம் மணி இமைப்பன காணுய்.

பொ :—புனுகு, அப்பொழுது அலர்ந்த பூ, நறுமணம் வாய்ந்த அகிற்புகை, கத்தூரி என்பனவற்றின் நறுமணம் கமழ்கின்றதும் விடா மழை பொழியும் மேகம் போல்வதுமான நீண்ட கூந்தலின் சுமையைத் தாங்கலாற்ருது மெலிகின்ற இடையினேயுடைய மயில்போல்பவளே! ஆகாயமாகிய ஆற்றில் நாண்மீன்கள் தோன்றினுற்போல, நீரற்ற காட்டாறுகளில் கூட்டமாகிய மாணிக்கமணிகள் விளங்குதலைப் பார்.

கு :—நானம் – புனுகு. நறை – நறுமணம். அகில் – அகிற்புகை. நாவி – கத்தூரி. தேன் – நறுமணம்; 'அகிற்புகையளைந்து தேன் அளாய்' (சூளா. குமர. 17) என்பதில் தேன் நறுமணம் என்னும் பொருளில் பயின்றமை காண்க. சோனே – விடாமழை; சோனே ஆகுபெயராய் மேகத்தையுணர்த்தியது. இடுகுதல் – மெலிதல். தோகாய் – மயிலே! வான யாறு – ஆகாயமாகிய ஆறு; உருவகம். (19)

2154. மஞ்ச ளாவிய மாணிக்கப்
பாறையின் மறைவ
செஞ்செ வேநெடு மரகதப்
பாறையிற் றெரிவ
விஞ்சை நாடியர் கொழுநரொ
டூடிய விமலப்
பஞ்ச ளாவிய சீறடிச்
சுவடுகள் பாராய்.

மஞ்சு அளாவிய மாணிக்கப் பாறையின் மறைவ
செஞ்செவே நெடு மரகதப் பாறையில் தெரிவ,
விஞ்சை நாடியர் கொழுநரொடு ஊடிய விமலப்
பஞ்சு அளாவிய சீறடிச் சுவடுகள் பாராய்.

பொ :—அழகு பொருந்திய மாணிக்கப் பாறைகளில் மறைவனவும், பெரிய மரகதப்பாறைகளில் நன்ருகத் தெரிவனவுமான தம் கணவரொடு ஊடல்கொண்ட வித்தியாதரமகளிருடைய செம்பஞ்சு ஊட்டிய சிறிய அடியின் சுவடுகளைக் காண்.

கு :– மாணிக்கப் பாறையில் மறைவனவும் மரகதப் பாறையில் தெரிவனவுமான கொழுநரொடுடிய விஞ்சை மாதருடைய செம்பஞ்சூட்டிய சிறிய அடிச்சுவடுகள் பாராய் என இயையும். மாணிக்கப் பாறைகள் செவ்வொளியுடையனவாதலால் அவற்றில் செம்பஞ்சுக்குழம் பூட்டிய விஞ்சை மகளிரின் அடிச்சுவடுகள் தோன்ரு வாயின. மஞ்சு – அழகு. அளாவிய - பொருந்திய. செஞ்செவே – நன்ருக. விஞ்சை நாடியர் - வித்தியாதர மகளிர். நாடியர் என்பது நாடு என்பதன் அடியாக வந்தது; 'வேறிடமியற்றினன் மிதிலை நாடிக்கும்' (1180) என ஆசிரியர் பின்னே கூறுதல் காண்க. "விஞ்சைவேந்தர், குஞ்சியந்தலத்தும் நீலக் குலமணித்தலத்தும் மாதர் பஞ்சியங் கமலம்பூத்த பசுஞ்சுவடுடைத்து மன்னுே" (935) என்று ஆசிரியர் முன்னே கூறியதும் இங்கு நோக்கத்தகும். (20)

2155. சுழித்த செம்பொனின் ருளைபுரை
யுந்தியின் றுணையே
கொழித்த மாமணி யருவியொ
டிழிவன கோல
மழித்து மேவிய வரம்பைய
ரறல்புரை கூந்தல்
கழித்து நீக்கிய கற்பக
நறுமலர் காணுய்.

சுழித்த செம்பொனின் தொளை புரை உந்தி இன் துணையே!
கொழித்த மா மணி அருவியொடு இழிவன, கோலம்
அழித்து மேவிய அரம்பையர் அறல் புரை கூந்தல்
கழித்து நீக்கிய கற்பக நறுமலர் காணுய்!

பொ :—மாற்றுயர்ந்த பொன்னில் வட்டமாக இடப்பட்ட தொளையை ஒத்த உந்தியையுடைய இனிய துணைவியே! முன் புனைந்த கோலத்தை நீக்கி, மீட்டும் வேறு கோலம் கொண்ட அரம்பையர், கருமணலை ஒத்த தம் கூந்தலினின்றும் கழித்து நீக்கிய கற்பகமலர் மாலைகள், இரத்தினங்களைக் கொழிக்கும் அருவியோடு கீழே இழிவனவற்றைக் காண்.

கு :—மாற்றுயர்ந்த பொன்னில் இடப்பட்ட தொளை பிராட்டியின் உந்திச்சுழிக்கு உவமையாதல், "பொங்கு பொற்றுளை யென்றாலும் புல்லிய உவமை" (கிட்கிந்தா. நாடவிட்ட. 40) என்று ஆசிரியர் பின் கூறுதலால் அறியலாம். மாற்றுயர்ந்த பொன் கல்வெட்டுக்களில் தொளைப்பொன்* என்று வழங்கப்படும். 'கொழித்தமாமணி யருவி யொடிழிவன' என்பதனுடன், 'பிறங்கு மாமணி யருவியொடிழிதரு பிரிதி' (பெரியதிரு. 1.2.4) என்னும் அருளிச் செயலடியும் நோக்கத் தகும். (21)

2156. அறைக முற்சிலைக் குன்றவ
ரகன்புனங் காவற்
பறையெ டுத்தொரு கடுவனின்
றடிப்பது பாராய்
பிறையை யெட்டினள் பிடித்திதற்
கிதுபிழை யென்னுக்
கறைது டைக்குறும் பேதையோர்
கொடிச்சியைக் காணாய்.

அறை கழல் சிலைக் குன்றவர் அகன் புனம் காவல்
பறை எடுத்து ஒரு கடுவன் நின்று அடிப்பது பாராய்,
பிறையை எட்டினள் பிடித்து, "இதற்கு இது பிழை" என்னுக்
கறை துடைக்குறும் பேதை ஓர் கொடிச்சியைக் காணாய்.

பொ :—ஒலிக்கின்ற வீரக்கழலையும் வில்லையும் தரித்த மலைவாணருடைய தினைப்புனம் காவற்கு வைத்த பறையை ஒரு கடுவன் எடுத்து அடிப்பதனைப் பார்ப்பாயாக; பிறையை எட்டிப் பிடித்து இப்பிறைக்கு இக்கறை குறையாகும் என்று எண்ணிக் கறையைத் துடைக்கின்ற பேதையாகிய ஒரு குறமகளைக் காண்.

கு :—புனம் காவல் பறை - தினைப்புனத்தில் பறவைகள் புகுந்து அழிக்காமல் அவற்றை ஓட்டிக்காத்தற்கு வைத்த தொண்டகம் என்னும் பறை. கடுவன் - ஆண் குரங்கு. பிழை - குறை. பிழை குறையென்னும் பொருளில் வருதல், 'மின்னே ரெயிற்று வல்லரக்கர் வீக்கம் நோக்கி வீரற்குப் பின்னே பிறந்தா னல்லதோர் துணையிலாத பிழை நோக்கி' (சுந்தரகாண்டம். 601) என ஆசிரியர் ஆளுதலாலும் அறியலாம். கறை-களங்கம். கொடிச்சி - குறமகள். 'கொதிநுனை வேற்கண்

* தென் இந்தியக் கல்வெட்டு. தொகுதி 3. பக்கம் 229 பார்க்க.

மாதர் குறத்தியர் நுதலினோடு மதியினை வாங்கி ஒப்புக்காண்குவர் குறவர்' (933) என்றார் முன்னும். (22)

**2157.** அடுத்த பல்பக லன்பரைப்
பிரிந்தன ரென்ப
தெடுத்து நந்தமக் கியம்புவ
வெனக்கரிந் திருண்ட
தொடுத்த மாதவிச் சூழலிற்
சூரர மகளிர்
படுத்து வைகிய பல்லவ
சயனங்கள் பாராய்.

அடுத்த பல் பகல் அன்பரைப் பிரிந்தனர் என்பது
எடுத்து நந்தமக்கு இயம்புவ எனக் கரிந்து இருண்ட
தொடுத்த மாதவிச் சூழலில், சூரரமகளிர்
படுத்து வைகிய பல்லவ சயனங்கள் பாராய்.

பொ :—சூரரமகளிர், தொக்கனவாகிய பலநாட்கள் தம் நாயகரைப் பிரிந்தனர் என்பதனை நமக்குப் புலப்படத் தெரிவிப்பனபோல, ஒன்றுட னொன்று பின்னிப் பிணைந்த மாதவியின் இருண்ட நிழலிடத்தே, அம் மகளிர் படுத்தமையால் கருகிக்கிடக்கின்ற தளிர்ப்படுக்கைகளைக் காண்.

கு :—நெடுநாள் நாயகரைப் பிரிந்தமையால் உண்டாகிய காமவெம்மையைத் தணித்துக்கொள்ளக் கருதிச் சூரரமகளிர் இருண்ட மாதவிப் பந்தரின்கீழ் நறுமணம் கமழும் பல தளிர்களைப் படுக்கையாகப் பரப்பி அதிலே படுத்தனராக, அவர்கள் உடல் வெம்மையால், படுக்கையில் பரப்பிய தளிர்கள் கரிந்தன என்றவாறு. தொடுத்த மாதவிச் சூழல், இருண்ட சூழல் என்க. சூரரமகளிர் படுத்துக் கரிந்துவைகிய பல்லவ சயனங்கள் என இயையும். பல்லவம் – தளிர். "ஆவியினினிய கொண்கர்ப் பிரிந்தறிவழிந்த விஞ்சைப் பாவையர் வைகத் தீந்த பல்லவ சயனங் கண்டார்" (946) என்றார் முன்னும். (23)

**2158.** நினைந்த போதினு மமிர்தொக்கு
நேரிழை நிறைதேன்
வனைந்த வேங்கையிற் கோங்கினில்
வயின்றொறுந் தொடுத்துக்

குனிந்த வூசலிற் கொடிச்சிய
    ரெடுத்தவின் குறிஞ்சிக்
கனிந்த பாடல்கேட் டசுணமா
    வருவன காணாய்.

நினைந்தபோதினும் அமிர்து ஒக்கும் நேரிழை! நிறை தேன்
வனைந்த வேங்கையில், கோங்கினில், வயின்தொறும் தொடுத்துக்
குனிந்த ஊசலில் கொடிச்சியர் எடுத்த இன் குறிஞ்சிக்
கனிந்த பாடல் கேட்டு, அசுணமா வருவன காணாய்.

பொ :—நினைத்தபொழுதும் அமுதம்போல மகிழ்ச்சியினை விளைக்கும் நல்ல அணிகலன்களை அணிந்தவளே! மிக்க தேனையுடைய வேங்கை மரங்களிலும் கோங்கமரங்களிலும் இடந்தொறும் இணைக்கப்பட்டுத் தாழ்ந்த ஊசலினிடத்துத் தங்கிய குறிஞ்சிநிலமகளிர் எடுத்த குரலிற் பாடிய இனிய குறிஞ்சிப் பண் அமைந்து கனிந்த பாடலைக் கேட்டு அசுணமா வருவதனைக் காண்.

கு :—வயின்தொறும் – இடந்தோறும். தொடுத்தல் - கட்டுதல். குனிதல் – தாழ்தல். குறிஞ்சி – பண்வகையுள் ஒன்று. அசுணமா – இசையறிவதொரு விலங்கு; ‘இன்னளிக் குரல்கேட்ட அசுணமா’ (1402) என்பது சீவகசிந்தாமணி. (24)

2159. இலவு மிந்திர கோபமும்
    புரையித ழினியா
யலவு நுண்டுளி யருவிநீ
    ரரம்பைய ராடக்
கலவை சாந்துசெங் குங்குமங்
    கற்பகங் கொடுத்த
பலவுந் தோய்தலிற் பரிமளங்
    கமழ்வன பாராய்.

இலவும் இந்திரகோபமும் புரை இதழ் இனியாய்!
அலவும் நுண் துளி அருவி நீர், அரம்பையர் ஆடக்
கலவை, சாந்து, செங்குங்குமம் கற்பகம் கொடுத்த
பலவும் தோய்தலின், பரிமளம் கமழ்வன பாராய்!

பொ :—இலவம்பூவினையும் இந்திரகோபத்தையும் ஒத்த இதழினையுடைய நல்லாய்! தேவமாதர் ஆடுதலால், சந்தனக் குழம்பும், மயிர்ச்

சாந்தும், செங்குங்குமமும் அம்மாதர்க்குக் கற்பகம் தந்த பிற நறுவிரைப் பொருள்கள் பலவும் தோய்தலால், சிதறுகின்ற துளிகளையுடைய அருவி நீர் நறுமணம் கமழ்வனவற்றைப் பார்.

கு :—புரை – உவமவுருபு. அலவுதல் - சிதறுதல். கலவை - சந்தனக்குழம்பு. சாந்து – மயிர்ச்சாந்து. (25)

2160. செம்பொ னாற்செய்து குலிகமிட்
டெழுதிய செப்போர்
கொம்பு தாங்கிய தெனப்பொலி
வனமுலைக் கொடியே
யம்பொன் மால்வரை யலர்கதி
ருச்சிசென் றணுகப்
பைம்பொன் மாமுடி மிலைச்சிய
தொப்பது பாராய்.

செம்பொனால் செய்து, குலிகம் இட்டு எழுதிய செப்பு ஓர் கொம்பு தாங்கியது எனப் பொலி வனமுலைக் கொடியே! அம் பொன் மால் வரை அலர் கதிர் உச்சி சென்று அணுகப் பைம் பொன் மா முடி மிலைச்சியது ஒப்பது பாராய்.

பொ :—மாற்றுயர்ந்த பொன்னாற் செய்து இங்குலிகத்தினால் கோலம் வரையப்பெற்ற செப்பினை ஒரு கொம்பு தாங்கிநின்றாற்போல விளங்குகின்ற அழகிய தனங்களையுடைய நங்கையே! பரவிய கிரணங்களையுடைய சூரியன் சிகரத்தையடைதலால் இந்தச் சித்திரகூட மலையானது, பசிய பொன்னாற் செய்யப்பட்ட சிறந்த கிரீடஞ் சூட்டியதைப்போல விளங்குதலைப் பார்.

கு :—குலிகம் - இங்குலிகம். இங்குலிகத்தால் கோலம் வரையப்பெற்ற செப்பு, தொய்யிற் கோலம் வரையப்பட்ட மகளிர் தனத்துக்கு உவமை. உச்சி – சித்திரகூட மலையின் சிகரம். மிலைச்சுதல் - சூட்டுதல். சிகரம் சித்திரகூட மலையின் தலையாகவும் அச்சிகரத்துக்கு நேரே வந்து பொருந்திய செங்கதிர், அம்மலையின் தலையிலே சூட்டிய மகுடமாகவும் கொள்க. (26)

**2161.** மடந்தை மார்களிற் றிலதமே
மணிநிறத் திணிகற்
றொடர்ந்த பாறையில் வேயினஞ்
சொரிகதிர் முத்த
மிடந்தொ றுங்கிடந் திமைப்பன
வெக்கிளஞ் செக்கர்
படர்ந்த வானிடைத் தாரகை
நிகர்ப்பன பாராய்.

மடந்தைமார்களில் திலதமே! மணி நிறத் திணி கல்
தொடர்ந்த பாறையில் வேய் இனம் சொரி கதிர் முத்தம்
இடம் தொறும் கிடந்து இமைப்பன, ஏக்கு இளஞ்செக்கர்
படர்ந்த வானிடைத் தாரகை நிகர்ப்பன பாராய்.

பொ :—பெண்களில் திலதமாக விளங்குபவளே! சித்திரகூட மலையின் ஒவ்வொரு பக்கத்திலும், செந்நிறம் பரவிய வானில் நாண்மீன்களைப்போல், மாணிக்கத்தின் செந்நிறத்தினையுடைய வலிய கல்லாகிய நீண்ட பாறையில் மூங்கிற்கூட்டம் சிந்திய விளக்கம் அமைந்த முத்துக்கள் தங்கி ஒளிவிடுதலைப் பார்.

கு :—இமைத்தல் - ஒளிவிடுதல். எக்குதல் – மேலெழுதல். 'எடுத்தவே யெக்கி நூக்குயர்பு தாக்க' (பரிபாடல். 16.45), 'நறுநீர்ச் சிவிறிப் பொறிநீ ரெக்கியும்', 'குருதிச் செம்புனல் தவிரா தெக்கவும்' (பெருங்கதை. 1.42.188; 46.29) என்பவற்றுள் எக்குதல் மேலெழுதல் என்ற பொருளில் பயின்றமை காணலாம். தாரகை - நாண்மீன். மூங்கில் முத்துக்கள் செந்நிறமுடைய மலைப்பாறைகளில் உதிர்ந்துகிடப்பவற்றுக்கு, செக்கர் பரவிய வானவீதியில் விளங்கும் நாண்மீன்கள் உவமை. இது "வேய்தந்த வெண்முத்தஞ் சிந்துபைங்கார்வரை மீன்பரப்பிச் சேய்தந்த வானக மானும் சிலம்ப" (130) என்னும் திருக்கோவையார்ப் பாசுரத்தை அடியொற்றி யெழுந்தது. (27)

**2162.** குழுவு நுண்டொளை வேயினுங்
குறிநரம் பெறிவுற்
றெழுவு தண்டமிழ் யாழினு
மினியசொற் கிளியே

முழுவ தும்மலர் விரிந்தநாண்
முருக்கிடை மிடைந்த
பழுவம் வெங்கனல் கதுவிய
தொப்பது பாராய்.

குழுவும் நுண் தொளை வேயினும், குறி நரம்பு எறிவுற்று
எழுவு தண் தமிழ் யாழினும், இனிய சொல் கிளியே!
முழுவதும் மலர் விரிந்த நாண்முருக்கு இடை மிடைந்த
பழுவம், வெம் கனல் கதுவியது ஒப்பது பாராய்.

பொ :—தொக்க நுண்ணிய தொளைகளையுடைய மூங்கிலாலாகிய குழலின் இசையினும், ஏழு சுரங்களுக்கும் தனித்தனி பெயர்கள்கொண்ட நரம்புகளை எறிந்து எழுப்புகின்ற குளிர்ந்த தமிழ்நாட்டு இசைக் கருவியாகிய யாழின் இசையினும் இனிய சொல்லினையுடைய கிளிபோல் பவளே! அப்பொழுது விரிந்த பூக்களையுடைய முருக்கமரங்கள் இடையே நெருங்கிய காடு முழுவதும் கொடிய நெருப்புப் பற்றியதைப் போன்றிருப்பதைப் பாராய்.

கு :—குழுவுதல் – தொகுதல். வேய் – புல்லாங்குழல். குறி – பெயர். எழுவுதல் – எழுப்புதல். தமிழ் யாழ் - தமிழ் நாட்டின் இசைக் கருவி யாகிய யாழ். நெருப்புப்போல மலர்ந்த பூக்களை மிகுதியாகவுடைய முருக்கமரங்கள் அடர்ந்த காடு தீப்பற்றிய காடுபோலும் என்றவாறு. (28)

26 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின்வரும் மிகைப் பாடல் ஒன்று காணப்படுகிறது.

2162 (a) “மைக்கொள் வேல்விழி யாயும்பர் மாதுதாள் வருடும்
மெய்க்கொள் கூன்மந்தி தனக்குவந் துதவிய விலையில்
செய்க்கொளா ரத்தைச் சிதறுவ கூனிசிற் றவைமுன்
கைக்கொ ளாரத்தைச் சிதறுவ தொத்தன காணாய்.”

**2163.** வளைகள் காந்தளிற் பெய்தன
வளையகைம் மயிலே
தொளைகொ டாழ்தடக் கைந்நெடுந்
துருத்தியிற் றூக்கி
யளவின் மூப்பின ரருந்தவர்க்
கருவிநீர் கொணர்ந்து
களப மால்கரி குண்டிகைச்
சொரிவன காணாய்.

வளைகள் காந்தளில் பெய்தன அனைய கை மயிலே!
தொளை கொள் தாழ் தடக் கைந்நெடுந்துருத்தியில் தூக்கி,
அளவு இல் மூப்பினர் அருந்தவர்க்கு, அருவி நீர் கொணர்ந்து,
களபம் மால் கரி குண்டிகைச் சொரிவன காணாய்!

பொ :—காந்தள்மலரில் வளையை அணிந்தாற்போல விளங்கும் கையினையுடைய மயில்போல்வாய்! மிக்க மூப்பினரான பிறரால் செய்தற்கரிய தவத்தினருக்கு, மதமயக்கத்தையுடைய யானைக்கன்றுகள், துளையினையுடைய தொங்குகின்ற பெரிய நீண்ட தும்பிக்கையாகிய தோற்பையிலே அருவிநீரைத் தாங்கிக் கொணர்ந்து, கமண்டலத்திற் சொரிவனவற்றைக் காண்.

கு :—காந்தள் மகளிர்கைக்கு உவமை. துருத்தி - தோற்பை; 'துருத்தியாங் குரம்பை தன்னில்' (953. 4) என்பது தேவாரம். களபம்–யானைக்கன்று. மால்கரிக் களபம் என மாறுக. களப மால் கரி - கன்றுடன் கூடிய பெரிய யானை எனலும் ஆம். குண்டிகை - கமண்டலம். (29)

**2164.** வடுவின் மாவகி ரிவையெனப்
பொலிந்தகண் மயிலே
யிடுகு கண்ணின ரிடருறு
மூப்பின ரேக
நெடுகு கூனல்வா னீட்டின
வுருகுறு நெஞ்சக்
கடுவன் மாதவர்க் கருநெறி
காட்டுவ காணாய்.

வடுவின் மாவகிர் இவை எனப் பொலிந்த கண் மயிலே!
இடுகு கண்ணினர், இடர் உறும் மூப்பினர், ஏக,
நெடுகு கூனல் வால் நீட்டின, உருகுறும் நெஞ்சக்
கடுவன், மாதவர்க்கு அருநெறி காட்டுவ காணாய்.

பொ :—இவை மாவடுவின் பிளப்பு என்று சொல்லும்படி விளங்குகின்ற கண்களையுடைய மயில்போல்பவளே! இடுங்கிய கண்ணையுடையவர்களும் துன்பத்தை அடைவிக்கின்ற முதுமைப் பருவத்தினருமான மாதவர்களுக்கு (அத்தவர்களின் நிலைகண்டு) நெகிழ்ந்த மனமுடைய ஆண் குரங்குகள், நீண்ட வளைந்த தம்முடைய வாலை நீட்டி, (அவர் கையிலே கோல்போலக் கொடுத்து) அவர் செல்லுதற்கரிய வழியினைக் காட்டுவனவற்றைக் காண்.

கு :—மாவடுவின் வகிர் எனக் கூட்டுக. வகிர்-பிளப்பு; மாவடுவின் வகிர் மகளிர் கண்களுக்கு உவமை. 'மாவடுவகிரன்ன கண்ணிபங்கா' (அடைக்கலப்பத்து. 8) 'மாவடுவகிரன்னகண்ணீர்' (திருப்பொற்சுண்ணம். 2) என்பன திருவாசகம். குரங்கும் மனம் நெகிழ்ந்து மாதவர்க்கு வழிகாட்டும் எனச் சித்திரகூட மலையின் பெருமை கூறியவாறு. (30)

**2165.** பாந்த டேரிவை பழிபடப்
பரந்தபே ரல்கு
லேந்து நூன்மணி மார்பின
ராகுதிக் கியையக்
கூந்தன் மென்மயில் குறுகின
நெடுஞ்சிறை கோலிக்
காந்து குண்டத்தி லடங்கெரி
யெழுப்புவ காணாய்.

பாந்தள் தேர் இவை பழிபடப் பரந்த பேர் அல்குல்!
ஏந்தும் நூல் மணி மார்பினர் ஆகுதிக்கு இயையக்
கூந்தல் மென் மயில் குறுகின, நெடுஞ்சிறை கோலிக்
காந்து குண்டத்தில் அடங்கு எரி எழுப்புவ காணாய்!

பொ :—பாம்பின்படமும் தேர்த்தட்டும் ஆகிய இவை (தக்க உவமையாகாமையால்) பழியையடையும்படி பரவிய பெரிய அல்குலையுடையாய்! முப்புரிநூலைத் தரித்த அழகிய மார்பினையுடைய அந்தணர் ஓமஞ்செய்வதற்கு ஏற்றதாக, மெல்லிய தோகையையுடைய மயில்கள், சூடுடைய ஓமகுண்டத்தை நெருங்கி, தம் நீண்ட இறகை விரித்து வீசி, அவ்வோம குண்டத்தில் அடங்கியுள்ள நெருப்பை எரிந்தெழும்படி செய்வனவற்றைப் பார்.

கு :—பாந்தள் - பாம்பு. பாந்தள், தேர் என்பவை ஆகுபெயராய் முறையே பாம்பின் படத்தையும் தேர்த்தட்டினையும் உணர்த்தி நின்றன. மென்கூந்தல் என்க. கூந்தல் - தோகை. சிறை-இறக்கை. குண்டம்-ஓமகுண்டம். (31)

**2166.** அலம்பு வார்குழ லாய்மயிற்
பெண்ணருங் கலமே
நலம்பெய் வேதியர் மார்பினுக்
கியைவுற நாடிச்

சிலம்பி பஞ்சினிற் சிக்கறத்
தெரிந்தநூ றேமாம்
பலம்பெய் மந்திக ளுடன்வந்து
கொடுப்பன பாராய்.

அலம்பு வார் குழல் ஆய் மயில் பெண் அருங்கலமே!
நலம் பெய் வேதியர் மார்பினுக்கு இயைவு உற நாடிச்
சிலம்பி, பஞ்சினில் சிக்கு அறத் தெரிந்த நூல், தேமாம்
பலம் பெய் மந்திகள், உடன் வந்து, கொடுப்பன பாராய்.

பொ :—அசைகின்ற நீண்ட கூந்தலையும் அழகிய மயில்போலும் சாயலையும் உடைய பெண்களுக்கு அணிகலம் போல்பவளே! தேமாங் கனிகளை எறிந்து விளையாடுகின்ற பெண்குரங்குகள், பஞ்சு நூல்போலக் காணப்பட்ட சிலம்பியிழைத்த நூலை, உலகினுக்கு நன்மையினைச் செய்யும் வேதம்வல்ல முனிவர் மார்பில் (பூணூலாகத்) தரித்தற்கேற்றதாகச் சிக்கில்லாதபடி ஆராய்ந்துகொண்டு ஒருங்குவந்து கொடுப்பனவற்றைக் காண்.

கு :—அலம்புதல்–அசைதல். ஆய் மயில்–அழகிய மயில். சிலம்பி–சிலந்தி. பஞ்சு இங்கே ஆகுபெயராய் நூலையுணர்த்தியது. பஞ்சினில் தெரிந்த சிலம்பி நூல் என்க. மந்திகள் சிலம்பிநூலை வேதியர் மார்பினுக்கு இயைவுறச் சிக்கறநாடி உடன்வந்து கொடுப்பன பாராய் என இயைக்க. தேமாம் பலம்பெய் மந்திகள் என்று மந்திகளின் இயல்பு கூறியவாறு; ‘மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்’ என்பது குற்றாலக் குறவஞ்சி. (32)

**2167.** தெரிவை மார்க்கொரு கட்டளை
யெனச்செய்த திருவே
பெரிய மாக்கனி பலாக்கனி
பிறங்கிய வாழை
யரிய மாக்கனி கடுவன்க
ளன்புகொண் டளிப்பக்
கரிய மாகிழங் ககழ்ந்தன
கொணர்வன காணாய்.

தெரிவைமார்க்கு ஒரு கட்டளை எனச் செய்த திருவே!
பெரிய மாக் கனி, பலாக் கனி, பிறங்கிய வாழை

அரிய மாக் கனி, கடுவன்கள் அன்புகொண்டு அளிப்பக்
கரியமா, கிழங்கு அகழ்ந்தன கொணர்வன காணாய்!

பொ :—மகளிர்க்குச் சிறந்த உவமையாகப் படைக்கப்பட்ட பெண்ணே! ஆண் குரங்குகள், (முனிவர்பால்) அன்புகொண்டு, பெரிய மாமரங்களிலுள்ள பழங்களையும் பலாப்பழங்களையும் திரளான மிக உயர்ந்த வாழைப்பழங்களையும் கொணர்ந்து கொடுக்க, பன்றிகள், கிழங்குகளை அகழ்ந்தெடுத்து அம்முனிவர்களுக்குத் தரும்பொருட்டுக் கொண்டுவருதலைக் காண்.

கு :—தெரிவை - பெண். பிறங்குதல் - செறிதல். கரியமா - பன்றி. (33)

2168. ஐவ னக்குர லேனலின்
கதிரிறுங் கவரை
மெய்வ ணக்குறு வேயின
மீன்றமெல் லரிசி
பொய்வ ணக்கிய மாதவர்
புரைதொறும் புகுந்துன்
கைவ ணத்தவாய்க் கிள்ளைதந்
தளிப்பன காணாய்.

ஐவனக் குரல், ஏனலின் கதிர், இறுங்கு, அவரை,
மெய் வணக்குறு வேயினம் ஈன்ற மெல் அரிசி,
பொய் வணக்கிய மா தவர் புரைதொறும் புகுந்து, உன்
கை வணத்த வாய்க் கிள்ளை தந்து அளிப்பன காணாய்.

பொ :—உன் கையின் செந்நிறம் வாய்ந்த வாயினையுடைய கிளிகள் பொய்யைவென்ற பெரிய தவத்தினர் தங்கும் இடந்தொறும் புகுந்து, மலைநெற்கதிரும் தினைக்கதிரும் சோளக்கதிரும் உடல் வளைவைப் பொருந்திய மூங்கில்கள் தந்த மெல்லிய அரிசியும் அவரையும் ஆகியவற்றை மிகக் கொடுத்தலைப் பார்.

கு :—ஐவனம் - மலைநெல். குரல் – கதிர். ஏனல் - செந்தினை. இறுங்கு – ஒருவகைச் சோளம். வேய் – மூங்கில். பொய்வணக்குதலாவது பொய்யை வென்று உண்மை காணுதலாம். புரை - தங்குமிடம். ஐவனம் முதலியவை தவத்தினர்க்கு ஏற்ற உணவுப் பொருள்களாகத் தக்கன. (34)

2169. இடிகொள் வேழத்தை யெயிற்றெடு
மெடுத்துடன் விழுங்குங்
கடிய மாசுணங் கற்றறிந்
தவரென வடங்கிச்
சடைகொள் சென்னியர் தாழ்விலர்
தாமிதித் தேறப்
படிக ளாமெனத் தாழ்வரைக்
கிடப்பன பாராய்.

இடி கொள் வேழத்தை எயிற்றெடும் எடுத்து உடன் விழுங்கும்
கடிய மாசுணம், கற்று அறிந்தவர் என அடங்கிச்
சடை கொள் சென்னியர், தாழ்வு இலர் தாம் மிதித்து ஏறப்
படிகள் ஆம் எனத் தாழ்வரைக் கிடப்பன பாராய்.

பொ :—முழக்கத்தையுடைய யானையைக் கொம்புகளோடு வாய்க் கொண்டு விழுங்கும் கொடிய மலைப்பாம்புகள் கற்று அறிந்தவர்போல அடக்கம் உடையனவாய்ச் சடையைத் தாங்கிய தலையினையுடையவர்களான முனிவர்கள் தாழாது அடிவைத்து ஏறும்படி, தாழ்வரைகளில் படிகள்போலக் கிடப்பனவற்றைக் காண்.

கு :—இடித்தல் - முழங்குதல்; 'அரிமானிடித்தன்ன' (கலித்தொகை. 15). எயிறு என்றது கொம்பினை. மாசுணம் - பாம்பு. (35)

2170. அசும்பு பாய்வரை யருந்தவ
முடித்தவர் துணைக்கட்
டசும்பு வேய்ந்தவ ரொத்தவர்
தமக்குவிண் டருவான்
விசும்பு தூர்ப்பன வாமென
வெயிலுக விளங்கும்
பசும்பொன் மானங்கள் போவன
வருவன பாராய்.

அசும்பு பாய் வரை அருந்தவம் முடித்தவர், துணைக் கண்
தசும்பு வேய்ந்தவர் ஒத்தவர்தமக்கு விண் தருவான்,
விசும்பு தூர்ப்பன ஆம் என, வெயில் உக விளங்கும்
பசும் பொன் மானங்கள், போவன வருவன பாராய்!

பொ :—நீர் ஒழுகுதலையுடைய இம்மலையின்கண் செய்தற்கரிய தவத்தைச் செய்து முடித்தவர்களும் இரண்டு கண்களாகிய நீர்க்குடங்களைத் தாங்கியவர்களும், (தமக்குத்தாமே) நிகரானவர்களும் ஆன முனிவரர்க்கு வீட்டுலகு தரும்பொருட்டு, ஆகாயத்தை மறைப்பனபோல, சூரியனும் ஒளிகெடும்படி விளங்குகின்ற பசிய பொன்னால் அமைக்கப்பட்ட விமானங்கள் செல்வனவற்றையும் வருவனவற்றையும் காண்.

கு :—அசும்பு - நீர்க்கசிவு. துணை - இரண்டு. தசும்பு - குடம். வேய்தல் - தாங்குதல். வெயில் - சூரியன். (36)

இதன்பின் அச்சுப் புத்தகங்களிலும் சில ஏடுகளிலும்,

2170 (a) நெய்கொ ணீருண்டு நெருப்புண்டு நீண்டமை நிறைந்த
வைகொள் வேலெனக் காலனும் மறுகுறுங் கண்ணாய்
மெய்க ணோகின்ற பிடிகளை விரும்பிய வேழம்
கைக ணோகில தாங்கின நிற்பன காணாய்.

(b) விடங்கொ ணோக்கிநின் னிடையினை மின்னென வெருவிப்
படங்கொ ளாகங்கண் முழைபுகப் பதைப்பன பாராய்
மடங்க லாளிக ளெனக்கொடு மழையின முழங்கக்
கடங்கொள் கார்மதக் கைம்மலை யிரிவன காணாய்.

என இரண்டு பாடல்கள் காணப்படுகின்றன. இவை சில சுவடிகளில் இப்படலத்தின் 8, 9-ஆம் பாடல்களாக உள்ளன. இவை இடைச் செருகற்பாடல்களாயிருக்கலாம் என்று கருதி இங்கே சேர்க்கப்பட்டன.

**2171.** இனைய யாவையு மேந்திழைக்
கியம்பினன் காட்டி
யனைய மால்வரை யருந்தவ
ரெதிர்வர வணங்கி
வினையி னீங்கிய வேதியர்
விருந்தின னானான்
மனையின் மெய்யெனு மாதவம்
புரிந்தவன் மைந்தன்.

இனைய யாவையும் ஏந்திழைக்கு இயம்பினன் காட்டி,
அனைய மால் வரை அருந்தவர் எதிர் வர, வணங்கி,
வினையின் நீங்கிய வேதியர் விருந்தினன் ஆனான்;
மனையில் மெய் எனும் மாதவம் புரிந்தவன் மைந்தன்.

பொ :—இல்லறநெறி நின்று வாய்மை என்னும் பெரிய தவத்தைச் செய்த தசரதமன்னன் மகனாகிய இராமன், இத்தன்மையவான சித்திர கூடமலையின் வளங்களையெல்லாம் அணிகலன் அணிந்த சீதாபிராட்டிக் குச் சொல்லிக் காணச்செய்து, அம்மலையிலுள்ள செயற்கருந் தவம்மேற் கொண்ட முனிவர்கள் தன்னை எதிர்கொண்டுவர, அவர்களை வணங்கி, வினையின் தொடர்பற்ற அவ்வேதியர்பால் விருந்தினனாயினான்.

கு :—ஏந்திழையென்றது – சீதாபிராட்டியை. இயம்பினன்–இயம்பி, மைந்தன் காட்டி, வணங்கி, விருந்தினன் ஆனான் என்க. (37)

## சூரியன் மறைதல்

2172. மாவிய லுதயமாந் துளப வானவன்
★ மேவிய பகையிரு ளவுணர் வீந்துகக்
காவியல் குடவரைக் கால நேமிமே
லேவிய திகிரிபோ லிரவி யேகினான்.

மா இயல் உதயம் ஆம் துளப வானவன்,
மேவிய பகை இருள் அவுணர் வீந்து உகக்
கா இயல் குடவரைக் காலநேமி மேல்
ஏவிய திகிரி போல், இரவி ஏகினான்.

பொ :—பெருமை பொருந்திய உதயவரையாகிய துழாய் மாலை யணிந்த திருமால், எதிர்த்துவந்த பகையிருளாகிய அசுரர் கெட்டு அழியும்படி, சோலைகள் பொருந்திய அத்தகிரியாகிய காலநேமி என்னும் அவ்வசுரர்தலைவன்மேல் ஏவிய சக்கரப் படைபோலச் சூரியன் சென்றான்.

கு :—உதயவரைக்குப் பெருமையாவது மங்கலத்திசையில் உளதா தல். உதயமாம் துளபவானவன், பகையிருள் அவுணர், குடவரைக் காலநேமி என்பவை உருவகம். அவுணர் – அசுரர். குடவரை – மேலை மலை=அத்தகிரி. காலநேமி என்பான் ஓர் அசுரர் தலைவன். திகிரி – சக்கரம். சூரியனுக்குத் திகிரி உவமை. (38)

## செக்கரும் மதியும் தோன்றுதல்

2173. சக்கரந் தானவ னுடலிற் றாக்குற
வெக்கிய சோரியிற் பரந்த செங்கணுஞ்

செக்கரத் தீயவன் வாயிற் றீர்ந்துவே
றுக்கவான் றனியெயி றொத்த திந்துவே.

சக்கரம் தானவன் உடலில் தாக்குற,
எக்கிய சோரியில் பரந்தது, எங்கணும்
செக்கர்; அத்தீயவன் வாயில் தீர்ந்து, வேறு
உக்க வான் தனி எயிறு ஒத்தது, இந்துவே.

பொ :—அச்சக்கரப்படை அசுரனாகிய காலநேமியின் உடலில்தாக்குதலால் மேலெழுந்த குருதியைப்போலச் செவ்வானம் எங்கும் பரவியது; கொடியோனாகிய அக்காலநேமியின் வாயினின்றும் நீங்கி வேறாக உதிர்ந்த பெரிய ஒற்றைப் பல்லை ஒத்தது மதி.

கு :—தானவன் - அசுரன்; இங்கே காலநேமியைக் குறித்தது. எக்குதல் - மேற்செல்லுதல். சோரி – இரத்தம். சோரியில் செக்கர் எங்கணும் பரந்தது என இயையும். அத்தீயவன் என்றது காலநேமியை. இந்து ஒத்தது என இயையும். இந்து - சந்திரன். (39)

## மாலைக்கால வருணனை 2174-2175

2174. ஆனன மகளிருக் களித்த தாமரைப்
பூநனி முகிழ்த்தன வலரி போனபின்
மீனென விளங்கிய வெள்ளி யாம்பல்வீ
வானெனு மணித்தட மலர்ந்த வெங்குமே.

ஆனனம் மகளிருக்கு அளித்த தாமரைப்
பூ நனி முகிழ்த்தன அலரி போனபின்
மீன் என விளங்கிய வெள்ளி ஆம்பல் வீ
வான் எனும் மணித் தடம் மலர்ந்த எங்குமே.

பொ :—சூரியன் மறைந்தபின், தாமரைப் பூக்கள், பெண்களின் முகத்துக்குப் பெருமையைக் கொடுத்தனவாய் மிகவும் குவிந்தன; வெள்ளிய ஆம்பல்கள், வானப்பரப்புப் போலும் அழகிய வாவியிடமெங்கும் விண்மீன்கள்போல மலர்ந்தனவாய் விளங்கின.

கு :—மகளிர் ஆனனத்துக்கு அளித்த தாமரை என இயைக்க. ஆனனம் - முகம். பெருமையை அளித்த எனச் செயப்படுபொருள் வருவித்துரைக்க. தாமரை, மகளிர் ஆனனத்துக்குப் பெருமை அளித்தலாவது; பகற்பொழுதில் மலர்ந்த நிலையில் மகளிர் முகத்துக்கு உவமமாய்ச் சிறந்தது, இரவில் அவர் முகத்துக்கு ஒப்பாகாது குவிந்து

ஒடுங்குதலாம். முகிழ்த்தல்-குவிதல். அலரி-சூரியன். மீன்-நட்சத்திரம். வீ - பூ. மணி - அழகு. வெள்ளி யாம்பல்வீ வான் எனும் மணித்தடமெங்கும் மீனென மலர்ந்த விளங்கிய என இயைக்க. (40)

2175. மந்தியுங் கடுவனு மரங்க ணோக்கின
தந்தியும் பிடிகளுந் தடங்க ணோக்கின
நிந்தையில் சகுந்தங்க ணீள நோக்கின
வந்தியை நோக்கினு னறிவை நோக்கினுன்.

மந்தியும் கடுவனும் மரங்கள் நோக்கின ;
தந்தியும் பிடிகளும் தடங்கள் நோக்கின ;
நிந்தை இல் சகுந்தங்கள் நீளம் நோக்கின;
அந்தியை நோக்கினுன் அறிவை நோக்கினுன்.

பொ :—(மாலை வந்தமையால்) பெண்குரங்குகளும் ஆண்குரங்குகளும் மரங்களை நோக்கிச் சென்றன ; களிறுகளும் பிடிகளும் தாம் உறையுமிடங்களுக்குச் செல்லும் வழியை நோக்கிச் சென்றன; குற்றமற்ற பறவையினங்கள் (தத்தம்) கூடுகளை நோக்கிச் சென்றன; நல்லறிவை வளர்த்துக்கொள்ளும் கருத்துடைய இராமன் மாலைக் கடன்களைச் செய்வானுயினுன்.

கு :—தந்தி - ஆண்யானை. தடம் - வழி. சகுந்தம் - பறவை. நீளம் - கூடு. அந்தி என்பது, அந்திக் காலத்தில் இருக்கும் கடன்களை உணர்த்தி நின்றது. அந்தியை நோக்கினுர் அறிவை நோக்கினுர் என்ற பாடங்கொண்டு, அறிவுருவாகிய இறைவனை எப்பொழுதும் நினைபவரான முனிவர் முதலியோர் மாலைக் கடன்களைச் செய்வாராயினர் என்று பொருள் கொள்ளலும் அமையும். (41)

இராமன் முதலிய மூவரும் மாலை வழிபாடியற்றல்

2176. மொய்யுறு நறுமலர் முகிழ்த்த வாஞ்சில
மையறு நறுமலர் மலர்ந்த வாஞ்சில
வையனெ டிளவற்கு மமுதன் ஞளுக்குங்
கைகளுங் கண்களுங் கமலம் போன்றவே.

மொய் உறு நறு மலர் முகிழ்த்தவாம் சில;
மை அறு நறு மலர் மலர்ந்தவாம் சில;

ஐயனொடு இளவற்கும் அமுது அன்னாளுக்கும்
கைகளும் கண்களும் கமலம் போன்றவே.

பொ : நெருங்கிய நல்ல பூக்கள் சில குவிந்தன ; குற்றமற்ற நல்ல பூக்கள் சில மலர்ந்தன ; வியக்கத்தக்க குண நலங்களையுடைய இராமனுக்கும் அமுதம் போல்பவளான சீதாபிராட்டிக்கும் இலக்குவனுக்கும் கைகளும் கண்களும் தாமரைமலர் போன்றன (குவிந்தன).

கு :—முகிழ்த்தவாம், மலர்ந்தவாம் என்பவற்றுள் ஆம் அசை. இளவல் என்றது இலக்குவனை. ஐயற்கும் அமுது அன்னாளுக்கும் இளவற்கும் என இயையும். மூவரும் மாலை வழிபாடு நிகழ்த்தினர் என்றவாறு. வழிபாடு நிகழ்த்துங்கால் கைகுவித்துக் கண் முகிழ்த்திருத்தல் இயல்பு. விரிந்தநிலையில் கண்களுக்கும் கைகளுக்கும் உவமையான தாமரைமலர் குவிந்தநிலையிலும் அவ்வுறுப்புக்களுக்கு உவமையாயிற்று என்றவாறு. (42)

## இராமன் இலக்குவன் அமைத்த சாலையை அடைதல்

2177\. மாலைவந் தகன்றபின் மருங்கி லாளொடு
வேலைவந் துறைவிட மேய தாமெனக்
கோலைவந் துமிழ்சிலைத் தம்பி கோலிய
சாலைவந் தெய்தினன் றவத்தி னெய்தினன்.

மாலை வந்து அகன்றபின், மருங்கு இலாளொடு
வேலை வந்து உறைவிடம் மேயதாம் எனக்
கோலை வந்து உமிழ் சிலைத் தம்பி கோலிய
சாலை வந்து எய்தினன், தவத்தின் எய்தினன்.

பொ :—(தேவரும் பிறரும் செய்த) தவத்தால் இவ்வுலகில் வந்து தோன்றிய இராமன், மாலைப்பொழுது வந்து நீங்கியபின், நுண்ணிய இடையையுடைய சீதாபிராட்டியுடன், அம்புகளைப் பொழியும் வில்லையுடைய இலக்குவன் முன்னேவந்து செய்த பன்னசாலையின்கண், கடல் தன் உறைவிடத்தே வந்து பொருந்தியதுபோல வந்தடைந்தான்.

கு :—மிகவும் நுண்ணிய இடை என்பது தோன்ற மருங்கு இலாள் என்றார் ; 'மருங்கிலா நங்கை' (601) என்றார் முன்னும். மேயதாம் என்பதனுள் ஆம் அசைநிலை. கோல் – அம்பு. கோலை உமிழ்சிலை என்க. சிலைத்தம்பி வந்து கோலிய சாலை என இயையும். கோலுதல் – அமைத்தல்.

பின் 2182–ஆம் செய்யுளில், ‘இன்னணம் இளையவன் இழைத்த சாலையில் பொன்னிறத் திருவொடுங் குடிபுக்கான்’ என வருவதுகொண்டு, ‘மாலைவந்தகன்றபின்.........சாலைவந்தெய்தினன் தவத்தின் எய்தினன்’ என்னும் இச்செய்யுள் இடைச்செருகல் என்று கருதுவாரும் உண்டு. ‘மாலைவந்தகன்றபின்’ என்னும் இச்செய்யுளால் இளையவன் அமைத்த சாலையுள்ள இடத்தை இராமன் அடைந்தமை பேசினர் என்றும், 2182–ஆம் செய்யுளால் அச்சாலையுள் இராமன் குடி புக்கமை பேசினர் என்றும் கொள்ளின் அமைவுடையதாகுமாதலால் ‘மாலைவந்து’ என்று தொடங்கும் இச்செய்யுள் இடைச்செருகலென்று தள்ளத்தக்கதன்று. (43)

## இலக்குவன் அமைத்த சாலையின் அமைதி 2178—2181

**2178.** நெடுங்கழை குறுந்தறி நிறுவி மேனிரைத்
தொடுங்கலி னெடுமுக டொழுக்கி யூழுற
விடுங்கலில் கைவிசித் தேற்றி யெங்கணு
முடங்கலில் வரிச்சுமேல் விரிச்சு மூட்டியே.

நெடுங் கழை குறுந்தறி நிறுவி, மேல் நிரைத்து,
ஒடுங்கல் இல் நெடுமுகடு ஒழுக்கி, ஊழ் உற
இடுங்கல் இல் கை விசித்து ஏற்றி, எங்கணும்
முடங்கல் இல் வரிச்சு மேல் விரிச்சு மூட்டியே.

பொ :—குறிய தூண்களை நிறுத்தி அவற்றின்மேல் நீண்ட மூங்கில் (வளைகளாக) ஒழுங்குபடவைத்து, (நீண்ட மூங்கிலால்) குறைவுபடாத பெரிய முகடுபோக்கி, வரிசையாக நெருங்குதல் இல்லாத கைகளை வளை களினின்று முகட்டொடு பொருந்த இணைத்து ஏற்றி, (அக்கைகளின்) மேல் எங்கும் வளைவில்லாத வரிச்சுக்களைப் பரப்பி இணைத்து,

கு :—குறுந்தறி நிறுவி நெடுங்கழை மேல் நிரைத்து என இயையும். நெடுங்கழை என்பதனை மீட்டும் கூட்டி, நெடுங்கழை ஒடுங்கலில் நெடு முகடு ஒழுக்கி என்க. நெடுங்கழை, குறுந்தறி, வளை, முகடு, கை, வரிச்சு என்பவை பன்னசாலையின் உறுப்புக்கள். கழை - மூங்கில் நிறுவி – நிறுத்தி. நிரைத்தல் – வரிசையாக அமைத்தல். ஊழ்–வரிசை. இடுங்கல்– நெருங்குதல். விசித்து - இணைத்து. முடங்கல் - வளைதல்.

இக்கவி முதல் ஐந்து செய்யுட்கள் ஒரு தொடர். குறுந்தறி நிறுவி, நெடுங்கழை நிரைத்து, முகடு ஒழுக்கி, கை விசித்தேற்றி, வரிச்சு விரிச்சு, மூட்டி, தேக்கடை செறிவுசெய்து, நாணலின்புல்லு வேய்ந்து, வேய்களிற் சுவர் போக்கி, மண் எறிந்து தீற்றி, இயற்றினன், மிதிலைநாடிக்கும்

வேறிடம் நெறிமுறை குயிற்றி, குங்குமச்சேறு கொண்டு திண்சுவர் திருத்தி, மணியொடு தரளம் அப்பி, மயிற் பீலியின் விதானம் வகுத்து, சுரிகையால் அருகு தூக்கு அறுத்து, கழைகளால் எயில் இயற்றி, யாறிடு புதுமலர் பொற்பச்சிந்தி, இளையவன் இழைத்த சாலே என்க. (44)

**2179.** தேக்கடைப் படலேயிற் செறிவு செய்துபின்
பூக்கிளர் நாணலின் புல்லு வேய்ந்துகீழ்த்
தூக்கிய வேய்களிற் சுவருஞ் சுற்றுறப்
போக்கிமண் ணெறிந்தவை புனலிற் றீற்றியே.

தேக்கு அடைப் படலேயின் செறிவுசெய்து, பின்,
பூக் கிளர் நாணலின் புல்லு வேய்ந்து, கீழ்த்
தூக்கிய வேய்களில் சுவரும் சுற்றுறப்
போக்கி, மண் எறிந்து, அவை புனலில் தீற்றியே.

பொ :—தேக்கிலேப் படலேயால் மூடி மறைத்து, அதன்மேல் பூக்கள் மிக்க நாணற்புல்லால் கூரைவேய்ந்து, தரையில் மேலெழவூன்றிய மூங்கில்களால் சூழ மதில் எழுப்பி, இடைவெளியின்றிக் குழைத்த மண் எறிந்து, (அவ்வாறு எழுப்பிய) மதிலேத் தண்ணீர் தெளித்துத் தேய்த்து (வழவழப்பாக)ப் பூசி.

கு :—தேக்கு அடை - தேக்கமரத்தின் இலே. படலே - படல். கிளர்தல் - மிகுதல்; 'பொலம் பூ வேங்கை நலங்கிளர் கொழுநிழல்' (பதிகம். 4) என்பது சிலப்பதிகாரம். வேய் – மூங்கில். தீற்றுதல் - பூசுதல். (45)

**2180.** வேறிட மியற்றினன் மிதிலே நாடிக்குங்
கூறின நெறிமுறை குயிற்றிக் குங்குமச்
சேறுகொண் டழகுறத் திருத்தித் திண்சுவ
ராறிடு மணியொடு தரள மப்பியே.

வேறு இடம், இயற்றினன் மிதிலே நாடிக்கும்
கூறின நெறி முறை குயிற்றிக் குங்குமச்
சேறு கொண்டு அழகு உறத் திருத்தித் திண்சுவர்
ஆறு இடு மணியொடு தரளம் அப்பியே.

பொ :—மிதிலேநாடன் மகளான சீதாபிராட்டிக்கும், மேற்கூறிய முறையே, வேறு தனி இருக்கை செய்து அமைத்து, வலிய மதில்களேக்

குங்குமச்சேற்ருல் செவ்வியவாகத் தீற்றி, அவற்றில் ஆறு கொணர்ந்து ஒதுக்கிய மணிகளையும் முத்துக்களையும் பதித்து,

கு :—மிதிலைநாடிக்கும் கூறின நெறிமுறை வேறிடம் குயிற்றி இயற்றினன் என இயையும். குயிற்றி – செய்து. இயற்றினன் - இயற்றி; முற்றெச்சம். (46)

2181. மயிலுடைப் பீலியின் விதான மேல்வகுத்
தயிலுடைச் சுரிகையா லருகு தூக்கறுத்
தெயிலிளங் கழைகளா லியற்றி யாறிடு
செயலுடைப் புதுமலர் பொற்பச் சிந்தியே.

மயில் உடைப் பீலியின் விதானம் மேல் வகுத்து,
அயில் உடைச் சுரிகையால் அருகு தூக்கு அறுத்து,
எயில் இளங்கழைகளால் இயற்றி, ஆறு இடு
செயல் உடைப் புதுமலர் பொற்பச் சிந்தியே.

பொ :—மயிற்றோகையால் மேற்கட்டி யமைத்து, கூரிய கத்தியால் பக்கத்தே கூரைகளின் அடிவாரத்தில் நீண்டு தொங்கும் புல் தழை முதலியவற்றைக்கொய்து, இளமூங்கில்களால் புறமதில் (அரண்) செய்து ஆறுகொணர்ந்து இட்ட புதிய பூக்களை அழகு பொருந்தச் சிதறி,

கு :—பீலி - தோகை. விதானம் - மேற்கட்டி. வகுத்தல் - செய்தல். அயில் - கூர்மை. சுரிகை - கத்தி. எயில் - மதில். பொற்ப - அழகுற. (47)

### இலக்குவன் அமைத்த சாலையில் இராமன் குடிபுகல்
### 2182—2183

2182. இன்னண மிளையவ னிழைத்த சாலையிற்
பொன்னிறத் திருவொடுங் குடிபுக் கானரோ
நன்னெடுந் திசைமுக னகத்து நம்மனோர்க்
குன்னரு முயிருளு மொக்க வைகுவான்.

இன்னணம் இளையவன் இழைத்த சாலையில்,
பொன் நிறத் திருவொடும், குடிபுக்கான்; அரோ
நல் நெடுந் திசைமுகன் அகத்தும், நம் அனோர்க்கு
உன்னரும் உயிருளும், ஒக்க வைகுவான்.

பொ :—நன்மையும் பெருமையும் உடைய பிரமனுள்ளும், நம்மை யொத்தவர்களால் நினைத்தற்கும் அரிய (நுண்ணிய) உயிரினத்துள்ளும் ஒரு தன்மையாகத் தங்கிய (இறைவன் அமிசமான) இராமன், இவ்வாறு இளையவன் செய்த பன்னசாலையில், பொன்போன்ற நிறத்தையுடைய சீதாபிராட்டியோடும் குடிபுக்கான்.

கு :—வைகுவான் புக்கான் என இயையும். இன்னணம் - இவ்வாறு. நெடுமை - பெருமை (சீவகசிந்தாமணி. 1951). திசைமுகன் – பிரமன். (48)

2183. மாய நீங்கிய சிந்தனை மாமறை
தூய பாற்கடல் வைகுந்தஞ் சொல்லலா
மாய சாலை யரும்பெற லன்பினு
னேய நெஞ்சின் விரும்பி நிரம்பினுன்.

மாயம் நீங்கிய சிந்தனை, மா மறை,
தூய பாற்கடல், வைகுந்தம், சொல்லல் ஆம்
ஆய சாலை, அரும்பெறல் அன்பினுன்,
நேய நெஞ்சின் விரும்பி நிரம்பினுன்.

பொ :—மயக்கம் நீங்கிய மனமும் பெருமை வாய்ந்த வேதமும் தூய தாகிய திருப்பாற்கடலும் வைகுந்தமும் ஒக்கும் என்று சொல்லத்தக்க அச்சாலையை, பெறுதற்கரிய அன்பினையுடைய இராமன், நண்பு வாய்ந்த மனத்தோடு விரும்பி (அடைந்து) நிறைவுடையனுயினுன்.

கு :—மாயம் – மயக்கம்=திரிபுணர்ச்சி. மாயம் நீங்கிய மனம் என்றது யோகியருள்ளத்தை. மறை என்றது, மறைமுடியாகிய உபநிடதத்தை. திருமாலே இராமனுகத் தோன்றுதலின், திருமால் தங்கும் இடங்கள், இராமன் புகுந்து அமர்ந்த பன்னசாலைக்கு உவமம் ஆயின. 'முன்னமே துயின்றருளிய முதுபயோததியோ, பன்னகாதிபப் பாயலோ பச்சையாலிலையோ, சொன்ன நான்மறைச் சுருதியோ கருதிநீ யெய்த, என்ன மாதவம் செய்ததிச் சிறுகுடி லென்றுன்' (வில்லி. கிருட்டிணன் றூது 80), 'ஆலிலை கிடக்கை தணந்து, வேலையி னிருக்கை திறம்பி, ஆதவனிடத்திலு மின்றி, அமரேச ஞமரசிருப்பு முனிந்து, மாகயிலை வெற்பொடு கஞ்ச மாதியிட முற்று மகன்று, கரைகாணுக் கோலமறை யுச்சி துறந்து, மாதவர் மனத்தை நெகிழ்ந்து, கோகனகை சொர்க்க மிகந்து, வளர்பாயற் கோளரவை விட்டு விகங்க பூபதி கழுத்தை மறந்து, கோசலை வயிற்றிலிருந்த பெருமாளே' (இராமசெயத் திருப்புகழ். 5) என்பவை இங்கே ஒப்புநோக்கத்தகும். (49)

## இராமன் உட்கோள்

**2184.** மேவு கான மிதிலையர் கோன்மகள்
பூவின் மெல்லிய பாதமும் போந்தன
தாவி லெம்பிகை சாலை சமைத்தன
யாவை யாது மிலார்க்கியை யாதவே.

"மேவு கானம், மிதிலையர்கோன் மகள்
பூவின் மெல்லிய பாதமும் போந்தன;
தாவில் எம்பி கை சாலை சமைத்தன;
யாவை யாதும் இலார்க்கு இயையாதவே."

பொ :—(இராமன்), மிதிலையார் மன்னன் மகளாகிய சீதையின் பூவினும் மெல்லிய அடிகளும் (கல்லும் முள்ளும்) பொருந்திய காட்டில் நடக்கவல்லனவாயின ; குற்றமற்ற என் தம்பி இலக்குவன்கைகள் பன்ன சாலை அமைக்கவல்லனவாயின; ஒன்றும் இல்லாதவர்க்கு இயையாதவை எவை ? (எல்லாம் இயையும்)

கு :—இதுவும் இதனை அடுத்துப் பின்வரும் இரண்டு செய்யுளும் ஒரு தொடர். மிதிலையர்கோன்மகள் பாதமும் கானம் போந்தன ; எம்பிகை சாலை சமைத்தன ; யாதும் இலார்க்கு இயையாத யாவை? என்று சிந்தித்து இளையவற் பார்த்து, 'நீ இது என்று கற்றனை !' எனக் கண் பனி சோர்கின்றான், 'இடர் உனக்கு இழைத்தேன்' என்றான் என 2186-ஆம் பாடலுடன் இயைந்து முடியும். மேவுகானம் என்பதற்குக் காட்டின் கடுமைதோன்றக் கல்லும் முள்ளும் பொருந்திய கானம் என உரை வரையலாயிற்று. தா - குற்றம். இராமன் என்னும் எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. (50)

இச்செய்யுளின்பின் 19, 22, 25, 29, 41, 45, 52 என்னும் குறி யீடுள்ள சுவடிகளில் பின்வருமாறு ஒரு செய்யுள் காணப்படுகிறது.

2184 (a) எய்த வின்னல் வந்த போதி யாவரேனும் யாவையும்
செய்ய வல்ல ரென்று கொள்க சேணெறிக்க ணீங்கிட
மைய கண்ணி செய்ய பாதம் வல்ல வாய மற்றிவன்
கைக ளின்று பன்ன சாலை கட்ட வல்ல வாயவே.

புறத்திரட்டுள்ளும் காணப்படும் இச்செய்யுள், மேற்பாட்டிற் கூறிய வற்றையே கூறுகிறது; முன்பின் பாடல்களோடு தொடராத (வேறு பட்ட) சந்தமுடையதாயிருக்கிறது; ஆதலால் இதனை இடைச்செருகற் பாட்டென்று கொண்டு இங்கே சேர்க்கலாயிற்று.

## இராமன் இளையவனை நோக்கிக் கூறல் 2185—2186

2185. என்று சிந்தித் திளையவற் பார்த்திரு
குன்று போலக் குவவிய தோளிஞ
யென்று கற்றனை நீயிது போலெனுத்
துன்று தாமரைக் கண்பனி சோர்கின்ருன்.

என்று சிந்தித்து, இளையவற்பார்த்து, 'இரு
குன்று போலக் குவவிய தோளினுய்!
என்று கற்றனை நீ! இது போல்' எனுத்
துன்று தாமரைக் கண் பனி சோர்கின்ருன்;

பொ:—என்று எண்ணித் தம்பியை நோக்கி, இரண்டு மலைகள் போலத் திரண்ட தோள்களையுடையவனே! நீ இத்தொழிலை எப்பொழுது கற்றுக்கொண்டாய்! என்று தாமரை மலர் போன்ற கண்களிற் செறிந்த நீர்த்துளிகளைச் சிந்துகின்றவனுகி.

கு:—என்று என்பது முன்பாட்டிற் கூறியவற்றைக் குறித்து நின்றது. குவவு-திரட்சி. இது நீ என்று கற்றனை என இயைக்க. இது என்றது சாலையமைத்தலைச் சுட்டிநின்றது. போல் உரையசை. துன்றுதல் - செறிதல். சோர்கின்ருன் என்பது எச்சப்பொருள்பட நின்றது. சோர்கின்ருனுய் என்ருன் எனப் பின்வரும் பாடலொடு முடியும். (51)

2186. அடருஞ் செல்வ மளித்தவ ஞணையாற்
படரு நல்லறம் பாலித் திரவியிற்
சுடரு மெய்ப்புகழ் சூடினெ னென்பதெ
னிடரு னக்கிழைத் தேனெடு நாளென்ருன்.

'அடரும் செல்வம் அளித்தவன் ஆணையால்,
படரும் நல் அறம் பாலித்து, இரவியில்
சுடரும் மெய்ப் புகழ் சூடினென், என்பது என்?
இடர் உனக்கு இழைத்தேன் நெடுநாள்' என்ருன்.

பொ:—செறிந்த (தவச்) செல்வத்தை (எனக்குக்) கொடுத்த தந்தையின் கட்டளைப்படி பரவிய நல்ல அறங்களைக் காத்து, (அதனுல் விளைந்த பயனுகச்) சூரியனைப்போல் விளங்கும் உண்மையான புகழைத்தரித்தேன் என்று கூறுவது எவ்வாறு இயலும்? நெடுங்காலம் உனக்குத் துன்பத்தைச் செய்தவனுவேன் என்று கூறினன்.

கு :—செல்வம் என்றது இங்கே தவத்தினை. நல்லறம் என்றது விரதஞான ஒழுக்கங்களை. பாலித்து-காத்து. இரவி-சூரியன். சுடர்தல்-ஒளிவிடுதல். என் என்னும் வினு ஈண்டு மறுதலைப் பொருள் குறித்து நின்றது. இடர் - துன்பம். நெடுநாள் உனக்கு இடர் இழைத்தேன் என இயையும். (52)

### இலக்குவன் கூறுதல்

2187. அந்த வாய்மொழி யைய னியம்பலு
நொந்த சிந்தை யிளையவ னோக்கினு
னெந்தை காண்டி யிடரினுக் கங்குர
முந்தி வந்து முளைத்ததன் றேவென்றான்.

அந்த வாய் மொழி ஐயன் இயம்பலும்,
நொந்த சிந்தை இளையவன் நோக்கினுன்,
'எந்தை! காண்டி! இடரினுக்கு அங்குரம்
முந்தி வந்து முளைத்ததன்றே?' என்றான்.

பொ :—இராமன் அச்சொல்லைச் சொன்ன அளவில், வருந்திய மனமுடைய இலக்குவன், இராமனைப் பார்த்து, 'எந்தாய்! துன்பத்துக்கு முளை யான் கருவாய்ப் புகுமுன்னரே (என் பழவினையால்) வந்து தோன்றியதன்றே?' என்றான்.

கு :—ஐயன், அந்த வாய்மொழி இயம்பலும் என இயைக்க. ஐயன் என்பது இராமனைக் குறித்துநின்றது. வாய்மொழி – சொல். அந்த வாய்மொழி என்பது முன்பாட்டில் 'இடருனக்கிழைத்தேன் நெடுநாள்' என்பதனைச் சுட்டியது. நோக்கினுன் என்பது முற்றெச்சம். நோக்கி என்றான் என இயையும். காண்டி முன்னிலையசை. இடர் – துன்பம். அங்குரம் – முளை. முந்தி - (யான் கருவிற்புகும்) முன். இடர் உனக்கு இழைத்தேன் நெடுநாள்' என்ற இராமனை நோக்கி உனக்குப் பணிவிடை செய்தலால் உளதாவது இன்பமே; துன்பம் அன்று; நீ மணிமுடி தாங்கி அரியணைமீது வீற்றிருக்கும் கோலம் காணுது சடைமுடி தாங்கித் தவமேற்கொண்ட இந்நிலையில் உன்னைக் கண்டு யான் வருந்துவது என் பழவினைப் பயன் என்பான், இடரினுக்கு அங்குரம் முந்திவந்து முளைத்தது என்றான். இராமன் அரசுநிலை நீங்கித் தவநிலை மேற்கொண்டமையே இலக்குவற்குத் துன்பம் விளைத்தது என்பது, 'மன்னுஞ் செல்வத்துக்கு உண்டு வரம்பு இதற்கு என்ன கேடுண்டு? இவ்வெல்லையிலின்பத்தை உன்னுமேல் வரும் ஊதியத்தோடு' (2189) என்று இராமன் கூறுதலால் விளங்கும். (53)

## மீட்டும் இராமன் நினைதல்

**2188.** ஆக செய்தக்க தில்லை யறத்தினின்
றேக லென்ப தரிதென்று மெண்ணினா
னோகை கொண்டவ னுள்ளிடர் நோக்கினான்
சோக பங்கந் துடைப்பரி தாலெனா.

ஆக, செய்தக்கது இல்லை; அறத்தில் நின்று
ஏகல் என்பது அரிது என்றும் எண்ணினான்;
ஓகை கொண்டவன் உள் இடர் நோக்கினான்
சோக பங்கம் துடைப்பு அரிதால் எனா.

பொ :—அவ்வாறு இலக்குவன் கூற, (தனக்குப் பணிபுரிதலில்) மகிழ்ச்சியுடையவன் மனத்துன்பத்தைக் கருதிய இராமன், (இவனுடைய) சோகமாகிய மாசு போக்குதற்கு அரியது; எனவும், அத்துன்பத்தை நீக்குதற்கு யான் செய்யத்தக்கது ஒன்றும் இல்லை; அதனை நீக்கும்பொருட்டு யான் மேற்கொண்ட நோன்பைக் கைவிடலும் இயலாது என்றும் எண்ணி.

கு :—ஆக என்பது முன்பாட்டிற் பயின்ற என்றான் என்னும் முற்றுச்சொல்லொடு இணைந்து என்றானாக என இயையும்; அசைநிலையாக்கலும் ஆம். அறம்-நோன்பு (சீவகசிந்தாமணி 386). எண்ணினான் முற்றெச்சம்; மேல்வரும் பாட்டில் என்றான் என்னும் வினைகொண்டது. ஓகை - உவகை=மகிழ்ச்சி. உள் இடர் – மனத்துன்பம். நோக்கினான் வினைப்பெயர்; இங்கே இராமனைச் சுட்டிநின்றது. பங்கம் - அழுக்கு. மாசு. துடைத்தல் - போக்குதல். (54)

## இராமன் மீட்டும் கூறுதல்

**2189.** பின்னுந் தம்பியை நோக்கிப் பெரியவன்
மன்னுஞ் செல்வத்துக் குண்டு வரம்பிதற்
கென்ன கேடுண்டிவ் வெல்லையி லின்பத்தை
யுன்னு மேல்வரு மூதியத் தோடென்றான்.

பின்னும் தம்பியை நோக்கி, பெரியவன்,
'மன்னும் செல்வத்துக்கு உண்டு வரம்பு; இதற்கு
என்ன கேடு உண்டு? இவ் எல்லையில் இன்பத்தை
உன்னு; மேல் வரும் ஊதியத்தோடு' என்றான்.

பொ :—மூத்தோனான இராமன், பின்னும், இலக்குவனைப் பார்த்து, (அரசச்) 'செல்வத்துக்கு எல்லை உண்டு; (கேடும் உண்டு); இந்தத் தவச்செல்வத்துக்கு என்ன அழிவு உண்டு? (ஓர் அழிவும் இல்லை; எல்லையும் இல்லை;) இந்தத் தவச் செல்வமாகிய வரம்பற்ற இன்பம் தருவதனை, மறுமைக்கண் எய்தும் பயனுடன் நினைக' என்று கூறி,

கு :—மன்னும் என்பது அசைநிலை; இடைச்சொல். இதற்கு என்று தான் மேற்கொண்ட தவச் செல்வத்தைச் சுட்டியவாறு. அரசச் செல்வத்துக்கு வரம்பு உண்டு எனவே, தவச் செல்வத்துக்கு வரம்பில்லை என்பதும், தவச் செல்வம் கேடற்றதெனவே அரசச் செல்வம் கேடடைவது என்பதும்; தவச் செல்வம் எல்லையில் இன்பம் தருவது எனவே, அரசச் செல்வம் எல்லையில் துன்பம் தருவது என்பதும் பெறப்படும். இன்பம் தருவதனை இன்பம் என்றான். இதனால் எல்லாவாற்றாலும் குறைவுடைய அரசச் செல்வத்தை நீங்கி, எல்லாவாற்றானும் நிறைவுடைய தவச் செல்வத்தை யான் பெற்றதுகொண்டு மகிழ்வதன்றி நீ வருந்துதல் தகாது என்றவாறு. "நற்றவம் பரவை ஞாலம் நாமுட னிறுப்பின் வையம், அற்றமில் தவத்திற் கென்றும் ஐயவி யனைத்து மாற்றாது" (2983) என்று திருத்தக்கதேவர் கூறியதும் இங்கு நோக்கத்தகும். உன்னு - நினை; முன்னிலையேவல். எல்லையில் இன்பத்தை மேல் வரும் ஊதியத்தோடு உன்னு என்று தம்பியைத் தேற்றி எனப் பின்வரும் பாடலோடு இணைந்து முடியும். ஊதியம்-இலாபம். (55)

19, 22, 25, 29, 45, 52 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இச் செய்யுளின் பின்,

2189 (a) தினைத்துணை வயிறிலாச் சிற்றெ றும்புகள்
வனத்திடைக் கரிகளும் வருந்தி வாழ்வன
அனைத்துள வுயிர்களும் யாவு மங்ஙனே
மனத்திடர் நீங்கின ரில்லை மன்னனே.

என்று ஒரு மிகைப்பாட்டுக் காணப்படுகிறது.

கவிக் கூற்று

2190. தேற்றித் தம்பியைத் தேவருங் கைதொழ
நோற்றி ருந்தன னேன்சிலை யோனப்பா
லாற்றன் மாதவ னுணையிற் போனவர்
கூற்றி னுற்றது கூறலுற் றாமரோ.

தேற்றித் தம்பியைத் தேவரும் கைதொழ
நோற்று இருந்தனன், நோன்சிலையோன்; இப்பால்
ஆற்றல் மாதவன் ஆணையில் போனவர்
கூற்றின் உற்றது கூறலுற்றும் அரோ.

பொ:—வலிய வில்லினையுடைய இராமன் இலக்குவனைத் தெளிவித்துத் தேவரும் வணங்கும்படி நோன்புகளைச் செய்துகொண்டு, சித்திரகூடமலையில் இருந்தான்; இனி ஆற்றலையுடைய பெரிய தவத்தினனான வசிட்டமுனிவனுடைய கட்டளையால் (கேகயநாட்டுக்குச்) சென்ற தூதர்கூற்றால் மேல் நிகழ்ந்ததனைச் சொல்லத்தொடங்கினோம்.

கு:—நோன்சிலையோன் தம்பியைத் தேற்றித் தேவரும் கைதொழ நோற்றிருந்தனன் என இயையும். நோன்சிலை - வலிய வில். அரோ அசை. (56)

சித்திரகூடப் படலம் முற்றிற்று.

---

# 9. பள்ளி படைப் படலம்

தயரதன் உடம்பை ஈமப்பள்ளியில் படுக்கச்செய்து எரித்த நிகழ்ச்சியைத் தெரிவிக்கும் பகுதி ஆதலின், இது பள்ளி படைப் படலம் எனப் பெயர் பெறுகின்றது. 'எந்தாய் வெறுநிலத்துச் சேர்தியோ வென்றினைந் திரங்கிப் பள்ளி படுத்தார்களே' (சீவக–292) என்பதால் ஈமப் பள்ளியில் படுக்கச் செய்வதைப் 'பள்ளி படுத்தல்' என்று கூறும் வழக்குண்மை தெளியலாம். இப்படலம், 2, 5, 7, 19, 20, 22–25, 46–ஆம் பிரதிகளில் பள்ளியடைப் படலம் எனவும், 27–ல் பள்ளியரைப் படலம் எனவும், 1–ல் பள்ளிப்படலம் எனவும் வரையப்பட்டிருக்கின்றது. ஒரு சுவடியில் இப்படலமே, முதல் 116 செய்யுட்கள் பரதன் நகர்புகு படலம் எனவும், பின் 25 செய்யுட்கள் தகனஞ்செய் படலம் எனவும் இரண்டாகப் பிரிந்து காணப்படுகின்றது.

## படலப் பொருட் சுருக்கம்

இராமன் சித்திரகூட மலையில் இருந்தானாக, வசிட்டனால் அனுப்பப்பட்ட தூதுவர்கள் கேகயன்நகரை அடைந்து ஓலையைப் பரதனிடம் கொடுக்கின்றனர். அவ்வோலையைப் படித்துப் பார்த்ததும் பரதன் இராமனைக் காணலாம் என்னும் விருப்பத்தால் பொழுதும் நாளும் பாராமல் படையோடு புறப்படுகின்றான். புறப்பட்ட ஏழாம் நாள் கோசல நாட்டை அடைகின்றான். கோசல நாட்டு மக்கள் மனமகிழ்ச்சியின்றித் தொழில் இழந்து சோர்ந்து கிடப்பதையும் அயோத்தி நகரம் பொலிவிழந்து போக்குவரவும் இன்றி இருப்பதையும் கண்ட பரதன், அரண்மனையில் நிகழ்ந்ததொரு துன்பம் உண்டு என்பதை உய்த்துணர்கின்றான். இளவல் சத்துருக்கனுக்கும் இக்காட்சிகளைக் காட்டித் தன் கருத்தை யுணர்த்துகின்றான். சத்துருக்கனும் பரதன் கருத்தை உடன்பட்டுக் கூறுகின்றான். இவ்வாறு உரையாடிக்கொண்டு விரைந்து அரண்மனையை அடைந்து தந்தை தங்குதற்குரிய இடங்களில் எல்லாம் தேடியும் அவனைக் காணாது வருந்தி இராமனையேனும் கண்டு வணங்கலாம் என்ற எண்ணத்தோடு சென்றுகொண்டிருக்கையில், கைகேயியின் தோழி ஒருத்தி வந்து, 'தாய் அழைக்கின்றாள்' என்றுளாகப் பரதன் தாயை அணுகி வணங்கக் கேகய நாட்டிலுள்ள தந்தை முதலியோரின் நலங்களை அவள் வினவ, 'நலம்' என மறுமொழி கூறிவிட்டுத் 'தந்தையார் எங்குளார்?' என்று பரதன் வினவுகின்றான். 'நுந்தை வானவர் கைதொழ வானுலகில் உள்ளான்; நீ வருந்தாதே' என்று கைகேயி கூறுகின்றாள். அதுகேட்ட பரதன் மிக வருந்தி, 'இச்சொல்லை நீயலது வேறு யாரேனும் சொல்லுவரோ?' என வெறுத்துக் கூறிவிட்டுத் தந்தையைக் குறித்துப் பலவகையாகக் கூறிப் புலம்புகின்றான்.

புலம்பிய பரதன் பின்னர்த் தேறி எனக்குத் தந்தை முதலிய எல்லா உறவினரும் இராமனே ஆதலால் அவன் அடிகளை வணங்கினாலன்றி என் துன்பம் தீராது என்கின்றான். கைகேயி, 'அவன் தேவியோடும் தம்பியோடும் காட்டில் உள்ளான்' என்கின்றாள். அச்சொல்லைக் கேட்ட பரதன் நெருப்பை யுண்டவன்போலத் துடிக்கின்றான். இன்னும் கேட்பதற்குரிய துன்பங்கள் எத்துணை யுள்ளவோ! என்று நடுங்கி இராமன் காடு புகுந்த காரணத்தை வினவி அறிந்து இடியுற்ற நெடு மரம்போல் தரையில் விழுந்து புரண்டு புலம்பித் தனக்கு அரசுரிமை வேண்டித் தாய் செய்த வஞ்சனைக்காக அவளைப் பலவாறாகப் பழிக் கின்றான். தன்னையும் வெறுத்துக்கொள்கின்றான். என்ன கூறியும் தன் மனநிலையை மாற்றிக்கொள்ளாத தாய்முன் நிற்கவும் மனமிலனாய்க் கோசலையின் அடிவணங்கித் துன்பம் தீரலாம் என அங்குச் சென்று அவ்வன்னையின் தாளில் விழுந்து புலம்புகின்றான். அவன் படும் துயரை உணர்ந்த உயர்மனக் கோசலை, 'பரதன் மனந்தூயன்' எனத் தெளிந்து, 'ஐய! கைகயர் கோன்மகள் செய்த வஞ்சனையொன்றும் நீ யறிந்திலைபோலும்' என்கின்றாள். அச்சொல்லால் அவ்வன்னைக்கு முன்னிருந்த ஐயத்தை உணர்ந்து பெரிதும் வருந்திப் பரதன், தனக்கு ஏதும் தெரியாது என்பதைப் பல சூளுறவுகளால் புலப்படுத்துகின்றான். அதையுணர்ந்த கோசலை மறுவிலா மனத்துப் பரதனைத் தழுவி அழுது; 'நுங்குலத்து நின்னை ஒப்பார் யாருளர்? மன்னர் மன்னன் ஆதற்குரிய தகுதியுடைய பரத! நெடிது வாழ்க' என வாழ்த்திவிட்டுத் 'தந்தைக்கு மகன் செய்யவேண்டிய கருமத்தைச் செய்க' என்று ஏவுகின்றாள்.

பரதன் வசிட்ட முனிவரை அழைத்துக்கொண்டு எண்ணெய்த் தாழியில் இருக்கும் தந்தையின் உடம்பைக் கண்டு புலம்புகின்றான். பின் அந்தணர் வந்து தயரதன் உடம்பை எடுத்து ஒரு விமானத்தில் ஏற்றி நகர மாந்தரும் மன்னர்களும் கண்ணீர்விட்டு அழுது சூழ்ந்து வர அவ்விமானத்தை யானையின்மீது வைத்துச் சங்கு பேரி முதலிய வாத்தியங்கள் முழங்கச் சரயுநதிக்குக் கொண்டுபோகின்றார்கள். அங்கு ஈம விறகு அடுக்கிய ஈமப் பள்ளியில் தயரதன் உடம்பைக் கிடத் திச் செய்யவேண்டிய சடங்குகளைச் செய்துவிட்டு, 'பரத! ஈமக்கடனைச் செய்க' என்று அந்தணர் அழைக்கப் பரதன் தந்தையின் இறுதிக் கடன் செய்ய எழுகின்றான். அப்பொழுது வசிட்டன், 'அன்னை தீமையால் மன்னன் உன்னையும் துறந்தான்; ஆதலால் ஈமக்கடனுக்கு நீ உரியை அல்லை' என்று தடுக்கின்றான். அதையறிந்த பரதன் தனது நிலைக்குப் பெரிதும் வருந்தி இறந்தவன்போலச் சோர்ந்து விடுகின்றான். பின்னர்ச் சத்துருக்கனைக் கொண்டு அவ்விறுதிக்கடனை வசிட்டன் நிறைவேற்று கின்றான்.

தயரதனுடைய பொன்போன்ற உடம்பு செந்தீயில் எரிகின்றது. கோசலை முதலிய கோப்பெருந்தேவியர் மூவர் நீங்கலாக, அறுபதி

ஞயிரம் மனைவிமாரும் அத்தீயில் புகுந்து புண்ணிய உலகை நண்ணு கின்றனர். பிறகு மனைக்குத் திரும்பிய பரதன், வாலாமைக்குரிய பத்து நாட்களையும் அரிதிற் கழித்துப் பின் செய்யவேண்டிய இறுதிக் கடன் களை முறையாகச் செய்து முற்றுவித்து இருக்கின்ருன். மன்னன் இல்லாமல் நாடு இருப்பது மரபன்று என்ற எண்ணத்தால் வசிட்ட முனிவனும் நகரப் பெருமக்களும் மந்திரிமார்களும் படைத் தலைவர் களும் பரதனை அடைகின்ருர்கள்: என்பதே இப்படலத்தில் கூறப்படும் வரலாறு.

## வான்மீகத்தோடு கம்பர் வேறுபடும் இடங்கள்

(1) பரதன், தூதுவர் தன்பால் வருதற்கு முன் விடியற்காலத்தில், தயரதன் எண்ணெய் பூசிக்கொண்டு கழுதை பூட்டிய தேரில் தென் திசை நோக்கிச் செல்வதாகவும் பிறவாருகவும் கனவுகண்டு பிறர் தேற்ற வும் தேருது வருந்திக்கொண்டிருந்ததாக வான்மீகம் கூறும். கம்பர் அந்நிகழ்ச்சியைக் கூருமலே விடுத்துள்ளார். கோசலநாட்டையும் அயோத்தி நகரத்தையும் நேரில் கண்டு மக்களின் சோகத்தால் தயரதன் மரணத்தை உய்த்துணர வைப்பது காவியப் போக்கிற்குச் சிறப்புத் தரும் என்ற எண்ணத்தால் பரதன் கனவைக் கூருது விடுத்தார்போலும்.

(2) அயோத்திநகரத்தின் பொலிவிழந்த தன்மைகளையெல்லாம் தேர்ப்பாகனுக்குக் காட்டிக் கூறுவதாக வான்மீகம் கூறுகின்றது. கம்பர், சத்துருக்கனுக்குக் காட்டிக் கூறுவதாக அமைத்துள்ளார். தேர்ப்பாக னுக்குக் கூறுவதினும் தன்னேடு ஒத்த சிறப்புடைய தன் தம்பிக்குக் கூறுவதே பொருத்தமாகும் எனக் கருதி அவர் மாற்றிஞராதல்வேண் டும். சத்துருக்கன் பேச்சுக்கும் ஒரு வாய்ப்பு அளித்தது ஆகும்ன்றே!

(3) தயரதனை அவன் மாளிகையில் காணுத பரதன், தன் தந்தை கைகேயியினிடம் வைத்த பேரன்பால் அவள் மாளிகையில் தங்கி யிருப்பான் என எண்ணித் தாஞகவே கைகேயியின் மாளிகைக்குச் சென்றதாக வான்மீகம் கூறும். கைகேயி, தான் வரத்தால் பெற்ற அரசை ஆளும்பொருட்டுப் பரதன் வருகையை விழைவுடன் எதிர் பார்த்திருந்தமை புலப்படவேண்டி அவன் தந்தையையும் தமையனை யும் தேடிக்கொண்டிருக்கும் இடத்திற்குத் தன் தோழியை விடுத்துப் பரதனை அழைப்பித்ததாகக் கம்பர் அமைத்துள்ளார்.

(4) பரதன் கைகேயியைக் கடுமையாகப் பழித்துவிட்டுத் தரையில் உணர்ச்சியின்றிக் கிடந்து பின் உணர்வு வரப்பெற்றவஞய் எழுந்த பொழுது, தன்னைக் காணச் சுமந்திரன் முதலியோர் வந்திருப்பதைக் கண்டு, அவர்கள் தன் கருத்தை யுணரும்வண்ணம் மீண்டும் கைகேயி யைப் பழித்துக் கூறித் தான் அரசுபெறத் தாயுடன் கலந்து சூழ்ச்சி

செய்யவில்லை என்பதையும், இராமன் காடு புக்கது தனக்குத் தெரியாது என்பதையும் புலப்படுத்திப் புலம்புகின்றான். அப்பொழுது பரதன் புலம்பும் ஒலி கேட்டுக் கோசலை, சுமித்திரையைப் பார்த்துச் 'சிறந்த அறிவையுடைய பரதன் வந்திருப்பதாகத் தெரிகின்றது; அவனை யான் காண விரும்புகின்றேன்' என்று சொல்லிச் சுமித்திரையோடு பரதன் இருக்கும் இடத்திற்குப் புறப்பட்டாளாக, அவ்வேளையில் பரதன் சத்துருக்கனுடன் கோசலை மாளிகை நோக்கி வந்தான் என வான்மீகம் கூறும். சுமந்திரன் முதலியோர், பரதனைக் காண வந்தமையையும் அவர்கள் முன் பரதன் தன் உண்மையியல்பை விளக்கினமையையும், பரதனைக் காணக் கோசலை சுமித்திரையுடன் புறப்பட்டுச் சென்றமையையும் கம்பர் கூறவில்லை. இந்நிகழ்ச்சிகள் கதைத் தொடர்புக்கு இன்றியமையாதன அல்ல என்ற எண்ணத்தாலும் விரிவஞ்சியும் விடுத்தார்போலும்.

(5) தம்மைக் கண்டு அழுகின்ற கோசலையைக் கண்ட பரதனும் சத்துருக்கனும் கதறிக்கொண்டே அவளை அணைத்துக்கொண்டு அழுது சோர, அப்போது பெருந்துயரத்தோடு கோசலை, பரதனைப் பார்த்து, 'அரசுபெற ஆசைப்பட்ட உனக்கு உன் தாய் எளிதாக அவ்வரசாட்சியை வாங்கி வைத்திருக்கின்றாள்; நீ இனிதாக ஆளலாம்; என்னை இராமன் சென்றுள்ள காட்டிற்குக் கொண்டுபோய் விடு; இல்லையேல் நானும் சுமித்திரையும் புறப்பட்டுக் காடு புகுகின்றோம்' என்று நொந்து கூறினாளாக, அவள் உள்ளத்தைத் தெளிவிக்கும்பொருட்டுப் பரதன் பல சூளுரைகளைச் சொன்னான் என்று வான்மீகம் கூறும். கோசலையின் வாயில் இத்தகைய பொருண்மைச் சொற்கள் வந்ததாகக் கூறி அவளுக்கு மாசு ஏற்றுதலாகாது என்ற நல்லெண்ணத்தால் கம்பர், அவற்றையெல்லாம் விவரிக்காது, 'கைகயர் கோமகள் இழைத்த கைதவம் ஐய நீ அறிந்திலை போலுமால்' என்று மட்டும் கூறியதாகவும் அச்சொல்லுக்கே பொருது பரதன் சூளுரை புகன்றதாகவும் கூறியுள்ளார். கம்பர் செய்த இம்மாற்றத்தால் கோசலையின் பண்பு மிக உயர்ந்துள்ளது என்பது தெளிவு.

(6) தயரதனுடைய ஈமக்கடனைப் பரதனே செய்ததாக வான்மீகம் கூறும். பரதன் தயரதனுக்கு ஈமக்கடன் செய்ய வந்தபொழுது வசிட்ட முனிவன் தயரதன் கருத்தையுணர்த்தித் தடுத்தான் என்று கம்பர் கூறும் செய்தி வான்மீகத்தில் கூறப்படாவிடினும் இவ்வயோத்தியா காண்டத்துப் பதினாலாம் சருக்கத்தில், 'மந்திரபூர்வமாக எரிமுன் பிடித்த உன் கையையும் உன் மகனோடு உன்னையும் கைவிட்டேன்; எனக்கு நீவிர் ஈமக்கடன் செய்யலாகாது' என்று தயரதன் கைகேயியிடம் கூறியதாக வான்மீகத்து இருத்தலாலும், இராவணன் வதைக்குப் பிறகு துறக்கத்திலிருந்து வந்து தயரதன் இராமனுக்குக் காட்சி கொடுத்தும்

பேசுகையில் இராமன், 'புத்திரனேடு உன்னைக் கைவிடுகின்றேன்' என்று கைகேயியினிடம் கூறிய சாபமொழியைக் கைவிடுமாறு வரம் பெற்றதாக அந்நூலில் வருதலாலும் வசிட்டன் தடுத்த நிகழ்ச்சியைக் கூறுவதே முன்னுக்குப் பின் முரணுதல் இல்லாதது என்று உய்த் துணர்ந்து கம்பர் கூறியுள்ளார் எனக் கொள்ளுதல் தகும். கம்பர் வான்மீகத்தோடு வேறுபட்டுக் கூறும் கருத்துக்கள் மேலும் பல இருப்பினும் அவை எடுத்துக்கூறும் சிறப்புடையன அல்ல ஆதலின் இங்கு விரிக்கப்படவில்லை.

## படலப் பொருட் சிறப்பு

இப் பள்ளிபடைப் படலத்தில், கம்பர் கூறவேண்டிய கதை, "தூதுவர் கொணர்ந்த ஓலைகண்ட பரதன், சேனையோடு புறப்பட்டுக் கோசல நாட்டிலுள்ள அயோத்தியை அடைந்து அரண்மனையில் புகுந்து அரசனைக் காணுது தேடிக் கொண்டிருக்கும்போது, தாயின் அழைப்பை அறிந்து சென்று வணங்கி அவள்மூலம் தந்தை வான் புக்கதையும் தமையன் கான்புக்கதையும் அறிந்து வருந்தித் தாயைக் கடிந்து கூறிவிட்டுக் கோசலையை அடைந்து அழுது அரற்றுகின்ற போது கோசலை வினவிய சொல்லால் அவள் முன் தன்னை ஐயுற்றிருந் ததை அறிந்து, அவள் ஐயம் நீங்கப் பல சூளுரைகள் சொல்லக் கோசலை தெளிந்து பரதனைப் பாராட்டிவிட்டுத் 'தந்தைக்குச் செய்ய வேண்டிய ஈமக்கடன் செய்க' எனப் பணிக்கப் பரதன், வசிட்டனுடன் சென்று எண்ணெய்த்தாழியிலிருந்த தயரதன் உடம்பைக் கண்டு கலங்கிப் புலம்பாநிற்க, அந்தணர் அவ்வுடலைப் பொன் விமானத்தில் வைத்து யானைமேல் ஏற்றிக்கொண்டு, யாவரும் புலம்பிப் பின்தொடரச் சரயு நதியை அடைய, ஈமக்கடனைச் சத்துருக்கனைக் கொண்டு செய்து முடித்துப் பரதன் அரண்மனை அடைந்து பத்து நாள் கழித்து இறுதிக் கடன் முறையிற் செய்து முடித்தான்' என்பது.

சுருங்கிய இந்தக் கதை நிகழ்ச்சியை நூற்றுநாற்பத்தொரு செய் யுட்களால் விரித்துக் கூறும் கம்பர், கேகய நாட்டில் இருந்து பரதன் சேனையோடு புறப்பட்டதை ஒன்பது செய்யுளாலும், பரதன் கண்ட கோசல நாட்டின் இயல்பைப் பதினெரு செய்யுளாலும், அயோத்தி நகரத்தின் நிலையை ஏழு செய்யுளாலும், பரதன் தந்தையை நினைந்து புலம்புதலைப் பத்துச் செய்யுளாலும், பரதன் தாயை நிந்தனை செய்தலைப் பதினறு செய்யுளாலும், அவன் சூளுரையைப் பத்தொன்பது செய் யுளாலும், தயரதன் உடம்பைப் பள்ளிபடுத்த நிகழ்ச்சியைப் பத்தொன் பது செய்யுளாலும் ஏனைய செய்திகளை எஞ்சிய செய்யுட்களாலும் விரித்துக் கூறியுள்ளார்.

பரதன் சேனை செல்லுங்கால் முரசங்கள் முழங்குகின்றன. வேதியர்கள் வாழ்த்துகின்றார்கள். முரசங்களின் முழக்கத்தை வேதியர் வாழ்த்தும் ஒலி வென்று மேம்பட்டதாகக் கம்பர் கூறுகின்றார்.

"ஊறு கொண்ட முரசுமி ழோதையை
வீறு கொண்டன வேதியர் வாழ்த்தொலி"

என்பது காண்க. முரசங்களின் பேரொலியையும் வேதியர் வாழ்த்துகின்ற குரல் ஒலியையும் கேட்டுப் பழகியவர்க்குக் கம்பர் கூறும் இந்நிகழ்ச்சி புதுமையாகவே தோன்றும். எல்லா ஒலிகளையும் அடக்கி மேற்பட்டு ஒலிப்பது முரசு. அத்தகைய முரசின் பேரொலியை வேதியரின் வாழ்த்தொலி வீறுகொண்டு மேம்பட்டது என்று கூறும் கம்பர், ஒரு நுண்ணிய குறிப்பை எண்ணி உணருமாறு வைத்துள்ளார் என்பது ஊன்றி நோக்குவார்க்குப் புலனும். ஒருவர் இறந்தபின் கொட்டும் சாப்பறை நன்கு ஒலிசெய்யாது தவ்தவ்வென்று தாழ்ந்த ஒலியைச் செய்யுமாயின், 'மேலும் அவ்வீட்டில் ஒரு சாவு உண்டு' என்று மக்கள் உய்த்துணர்வதை இன்றும் சிற்றூர்களில் காணலாம். அம்முறைமை நினைவிற்கொண்டு கம்பர் பாடலை நோக்குவோமாயின், தயரதன் இறந்த குறிப்பையுணர்த்த முரசங்கள் தாழ்ந்து ஒலித்தன என்பதும் அத்தகைய முரசொலியையே வேதியர் வாழ்த்தொலி வீறுகொண்டது என்பதும் புலனும். ஊறுகொண்ட என்பதற்குக் குறுந்தடியால் தாக்குதல் கொண்ட முரசு எனவும், முரசு உமிழ்கின்ற ஊறுபாடு கொண்ட ஓதையை எனவும் கூட்டிப் பொருள் கொள்ளுமாறு இரட்டுற மொழிதலாகக் கூறியுள்ள திறம் காணலாம். 'ஊறுகொண்ட ஓதை' என்பதற்கு இயல்பான தன் ஒலியினின்றும் குறைதல்கொண்ட ஓசை என்பது பொருள். வேதியர் பரதனுக்கு வரப்போகும் துன்பத்தை நிமித்தங்களால் முன்னுணர்ந்தோராகலின் அத்துன்பம் அவனுக்கு வாராதிருக்க வேண்டி உரத்த குரலுடன் வாழ்த்துகின்றார்கள். தெய்வமுரசு வரப்போகும் துன்ப நிகழ்ச்சியை யுணர்த்தத் தாழ்ந்து மெத்தென ஒலித்தலாலும், மேற்கூறியவாறு அந்தணரின் வாழ்த்தொலி மிக்கொலித்தலாலும், முரசொலியை வாழ்த்தொலி வெல்வது இயல்வதாயிற்று. இந்த நுட்பம் தோன்றவே கம்பர் அவ்வாறு கூறியுள்ளார் என்பது புலனாகும் போது முன்தோன்றிய முரண்பாட்டிற்கு இடம் இல்லையாதல் காணலாம்.

இனி, கேகயநாட்டிலிருந்து புறப்பட்டு வந்த பரதன் நண்ணிய கோசலநாட்டைக் கூற வந்த கம்பர்,

'எந்திரத், தூறுபாகு மடையுடைத் தொண்முளை
நாறுபாய் வயற் கோசல நண்ணினன்'

என்கின்றார். கரும்பின் எந்திரத்திலிருந்து கருப்பஞ்சாறு பெருகுகின்றது. மன்னன் மரணத்தையும் இராமன் வனம்புக்கதையும் அறிந்த

உழவர்கள் இன்னது செய்வது என்பது அறியாது துன்பத்தால் திகைப்பு எய்தி இருக்கின்றார்கள். கரும்பு எந்திரத்தின் பக்கத்தில் தாழியை வைத்துக் கருப்பஞ்சாற்றை நிரப்பவும் வேற்றுத்தாழியில் மாற்றவும் மறந்தார்கள். எனவே எந்திரத்தில் ஊறுகின்ற கருப்பஞ்சாறு பெருகிக் கழனியில் உள்ள கால்வாயில் செல்கின்றது ; அங்கு நாற்றங்காலுக்குள் நீர்புகாவாறு அடைத்திருந்த மடையை உடைக்கின்றது ; ஒளிவாய்ந்த சிறிய நெல்முளைகளையுடைய நாற்றங்காலில் பாய்கின்றது. சிறு முளைகளையுடைய நாற்றங்காலுக்கு நீர் வேண்டுவதில்லை. நீர் பாய்ந்தால் அம்முளைகள் அழுகிக் கெட்டுவிடும். அத்தகைய ஒண்முளைகளையுடைய நாற்றங்காலில்தான் கருப்பஞ்சாறு பாய்கின்றது. அவ்வொண்முளை என்னுவது? தனக்குத் தேவையில்லாத கருப்பஞ்சாற்றின் பெருக்கால் பெரிதும் வருந்துகின்றது அம்முளை. இத்தன்மையான கோசலநாட்டைத்தான் பரதன் அடைந்ததாகக் கம்பர் கூறியுள்ளார். கோசல நாட்டிற்கு அடையாகக் கூறியுள்ள இந்நிகழ்ச்சியால் அவர் புலப்படுத்தக் கருதிய கருத்து யாது? என்று ஊன்றி நோக்குவோமாயின் ஒரு சிறந்த கருத்து அதில் அமைந்துள்ளதை அறியலாம். அம்முளைக்கு ஏற்பட்ட நிலைதான் தயரதனின் இளைய கான்முளையாகிய பரதனுக்கும் ஏற்படப்போகின்றது என்ற குறிப்பு அந்த அடையால் புலப்படுத்தியுள்ளார் கம்பர்.

இராமனை நோக்கப் பரதன் தயரதனுடைய இளைய கான்முளை என்பது தேற்றம். அவனுக்கு அரசபோகம் வேண்டாதது ஒன்று ; இளையவனாகிய அவனுக்கு அரசபாரம் பொருந்தாது என்பது மநு முதலாக வந்த முறையும் ஆகும். பரதனுக்குத் தேவையில்லாததும் அவன் மேற்கொள்ளற்குரிய முறையில்லாததும் ஆகிய அரசபாரம், மூத்தவற்குரித்து அரசு என்ற முறைமையையும் மீறித் தாய் செய்த முயற்சியால் அப்பரதன் தலைமேல் வந்து வீழ இருக்கின்றது என்ற குறிப்பு அந்த அடையினால் நன்கு பெறப்படுதல் காணலாம்.

எந்திரத்தூறுபாகு என்றது அரசபோகமாகவும், அது மடையை உடைத்தது என்றது, மூத்தவற்கு உரித்து அரசு என்ற முறையை மீறுவதாகவும், அது ஒண்முளை நாறுபாய்தலாவது, அரசபோகத்தை விரும்பாத இளங்கான்முளையாகிய பரதன்மேல் அவ்வரசபாரம் தாயின் முயற்சியால் வந்து வீழ்ந்து வருத்துவதாகவும் உள்ளுறை கொண்டு பிறிது மொழிதல் என்னும் அணியின்பால் படுத்துக. இவ்வாறு ஆழ்ந்து காண்பார்க்கு அரும்பொருள் சுரக்கும் அமுதசுரபியாய்க் கம்பர் கவிகள் திகழ்கின்றமை பலவிடங்களில் காணலாம்.

இனி, அயோத்தி நகரத்தின் துன்பக் காட்சிகளைக் கண்டு செல்லும் பரதன் வள்ளைபாடும் பாணர்களும், கூத்தர்கள், வள்ளல்களிடம் சென்று தம் திறமையைக் காட்டிக் களிறும் பிடியும் பொன்னும் கவர்ந்து

செல்வதைக் கண்டு பழகியவன், இப்பொழுது அவ்வாறு அவர்கள் கவர்ந்து செல்லக் கண்டிலன் என்பதைக் கூறப்புகும் கம்பர், 'கள்ளே மாக்கவர் கண்ணியன்' என்று பரதனைக் குறிப்பிடுகின்றார். 'வண்டுகள் பாடிவந்து தாமே தேனைக் கவர்ந்துண்ணுமாறு தலையில் சூடிய கண்ணியையுடைய பரதன்' என்பது அவ்வடிக்குப் பொருள். வண்டுகள் இசை பாடிக்கொண்டு வந்து அரும்புகளை அலர்வித்துத் தாமே தேனைக் கவர்ந்து உண்ணும் கண்ணியையுடையவன் ஆதலின், பாணரும் கூத்தரும் பாடியும் ஆடியும் வள்ளல்களை மகிழ்வித்துத் தாமே பரிசில் கவர்ந்து செல்லாமைக்கு வருந்துவானானன் என்ற குறிப்பு அவ்வடியால் பெறவைத்துள்ளமை காணலாம்.

துன்ப நிகழ்ச்சியைச் சொல்லும்பொழுதும் கொடுப்போரேத்திக் கொடார்ப்பழிக்கும் புலவர் மரபைக் கம்பர் விடாது கூறிச் செல்கின்றார். கோசலநாட்டில் நீர்நிறைந்த ஏரிகரையை அடுத்துள்ள வயலில் உள்ள பயிர், நீர் இல்லாமல் வாடும் காட்சியைக் காட்டுகின்றார். மன்னன் மரணத்தால் மக்கள் அடைந்த துன்பங் காரணமாக அவர்கள் வயலுக்கு மதகின் வாய்திறந்து புனல் வழங்கவில்லை. நீர்நிறை ஏரியருகில் இருந்தும் நீர்பெறாது வாடும் பயிரைக் கூறவந்த கம்பருக்கு ஓருவமை தோன்றுகின்றது. 'வன்கண் உலோபர் கடைத்தலைப் புலர்ந்து நிற்கும் பரிசிலர்போலவே' என்பது அவர் கூறும் உவமை. அருள் நோக்கம் இல்லாத வன்கண்மையுடைய உலோபிகள் தம் வீட்டில் நிறைந்த செல்வம் இருந்தும் பரிசிலர்க்கு மனம் நெகிழ்ந்து பொருளை வழங்காமையால் அப்பரிசிலர் அந்த லோபிகள் வாயிலில் வாடி நிற்பார்கள்; அவர்களைப் போலப் பயிரும் நீர்நிறைந்த ஏரியை அடுத்திருந்தும் உழவர், மதகின் வாய் திறந்து புனலை வழங்காமையால் வாடுகின்றன என்பது கருத்து. இவ்வுவமையின் ஏற்றத்தையும் கம்பரின் கருத்தோட்டத்தையும் காண்க.

அயோத்தி நகரத்தின் துன்பக் காட்சியைக் கண்ட பரதன், தன் தம்பியை நோக்கிக் கூறும் பகுதி சிறப்பு மிகுதியுடையது. பரதனது உய்த்துணர்ச்சியின் உயர்வைக் கம்பர் இங்கு நன்கு புலப்படுத்துகின்றார்.

'மன்னன் வைகும் வளநகர்போலும் ஈது, என்ன தன்மை யிளையவனே' என்ற வினா, மன்னன் இல்லாத நகரமாகவே அயோத்தி காணப்படுகின்றது என்பதை உணர்த்திநிற்றல் காணலாம். பின்னர் அன்னை மூலமாகத் தந்தை இறந்ததைத் தெரிந்துகொள்வதற்கு முன்னரே பரதன் அயோத்திநகரத்தின் அவலக் காட்சியைக் கண்டு அம்முடிவை வழியளவையால் உய்த்துணர்ந்து கூறுவதாக அமைத்தது சாலப் பொருத்தமுடையதாகக் காணப்படுகின்றது. இதற்கு மேலும் ஒரு கருத்தை அக்காட்சியால் உய்த்துணர்ந்து,

'சூல் தடங்கருங் கார்புரை தோற்றத்தான்
சேல் தடங்கண் திருவொடும் நீங்கிய
பால் தடங்கடல் ஒத்தது பார்'

என்று தன் தம்பிக்குக் காட்டிக் கூறுகின்ருன். 'சூல்கொண்ட பெரிய கரிய மேகத்தைப் போன்ற தோற்றத்தையுடைய திருமால் சேல்மீன் போன்ற பெரிய கண்ணேயுடைய திருமகளோடும் நீங்கப்பெற்ற பாற் கடலே இந்நகரம் ஒத்துளது பார்ப்பாயாக' என்பது பொருள். திருமால் திருமகளோடு நீங்கப்பெற்ற பாற்கடல் போன்றது அயோத்தி என்ற உவமையால், இராமன் சீதையோடு அந்நகரத்தை விட்டு நீங்கினுன் என்ற குறிப்பும் பெறப்படுதல் காணலாம். இவ்வாறு குறிப்புப் பொருள் செறியச் செய்த கம்பரின் மாண்புதான் என்னே!

மேலும் இப்படலத்தில் பரதன் இராமன்பால் வைத்துள்ள பேரன்பும், அந்த அன்பு காரணமாகப் பெற்ற அன்னேயைத் தூற்றிப் பேசும் வன்பும், கோசலேயிடம் சென்று கூறிய சூளுரையின் முன்பும் தெரியக் காணலாம்.

---

## 9. பள்ளி படைப் படலம்

### தூதுவர் பரதனுக்குத் தம் வரவுணர்த்துவித்தல்

2191. பொருவி றூதுவர் போயினர் பொய்யிலா
ரிரவு நன்பக லுங்கடி தேகினர்
பரதன் கோயிலுற் றூர்படி காரிரெம்
வரவு சொல்லுதிர் மன்னவற் கேயென்றூர்.

பொருவு இல் தூதுவர் போயினர் பொய்யிலார்
இரவும் நன் பகலும் கடிது ஏகினர்;
பரதன் கோயில் உற்றூர்; "படிகாரிர்! எம்
வரவு சொல்லுதிர் மன்னவற்கே" என்றூர்.

பொ :—(கேகயர்கோன் நகர்க்குப்) போயினவராகிய ஒப்பற்ற தூதுவர், பொய்ம்மையுள்ளம் இல்லாதவராய், இரவிலும் நண்பகலிலும் தங்குதலின்றி விரைந்து சென்று, பரதன் மாளிகையை அடைந்து "வாயில்காவலரே, அரசனுக்கு எங்கள் வரவைச் சொல்லுங்கள்" என்றூர்.

கு:—"போனரவரும் கேகயர்கோன் பொன்மா நகரம் புகவெய்தின்" (தைலமாட்டு படலம் - 77) என மேற்கூறியதை அனுவதித்தலின் 'போயினராகிய தூதுவர்' என மாற்றி அமைக்கவேண்டியதாயிற்று. போயினர் – வினைப்பெயர். தூதுவர்க்குரிய இலக்கணங்களில் குறைவின்றித் தலைசிறந்து நிற்றலின், 'பொருவில் தூதுவர்' என்றூர். தான் வகுத்துக் கூறுவோன், கூறியது கூறுவோன், ஓலை கொடுப்போன் என்ற மூவகைத் தூதுவரில் இத்தூதுவர் பின்னவராவர். கண்ணொளி மறைக்கும் இரவும் கதிர்மிகக் காயும் நடுப்பகலும் வழிநடப்போர் போக்குத் தவிர்தற்குரிய காலமாதலின் அக்காலத்தும் தவிராது நடந்தமை தோன்ற "இரவும் நன்பகலும்" எனவும் அவர் சென்ற விரைவு தோன்றக் 'கடிதேகினர்' எனவும், தவிராது செல்லுதற்குரிய காலத்தும் தங்கிச் செல்லும் பொய்ம்மையுள்ளத்துத் தூதுவர் இவரல்லர் என்பது தோன்றப் 'பொய்யிலார்' எனவும் கூறினர். பொய்யிலார், ஏகினர், உற்றூர் என்ற முற்றுக்கள் எச்சப் பொருளன. படிகாரர்–வாயிற்படி காப்போர்; 'படிகாரிர்' விளி. 'மன்னவன்' என்றது பரதனை. ஏகாரம் அசைநிலை. (1)

## பரதன் தந்தை நலம் கேட்டல்

2192. தூதர் வந்தன ருந்தைசொல் லோடெனக்
காதன் முந்திக் களிக்கின்ற சிந்தையான்
போது கென்னவுட் புக்கவர் கைதொழத்
தீதி லன்கொ றிருமுடி யோனென்றுன்.

தூதர் வந்தனர் உந்தை சொல்லோடு எனக்
காதல் முந்திக் களிக்கின்ற சிந்தையான்,
போதுகென்ன உள் புக்கவர் கைதொழத்
"தீது இலன்கொல்? திருமுடியோன்" என்றுன்.

பொ:—(வாயிற்காவலர் சென்று பரதனைக் கண்டு) 'உம் தந்தையின் சொல்லோடு தூதர் வந்துள்ளனர்' என்று கூறக் காதல் மிக்கு மகிழ் கின்ற மனமுடையவனுய், 'அத்தூதுவர் வருவாராக' எனச் சொல்ல, உள்புகுந்த தூதுவர் வணங்கி நிற்கப் பரதன், 'திருமுடி சூடிய தந்தை தீது இல்லாமல் இருக்கின்ருனே' என்று வினவினுன்.

கு:–சொல் என்பது ஆகுபெயராய்ச் சொல் வரையப்பெற்ற முடங்கலை உணர்த்திற்று. முந்துதல்–மிகுதல். தந்தை சொல்லைக் கேட்டற்கண் காதல் மிக்கமை உணர்த்தியவாறு. சிந்தையான் என்றது பரதனை. போதுக-வருக. அகரம் தொகுத்தல். பரதன் கூறிய சொல்லை வாயிற் காவலர் தூதுவர்க்குக் கூற அவர் சென்று வணங்க என்பார், விரைவு புலப்படப் "போதுகென்னவுட் புக்கவர் கைதொழ" என்று சுருங்கக் கூறினர். நலமாக உள்ளானே என்னது, 'தீதிலன்கொல்' என்றது, தயரதற்குத் தீது நிகழ்ந்துள்ளது என்பதைப் பரதன் வினவே புலப் படுத்தியமை யுணர்த்தவேண்டி. திருமுடியோன் என்றது தயரதனை. (2)

## இராம இலக்குவர் நலம் கேட்டல்

2193. வலிய னென்றவர் கூற மகிழ்ந்தன
னிலைகொள் பூணிளங் கோனெம்பி ராஞெடு
முலைவில் செல்வத்த ஞேவென வுண்டெனத்
தலையி னேந்தினன் ருழ்தடக் கைகளே.

வலியன் என்று அவர் கூற, மகிழ்ந்தனன்;
"இலைகொள் பூண் இளங்கோன் எம்பிராஞெடும்
உலைவில் செல்வத்தஞே?" என, 'உண்டு' எனத்
தலையின் ஏந்தினன் தாழ் தடக் கைகளே.

பொ :—அத்தூதுவர், 'நும் தந்தை தீது இன்றி வலிமையுடையவனாக இருக்கின்றான்' என்று சொல்லப் பரதன் மகிழ்ந்தவனாய், "எம்பிரானாகிய இராமபிரானோடு இலைத்தொழில் அமைந்த அணிகலன் அணிந்த இளங்கோ ஆகிய இலக்குவன் நீங்காத செல்வம் உடையவனாக இருக்கின்றானோ ?" என்று வினவ, அத்தூதுவர், செல்வத்தனே என்று உடன்பட்டுக் கூற, அதுகேட்ட பரதன் மகிழ்ச்சி மீக்கூர்ந்து முழந்தாள் அளவு தாழ்ந்துள்ள தன் பெரிய கைகளைத் தலைமேல் ஏந்திக் கூப்பினான்.

கு :—தயரதன் மரணத்தையும் இராம இலக்குவர் காடு புகுந்ததையும் அறிந்தவர் தூதுவர் ஆயினும் உண்மை கூறின் பரதன் விரைந்து புறப்படுதற்குத் தடை ஏற்படலாம் என்ற கருத்தால் 'வலியன்' என்றும் 'உண்டு' என்றும் கூறினர் ; "பொய்ம்மையும் வாய்மையிடத்த புரை தீர்ந்த நன்மை பயக்குமெனின்" (குறள். 292) என்ற கருத்தால். 'வலியன்' 'உண்டு' என்று இரண்டே சொற்களால் விடை கூறிய நயம் காண்க. தயரதன் வானுலகத்து வலியனாக இருக்கின்றான் எனவும், இராம இலக்குவர் கானத்து உலையாத ஞானச் செல்வராக இருக்கின்றார்கள் எனவும் மெய்ம்மையான பொருளும் அவ்விடையில் தோன்றுதல் காண்க. செல்வத்தனே என்றது 'உலைவில் செல்வத்தனோ' என்ற பரதன் வினாவில் இராமன் அரசச் செல்வத்திலிருந்து நீங்கிய குறிப்பு இயல்பாக அமைந்துள்ளமை நோக்குக. உலைதல்–அழிதல். எம்பிரானொடும் என 'ஒடு' உயர்பின்வழி வந்தது. தடக்கைகள் தலையினேந்தினமை கூறினர், அவர்களைத் தெய்வமாகவும் கொண்டமை தோன்ற. (3)

## திருமுகம் கொடுத்தல்

2194. மற்றுஞ் சுற்றத்து ளார்க்கும் வரன்முறை
யுற்ற தன்மை வினவி யுவந்தபி
னிற்ற தாகு மெழுதரு மேனியாய்
கொற்ற வன்றன் றிருமுகங் கொள்கென்றார்.

மற்றும் சுற்றத்து உளார்க்கும் வரன்முறை
உற்ற தன்மை வினவி உவந்தபின்,
"இற்றது ஆகும், எழுதரு மேனியாய்!
கொற்றவன் தன் திருமுகம் கொள்கெ"ன்றார்.

பொ :—வரன்முறையாக மற்றுமுள்ள சுற்றத்தார்க்கும் பொருந்திய தன்மைகளை வினவியறிந்து மகிழ்ந்தபின்னர், தூதுவர், "எழுதுதற்கரிய அழகிய மேனியையுடையவனே! மன்னவன் திருமுகம் இதுவாகும்; கொள்க" என்றனர்.

கு :—சிறந்தார் மூவரை வினவியறிந்தவாறே மற்றைய சுற்றத்தார் நலங்களையும் வினவியறிந்து மகிழ்ந்தனன் என்க. ஓவியம் வல்லோ ராலும் எழுத இயலாத பேரழகுடைமை விளக்க வேண்டிப் பரதனை 'எழுதரு மேனியாய்!' என்று விளித்தனர். இவ்வாறே இராமனும் "ஓவியத் தெழுதவொண்ணு வுருவத்தாய்" (வாலிவதை-78) என வாலியால் விளிக்கப்படுதலும் காணலாம். இற்றது என்றது, இது என்னும் பொருளது. கொற்றவன் இற்றது ஆகும் திருமுகம் என மாற்றி மன்னன் இறந்ததை உணர்த்தும் திருமுகம் என உண்மைப் பொருள் உணர்த்தியதாகவும் கொள்க. ஓலையைத் திருமுகம் என்றல் மங்கலவழக்கு. (4)

### பரதன் திருமுகம் பெறுதல்

2195. என்று கூறலு மேத்தி யிறைஞ்சினன்
பொன்றி ணிந்த பொருவி றடக்கையா
னின்று வாங்கி யுருகிய நெஞ்சினன்
றுன்று நாண்மலர்ச் சென்னியிற் சூடினன்.

என்று கூறலும், ஏத்தி இறைஞ்சினன்,
பொன் திணிந்த பொரு இல் தடக்கையால்
நின்று வாங்கி, உருகிய நெஞ்சினன்,
துன்று நாள் மலர்ச் சென்னியில் சூடினன்.

பொ :—என்று தூதுவர் சொல்லுதலும், எழுந்து நின்று பரதன் அம்முடங்கலைத் துதித்து வணங்கிப் பொன் அணிகலன் அணிந்த ஒப்பற்ற பெரிய கைகளால் வாங்கி உருகிய நெஞ்சினனாய் அன்று மலர்ந்த மலர்மாலை சூடிய தலைமேல் வைத்துப் பாராட்டினன்.

கு :—என்று கூறலும் நின்று என இயைக்க. இறைஞ்சினன், நெஞ்சினன் என்பன முற்றெச்சங்கள். ஏத்தி-துதித்து. பொன் என்றது, ஆகுபெயராய்ப் பொன்னாலாய வீரவளை முதலிய அணிகலன்களைக் குறித்தது. பொன் அழகு எனலுமாம். அரசன் அனுப்பிய ஓலையாதலின் அதன் பெருமை நோக்கி, நின்று ஏத்தி இறைஞ்சி வாங்கினன். தலைமேல் கொள்ளுதற்கேற்ற பெருமையுடையது என்பது புலப்படுத்த வேண்டிச் சென்னியில் சூடினன். சூடுதல் இங்குத் தலைமேற் கொள்ளுதல் என்னுங் கருத்தினது. (5)

### பரதன் மகிழ்ச்சி 2196–2197

**2196.** சூடிச் சாதனந் தோய்த்துடைச் சுற்றுமண்
மூடு தோட்டின் முடங்க னிமிர்த்தன
னீடு நோக்கிவந் தெய்திய தூதர்க்குக்
கோடி மேலு நிதியங் கொடுத்தனன்.

சூடிச் சாதனம் தோய்த்துடைச் சுற்று மண்
மூடு தோட்டின் முடங்கல் நிமிர்த்தனன்,
ஈடு நோக்கி, வந்து எய்திய தூதர்க்குக்
கோடி மேலும் நிதியம் கொடுத்தனன்.

பொ :—அவ்வாறு தலைமேற் கொண்டபின் இலாஞ்சனை பதித்துள்ள தாய் வாய்ப்புறத்தைச் சுற்றிக் களிமண்ணால் மூடியுள்ள ஓலையின் சுருளை அவிழ்த்து நிமிர்த்து அதில் எழுதப்பட்டுள்ள செய்தியை நோக்கி அறிந்து, அவ்வோலையோடு வந்து அடைந்த தூதுவர்க்குக் கோடிக்கும் மிகுதியாகப் பொன்னைக் கொடுத்தான்.

கு :—இடையில் அவிழ்க்கப்படாமல் இருப்பதற்குச் சுருட்டிய ஓலையின் வாய்ப்புறத்தில் களிமண் வைத்து முத்திரையிட்டு அனுப்புதல் பழைய மரபு. "மண்ணுடை முடங்கல்" (சிலப். புறஞ்சேரி. 76) எனப் படுதல் காண்க. சாதனம் - முத்திரை. தோடு - பனையோலை. நீண்ட ஓலையை முடக்கிக் கட்டியிருத்தலின் முடங்கல் எனப் பெயர்பெற்றது. ஓலை முடங்கியிருத்தலின் நிமிர்த்துப் படிக்கவேண்டியதாயிற்று. ஓலையில் இடப்பட்ட எழுத்து 'ஈடு' எனப்பட்டது. அது ஆகு பெயராய்ச் செய்தியை யுணர்த்திற்று. வாய்விட்டுப் படிக்காமல் கண்ணால் நோக்கி மனத்திற்குள் படித்தமை தோன்ற, 'நோக்கி' என்றார். அவ்வோலையில் எழுதியிருந்த செய்தி, "பரத! உன்னால் நிறைவேற்ற வேண்டிய அவசர காரியம் இருப்பதால் உடனே புறப் பட்டு வருக" என்பது. உடனே புறப்பட்டுச் சென்று இராமனைக் காணப்போகின்றோம் என்ற மகிழ்ச்சி மிகுதியால் தூதர்க்குப் பெரும் பொருளை அளித்தான் என்க. கோடி-புதிய ஆடை எனலும் ஆம். (6)

**2197.** வாணி லாநகை தோன்ற மயிர்புறம்
பூண வானுயர் காதலிற் பொங்கினான்
றுணி லாமலர் தூவினன் றம்முனைக்
காண லாமெனு மாசை கடாவவே.

வாள் நிலா நகை தோன்ற, மயிர் புறம்
பூண, வான் உயர் காதலில் பொங்கினன்;
தாள் நிலாம் மலர் தூவினன், தம்முனைக்
காணலாம் எனும் ஆசை கடாவவே.

பொ:—தன் அண்ணனாகிய இராமபிரானைத் திருவடிகளில் விளக்கம் மிக்க மலரைத் தூவி அருச்சித்துக் காணலாம் என்ற ஆசையின் தூண்டுதலால், ஒளிவாய்ந்த பற்கள் (சிரிப்பினால்) வெளித்தோன்ற, உடம்பெல்லாம் மயிர்க்கூச்செறிய மிக உயர்ந்த அன்பினால் மனமகிழ்ச்சி யுற்றான்.

கு:—'தாள்' என்றது இராமன் திருவடிகளை. பெரியோர் திருவடிகளில் மலர் சொரிந்து அருச்சித்துக் காணும் மரபு புலப்படுத்தியவாறு. பின் இராமபிரான் திருவடிநிலைகளைப் பெற்றுவந்து அருச்சனை செய்யும் நிகழ்ச்சிக்கு இவ்வாசை மூலமாதலும் இங்கு நோக்குக. நிலாம் மலர்-விளக்கம் மிக்க மலர். வாள்-ஒளி. 'நகை தோன்ற' என்றது, பல்புறந் தோன்றச் சிரித்தலை யுணர்த்திற்று. மகிழ்ச்சி மிகுங்கால் மெய்ம்மயிர் சிலிர்த்தல் இயல்பாதலின் மயிர்புறம் பூணல் கூறினார். பொங்குதல்-மகிழ்ச்சியில் மிகுதல். "தம்முனைத் தாளில் மலர் தூவிக் காணலாம் எனும் ஆசை கடாவலால் நகைதோன்ற, மயிர்புறம் பூணப் பொங்கினான்" என முடிக்க. (7)

### பரதன் புறப்பாடு

2198. எழுக சேனையென் றேவின னெய்தினன்
றொழுது கேகயர் கோமகன் சொல்லொடுந்
தழுவு தேரிடைத் தம்பியொ டேறினான்
பொழுது நாளுங் குறித்திலன் போயினான்.

'எழுக சேனை' என்று ஏவினன்; எய்தினன்
தொழுது, கேகயர் கோமகன் சொல்லொடும்,
தழுவு தேரிடைத் தம்பியொடு ஏறினான்;
பொழுதும் நாளும் குறித்திலன் போயினான்.

பொ:—'சேனை (அயோத்திக்குப்) புறப்படுக' எனக் கட்டளையிட்டு விட்டுக் கேகய மன்னனை எய்தித் தொழுது அம்மன்னன் அனுமதிச் சொல்லோடு புறப்பட்டு முழுத்தமும் நாளும் பாராமல் தனக்கென ஆயத்தமாக வந்திருந்த தேரில் தம்பி சத்துருக்கனனோடு ஏறிப் போனான்.

கு:—ஏவுதல்-கட்டளையிடுதல். கேகயர் கோமகனை எய்தித் தொழுது அவன் சொல்லொடும் புறப்பட்டுத் தேரிடைத் தம்பியொடு ஏறிப் போயினான் என வேண்டுஞ் சொல் வருவித்து முடிக்க. ஏவினன், எய்தினன், ஏறினன், குறித்திலன் என்பன முற்றெச்சங்கள். தழுவு தேர்-ஆயத்தமாகத் தன்னையடைந்த தேர். தழுவுதம்பி என இயைப் பினும் ஆம். பயணத்திற்குரிய கோளும் நாளும் குறியாமல் புறப் பட்டது இராமனைக் காணவேண்டும் என்ற ஆர்வத்தால் ஆகும். பொழுது – முழுத்தம். நாள் – நட்சத்திரம். 'குறித்திலன் போயினான்' என்றமையால், பரதன் புறப்பாடு பயணத்திற்கேலாத போழ்திலும் நாளிலும் வாய்த்தது என்பது பெறப்படும். (8)

## சேனை செல்லுகை 2199–2207

**2199.** யானை சுற்றின தேரிரைத் தீண்டின
மான வேந்தர் குழுமினர் வாளுடைத்
தானை சூழ்ந்தன சங்க முரன்றன
மீன வேலையின் விம்மின பேரியே.

யானை சுற்றின; தேர் இரைத்து ஈண்டின;
மான வேந்தர் குழுமினர்; வாள் உடைத்
தானை சூழ்ந்தன; சங்கம் முரன்றன;
மீன வேலையின் விம்மின பேரியே.

பொ :—(பரதன் போனபொழுது) யானைகள் தொடர்ந்து சுற்றிச் சென்றன; தேர்கள் ஆரவாரித்துக்கொண்டு நெருங்கிச் சென்றன; குதிரையை ஊர்தியாக உடைய வேந்தர் பலர் வந்து சேர்ந்து கொண்ட னர்; வாட்படையையுடைய காலாட்படை வந்து சூழ்ந்து கொண்டன; சங்குகள் ஒலிசெய்தன; முரசங்கள், மீன்களையுடைய கடலைப் போல முழங்கின.

கு :—மான்-குதிரை. 'அ' குறிப்புப் பெயரெச்ச விகுதி; 'காலகுருகு' என்புழிப் போல. மீன வேலைக்கும் ஈதொக்கும். மானவேந்தர் – குதிரையை ஊர்தியாக உடைய வேந்தர். மானவேந்தர் என்பதற்குப் பெருமையுடைய வேந்தர் எனப் பொருள் கொள்ளின் நால்வகைப் படையில் குதிரைப்படை கூறப்படாததாய் முடியும்; ஆதலின் மேலதே பொருள் என்க. 'வாளுடைத்தானை' என்றது காலாட்படையை. (9)

2200. கொடிநெ ருங்கின தொங்கல் குழுமின
வடிநெ டுங்கண் மடந்தைய ரூர்மடப்
பிடிது வன்றின பூணொளி பேர்ந்தன
விடிது வன்றின மின்னென வெங்குமே.

கொடி நெருங்கின; தொங்கல் குழுமின;
வடி நெடுங்கண் மடந்தையர் ஊர் மடப்
பிடி துவன்றின; பூண் ஒளி பேர்ந்தன;
இடி துவன்றின மின் என எங்குமே.

பொ :—பரதன் போகும் வழியெல்லாம் கொடிகள் நெருங்கின; மயிற்பீலியாலாய குஞ்சங்கள் திரண்டன; கூரிய நீண்ட கண்களை யுடைய பெண்டிர் ஊர்ந்து செல்லும் இளமையான பெண் யானைகள் நெருங்கிச் சென்றன; அம்மகளிர் அணிந்த அணிகலன்களின் ஒளி, இடி யொடு நெருங்கியுள்ள மின்னலைப்போல எங்கும் பெயர்ந்து வீசின.

கு :—வடி – கூர்மை; மாவடுவும் ஆம். பெண்டிர், களிற்றை ஊராது பிடியூர்ந்து செல்லுதல் மரபு. "பிடியின் மேல்வரு பிடிக்குல மநேக மெனவே, பெய்வளைக்கை மடமாதர் பிடிமீதின் வரவே" (கலிங் கத்துப்–287) என்பதும் காண்க. பூண் என்றது, பிடி மீது ஊர்ந்து செல்லும் மடந்தையர் அணிந்த அணிகலன்களை. இடியும் மின்னலும் மேகத்தில் ஒருங்கு தோன்றுதலின், 'இடி துவன்றினமின்' என்றார். பிடியின் ஒலிக்கு இடியும் பூணின் ஒளிக்கு மின்னலும் உவமை. பேர்தல் - விட்டு விட்டு வீசுதல். (10)

2201. பண்டி யெங்கும் பரந்தன பல்லியங்
கொண்டி யம்பின கொண்டலிற் கோதையில்
வண்டி யம்பின வாளியின் வாவுறுஞ்
செண்டி யங்கு பரியுஞ் செறிந்தவே.

பண்டி எங்கும் பரந்தன பல் இயம்
கொண்டு இயம்பின கொண்டலின்; கோதையில்
வண்டு இயம்பின; வாளியின் வாவுறும்
செண்டு இயங்கு பரியும் செறிந்தவே.

பொ :—வண்டிகளில் ஏற்றிக்கொள்ளப்பெற்றுச் சேனையின் எல்லாப் பக்கங்களிலும் பரவியிருந்த பலவகை வாத்தியங்கள் மேகமுழக்கம் போல முழங்கின; மைந்தரும் மகளிரும் அணிந்த மாலைகளில் வண்டு கள் (அவ்வாத்திய ஒலிக்குச் சுருதி கூட்டுவது போல) முரன்றன; அம்பு

போல் விரைந்து தாவிச் செல்கின்றனவும் செண்டு வெளியில் திரிவனவுமாய குதிரைகளும் அச்சேனையில் நெருங்கிச் சென்றன.

கு :—கோதை-மாலை. அம்பு, குதிரையின் விரைவுக்கு உவமை. இது தொழில் உவமம். "கணைவிடு விசைய......புரவி" (பெருங்-48-8-14) "பாய்மா......வாளியின் வருவ" (576) என்பன காண்க. செண்டு - செண்டுவெளி; வையாளி வீதி ஆகும். "வெம்பரியூர் செண்டு வெளி பார்த்து" (தெய்வீக உலா-23) என்பது காண்க. இனி, செண்டு ஆடலில் இயங்குதற்குரிய குதிரை எனப் பொருள் கொள்ளலுமாம். "புரவியிற் பொருவில் செண்டாடி" (160) என்பது காண்க. நால்வகைப் படையில் குதிரைப்படையை முன்னர்க் கூறியவர் வாளியின் வாவுறுதலும் செண்டியங்குதலுமாகிய சிறப்புடைமை பற்றி வேறு கூறினர். (11)

**2202.** தொளைமு கத்திற் சுருதி விளம்பின
வுளைமு கத்தின வும்பரி னேவிடில்
விளைமு கத்தன வேலையின் மீதுசெல்
வளைமு கத்தன வாசியும் வந்தவே.

தொளை முகத்திற் சுருதி விளம்பின;
உளை முகத்தின, உம்பரின் ஏவிடில்
விளை முகத்தன, வேலையின் மீதுசெல்
வளை முகத்தன, வாசியும் வந்தவே.

பொ :—மூக்குத் தொளையையுடைய முகத்தில் சுருதி போன்ற ஒலியைச் செய்வனவும், அழகுறக் கட்டிய வெண்கவரி அசையும் முகத்தையுடையனவும், விண்ணில் செல்லுமாறு செலுத்தினாலும் அச்செயலை முடிக்கவல்ல தன்மையையுடையனவும், கடலின்மேல் செலுத்தினாலும் செல்லுகின்ற வளைந்த முகத்தையுடையனவும் ஆகிய குதிரைகளும் அச்சேனையில் வந்து சேர்ந்தன.

கு:—சுருதி-இசை. உயர்ந்த சாதிக் குதிரைகள் ஆதலின் அவற்றின் கனைப்பு ஒலி இசையாக இனித்தன என்க. உளை-குதிரையின் தலையில் கட்டும் வெண்கவரி. "பரியுடை நன்மான் பொங்குளை யன்ன, அடைகரை வேழம் வெண்பூப் பகரும்" (ஐங்-13) என்பது காண்க. மண்ணில் மட்டுமேயன்றி விண்ணிலும் கடலிலும் செல்லும் தன்மையன என்க. இதனால் இக்குதிரைகள் பறக்கும் தன்மையன என்பது பெறப்படும். தொல்காப்பியரும் 'புள்ளியற்கலிமா' (தொல்-பொருள்-194) என்பர். இச்சிறப்புடைமை கருதி இக்குதிரைகளை வேறு கூறினர். (12)

2203. வில்லின் வேதியர் வாள்செறி வித்தகர்
மல்லின் மல்லர் சுரிகையின் வல்லவர்
கொல்லும் வேல்குந்தங் கற்றுயர் கொற்றவர்
தொல்லை வாரணப் பாகருஞ் சுற்றினர்.

வில்லின் வேதியர், வாள் செறி வித்தகர்,
மல்லின் மல்லர், சுரிகையின் வல்லவர்,
கொல்லும் வேல், குந்தம் கற்று உயர் கொற்றவர்,
தொல்லை வாரணப் பாகரும் சுற்றினர்.

பொ :—வில் நூல் உணர்ந்த வில் வீரர்களும், வாட் போரில் தேர்ந்த வாள் வீரர்களும், மற்போரில் வல்ல மல்லர்களும், உடைவாட் போரில் வல்ல வீரர்களும், பகைவரைக் கொல்லுதற்குரிய வேலும் எறிகோலும் கொண்டு போர்செயக் கற்று உயர்ந்த வீரர்களும், பழங் காலந்தொட்டுப் பயிற்சிபெற்ற யானைப்பாகரும் பரதனைச் சுற்றி வந்தார்கள்.

கு :—தநுர் வேதம் உபவேதங்களில் ஒன்ருகலின் அது வல்லோரை 'வில்லின் வேதியர்' என்ருர். வாளைப் பகைவர் மார்பில் செறிக்கும் திறமுடையோரை, 'வாள் செறிவித்தகர்' என்ருர். மல் என்றது உடம்பால் செய்யும் போர்த்தொழிலை; அது வல்லோர் மல்லர் எனப் படுவர். சுரிகை-உடைவாள். குந்தம்-எறிகோல். மதயானையை அடக் கும் பயிற்சியில் மிகப் பழகியவர் என்பது தோன்றத் "தொல்லைவாரணப் பாகர்" என்ருர். (13)

2204. எறிப கட்டின மாடுக ளேற்றினங்
குறிகொள் கோழி சிவல்குறும் பூழ்நெடும்
பொறிம யிர்க்கவு தாரிகள் போற்றுறு
நெறியின் மாக்களு முந்தி நெருங்கினர்.

எறி பகட்டு இனம், ஆடுகள், ஏற்று இனம்,
குறி கொள் கோழி, சிவல், குறும்பூழ், நெடும்
பொறி மயிர்க் கவுதாரிகள் போற்றுறும்
நெறியின் மாக்களும் முந்தி நெருங்கினர்.

பொ :—ஒன்றை ஒன்று தாக்குகின்ற யானைகளையும் ஆடுகளையும், ஆனேறும், எருமை ஏறும் ஆகிய ஏற்றினங்களையும், தலைவன் குறிப் பையே தம் குறிப்பாகக் கொள்கின்ற கோழிகளையும், சிவல்களையும், காடைகளையும், நீண்ட புள்ளிகளையுடைய மயிர்செறிந்த கவுதாரிகளையும்

விளையாட்டுப் போர்க்காகப் பாதுகாக்கின்ற நெறியினையுடைய மனிதர்களும் முற்பட்டு நெருங்கினர்கள்.

கு :—பகடு – யானை. ‘பைங்கட் பணைத்தாட் பகட்டுழவன்’ (புறப்-வெ-8, 5) என்புழியும் அச்சொல் அப்பொருளது ஆதல் காண்க. எறி என்னும் அடையை ஆடுகட்கும் ஏற்றினத்திற்கும் ஏற்றுக. குறிகொள் என்னும் அடையைச் சிவல் முதலிய பறவைகட்கும் கூட்டுக. மன்னனுக்கு மகிழ்ச்சியுண்டாக்கவேண்டி யானைப்போர், தகர்ப்போர், ஏற்றினப்போர், கோழிப்போர், காடைப்போர், கவுதாரிப் போர் முதலியவற்றை நிகழ்த்திக் காட்டுபவர் ஆதலின் பரதனோடு முந்தி நெருங்கிச் சென்றார்கள். இவர்களைத் தொல்காப்பியர், ‘பாலறிமரபிற் பொருநர்’ (தொல் - பொருள் – 75) என்பர். இத்தகைய விளையாட்டைக் கண்டு மன்னரும் மக்களும் மகிழ்வதுண்டு. சேரமான் பெருமாள் நாயனர், சுந்தரமூர்த்திநாயனரோடு, “ விலக்கரும்போர்த்தகர்ப் பாய்ச்சல் கண்டருளி, வென்றிபெற, மலைக்குநெடு முட்கணைக்கால் வாரணப்போர் மகிழ்ந்தருளி, அலைக்குமறப் பலபுள்ளின் அமர்விரும்பி அமர்கின்றார்.” (பெரியபு-கழறிற்றறி-126) என்றதும், “இருசிறை வாரணப்போரும் இகன்மத வாரணப்போரும் இனைய கண்டே” (கலிங்-276) “கரியொடு கரியெதிர் பொருத்தி” (160) என்பனவும் காண்க. கவுதாரி தனியே கூறப்படுகின்றமையால் சிவல் என்பது காடையின் வகையைச் சேர்ந்த பறவையாகக் கொள்ளவேண்டும். (14)

**2205.** நிறைந்த மாந்தர் நெருங்கினர் நெஞ்சினிற்
பறந்து போதுங்கொ லென்று பதைக்கின்றார்
பிறந்து தேவ ருணர்ந்து பெயர்ந்துமுன்
னுறைந்த வானுறு வார்களை யொக்கின்றார்.

நிறைந்த மாந்தர் நெருங்கினர் நெஞ்சினில்,
‘பறந்து போதும்கொல் ?’ என்று பதைக்கின்றார்;
பிறந்து தேவர் உணர்ந்து, பெயர்ந்து முன்
உறைந்த வான் உறுவார்களை ஒக்கின்றார்.

பொ :—அறிவு நிறைந்த மாந்தர்களாய்ப் பரதனைத் தொடர்ந்து நெருங்கிச் சென்றவர்கள், (நடந்துசென்றால் அயோத்தியை விரைந்து சேர முடியாமையின்) ‘பறந்து போவோமோ’ என்று நெஞ்சில் நினைந்து அயோத்திக்குச் செல்லப் பதைக்கின்றார்கள்; அவ்வாறு பதைக்கின்றவர்கள், தேவர், மண்ணுலகில் பிறந்து பின் தாம் தேவராக இருந்தவர் என்பதை யுணர்ந்து மீண்டும் முன் தாம் தங்கியிருந்த விண்ணுலகை அடைய விரும்பிப் பதைக்கின்றவர்களை ஒத்துள்ளார்கள்.

கு :—கேகய நாட்டில் இருந்து அயோத்திக்குப் பரதனோடு செல்லும் மக்கள் மனநிலையை விளக்கியவாறு. மக்கள் பறந்து போகலாமா என்று எண்ணுகின்றார்கள்; இயலாமையால் பதைக்கின்றார்கள். தேவர்கள் மனிதராகப் பிறந்து, பின் தாம் தேவர் என்பதை யுணர்ந்து மீண்டும் முன்னிருந்த பொன்னுலகிற்குப் போக மனத்தால் விரைகின்றார்கள்; மனித உடம்பு தடையாயிருத்தலின் இயலாமல் பதைக்கின்றார்கள். பரதனோடு செல்லும் மாந்தர்க்கும் மக்களாகப் பிறந்த தேவர்க்கும் மனத்தால் விரைதலும் உடம்பால் இயலாமையும் பதைத்தலும் பொதுத்தன்மைகளாம். பதைத்தல்–துடிதுடித்தல். இராமனைத் தன்பால் கொண்ட சிறப்பால் அயோத்தி விண்ணுலகம் போன்றதென்பதும் (97, 98) அச்சிறப்பு இன்மையால் கேகய நாடு மண்ணுலகம் போன்றதென்பதும் தெளிக. நெஞ்சினால் பறந்துபோதுங்கொல் எனவும் நெஞ்சினைப் போலப் பறந்து போதுங்கொல் எனவும் பொருள் கொள்ளலாம். (15)

**2206.** ஊன ளைந்த வுடற்குயி ராமெனத்
தான ளைந்து தழுவின தண்ணுமை
தேன ளைந்து செவியுற வார்த்தென
வான ளைந்தது மாகதர் பாடலே.

ஊன் அளைந்த உடற்கு உயிர் ஆம் எனத்
தான் அளைந்து தழுவின தண்ணுமை;
தேன் அளைந்து செவி உற வார்த்து என
வான் அளைந்தது மாகதர் பாடலே.

பொ :—அந்தச் சேனையில் தசையோடு கலந்தியன்ற உடம்பிற்கு உயிர்போலப் பல இசைக் கருவிகளோடு கலந்து அவற்றை ஒழுங்கு பெறத் தழுவி இயக்கின மத்தளவோசைகள்; தேனைக் கலந்து இசையைச் செவியில் பொருந்த வார்த்தாற்போல மாகதர் பாடும் பாடல் விண்ணுலகத்தை யடைந்து இனித்தது.

கு :—எழுவகைத் தாதுக்களில் தசையின் கூறு உடற்கண் மிக்கிருத்தலின் 'ஊனளைந்த உடல்' என்றார். எழுவகைத் தாதுக்களாலாய உடம்பு போன்றன ஏனைக் கருவிகளின் இசை, அவ்வுடம்பை இயக்கும் உயிர் போன்றது, ஏனைக் கருவிகளின் இசைகளை ஒழுங்கு பெற இயக்கும் தண்ணுமை என்க. தண்ணுமை இசையினையும் மாகதர் பாடலையும் சிறப்பித்தவாறு. தண்ணுமை ஆகுபெயராய் அதில் எழும் ஓசையை யுணர்த்தியது. மாகதர் – இருந்து ஏத்துவோர். வான் ஆகுபெயராய் வானுலக மக்களை யுணர்த்தியது. (16)

2207. ஊறு கொண்ட முரசுமி ழோதையை
வீறு கொண்டன வேதியர் வாழ்த்தொலி
யேறு கொண்டெழு மல்ல ரிடிப்பினை
மாறு கொண்டன வந்திக ரேத்தரோ.

ஊறு கொண்ட முரசு உமிழ் ஓதையை
வீறு கொண்டன வேதியர் வாழ்த்து ஒலி;
ஏறு கொண்டு எழும் மல்லர் இடிப்பினை
மாறு கொண்டன வந்திகர் ஏத்து அரோ.

பொ :—குறுந்தடியால் தாக்குதல் கொண்ட முரசு ஒலிக்கும் ஓசையை, வேதமுணர்ந்த அந்தணர் பரதனை வாழ்த்துகின்ற வாழ்த்து ஒலிகள் வெற்றிகொண்டன; சிங்கவேற்றின் தன்மைகொண்டு எழுகின்ற மல்லர்கள் செய்யும் முழக்கத்தோடு துதிபாடுவோரின் துதிப் பாடல்களின் ஓசைகள் மாறுபட்டு ஒலித்தன.

கு :—ஊறு, முதல்நிலை நீண்ட தொழிற்பெயர்; உறுதலாவது குறுந்தடி முரசின் கண்ணில் பொருந்துதல்; ஆவது அடித்தல். முரசின் முழக்கத்தைக் காட்டிலும் வேதியர் வாழ்த்தொலி மிக்கொலித்தது என்க. ஊறுகொண்ட ஓதை எனக் கூட்டிக் குறைந்த ஒலி எனவும் பொருள்கொள்க. ஏறு-சிங்க ஏறு. மல்லர் இடிபோன்று முழங்கும் முழக்கத்தை இடிப்பு என்றார். மாறுகொள்ளுதலாவது இடிப்பிற்குப் பகையாய் அதனின் மிக்கொலிப்பது. வந்திகர்-நின்று கொண்டு துதிபாடுவோர். முரச முழக்கமும் மல்லர் முழக்கமும் அச்சேனையில் எழுந்தாலும் வாழ்த்தொலியும் ஏத்தொலியுமே மிக்கொலித்தன என்பது கருத்து. இதனால் முரசங்கள் தீமைக்கு அறிகுறியாக இயல்பாகவே குறைந்த ஒலியுடைய ஆயின; மல்லர் இடிப்பும் அன்ன என்பது உணரலாம். இக்காலத்தும் பறையின் தணிந்த ஓசையைக் கொண்டு பின்னர்த் தீமை நிகழ்தலை யுய்த்துணர்தல் உண்டு. (17)

### பரதன் கோசலநாட்டை அடைதல்

2208. ஆறுங் கானு மகன்மலை யுங்கடந்
தேறி யேழ்பக னீந்திப்பி னெந்திரத்
தூறு பாகு மடையுடைத் தொண்முளை
நாறு பாய்வயற் கோசல நண்ணினன்.

ஆறும் கானும் அகல் மலையும் கடந்து
ஏறி, ஏழ் பகல் நீந்திப் பின், எந்திரத்து

ஊறு பாகு மடை உடைத்து ஒள் முளை
நாறு பாய் வயல் கோசலம் நண்ணினன்.

பொ :—ஆறுகளையும் காடுகளையும் பெரிய மலைகளையும் ஏழுநாள் காறும் அரிதில் கடந்து சென்று பின் எட்டாவது நாளில்; கருப்பாலையில் பிழியும் கரும்பிலிருந்து சுரக்கின்ற சாறு (மிகுதியாக வழிந்து வாய்க் கால்வழியே சென்று) மடையை யுடைத்துக்கொண்டு ஒளிவாய்ந்த முளைகளையுடைய நாற்றங்காலில் பாய்கின்ற வயலையுடைய கோசல நாட்டைச் சேர்ந்தான்.

கு :—அரிதில் கடந்தமை தோன்ற 'நீந்தி' என்றார். இதனால் வழியின் கடுமை புலப்படுத்தியவாறு. ஊறுதல்-சுரத்தல். 'எந்திரத்து ஊறு பாகு' எனவே 'பாகு' என்றது இங்குக் கருப்பஞ் சாற்றையே என்றறிக. எந்திரத்துக்கு அடியில் உள்ள தாழியில் விழுந்து பயன்பட வேண்டிய கருப்பஞ்சாறு, மடையை யுடைத்துக்கொண்டு நெல் முளை நிறைந்த நாற்றங்காலில் பாய்கின்ற வயலையுடைய கோசல நாட்டைப் பரதன் அடைந்தான் எனவே, அந்நாட்டின் கதி பரதனுக்கும் உண்டாகும் என்ற குறிப்புப் புலப்படும். தயரதன் மூத்த மகனாகிய இராமனுக்கு உரித்தாய்ச் சிறப்புற வேண்டிய அரசச் செல்வம், அதை வேண்டாத இளமுளையாகிய பரதனுக்குக் கைகேசியால் வரன்முறையை மீறி வரப் போகின்றது என்ற உவமேயப் பொருளைப் பின்னிரண்டு அடிகள் ஒட்டணியாய் நின்று புலப்படுத்துதல் காண்க. முளை என முன்வந்தமையால் நாறு என்றது, ஆகுபெயராய் நாற்றங்காலை யுணர்த்திற்று என்க.

முளைகள் நன்றாக வெளிவரும் வரையில் நாற்றங்காலில் இருந்த நீரையும் வடித்து வெளிப்படுத்தி விடுவார்கள் உழவர்கள். மடையும் அடைபட்டிருக்கும். இவ்வாறு உழவர் செய்வது நாற்றின் நன்மை கருதியேயாம். அத்தகைய நாற்றங்காலில் கருப்பஞ்சாறு மடையுடைத்துக்கொண்டு பாய்வது, முளைக்கு நன்மை செய்ததாகாது. ஒள் முளை போன்ற பரதனுக்குக் கருப்பஞ்சாறு போன்ற அரசச் செல்வம் மடை போன்ற வரன்முறையை யுடைத்துவிட்டுத் தானே வர இருக்கின்றது என்ற குறிப்பைக் கோசல நாடே பரதனுக்கு அறிவிக்கின்றது என்க. (18)

## கோசலநாட்டின் அழகிழந்த தோற்றம் 2209–2217

**2209.** ஏர்து றந்த வயலிள மைந்தர்தோ
டார்து றந்தன தண்டலை நெல்லினு
நீர்து றந்தன தாமரை நீத்தெனப்
பார்து றந்தனள் பங்கயச் செல்வியே.

ஏர் துறந்த வயல்; இள மைந்தர் தோள்
தார் துறந்தன; தண்டலை நெல்லினும்
நீர் துறந்தன; தாமரை நீத்து எனப்
பார் துறந்தனள் பங்கயச் செல்வியே.

போ :—ஏர் அடிக்க வேண்டிய வயல்கள் எல்லாம் ஏரைத் துறந்திருந்தன; இளமை எழில் வாய்ந்த மைந்தர்களுடைய தோள்கள் மாலைகளைத் துறந்திருந்தன; குளிர்ந்த இடமாகிய வயலிலுள்ள நெற்பயிர்களும் நீரைத் துறந்திருந்தன; திருமகள், தாமரையை நீங்கினாற்போலக் கோசலநாட்டைத் துறந்தனள்.

கு :—பகடுகள் பூட்டப் பெற்ற நிலையில் கலப்பை 'ஏர்' எனப்படும். இராமனைப் பிரிந்து தயரதனை யிழந்த துன்பத்தால் மக்கள் யாவரும் செயலற்றிருந்தனர் ஆதலின் உழவேண்டிய வயல்கள் ஏரைத் துறந்தனவாய்த் தரிசாய்க் கிடந்தன. மைந்தர்க்கு அணிசெய்துகொள்ளும் மனஎழுச்சியின்மையின் அவர் தோள்கள் மாலைகளையணியாமல் இருந்தன. நெற்பயிரையுடைய வயல்கள் நீர்பாய்ச்சுவார் இன்மையின் நீரைத் துறந்து உலர்ந்துகிடந்தன. தண்டலை-குளிர்ந்த இடமாகிய வயல். நெல் ஆகுபெயராய் நெற்பயிரை யுணர்த்திற்று. இன், தவிர் வழிச்சாரியை. பங்கயச் செல்வி-திருமகள்; சீதேவி. பார் என்றது இங்குக் கோசலநாட்டை. கோசலநாடு பொலிவின்றி இருந்தது என்பார் பங்கயச் செல்வி பார்துறந்தனள் என்றார். (19)

**2210.** பிதிர்ந்து சாறு பெருந்துறை மண்டிடச்
சிதர்ந்து சிந்தி யழிந்தன தேங்கனி
முதிர்ந்து கொய்யுந ரின்மையின் மூக்கவிழ்ந்
துதிர்ந்து லர்ந்தன வொண்மல ரீட்டமே.

பிதிர்ந்து சாறு பெருந்துறை மண்டிடச்
சிதர்ந்து சிந்தி அழிந்தன தேங்கனி;
முதிர்ந்து, கொய்யுநர் இன்மையின், மூக்கு அவிழ்ந்து
உதிர்ந்து உலர்ந்தன ஒள் மலர் ஈட்டமே.

போ :—கொய்துகொள்வோர் இல்லாமையால் இனிமையான பழங்கள் கனிந்து, தம்மிடத்துள்ள சாறு வெளிப்பட்டுப் பெரிய நீர்த்துறையில் விரைந்து பாயுமாறு, பலவாகச் சிதறித் தரையில் சிந்தி அழிந்தன; ஒளிவாய்ந்த மலர்களின் திரள் முதிர்ந்து, கொய்வோர் இல்லாமையால் காம்பிலிருந்து அவிழப் பெற்றுத் தரையில் உதிர்ந்து உலர்ந்தன.

கு :—'முதிர்ந்து கொய்யுநர் இன்மையின்' என்றது முன்னும் பின்னும் இயைந்து இடைநிலைவிளக்காய்நின்றது. மண்டுதல் - விரைதல். கனி முதிர்தலாவது அளிதல். மூக்கு என்றது பூவின் காம்பினை. கொய்துண்போரும் கொய்து சூடுவோரும் இல்லாமைக்குக் காரணம் மக்கள் துன்பத்தில் ஆழ்ந்திருந்தல். (20)

2211. ஏய்ந்த கால மிதுவிதற் காமென
வாய்ந்து மள்ள ரரிகுந ரின்மையாற்
பாய்ந்த சூதப் பசுநறுந் தேறலாற்
சாய்ந் தொசிந்து முளைத்தன சாலியே.

'ஏய்ந்த காலம் இது, இதற்கு ஆம்' என
ஆய்ந்து மள்ளர் அரிகுநர் இன்மையால்,
பாய்ந்த சூதப் பசுநறும் தேறலால்
சாய்ந்து ஒசிந்து முளைத்தன சாலியே.

பொ :—இக்காலமே இவ்விளைவை அரிதற்கு ஏற்ற காலம் என்று ஆராய்ந்து அரிகின்றவர்களாகிய உழவர்கள் இல்லாமையால் வயலில் பாய்ந்த மாங்கனிகளின் பசுமையான தேன் போன்ற சாற்றால் அவ்வயலில் விளைந்த சம்பாக் கதிர்கள் எல்லாம் தரையில் சாய்ந்து ஒடிந்து வீழ்ந்து முளைத்துவிட்டன.

கு :—ஆய்ந்து அரிகுநராகிய மள்ளர் என்க. துன்ப மிகுதியால் வயலைப் பார்க்கவும் உழவர் வரவில்லை என்க. சூதம்-மா. மாம்பழச் சாறு தேன்போலுதலின் 'தேறல்' என்றார். கனி, கொய்குநர் இன்மையால் பிதிர்ந்து அழியச் சாறு வாய்க்காலில் மண்டி வயலில் பாய்கின்றது; அத்தேறலின் ஈரம் பட்டவுடன் முதிர்ந்து காய்ந்து ஒடிந்த கதிர்களில் உள்ள நெல்மணிகள் முளைத்தன என்க. (21)

2212. எட்கு லாமல ரேசிய நாசியர்
புட்கு லாவயற் பூசற் கடைசியர்
கட்கி லார்களை காதற் கொழுநரோ
டுட்க லாமுடை யாரி னுயங்கினர்.

எள் குலாம் மலர் ஏசிய நாசியர்,
புள் குலா வயல் பூசல் கடைசியர்,
கட்கிலார் களை, காதல் கொழுநரோடு
உள் கலாம் உடையாரின் உயங்கினர்.

பொ :—விளக்கமுடைய எள்ளின் மலரைப் பழித்த மூக்கினையுடைய ராய்ப் பறவைகள் மகிழும் வயலில் நின்று ஆரவாரம் செய்யும் உழ்வர் மகளிர், பயிர்களுக்குக் களை களையாதவர்களாய்க் காதற் கணவரோடு உள்ளத்தே ஊடல் உடையவர்போல வருந்திக் கொண்டிருந்தனர்.

கு :—குலாம்-விளக்கம்; பொருந்துதலுமாம். மகளிர் மூக்கிற்கு எள் ளின் பூவை உவமை கூறுவது புலவர் மரபு. இவ்வுழத்தியர் மூக்கு எள் மலரினும் எழில் மிக்கதாக இருத்தலின் அதை 'ஏசிய நாசியர்' என்றார். நாசி-மூக்கு. மூக்கு, எள் மலரைப் பார்த்து "நீ என்னைப் போன்ற அழ குடையையல்லை" எனப் பழித்துக் கூறியதாகக் கற்பனை செய்கின்றார். குலா-மகிழ்ச்சி பூசல்—ஆரவாரம். 'களை கட்கிலார்' என மாறுக. கட்கி லார்-களையாராய் ; முற்றெச்சம். உயங்குதல்-வருந்துதல். உழத்தியர், களை களையாமல் இருத்தற்கு இதுகாறும் காரணமாயிருந்தது கொழுந ரோடு கொண்ட ஊடல் உயக்கமே ஆதலின், தயரதனை இழந்த உயக் கத்திற்கு அதனை உவமை கூறினர். (22)

**2213.** அலர்ந்த பைங்கூ ழகன்குளக் கீழன
மலர்ந்த வாயிற் புனல்வழங் காமையா
லுலர்ந்த வன்க ணுலோபர் கடைத்தலைப்
புலர்ந்து நிற்கும் பரிசிலர் போலவே.

அலர்ந்த பைங்கூழ், அகன் குளக் கீழன,
மலர்ந்த வாயில் புனல் வழங்காமையால்
உலர்ந்த; வன்கண் உலோபர் கடைத்தலைப்
புலர்ந்து நிற்கும் பரிசிலர் போலவே.

பொ :—அகன்ற ஏரியின் கீழ் (அடைகரையில்) உள்ளனவாகிய வள மாக வளர்ந்த பசிய பயிர்கள், விரிந்த மதகின்வாயிலைத் திறந்து நீரை வழங்காமையால் வன்கண்மையையுடைய உலோபிகளிடத்துப் பொரு ளிருந்தும் அவர்கள் வழங்காமையால் அவர்கள் வாயிலில் வாடி நிற்கும் பரிசில் மாக்களைப்போல வாடின.

கு :—பைங்கூழ்-பசுமையான நெற்பயிர். அகன்குளம்-ஏரி. செல்வ மிக்க மாளிகை வாயிலில் இருந்தும் அம்மாளிகையில் உள்ளவர் மன நெகிழ்ந்து பொருளை வழங்காமையால் பரிசிலர் வாடி நிற்பதுபோல, நீர் நிறைந்த ஏரியின் கரையை யடுத்திருந்தும் மதகைத் திறந்து நீர் வழங் காமையால் நெற் பயிர்கள் வாடுகின்றன. கீழனவாகிய பைங்கூழ் என் றியைக்க. இப்பாடல் பல சுவடிகளில் 26-ஆம் பாடலாகவே காணப்படு கின்றது; ஒரு சுவடியில்மட்டும் 23-ஆம் பாட்டாக உள்ளது. மருதநிலத் தின் இயல்பைக் கூறும் இங்கு இப்பாடல் இருப்பதே பொருத்தம். (23)

2214. ஓது கின்றில கிள்ளையு மோதிய
தூது சென்றில வந்தில தோழர்பான்
மோது கின்றில பேரி முழாவிழாப்
போது கின்றில பொன்னணி வீதியே.

ஓதுகின்றில கிள்ளையும்; ஓதிய
தூது சென்றில, வந்தில தோழர்பால்;
மோது கின்றில பேரி, முழா; விழாப்
போது கின்றில பொன் அணி வீதியே.

பொ :—கிளிகளும் பேசவில்லை; காதலர்பால் சொல்லுதற்குத் தூதுகள் போக்குவரவு புரியவில்லை. முரசங்களும் முழவுகளும் அடிக்கப் படவில்லை; பொன் அணிகளால் அழகுசெய்யப்பெற்ற வீதியில் விழாக் களின் உலாக்களும் வரவில்லை.

கு :—ஓதிய-ஓதுதற்கு; செய்யிய என்னும் வினையெச்சம். தோழர் என்றது, இருபாற் காதலரையும் உணர்த்தும். தூது செல்லுதற்குரிய எல்லா உயிர்களும் அடங்கத் 'தூது' என்ற பொதுச்சொல்லால் கூறி னர். மோதுதல்-குறுந்தடியால் அடித்தல். விழா என்றது கடவுள் விழா, மணவிழா முதலியவற்றின் உலாக்களை. வீதியில் போதுகின்றில என்றமையால் அது பெறப்படும். போதுதல்-வருதல். இன்ப நிகழ்ச் சிகள் யாதும் நிகழவில்லை என்பது கருத்து. (24)

2215. பாட னீத்தன பண்டொடர் பாண்குழ
லாட னீத்த வரங்கொ டகன்புனல்
சூட னீத்தன சூடிகை சூளிகை
மாட நீத்தன மங்கல வள்ளையே.

பாடல் நீத்தன பண் தொடர் பாண் குழல்;
ஆடல் நீத்த அரங்கொடு அகன் புனல்;
சூடல் நீத்தன சூடிகை; சூளிகை
மாடம் நீத்தன மங்கல வள்ளையே.

பொ :—பண்ணைத் தொடர்கின்ற பாணர்களின் குழல், பாடுதலை விடுத்தன; அரங்குகளும் விரிந்த நீர்நிலைகளும் தம்மிடத்து மகளிர் ஆடும் ஆடலை நீங்கியிருந்தன; தலையணி சூடப்படுதலை நீங்கியிருந்தன; நிலா முற்றத்தையுடைய மாடங்கள் மங்கலமான வள்ளைப் பாடல்களை நீங்கியிருந்தன.

கு :—பொன்மிக்க மனைகளில் பாணர் குழல் பாடும் இயல்பின; துன்பத்தால் அவை பாடுதல் ஒழிந்தன. அரங்குகள், மகளிர் கூத்து ஆடுதலை நீங்கியிருந்தன; நீர்நிலைகள் அவர்கள் நீராடலை நீங்கியிருந் தன. தலையில் சூடுதற்குரிய அணி சூடப்படாமல் இருந்தன. சூடிகை-தலையில் அணியும் பொன்னணி. வள்ளை-உலக்கைப் பாட்டு. (25)

**2216.** நகையி ழந்தன வாண்முக நாறகிற்
புகையி ழந்தன மாளிகை பொங்கழற்
சிகையி ழந்தன தீவிகை தேமலர்த்
தொகையி ழந்தன தோகைய ரோதியே.

நகை இழந்தன வாள் முகம்; நாறு அகில்
புகை இழந்தன மாளிகை; பொங்கு அழல்
சிகை இழந்தன தீவிகை; தேம் மலர்த்
தொகை இழந்தன தோகையர் ஓதியே.

பொ :—ஒளி வாய்ந்த முகங்கள் யாவும் சிரிப்பை யிழந்தன; மாளிகைகள் எல்லாம் மணம் வீசும் அகிற்புகையை இழந்தன; விளக்குகள் எல்லாம் மேலோங்கி யெரியும் அழற்கொழுந்தை இழந்தன; மயில் போன்ற சாயலையுடைய மகளிர் கூந்தல்கள் எல்லாம் தேன் நிறைந்த மலர் மாலைகளை இழந்தன.

கு :—கோசலநாட்டில் உள்ள மக்களின் முகங்களெல்லாம் எப்பொழுதும் புன்சிரிப்போடு விளங்குவன; மாளிகையில் மகளிர் கூந்தலுக்கு மணமூட்டல் முதலியவற்றிற்காக அகில் புகைந்துகொண்டே இருக்கும்; விளக்குகள் எரிந்து கொண்டே இருக்கும்; மகளிர் கூந்தலில் எப்பொழுதும் மலர்மாலை சூடப்பட்டே இருக்கும்; இராமன் பிரிவாலும் தயரதன் மரணத்தாலும் இப்பொழுது அந்நிலை மாறுபட்டன என்பது கருத்து.(26)

**2217.** நாவி னீத்தரு நல்வளந் துன்னிய
பூவி நீத்தென நாடு பொலிவொரீஇத்
தேவி நீத்தருஞ் சேணெறி சென்றிட
வாவி நீத்த வுடலென லாயதே.

நாவின் நீத்தரும் நல் வளம் துன்னிய
பூவி நீத்து என நாடு பொலிவு ஒரீஇத்
தேவி நீத்து அரும் சேண் நெறி சென்றிட
ஆவி நீத்த உடல் எனல் ஆயதே.

பொ :—சீதை நீங்கிக் கடத்தற்கு அரிய நெடிய காட்டு வழியில் சென்று விட்டதால், புலவர்கள் புகழ்ந்து முடித்தற்கரிய நல்ல வளங்கள் நெருங்கியிருந்த கோசல நாடு, திருமகள் நீங்கிய தன்மைபோல் பொலிவு இழந்து, உயிர் நீங்கிய உடல் என்னலாம்படி செயலற்றுக் கிடந்தது.

கு :—நா என்றது புலவர் நாவினை. துன்னிய நாடு என்று இயைக்க. பூவி—தாமரைப் பூவிலிருக்கும் திருமகள். நாடு பொலிவிழந்தமைக்குத் திருமகள் நீங்கினமையும். தேவி நீங்கினமைக்கு ஆவி நீங்கினமையும் செயலற்றுக் கிடந்த நாட்டிற்கு ஆவிநீத்த உடலும் உவமை. புலவர் பாடும் நல்வளமுடைய கோசலநாடு, பொலிவிழந்து செயலிழந்து கிடந்தது என்பது கருத்து. ஒரீஇ—நீங்கி. '' ஊழிவாழ், திருநகர்த்திரு தீர்ந்தனளாமென்றான் '' (38) என மேல் வருதலும் காண்க. (27)

நாட்டின் நிலைகண்ட பரதன் நிலை

**2218.** என்ற நாட்டினை நோக்கி யிடருழந்
தொன்று முற்ற துணர்ந்தில னுன்னுவான்
சென்று கேட்பதொர் தீங்குள தாமெனா
நின்று நின்று நெடிதுயிர்த் தானரோ.

என்ற நாட்டினை நோக்கி, இடர் உழந்து,
ஒன்றும் உற்றது உணர்ந்திலன், உன்னுவான்,
'சென்று கேட்பது ஓர் தீங்கு உளது ஆம்' எனா,
நின்று நின்று, நெடிது உயிர்த்தான் அரோ.

பொ :—நேர்ந்துள்ள நிகழ்ச்சி ஒன்றையும் உணராதவனாகிய பரதன், மேற்கூறியவாறுள்ள கோசல நாட்டினை நோக்கித் துன்புற்று, 'அரண்மனைக்குச் சென்று யான் கேள்விப்படுதற்குரிய பெரிய தீங்கு உள்ளது' என்று நினைந்தவனாய் வழியில் நின்று நின்று பெருமூச்சு விட்டான்.

கு :—உணர்ந்திலன், வினையாலணையும் பெயர்; உணராத பரதன். தீங்கு உளதாமெனா உன்னுவான் உயிர்த்தான் என்று இயைக்க. உன்னுவான் முற்றெச்சம். நாடு இவ்வாறு பொலிவிழந்து இருத்தற்குக் காரணம் அரண்மனையில் பெரிய தீங்கு நிகழ்ந்திருத்தலே என அனுமானத்தால் அறிந்தான் என்க. பலவிடத்தில் நின்றமையுணர்த்த, 'நின்று நின்று' என அடுக்கினார். எத்தகைய துன்பத்தைக் கேள்விப்படப் போகின்றோமோ என்ற ஏக்கத்தால் வழியில் பல இடத்தில் நின்று நின்று நெடுமூச்சு விடலானான் என்க. (28)

## பரதன் நகரத்தின் நிலையை நோக்குதல் 2219–2225

**2219.** மீண்டு மேகியம் மெய்யெனு நல்லணி
பூண்ட வேந்தன் றிருமகன் புந்திதான்
றூண்டு தேரினு முந்துறத் தூண்டுவா
னீண்ட வாயி னெடுநகர் நோக்கினன்.

மீண்டும் ஏகி, அம் மெய் எனும் நல் அணி
பூண்ட வேந்தன் திருமகன், புந்திதான்,
தூண்டு தேரினும் முந்து உறத் தூண்டுவான்,
நீண்ட வாயில் நெடுநகர் நோக்கினன்.

பொ :—அவ்வாறு நின்று நின்று நெடிது உயிர்த்த அந்த மெய்ம்மை ஆகிய நல்ல அணிகலனைப் பூண்ட தயரத மன்னனுடைய திருமகனாகிய பரதன், மீண்டும் தன் மனத்தைப் பாகனால் தூண்டப்படுகின்ற தன் தேரினும் முந்திச் செல்லுமாறு தூண்டுவானாய்ச் சென்று, உயர்ந்த வாயிலோடுங் கூடிய நெடிய அயோத்தி நகரத்தை நோக்கினான்.

கு :—வாய்மைக்காக மன்னுயிர் துறந்தவன் தயரதன் ஆதலின் அவனை ''மெய்யெனு நல்லணி பூண்ட வேந்தன்'' என்றார். ''வாய்மையும் மரபுங் காத்து மன்னுயிர் துறந்த வள்ளல்'' (கிட்கிந்தா–வாலி வதைப்–76) என மேல் கூறப்படுதலும் காண்க. வேந்தன் திருமகன் மீண்டும் தூண்டுவானாய் ஏகி நோக்கினான் என்று இயைக்க. புந்தி–மனம். தான் செல்லும் தேரினைக் காட்டிலும் பரதன் மனம் விரைந்து முற்பட்டது, நிகழ்ந்தது யாதென அறியவேண்டி. நீண்ட வாயில்–உயர்ந்த தலைவாயில். 'தூங்குவான்' என்ற பாடத்திற்கு வான் (மேகம்) தூங்கும் என மாற்றி நீண்ட வாயிற்கு அடையாக்குக. (29)

**2220.** அண்ட முற்றுந் திரிந்தயர்ந் தாயமு
துண்டு போதியென் றொண்கதிர்ச் செல்வனை
விண்டொ டர்ந்து விலக்குவ போல்வன
கண்டி லன்கொடி யின்னெடுங் கானமே.

''அண்டம் முற்றும் திரிந்து அயர்ந்தாய், அமுது
உண்டு போதி''; என்று ஒண் கதிர்ச் செல்வனை
விண் தொடர்ந்து விலக்குவ போல்வன,
கண்டிலன் கொடியின் நெடும் கானமே.

பொ :—"இவ் அண்ட முழுதும் திரிந்து சோர்ந்து விட்டாய்; இங்குத் தங்கி அமுது உண்டு செல்க" என்று கூறி ஒளிக்கதிர்களாய செல்வமுடைய சூரியனை விண்ணில் தொடர்ந்து சென்று தடுப்பனவற்றைப் போன்ற கொடிகளின் நீண்ட தொகுதியைப் பரதன் காணவில்லை.

கு :—கொடிகள் விண்ணில் உயர்ந்து பறக்கும் தோற்றம் சூரியனை விருந்தூட்டத் தடுப்பது போலத் தோன்றும் என்பது தற்குறிப்பேற்றம். அயர்ச்சியுள்ளவரை அழைத்து அமுதூட்டும் அந்நகரத்து மக்கள் பண்பை அக்கொடிகட்கும் உள்ளதாக ஏற்றிக் கூறியவாறு. சூரிய மண்டலம் வரையில் கொடிகள் உயர்ந்து பறந்து கொண்டிருக்கும். தயரதன் உயிர்நீங்கிய துன்பத்திற்கு அறிகுறியாகக் கொடிகள் எல்லாம் இறக்கப் பட்டன ஆதலின், வந்த பரதன் அக்கொடிகளைக் காணான் ஆயினான். போல்வனவாகிய கொடிகளின் நெடுங்கானம் என்க. கானம் இங்கு கூட்டம் என்ற பொருளில் வந்தது; 'தாமரைக்காடு' என்புழிப்போல. (30)

**2221.** ஈட்டு நன்புகழ்க் கீட்டிய யாவையும்
வேட்ட வேட்டவர் கொண்மின் விரைந்தெனக்
கோட்டி மாக்களைக் கூவுவ போல்வன
கேட்டி லன்முர சின்கிள ரோதையே.

'ஈட்டும் நன் புகழ்க்கு ஈட்டிய யாவையும்,
வேட்ட வேட்டவர் கொண்மின் விரைந்து' எனக்
கோட்டி மாக்களைக் கூவுவ போல்வன,
கேட்டிலன் முரசின் கிளர் ஓதையே.

பொ :—"யாம் முயன்று தேடிய பொருள் யாவும் பிறர்க்கீந்து தேடுதற்குரிய நல்ல புகழ்க்காகவே யாம்; ஆதலின் பொருள் பெற விரும்புகின்றவர்கள் விரும்பியவற்றை வந்து முகந்துகொள்ளுங்கள்" என்று கூட்டமான இரவலர்களை அழைப்பன போன்றனவாகிய கொடை முரசங்களின் கிளர்ச்சி மிக்க ஓசைகளைப் பரதன் கேட்கவில்லை.

கு :—கொடை முரசங்களும் ஒலி அவிந்திருந்தமை கூறியவாறு. புகழ்க்கு-புகழ் பெறும் பொருட்டே. பிரிநிலை ஏகாரம் தொக்கு நின்றது. "வசையென்ப வையத்தார்க்கெல்லாம் இசையென்னும் எச்சம்பெறாஅ விடின்" (குறள்–238) எனப் புகழின் இன்றியமையாமையை விளக்கலின், "ஈட்டு நன்புகழ்" எனச் சிறப்பித்தார். ஈவார்மேல் நிற்கும் புகழே பாராட்டப்படுதலின், 'புகழ்க்கு' என்பதற்குப் பிறர்க்கீந்து பெறும் புகழின்பொருட்டேயாம் எனப் பொருள் விரிக்கலாயிற்று.

கொடை முரசொலி கூவுவ போன்றன என்றது, தற்குறிப்பேற்ற அணி. கோட்டி-கூட்டம். 'மாக்கள்' என்றூர் இரந்து வாழும் இழிபுடைமையின். பரதன் கேளாமைக்குக் காரணம் அம்முரசொலி இன்மையே. 'வேட்ட' வினையாலணையும் பெயர். 'கூவுதல்' அழைத்தல் என்னும் பொருளது. (31)

2222. கள்ளை மாக்கவர் கண்ணியன் கண்டிலன்
பிள்ளை மாக்களி றும்பிடி யீட்டமும்
வள்ளன் மாக்க ணிதியும் வயிரியர்
கொள்ளை மாக்களிற் கொண்டன ரேகவே.

கள்ளை மாக் கவர் கண்ணியன் கண்டிலன்,
பிள்ளை மாக் களிறும், பிடி ஈட்டமும்,
வள்ளல் மாக்கள் நிதியும், வயிரியர்,
கொள்ளை மாக்களின் கொண்டனர், ஏகவே.

பொ :—தேனை வண்டுகள் கவர்ந்து உண்ணும் கண்ணியைச் சூடிய பரதன், இளைய பெரிய ஆண்யானைகளையும் பெண்யானைகளின் கூட்டத்தையும் வள்ளல்களின் செல்வத்தையும் பாணர்கள் கொள்ளையடித்துச்செல்லும் கள்வர்களைப் போலத் தாமே கவர்ந்துகொண்டு போகும் காட்சியைக் கண்டிலன்.

கு :—பரதன் கண்ணியும் தன்பால் வந்து பாடிய வண்டுகட்குத் தேனாகிய பரிசிலை முகந்துண்ணுமாறு கொடுக்க அவன் நாட்டு மக்கள் அது செய்யாமைக்குக் காரணம் நாடிக் கவன்றான் என்க. பிள்ளை, இளமையை உணர்த்தியது. வயிரியர்-பாணர். இவர், யாழொடு சென்று பாடுதற்குரியவர். வயிரியர் வள்ளல்களைப் பாடிவிட்டு மாக்களிறு முதலியவற்றைத் தாமே கவர்ந்துகொண்டுசெல்லும் உரிமை நிகழ்ச்சியையுணர்த்த வேண்டிக் கொள்ளை மாக்களை உவமைகூறினர். (32)

2223. காவன் மன்னவன் கான்முளை கண்டில
னுவு மாவு மழிகவுள் வேழமு
மேவு காத னிதியின் வெறுக்கையும்
பூவின் வானவர் கொண்டனர் போகவே.

காவல் மன்னவன் கால் முளை கண்டிலன்,
ஆவும், மாவும், அழிகவுள் வேழமும்,
மேவு காதல் நிதியின் வெறுக்கையும்,
பூவின் வானவர் கொண்டனர் போகவே.

பொ :—உலக மாக்களைக் காக்கும் காவலனாகிய தயரத மன்னவன் மகனாகிய பரதன், பசுக்களையும் குதிரைகளையும் மதநீர் பெருகும் கன்னங்களையுடைய யானைகளையும் யாரும் ஆசைப்படுதற்குரிய பொருளின் திரளையும் பூதேவராகிய பார்ப்பனர் தானமாகப் பெற்றுக் கொண்டு போகக் காணப் பெறான் ஆயினான்.

கு :—கால்முளை-மகன். மா-குதிரை. அழிதல்-பெருகுதல். முனிவரும் முன்னுவ பொன்னால் முடியும் ஆகலின் 'மேவு காதல் நிதி' என்றார். நிதியின் வெறுக்கை இருபெயரொட்டு. இன் அல்வழிச்சாரியை. பொருளாகிய செல்வம் என்க. பூ-பூமி; வானவர்-தேவர்; பூதேவர் நிலத்தேவர் என்னப் பார்ப்பனர் சிறப்பிக்கப்படுதலுண்டு. தானம் பெறுதற்குரியோர் அவராதலின் அவரை வேறு கூறினர். (33)

**2224.** சூழ மைந்த சுரும்பு நரம்புந்த
மேழ மைந்த விசையிசை யாமையான்
மாழை யுண்கண் மயிலெனுஞ் சாயலார்
கூழை போன்ற பொருநர் குழாங்களே.

சூழ் அமைந்த சுரும்பும், நரம்பும், தம்
ஏழ் அமைந்த இசை இசையாமையால்,
மாழை உண்கண் மயில் எனும் சாயலார்
கூழை போன்ற பொருநர் குழாங்களே.

பொ :—மொய்த்தல் பொருந்திய வண்டுகளும், கட்டுதலமைந்த யாழ் நரம்புகளும், தமக்கு உரிய ஏழிசைகளை இசையாமையால், மாவடுப் போன்ற மையுண்ட கண்களையும் மயில்போன்ற சாயலையுமுடைய மகளிரின் கூந்தல்களும், கூத்தர் கூட்டங்களும் தம்முள் ஒத்தன.

கு :—மகளிர் கூந்தலில் சுரும்புகளும் பொருநர் குழாங்களில் யாழ் நரம்புகளும் எப்பொழுதும் பாடிக்கொண்டிருத்தல் இயல்பு. மன்னனைப் பிரிந்த இப்பொழுது மகளிர், துன்பத்தால் மலர் சூடுதலை விடுத்தனர்; சுரும்புகளும் அவர் கூந்தலில் மொய்த்துக்கொண்டு பாடுதலை விடுத்தன. பொருநரும் தம் தகுதியறிந்து பரிசு அளிக்கும் மன்னனை யிழந்தமையின் யாழ் எடுத்துப் பாடாது வருந்தினர். மகளிர் கூழையில் சுரும்புகளும் பொருநர் குழாங்களில் நரம்புகளும் ஏழிசை இசையாமையால் அக்கூழையும் குழாங்களும் தம்முள் ஒத்தன என நிரல் நிரையாக உரைக்க. கூழை போன்றபொருநர் குழாங்கள்; பொருநர் குழாங்கள் போன்ற கூழை என்க. இவையிரண்டும் ஒப்புமையுடைய ஆதற்குப்

பொதுத்தன்மை ஏழிசை இசையாமையேயாம். சரிகமபதநி என்ற ஏழ் சுரங்களையே 'ஏழமைந்த இசை' என்றார். சூழமைந்த நரம்பு எனவுங் கூட்டுக. சூழ்தல்-மொய்த்தல், கட்டுதல் என்ற இருபொருளும் உணர்த்திற்று. மாழை – மாவடு. கூழை-கூந்தல். பொருநர்–கூத்தர்; இவர் பாடற்கும் உரியர் என்பதை: "பண்ணிமை யடைத்தபல கட்பொருநர்பாடல்" (சுந்தர–162)என்பதால் அறியலாம். (34)

**2225.** தேரு மாவுங் களிறுஞ் சிவிகையு
மூரும் பண்டியு மூருந ரின்மையால்
யாரு மின்றி யெழிலில வீதிகள்
வாரி யின்றிய வாலுக வாற்றினே.

தேரும், மாவும், களிறும், சிவிகையும்,
ஊரும் பண்டியும், ஊருநர் இன்மையால்,
யாரும் இன்றி, எழில் இல, வீதிகள்,
வாரி இன்றிய வாலுக ஆற்றினே.

பொ :—ஊர்தற்குரிய தேரும், குதிரையும் யானையும் சிவிகையும் வண்டியும் ஊர்ந்துசெல்வோர் இல்லாமையாலும், நடந்துசெல்வோர் எவரும் இல்லாமையாலும், வீதிகள் எல்லாம், வெள்ளம் இல்லாத மணல் பரப்பினையுடைய ஆற்றினைப்போல அழகு இல்லாதன ஆயின.

கு:—ஊரும் என்பதை முன்னர் எல்லாவற்றோடும் கூட்டுக. ஊருநர் இன்மை மேல் பெறப்பட்டமையால் யாரும் என்றது, ஊர்தியின்றி நடந்துசெல்வோரை எனக் கொள்க. வாரி-நீர்ப்பெருக்கு. வாலுகம்-மணல். நீரில்லா ஆற்றில் மணலே காட்சியளிக்குமாகலின் 'வாலுக வாற்றின்' என்றார். வெள்ளம் பெருகும் ஆறே அழகுடையது ஆகலின் அஃது இல்லாத ஆறுகள், மக்கள் இயக்கம் இன்மையால் அழகிழந்த வீதிகட்கு உவமையாயின. தெருக்கள், "ஆறுகிடந்தன்ன அகல் நெடுந் தெரு" (நெடுநல்வாடை-30) என உவமிக்கப்படுதல் காண்க. மக்கள் போக்குவரவு இல்லாத தெருக்கள் நீர் வற்றிய ஆறுகள் போன்றன என்க. சிவிகை-பல்லக்கு. இன்றிய, பெயரெச்சம். (35)

### பரதன் சத்துருக்கனிடம் கூறல் 2226–2227

**2226.** அன்ன தன்மை யகநகர் நோக்கினன்
பின்னை யப்பெரி யோர்தம் பெருந்தகை
மன்னன் வைகும் வளநகர் போலுமீ
தென்ன தன்மை யிளையவ னேயென்றான்.

அன்ன தன்மை யகநகர் நோக்கினன்;
பின்னை அப்பெரியோர்தம் பெருந்தகை,
'மன்னன் வைகும் வளநகர் போலும் ஈது?
என்ன தன்மை! இளையவனே!' என்றான்.

பொ :—அத்தன்மையுடைய அயோத்தியின் அகநகரை ஊன்றி நோக்கினான்; பின்னர் அந்தப் பெரியவர்க்கெல்லாம் பெருந்தகையாக விளங்கும் பரதன், 'இளையவனே! மன்னவன் தங்கியுள்ள வளநகராகவா இந்நகர் காணப்படுகின்றது? என்ன இரங்கத்தக்க தன்மை!' என்று கூறினான்.

கு :—'மன்னன் வைகும் வளநகர் போலும் ஈது?' என்ற வினா மன்னனை யிழந்த நகராகவே காட்சியளிக்கின்றது என்பதை யுணர்த்திற்று. நகரின் நிலைகண்டு, 'என்ன தன்மை' என இரங்கியவாறு. இளையவன் என்றது சத்துருக்கனை. (36)

2227. வேற்ற டங்கல ரூரென மெல்லிதாற்
சூற்ற டங்கருங் கார்புரை தோற்றத்தான்
சேற்ற டங்கட் டிருவொடு நீங்கிய
பாற்ற டங்கட லொத்தது பாரென்றான்.

'வேற்று அடங்கலர் ஊர் என மெல்லிதால்;
சூல் தடங் கருங் கார் புரை தோற்றத்தான்
சேல் தடங்கண் திருவொடும் நீங்கிய
பால் தடங்கடல் ஒத்தது, பார்' என்றான்.

பொ :—'நம்மோடு வேறுபட்ட பகைவர் ஊர்போல வலியிழந்து காணப்படுகின்றது; சூல்கொண்ட பெரிய கரிய மேகத்தைப் போன்ற தோற்றத்தையுடைய திருமால், சேல்மீன் போன்ற கண்ணையுடைய திருமகளோடும் நீங்கிய பெரிய பாற்கடலை ஒத்துளது: பார்ப்பாயாக' என்றான்.

கு :—மேல் செய்யுளில் வேந்தன் இல்லாத நகரமாக இருப்பதைக் குறிப்பிட்ட பரதன், இச்செய்யுளில் இளவரசனாகிய இராமனும் சீதையோடு நீங்கியுள்ளமையைக் குறிப்பால் உணர்ந்து உணர்த்தியவாறு. இராமன் சீதையோடு தங்கியிருக்கும்பொழுது திருமால் திருமகளோடு தங்கியிருக்கும் பாற்கடல் போன்று காண்டற்கு இனிதாக இருந்த நகரம் ஆதலின், அவர் நீங்கிய நிலைக்குக் கார்புரை தோற்றத்தான் திருவொடு நீங்கிய பாற்கடலை உவமை கூறினான். கார்புரை தோற்றத்தான் என்றது திருமாலை. (37)

### சத்துருக்கன் கூறல்

2228. குரும ணிப்பூ ணரசிளங் கோளரி
யிருகை கூப்பி யிறைஞ்சின னெய்திய
தொருவ கைத்தன் றுறுதுய ரூழிவாழ்
திருந கர்த்திருத் தீர்ந்தன ளாமென்ருன்.

குருமணிப் பூண் அரசிளங் கோளரி
இருகை கூப்பி இறைஞ்சினன், 'எய்தியது
ஒருவகைத்து அன்று உறுதுயர்; ஊழி வாழ்
திருநகர்த் திருத் தீர்ந்தனள் ஆம்? என்ருன்.

பொ:—நல்ல நிறமுடைய மணிகள் பதித்த அணிகலன்களையணிந்த சிங்கம் போன்ற இளைய தம்பியாகிய சத்துருக்கன், இரு கைகளையும் குவித்து வணங்கி, 'நமக்கு நேர்ந்துள்ள மிக்க துன்பம் ஒருவகையானது அன்று; நெடுங் காலமாக வாழ்ந்து கொண்டிருந்த அயோத்தி நகரத்துத் திருமகள் நீங்கிவிட்டாள் ஆவள்' என்று கூறினன்.

கு:—குரு-நிறம். கோள் அரி-வலிய சிங்கம். இறைஞ்சினனய் என்ருன் என முற்றெச்சமாக்கி இயைக்க. எய்தியதாகிய துயர் என்க. தந்தையின் மரணம், இராம இலக்குவர் காடு புகுதல் போன்ற பல துன்பங்களும் நேர இருப்பதைக் குறிப்பான் உணர்ந்து உணர்த்திய வாறு. நகரத்தின் செல்வப் பொலிவை இங்குத் 'திருநகர்த்திரு' என்ருர். நெடிது காலமாக நிலைபெற்றிருந்த செல்வப் பொலிவு என்பான், ஊழிவாழ் திரு என்ருன். தீர்தல்-நீங்குதல். மேல் பரதன், மன்னன் வாழும் நகரமாகவும், இராமன் சீதையுடன் வாழும் நகரமாகவும் இல்லை என்று கூறியதைச் சத்துருக்கனும் உடன்பட்டுக் கூறியவாறு. (38)

### பரதன் தயரதன் மாளிகையை அடைதல்

2229. அனைய வேலையி லச்சுடைத் தேரரண்
மனையி னீணெடு மங்கல வாயிலை
நினையு மாத்திரத் தெய்தலு நேமியான்
றனைய னுந்தந்தை சார்விட மேவினன்.

அனைய வேலையில், அச்சுடைத் தேரரண்
மனையின் நீள் நெடு மங்கல வாயிலை
நினையு மாத்திரத்து எய்தலும் நேமியான்
தனையனும், தந்தை சார்விடம் மேவினன்.

பொ :—அந்தச் சமயத்தில் அச்சினையுடைய தேர், அரண்மனையினது நீண்டு உயர்ந்த மங்கலமுடைய வாயிலை நினையும் அளவில் அடைதலும், சக்கரவர்த்தியின் திருமகனாகிய பரதனும் தன் தந்தை தங்கும் இடத்தை அடைந்தான்.

கு :—அரணையுடைய அரசன் மனை அரண்மனை எனப்படும். அரண்மனை வாயிலின் நீளமும் உயர்வும் பொலிவும் புலப்பட, 'நீணெடு மங்கல வாயில்' என்றார். தேர், உள்ளம்போல விரைந்தெய்தியது என்பார், 'நினையுமாத்திரத் தெய்தலும்' என்றார். நேமியான்-ஆணைச் சக்கரத்தையுடைய தயரதன். தந்தையின் ஓலை கண்டு வந்தவனாதலாலும் முதலில் காணத்தக்கவன் அத்தந்தையே யாதலாலும் அவன் சார்விடத்தை முதலில் அடைந்தான். (39)

பரதன், தந்தையைக் காணாது ஐயுறல்

**2230.** விருப்பி னெய்தினன் வெந்திறல் வேந்தனை
யிருப்பு நல்லிட மெங்கணுங் கண்டில
னருப்ப மன்றிதென் றையுற வெய்தினான்
பொருப்பு நாண வுயர்ந்த புயத்தினான்.

விருப்பின் எய்தினன், வெம் திறல் வேந்தனை
இருப்பு நல் இடம் எங்கணும் கண்டிலன்,
'அருப்பம் அன்று இது' என்று ஐயுறவு எய்தினான்;
பொருப்பும் நாண உயர்ந்த புயத்தினான்.

பொ :—மலையும் நாணுமாறு உயர்ந்த தோள்களையுடைய பரதன், (தந்தையைக் காணவேண்டும் என்ற) விருப்பத்தோடு அடைந்தவன், மிக்க வலிமையுடைய அவ்வேந்தனை அவன் இருத்தற்குரிய நல்ல இடங்களில் எவ்விடத்தும் காணாதவனாய், 'இது சிறிய நிகழ்ச்சி அன்று' என்று ஐயம் கொண்டான்.

கு :—இருப்பு - இருத்தல் ; தொழிற்பெயர். அருப்பம் – சிறியது ; 'அருப்பமென்று பகையையும் ஆரழல் நெருப்பையும் இகழ்ந்தால்' (யுத்த:-14:-92) என்புழியும் இச்சொல் இப்பொருளில் வந்துள்ளது. கண்டிலன், முற்றெச்சம்; அது ஐயுறவெய்தினான் என்ற வினை கொண்டது. ஐயுறவு என்றது, மன்னவன் மாண்டான் போலும் என்ற எண்ணத்தை. (40)

### தாய் அழைப்பதாக ஒருத்தி கூறல்

**2231.** ஆய காலையி லையனை நாடித்தன்
றூய கையிற் றொழலுறு வான்றனைக்
கூய ளன்னை குறுகுதி ரீண்டென
வேய்கொ டோளி யொருத்தி விளம்பினள்.

ஆய காலையில், ஐயனை நாடித் தன்
தூய கையில் தொழல் உறுவான் தனைக்
'கூயள் அன்னை, குறுகுதிர் ஈண்டு' என
வேய் கொள் தோளி ஒருத்தி விளம்பினள்.

பொ :—(தந்தையை எங்கும் காணாத) அப்பொழுது தமையனாகிய இராமனைத் தேடிக்கொண்டு தன் தூய்மையான கையால் தொழ விரும்பிச் செல்லுகின்ற பரதனை, மூங்கில் போன்ற தோளையுடைய ஒருத்தி அண்மி 'அன்னை அழைத்தாள், அங்கு வாருங்கள்' என்று சொல்லினள்.

கு :—தந்தையைக் கண்டிலாத பரதன் தமையனையேனும் கண்டு வணங்க எண்ணி முற்பட்டுச் செல்லும்போது கைகேயியின் தோழி வந்து அழைத்துச் சென்றாள் என்க. பரதன் கேகய தேயத்து இருந்த போது வந்த தூதுவரை வினவும்போதும், முதலில் தந்தையையும் இரண்டாவதாக இராம இலக்குவரையும் வினவினமை நினைக்க. கூவுதல்–அழைத்தல். ஐயன், தயரதன் எனலும் ஆம். (41)

### வணங்கிய பரதனைக் கைகேயி வினவல்

**2232.** வந்து தாயை யடியில் வணங்கலுஞ்
சிந்தை யாரத் தழுவின ளீதில
ரெந்தை யென்னைய ரெங்கைய ரென்றன
ளந்த மில்குணத் தானும தாமென்றான்.

வந்து தாயை அடியில் வணங்கலும்,
சிந்தை ஆரத் தழுவினள், 'தீது இலர்
எந்தை என் ஐயர் எங்கையர்?' என்றனள்;
அந்தம் இல் குணத்தானும், அது ஆம் என்றான்.

பொ :—(தோழி கூறியவாறே பரதன்) வந்து தாயைக் கண்டு அடியில் விழுந்து வணங்குதலும் கைகேயி அவனை மனம் நிறைவு

கொள்ளத் தழுவினளாய், 'என் தந்தையும் என் தமையன்மாரும் என் தங்கைமாரும் தீங்கு இன்றி உள்ளனரோ?' என்று வினவினுள்; எல்லை யிலாத குணங்களையுடைய பரதனும், தீதின்றி இருக்கின்றனர் என்று பொருள்பட 'ஆம்' என்ருன்.

கு:—தழுவினளாய் என்றனள் என்று முற்றெச்சமாக்கி முடிக்க. 'தீதிலர்' என்றது எடுத்தலோசையால் வினவாயிற்று. என் ஐயர்-என் தமையன்மார்; என் தாயர் எனலும் ஆம். எங்கையர்–என் தங்கையர். நகர மாந்தரின் பொலிவின்மை கண்டு வருந்திய உள்ளத்தனுயினும் தாய் வினவியவற்றிற்குப் பொறுமையோடு விடை கூறிய தகுதி தோன்றப் பரதனை 'அந்தமில் குணத்தான்' என்ருர். (42)

### தயரதன் யாண்டுளன் எனப் பரதன் வினவல்

2233. மூண்டெழு காதலான்
★ முளரித் தாடொழ
வேண்டினெ னெய்தினெ
னுள்ளம் விம்முமா
லாண்டகை நெடுமுடி
யரசர் கோமகன்
யாண்டையான் பணித்திரென்
றிருகை கூப்பினுன்.

'மூண்டு எழு காதலான் முளரித் தாள் தொழ
வேண்டினென் எய்தினென்; உள்ளம் விம்முமால்;
ஆண்தகை நெடு முடி அரசர் கோமகன்,
யாண்டையான்? பணித்திர்;' என்று இருகை கூப்பினுன்.

பொ:—"கிளர்ந்து எழுகின்ற அன்பினை யுடைய பரதன், (தந்தையின்) தாமரை மலரைப் போன்ற திருவடியைத் தொழுதற்கு விரும்பி வந்தேன்; அவனைக் காணுமையால் என் உள்ளம் தேம்பு கின்றது; ஆண்தன்மையிற் சிறந்தவனும், நீண்டமுடியை யுடையவனு மாகிய மன்னர் மன்னன் எங்கு உள்ளான்? சொல்லுங்கள்" என்று இரண்டு கைகளையும் குவித்து வணங்கிக் கேட்டுக்கொண்டான்.

கு:—மூளுதல் - மேற்படல். காதலான் – காதலையுடைய பரதன். முளரி - தாமரை. வேண்டினென் முற்றெச்சம். விம்முதல்-தேம்புதல். சக்கரவர்த்தி என்ற பொருள் தோன்ற 'அரசர் கோமகன்' என்ருன். அவனிருத்தற்குரிய எவ்விடத்தும் காணப்படாமையின், யாண்டையான்?

என்று வினவினன். பணித்திர் முன்னிலைப் பன்மை வினைமுற்று; உயர்த்தற்கண் வந்தது. (43)

## கைகேயியின் விடை

2234. ஆனவ னுரைசெய வழிவில் சிந்தையா
டானவர் வலிதவ நிமிர்ந்த தானையத்
தேனமர் தெரியலான் றேவர் கைதொழ
வானக மெய்தினன் வருந்த னீயென்றாள்.

ஆனவன் உரைசெய அழிவு இல் சிந்தையாள்,
'தானவர் வலி தவ நிமிர்ந்த தானை அத்
தேன் அமர் தெரியலான், தேவர் கைதொழ,
வானகம் எய்தினன்; வருந்தல் நீ' என்றாள்.

பொ :—அப்பரதன் அவ்வாறு கேட்கக் கலங்காத மனமுடைய கைகேயி, 'அரக்கர்களின் வலி மெலியுமாறு பெருகிய சேனையையுடைய அந்தத் தேன் பொருந்திய மாலையணிந்த அரசன், தேவர் கைகூப்பி வணங்க விண்ணுலகம் அடைந்தான்; நீ அதற்காக வருந்தாதே' என்று கூறினாள்.

கு :—ஆனவன்–அவன். தந்தை யாண்டுளான் என்று மகன் கேட்குங்கால் விடைகூறவியலாது மனங்கலங்கி அழுகையால் உணர்த்த வேண்டிய தாய், "வானகமெய்தினன்; வருந்தல் நீ" என்று கூறற் கேற்ற வலிய சிந்தையாள் ஆயினள் என்பது புலப்பட, 'அழிவில் சிந்தையாள்' என்றார். வானவரைக் காக்கத் தானவரைத் தடிந்தவன் ஆதலின் அவ்விண்ணுலகத்தும் அவ்வானவர் போற்றும் ஏற்றமுடன் விளங்குவான் தயரதன்; ஆகவே அவன் நிலைக்கு மகிழ்வதல்லது வருந்தல் கூடாது என்பது அவள் கருத்து. 'தேனமர் தெரியலான்' என, வண்டுகள் விரும்பும் மாலையுடைமை கூறி, விண் அரமகளிர் விரும்பும் இன்ப வாழ்வினன் என்பதைக் குறிப்பிட்டவாறு. (44)

## தந்தை இறந்தது கேட்ட பரதன் நிலை

2235. எறிந்தன கடியசொற் செவியு ளெய்தலு
நெறிந்தலர் குஞ்சியா னெடிது வீழ்ந்தன
னறிந்தில னுயிர்த்திலனசனி யேற்றினன்
மறிந்துயர் மராமர மண்ணுற் றென்னவே.

எறிந்தன கடிய சொல் செவியுள் எய்தலும்,
நெறிந்து அலர் குஞ்சியான் நெடிது வீழ்ந்தனன்;
அறிந்திலன், உயிர்த்திலன், அசனி ஏற்றினல்
மறிந்து உயர் மராமரம் மண் உற்றென்னவே.

பொ :—வேல் கொண்டு எறிந்தாற்போன்ற கடுமையுடைய கைகேயியின் சொல் செவியில் படுதலும் நெறிப்புமிக்கு விரிந்துகிடக்கும் தலைமயிரையுடைய பரதன், இடியேற்றினல் உயர்ந்த வெண்கடம்பமரம் தலைசாய்ந்து தரையில் வீழ்ந்தாற்போலப் பூமியில் நெடிதாக வீழ்ந்தான்; பின் அறிவு மயங்கி மூச்சற்றுன்.

கு :—எறிதற்குக் கருவி வருவிக்கப்பட்டது. கைகேயி சொல்லின் கடுமை வேல்கொண்டு எறிந்தாற்போன்ற துன்பத்தைச் செய்யவல்லது என்க. மராமரத்தை உவமித்ததற்கேற்ப நெறிந்தலர் குஞ்சி கூறினர். மரத்தின் தலை விரிந்து காணப்படுதல் போலத் துன்பக் காட்சிகளால் பரதன் தலைவிரி கோலமாய்க் காணப்பட்டமை புலப்படுத்தியவாறு உயிர் அற்ற உடல் போன்றுன் என்பார், 'அறிந்திலன், உயிர்த்திலன்' என்றுர். அறிவழிந்து மூச்சற்றுன் என்பது கருத்து. அசனி - இடி. கைகேயியின் கடுஞ்சொல்லால் வீழ்ந்த பரதனுக்கு இடியால் வீழ்ந்த மராமரம் உவமை. (45)

## பரதன் நொந்து கூறுதல்

2236. வாயொளி மழுங்கத்தன் மலர்ந்த தாமரை
யாயலர் நயனங்க ளருவி சோர்தரத்
தீயெரி செவியில்வைத் தனைய தீயசொ
னீயல துரைசெய நினைப்பரோ வென்றுன்.

வாய் ஒளி மழுங்கத் தன் மலர்ந்த தாமரை
ஆய் அலர் நயனங்கள் அருவி சோர்தரத்
'தீ எரி செவியில் வைத்தனைய தீய சொல்
நீ அலது உரைசெய நினைப்பரோ?' என்றுன்.

பொ :—(புன்சிரிப்பால் ஒளி வீச வேண்டிய) வாய் ஒளி மழுங்கித் தோன்றவும் மலர்ந்த தாமரையின் அழகிய மலர்போன்ற தன் கண்களில் கண்ணீர் அருவி பெருகவும் நின்று, 'கொளுத்துகின்ற நெருப்பைக் கொணர்ந்து செவியில் வைத்தாற்போன்ற இந்தத் தீய சொல்லை நீயல்லது பிறர் சொல்ல நினைத்தலும் செய்வரோ?' என்று கூறினன்.

கு :—வாய் ஆகுபெயராய் முகத்தை யுணர்த்தியதாகக் கொண்டு 'முக ஒளி மழுங்க' என்று பொருள் கூறலும் ஆம். ஆய் - அழகு. மலர்ந்த அலர் என்று இயைக்க. கண்ணீர்ப் பெருக்கு அருவியின் ஒழுக்குப்போல் மிக்கிருந்தது என்க. தன்னைச் சேர்ந்த பொருளைத் தீக்கும் எரி என அதன் இயல்பு விளக்கியவாறு. தீயசொல் என்றது, 'வானகம் எய்தினன் வருந்தல் நீ' என்ற சொல்லை. நீ யாதலின் நினைத்ததோடன்றிச் சொல்லலும் செய்தாய். பிறராயின் அத் தீய சொல்லை நினைக்கவும் மாட்டார் என்பது கருத்து. பிறர் நினைக்கவும் கூடாத சொல்லை வாய்திறந்து சொல்லிய அவள் கொடுமையை வியந்தவாறு. (46)

பரதன் தந்தையை நினைந்து வருந்திக் கூறுதல் 2237—2246

**2237.** எழுந்தன னேங்கின னிரங்கிப் பின்னரும்
விழுந்தனன் விம்மினன் வெய்து யிர்த்தன
னழிந்தன னரற்றின னரற்றி யின்னன
மொழிந்தனன் பின்னரு முருகிற் செவ்வியான்.

எழுந்தனன், ஏங்கினன், இரங்கிப் பின்னரும்
விழுந்தனன், விம்மினன், வெய்து உயிர்த்தனன்,
அழிந்தனன், அரற்றினன், அரற்றி இன்னன
மொழிந்தனன் பின்னரும், முருகின் செவ்வியான்.

போ :—முருகனைப்போன்று அழகுடைய பரதன், எழுந்தான்; தந்தையை நினைந்து ஏங்கினான்; அழுது கொண்டே பின்னும் தரையில் விழுந்தான்; பொருமினான்; வெப்பமாகப் பெருமூச்சுவிட்டான்; மனவலி அழிந்தான்; வாய்விட்டு அரற்றினான்; அவ்வாறு அரற்றிக் கொண்டே பின்னும் இத்தகைய சொற்களைச் சொல்லலானான்.

கு :—எழுதல் முதலிய செயல்கள் துன்பத்தில் நிகழும் பல்வகை மெய்ப்பாடுகள். இரங்கல் - அழுதல்; வருந்தல். (47)

**2238.** அறந்தனை வேரறுத் தருளைக் கொன்றனை
சிறந்தநின் றண்ணளித் திருவைத் தேசழித்
திறந்தனை யாமெனி லிறைவ நீதியை
மறந்தனை யுனக்கிதின் மாசு மேலுண்டோ.

'அறம் தனை வேர் அறுத்து, அருளைக் கொன்றனை,
சிறந்த நின் தண் அளித் திருவைத் தேசு அழித்து,

இறந்தனை ஆம் எனில், இறைவ! நீதியை
மறந்தனை; உனக்கு இதின் மாசு மேல் உண்டோ?'

பொ —' அரசே! அறத்தை வேரறுத்து அருளை அழித்தனையாய்ச் சிறந்த நின்னுடைய குளிர்ந்த தலையளிசெய்தலாகிய செல்வத்தை ஒளி இழக்கச் செய்து இறந்தாய் என்றால், நீதியை மறந்தாய் ஆகின்றாய்; நீதியை மறத்தலாகிய இதைக்காட்டிலும் மேலாக உனக்குக் குற்றம் உண்டோ?'

கு :—நாட்டில் அறத்தை நிலைநிறுத்தி அருளை வளர்த்துக் குடிகட்குத் தலையளி செய்து வாழ்ந்தவன் தயரதன் ஆதலின், அவன் இறந்துபட்டது, அறத்தை வேரறுத்ததாகவும், அருளைக் கொன்றதாகவும், தண்ணளியைத் தேசு அழித்ததாகவும் ஆயிற்று. வேர் அறுத்தல் – அடியோடு அழியச் செய்தல். கொல்லுதலும் அப்பொருளதே. அளி – தலையளி; முகம் மலர்ந்து இனிய கூறல் (குறள்—390. பரிமேலழகர் உரை பார்க்க). அளி செய்தலின் சிறப்புத் தோன்றத் 'தண்ணளித் திருவை' என்றார். தேசு - ஒளி. அறமும் அருளும் அளியும் அழிவதை நோக்காது இறத்தலின், நீதியை மறந்த குற்றம் தயரதனுக்கு உண்டு என்பது பரதன் கருத்து. 'இதின்' என நீதியை மறத்தலைச் சுட்டியவாறு. தயரதன் வயத்ததல்லாத மரணத்தை அவன் வயத்ததாக்கிக் குற்றம் காட்டிப் பழிப்பதுபோலக் காணப்படினும், அவன் ஆட்சியில் அறமும் அருளும் அளியும் நிலைத்திருந்தமை விளக்கலின் இது புகழ்வதாகவே அமைதல் காண்க. (48)

**2239.** சினக்குறும் பெறிந்தெழு காமத் தீயவித்
தினக்குறும் பியாவையு மெற்றி யாவர்க்கு
மனக்குறு நெறிசெலும் வள்ளி யோய்மறந்
துனக்குறு நெறிசெல லொழுக்கின் பாலதோ.

'சினக் குறும்பு எறிந்து, எழு காமத்தீ அவித்து,
இனக் குறும்பு யாவையும் எற்றி, யாவர்க்கும்
மனக்கு உறும் நெறி செலும் வள்ளியோய்! மறந்து
உனக்கு உறும் நெறி செலல் ஒழுக்கின் பாலதோ?'

பொ :—சினமாகிய பகையை ஒழித்து, காமமாகிய தீயை அவியச் செய்து, அவ்விரண்டற்கும் இனமாகிய மயக்கம் என்னும் பகை முழுவதையும் தாக்கி ஒழித்து, நாட்டிலுள்ள யாவர்க்கும் இனியனாய் அவரவர் மனத்திற்கேற்ற வழியில் செல்லுகின்ற வள்ளற்றன்மையுடையவனே!

அத்தகைய நின் பண்பினை மறந்து உனக்கு இனிதாகிய வழியில் செல்லுதல் ஒழுக்க நெறியைச் சார்ந்ததாகுமோ? (ஆகாது.)

கு :—காம வெகுளி மயக்கங்கள் முப்பகை எனப்படுதலின், எறிந்து எற்றி எனப் பகை அழித்தற்குரிய வினையால் கூறினர். உடன் எண்ணப்படும் மூன்றனுள் சினமும் காமமும் மேல் கூறப்பட்டமையின் 'மயக்கம்' இங்கு இனக்குறும்பு எனப்பட்டது. அம்மயக்கந்தான் பல வகைத்து ஆதல்பற்றி, 'யாவையும்' என்றார். உட்பகையாறனுள் காம வெகுளிகளை முன்னர்க் கூறினமையின், ஏனைக் கடும்பற்றுள்ளம் முதலிய நான்கினையும் 'இனக்குறும்பு யாவையும்' என்றார் எனினும் ஆம். தயரதன் முக்குற்றமும் நீங்கிய தூயன் ஆகலின் யாவர்க்கும் மனக்குறுநெறி சென்று பிறர்க்கென முயலுகின்ற வள்ளன்மையுடையன் என்பது தோன்ற, 'வள்ளியோய்' என்று விளித்தான். அவன், இவ்வுலகை விடுத்து விண்ணுலகு சென்றது, தான் இன்பம் துய்த்தற் பொருட்டென்ற கருத்தால் 'உனக்குறு நெறி செலல்' என்றான். அது, தனக்கென முயலும் தகவில் செயல் ஆதலின் 'ஒழுக்கின்பாலதோ' என்று வினவினன். குறும்பு – பகை. 'இருட்குறும் பெறியும் வெய்யோன்' (கூர்ம புராணம். பதிக. 10) என்பது காண்க. (49)

**2240.** முதலவன் முதலிய முந்தை யோர்பழங்
கதையையும் புதுக்கிய தலைவன் கண்ணுடை
நுதலவன் சிலைவிலி னோன்மை நூறிய
புதல்வனை யெங்ஙனம் பிரிந்து போயினாய்.

'முதலவன் முதலிய முந்தையோர் பழங்
கதையையும் புதுக்கிய தலைவன், கண் உடை
நுதலவன் சிலைவிலின் நோன்மை நூறிய
புதல்வனை எங்ஙனம் பிரிந்து போயினாய்?'

பொ :—'மனு முதலிய முன்னோரின் பழைய வரலாறுகளையும் தன் செயலால் புதுப்பித்து நிறுவிய தலைவனும் — கண் பொருந்திய நெற்றியையுடைய உருத்திரனின் மலைபோன்ற வில்லின் வலிமையை அழித்த புதல்வனும் ஆகிய இராமனை எவ்வாறு பிரிந்து சென்றாய்?'

கு :—முதலவன்–மனு. "ஆதித்தன் குலமுதல்வன் மனு" (721) என்றது காண்க. முந்தையோர் – முன்னோர். முன்னோர் இயற்றியவாகக் கூறப்படும் அரிய செயல்களையெல்லாம் பழங்கதை யென்று தள்ளாதபடி இராமன், தன்னுடைய செயற்கருஞ்செயல்களால் அவையும் உண்மையானவையே என்று கொள்ளுமாறு புதுப்பித்தவன் என்ற

வாறு. தலைவனாகிய புதல்வனை என்று இயையும். தலைவன், தயரதன் எனக்கொண்டு, அண்மை விளியாக்கி உரைத்தலும் ஆம். நுதல்-நெற்றி. சிலைவில் - மலைபோன்ற வில். "ஆடக மாமலை யன்னது தன்னை" (782) எனக் கம்பரே உவமித்துள்ளது காண்க. சிலைமரத்தால் ஆய வில் என்றும் ஆம்; நச்சினார்க்கினியர் உரை (கலி—15 : 1) காண்க. நோன்மை-வலிமை. நூறிய-அழித்த. 'என்றும் பிரியாதிருந்த இராம பிரானை எவ்வாறு பிரிந்து சென்றாய்' எனத் தயரதனை விளித்து அரற்றியவாறு. (50)

**2241.** செவ்வழி யுருட்டிய திகிரி மன்னவ
வெவ்வழி மருங்கினு மிரவ லாளர்தா
மிவ்வழி யுலகினி லினிய நண்பினோ
ரவ்வழி யுலகினு முளர்கொ லோவையா.

'செவ்வழி உருட்டிய திகிரி மன்னவ!
எவ்வழி மருங்கினும் இரவலாளர்தாம்
இவ்வழி உலகினில்; இனிய நண்பினோர்;
அவ்வழி உலகினும் உளர்கொலோ? ஐயா!'

பொ :—'நேர்மையான வழியில் செலுத்திய ஆணைச் சக்கரத்தை யுடைய அரசே! ஐயா! இம்மண்ணுலகத்தில் உனக்கு இனிய நண்பரா யிருந்தவர்கள் பலவிடங்களிலுமுள்ள இரவலாளரே ஆவார்கள்; அவ்விரவலாளர்கள் அப்பொன்னுலகினும் இருக்கின்றனரோ? (இலரே)'

கு :—இராமபிரானைப் பிரியாமைப் பொருட்டேனும் தயரதன் இவ்வுலகில் இருந்திருக்கலாம் என மேலைச் செய்யுளில் கூறிய பரதன், இச்செய்யுளில் பொன்னுலகில் பெறவியலாத இரப்பாளர்பொருட்டேனும் இவ்வுலகில் இருந்திருக்கலாமே என்று அரற்றுகின்றான். அன்பும் அருளும் உடையார் இவர் என்பதைப் புலப்படுத்துவோர் இரவலரே ஆதலின், 'இரவலாளர்தாம்...இனிய நண்பினோர்' என்றான். "இரவலர் தமரினு மினிய ராவரே" (நைடதம். நளன்தூது 22.) என்றதும் காண்க. 'உளர் கொலோ' என்புழி ஓகாரம் எதிர்மறை யுணர்த்தியது. பொன்னுலகத்தில் இரப்பாளர் இல்லை என்பதை, "உடையோ ரீதலும் இல்லோர் இரத்தலும் கடவ தன்மையிற் கையற வுடைத்து" (புறநா. 38), "ஈவாருங் கொள்வாரு மில்லாத வானத்து வாழ்வாரே வன்கணவர்" (குறள்-1058 பரிமேல். மேற்கோள்) என்பனவற்றால்அறியலாம். (51)

2242. பற்பக னிழற்றுநின் கவிகைப் பாய்நிழ
னிற்பன பல்லுயி ருணங்க நீநெடுங்
கற்பக நறுநிழல் காத லித்தியோ
மற்பக மலர்ந்ததோண் மன்னர் மன்னனே.

'பல் பகல் நிழற்றும் நின் கவிகைப் பாய் நிழல்
நிற்பன பல் உயிர் உணங்க, நீ நெடுங்
கற்பக நறுநிழல் காதலித்தியோ?—
மல் பக மலர்ந்த தோள் மன்னர் மன்னனே!'

பொ :—பிறருடைய மற்போர்வன்மை ஒழியுமாறு விரிந்த தோளை யுடைய அரசர்க்கு அரசனே! பல நாட்களாக நிழல் செய்து வந்த நின் குடையின் பரவிய நிழலில் இன்புற்று நிற்பனவாகிய பல உயிர்களும் (இப்பொழுது நிழற்றுவோர் இன்மையால்) வாட்டம் அடைய நீ உயர்ந்த கற்பக மரத்தின் நறுமணமிக்க நிழலை விரும்புகின்றாயோ?

கு :—'பல்பகல்' என்றது அறுபதினாயிரம் ஆண்டுகளை. கவிகை-குடை. பாய்தல்-பரவுதல். நிற்பனவாகிய பல்லுயிர் என்க. உணங்கல்-வாடுதல். மன்னுயிர் இன்புற மன்னவன் வருந்துதலே முறையாகவும் நீ அதற்கு மாறாகப் பல்லுயிருணங்க நல்லுலகில் இன்புற்றிருக்க விரும்புதல் பொருந்தாது என்பான், 'கற்பக நறுநிழல் காதலித்தியோ' என்றான். தன் குடை நிழலில் தங்கிய உயிர்களின் பொருட்டேனும் தயரதன் உயிரோடு இருத்தலாகாதா என்ற எண்ணத்தால் அரற்றியவாறு. (52)

2243. இம்பர்நின் றேகினை யிருக்குஞ் சார்பிழந்
தும்பர்வந் துன்கழ லொதுங்கி னார்கொலாஞ்
சம்பர னனையவத் தானைத் தானவர்
அம்பரத் தின்னமு முளர்கொ லோவையா.

'இம்பர் நின்று ஏகினை, இருக்கும் சார்பு இழந்து
உம்பர் வந்து உன் கழல் ஒதுங்கினார் கொலாம்?
சம்பரன் அனைய அத் தானைத் தானவர்
அம்பரத்து இன்னமும் உளர்கொலோ? ஐயா!'

பொ :—'ஐயா! சம்பரனைப் போன்ற அந்தச் சேனையையுடைய அரக்கர் விண்ணில் இன்னும் இருக்கின்றார்களோ? அவர்களால் தாம் தங்கும் இடத்தையும் இழந்து வந்து தேவர்கள் உன் திருவடியே புக லிடம் எனப் புகுந்து ஒதுங்கினார்களோ? (அவரைக் காக்கவேண்டி)

அசுரரைத் தாக்கற்கு) இவ்வுலகில் நின்று (விண்ணுலகம்) சென்ருய் போலும்?'

கு :—'ஏகினைகொல்' எனக் 'கொல்' வருவித்து முடிக்க. இம்பர்—இம்மண்ணுலகம். உம்பர்-தேவர். முன் சம்பரனை வென்ற வலிமை நினக்கு இருத்தலின் அச் சம்பரன் போன்ற அரக்கர்களால் அல்லல் உற்ற தேவர்கள் நின்னைப் புகலாக அடைய, அவரைக் காக்கும் பொருட்டு இவ்வுலகத்திலிருந்து விண்ணுலகம் சென்ருய் போலும் எனத் தயரதன் விண்ணுலகஞ் சென்றமைக்குக் காரணம் கற்பித்து அரற்றியவாறு. அம்பரம்-விண். (53)

2244. இயங்கெழு தானைய ரிறுத்த மாத்திறை
யுயங்கலின் மறையவர்க் குதவி யும்பரி
னயங் கெழு வேள்வியோ டமரர்க் காக்கிய
வயங் கெரி வளர்த்தனை வைக வல்லையோ.

'இயம் கெழு தானையர் இறுத்த மாத் திறை
உயங்கலின் மறையவர்க்கு உதவி, உம்பரின்,
அயம் கெழு வேள்வியோடு அமரர்க்கு ஆக்கிய
வயங்கு எரி வளர்த்தனை வைகவல்லையோ?'

பொ :—'வாத்தியங்களின் ஒலி பொருந்திய சேனையையுடைய மன்னர்கள் செலுத்திய சிறந்த திறைப் பொருள்களை யெல்லாம் விரதங் களான் உடம்பு வருந்துதலையுடைய அந்தணர்க்குத் தானமாகக் கொடுத்து, அசுவமேதம் என்னும் யாகத்தோடு தேவர்க்கு உரித்தாக்கும் விளக்கம் அமைந்த ஓமத் தீயை வளர்த்துக்கொண்டு விண்ணுலகத்தில் தங்குதற்கு வல்லையோ?'

கு :—பரிமேதம் செய்கின்றபோது தோற்ற மன்னர் செலுத்திய திறைப்பொருள்களை யெல்லாம் வேள்வி அந்தணர்க்குத் தானமாகக் கொடுத்தல் மரபு ஆதலின், மாத் திறை மறையவர்க்கு உதவி என்ருர். மண்ணுலகில் பரிமகத்தோடு தேவர்கடனுகிய வேள்விகளையும் செய்து பழகிய நீ, அவை செய்யப்படாத விண்ணுலகில் அவ்வயங்கெரி வளர்த்துக்கொண்டுவைகுதல் இயலாதே! என்பான், 'எரி வளர்த்தனை வைகவல்லையோ' என்ருன். 'வேள்வி செய்வதில் உள்ள பற்றுக் காரணமாகவேனும் இவ்வுலகில் தங்கலாமே என்பது கருத்து. நாள் தொறும் செய்யும் தெய்வ வேள்வியினும் பரிவேள்வி சிறந்தமையின் உயர்பின் வழிவரும் ஒடுக்கொடுக்கப்பட்டது. தேவர் கடனுகிய வேள்வி ஆதலின், 'அமரர்க்காக்கிய வயங்கெரி' என்ருர். வல்லையோ என்புழி

ஓகாரம் எதிர்மறையுணர்த்திற்று. 'உயங்கலில்' என்று பிரித்துத் 'தொழில் செய்து வருந்துதல் இல்லாத' என்று பொருள் கூறலுமாம். (54)

2245. ஏழுயர் மதக்களிற் றிறைவ வேகினை
வாழிய கரியவன் வறியன் கையெனப்
பாழியம் புயத்துநின் பணியி னீங்கலா
வாழியை யினியவற் களிக்க வெண்ணியோ.

'ஏழ் உயர் மதக் களிற்று இறைவ! ஏகினை,
வாழிய கரியவன், வறியன் கை எனப்
பாழி அம் புயத்து நின் பணியின் நீங்கலா
ஆழியை, இனி, அவற்கு அளிக்க எண்ணியோ?'

பொ :—'ஏழு முழம் உயர்ந்துள்ள மதமிக்க அரச யானைமேல் வருதற்கு உரிய அரசனே! கரியனாகிய இராமன் (ஆணைச்சக்கரத்தை ஏந்தாது) வறுங்கையனாக இருக்கின்றான் என, வலிய அழகிய தோளையுடைய நினது பணியில் நீங்காமல் இருக்கின்ற ஆணைச் சக்கரத்தை இனி அவனுக்கு அளிக்கலாம் என எண்ணியோ விண்ணுலகம் சென்றாய்?'

கு :—கைவறியன் எனவும் 'எண்ணியோ ஏகினை' எனவும் மாறுக. ஏழுமுழம் உயர்ந்திருப்பது அரசயானையின் இலக்கணம். பாழி–வலிமை. வாழிய அசைநிலை. தந்தை இருக்கிற வரையில் இராமன் ஆணைச் சக்கரத்தை ஏந்தான் ஆதலின், 'அவன் ஏந்த வேண்டும் என்ற நோக்கத்தால் போலும் தயரதன் விண்ணுலகடைந்தான்' என்று தான்படைத்துக் கூறி யரற்றியவாறு. (55)

2246. பற்றிய தவத்தினிற் பயந்த மைந்தற்கு
முற்றுல களித்தது முறையி னெய்திய
கொற்றவன் முடிமணக் கோலங் காணவும்
பெற்றிலை போலுநின் பெரிய கண்களால்.

'பற்றிய தவத்தினில் பயந்த மைந்தற்கு
முற்றுலகு அளித்து, அது முறையின் எய்திய
கொற்றவன் முடிமணக் கோலம் காணவும்
பெற்றிலை போலும், நின் பெரிய கண்களால்!'

பொ :—'நீ மேற்கொண்ட தவத்தால் பெற்ற மைந்தனாகிய இராமனுக்கு முழு உலகத்தையும் கொடுத்து அம்முழு உலக ஆட்சியையும் முறையால் அடைந்த அவ்விராமன், முடிபுனைந்து கொள்ளுகின்ற மணக்கோலத்தை நின் பெரிய கண்களால் காணவும் பெறவில்லை போலும்!'

கு :—பற்றிய தவம் என்றது இங்குத் தயரதன் மகப் பேற்றின் பொருட்டுச் செய்த புத்திர காமேட்டி என்னும் வேள்வியை. மைந்தனின் அருமை புலப்பட வேண்டித் 'தவத்தினிற் பயந்த' என்று சிறப்பித்தான். பிறர்க்குச் சிறிதும் உரிமையின்றி என்பது தோன்ற, 'முற்றுலகளித்து' என்றான். அது என்று சுட்டியது முற்றுலகத்தை. முறையாவது, 'மூத்தவற்கு உரித்து அரசு' என்ற நியதி. முற்றுலகு எய்தினமை கூறப்பட்டதாகலின் இராமனைக் 'கொற்றவன்' என்று குறிப்பிட்டான். முடிமணம்-முடிபுனைவிழா. தயரதனும் இக்கோலத்தைக் காணவே விரும்பியிருந்தான் என்பதை,—"அவனி மாதெனும் ஒரு மகள் மணமுங் கண்டு உவப்பதாயினேன்" (1427) என முன்னர்க் கூறியுள்ளமை கொண்டு உணரலாம். பெரிய கண்கள் இருந்தும் இராமன் முடிமணக் கோலத்தைக் காணாது கழிந்தனவே என இரங்கியவாறு. (56)

### பரதன் சிறிது தேறுதல்

**2247.** ஆற்றல னின்னன பன்னி யாவலித்
தூற்றுறு கண்ணின னுருகு வான்றனைத்
தேற்றின ளன்னைதான் சிறிது தேறிய
கூற்றுறழ் வரிசிலைக் குரிசில் கூறுவான்.

**ஆற்றலன், இன்னன பன்னி ஆவலித்து
ஊற்று உறு கண்ணினன் உருகுவான்தனைத்
தேற்றினள் அன்னைதான்; சிறிது தேறிய
கூற்று உறழ் வரி சிலைக் குரிசில் கூறுவான்.**

பொ :—தந்தையை இழந்த துன்பத்தைப் பொறுக்கமுடியாதவனாய் இவ்வாறான சொற்களைச் சொல்லிக்கொண்டு அழுது, பின் ஊற்றுப் போல் நீர்வாருங்கண்ணினனாய் மனமுருகுகின்ற பரதனை அருகிருந்த கைகேயி ஒருவகையாகத் தேற்றினாளாகச் சிறிது தேறிய-எமனை ஒத்த கட்டமைந்த வில்லையுடைய பரதன் பின்னும் கூறுவானானான்.

கு:—ஆற்றலனாய், கண்ணினனாய், உருகுவான்தனை என முற்றெச்சமாக்கி முடிக்க. ஆவலித்தல்–அழுதல். ஊற்றுநீர் பெருகுவதுபோல நீர்

பெருகும் கண்ணினன் என்பார், 'ஊற்றுறுகண் ணினன்' என்றார். தேறிய குரிசில் என்க. கூற்றுறழ் வரிசிலையுடையனாயிருந்தும் தன் தந்தையைக் கவர்ந்த கூற்றுவனைத் தண்டிக்க வியலாது வருந்தவேண்டியவனானான் என மாற்றருங் கூற்றத்தின் ஆற்றலைக் குறிப்பிட்டவாறு. (57)

### பரதன் இராமனை வணங்க வேண்டும் எனல்

2248. எந்தையும் யாயுமெம் பிரானு மெம்முனு
மந்தமில் பெருங்குணத் திராம னாதலால்
வந்தனை யவன்கழல் வைத்த போதலாற்
சிந்தைவெங் கொடுந்துயர் தீர்க லாதென்றான்.

'எந்தையும் யாயும் எம்பிரானும் எம்முனும்
அந்தம் இல் பெருங்குணத்து இராமன் ஆதலால்,
வந்தனை அவன்கழல் வைத்தபோது அலால்,
சிந்தை வெங்கொடுந்துயர் தீர்கலாது' என்றான்.

பொ :—'எம் தந்தையும் எம் தாயும் எம் கடவுளும் எம் அண்ணனும் எல்லையற்ற பெருங் குணத்தையுடைய இராமனே ஆதலால் அவன் திருவடிகட்கு என் வந்தனையைச் செலுத்திய பொழுதன்றி என் சிந்தையிலுள்ள மிகக் கொடிய துயரம் தீராது' என்று தாயை நோக்கிக் கூறினான்.

கு :—பிரான்-கடவுள். தந்தையும் தாயும் கடவுளும் அண்ணனாகிய இராமனே என்பது பரதன் கருத்து. அவ்வாறு அவன் கருதுதற்குக் காரணம் இராமனுடைய அந்தமில் பெருங்குணமே என்பது குறிப்பால் புலப்படுத்தியவாறு. "நவையறு குணங்களென்னும் பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணியமூர்த்தி (6-16-22) என்பது காண்க. வந்தனை வைத்தலாவது, வணக்கம் செலுத்துதல். வந்தனை என்றது தலை தாளிற்பட வணங்குதல் ஆதலின், 'தலையை அவன் கழலில் வைத்தபோது அலால்' என்றும் பொருள் கூறலாம். தந்தையை இழந்த துயரின் மிகுதி தோன்ற 'வெங்கொடுந்துயர்' என இரண்டு அடையால் சிறப்பித்தான். தந்தையை இழந்தாலும் தந்தை போன்ற அன்பினனாகிய இராமனைக் கண்டேனும் ஆறுதல் அடையலாம் என்பது அவன் கருத்து. சத்துருக்கனையும் உளப்படுத்தி, 'எம்பிரானும் எம்முனும்' என்றான். "தனக்குவமையில்லாதான் தாள்சேர்ந்தார்க்கல்லால் மனக்கவலை மாற்றலரிது" (குறள்-7) என்ற கருத்து இச்செய்யுளில் அமைந்துள்ளமை காண்க. இராமன் யாண்டுளான் என்பதறிய விழைந்த பரதன் இங்ஙனம் கூறினான் என்க. (58)

### கைகேயி, ‘ அவன் கானத்தான் ’ எனல்

2249. அவ்வுரை கேட்டலு மசனி யேறென
வெவ்வுரை வல்லவள் மீட்டுங் கூறுவா
டெவ்வடு சிலையிஞய் தேவி தம்பியென்
றிவ்விரு வோரொடுங் கானத் தானென்ருள்.

அவ் உரை கேட்டலும், அசனியேறு என,
வெவ் உரை வல்லவள், மீட்டும் கூறுவாள்,
“ தெவ் அடு சிலையிஞய்! தேவி, தம்பி, என்று
இவ் இருவோரொடும் கானத்தான் ” என்ருள்.

பொ :—பரதன் கூறிய அச்சொல்லைக் கேட்டவுடன் இடியேறு போலக் கொடுஞ் சொல்லைச் சொல்ல வல்லவளாகிய கைகேயி, மீண்டும் கூறுகின்ருள். “ பகைவரை வெல்லத் தக்க வில்லையுடையோனே! (அவ்விராமன்) தேவியும் தம்பியும் ஆகிய இந்த இருவரோடும் காட்டில் உள்ளான் ” என்ருள்.

கு :—அசனி-இடி. கேள்வியானும் பயனுனும் அவள் வெஞ்சொல்லுக்கு இடியேறு உவமையாயிற்று. அத்தகைய வெஞ்சொல் சொல்லிக் கைவந்தமை தோன்ற, “ வெவ்வுரைவல்லவள் ” என்ருர். முன் தந்தையைப் பற்றிப் பரதன் வினவியபோது, “ தேவர் கைதொழ வானகம் எய்திஞன் வருந்தல் நீ ” என்று கூறினவள் ஆதலின், இங்கு ‘ மீட்டுங் கூறுவாள் ’ என்ருர். பகைவெல்லும் வல்வில் துணை இருக்க அண்ணன் துணையை ஏன் நாடுகின்ருய் என்பாள், ‘ தெவ்வடுசிலையிஞய் ’ என்ருள். வெறுப்பின் மிகுதியால் இராமன் என்ற பெயர் கூறவும் கூசி, எழுவாய் கூருது கானத்தான் எனப் பயனிலை மட்டும் கூறிஞள். கானத்தில் உள்ளான் என்பது கருத்து. அக்கானகத்தும் அவனுக்கு வேண்டிய மனைவியோடும் தம்பியோடுந்தான் இனிமையாகத் தங்கியுள்ளான்; தனிமையாகத் தளர்ச்சியுறவில்லை என்பாள், “ தேவி, தம்பியென் றிவ்விருவோரொடும் கானத்தான் ” என்ருள். (59)

### பரதன் நைந்து கூறல்

2250. வனத்தின னென்றவ ளிசைத்த மாற்றத்தை
நினைத்தன னிருந்தன னெருப்புண் டானென
வினைத்திறம் யாதினி விளைப்ப தின்னமு
மெனைத்துள கேட்பன துன்பம் யானென்ருன்.

'வனத்தினன்' என்று, அவள் இசைத்த மாற்றத்தை
நினைத்தனன், இருந்தனன் நெருப்பு உண்டான் என;
'வினைத்திறம் யாது இனி விளைப்பது? இன்னமும்
எனைத்துள கேட்பன துன்பம், யான்?' என்றான்.

பொ :—"வனத்தில் உளான்" என்று அக்கைகேயி சொன்ன சொல்லை நினைத்தவனாய் நெருப்பை உண்டவன்போல ஒன்றும் பேச வியலாதவனாய் இருந்தான்; பின்னர், 'வினையின் வலிமை இனி விளைக்க இருப்பது யாது? இன்னமும் யான் கேட்க இருப்பனவாய துன்பங்கள் எத்துணையுள்ளன?' என்று கூறினான்.

கு :—'நினைத்தனனாய் நெருப்புண்டான் என இருந்தனன்' என முற்றெச்சமாக்கி முடிக்க. 'இராமன் கானகம்புக்கான்' என்ற சொல்லை நினைத்து நினைத்து ஒன்றும் பேச இயலாமல் துன்புற்றிருந்த நிலைக்கு நெருப்புண்ட வருத்தம் உவமை. வினைத்திறம்-தீவினையின்வலி. தயரதன் இறப்பும் இராமன் கான் நடப்பும் வினைவலியால் நிகழ்ந்தன என்ற கருத்தினனாகலின், 'இனியும் அவ்வினை விளைப்பதாகிய கொடுமை யாது உளதோ' எனவும், 'இன்னமும் யான் கேட்கப்போகும் துன்ப நிகழ்ச்சிகள் எத்துணையனவோ' எனவும் அஞ்சி ஐயுறலானான். (60)

## பரதன் வினா 2251—2252

2251. ஏங்கினன் விம்மலோ டிருந்த வேந்தலப்
பூங்கழற் காலவன் வனத்துப் போயது
தீங்கிழைத் ததனினோ தெய்வஞ் சீறியோ
வோங்கிய விதியினோ யாதினோ வெனா.

ஏங்கினன் விம்மலோடு இருந்த ஏந்தல், 'அப்
பூங்கழல் காலவன் வனத்துப் போயது,
தீங்கு இழைத்ததனினோ? தெய்வம் சீறியோ?
ஓங்கிய விதியினோ? யாதினோ?' எனா.

பொ :—ஏக்கம் மிக்குப் பொருமலோடு இருந்த பரதன், 'அந்தக் கழல் அணிந்த பூப்போன்ற மெல்லிய திருவடியையுடைய இராமன் காட்டிற்குச் சென்றது, யார்க்கேனும் தீங்கு செய்ததனாலோ? அல்லது தெய்வத்தின் சீற்றத்தாலோ? அல்லது எல்லாவலியினும் உயர்ந்த வலியுடையதாகிய ஊழினாலோ? மற்று யாது காரணத்தாலோ?' என்று ஐயுற்று வினவி.

கு :—குளகம் ; மேல் 'என்ருன்' என்பதோடு முடியும். கல்லும் முள்ளும் நிறைந்த கானகத்தில் நடக்கத்தக்க அடிகள் அல்லவே என்ற இரக்கத்தால் 'பூங்கழற் காலவன்' என்ருன். தீங்கு - குருக்களை இகழ் தல் போல்வன. தெய்வம் சீறுதல் என்றது, தெய்வச் சீற்றத்தால் தெளிவு மயங்கி மருளாய்த் திரிதலை. விதியினே என்றது, சூது போரிலோ அல்லது மோது போரிலோ செருக்கினல் கலந்து விதிவலி யால் தோற்றுக் காட்டுக்குச் செல்லுதல். இம்மூன்று வினக்களுக்கும் கைகேயி விடைகூறும் 63-ஆம் செய்யுளால் இக்கருத்து விளக்கம் பெறும். யாதினே? என்ற வினவால் இம்மூன்றும் அல்லாத ஒரு கார ணத்தால் இராமன் காடுபுகுந்தான் என்பதும் குறிப்பால் கவி உணர வைத்துள்ளமை காண்க. **(61)**

**2252.** தீயன விராமனே செய்யு மேலவை
தாய்செய லல்லவோ தலத்து ளோர்க்கெலாம்
போயது தாதைவிண் புக்க பின்னரோ
வாயதன் முன்னரோ வருளு வீரென்ருன்.

"தீயன இராமனே செய்யுமேல், அவை
தாய் செயல் அல்லவோ, தலத்துளோர்க்கு எலாம்?
போயது தாதை விண் புக்க பின்னரோ?
ஆயதன் முன்னரோ? அருளுவீர்" என்ருன்.

பொ :—"தீய செயல்களை இராமனே செய்வான் ஆயின், அச்செயல் கள் நாட்டு மக்களுக்கு எல்லாம் தாய் (மகவினைத் தண்டித்தல் போன்ற அன்புறு) செயல் அல்லவோ? இராமன் வனம் போயது தந்தை விண் ணுலகு புகுந்த பின்னே? அதற்கு முன்னே? கூறியருளுங்கள்" என்ருன்.

கு :—தெய்வத்தாலாவதற்கும் விதியால் நிகழ்வதற்கும் இராமன் நேரே காரணன் அன்மையின், 'தீங்கிழைத்ததனினே' என்ற வினவிற்கு மட்டும் விளக்கம் கூறப்படுகின்றது. இராமன் தீயனவற் றைச் செய்யமாட்டான், செய்தானேல் நாட்டு மக்களின் நன்மைக் காகவே செய்திருப்பான் ஆதலின் அதன் பொருட்டுக் காடுபுக வேண்டி வாராது என்பது கருத்து. "தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளா கிலும் சிதகுரைக்குமேல், என்னடியா ரதுசெய்யார் செய்தாரேல் நன்று செய்தார் என்பர் போலும்" (4-9-2-பெரியாழ்வார்) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். அருளுவீர் என்றது சொல்லுவீராக என்னுங் குறிப் பினது. **(62)**

## கைகேயியின் விடை

**2253.** குருக்களை யிகழ்தலி னன்று குன்றிய
செருக்கினு லன்ருெரு தெய்வத் தாலுமன்
றருக்கனே யனையவவ் வரசர் கோமக
னிருக்கவே வனத்தவ னேகி னுனென்ருள்.

"குருக்களை இகழ்தலின் அன்று; குன்றிய
செருக்கினுல் அன்று; ஒரு தெய்வத்தாலும் அன்று;
அருக்கனே அனைய அவ் அரசர் கோமகன்
இருக்கவே, வனத்து அவன் ஏகினுன்" என்ருள்.

பொ :—"(இராமன் வனம் சென்றது) பெரியோர்களை இகழ்ந்ததால் அன்று; இழிந்த செருக்குக் காரணமாகவும் அன்று; ஒரு தெய்வத்தின் சீற்றத்தாலும் அன்று; வாய்மையில் சூரியனே போன்ற அந்த அரசர்க்கு அரசனுகிய தயரதன் உயிரோடு இருக்கும்பொழுதே இராமன் வனத்திற்குப் போனுன்;'' என்று கைகேயி கூறினுள்.

கு :—குருக்கள் – பெரியோர். பரதன் ஐயுற்று வினவிய மூன்று காரணத்தாலும் இராமன் வனம்புகவில்லை எனக் கைகேயி மறுத்துத் தயரதன் இருக்கும்போதே அவன் வனம்புக்கான் என விடையிறுத்தவாறு. அருக்கன் – ஞாயிறு; வாய்மைக்கு உவமை. "ஞாயிற்றன்ன வாய்மையும்" (ஆத்திரையன் பேராசிரியன் பாயிரம்) என்புழியும் வாய்மைக்கு ஞாயிறு உவமையாதல் காண்க. "அருக்கனே அனைய அவ் அரசர் கோமகன் இருக்கவே" என்றது, வாய்மையைக் காக்க வேண்டியே இராமன் காடுபுக நேர்ந்தது என்னும் குறிப்புணர்த்தவேண்டி. (63)

## பரதன் வினு

**2254.** குற்றமொன் றில்லையேற்
கொதித்து வேறுளோர்
செற்றது மில்லையேற்
றெய்வத் தாலன்றேற்
பெற்றவ னிருக்கவே
பிள்ளை கான்புக
வுற்றதென் பின்னவ
னுலந்த தென்னென்ருன்.

"குற்றம் ஒன்று இல்லையேல், கொதித்து வேறு உளோர்
செற்றதும் இல்லையேல் தெய்வத்தால் அன்றேல்
பெற்றவன் இருக்கவே பிள்ளை கான் புக
உற்றது என் ? பின் அவன் உலந்தது என் ?" என்றான்

பொ :—'இராமன் செய்த குற்றம் ஒன்றும் இல்லையானால், வேறு பட்டபகைவர் மனம் கொதித்துப் பகைத்துத் துரத்தியதும் இல்லையானால், தெய்வத்தால் நிகழ்ந்ததும் இல்லையானால், பெற்ற தந்தையிருக்கவே பிள்ளையாகிய இராமன் காடுபுக நேர்ந்தது என்னை? பின்னர் அம் மன்னவன் இறந்ததும் என்ன காரணத்தால்?' என்று வினவினான்.

கு :—ஓங்கிய விதியினோ (2251) என்று முன் பரதன் வினவியதற்கு விளக்கமாகக் "கொதித்து வேறுளோர் செற்றதும் இல்லையேல்" என்பது அமைந்துள்ளமை காண்க. பகைவர்க்குத் தோற்றுக் காடு புகுதல் விதியால் நிகழலாம் என்பது கருத்து. மேற்கூறிய மூன்றும் இல்லையாயின் பெற்றவன் இருக்கப் பிள்ளை கான் புகுதற்கும் அவன் கான் புக்க பின் மன்னன் வான் புக்கதற்கும் வேறு காரணம் வேண்டும் ஆதலின் அதனை அறிய வினவுகின்றான் பரதன் என்க. உலத்தல்—இறத்தல். (64)

### கைகேயியின் விடை

2255. வாக்கினால் வரந்தரக் கொண்டு மைந்தனைப்
போக்கினேன் வனத்திடைப் போக்கிப் பாருனக்
காக்கினே னவனது பொறுக்க லாமையா
னீக்கினான் றன்னுயிர் நேமி வேந்தென்றாள்.

'வாக்கினால் வரம் தரக் கொண்டு, மைந்தனைப்
போக்கினேன் வனத்திடைப் போக்கிப் பார் உனக்கு
ஆக்கினேன் ; அவன் அது பொறுக்கலாமையால்,
நீக்கினான் தன் உயிர் நேமி வேந்து' என்றாள்.

பொ :—'மன்னன் தன் வாக்கினால் இரு வரங்களைக் கொடுக்க அவற்றைப் பெற்றுக்கொண்டு வல்லமையுள்ள இராமனை வனம் செலச் செய்தேன்; அவ்வாறு அவனைப் போக்கிவிட்டு இந்தக் கோசலநாட்டு ஆட்சியை உனக்கு உரிமையுடையது ஆகச் செய்தேன்; ஆணைச் சக்கரத்தையுடைய அம்மன்னன், மைந்தன் வனம்போன துன்பம் பொறுக்க மாட்டாமையால் தன் உயிரை நீக்கினான்' என்று கூறினாள்.

கு :—மைந்தன் - வல்லமையுடையவன் ; மகன். வனம்போதற்குரிய வல்லமை யுடையானையேபோக்கினேன் என்பது புலப்பட, 'மைந்தனை'

என்ருள். யான்வளர்த்த மைந்தனை யான்போக்கினேன் அது பற்றி நீ கவலற்க என்பாள், 'மைந்தனைப் போக்கினேன்' என்ருள் எனினும் அமையும். இங்குக் கோசல நாட்டையே 'பார்' என்ருள். செய்யுள் ஆதலின் அவன் என்ற சுட்டு முன்வந்தது. அது என்றது, மைந்தனை வனத்திடைப் போக்கியதனை. "மண்ணே கொள் நீ மற்றைய தொன்றும் மறவென்ருன்" (1611) என்றமையால் பார் பரதனுக்கு ஆக்கினமை தயரதனுக்குப் பொறுக்கலாகாதது அன்று என்பது பெறப்படும். வாக்கினுல் வரங்கொண்டமையால் அவ்வரத்தைக் கொடுத்த அருக்கனே அனைய தயரதன் வாய்மை தவருதிருக்க வேண்டியே, இராமன் வனம் சென்ருன் என்பதும் தயரதன் நோய் முதலிய காரணங்களால் உயிர் நீங்கவில்லை, மகன் பிரிந்த வருத்தம் பொறுக்கலாமையாலே தான் உயிர் நீத்தான் என்பதும் விளக்கியவாறு. (65)

## கைகேயி சொல்கேட்ட பரதன் சினநிலை 2256—2259

**2256.** சூடின மலர்க்கரஞ் சொல்லின் முன்செவி
கூடின புருவங்கள் குதித்துக் கூத்துநின்
ருடின வுயிர்ப்பினே டழற்கொ ழுந்துக
ளோடின வுமிழ்ந்தன வுதிரங் கண்களே.

சூடின மலர்க்கரம், சொல்லின்முன், செவி
கூடின ; புருவங்கள் குதித்துக் கூத்து நின்று
ஆடின ; உயிர்ப்பினேடு, அழல் கொழுந்துகள்
ஓடின ; உமிழ்ந்தன உதிரம் கண்களே.

பொ :—தலைமேல் குவித்த தாமரை மலர் போன்ற கைகள், அவள் சொல் கேட்பதற்குமுன் செவியைச் சேர்ந்தன ; புருவங்கள் கீழும் மேலுமாகக் குதித்துக் கூத்தாடின ; மூச்சுக் காற்ருேடு நெருப்புக் கொழுந்துகள் வெளிப்பட்டு ஓடின ; கண்கள் குருதியை உமிழ்ந்தன.

கு :—இராமனை வணங்க வேண்டித் தலைமேல் குவித்திருந்த கைகளைக் கைகேயியின் இன்னச் சொல்லைக் கேளாதிருக்க வேண்டிச் செவிமேல் வைத்து மூடிக்கொண்டான் பரதன் என்பார், 'சூடின மலர்க்கரம்... செவிகூடின' என்ருர். சினத்தால் புருவந் துடித்தன என்பார், 'குதித்துக் கூத்து நின்று ஆடின' என்ருர். வெப்பமாகப் பெருமூச்சு விட்டான் என்பார், 'உயிர்ப்பினேடு அழல் கொழுந்துகள் ஓடின' என்ருர். கண்கள் உதிரம் கொட்டியது, சினத்தோடு கலந்த வருத்த மிகுதியால் ஆகும். (66)

2257. துடித்தன கபோலங்கள் சுற்றுந் தீச்சுடர்
பொடித்தன மயிர்த்தொளை புகையும்போர்த்தது
மடித்தது வாய்நெடு மழைக்கை மண்பக
வடித்தன வொன்ருெடொன் றசனி யஞ்சவே.

துடித்தன கபோலங்கள் ; சுற்றும் தீச்சுடர்
பொடித்தன மயிர்த்தொளை ; புகையும் போர்த்தது ;
மடித்தது வாய் ; நெடு மழைக் கை, மண் பக
அடித்தன, ஒன்ருெடு ஒன்று அசனி அஞ்சவே.

பொ :—கன்னங்கள் துடித்தன ; உடம்பிலுள்ள மயிர்த் தொளைகள் சுற்றிலும் நெருப்புக் கொழுந்துகளைத் தோற்றுவித்தன ; அந் நெருப்பால் புகையும் போர்த்தது ; வாய் மடித்தது ; மேகம் போன்று கைம்மாறு கருதாது கொடுக்கும் நீண்ட கைகள் தரை பிளக்குமாறும் இடியேறும் அஞ்சுமாறும் ஒன்ரேடு ஒன்று அடித்தன.

கு :—கபோலம் - கன்னம் மனத்துப் பொங்கிய சினத்தால் மயிர்த் தொளைவழி நெருப்புக் கொழுந்துகளும் புகையும் தோன்றின. மழை நெடுங்கை என மாறுக. கைகள் ஒன்ரேடு ஒன்று தாக்கிய ஒலி மிகுதியால் தரை பிளந்தது ; இடியும் அஞ்சியது என்க. (67)

2258. பாதங்கள் பெயர்தொறும்
பாரு மேருவும்
போதங்கொ ணெடுந்தனிப்
பொருவில் கூம்பொடு
மாதங்கம் வருகல
மறுகிக் கால்பொர
வோதங்கொள் கடலினின்
றுலேவ போன்றவே.

பாதங்கள் பெயர்தொறும், பாரும் மேருவும்,
போதம் கொள் நெடுந்தனிப் பொருவில் கூம்பொடு,
மாதங்கம் வரு கலம் மறுகிக் கால் பொர,
ஓதம் கொள் கடலினின்று உலேவ போன்றவே.

பொ :—பரதன் பாதங்களைப் பெயர்த்துவைக்குந்தோறும் பூமியும் பூமிக்கு இடையில் உள்ள மேருமலையும், நடுக்கமுறும் தோற்றம்; முதலில் அறிதற்கு உரியதாக இருக்கின்ற நீண்ட தனிமையான ஒப்பு அற்ற பாய்

மரத்தோடு யானையை யேற்றிக்கொண்டு வரும் கப்பல், காற்றுச் சுழன்று வீசி மோதுதலால் பெருகிய அலைகளையுடைய கடலில் நின்று வருந்துவதை ஒத்தன.

கு :—சேய்மையிலிருந்து வரும் கப்பலில் கரையிலுள்ளார்க்கு முதலில் புலனுவது கூம்பு ஆதலின் அதனைப் போதங்கொள் கூம்பு என்ருர். மாதங்கம் வருகலம் பாருக்கும், கூம்பு மேருவுக்கும் உவமை. பரதன் சினத்தோடு கால் பெயர்த்து வைக்குந்தோறும் பூமி, காற்ருல் தாக்குண்ட கப்பல்போல அதிர்ச்சியுற்றது என்பது கருத்து. மாதங்கம்—யானை. ஓதம் - அலை. கலம் - கப்பல். கால் மறுகிப் பொர என்று இயைக்க. "பாரிடை யழுந்துகின்ற படர் நெடும் பனிமாக் குன்றம், கூருகிர்க் குவவுத் தோளான் கூம்பெனக் குமிழிபொங்க ஆர்கலி யழுவத்தாழும் கலமென லாயிற்றன்றே." (சுந்தர காண்டம் 1. 9) என்பது ஒப்பு நோக்கத்தகும். (68)

**2259.** அஞ்சினர் வானவ ரவுண ரச்சத்தாற்
றுஞ்சின ரேனையோர் சொரிம தத்தொளை
யெஞ்சின திசைக்கரி யிரவி மீண்டனன்
வெஞ்சினக் கூற்றுந்தன் விழிபு தைத்ததே.

அஞ்சினர் வானவர் அவுணர் ; அச்சத்தால்
துஞ்சினர் ஏனையோர் ; சொரி மதத் தொளை
எஞ்சின திசைக்கரி ; இரவி மீண்டனன் ;
வெஞ்சினக் கூற்றும் தன் விழி புதைத்ததே.

பொ :—(பரதன் சினத்துடன் பாதம் பெயர்த்தலால்) தேவரும் அசுரரும் அஞ்சினர்கள் ; மற்றை நாகர்கள் முதலியோர், அச்சம் மிகுதியால் இறந்துபட்டார்கள் ; திசையானைகளின் மதம் சொரியும் தொளைகளில் அச்சத்தால் மதம் பெருகாமல் குறைந்தன. சூரியனும் அச்சத்தால் செல்லும் திசை தெரியாமல் இருந்த இடத்திலிருந்து வந்த வழிக்கே மீண்டான் ; கொடுஞ் சினத்தை உடைய கூற்றும் அச்சத்தால் தன் கண்களை மூடிக்கொண்டது.

கு :—அச்சத்தால் துஞ்சினர், எஞ்சின, மீண்டனன், விழி புதைத்தது எனப் பின் எல்லாவற்ருேடும் இயைதலின் முன்னின்ற அச்சொல் முதனிலை விளக்கு. ஏனையோர் என்றது, பாதலத்து வாழும் நாகரையும் மண்ணில் வாழும் மக்களையும். யானைக்கு மகிழ்ச்சிமிக்கபோது பெருகுதலும், வெருட்சிமிக்கபோது அருகுதலும் மதத்திற்கு இயல்பு. திசைக்கரியின் சொரிமதத் தொளையில் மதப்பெருக்குக் குறைந்தது என்க. மேலைத் திசை நோக்கிச் செல்லவேண்டிய சூரியன், அச்சத்தால் செல்லுந் திசை

மாறிக் கீழ்த் திசை நோக்கி மீண்டான் என்றவாறு. பிறரை அச்சுறுத்தி உயிருண்ணும் கூற்றும் அச்சத்தால் கண் புதைத்துக்கொண்டது என்க. உம்மை உயர்வு சிறப்பு. கூற்று, சொல்லால் அஃறிணையாதலின் அதற்கேற்பப் 'புதைத்தது' என அஃறிணை வினையால் முடித்தார். (69)

கவிக் கூற்று

2260. கொடியவெங் கோபத்தாற் கொதித்த கோளரி
கடியவ டாயெனக் கருது கின்றில
னெடியவன் முனியுமென் றஞ்சி நின்றன
னிடியுரு மனையவெம் மொழி யியம்புவான்.

கொடிய வெம் கோபத்தால் கொதித்த கோளரி,
கடியவள் தாய் எனக் கருதுகின்றிலன்;
'நெடியவன் முனியும்' என்று அஞ்சி நின்றனன்;
இடி உரும் அனைய வெம்மொழி இயம்புவான்.

பொ :—மிகக் கொடிய கோபத்தால் மனம் கொதித்த வலிய சிங்கம் போன்ற பரதன், அஞ்சத்தக்கவளாகிய கைகேயியைத் தாய் என்று எண்ணவில்லை; அண்ணன் வெகுள்வான் என்று அஞ்சி நின்றவனாய், பேரிடிபோன்ற கொடிய சொற்களைச் சொல்லுவானானன்.

கு :—கடியவள் - அஞ்சத்தக்க செயலைச் செய்தவள்; 'கடி' என்னும் உரிச்சொல் அடியாகப் பிறந்த பெயர். கோபத்தால் கொதித்த கோளரி போன்றவனாயிருந்தும் அக்கோளரிக்குரிய கொலைத்தொழில் செய்யாமைக்குக் காரணம், நெடியவன் முனியும் என்பதே அன்றி, அவளைத் தாய் என்று மதித்தமையன்று என்பதை விளக்கியவாறு. அச்சத்தால் அது செய்திலனாயினும் அதற்கீடாக இடியேறு போன்ற கொடிய மொழியைச் சொல்லுகின்றான் என்க. 'கடியவளை' என்று விரிந்துவரவேண்டிய இரண்டனுருபு விகாரத்தால் தொக்கது. 'தாயெனக் கருதுகின்றிலன்' என்றது, 'தாய் என்று மதித்துக் கொல்லாது விட்டானல்லன்' என்னும் பொருளுணர்த்தி நின்றது. இதைப் பரதனே, "ஏயெனு மாத்திரத் தெற்றுகிற்றிலென், ஆயவன் முனியும் என்று அஞ்சினேன் அலால், தாயெனும் பெயரெனைத் தடுக்கற்பாலதோ ?" எனப் பின்னர்க் கூறுவதால் உணரலாம். நெடியவன் - இராமன். இடி உரும், மீமிசைச் சொல். (70)

பரதன் கைகேயியை இகழ்தல் 2261—2275

2261. மாண்டன னெந்தையென் றம்முன் மாதவம்
பூண்டன னின்கொடும் புணர்ப்பி னுலென்ருற்
கீண்டிலென் வாயது கேட்டு நின்றயா
ணுண்டன னேயன்ருே வரசை யாசையால்.

'மாண்டனன் எந்தை, என் தம்முன் மாதவம்
பூண்டனன், நின் கொடும் புணர்ப்பினுல் என்ருல்,
கீண்டிலென் வாய்; அது கேட்டும் நின்ற யான்
ஆண்டனனே அன்ருே அரசை ஆசையால்?'

பொ :—'நினது கொடிய சூழ்ச்சியால் என் தந்தை மாண்டான். என் அண்ணன் பெரிய தவம் மேற்கொண்டான் என்ருல், அந்நிகழ்ச்சியைக் கேட்டும் நின் வாயைக் கிழிக்காது வெறிதே நின்ற யான், நீ வாங்கித் தந்த அரசை ஆசையால் ஆட்சி செய்தவனே ஆவேனன்ருே?'

கு :—புணர்ப்பு–சூழ்ச்சி. நல்ல சூழ்ச்சியை நீக்கவேண்டிக் 'கொடும் புணர்ப்பினுல்' என்ருன். இராமன் வனம்புக வரங்கேட்டு மன்னனேயும் மாய்த்தது அவள் வாயே ஆகலின் அதைக் கிழித்தெறிதல் முதற் கடமையாகவும், அதைச் செய்யாதுநின்றமையே அவள் கருத்துக்கு உடன்பட்டதாக முடியும் என்பான், 'ஆண்டனனே யன்ருே அரசை' என்ருன். (71)

2262. நீயின மிருந்தனே யானு நின்றனெ
னேயெனு மாத்திரத் தெற்று கிற்றிலெ
னுயவன் முனியுமென் றஞ்சி னேனலாற்
ருயெனும் பெயரெனேத் தடுக்கற் பாலதோ.

'நீ இனம் இருந்தனே, யானும் நின்றனென்,
'ஏ' எனும் மாத்திரத்து எற்று கிற்றிலென்;
ஆயவன் முனியும் என்று அஞ்சினேன் அலால்
தாய் எனும் பெயர் எனேத் தடுக்கற் பாலதோ?'

பொ :—'(கணவனே மாய்த்துக் கான்முளேயைக் கான் புகுத்திய) நீ, இன்னும் உயிரை மாய்த்துக்கொள்ளாமல் துணிவுடன் இருந்தாய்; (அவ்விருவர்பாலும் அயரா அன்புடைய) யானும், இத்தகைய கொடியளாகிய உன்னே 'ஏ' என்று சொல்வதற்குள் தாக்கிக் கொல்லாமல் வெறிதே நின்றுகொண்டிருக்கின்றேன்; எனக்குத் தாயின் தன்மைய

ளுக விளங்கும் இராமபிரான் வெகுள்வானே என்று அஞ்சினேன் ; அது வல்லால் தாய் என்னும் பெயர் நின்னைத் தாக்காமல் என்னைத் தடுக்க வல்லதோ ? (அன்று.)'

கு :—விளைவறியாமையினுல் முன் தவறு செய்திருந்தாலும் அறிந்த பின் நாணித் தானே உயிரை மாய்த்துக்கொண்டிருக்கவேண்டும் ; கைகேயி அது செய்திலள் என்பான், 'நீ இனமிருந்தனை' என்றான். தயரதனுக்கு மகனாய் இராமனுக்குத் தம்பியாய் அவ்விருவர்பாலும் அன்புடைய யானும் என்பது புலப்பட 'யானும்' என்றான். உம்மை உயர்வு சிறப்பு. இனி, மிகக் கொடிய நினக்கு மகனாகிய யானும் உயிரை மாய்த்துக் கொள்ளாமல் நின்றனென் என்று பொருள் கொண்டு இறந்தது தழீஇய உம்மையாக்கலும் கூடும். இருந்தனை, நின்றனென் என்ற முரண்தொடை காண்க. 'ஏ' என்பது குறுகிய கால அளவையைக் குறிக்க வந்தது ; ஒரு நொடியில் என்பது போல. எற்றுதல்-தாக்குதல் எற்றுகிற்றிலனாய் நின்றனென் என முற்றெச்சமாக்கி முடிக்க. ஆயவன்-தாயின் தன்மை வாய்ந்த இராமன். இராமன் முனிவானே என்ற அச்சம் தடுத்ததேயன்றித் தாய் எனும் பெயர் தடுத்திலது என்பது கருத்து. தாய் என்ற பெயர் மட்டும் தாங்கித் தாய்மைக் குணம் சிறிதும் தாங்காதவள் என்பது புலப்படத் 'தாய் எனும் பெயர்' என்றான். வெறும் பெயரேயாதலின் அது தடுக்கும் வலிமை இலதாயிற்று. இராமன் தன்னைப் பெற்றிலனாயினும் தாயின் தன்மையுடையவன் ஆதலின் அவன் முனிவுக்கும் பரதன் அஞ்சினான் என்க. தன்னைப் பெற்ற தாயேயாயினும் யாருஞ் செய்யாத கொடுஞ்செயல் புரிந்த கைகேயியைக் கொல்லவேண்டும் என்பது பரதன் எண்ணம் என்பதும், இராமன் அவ்விழி செயலைச் சிறிதும் விரும்பாமைக்கு மேலும் பெரிதும் வெகுள்வான் என்பதும் புலப்படுத்தியவாறு. இதனால் இராமனுடைய பெருந்தன்மையும் அவன் இயல்புகளை உள்ளவாறு உணர்ந்து அடங்கியொழுகும் பரதன் பண்பும் புலனாகும். (72)

**2263.** மாளவு முளனொரு மன்னன் வன்சொலான்
மீளவு முளனொரு வீரன் மேயபா
ராளவு முளனொரு பரத னாயினாற்
கோளல தறநெறி குறையுண் டாகுமோ.

'மாளவும் உளன் ஒரு மன்னன் வன்சொலால்,
மீளவும் உளன் ஒரு வீரன் ; மேய பார்
ஆளவும் உளன் ஒரு பரதன் ஆயினால்,
கோள் அலது அறநெறி ; குறை உண்டாகுமோ ?'

பொ :—" நீ கேட்ட வரம் என்கின்ற கொடிய சொல்லால், மாள்வ தற்கும் ஒரு மன்னன் உளனாகவும், அச்சொல்லால் தன் நாடு கடக்க வும் ஒரு வீரன் உளனாகவும், அச்சொல்லால் கிடைத்த நாட்டை ஆளவும் ஒரு பரதன் உளன் ஆயினல் அறநெறி குற்றமில்லாததே! குறையுடையதாகுமோ ? ஆகாது."

கு :—நின் வன்சொலாகிய வரத்திற்கு இழிவு எண்ணாது மன்னன் மாண்டதும், அவ்வரம் தவறாதபடி நாடுகடந்து இராமன் காடு புகுந்த தும் அற நெறி ஆகுமே அன்றி, அவ்வரத்தால் வந்த நாட்டை ஆளுவ தற்குப் பரதன் உரியவனாதல் அறநெறி ஆகாது என்பான், இகழ்ச்சிக் குறிப்பால் " ஆளவு முளனொரு பரதனாயினல், கோளல தறநெறி குறை யுண்டாகுமோ " என்றான்; கற்கறித்து, 'நன்கு அட்டாய்' என்றாற் போல. "இறந்தா னெந்தை யீந்த வரத்துக் கிழிவென்னா, அறந்தா னீதென்று அன்னவன் மைந்தன் அரசெல்லாம், துறந்தான் தாயின் சூழ்ச்சியின் ஞாலம் அவனேடே, பிறந்தான் ஆண்டான் என்னும் இது என்னாற் பெறல் ஆமே! " (2267) எனப் பின்னர் இக்கருத்தையே வேறோ ாாற்றால் விளக்குமாறு காண்க. மாளுதலும் காட்டிற்குப் போதலும் துன்புறு செயலாயினும் அறத்தொடுபட்டதாகப் பரதன், மேயபார் ஆளு தல், துன்பிலாச் செயலாயினும், அறத்தொடு படாமையைப் புலப்படுத் தியவாறு. மன்னன் என்றது, தயரதனை. வீரன் என்றது, இராமனை. உளன் என்ற குறிப்புவினைமுற்றுக்கள் மூன்றில் முன்னைய இரண்டும் இறந்த காலத்தையும், பின்னையது நிகழ்காலத்தையும் குறித்தன. வன்சொலால் என்பது, முதல் நிலை விளக்காய்ப் பின்னிரிடத்தும் இயைந்தது. கோள்-குற்றம். மீள-கடக்க. (73)

2264. சுழியுடைத் தாயுடைக்
கொடிய சூழ்ச்சியால்
வழியுடைத் தாய்வரு
மரபை மாய்த்தொரு
பழியுடைத் தாக்கினன்
பரதன் பண்டெனு
மொழியுடைத் தாக்கலின்
முறைமை வேறுண்டோ.

'" சுழியுடைத் தாயுடைக் கொடிய சூழ்ச்சியால்,
வழியுடைத்தாய் வரும் மரபை மாய்த்து, ஒரு
பழியுடைத்து ஆக்கினன், பரதன் பண்டு" எனும்,
மொழி உடைத்தாக்கலின் முறைமை வேறு உண்டோ?'

பொ :—"முற்காலத்தில் வஞ்சகமுடைய தாயின் கொடிய சூழ்ச்சியால் இடையறவுபடாது வழிவழியாக வருகின்ற சூரியகுல முறையை மாய்த்துவிட்டு அக்குலத்தை ஒரு பழியுடையதாகச் செய்தான் பரதன்" என்கின்ற சொல்லை உண்டாக்குவதைக் காட்டிலும் யான் மேற்கொள்ளும் நல்ல முறைமை வேறு உளதோ? (இல்லை).

கு :—சுழி-வஞ்சகம். வழியுடைத்தாய் வரும் மரபு-வழிவழியாய் வருகின்ற சூரிய குலத்தின் முறைமை. முறைமையாவது மூத்தவற்கு உரித்து அரசு என்பது. பரதன் முடி சூடுதலால் மூத்தவற்கு உரித்து அரசு என்ற முறைமை மாறுவதோடு மூத்தவன் இருக்க இளையவன் அரசாண்டான் என்ற பழியும் விளைதலின், 'ஒருபழியுடைத்தாக்கினன் பரதன்' என்றான். இகழ்ச்சிக் குறிப்பான், 'முறைமை வேறுண்டோ?' என்றான். சூரிய குலத்தின் மரபைப் பழியுடைத்தாக்கினன் என்ற இழிசொல்லைத் தோற்றுவிப்பது முறையன்று என்பது கருத்து. எதிர்காலத்து மக்கள் கூறுவதுபற்றிக் கருதிக் கூறலின், 'பண்டு' என்றான். (74)

**2265.** கவ்வர விதுவென விருத்திர் கற்பெனு
மவ்வரம் பழித்துமை யகத்துளே வைத்த
வெவ்வரம் பொருதவே லரசை வேரறுத்
திவ்வரங் கொண்டநீ ரினியென் கோடிரோ.

'கவ்வு அரவு இது என இருத்திர்; கற்பு எனும்
அவ் வரம்பு அழித்து, உமை அகத்துளே வைத்த
வெவ் அரம் பொருத வேல் அரசை வேர் அறுத்து,
இவ் வரம் கொண்ட நீர், இனி என் கோடிரோ?'

பொ :—'கடிக்கும் பாம்பு இது' என்னுமாறு இருக்கின்றீர்; கற்பு என்கின்ற அந்த வரம்பையே அழித்து, உம்மை மனையில் வைத்திருந்த கொடிய அரத்தால் தீட்டப்பட்ட வேலினையுடைய மன்னவனையும் வேரறுத்து, இந்த வரத்தைக் கொண்ட நீர் இனி எதைக் கொள்ளப் போகின்றீரோ?.

கு :—கவ்வுதல்-கடித்தல். கணவன் சொல்வழி நிற்கும் கற்பறத்தை மீறித் தன் சொல்வழிக் கணவனை நிற்கச்செய்த தீமை புலப்படக் 'கற்பு எனும் அவ்வரம்பு அழித்து', என்றான். 'நச்சுப் பாம்பை வீட்டில் நுழைய விடாதது போல உம்மையும் மன்னவன் மனையில் நுழையவிடலாகாது என்பதை ஓராமல் மனையில் வைத்திருந்தமையால் அவ்வரசை வேரறுத்தாய்' என்பான், 'அகத்துளே வைத்த அரசை வேரறுத்து' என்றான். 'நாகமெனும் கொடியாள் தனது நாவினீந்த சோகவிடந் தொடரத் துணுக்க

மெய்தா' (1594) என முன் கூறியுள்ளதும் இங்கு நினைக்கத் தகும். அகம், மனமுமாம். யாரையும் வெல்லுதற்குரிய வேலுடைய அரசனையே வேரறுத்தாய் என அவள் துணிவையும், அகத்துளே வைத்த அரசை வேரறுத்தாய் என அவள் வஞ்சகத்தையும் புலப் படுத்தியவாறு. தன்னை மனைவியாகக் கொண்டு அகத்துவைத்த அன் புடைக் கணவன் இறக்குமாறு வரங்கொண்ட கைகேயி, வேறு எவ்வகைக் கொடுமையையும் செய்யப் பின்வாங்காள் என்பான் 'இனி யென் கோடிரோ' என்றான். (75)

இப்பாடல் அச்சுப்புத்தகங்கள் பலவற்றில் இல்லை; ஆயினும் பல ஏட்டுச் சுவடிகளில் காணப்படுவதாலும் கருத்துச் செறிவுடைய அழகிய பாடலாக இருத்தலாலும் இங்குச் சேர்க்கப்பட்டது.

2266. நோயீ ரல்லீர் நுங்கண வன்றன் னுயிருண்டீர்
★ பேயீ ரேநீ ரின்ன மிருக்கப் பெறுவீரே
மாயீர் மாயா வன்பழி தந்தீர் முலைதந்தீர்
தாயீ ரேநீ ரின்னு மெனக்கென் றருவீரே.

'நோயீர் அல்லீர்; நும் கணவன்தன் உயிர் உண்டீர்;
பேயீரே! நீர் இன்னம் இருக்கப் பெறுவீரே?
மாயீர்! மாயா வன்பழி தந்தீர்! முலைதந்தீர்!
தாயீரே நீர்? இன்னும் எனக்கு என் தருவீரே?'

பொ :—'நும் கணவன் உயிரை உண்டீர் ஆதலின் நீர் நோயின் தன்மையீர் அல்லீர்; பேயின் தன்மையீரே ஆவீர்! இப்படிப்பட்ட நீர் மாயாமல் இருக்கின்றீர்! இன்னும் உயிருடன் இருக்கத் தகுதியுடை யீரோ? அழியாத வலிய பழியைத் தந்தீர்; முன்னர் முலைப்பால் தந்தீர் ஆதலின் எனக்குத் தாயாம் தன்மையுடையீரே நீர்? இன்னும் எனக்கு என்ன என்ன தரவிருக்கின்றீரோ?'

கு :—நோய் தன்னால் பற்றப்பட்டாரைக் கொல்லாது விடுத்தலும் கூடுமாதலின், கணவனைக் கொன்ற கைகேயிக்கு உவமையாகாது என் பான், 'நோயீர் அல்லீர்' என்றும், கணவன் என்றும் கண்ணோடாது கொல்லும் கொடுமை பேயின்பால் உளது ஆகலின், 'பேயீரே' என்றும் கூறினன். பேய் கணவனைக் கொல்லும் இயல்பினது என்பதைப் பழையனூர்நீலி என்னும் பேய்வரலாறு கொண்டு தெளியலாம். முலை தந்த நீரே மாயா வன்பழியும் தந்தீர் ஆகலின் தாயின் தன்மை நும்பால் இல்லை என்பான், 'முலை தந்தீர் தாயீரே நீர்?' என்றான். மகனுக்குப் பழி விளைவித்தவள் தாய் அல்லள் என்க. முலை தந்தமைக்கு மாறுபட வன்பழி தந்தாள் ஆதலின், 'இன்னும் எனக்கென் தருவீரே'

என்றான். அப்பழியையும் சிறிதாக்கும் விளைவுகள் கைகேயியால் விளைய லாம் என்பது கருத்து. இழித்தற்கண் பலர்பால் ஆயிற்று. (76)

**2267.** ஒன்றும் பொய்யா மன்னனை
வாயா லுயிரோடுந்
தின்றுந் தீரா வன்பழி
கொண்டுந் திருவெய்தி
யென்றுந் நீரே வாழ
வுவந்தீ ரவனேகக்
கன்றுந் தாயும் போவன
கண்டுங் கழியீரே.

ஒன்றும் பொய்யா மன்னனை வாயால், உயிரோடும்
தின்றும், தீரா வன் பழி கொண்டும், திரு எய்தி,
என்றும் நீரே வாழ உவந்தீர்; அவன் ஏகக்
கன்றும் தாயும் போவன கண்டும் கழியீரே!

பொ :—ஒரு சிறிதும் பொய்த்தல் இல்லாத தயரத மன்னனை வரம் கேட்டு வாய்ச் சொல்லால் உயிரோடு அழித்தும், அதனால் என்றும் நீங்காத வலிய பழியைக் கொண்டும் அரசச் செல்வத்தைப் பெற்று எக் காலத்தும் நீரே வாழ்தற்கு விரும்பினீர்; அவ்விராமன் காட்டிற்குப் போக அவனைப் பின்தொடர்ந்து இலக்குவனாகிய கன்றும் சீதையாகிய தாய்ப் பசுவும் போவனவற்றைக் கண்ணால் கண்டும் சாகாமல் இருக்கின் றீரே! (இதுவன்றோ வியப்பு!)

கு :—இராமன் பின் சீதையும் இலக்குவனும் சென்ற சோகக் காட்சி கல் நெஞ்சத்தையும் கரையச் செய்வதாக இருந்திருக்குமே! அக்காட்சி யைக் கண்டும் நீ கருத்து மாறாமல் இருப்பது வியத்தற்குரியது என்றவாறு. தயரதன் வாய்மையில் தவறாதவன் ஆதலின், 'ஒன்றும் பொய்யா மன்னனை' என்றான். "அந்தோ இனி வாய்மைக்காருளரோ மற்றென்றான்" (திருவடிசூட்டு–60) எனப் பின்னர்க் கூறப்படுதலும் காண்க. உயிரோடுந் தின்றும் என்றது, தின்னப்படாததைத் தின்ற தாகக் கூறிய இலக்கணை. தயரதன் பொய்யாமையே கைகேயி அவனை உயிரோடு தின்னுகைக்குக் காரணம் ஆயிற்று என்பது கருத்து. உலக முள்ள அளவும் நிற்கும் கொடும்பழி என்பான், 'தீரா வன்பழி' என்றான். திரு என்றது அரசச் செல்வத்தை. இராமன் பதினான்காண்டு வனத்தில் தங்க வரம் கேட்டமையைக் கைகேயி உணர்த்தாமல் 'மைந்தனைப் போக்கினேன் வனத்திடை' என்றுமட்டும் முன்னர்ப் பரதனுக்கு உணர்த்

தினமையால், 'என்றும் நீரே வாழவுவந்தீர்' என அவன் கூற வேண்டியதாயிற்று. உவத்தல், இங்கு விரும்புதல் என்னும் பொருளது. தானே என்றும் வாழ விரும்பிய பெருவிருப்பமே கன்றும் தாயும் இராமன் பின் போவன கண்டும் கழியாமைக்குக் காரணமாயிற்று. பிரிய இயலாத பேரன்பினராய் இலக்குவனும் சீதையும் இராமனைப் பின் தொடர்ந்து போகக் கண்டும் உன் விருப்பத்தை நீக்கி இரக்கங்கொள்ளவில்லையே எனக் கடிந்து கூறியவாறு. இலக்குவனைக் கன்ருகவும் சீதையைத் தாய்ப்பசுவாகவும் உருவகித்ததற்கேற்பப் 'போவன' என அஃறிணை வினையால் கூறினுர். இனி, இராமன் கான் ஏக, மக்களேயன்றி அஃறிணை உயிர்களாகிய கன்றும் பசுவும் கூடப் பின்தொடர்ந்து சென்றதைக் கண்டிருந்தும் அதற்குக் காரணமாயிருந்த நீர், உயிர் நீங்காது இருக்கின்றீரே எனப் பொருள் கூறலுமாம். (77)

**2268.** இறந்தான் றந்தை யீந்த
வரத்திற் கிழிவென்னு
வறந்தா னீதென் றன்னவன்
மைந்த னரசெல்லாந்
துறந்தான் ருயின் சூழ்ச்சியின்
ஞால மவனேடும்
பிறந்தா னுண்டா னென்னுமி
தென்னுற் பெறலாமே.

"இறந்தான் தந்தை 'ஈந்த
வரத்திற்கு இழிவு' என்னு;
'அறந்தான் ஈது' என்று அன்னவன்
மைந்தன் அரசு எல்லாம்
துறந்தான்; 'தாயின் சூழ்ச்சியின்
ஞாலம் அவனேடும்
பிறந்தான், ஆண்டான்' என்னும் இது
என்னுல் பெறல் ஆமே?"

போ :—" 'நான் கொடுத்த வரத்திற்கு இழிவு வரும்' என்று எண்ணித் தந்தையாகிய தயரதன் இறந்தான்; அவன் மைந்தனுகிய இராமன் 'இது அறமாகும்' என்று தனக்குரிய அரசுரிமை எல்லாவற்றையும் துறந்து சென்ருன்; 'அவ்விராமனேடு பிறந்த பரதன், தன் தாயின் சூழ்ச்சியால் உலகத்தை ஆண்டான்' என்று பின்னுள்ளாரால் சொல்லப்படும் இந்தப் பழி என்னுல் பெறத்தக்கதாமோ? (ஆகாது)"

கு :—தான் உயிர்வாழ்வதற்காக இராமனைக் காடு புகாமல் செய்வது, முன் ஈந்த வரத்திற்கு இழிவு செய்தது ஆகும் என்று கருதி, அவ்விழிவு நேராத வண்ணம் தயரதன் இறந்தான் என்பது கருத்து. தந்தையின் வாய்மை காக்க அரசெல்லாம் துறப்பதாகிய இதுவே அறமாகும் என்று இராமன் துறந்தான் என்க. 'தந்தையும் தமையனும் இறந்தும் துறந்தும் தம் வள்ளல் தன்மையைக் காட்டினராகப் பரதன் அவர்க்கு மாறாகத் தன்னலமுடையவனாய்த் தாயின் சூழ்ச்சியால் தரையைப் பெற்று ஆண்டான்' என்று பிற்காலத்தோர் தன்னைப் பழிப்பர் என்பது பரதன் கருத்து. இழிவு என்னா இறந்தான் என்று இயைக்க. (78)

2269. மாளும் மென்றே தந்தையை
யுன்னுன் வசைகொண்டாள்
கோளும் மென்னு லேயெனல்
கொண்டா னதுவன்றேன்
மீளும் மன்றே யென்னையு
மெய்யே யுலகெல்லா
மாளும் மென்றே போயின
னன்றோ வரசாள்வான்.

'மாளும் என்றே தந்தையை
உன்னுன், வசை கொண்டாள்
கோளும் என்னாலே எனல்
கொண்டான்; அது அன்றேல்,
மீளும் அன்றே? என்னையும்
மெய்யே உலகு எல்லாம்
ஆளும் என்றே போயினன்
அன்றோ அரசு ஆள்வான்?'

பொ :—அரசாளுதற்குரிய இராமன், தான் பிரிந்தால், மாண்டுவிடுவானே என்று தந்தையைப் பற்றியும் நினையாதவனாய்க் காடு புக்கவன், பழிகொண்டவளாகிய கைகேயி வரங்கொள்ளுதலும் என்னால் நிகழ்ந்ததே என்று மனத்துக்கொண்டானுவான்; அக்கருத்து அவனுக்கு இல்லையாயின், காடுபுகாது மீள்வானன்றோ? என்னையும், 'உண்மையாகவே உலக முழுமையும் ஆட்சி புரிவான்' என்று எண்ணியே காட்டிற்குப் போனானன்றோ? என்னே ஆச்சரியம்!

கு :—உன்னுனைக் காடுபுக்கவன் என வருவிக்க. கொண்டாள், வினையாலணையும் பெயர். கோள்-முதல் நிலை நீண்ட தொழிற்பெயர்;

வரங்கொள்ளுதல் என்க. என்னால் நிகழ்ந்ததே என ஒரு சொல் வருவிக்க. அரசாளும் விருப்பம் ஒரு சிறிதும் இல்லாத என்னையும் எனப் பொருள்படுதலின் உம்மை உயர்வுசிறப்பு. அரசாள்வான் – அரசு ஆளுதற்கு உரிய இராமன், வினையாலணையும் பெயர். என் இயல்பை நன்கு உணர்ந்த இராமன், என்னையும் 'மெய்யே உலகெல்லாம் ஆள்வான்' என்று எண்ணிச் சென்றது வியப்பாகும் என்பது பரதன் கருத்து. (79)

**2270.** ஓதா நின்ற தொல்குல
மன்ன னுணர்வப்பால்
யாதா னுந்தா னாக
வெனக்கே பணிசெய்வான்
றீதா நின்ற சிந்தனை
செய்தா னவனென்னப்
போதா தோவென் றாயிவள்
கொண்ட பொருளம்மா.

"ஓதா நின்ற தொல் குல மன்னன் உணர்வு அப்பால்
யாதானும்தான் ஆக; 'எனக்கே பணி செய்வான்,
தீதா நின்ற சிந்தனை செய்தான் அவன்' என்னப்
போதாதோ, என் தாய் இவள் கொண்ட பொருள் அம்மா?"

பொ :—" உலகத்தாரால் சிறப்பித்துப் பேசப்படுகின்ற பழமையான சூரியகுல மன்னனாகிய இராமன் உணர்வு, (யான் நேரில் உண்மை கூறிய அப்பால்) யாதேனும் ஆகட்டும்; என் தாயாகிய இவள் வரத்தாற் கொண்ட பொருள், 'எனக்கே பணி செய்பவனாகிய பரதன் தீமையான சிந்தனையைச் செய்தானே' என்று அவன் கருதும் அளவு செய்து விட்டதே ! அது போதாதோ ?"

கு :—தொல்குல மன்னன் என்றது இராமனை. 'அரசாள்வான்' என முன்னைச் செய்யுளில் இராமனைக் கூறியது போலவே இச்செய்யுளிலும் அவனை, 'குலமன்னன்' என்றான். பரதன் தன் உண்மை நிலையை இராமன்பால் நேரில் கூறினால், வசைகொண்டாள் கோளும் என்னாலே எனக்கொண்ட அவன் கருத்து மாறும் என்ற துணிபுடையன் ஆகலின் 'மன்னனுணர்வு அப்பால் யாதானுந்தானாக' என்றான். தாய் வரத்தால் கொண்ட பொருள், 'எனக்கே பணிபுரிந்து பழகிய பரதனும் தீய சிந்தனை செய்தானே' என இராமன் நினைக்குமாறு செய்துவிட்டதே! அது போதாதா?' எனத் தாய்கொண்ட பொருளால்

விளைந்தது இழிதகவன்றிப் பிறிதில்லை என்பது விளக்கியவாறு. எனக்கு நன்மை செய்வதாக எண்ணித் தீமையே செய்தாள் தாய் என்றவாறு. (80)

**2271.** உய்யா நின்றே னின்னமு
மென்முன் னுடன்வந்தான்
கையார் கல்லைப் புல்லட
குண்ணக் கலமேந்தி
வெய்யோ னானின் சாலியின்
வெண்சோ றமுதென்ன
நெய்யோ டுண்ண நின்றது
நின்றார் நினையாரோ.

'உய்யா நின்றேன் இன்னமும்;
என்முன் உடன் வந்தான்,
கை ஆர் கல்லைப் புல் அடகு
உண்ணக் கலம் ஏந்தி,
வெய்யோன் நான் இன் சாலியின்
வெண் சோறு அமுது என்ன,
நெய்யோடு உண்ண நின்றது,
நின்றார் நினையாரோ ?'

பொ :—'எனக்கு முன் உடன் பிறந்த அண்ணன் கையில் பொருந்திய தொன்னையில் புல்லியதாகிய கீரை முதலிய உணவை உண்ண நிற்க, கொடியேனாகிய யான் இன்னமும் உயிர்வாழ்பவனாய் இனிதாகிய சம்பா அரிசியால் ஆகிய வெண்மையான சோற்றைப் பொற்கலத்தில் பெய்துகொண்டு சுவையால் அமுதமே என்னுமாறு நெய்யோடு உண்ணுகின்றதைக் கண்டு நின்றவர்கள் இழிவாக என்னை நினைக்கமாட்டார்களோ ? (நினைப்பரே)'

கு :—வெய்யோன் நான் இன்னமும் உய்யாநின்றேன் என இயைக்க. இராமன் காடுசென்றது அறிந்த பின்னரும் இறவாது உயிர் வாழ்வேன் என்பான், இன்னமும் உய்யாநின்றேன் என்றான். கல்லை-தொன்னை. புல் அடகு-புல்லிய கீரை உணவு. காட்டில் வாழ நேர்ந்தமையால் கிடைப்பன தொன்னையாகிய உண்கலமும், கீரையாகிய உணவுமே என்பது கருத்து. கலம் என்றது பொற்கலத்தை. சாலி-சம்பா; வெண்ணிறமுடையதாகலின் அதுகொண்டு சமைத்த சோற்றை வெண்சோறு என்றார். காடாள்வார்க்கும் நாடாள்வார்க்கும் உணவால்

உளதாய உயர்வு தாழ்வுகளை உணர்த்தியவாறு. நினைத்தல், இங்கு இழிவாக நினைத்தலை யுணர்த்தியது. (81)

**2272.** வில்லார் தோளான் மேவினன்
வெங்கா னகமென்ன
நல்லா னன்றே துஞ்சின
னஞ்சே யனையாளைக்
கொல்லேன் மாயேன் வன்பழி
யாலே குறைவற்றே
னல்லே னேயா னன்புடை
யார்போ லழுகின்றேன்.

"'வில் ஆர் தோளான் மேவினன் வெங்கானகம்' என்ன, நல்லான் அன்றே துஞ்சினன்; நஞ்சே அனையாளைக் கொல்லேன், மாயேன்; வன்பழியாலே குறைவு அற்றேன் அல்லேனே யான்! அன்பு உடையார்போல் அழுகின்றேன்!"

பொ :—"'வில்லை ஏந்திய தோளை உடைய இராமன், கொடிய காட்டிற்குப் போய்விட்டான்' என்று சொல்லக் கேட்ட நல்லவனாகிய தயரதன் அப்பொழுதே இறந்தான்; அவன் இறப்பிற்குக் காரணமாய நஞ்சு போன்ற கைகேயியைக் கொல்லுதலும் செய்யாது, இந் நிகழ்ச்சியை அறிந்தும் இறத்தலும் செய்யாது, இராமனிடம் அன்புடையார் அழுதல் போல வஞ்சனையாக அழுகின்றேன்; இத்தகைய யான் வலிய பழியால் குறைவற்றவன் அல்லேனே? (பழியால் குறைவற்றவனே யாவேன்.)"

கு :—தயரதன் நல்லான் ஆகலின் இராமன் வனம் புக்கான் எனக் கேட்டுத் துஞ்சினன் என்றது, 'யான் அல்லேன் ஆகலின் கேட்டும் துஞ்சிலேன்' என்னுங் கருத்தினை யுணர்த்தியது. இராமனைக் காடு புகுவித்துக் கணவனை விண்ணாடு புகுவித்த கைகேயியை யான் கொன்றிருக்கவேண்டும்; இல்லையேல் யான் பொன்றியிருக்கவேண்டும்; இவ்விரண்டில் ஒன்று செய்திருப்பின் இராமனிடம் எனக்கு அன்புண்டு என்பது உண்மையாகும்; அவற்றில் ஒன்றும் செய்யாது அழுவது உண்மையன்பால் நிகழ்வதன்று; வெறும் நாடகமே என்பான் 'அன்புடையார்போல் அழுகின்றேன்' என்றான். அவளை மாய்த்தலோ, யான் மாய்தலோ செய்யாத பழியோடு, அன்புடையார்போல் அழுகின்ற வஞ்சனைச் செயலாகிய குற்றமும் சேர்தலின், "வன்பழியாலே குறைவற்றே னல்லேனே" என்றான். (82)

**2273.** பாரோர் கொள்ளார் யானுயிர்
பேணிப் பழிபூணேன்
றீரா தொன்றோ துன்புமிவ்
வூரிற் றிருநில்லா
ளாரோ டெண்ணிற் றாருரை
கொண்டா யறமெல்லாம்
வேரோ டுங்கே டாக
முடித்தென் விளைவித்தாய்.

'பாரோர் கொள்ளார்; யான் உயிர்
பேணிப் பழி பூணேன்
தீராது ஒன்றோ துன்பும்! இவ்
ஊரில் திரு நில்லாள்;
ஆரோடு எண்ணிற்று? ஆர் உரை
கொண்டாய்? அறம் எல்லாம்
வேரோடும் கேடு ஆக
முடித்து, என் விளைவித்தாய்?'

பொ :—'நின் விருப்பப்படி யான் அரசு ஆள்வதை உலகத்தவர் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்; யானோ என்னுயிரை விடாது காத்துப் பழியை மேற்கொள்ளமாட்டேன்; இவ்வூரில் துன்பமும் நீங்காது; அஃது ஒன்று மட்டுமோ, திருமகளும் நிற்க மாட்டாள்; (இவ்வளவு தீமையும் விளைக்க) எண்ணியது யாரோடு? யார் சொல்லைக் கொண்டாய்? அறங்கள் யாவும் வேரோடு அழியுமாறு செய்து முடித்து எத்தகைய தீமையை விளைவித்துவிட்டாய்!

கு :—'யான் அரசு ஆள்வதை உலகம் ஏற்றுக் கொள்ளாது; கொண்டாலும் யான் உயிர் வாழ மாட்டேன்' என்பது புலப்படுத்திய வாறு. 'உயிர் பேணின் பழி பூணவேண்டி வருதலின் இவ்விரண்டையும் விடுத்துப் புகழ் கொள்வேன்' என்பது பரதன் உட்கோள். 'உயிர் நீப்பர் மானம்வரின்' (குறள்-969) என்பது நினைக்க. இவ்வூரில் துன்பும் தீராது; ஒன்றோ? திருவும் நில்லாள் என்க. ஒன்றோ?—ஒன்று மட்டுமா? 'ஒன்றோ' எண்ணிடைச் சொல் எனலும் ஒன்று. தீர்தல்—நீங்குதல். 'திருநில்லாள்' என்றது, அழுக்காறு உடைய கைகேயி உள்ள ஊராதலின் என்க. சீதேவி நில்லாள் எனவே மூதேவி தங்குவாள் என்பது பெறப்பட்டது. 'பரதன் தாய் இவ்வளவு தீமைகளைத் தரத் தக்க செயலைச் செய்யத் துணிந்திருக்க மாட்டாள்; தீயவர் உரைத்த வஞ்சனைச் சொல்லை நல்லதென மயங்கி விளைவித்த விளைவே இவை' என்ற கருத்தால், ஆரோடு எண்ணிற்று? ஆருரை கொண்டாய்?

என வினவினன் பரதன். "பொய்ந் நிலையோர்கள் புணர்த்த வஞ்ச முண்டோ ?" (1601) எனத் தயரதனும் இவ்வாறு வினவினமை நினைக்க. "அறம் எல்லாம் வேரோடுங் கேடாக" என்றது, மூத்த வற்கு உரித்து அரசு என்ற அறம் தவறியதால் எல்லா அறங்களும் கெட்டன என்ற கருத்தால் ஆகும். (83)

2274. கொன்றே னானென் றந்தையை
மற்றுன் கொலைவாயா
லொன்றோ கானத் தண்ணலை
யுய்த்தே னுலகாள்வா
னின்றே னென்றா னின்பிழை
யுண்டோ பழியுண்டோ
வென்றே னுந்தா னென்பழி
மாயு மிடமுண்டோ.

'கொன்றேன் நான் என் தந்தையை,
மற்று உன் கொலை வாயால்;
ஒன்றோ ? கானத்து அண்ணலை
உய்த்தேன் ; உலகு ஆள்வான்
நின்றேன் ; என்றால், நின் பிழை
உண்டோ ? பழி உண்டோ ?
என்றேனும் தான் என் பழி
மாயும் இடம் உண்டோ ?'

பொ:—'நான் என் தந்தையை உன் கொலைவாயைக் கொண்டு கொன்றேன் ; அஃது ஒன்று மட்டுமோ ? அண்ணல் இராமனைக் காட்டுக்கு அனுப்பினேன்; இவ்விரண்டையும் செய்து விட்டு உலகை ஆள்வதற்காக நிற்கின்றேன் ; என்றால், நின் தவறு உண்டோ? அத் தவறு பற்றி வரும் பழிதான் உனக்கு உண்டோ ? என்றேனும் என்பழி மறைவதற்கு வழி உண்டோ ? (இல்லை.)'

கு: —கைகேயி மூலமாகப் பரதன் அரசு பெறமுயன்றதால் மன்னன் மாண்டான் ; இராமன் கானம் புக்கான் என்றே உலகம் கொள்ளும் என்பது கொண்டு பரதன் இவ்வாறு கூறுகின்றான். "வசை கொண்டாள் கோளும் என்னாலே யெனல் கொண்டான்" (2268) என முன்னர்க் கூறியதும் காண்க. கைகேயியின் வாயைக் கருவியாகக் கொண்டு தந்தையைக் கொன்றவனும் தமையனைக் கானம் நண்ணு வித்தவ னும்பரதனே எனக் கொள்ளுங்கால் கருவியாக நின்ற கைகேயி

பால் பிழையேதுமில்லை ; அப் பிழை காரணமாக வரும் பழியும் அவளுக்கில்லை. பிழையும் பழியும் பரதனுக்கே யுரியன ஆகும் ; ஆகவே அப்பழி என்றும் நின்று நிலவுமே என்றிரங்குவான், 'என்றேனுந்தான் என்பழி மாயும் இடமுண்டோ' என்றான். (84)

2275. கண்ணா லேயென் செய்வினை
யின்னுஞ் சிலகாண்பார்
மண்ணோர் பாரா தெள்ளுவர்
வாளா பழிபூண்டே
னுண்ணா நஞ்சங் கொல்கில
தென்னு முரையுண்டென்
றெண்ணா நின்றே னன்றியி
ரேனென் னுயிரோடே.

'கண்ணாலே என் செய்வினை
இன்னும் சில காண்பார்
மண்ணோர் ; பாராது எள்ளுவர் ;
வாளா பழி பூண்டேன் ;
'உண்ணா நஞ்சம் கொல்கிலது'
என்னும் உரை உண்டு என்று
எண்ணா நின்றேன் ; அன்றி
இரேன் என் உயிரோடே.

பொ :—'இன்னும் எனது செயல்கள் சிலவற்றை மண்ணுலகத்து மக்கள் கண்ணாலே காண்பார்கள்; அவற்றைப் பாராத நிலையில் என்னை இகழ்வார்கள் ; வீணாகப் பழியைப் பூண்டேன்; அவ்வாறு பழிபூண்டும், 'உண்ணப் படாத நஞ்சம் கொல்லாது' என்னும் பழமொழி உண்டு என்று எண்ணி உயிரோடு நிற்கின்றேன்; அஃதில்லையாயின் உயிரோடு இருக்கமாட்டேன் ?'

கு :—பாராது எள்ளுவர் என்றமையால் பார்க்குங்கால் புகழ்வர் என்பது பெறப்படும். கைகேயி கேட்ட வரத்திற்கும் தனக்கும் யாதும் தொடர்பு இல்லாதிருந்தும் தொடர்புடையான் எனப் பிறர் கருத லானமை தோன்ற, 'வாளாபழி பூண்டேன்' என்றான். உண்ணா நஞ்சம் கொல்கிலது என்றது, செய்யாத பிழை, பழிபாவங்களை யுண்டாக்காது என்னும் கருத்தை யுணர்த்த வந்தமையின் பிறிது மொழிதல் அணி ஆம். நஞ்சம் உண்டாரை யன்றிக் கொல்லாது என்பதை, "உண்ணாதே யுயிருண்ணாதொரு நஞ்சு"(கம்ப. 6. 34.20) என்பதால் உணரலாம்.

பழி பூண்டபின்னும் உயிர் வாழ்தற்குக் காரணம் இன்னும் என் செய்வினை சிலவற்றை உலகர் காண்பாராயின் பழித்தலை விடுப்பர் என்னும் நம்பிக்கையும், செய்யாத பிழை பழிபாவங்களை உண்டாக்காது என்னும் நம்பிக்கையுமே ஆம் என்றவாறு. செய்வினை என்றது செயலை. அச்செயலாவது முடிசூடிக் கொள்ளாது தவம் செய்தலும், இராமபிரானை அழைத்து வந்து முடி சூட்டலும் போல்வன. இச்செயலைக் கண்டபின் உலகவர் பழித்தலை விடுத்துப் புகழ்வர் என்பது கருத்து. குகன் பரதன் கருத்தை யறிந்து புகழ்தல் காணலாம். (85)

**2276.** ஏன்றுன் பாவிக் கும்பி
வயிற்றி னிடைவைகித்
தோன்றுந் தீராப் பாதக
மற்றென் றுயர்தீரச்
சான்றுந் தானே நல்லற
மாகத் தகைஞால
மூன்றுங் காண மாதவம்
யானே முயல்கின்றேன்.

'ஏன்று, உன் பாவிக் கும்பி வயிற்றின் இடை வைகித்
தோன்றும் தீராப் பாதகம் அற்று, என் துயர் தீரச்
சான்றும் தானே நல் அறம் ஆகத் தகை ஞாலம்
மூன்றும் காண, மாதவம் யானே முயல்கின்றேன்.'

பொ :—'பாவிகள் தங்குதற்குரிய நரகம் போன்ற உன் வயிற்றுக்குள் உடன்பட்டுத் தங்கியிருந்து பிறந்தமையால் உண்டான நீங்காத பாதகம் அற, என் துயரமும் தீர, நல்லறமே சான்ருக மேன்மையுடைய உலக மூன்றும் காணும்படி, பெரிய தவத்தைச் செய்ய யானே முயலுகின்றேன்.'

கு :—கும்பி-நரகம். பாவிகள் தங்குதற்குரியது என்பது புலப்படப் 'பாவிக் கும்பி' என்ருன். கைகேயியின் வயிற்றுக்குக் கும்பி உவமை. உன் வயிற்றின் என்று இயைக்க. நரகம் புகற்குரிய தீவினையைத் துணிந்து செய்தவள் வயிறு ஆதலின் அதற்குப் பாவிக் கும்பியை உவமை கூறினன். அவ்வயிற்றில் தங்குதலே பெரும் பாதகம் என்பான், 'உன் வயிற்றினிடை ஏன்று வைகித் தோன்றும் தீராப்பாதகம்' என்ருன். அற்று என்பதை அற எனச் செயவெனெச்சமாக்குக. பாதகம் அற, துயர் தீர, அறம் சான்ருக, ஞால மூன்றும் காண, மாதவம் முயல்கின்றேன்: எனச் செயவென் எச்சங்களை முடிக்க. வைகித் தோன்றுதலாலாகிய தீராப்

பாதகம் என்க. பாதகமுடையாள் வயிற்றின் தொடர்பே தீராப்பாதகத்தை விளைவித்தது என்க. தந்தை வான்புகுதற்கும் தமையன் வனம்புகுதற்கும் பரதனே காரணன் என உலகம் எண்ணுமாறு நேர்ந்ததே என்ற துயரமும் தவம் புரிதலால் தீரும் என்றது, அரசில் ஆசையின்மையைத் தவஞ்செய்தலால் புலப்படுத்தலாம் என்றபடி. நல்லறந்தானே சான்றும் ஆக என்க. மாதவம் யானே முயல்கின்றேன் என்றது, தவம் செய்யச் சென்ற இராமன் அரசாள, அவன் மேற்கொண்ட தவத்தை யானே முயல்கின்றேன் என்னுங் கருத்தினது. இராமனைப் பிரித்தலின் ஏகாரம் பிரிநிலை. தவமும் தவமுடையார்க்கு ஆகும் ஆதலின், செய்கின்றேன் என்னாது மாதவம் யானே முயல்கின்றேன் என்றான். (86)

**2277.** சிறந்தார் சொல்லு நல்லுரை
சொன்னேன் செயலெல்லா
மறந்தாய் செய்தா யாகுதி
மாயா வுயிர்தன்னைத்
துறந்தா யாகிற் றூயையு
மாதி யுலகத்தே
பிறந்தா யாதி யீதல
தில்லை பிறிதென்றான்.

'சிறந்தார் சொல்லும் நல் உரை
சொன்னேன்; செயல் எல்லாம்
மறந்தாய் செய்தாய் ஆகுதி;
மாயா உயிர் தன்னைத்
துறந்தாய் ஆகின், தூயையும்
ஆதி; உலகத்தே
பிறந்தாய் ஆதி; ஈது அலது
இல்லை பிறிது' என்றான்.

போ :—' நின் அழியாத உயிரைத் துறந்தாய் ஆனால், நீ செய்த தீய செயல் எல்லாம் நினைவின்றி மறந்து செய்தவள் ஆவாய்; (அத்தீய செயல் காரணமாக வரும் பழிபாவங்களின் நீங்கித்) தூய்மையுடையவளாகவும் ஆவாய்; (உலகத்தோரால் பழிக்கப்படாது புகழப்படுதலின்) உலகத்தில் பிறந்தவளும் ஆவாய்; உயிர்துறத்தலாகிய இதுவல்லது நீ இப்பொழுது செய்யத்தக்கது வேறு ஒன்றும் இல்லை; ஒழுக்கத்தில் சிறந்த பெருமக்கள் சொல்லும் நல்ல உரையைச் சொன்னேன்' என்றான்.

கு :—மேலைச் செய்யுளில் தான் பழிபாவங்களில் நின்றும் நீங்குதற் குரிய வழி தவம் செய்வதே என்பதைக் கூறிய பரதன், இச்செய்யு ளில் தன் தாய் பழிபாவங்களில் தப்புதற்குரிய வழி உயிர் துறத்தலே என்பதையும் புலப்படுத்தினன். 'மாயா உயிர்' என்றது உயிரின் இயல்பு கூறியவாறு ; மன்னுயிர் என்ருற்போல. தாயே ! என்று விளிக்கவும் மனமிலனுய் விளி யாதும் இன்றியே தன் கருத்தைப் பரதன் கூறுகின்ருன். செயல் எல்லாம் என்றது, இரண்டு வரங் கேட்டு இராமனைக் கான் புகுத்தியதும் கணவனை வான் புகுத்தியதும் முதலிய செயல்களை. கைகேயி இப்பொழுது உயிர் துறந்தால் தன் தவறு உணர்ந்தே இறந்தாள் என்பதுபட்டு, இதுகாறும் செய்த தீச்செயல்கள் எல்லாம் நல்ல நினைவின்றிச் செய்தனவே என உலகத்தாரால் கொள்ளப்படும் என்பதும், உலகம் சொல்லும் பழி நீங்கினமையின் தூய்மையுடையளாகக் கருதப்படுவாள் என்பதும், தூய்மையுடையவளாகவே புகழொடு தோன்றியவளாய் உலகத்துப் பிறந்த பயன் எய்துதலின், பிறந்தவள் ஆவாள் என்பதும் விளக்கிய வாறு. பரதன் தவஞ்செய்யப்போவது உறுதியாகலின் உலகம் அவனைப் பழிக்காது. கைகேயி உயிர் துறவாதிருந்தால் அவளையே எல்லாத் தீங்குகளுக்கும் காரணமாகக் கருதி உலகம் பழிக்கும் ; அவள் தூய்மையில்லாதவளும் ஆவாள் ; உலகத்துப் பிறந்த பயனை அடையாதவளும் ஆவாள் என்பது கருத்து.

இதை மகன் தாய்க்குச் சொன்ன செவியறிவுறுத்தலாக எண்ணல் ஆகாது என்பான், 'சிறந்தார் சொல்லும் நல்லுரை சொன்னேன்' என்ருன். 'மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னர், உயிர் நீப்பர் மானம் வரின்.' (குறள்—969) என்பது போன்ற உரையையே சிறந்தார் சொல்லும் நல்லுரை எனக் குறித்ததாகக் கொள்ளலாம். (87)

### பரதன் கோசலையைத் தொழச் செல்லுதல்

2278. இன்னண மினையன
★ வியம்பி யானுமிப்
பன்னருங் கொடுமனப்
பாவி பாடிரேன்
றுன்னருந் துயர்கெடத்
தூய கோசலை
பொன்னடி தொழுவனென்
றெழுந்து போயினன்.

இன்னணம், இனையன இயம்பி, யானும் இப்
பன்னருங் கொடு மனப் பாவி பாடு இரேன்;
துன்னருந் துயர் கெடத் தூய கோசலை
பொன் அடி தொழுவன்' என்று எழுந்து போயினன்.

பொ:—இவ்வாறாக இத்தன்மையான சொற்களைச் சொல்லிவிட்டு, சொல்லுதற்கு அரிய கொடுமை நிறைந்த மனத்தையுடைய இப்பாவி கைகேயியிடம் 'யானும் இருக்கமாட்டேன்; நெருங்குதற்கு அரிய என் துயரம் கெடுமாறு தூயமனமுடைய கோசலையின் சிறந்த பாதங்களை வணங்குவேன்' என்று எழுந்து போனான்.

கு:—சார்ந்தாரையும் கொடுமனமுடையராக்கும் பாவி ஆதலின் அவள் பக்கலில் இருத்தலே ஏதம் என்ற கருத்தால், யானும் பாவி பாடு இரேன் என்றான். பாடு – பக்கம். இராமன் இராதுபோன தன்றி இவள் வயிற்றுப்பிறந்த யானும் இரேன் என்று பொருள் தருதலின் உம்மை இறந்தது தழீஇயதோடு இழிவு சிறப்பும் ஆயிற்று. பன்னுதல் – சொல்லுதல். இதுகாறும் பரதன் பல சொல்லியும் இரக்கங்கொள்ளாத கைகேயியின் நிலையைக் கண்டானாகலின், 'பன்னரும் கொடுமனப் பாவி' என இகழவேண்டியதாயிற்று. அவள் கொடு மனத்தின் வன்மை சொல்லற்கு அரியது என்றவாறு. துயரின் மிகுதி தோன்றத் 'துன்னருந்துயர்' என்றான். இவள்பால் துன்னுதலால் வந்த தீர்திறனில்லாத துயர் எனக் கூறலுமாம். கோசலை தன் உளத் தூய்மையால் தன்னை அடைந்தார்க்கும் அமைதி யுண்டாக்குபவள் என்பான், 'துயர் கெடத் தூய கோசலை பொன்னடி தொழுவன்' என்றான். பொன் இங்குச் சிறப்பை யுணர்த்திற்று. (88)

பரதன் கோசலையை வணங்கிப் புலம்புதல்

**2279.** ஆண்டகை கோசலை யருக ரெய்தினன்
மீண்டுமண் கிழிதர வீழ்ந்து கேழ்கிளர்
காண்டகு தடக்கையிற் கமலச் சீறடி
பூண்டனன் கிடந்தனன் புலம்பி னனரோ.

ஆண்தகை, கோசலை அருகர் எய்தினன்,
மீண்டு மண் கிழிதர வீழ்ந்து, கேழ் கிளர்
காண்தகு தடக்கையின் கமலச் சீறடி
பூண்டனன், கிடந்தனன், புலம்பினன் அரோ!

பொ :—ஆண் தன்மையிற் சிறந்த பரதன், அங்கிருந்து மீண்டு கோசலையின் அருகில் அடைந்து தரை பிளக்குமாறு திடீரென விழுந்து, நீலநிறம் விளக்கம் பெற்றதாய் யாரும் விரும்பிக் காணத்தக்க அழகுடைய பெரிய கைகளால் அக்கோசலையின் தாமரை மலர்போன்ற சிறிய திருவடிகளைப் பற்றிக்கொண்டு கிடந்தவனாய்ப் புலம்பினான்.

கு:—கைகேயிபக்கலிலிருந்து மீண்டு கோசலை அருகு எய்தினன் என்க. ஆண்டகை – ஆண் தன்மையிற் சிறந்த பரதன். அருகு, அருகர் எனப் போலியாயிற்று ; வண்டர் போல. பரதன் தன் துன்பம் புலப்பட விரைந்து வீழ்ந்தமை தோன்ற, 'மண் கிழிதர வீழ்ந்து' என்றார். கேழ் - நிறம். பூண்டனன், கிடந்தனன் என்பன எச்சப்பொருளில் வந்த முற்றுக்கள் ; புலம்பினான் என்ற வினையொடு முடிந்தன. சீறடி பூண்டுகொண்டு ஒன்றும் பேசவியலாத துன்ப நிலையில் கிடந்தவன், பின்னர்த் தேறிப் புலம்பத் தொடங்கினான் என விரித்துக் கூறலும் ஆம். (89)

### பரதன் புலம்பிக் கூறல் 2280—2284

**2280.** எந்தையெவ் வுலகுளா
னெம்முன் யாண்டையான்
வந்தது தமியெனிம்
மறுக்கங் காணவோ
சிந்தையி னுறுதுயர்
தீர்த்தி ராலெனு
மந்தரத் தமரரு
மழுது சோரவே.

'எந்தை எவ்வுலகு உளான்? எம்முன் யாண்டையான்?
வந்தது, தமியென், இம் மறுக்கம் காணவோ?
சிந்தையின் உறுதுயர் தீர்த்திரால்' எனும்
அந்தரத்து அமரரும் அழுது சோரவே.

பொ :—விண்ணுலகத்துள்ள தேவரும் அழுதுசோருமாறு (பரதன் கோசலையை நோக்கி), 'எம் தந்தை எவ்வுலகத்தில் உள்ளான்?' 'எம் அண்ணன் யாண்டு சென்றுளான்?' 'தனியனேன் பாட்டனார் வீட்டிலிருந்து விரைந்து வந்தது இந்தக் கலக்கத்தைக் காண்பதற்காகத்தானோ? என் மனத்துள்ள மிக்க துயரத்தைத் தீருங்கள்' என்கின்றான்.

கு:—தந்தை வான் புக்கதும் தமையன் கான் புக்கதும் முன்னரே பரதனல் அறியப்பட்டனவேனும் கோசலையைக் கண்டபொழுது இத்தகைய வினக்களால் அன்றித் தன் துன்ப மிகுதியை யுணர்த்த லாகாமையின் வினவுகின்ருன். உற்ருரை இழந்தோர் ஒருவர் ஒருவரைக் கண்டு புலம்புங்கால் இவ்வாறு வினவுவதை உலகியலில் இன்றும் காணலாம். தசரதன் இவ்வுலகத்து இல்லாது விண்ணுலகம் புக்கான் ஆகலின், 'எந்தை எவ்வுலகு உளான்' என்றும், இராமன் இவ்வுலகத்துள்ளானய் நாட்டிலிருந்து காட்டிற்கு இடமாறியுள்ளான் ஆகலின், 'எம் முன் யாண்டையான்?' என்றும் வேறுபாடு புலப்பட வினவிய திறம் காண்க. தந்தையை இழந்தும் தமையனைப் பிரிந்தும் பரதன் படு துயர் பெரிதாகலின், 'சிந்தையினுறு துயர்' என்றும், 'துன்னரும் துயர்கெடத் தூய கோசலை பொன்னடி தொழுவன்' என்று முன்னமே எண்ணி வந்தான் ஆகலின், 'உறு துயர் தீர்த்திரால்' என்றும் கூறினன். உறு துயர் தீர்த்தலாவது, உலகியலும் நூல்நெறியும் காட்டி ஆறுதல் கூறுவது. இராமன் கான்புகுவதை விரும்பிய தேவரும் அழுதுசோரப் புலம்பினன் என்றமையால், உம்மை உயர்வு சிறப்பு. இதனல் பரதனுடைய புலம்பலின் உருக்க மிகுதி யுணர்த்தியவாறு. மறுக்கம் – கலக்கம், நாட்டிலும் நகரத்திலும் அரண்மனையிலும் இராமன் பிரிவால் உண்டான கலக்கத்தைச் சுட்டிக் காட்டிக் கூறியவாறு. (90)

**2281.** அடித்தலங் கண்டிலென் யானென் னையனைப்
படித்தலங் காவலன் பெயரற் பாலனே
பிடித்திலிர் போலுநீர் பிழைத்தி ராலெனும்
பொடித்தலந் தோளுறப் புரண்டுசோர்கின்ருன்.

'அடித்தலம் கண்டிலென் யான் என் ஐயனை;
படித்தலம் காவலன், பெயரற் பாலனே?
பிடித்திலிர் போலும் நீர்; பிழைத்திரால்' எனும்
பொடித்தலம் தோள் உறப் புரண்டு சோர்கின்ருன்.

பொ:—புழுதி நிறைந்த பூமியில் தோள்படுமாறு புரண்டு சோர்கின்ற பரதன், "யான் என் ஐயனுகிய இராமபிரானுடைய திருவடிகளைக் காணப் பெற்றிலேன்; (யான் காணுது வருந்தும் நிலையில்) இப்பூமி முழுமைக்கும் காவலனுகிய இராமன் இக்கோசல நாட்டை விட்டுக் காட்டிற்குப் போகத் தக்கவனே? அவன் அங்ஙனம் போனுனயினும் நீங்கள் அவனைப் போகவிடாது பிடித்து நிறுத்தவில்லை போலும்! பிழைசெய்துவிட்டீர்களே!" என்பான்.

கு :—இராமனுடைய திருவடிகளை வணங்கும் ஆர்வமுடைமை தோன்ற "அடித்தலங் கண்டிலென் யான் என்னையனே" என்றான். "வந்தனை யவன் கழல் வைத்த போதலால் சிந்தை வெங்கொடுந்துயர் தீர்கலாது" (2248) என்புழியும் பரதன் நோக்கம் திருவடி வணக்கத்தின் மேலது ஆதலைக் காணலாம். ஐயனது அடித்தலம் என வேற்றுமை மயக்கம் ஆக்குக. படித்தலம்—பூமியாகிய இடம். இருபெயரொட்டு. உலகக் காவலன் காவலை விடுத்துப் போதல் பொருந்தாது என்பான், "படித்தலங் காவலன் பெயரற் பாலனோ ?" என்றான். பெயர்தல்—இடம் விட்டு நீங்குதல். 'அவன் கடமையைத் துறந்து போனாலும் பிடித்து நிறுத்துதற்கு உரிய நீர் அது செய்யாது உங்கள் கடமையில் தவறி விட்டீர்களே' என்பான், 'பிழைத்திரால்' என்றான்.

இனி, 'அடித்தலங் கண்டிலன்' என்பதற்கு, 'இராமன் தன் செல்வச் சிறப்புத் தோன்ற ஊர்திகளில் செல்வதைக் கண்டுளேன் அன்றி அவன் அடிகள் தரையில் பொருந்தக் கண்டிலேன்' என்றும், 'படித்தலங் காவலன் பெயரற் பாலனோ' என்பதற்குத் தரையில் அவன் நடக்கக் கூடியவனோ ? என்றும் பொருள் கூறலாம். (91)

**2282.** கொடியவர் யாவருங் குலங்கள் வேரற
நொடிகிலர் யானது நுவல்வ தெங்ஙனங்
கடியவள் வயிற்றினிற் பிறந்த கள்வனேன்
முடிகுவெ னருந்துயர் முடிய வென்னுமால்.

'கொடியவர் யாவரும் குலங்கள் வேர் அற
நொடிகிலர் ; யான் அது நுவல்வது எங்ஙனம்?
கடியவள் வயிற்றினில் பிறந்த கள்வனேன்,
முடிகுவென், அருந்துயர் முடிய' என்னும்; ஆல்.

பொ :—'இராமன் காடு புகுமாறு கொடுமை செய்த கொடியவர் யாவரும் தம் குலங்கள் வேரோடு அறுமாறு அழிந்து ஒழிந்திலர்; கடுமைமிக்கவளாகிய கைகேயியின் வயிற்றிலிருந்து பிறந்த வஞ்சகனாகிய யான் அது பற்றிப் பேசுவது எவ்வாறு ? (பிறரைப் பற்றி ஒன்றும் பேசாது) என்னுடைய தீராத்துயர் தீர இறந்தொழிகின்றேன்' என்பான்.

கு:—'கொடியவர் யாவரும்' என்றது கைகேயியையும் கூனியையும் குறித்ததாகக் கொள்ளலாம். "மாயா உயிர்தன்னைத் துறந்தாயாகில் தூயையுமாதி" (2276) என முன்னர்க் கைகேயியை நோக்கிக் கூறியும், அவள் இறந்து படாதிருத்தலின், 'நொடிகிலர்' என்றான். நொடி-அழிவு.

அழித்தலைச் செய்யும் கடவுளை 'நொடித்தான்' (சுந்தரர் தேவாரம் 100. 1) என்பர். கொடியவர் அழிய வேண்டும் என்று கூறவும் தனக்குத் தகுதியில்லை என்பான், 'கடியவள் வயிற்றினிற் பிறந்த கள்வனேன் அது நுவல்வது எங்ஙனம்' என்றான். கடியவள் வயிற்றிற் பிறந்த தான் முடிவதே தக்கது என்பான், 'முடிகுவென் அருந்துயர் முடிய' என்றான். (92)

2283. இரதமொன் றூர்ந்துபா ரிருளை நீக்குமவ்
வரதனி லொளிபெற மலர்ந்த தொல்குலம்
பரதனென் றொருபழி படைத்த தென்னுமான்
மரகத மலையென வளர்ந்த தோளினான்.

'இரதம் ஒன்று ஊர்ந்து, பார் இருளை நீக்கும் அவ்
வரதனில் ஒளி பெற மலர்ந்த தொல் குலம்
பரதன் என்றொருபழி படைத்தது' என்னுமால்
மரகத மலை என வளர்ந்த தோளினான்.

பொ :—மரகதமலைபோல வளர்ந்த திண்ணிய தோளையுடைய பரதன், "ஒற்றைச் சக்கரமுடைய ஒரு தேரை ஊர்ந்துவந்து பூமியில் உள்ள இருளை நீக்குகின்ற அந்தச் சூரியனிடத்திருந்து புகழுறத் தோன்றிய பழமையான குலம், பரதன் என்ற ஒரு பழியைப் பெற்று விட்டது" என்பான்.

கு :—நிறத்தாலும் திண்மையாலும் பருமையாலும் பரதன் தோளுக்கு மரகதமலை உவமையாயிற்று. அவ்வரதன் என்றது சூரியனை; உலகறிசுட்டு. வரதனில் மலர்ந்த என்க. இல், இடப்பொருளது. வரத னிடத்துத் தோன்றி வரதனைப் போல ஒளி பெற மலர்ந்த தொல்குலம் என இரட்டுற மொழிதலாகப் பொருள்கூறலுமாம். சூரிய குலம் என்ப தற்கு விளக்கம் கூறியவாறு. சூரியன் முதல் தயரதன் வரையில் புக ழொடு விளங்கிய குலம், இப்பொழுது பரதனால் பழிபெற்றது என்பது கருத்து. பழிக்குக் காரணமான தன்னைக் காரியமாக்கிப் 'பரதன் என் றொருபழி' என்றான். அகரம் தொகுத்தல். குலத்திற்கு ஒளியாவது பிற குலத்தின் மிக்குத் தோன்றுவது ; பிரதாபம். சூரியன் பாரிருளை நீக்கு வதுபோல அவன் குலத்தார் பகையிருள் நீக்குதலும் கொள்க. "காரி யன்ற களங்க நிறத்தொன்மை, ஊரி யன்ற மதிக்குள தாமெனச், சூரி யன்மர புக்குமோர் தொன்மறு, ஆரி யன்பிறந் தாக்கினை யாமரோ" (கிட்கிந்தா. வாலிவதைப். 87) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். (93)

2284. வாடொடு தானையான் வானில் வைகிடக்
காடொரு தலைமக னெய்தக் கண்ணிலா
நாடொரு துயரிடை நைவ தேயெனுந்
தாடொடு தடக்கையத் தரும மேயனான்.

'வாள் தொடு தானையான் வானில் வைகிடக்
காடு ஒரு தலைமகன் எய்தக் கண் இலா
நாடு ஒரு துயரிடை நைவதே?' எனும்
தாள் தொடு தடக்கை அத் தருமமே அனான்.

பொ :—முழந்தாளைத் தொடுமாறு நீண்ட பெரிய கையையுடைய அந்தத் தருமம் போன்றவனான பரதன், 'வாளைப்பற்றிய சேனையையுடைய தயரத மன்னன் வானுலகத்திற்குச் செல்ல, அவனுடைய ஒப்பற்ற முதல் மகன் கானகத்திற்குச் செல்ல, இவ்விருவரும் இன்மையால் கண் இலாததாய்க் கோசலநாடு பெரிய துன்பத்தில் அகப்பட்டு வருந்துவதே?' என்று ஏங்குவான்.

கு :—வைகுதல்-செல்லுதல்; தங்குதலுமாம். ஆண்ட மன்னனும் ஆளுதற்குரிய மன்னனும் வானும் கானும் புகுதலால் நாட்டிற்குக் கண் எனச் சிறப்பிக்கப்படும் மன்னன் இன்மையால் கோசல நாடு வருந்திற்று என்பான், 'கண்ணிலா நாடு ஒரு துயரிடை நைவதே' என்றான். மன்னனே நாட்டிற்குச் சிறந்த கண் என்பதை, "கண்ணெனப்படுவ மூன்று ; காவலர், கல்வி, காமர் விண்ணினைச் சுழல வோடும் வெய்யவன் என்னும் பேரார் ; எண்ணினுள் தலைக்கண் வைத்த கண் அஃது இல்லையாயின், மண்ணினுக்கு இருளை நீக்கும் வகை பிறிதில்லை மன்னா." (சூளாமணி : மந்திரம் 30) என்றதால் அறியலாம். (94)

பரதன் தூயன் என்பதைக் கோசலை உணர்தல்

2285. புலம்புறு குரிசிறன் புலர்வு நோக்கினாள்
குலம்பொறை கற்பிவை சுமந்த கோசலை
நிலம்பொறை யாற்றல னெஞ்சந் தூய்தெனாச்
சலம்பிறி துறமனந் தளர்ந்து கூறுவாள்.

புலம்புறு குரிசில் தன் புலர்வு நோக்கினாள்,
குலம் பொறை கற்பு இவை சுமந்த கோசலை
'நிலம் பொறை ஆற்றலன், நெஞ்சம் தூய்து' எனாச்
சலம் பிறிது உற, மனம் தளர்ந்து கூறுவாள்.

பொ :—உயர்குடிப்பிறப்பிற்கேற்ற தன்மையும், பொறுமையும், கற்பும் ஆகிய இவற்றை மேற்கொண்ட கோசலை, புலம்புகின்ற பரதனுடைய வாட்டத்தைப் பார்த்து, ' நிலச்சுமை யேற்று அரசாளான்; இவன் மனம் தூயது' என்று தேர்ந்து, தன் கோபம் நீங்க, மனம் தளர்ந்து சொல்லுகின்றாள்.

கு :—புலர்வு - முகமும் அகமும் வாடுதல். நோக்கினள், முற்றெச்சம்; நோக்குதலாவது கண்ணினும் கருத்தினும் நோக்குதல். குலம் - இற்பிறப்பிற்கேற்றதன்மை."இற்பிறப் பென்பதொன்றும், இரும்பொறையென்பதொன்றும், கற்பெனும் பெயரதொன்றும், களிநடம் புரியக் கண்டேன் " (சுந்தர. 1308) என்பது காண்க. பரதன் முகப் புலர்வால் அவன் அகப்புலர்வு நோக்கி யுணர்ந்தாளாகலின், ' நெஞ்சம் தூய்து ' என்பது துணிந்தாள். நிலம் பொறையாற்றல்-அரசாளுதல். சலம் - கோபம்; கைகேயியின் சூழ்ச்சிக்குப் பரதனும் துணையாயவனே என்ற எண்ணத்தால் முன் தோன்றியது. (95)

### கோசலையின் வினா

2286. மையறு மனத்தொரு மாசு ளானலன்
செய்யனே யென்பது தேருஞ் சிந்தையாள்
கைகயர் கோமக ளிழைத்த கைதவ்
மையநீ யறிந்திலை போலு மாலென்றாள்.

மை அறு மனத்து ஒரு மாசு உளான் அலன்;
செய்யனே என்பது தேரும் சிந்தையாள்,
' கைகயர் கோமகள் இழைத்த கைதவம்,
ஐய! நீ அறிந்திலை போலுமால்?' என்றாள்.

பொ :—பரதன் இயல்பாகவே குற்றமற்ற தன் மனத்தில் சிறிதும் களங்கம் அற்றவனாகவே இருக்கிறான்; நேர்மையுள்ளவனே அவன் என்பதைத் தெரிந்துகொள்ளுங் கருத்தினளாகிய கோசலை, ' ஐய! கைகயர் கோவாகிய அசுவபதியின் மகளாகிய கைகேயி செய்த வஞ்சனையை நீ அறியவில்லைபோலும் ' என்று கூறினாள்.

கு :—பரதனுடைய தூய நெஞ்சத்தைத் தெளிவுபடுத்தவேண்டி, மையறு மனத்தொரு மாசுளான் அலன் என்றும் செய்யனே என்றும் எதிர்மறையானும் உடன்பாட்டானும் கூறி வற்புறுத்தியவாறு. மை, இயற்கையான குற்றம் எனவும், மாசு, செயற்கையான குற்றம் எனவும் வேறுபடக் கொள்க. கைதவம்-வஞ்சனை. பரதனைத் தன் மகனாகக்

கோசலை கொண்டாள் ஆதலின், 'நின்தாய்' என்றது, 'கைகயர் கோமகள்' என்றாள். (96)

## பரதன் சூள்கூறத் தொடங்கல்

2287. தாளுறு குரிசிலத் தாய்சொற் கேட்டலுங்
கோளுறு மடங்கலிற் குமுறி விம்முவா
னாளுறு நல்லற நடுங்க நாவினாற்
சூளுறு கட்டுரை சொல்லன் மேயினான்.

தாள் உறு குரிசில், அத் தாய் சொல் கேட்டலும்,
கோள் உறு மடங்கலில் குமுறி விம்முவான்,
நாள் உறு நல் அறம் நடுங்க, நாவினால்
சூள் உறு கட்டுரை சொல்லல் மேயினான்.

பொ :—கோசலையின் தாளில் வீழ்ந்து கிடக்கின்ற பரதன், அந்தத் தாயின் சொல்லைக் கேட்டவுடன், பொறியில் அகப்பட்ட சிங்கம்போலக் கதறி அழுபவனாய், எந்நாளும் நிலைபெற்றுள்ள நல்ல அறத்தெய்வமும் நடுங்குமாறு சூளாகப் பொருந்திய உறுதிமொழிகளை நாவினால் சொல்லத் தொடங்கினான்.

கு :—'கமலச் சீறடி பூண்டனன் கிடந்தனன் புலம்பினனரோ' (2279) என மேல் கூறியுள்ளமைக்கு ஏற்ப இங்குத் 'தாளுறு குரிசில்' என்றார். சிங்கத்தை அகப்படுத்தும் பொறி இங்குக் 'கோள்' எனப்பட்டது; 'கொள்ளுவது' என்னும் பொருளது. 'கைகயர் கோமகள் இழைத்த கைதவம் ஐய! நீ அறிந்திலை போலும்' என்று கோசலை கூறினமையால் கைகேயிக்குப் பரதன் உடந்தையாயிருந்தவனே என முன் அவள் ஐயுற்றமை பெறப்படவே அது பொருது பரதன் விம்மிச் சூள் கூறவேண்டியவனானான். தாயின் சொல்லைக் கேட்டு வருந்தும் பரதனுக்குப் பொறியில் அகப்பட்டு வருந்தும் சிங்கம் உவமை. பொறியிலிருந்து மீள முடியாமல் சிங்கம் குமுறுதல் போலத் தாயின் ஐயுறவிலிருந்து மீள முடியாத நிலையில் பரதன் சூள் உரைக்கின்றான். சூள்-வஞ்சினம்; சபதம். சூளின் கடுமை மிகுதி தோன்ற நல்லறம் நடுங்குதல் கூறினார்; அற நெறி தவறாத பரதன் சூள் உரைக்கின்றமையால் அது நடுங்கலாயிற்று என்க. (97)

## பரதன் சூளுரைகள் 2288–2305

2288. அறங்கெட முயன்றவ னருளி னெஞ்சினன்
பிறன்கடை நின்றவன் பிறரைச் சீறினோன்

மறங்கொடு மன்னுயிர் கொன்று வாழ்ந்தவன்
றுறந்தமா தவர்க்கருந் துபரஞ் சூழ்ந்துளோன்

‘அறம் கெட முயன்றவன், அருள் இல் நெஞ்சினன்,
பிறன் கடை நின்றவன், பிறரைச் சீறினேன்,
மறம் கொடு மன்னுயிர் கொன்று வாழ்ந்தவன்,
துறந்த மாதவர்க்கு அருந்துயரம் சூழ்ந்துளோன்.’

பொ :—‘ தருமம் கெட்டுப்போமாறு சிதைத்தவனும், அருள் இல் லாத நெஞ்சத்தையுடையவனும், பிறன் மனைவியைப் பெற விரும்பி அவன் வாயிலில் நின்றவனும், காரணமின்றிப் பிறரைச் சினந்தவனும், உடல் வலிமையைப் பொருளாகக் கொண்டு நிலைபேறுடைய பிற உயிர்களைக் கொன்று அவற்றின் ஊனைத் தின்று வாழ்ந்தவனும், யான் என்னும் அகப்பற்றும், எனது என்னும் புறப்பற்றும் விட்ட பெரிய தவ முனிவர்க்குத் தீங்கு செய்ய எண்ணியவனும்’

கு :—“ தீயன கொடியவள் செய்த செய்கையை நாயினேனுணரின்”(2307) என்பதை இங்குக்கூட்டி, அறங்கெட முயன்றவன் முதலாகச் சொல்லப்பட்ட பாவிகள் விழும் நரகத்தில் யானும் வீழ்வேனாக எனக் கூறியதாகக் கொள்க. முயன்றவன் முதலிய வினையாலணையும் பெயர்கள் பின் 2291–ஆவது செய்யுளில், ‘ நண்ணுமத் தீயெரி நரகம் ’ என்பது கொண்டு முடியும். பரதன் சூளுரையைத் தலைக்கீடாகக் கொண்டு கம்பர் பல வகையான அறங்களை விளக்கிச் செல்கின்றார். இச்செய்யுளில், அறன்வலியுறுத்தல், அருளுடைமை, பிறர்மனை நயவாமை, வெகுளாமை, கொல்லாமை, புலாலுண்ணாமை, பெரியாரைப் பிழையாமை என்ற அறங்களில் தவறினவர் நரகம் புகுதற்குரியர் என்பது விளக்கப்பட்டது. பிறன் கடை நிற்றல், பிறன் மனைவியை விரும்பி அவன் வாயிலின்கண் நிற்றல். மறம் - வலிமை ; ‘ மறங்கெழு மதியே ’ (கல்லா–73, 29) என்பது காண்க ; கொடுமையும் ஆம். மன்னுயிர் கோறலாவது, அது நின்ற உடம்பினின்று நீக்குதல். வாழ்ந்தவன் என்றமையால், உயிர் கொன்று அதன் உடம்பைத் தின்றமை புலனும். சூழ்தல், செய்தலுமாம். (98)

2289. குரவரை மகளிரை வாளிற் கொன்றுளோன்
புரவல னுறுபொருள் புனைவில் வாரினேன்
விரவலர் வெரிநிடை விழிக்க மீண்டுளோ
னிரவல ரருநிதி யெறிந்து வெளவினேன்.

'குரவரை மகளிரை வாளில் கொன்றுளோன்,
புரவலன் உறு பொருள் புனைவில் வாரினேன்,
விரவலர் வெரிநிடை விழிக்க மீண்டுளோன்,
இரவலர் அருநிதி எறிந்து வௌவினேன்.'

போ :—'குரவரையும் பெண்டிரையும் வாளினால் கொன்றவனும், தன்னைக் காப்பாற்றிய தலைவனுடைய பெரும்பொருளை வஞ்சனை மொழியால் வாரிக்கொண்டவனும், பகைவர், தன்னுடைய புறமுதுகைப் பார்க்குமாறு போரில் தோற்றோடினவனும். பிச்சைக்காரர் அரிதின் முயன்று வைத்திருந்த பொருளை அவரைத் தாக்கிக் கவர்ந்துகொண்டவனும்'

கு :—குரவர் ஆவார், தாய், தந்தை, ஆசான், அண்ணன், அரசன் என்பவர். புரவலன் - காப்பாற்றுபவன், புனைவு – கட்டிக்கூறும் புனைந்துரை. பாண்டியன் தேவி காற்சிலம்பைப் பொற்கொல்லன் கோவலன் மேலிட்டுக் கவர்ந்தாற்போலத் தன்னைக் காப்பாற்றிய தலைவன் பொருளைப் பிறர் கவர்ந்தனர் எனப் புனைந்துகூறி அப்பொருளையெல்லாம் வாரிக்கொண்ட அடியவன் என்க. விரவலர்–பகைவர். வெரிந்-முதுகு. விழித்தல்-பார்த்தல். இரவலர்–பிச்சைக்காரர். வௌவுதல்-அபகரித்தல். (99)

2290. தழைத்ததண் டுளவினேன்
றலைவ னல்லனென்
றழைத்தவ னறநெறி
யந்த ணாளரிற்
பிழைத்தவன் பிழைப்பிலா
மறையைப் பேணலா
திழைத்தவன் பொய்யெனு
மிழுதை நெஞ்சினேன்.

'தழைத்த தண் துளவினேன் தலைவன் அல்லன் என்று
அழைத்தவன், அற நெறி அந்தணாளரில்
பிழைத்தவன், பிழைப்பு இலா மறையைப் பேணலாது,
இழைத்த வன் பொய் எனும் இழுதை நெஞ்சினேன்'

போ :—' காட்டில் தழைத்த குளிர்ந்த துளவமாலையணிந்த திருமால் பரம்பொருள் அல்லன் என்று கூறியவனும், அறநெறியில் ஒழுகும் அந்தணரிடத்துப் பிழை செய்தவனும், தவறு இல்லாத வேதத்தைப் போற்றாது, பலர் கட்டிக்கூறிய வலிய பொய் இது' என்கின்ற பேய் மனத்தவனும்,

கு :—அழைத்தவன் என்பது இங்குச் சொன்னவன் என்னும் பொருளில் வந்துளது. அந்தணரில் பிழைத்தலாவது, அவரைத் துன்புறுத்தலும் கொல்லுதலும் போல்வன செய்தல். பேணல்-போற்றுதல். இழைத்தல்-செய்தல் ; வினைமுதல் வருவிக்கப்பட்டது. வேதம் பலர் கூடிக் கட்டிக் கூறிய வலிமையான பொய் என்பவர், உலகத்தார் உண்டு என்பதை இல்லையென்பாராகலின் அவரை, 'இழுதை நெஞ்சினேன்' என்றான். இழுதை-பேய். "உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்து அலகையா வைக்கப்படும்" (குறள்-850) என்பது இங்கு உளங்கொளத்தகும். (100)

**2291.** *தாய்பசி யுழந்துயிர் தளரத் தான்றனிப்*
*பாய்பெரும் பாழ்வயி றளிக்கும் பாவியு*
*நாயகன் படநடந் தவனு நண்ணுமத்*
*தீயெரி நரகத்துக் கடிது செல்கயான்.*

**'தாய் பசி உழந்து உயிர் தளரத் தான் தனிப்**
**பாய் பெரும் பாழ் வயிறு அளிக்கும் பாவியும்,**
**நாயகன் பட நடந்தவனும், நண்ணும் அத்**
**தீ எரி நரகத்துக் கடிது செல்க யான்.'**

**பொ :—'தன்னைப் பெற்ற தாய் பசியினால் வருந்தி உயிர் தளர்ந்திருக்க, அவள் பசியைத் தீர்க்காது தானே தனியாக அமர்ந்து தன்னுடைய பரந்த பெரிய பாழ் வயிற்றுக்கு உணவு அளிக்கின்ற பாவியும், போர்க்களத்தில் தன் தலைவன் துணையின்றி இறக்குமாறு விட்டுச் சென்றவனும் அடைதற்குரிய நெருப்பு எரிந்துகொண்டே இருக்கும் நரகத்திற்கு யான் விரைந்து செல்வேனாக.'**

**கு :—பாய்-பரந்த. அளிக்கும் என்ற வினைக்கேற்ப உணவு என்னும் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. "தாயர் பசி கண்டும் நனி தன் பசி தணிக்கும் நாயனைய புல்லருறு நரகிலுறுவேன்" (வில்லி பா.—13-ஆம் போர்-182) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். "புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு இரந்துகோட் டக்க துடைத்து" (குறள்-780) என்று எண்ணித் தன்னை ஆண்ட அரசனுக்கு முன் இறத்தலே வீரர்க்கு இலக்கணமாகவும் அது செய்யாமையோடு அத்தலைவன் பட உயிர் பிழைத்து ஓடுதல் பெருங்குற்றம் என்பது புலப்படுத்தியவாறு. (101)**

2292. தாளினி லடைந்தவர் தம்மைத் தற்கொரு
கோளுற வஞ்சினன் கொடுத்த பேதையு
நாளினு மறமறந் தவனு நண்ணுறு
மீளரு நரகிடைக் கடிது வீழ்கயான்.

'தாளினில் அடைந்தவர் தம்மைத் தற்கு ஒரு
கோள் உற அஞ்சினன் கொடுத்த பேதையும்,
நாளினும் அறம் மறந்தவனும், நண்ணுறும்
மீளரு நரகிடைக் கடிது வீழ்க யான்.'

பொ :—'எம்மைக் காக்கவேண்டும் எனத் தன் தாளில் அடைக்கலமாக அடைந்தவரைத் தனக்கு ஒரு துன்பம் நேர்தலால் அதற்கு அஞ்சி அவரைப் பாதுகாவாமல் பகைவர்பால் காட்டிக்கொடுத்த அறிவிலியும், நாள்தோறும் செய்தற்குரிய அறங்களைச் செய்யாது மறந்தவனும், அடைதற்கு உரிய மீளுதற்கு அரிய நரகத்தில் யான் விரைவாக வீழ்வேனாக.'

கு :—'தாளினில் அடைந்தவர்' என்றது அடைக்கலம் புக்கோரை. தன்னுயிரைக் கொடுத்தேனும் அடைக்கலம் புக்கோரைக் காத்தலே கடமையாகவும், தனக்குத் துன்பம் வருமே என்ற அச்சத்தால் அவரைக் கைவிடுதல் பெரியதோர் இழுக்காம் என்பது புலப்படுத்தியவாறு. 'பூரியரேனும் தம்மைப் புகல்புகுந் தோர்க்குப் பொன்ரு ஆருயிர் கொடுத்துக் காத்தார்' (6-4 : 119) என்பது காண்க. "தஞ்சென அடைந்தவர் தமக்கிடர் நினைக்கும், நஞ்சனைய பாதகர் நடக்கும் நெறி சேர்வேன்" (வில்லி பா. 13-ஆம் போர்-183) என்பது இங்கு ஒப்பு நோக்கத் தகும். 'மீள அரு' என்பது 'மீளரு' எனத் தொகுத்தல் விகாரமாயிற்று. (102)

2293. பொய்க்கரி கூறினேன்
போருக் கஞ்சினேன்
கைக்கொளு மடைக்கலங்
கரந்து வவ்வினே
னெய்த்திடத் திடர்செய்தோ
னென்றின் னோர்புகு
மெய்க்கொடு நரகிடை
விரைவின் வீழ்கயான்.

'பொய்க் கரி கூறினேன், போருக்கு அஞ்சினேன்,
கைக்கொளும் அடைக்கலம் கரந்து வவ்வினேன்,
எய்த்திடத்து இடர் செய்தோன், என்று இன்னோர் புகும்
மெய்க் கொடு நரகிடை விரைவின் வீழ்க யான்.'

பொ :—'பொய்ச்சான்று சொன்னவனும், போர் செய்தற்கு அஞ்சி ஓடினவனும், பிறரிடத்திலிருந்து கொண்ட அடைக்கலப் பொருளை மறைத்துக் கவர்ந்துகொண்டவனும், ஒருவன் இளைத்திருந்தபொழுது அவனுக்குத் துன்பம் செய்தவனும் ஆகிய இவர்கள் புகுதற்குரிய மெய்ம்மையான கொடிய நரகில் யான் விரைவில் வீழ்வேனாக.'

கு :—கரி - சான்று. 'அறிகரிபொய்த்தல் ஆன்றோர்க்கு இல்லை' (குறுந்தொகை : 184) என்பது இங்கு நினைக்க. கரந்து - மறைத்து. எய்த்திடத்து என்புழி அகரம் தொகுத்தல். எய்த்தல் – இளைத்தல். நூல்களில் கூறப்படும் நரகம் பொய்யன்று என்பான் 'மெய்க்கொடு நரகு' என்றான். (103)

**2294.** அந்தண ருறையுளை
யனலி யூட்டினேன்
மைந்தரைக் கொன்றுளோன்
வழக்கிற் பொய்த்துளோ
னிந்தனை தேவரை
நிகழ்த்தி னேன்புகும்
வெந்துயர் நரகத்து
வீழ்க யானுமே.

அந்தணர் உறையுளை அனலி ஊட்டினேன்,
மைந்தரைக் கொன்றுளோன், வழக்கில் பொய்த்துளோன்,
நிந்தனை தேவரை நிகழ்த்தினேன், புகும்
வெந்துயர் நரகத்து வீழ்க யானுமே.

பொ :—அந்தணர் தங்கியுள்ள வீட்டைத் தீக்கொளுத்தினவனும், தன் புதல்வரைக் கொன்றவனும், பொய் வழக்குத் தொடுத்தவனும், தேவரை நிந்தனை செய்தவனும், புகுதற்குரிய கொடிய துன்பத்தையுடைய நரகத்தில் யானும் வீழ்வேனாக.

கு :—உறையுள் - வீடு. அனலி ஊட்டல் - தீக்கொளுத்துதல். பொய்க்கரி கூறினேன்' முன்னர்க் கூறப்பட்டமையின், வழக்கில்

பொய்த்தல் என்றது, பொய் வழக்குத் தொடுத்தலாகக் கொள்க. நிந்தனை நிகழ்த்தல் - பழித்தல். (104)

**2295.** கன்றுயி ரோய்ந்துகக்
கறந்து பாலுண்டோன்
மன்றிடைப் பிறர்பொருண்
மறைத்து வவ்வினே
னன்றியை மறந்திடு
நயமி ணாவினே
னென்றிவ ருறுநர
கென்ன தாகவே.

'கன்று உயிர் ஓய்ந்து உகக் கறந்து பால் உண்டோன்,
மன்றிடைப் பிறர் பொருள் மறைத்து வவ்வினேன்,
நன்றியை மறந்திடும் நயம் இல் நாவினேன்,
என்று இவர் உறும் நரகு என்னது ஆகவே.'

பொ :—'கன்று பால் இன்றி இளைத்து உயிர்விடுமாறு பசுவைக் கறந்து பால் உண்டவனும், பிறர்க்குரிய பொருளை (அது அவர்க்குரியது என்று காட்டும் சான்றுகளை) மறைத்து (தனக்குரியதாக நீதி மன்றத்தில் பொய் வழக்காடி)க் கவர்ந்தவனும், பிறர் தனக்குச் செய்த நன்றியை மறந்து பேசும் நன்மையில்லாத நாக்கினை யுடையவனும் ஆகிய இவர்கள் அடைதற்குரிய நரகம் எனக்கு உரியது ஆகுக.'

கு :—'உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு' (குறள்–110), "ஒருவன் செய்தி கொன்றோர்க்கு உய்தியில்லென அறம் பாடிற்றே" (புறநா.–34) என்பனவற்றால் நன்றியை மறத்தலால் வரும் தீங்கை யுணரலாம். (105)

**2296.** ஆறுதன் னுடன்வரு
மஞ்சொன் மாதரை
யூறுகொண் டலைக்கத்தன்
னுயிர்கொண் டோடினேன்
சோறுதன் னயலுளோர்
பசிக்கத் துய்த்துளோ
னேறுமக் கதியிடை
யானு மேறவே.

'ஆறு தன் உடன் வரும் அம் சொல் மாதரை
ஊறு கொண்டு அலைக்கத் தன் உயிர் கொண்டு ஓடினேன்,
சோறு தன் அயல் உளோர் பசிக்கத் துய்த்துளோன்
ஏறும் அக் கதியிடை யானும் ஏறவே.'

பொ :—'தன்னுடன் வழி வருகின்ற அழகிய சொல்லையுடைய மங்கையரை (ஆறலை கள்வர்) உடம்பு புண்படுமாறு வருத்த, அக்கள்வரைத் தாக்காது தன்னுயிரைமட்டும் காத்துக்கொண்டு ஓடினவனும், தன் பக்கத்தில் உள்ளவர்கள் பசித்திருக்கச் சோற்றையுண்டவனும் செல்லுதற்குரிய நரகத்தில் யானும் செல்வேனாகுக.'

கு :—ஊறுகொள அலைக்க எனச் செயவெனெச்சமாக்குக. மாதரைக் காத்தல் கூடுமாயின் காத்தலும், இன்றேல் அக்கள்வரோடு போர் செய்து மாய்தலும் ஆண் மகன் கடமையாகவும், மாதரை அலைக்கும்போது தன்னுயிர்கொண்டு ஒருவன் ஓடுதல் பெரியதோர் இழுக்காம் என்பது புலப்படுத்தியவாறு. அணிகளைக் கவரும் நோக்கத்தினராதலின் கள்வர், மங்கையரையே அலைத்தனர் என்க. சோறு எனவே இனம்பற்றிக் கறி முதலியவற்றையும் கொள்க. சோறு துய்த்துளோன் என்று இயைக்க. 'விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று' (குறள்-82) என்பது இங்கு நினைக்க. நரகம் மண்ணுலகிற்குக் கீழ்ப்பட்டதாகலின் வீழும் அக்கதி என்னவேண்டியவன் இகழ்ச்சிக் குறிப்பால், 'ஏறுமக்கதி' என்றான். (106)

**2297.** எஃகெறி செருமுகத் தேற்ற தெவ்வருக்
கொஃகின னுயிர்வளர்த் துண்ணு மாசையா
னஃகலி லறநெறி யாக்கி யோன்பொருள்
வெஃகிய மன்னன்வீழ் நரகின் வீழ்கயான்.

'எஃகு எறி செரு முகத்து ஏற்ற தெவ்வருக்கு
ஒஃகினன், உயிர் வளர்த்து உண்ணும் ஆசையான்,
அஃகல் இல் அற நெறி ஆக்கியோன் பொருள்
வெஃகிய மன்னன், வீழ் நரகின் வீழ்க யான்.'

பொ :—'படைகொண்டு பகைவரை எறிதற்குரிய போர்க்களத்தில் எதிர்த்த பகைவருக்கு ஆற்றாது வணங்கினவனும், ஆடு கோழி முதலிய உயிர்களை வளர்த்து, அவற்றைக் கொன்று தின்னும் ஆசையுடையவனும், அறநெறியான் ஈட்டியவனது சுருங்குதல் இல்லாத பொருளைக் கவர விரும்பிய மன்னனும் வீழ்தற்குரிய நரகத்தில் யான் வீழ்வேனாக.'

கு :—எஃகு, படைக்கலங்கட்கெல்லாம் பொதுப்பெயராய் நின்றது. ஒஃகினன், ஒல்கினன் என்பதன் விகாரம்; வணங்குதல் என்னும் பொருளது. ஆடு கோழி முதலிய உயிர்களை வளர்த்தல் அறமாயினும் அவற்றைக் கொன்று தின்னும் விருப்பத்தால் வளர்த்தல் கொலைப் பாவத்தையே தரும் என்பது புலப்படுத்தியவாறு. 'அலைப்பான் பிறி துயிரை ஆக்கலுங் குற்றம்' (நான்மணிக். 26) என்றது காண்க. அஃகலில் பொருள் என இயைக்க. அஃகல் - சுருங்குதல். அறநெறி யான் ஈட்டப்படுதலின் அஃகல் இல் பொருளாயிற்று. அப்பொருளின் மிகுதி கண்டு அழுக்காற்றான் அரசன் வெஃகுதல் அறமன்று என்று விளக்கியவாறு. 'இறலீனுமெண்ணாது வெஃகின்' (குறள். 180) என்றதும் காண்க. (107)

2298. அழிவரு மரசிய லெய்தி யாகுமென்
றிழிவரு சிறுதொழி லியற்றி யாண்டுதன்
வழிவரு தருமத்தை மறந்து மற்றொரு
பழிவரு நெறிபடர் பதக னாகயான்.

'அழி வரும் அரசியல் எய்தி, ஆகும் என்று,
இழி வரு சிறு தொழில் இயற்றி, ஆண்டு, தன்
வழி வரு தருமத்தை மறந்து, மற்று ஒரு
பழி வரு நெறி படர் பதகன் ஆக யான்.'

பொ :—'தம் குடியின் முதியோர் அழிதலால் தனக்கு வந்த அரசியலைப் பெற்று, நம் செல்வம் பெருகும் என்று கருதி, இழிவு பொருந்திய சிறு தொழில்களைச் செய்து ஆட்சி புரிந்து, தன் குலத்தில் வழி வழியாக மேற்கொள்ளப்பட்டுவந்த அறநெறியை மறந்து, பழி வருதற்குக் காரணமான மற்றொரு வழியில் செல்லுகின்ற பாவியாக நான் ஆகக்கடவேன்.'

கு :—அழி, முதல்நிலைத்தொழிற்பெயர்; அழிதலால் வரும் என மூன்றனுருபு விரிக்க. "மூத்தோர் மூத்தோர்க் கூற்ற முய்த்தெனப் பால்தர வந்த பழவிறல் தாயம், எய்தினம் ஆயின் எய்தினம் சிறப்பு எனக், குடிபுரவு இரக்கும் கூரில் ஆண்மைச் சிறியோன்" (புறநா.-75) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். எய்தி என்றமையால் தன் வலிமையாலும், தகுதியாலும் பெறவில்லை என்பதும், ஊழால் கிடைத்தது என்பதும் பெறப்படும். இழிவரு சிறுதொழில் என்றது, ஆறில் ஒன்று அறம் எனக் கொள்ளாது, வேறும் பல பொருள் குடிகள்பால் இரத்தலை. தன் வழிவரு தருமம் என்றது நடுநின்று செங்கோல்செலுத்தலை. பழிவரு நெறி என்றது ஒருபாற் கோடிய கொடுங்கோல் ஆட்சியை. 'ஆகும்' என்பதற்கு யான் அரசனாதலின் செய்யத்தகும் என்றும்

பொருள் கூறலாம். குடிகள்பால் கோல்காட்டிப் பெரும்பொருள் பெற்றுச் செங்கோல் ஆட்சியை மறந்து கொடுங்கோலாட்சி செய்யும் மன்னன் இவ்வுலகில் பழியும், மறுமையில் நரகமும் பெறுவான்; அவனைப்போல யானும் இம்மையில் பழியையும், மறுமையில் நரகத்தையும் பெறக்கடவேன் என்றவாறு. (108)

2299. தஞ்சென வொதுங்கினர் தனது பாருளோ
ரெஞ்சலின் மறுக்கினே டிரியல் போயுற
வஞ்சிசென் றிறுத்தவன் வாகை மீக்கொள
வஞ்சின மன்னவ னுக யானுமே.

'தஞ்சு என ஒதுங்கினர், தனது பார் உளோர்,
எஞ்சல் இல் மறுக்கினேடு இரியல் போயுற,
வஞ்சி சென்று இறுத்தவன் வாகை மீக்கொள,
அஞ்சின மன்னவன் ஆக யானுமே.'

பொ :—'பிற நாட்டில் பாதுகாவல் இல்லாமையால் தன்னைப் புகலிடமாக நம்பி வந்து ஒதுங்கிய பிற நாட்டுக் குடிமக்களும், தன்னுடைய நாட்டில் உள்ள பதியெழுவறியாப் பழங்குடிமக்களும் குறைதல் இல்லாத பெரிய கலக்கத்தோடு ஓடிப்போமாறும், நிலம் பெறும் பேராசையால் வஞ்சிமாலை சூடி வந்து படையொடு தங்கின வஞ்சி மன்னன் வெற்றி மாலை சூடுமாறும், எதிர்த்துப் போர் புரியாமல் அஞ்சி, அடைமதில் பட்டுக் கிடந்த மன்னவன் போல யானும் நரகம் புகக்கடவேன்.'

கு :—ஒதுங்கினேரும் தனது பாருளோரும் இரியல் போயுற என உம்மை விரிக்க. ஒரு நாட்டில் இடையில் வந்தேறிய குடிகளும் பதியெழுவறியாப் பழங்குடிகளும் என இருதிறக் குடிமக்கள் இருப்பர் அன்றே, அவ்விருதிறக் குடிமக்களும் இரியல் போகுமாறு என்க. தஞ்சம் - புகலிடம். மறுக்கு – கலக்கம்; அம் சாரியை குன்றியது. இரியல்-ஓட்டம். வஞ்சி என்பது புறத்திணைகளுள் ஒரு திணை; அது நிலம்பெறும் ஆசையால் பகைவர் மண்மேல் படை எடுத்துச் செல்லுவதை ஒழுக்கமாகக் கொண்டது; அவ்வொழுக்கத்தோர் வஞ்சிப்பூமாலை சூடுதல் மரபு. இறுத்தல்–பகைவர் மண்ணில் படையொடு தங்குதல். வாகை - வெற்றி; வென்றோர் சூடுதற்குரிய மாலை. இரியல் போகவும் வாகை மீக்கொளவும் அஞ்சின மன்னவன் எனவே இவன் அடைமதில் பட்டுக் கிடந்தமை அறியலாம். இம்மன்னன் காஞ்சித் திணை மேற்கொண்டு எதிரூன்றுது அஞ்சி ஒடுங்கினமையால், வந்த வஞ்சியான் வாகை சூடல் எளிதாயிற்று. மன்னவனுக்குரிய ஆண்மையின்றித் தன்

கீழ் வாழ்வோர் கலங்கியோடத் தானும் அஞ்சி யொடுங்கும் மன்னவன் நரகம் புகுவதற்குரிய பாவியாவான் என்பதும், அம்மன்னவன் போல 'நரகம் புகுவதற்குரியேனுகுக' எனப் பரதன் வஞ்சினம் கூறினுன் என்பதும் அறிக. (109)

2300. கன்னியை யழிசெயக் கருதி னேன்குரு
பன்னியை நோக்கினேன் பருகி னேனறை
பொன்னிகழ் களவினிற் பொருந்தி னேனென
வின்னவ ருறுகதி யென்ன தாகவே.

'கன்னியை அழிசெயக் கருதினேன், குரு
பன்னியை நோக்கினேன், பருகினேன் நறை,
பொன் இகழ் களவினில் பொருந்தினேன், என
இன்னவர் உறு கதி என்னது ஆகவே.'

பொ :—'மணமாகாத பெண்ணைக் கற்பழிக்கக் கருதினவனும், குருவின் மனைவியை அக்கருத்தோடு பார்த்தவனும், கள்ளைப் பருகினவனும், இகழத் தக்க களவுத் தொழிலால் பொன்னைப் படைத்தவனும் ஆகிய இவர்கள் அடையும் நரகம் எனக்குரியதாகுக.'

கு :—கன்னி-மணமாகாத இளம்பெண். கருதுதலும் செய்தலோடு ஒக்குமாகலின், 'கருதினேன்' என்ருன். நோக்கினேன் என்பதற்கும் ஈது ஒக்கும். பன்னி-பத்தினி, மனைவி. நறை-கள். இன்னவர் உறுகதியாவது நரகம். களவால் பொருளீட்டியோர் மறுமைக்கண் நரகம் பெறுதலேயன்றி இம்மையிலும் இகழப்படுவர் என்பது தோன்ற, 'இகழ் களவு' என்ருன். (110)

2301. ஊணல வுண்வழி நாயி னுண்டவ
ஞணலன் பெண்ணல ஞர்கொ லாமென
நாணல னரகமுண் டென்னு நல்லுரை
பேணலன் பிறர்பழி பிதற்றி யாகயான்.

'ஊண் நல உண்வழி நாயின் உண்டவன்,
'ஆண் அலன், பெண் அலன், ஆர்கொலாம்?' என
நாணலன், நரகம் உண்டு என்னும் நல் உரை
பேணலன் பிறர் பழி பிதற்றி, ஆக யான்.'

பொ :—'நல்ல சுவையுள்ள உணவை உண்ணும்போது நாயைப் போலப் பிறரைத் துரத்திவிட்டுத் தான்மட்டும் தனித்து இருந்து உண்டவனும், (பெண்ணேவல் செய்வதால்) ஆணும் அல்லன், (பெண் வடிவம் இன்மையின்) பெண்ணும் அல்லன், இவன் ஆர் என்று பிறர் இகழவும் நாணாத பெண்வழிச் செல்வோனும், நரகம் உண்டு என்கிற நல்ல சொல்லையும் போற்றாதவனாய் அந்நரகிடைவிழுமாறு பிறருடைய பழியைப் பிதற்றித் திரிபவனும் யான் ஆக.'

கு :—நல ஊண் என மாற்றுக. நல்ல உணவை உண்ணும் போது பிறரையெல்லாம் துரத்திவிட்டு உண்பவனுக்கு, உணவுகண்ட வழிப் பிற நாய்களைக் குரைத்துத் துரத்திவிட்டுத் தான்மட்டும் உண்ணும் நாய் உவமை. பெண்வழிச் செல்வோன் இழிவை, "பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையின் நாணுடைப் பெண்ணே பெருமை யுடைத்து" (குறள்-907) என்றதால் அறியலாம். இதனால் அந்நாண மில்லி ஆணலன்; பெண்ணலன் ஆர்கொலாம் என ஐயுறத் தக்கவன் என்பது பெறப்படும். பிறர்பழி கூறுதலாகிய புறங்கூறல், அறங்கூறான் அல்ல செய்தலினும் கொடியதாய் மீளா நகரத்தில் உய்க்கும் என்பது, "அறங்கூறா னல்ல செயினும் ஒருவன் புறங்கூறான் என்ற லினிது" (குறள்-181) என்பதால் பெறப்படுதலின், நரகம் உண்டு என்னும் நல்லுரைபேணாது பிறர்பழி பிதற்றுவதாகக் கூறப்பட்டது. பேணலன், முற்றெச்சம். பிறரை யொழித்துத் தனித்துண்டவனும் பெண்வழிச் செல்வோனும் புறங்கூறுவோனும் நரகிடைவீழ்வார் என்பது இதனால் புலனாம். (111)

**2302.** மறுவிறொல் குலங்களை மாசிட் டேற்றினேன்
சிறுவிலை யெளியவ ருணவு சிந்தினே
னறியன வயலவர் நாவி னீர்வர
வுறுபத நுங்கிய வொருவ னாகயான்.

'மறு இல் தொல் குலங்களை மாசு இட்டு ஏற்றினேன்,
சிறு விலை எளியவர் உணவு சிந்தினேன்,
நறியன அயலவர் நாவின் நீர்வர
உறு பதம் நுங்கிய ஒருவன் ஆக யான்.'

பொ :—'குற்றம் அற்ற பழமையான குலங்களை மாசுடையவாகக் கற்பித்து ஏற்றிக் கூறியவனும், எளிய மக்கள் உண்ணும் விலை உயர்ந்த சிறிய அளவுள்ள உணவைச் சிந்தினவனும், நறுமணமும் சுவையு முடைய மிக்க உணவுப் பண்டங்களைப் பக்கத்தில் பார்த்திருப்பவர்

நாவில் உமிழ்நீர் சுரக்குமாறு அவர்க்குக் கொடாது விரைந்து விழுங்கி யுண்ட ஒருவனும் யான் ஆக'

கு :—குலம் என்றது குடிப்பிறப்பை. எட்டியும் சுட்டியும் மாசு காட்ட முடியாத குலம் என்பான், மறு இல் தொல்குலம் என்றான். சிறு விலை உணவு என இயையும்; விலையில் உயர்ந்ததாய் அளவில் குறைந்ததாய் உள்ள உணவு. உணவுப் பொருள் சிந்தக்கூடாது; அதன்மேலும் எளியவர் உணவுப் பொருள் சிந்துதல் குற்றம்; அதன் மேலும் அவ்வெளியவரின் சிறு விலையுணவைச் சிந்துதல் பெரியதோர் குற்றமாம் என்க. மேலைச் செய்யுளில் பிறரைத் துரத்திவிட்டு உணவுப் பொருளை உண்டவனைக் கூறி, இச்செய்யுளில் பிறர் எதிரில் அவர் பார்த்துக்கொண்டிருக்கவும் அவர்க்கு ஈயாது உண்டவனைப் பற்றிக் கூறினார். கொடுத்து உண்ணுதற்குரிய பேரளவுள்ள உணவு என்பது தோன்ற, 'உறுபதம்' என்றும், பார்த்துக் கொண்டுள்ள பிறர் பறித்து உண்பார்களே என்ற அச்சத்தால் விரைந்து விழுங்ினமை தோன்ற, 'நுங்கிய' என்றும் கூறினான். (112)

**2303.** வில்லினும் வாளினும்
விரிந்த வாண்டொழில்
புல்லிடை யுகுத்தனென்
பொய்ம்மை யாக்கையைச்
சில்பக லோம்புவான்
செறுநர் சீறிய
வில்லிடை யிடுபத
மேற்க வென்கையால்.

'வில்லினும் வாளினும் விரிந்த ஆண் தொழில்
புல்லிடை உகுத்தனென் பொய்ம்மை யாக்கையைச்
சில் பகல் ஓம்புவான் செறுநர் சீறிய
இல்லிடை இடு பதம் ஏற்க, என்கையால்.'

பொ :—'விற்போர்க் கலையிலும் வாட்போர்க் கலையிலும் யான் பெற்றிருக்கும் விரிவான ஆண்மைத் தொழிலாகிய அமிழ்தத்தைப் பயன் படுத்தாமல் இழிந்த இடத்தில் சிந்தியதுபோல வீணாக்கிவிட்டு, நிலை பேறில்லாத பொய்யுடம்பை மேலும் சில நாள் பாதுகாக்க வேண்டிப் பகைவர் கோபித்து அகப்படுத்தி இருத்திய சிறையில், சிறைக்காவலர் விரும்பியபோது இடும் உணவை என்கையால் ஏற்று உண்ணும் இழிவைப் பெறுவேனாக.'

கு :—புல்லிடையுகுத்தனென் என்பது, புல்லிய இடத்தில் உகுத்தாற்போன்று வீணாக்கி என்னும் பொருளதாம் ஆண்மைத் தொழிலாகிய அமிழ்தத்தைப் புல்லிடை யுகுத்தனென் எனப் பொருள் கொள்ள வைத்தமையால் அது குறிப்புருவகம் ஆம். “பரதற்கெய்திய புல்லிடையுக்க நல்லமுதம் போலுமால்” (1557) என்று முன் கூறியுள்ளதும் காண்க. புல்லிடை - தூய்மையற்ற இடம். “ஊத்தைக் குழியில் அமுதம் பாய்வது போல்” (பெரியாழ்வார் 4-6-9) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். என்றும் நிலை பெறுவதாய மானத்தை இழந்தும் காப்பாற்றத்தக்க பெருமை உடம்புக்கு இன்று என்பது தோன்ற, ‘பொய்ம்மை யாக்கையை’ எனவும், ‘சில்பகல் ஓம்புவான்’ எனவும் கூறினன். நிலைபேறில்லாததாய்ப் பின்னும் அழிவதாய உடம்பு என்பது கருத்து. ‘செறுநர் சீறிய இல்’ என்றது சிறைச்சாலையை; காராக்கிருகம் என்பர் வடநூலோர். ‘செறுநர்சீறிய’ என்ற அடையால் இல் என்றது சிறைச்சாலையையே என்பது விளங்கவைத்தவாறு. சிறைக் காவலர் விரும்பிய போது இடுகின்ற சிறிய உணவைக் கையால் ஏற்று உண்டு சிலநாள் காறும் பொய்யுடம்பை ஓம்பிவாழும் எண்ணம் அரசர் குடிப் பிறந்த ஆண்மகனுக்கு ஏலாததாய் இழிவு தலைத்தரும் என்பதை, “தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்திரீஇய, கேளல்கேளிர் வேளாண் சிறுபதம், மதுகையின்றி வயிற்றுத்தீத்தணியத், தாமிரந் துண்ணுமளவை, யீன்மரோ விவ்வுலகத்தானே” (புறநா-74) என்று சிறையில் துஞ்சிய சேரமான் கணைக்காலிரும்பொறையின் பாடலால் உணரலாம். அவ்வாறு ஏற்றுண்டோர் நரகம் அடைவார் என்பது கருத்து. (113)

2304. ஏற்றவற் கொருபொரு ளுள்ள தின்றென்று
மாற்றல னுதவலன் வரம்பில் பல்பக
லாற்றின னுழற்றுமோ ராத னெய்துமக்
கூற்றுறு நரகினோர் கூறு கொள்கயான்.

‘ஏற்றவற்கு ஒருபொருள் உள்ளது, இன்று என்று
மாற்றலன், உதவலன், வரம்பு இல் பல் பகல்
ஆற்றினன் உழற்றும் ஓர் ஆதன் எய்தும் அக்
கூற்று உறு நரகின் ஓர் கூறு கொள்க யான்.’

பொ :—‘தன்னிடத்து வந்து இரந்து ஒரு பொருளை வேண்டியவனுக்கு உள்ளது என்று உதவாமலும், இல்லையென்று மறுத்துக் கூறாமலும், அளவிலாத பல நாட்கள் கொடுப்பதாகச் சொல்லிக் காலம் கடத்தி

அவனை உழலச் செய்கின்ற ஒரு கண்ணோட்டம் இல்லாதவன் அடையும் எமனுக்கு உரிமையுள்ள நரகத்தில் ஒரு பகுதியை யான் கொள்ளக் கடவேன்.'

கு:—'உள்ளது இன்று என்று மாற்றலன் உதவலன்' என்பது எதிர் நிரல் நிறை. ஆற்றுதல் - காலம் கடத்தல். உழற்றுதல், நாளைக்கு ஆகட்டும் என்று சொல்லி இரப்பவனை மீண்டும் மீண்டும் வரச்செய்தல். உண்டு இல்லை என்பதை உடனே சொல்லாமல், கொடுப்பவன் போலப் பலநாள் வரையில் காலம் கடத்தி இறுதியில் ஒன்றும் உதவாதவன் நரகில் வீழ்தற்குரியவன் என்பது கருத்து. 'வாதவர்கோன் பின்னை யென்றான் வத்தவர்கோன் நாளையென்றான்,—யாதவர்கோன் யாதொன்று மில்லையென்றான்—ஆதலால், வாதவர்கோன் பின்னை யினும் வத்தவர்கோன் நாளையினும் யாதவர்கோன் இல்லை இனிது' (தமிழ் நாவலர் சரிதை - ஔவையார் 27) என்ற பாடலால், பின்னைத் தருவேன் நாளைத் தருவேன் என்று இரப்பாளனை உழலச் செய்வதினும் இல்லை என்று சொல்லிவிடுவது நல்லது என்பது விளங்குதல் காண்க. (114)

**2305.** பிணிக்குறு முடையுடல் பேணிப் பேணலார்த்
துணிக்குறு வயிரவா டடக்கை தூக்கிப்போய்
மணிக்குறு நகையிள மங்கை மார்கண்முன்
றணிக்குறு பகைஞரைத் தாழ்க வென் றலை.

பிணிக்கு உறும் முடை உடல் பேணிப் பேணலார்த்
துணிக்குறு வயிர வாள் தடக்கை தூக்கிப் போய்,
மணிக் குறு நகை இள மங்கைமார் கண்முன்,
தணிக்குறு பகைஞரைத் தாழ்க, என் தலை.'

பொ:—வாத முதலிய நோய்கட்கு இடமாகப் பொருந்திய முடை நாற்றம் வீசும் உடம்பைப் பாதுகாத்துக்கொண்டு, பகைவரை வெட்டு தற்கு உரிய கூரிய வாளைப் பெரிய கையில் தூக்கிச் சென்று, முத்துப் போன்ற சிறிய பற்களையுடைய பெண்டிர் கண்களுக்கு எதிரில், வென்று அடக்குதற்குரிய பகைவரை என்தலை வணங்குவதாக.

கு:—வாதம், பித்தம், ஐ என்ற மூன்றற்கு உரிமையுள்ள உடம்பு என்பது தோன்ற, 'பிணிக்குறும் முடையுடல்' என்றார். பேணலார் - பகைவர். வயிரம் - கூர்மை; "கொலைபுரி வயிர வேலான்" (தணிகைப்பு. சீபரி. 32) என்புழியும் இச்சொல் இப்பொருளது ஆதல் காண்க. தடக்கைக்குச் சுமையாயதன்றிப் பயனின்று என்பது தோன்ற, 'தூக்கிப்

போய்' என்ருன். நகைப்பதற்குரிய கருவியுடைமை தோன்ற, 'மணிக் குறுநகை' கூறினன். ஆடவர்முன் பகைவரை வணங்குவதினும் இளமங்கையர் கண்முன் பகைவரை வணங்குதல் மிக்க இழிவு தருவ தாகலின் 'மங்கைமார் கண்முன்' என்ருன். தணிக்குறு பகைஞர் – வென்று அடக்குதற்குரிய எளிய பகைவர். தலைதாழ்தலாவது வணங்கு தல். வாளோடு சென்று வணங்குதல், தானும் வாளும் பகையரசனுக்கு அடிமையும் உடைமையும் ஆம் என்பது புலப்படுத்த வேண்டி. இவ்வாறு மகளிர் எள்ளி நகைக்கப் பகைவரைப் பணிவது பெரும்பயன் கருதி யன்று என்பது புலப்படுத்த, 'பிணிக்குறு முடையுடல் பேணி' என்ருன். இராமனைக் காட்டுக்கனுப்பியதில் யான் உடந்தையாக இருந்திருப்பின் இங்குக் கூறிய இழிவையும் யான் பெறுவேனாக என்பது கருத்து. (115)

**2306.** கரும்பலர் செங்நெலங் கழனிக் கானநா
டரும்பகை கவர்ந்துண வாவி பேணினெ
னிரும்பலர் நெடுந்தளை யீர்த்த காலொடும்
விரும்பலர் முகத்தெதிர் விழித்து நிற்கயான்.

'கரும்பு அலர் செந் நெல் அம் கழனிக் கான நாடு
அரும் பகை கவர்ந்து உண, ஆவி பேணினென்,
இரும்பு அலர் நெடுந்தளை ஈர்த்த காலொடும்
விரும்பலர் முகத்து எதிர் விழித்து நிற்க யான்.'

பொ :—'கரும்பையும் பரவிய செந்நெற்பயிரையுமுடைய அழகிய கழனிக்காட்டையுடைய நாட்டை, வெல்லுதற்கு அரிய பகைவர் கைப், பற்றி அனுபவிக்க, அவரை வெல்ல இயலாது, உயிரைப் பாதுகாத்துக் கொண்டு, அவர்கள் இட்ட இரும்பாலாகிய பெரிய நீண்ட விலங்கை யிழுத்த காலோடும் பகைவர் முகத்துக்கு எதிரில் யான் விழித்து நிற்பேனாக.'

கு :—கழனிக்கானம் என்றது, வயற்காடு, கழனிக்காடு என்ருற் போன்றது. கவர்ந்துணல் – கைப்பற்றி அனுபவித்தல். தளை – விலங்கு. விரும்பலர் – பகைவர். தன்னாட்டைக் கவர்ந்த பகை மன்னன் இட்ட விலங்கு பூண்ட காலோடு, அப்பகைவர் முகத்தில் விழிப்பது மிக்க பேரிழிவு ஆதலின் அவ்விழிவைப் பரதன் அடைவதாக வஞ்சினங் கூறுகிருன். (116)

இச்செய்யுளுக்குப்பின் ஒரு பிரதியில் கீழ்க்காணும் செய்யுளும் 'பரதன் நகர்புகு படலம் முற்றும்' என்ற தொடரும் 45 இல் காணப்படு கின்றன.

2306 (அ) எனைப்பல சூளுரைத் தென்னை யீன்றவள்
வினைத்திறத் தரசினை விரும்பி லன்னைகேள்
அனைத்துள நரகெனக் காக வென்றவள்
பனிக்கமல லப்பதம் பணிந்தி றைஞ்சினன்.

**2307.** தீயன கொடியவள் செய்த செய்கையை
நாயினே னுணரினன் னெறியி னீங்கலாத்
தூயவர்க் கிடரிழைத் துழலுந் தோமுடை
யாயவர் வீழ்கதி யதனின் வீழ்கயான்.

'தீ அன கொடியவள் செய்த செய்கையை
நாயினேன் உணரின் நல் நெறியில் நீங்கலாத்
தூயவர்க்கு இடர் இழைத்து உழலும் தோம் உடை
ஆயவர் வீழ்கதி அதனின் வீழ்க யான்.'

பொ :—'சேர்ந்தார்க்கொல்லியாகிய தீயைப் போன்ற கொடியவளாகிய கைகேயி செய்த வஞ்சனைச் செயலை நாய் போன்ற நான் முன்னரே உணர்ந்திருப்பேனாயின், நல்ல நெறியில் நீங்காது ஒழுகுகின்ற பெருமக்களுக்குத் துன்பம் செய்து திரிகின்ற குற்றம் உடைய அக்கொடியவர் வீழ்தற்குரிய நரகில் யான் வீழ்வேனாக.'

கு :—கைகேயி தன்னைச் சேர்ந்த தயரதனைக் கொன்றவளாதலின் சேர்ந்தாரைக் கொல்லியாகிய தீ அவளுக்கு உவமையாயிற்று. செய்ந்நன்றி மறவாத் தன்னியல்பு புலப்படுத்த வேண்டிப் பரதன் தன்னை 'நாயினேன்' என்றான். கொடியவள் செய்த செய்கையை 'நாயினேன் உணரின்' என்பது, பரதன் கூறிய சூளுறு கட்டுரைகட்கெல்லாம் இறுதிநிலைவிளக்காய்நின்று எல்லாவற்றோடும் முன்னர்க்கூட்டிக் கூறும் இயைபுடையது. தோம் - குற்றம். துறந்த மாதவர், குரவர், அந்தணர் முதலியோர் சிறப்பு வகையால் எடுத்துக் கூறப்பட்டமையின், இங்கு நன்னெறியினீங்கலாத் தூயவர் என்றது இல்லறத்தோரை என்று கொள்ளலாம். (117)

### கோசலை பரதனைத் தழுவிப் பாராட்டல் 2308—2310

**2308.** தூய வாசகஞ் சொன்ன தோன்றலைத்
★ தீய கானகந் திருவி னீங்கிமுன்
போயி னன்வரக் கண்ட பொம்மலா
ளாய காதலா லழுது புல்லினள்.

தூய வாசகம் சொன்ன தோன்றலைத்
தீய கானகம் திருவின் நீங்கி முன்
போயினன் வரக் கண்ட பொம்மலாள்,
ஆய காதலால், அழுது புல்லினள்.

பொ :—தூய்மையான அச்சொல்லைச் சொன்ன பரதனைத் தீங்கு நிறைந்த காட்டிற்குச் சீதையோடு அயோத்தியைவிட்டு முன் நீங்கிச் சென்ற இராமன் வரக் கண்டாற் போன்ற மகிழ்ச்சியுடையளாய்க் கோசலை அத்தகைய அன்பினால் அழுதுகொண்டே தழுவினள்.

கு :—தூய வாசகம் என்றது, 'கொடியவள் செய்த செய்கையை நாயினேனுணரின் நரகில் வீழ்வேனாக' என்றாற் போன்ற சொல்லை. அது அவன் மனத்தூய்மையை விளக்குதலின் 'தூயவாசகம்' என அதைக் குறிப்பிட்டார். தோன்றல் என்றது பரதனை. திருவினோடு நீங்கி என ஓடு விரிக்க. அரசத்திருவினீங்கி எனப் பொருள் கொள்ளலும் ஆம். பொம்மல் - மகிழ்ச்சி. ஆய காதல் என்றது இராமனைக் கண்டாற் போன்று உள்ளத்தெழுந்த பேரன்பினை. அழுதலும் தழுவலும் அன்பு காரணமாகப் புறத்தே நிகழுஞ் செயல்கள். தோன்றலைப் புல்லினள் என இயையும். (118)

2309. செம்மை நன்மனத் தண்ணல் செய்கையு
மம்மை தீமையு மறித றேற்றினள்
கொம்மை வெம்முலை குமுறு பாலுக
விம்மி விம்மிநின் றழுது வீங்கினள்.

செம்மை நல் மனத்து அண்ணல் செய்கையும்,
அம்மை தீமையும், அறிதல் தேற்றினள் ;
கொம்மை வெம் முலை குமுறு பால் உக,
விம்மி விம்மி நின்று, அழுது வீங்கினள்.

பொ :—நல்ல மனத்தையுடைய பரதனது செம்மையான செய்கையையும் அவனைப் பெற்ற அம்மையான கைகேயியின் தீய செய்கையையும் தெளிவாக அறிந்த கோசலை, திரண்டவெவ்விய நகில்களில் இருந்து சுரக்கின்ற பால் சிந்தத் தேம்பித் தேம்பி நின்று அழுது முகம் வீங்கினள்.

கு :—நன்மனம் என்பதால் மனத்தின் செம்மைபெறப்படுதலின், செம்மைச் செய்கை என இயைக்க. அம்மை – தாய். தீமை யென்றது தீயசெயலை. தேற்றினள் தன்வினையில் வந்தது. பரதனை இராமனாகவே கண்ட பேரன்பால் பால் சுரந்தது. " இல்லா முலைப்பாலுங் கண்ணீரும்

ஏந்திழைபால், நல்லாய் உளவாமால்" (சிவஞானபோதம் 8. சூ. 2ஆம் அதிகாரம்) என்றது காண்க. 'பான்முலை சோர நின்றாள்' (1842) என இலக்குவனை நோக்கிச் சுமித்திரை பால்சோர நின்றமையை முன்னர்க் கூறியுள்ளமை காண்க. (119)

**2310.** முன்னை நுங்குல முதலு ளோர்கடா
நின்னை யாவரே நிகர்க்கு நீர்மையார்
மன்னர் மன்னவா வென்று வாழ்த்தினு
ளுன்ன வுன்னநைந் துருகி விம்முவாள்.

'முன்னை நும் குல முதலுளோர்கள்தாம்,
நின்னை யாவரே நிகர்க்கும் நீர்மையார்?
மன்னர் மன்னவா!' என்று, வாழ்த்தினுள்
உன்ன உன்ன நைந்து உருகி விம்முவாள்.

பொ :—பரதன் இயல்பை நினைக்க நினைக்கக் கசிந்து உருகி ஏங்குகின்ற கோசலை, 'மன்னர் மன்னவா! முற்பட்டதாகிய நுங்குலத்து முன்னே இருந்த மன்னர்களில் நின்னை நிகர்க்கும் தன்மையுடையார் யார்?' என்று புகழ்ந்து வாழ்த்தினுள்.

கு :—வினு, யாரும் இன்மையுணர்த்திற்று. "மன்புகழ் பெருமை நுங்கள் மரபினோர் புகழ்களெல்லாம், உன்புகழாக்கிக் கொண்டாய்" (குகப் படலம் 36) 'ஆயிரமிராமர் நின்கேழாவரோ' (குகப். 35) என்று குகன் கூறுவதும் இக்கருத்தினதேயாதல் காண்க. பரதனை மன்னர் மன்னவா! என விளித்தது, மன்னர் மன்னன் ஆதற்குரிய தகுதி மிகவுடைமை கருதி. "மும்மையின் நிறை குணத்தவன் நின்னினும் நல்லனுல்" (1698) என முன்னரே புகழ்ந்திருத்தலும் நினைக்க. மன்னர் மன்னனுய் நெடிது வாழ்க என்பது அவள் வாழ்த்து. (120)

இச்செய்யுளுக்குப்பின் சில சுவடிகளில் கீழ்வரும் இரு செய்யுள்கள் காணப்படுகின்றன.

**2310 (a)** உன்ன உன்ன நைந் துருகு மன்புகூர்
அன்னை தாளில் வீழ்ந் திளைய வண்ணலும்
சொன்ன நீர்மையாற் றொழுது மாழ்கினன்
இன்ன வேலைவாய் முனிவ னெய்தினன்.

**2310 (b)** வந்த மாதவன் தாளில் வள்ளல் வீழ்ந்
தெந்தை யாண்டையா னியம்பு வீரெனு
நொந்து மாழ்கினு னுவல்வ தோர்கிலா
அந்த மாதவ னழுது புல்லினன்.

ஆயின், இவை இவ்விடத்திற்கு இன்றியமையாதன அல்ல ஆதலாலும் பின்னிகழ்ச்சியோடு முரணுதலாலும், 1, 5, 7, 13, 15-20, 22. 27-29, 40, 49, 52 என்ற எண்ணுள்ள சுவடிகளில் இவையின்மையாலும் இங்கு விடப்பட்டன.

### கோசலை பரதனைத் தந்தைக்கு இறுதிக்கடன் செய்க எனல்

**2311.** மறுவின் மைந்தனே வள்ள லுந்தையா
ரிறுதி யெய்திநா ளேழி ரண்டின
சிறுவர் செய்கடன் செய்து தீர்த்தியென்
றுறுவன் மேயினு ளுரையி னேயினுள்.

'மறு இல் மைந்தனே! வள்ளல் உந்தையார்,
இறுதி எய்தி நாள் ஏழ் இரண்டின;
சிறுவர் செய்கடன் செய்து தீர்த்தி' என்று
உறுவல் மேயினுள் உரையின் ஏயினுள்.

பொ :—துன்பத்தையுடைய கோசலை, 'குற்றம் அற்ற மகனே! வள்ளலாகிய உன் தந்தையார், இறந்து பதினுன்கு நாட்களாயின; புதல்வர் செய்தற்குரிய இறுதிக் கடனைச் செய்து முடிப்பாயாக' என்று சொல்லால் கட்டளை இட்டாள்.

கு :—பரதன் சோர்வாலும் அவன் கூறிய வஞ்சினத்தாலும் சிறிதும் குற்றம் அற்றவன் என்பதை உணர்ந்தாளாதலின், அவனை, 'மறுவில் மைந்தனே! என்று விளித்தாள். கைகேயி கேட்ட வரத்தை மாற்ருது கொடுத்து மரணத்தை வரவேற்றவன் ஆதலின் தயரதனை, 'வள்ளல் உந்தையார்' என்று சிறப்பித்தாள். கேகய நாட்டிலிருந்து பரதன் கோசல நாட்டையடைய ஏழு நாட்கள் ஆயின என்பது, 'ஏழ்பகல் நீந்தி......கோசல நண்ணினன்' (2208) என்றதால் பெறப்படுவதாலும் தயரதன் இறந்த பின் அனுப்பிய தூதுவர் கேகய நாடு அடைய ஏழு நாட்கள் ஆயிருக்கும் ஆதலாலும் 'இறுதியெய்தி நாள் ஏழிரண்டின' என்றது பொருத்தமாதல் காண்க. உறுதியாவது, மக்கள் செய்யும் நீர்க்கடனுல் மன்னவன் அடையும் நற்கதி. கணவன் இறப்பாலும் இராமன் நடப்பாலும் கோசலை உள்ளம் மிகவும் கலங்கியிருந்தாள், ஆதலின், 'உறுவல் மேயினுள்' என்ருர். உறுவல்-துன்பம். செயலால் ஏவுதற்குரியவன் வசிட்டன்; கோசலை சொல்லால் மட்டும் ஏவுதற்குரியவள் என்பது புலப்படுத்தியவாறு. (121)

பரதன் வசிட்டனோடு சென்று தயரதன் உடலைக் காணுதல்

2312. அன்னை யேவினா ளடியி றைஞ்சினான்
பொன்னின் வார்சடைப் புனித னோடும்போய்த்
தன்னை நல்கியத் தரும நல்கினான்
பன்னு தொல்லறப் படிவ நோக்கினான்.

அன்னை ஏவினாள் அடி இறைஞ்சினான்,
பொன்னின் வார்சடைப் புனிதனோடும் போய்த்
தன்னை நல்கியத் தரும நல்கினான்
பன்னு தொல் அறப் படிவம் நோக்கினான்.

பொ :—அவ்வாறு ஏவினவளாகிய அன்னையின் அடி வணங்கி, பொன் போன்ற நிறமுடைய நீண்ட சடையையுடைய தூய தவமுனிவனாகிய வசிட்டனோடும் சென்று, தன்னுயிரையே கொடுத்து அந்த வாய்மை அறத்தைப் பாதுகாத்த தயரதனுடைய பழமையான அறத்தின் வடிவம் போன்ற உடம்பைப் பார்த்தான்.

கு :—ஏவினளாகிய அன்னை என்க. இறைஞ்சினான், முற்றெச்சம். சடைக்குப் பொன் நிறத்தால் உவமையாயிற்று. புனிதன் என்றது வசிட்டனை; இறுதிக் கடன் முடிப்பதற்கு வழிகாட்டுபவன் அவனாதலின் அவனோடு சென்று தந்தையின் உடம்பை நோக்கினான் பரதன். தயரதனுடைய வாழ்வு அறநெறியே சென்றது ஆகலின் அவன் உடம்பைத் தொல்லறப்படிவம் என்று சிறப்பித்தவாறு. (122)

பரதன் அழுகை

2313. மண்ணின் மேல்விழுந்
தலறி மாழ்குவா
னண்ண லாழியா
னவனி காவலா
னெண்ணெ யுண்டபொன்
னெழில்கொண் மேனியைக்
கண்ண நீரினாற்
கழுவி யாட்டினான்.

மண்ணின்மேல் விழுந்து அலறி மாழ்குவான்,
அண்ணல், ஆழியான், அவனி காவலான்,
எண்ணெய் உண்ட பொன் எழில் கொள் மேனியைக்
கண்ண நீரினால் கழுவி ஆட்டினான்.

பொ :—தந்தையின் உடம்பைக் கண்டவுடன் பதைபதைத்து மண் மேல் விழுந்து அலறிக் கலங்குகின்ற பரதன், பெருமையுடையவனும் ஆணைச் சக்கரத்தையுடையனும்ப் பூமியை ஆண்டவனுமாகிய தயரதனது எண்ணெயையுண்டதும் பொன் போன்ற அழகு கொண்டதுமாகிய மேனியைக் கண் நீரினால் கழுவி நீராட்டினான்.

கு :—அண்ணல், ஆழியான், அவனிகாவலான் என்பன தயரதன் என்ற ஒரு பொருள்மேல் வந்த பல பெயர்கள். எண்ணெய்க் கடாரத்தில் வைத்திருந்தமையால் தயரதனுடைய உடம்பு எண்ணெயை யுண்டு எழில் மிக்கதாய் விளங்கிற்று. 'கண்ணநீரினால் கழுவி ஆட்டினான்' என்றது, பரதன் தந்தையுடம்பைக் கண்டு கண்ணீர்விட்டழுத மிகுதியை யுணர்த்திற்று. எண்ணெய் உண்ட உடம்பை நீராட்டுவது போன்று இருந்தது அவன் அழுத கண்ணீர் தயரதன் மேல் விழுவது என்பது கருத்து. 'கண்ண நீர்' என்புழி அகரம் இடப்பொருளது. (123)

## தயரதன் உடம்பை விமானத்தேற்றுதல்

**2314.** பற்றி யவ்வயிற் பரிவின் வாங்கினர்
சுற்று நான்மறைத் துறைசெய் கேள்வியார்
கொற்ற மண்கணை குமுற மன்னனை
மற்றோர் பொன்னின்மா மான மேற்றினர்.

பற்றி அவ்வயின் பரிவின் வாங்கினர்;
சுற்றும் நான்மறைத் துறை செய் கேள்வியார்,
கொற்ற மண் கணை குமுற, மன்னனை
மற்று ஓர் பொன்னின் மா மானம் ஏற்றினர்.

பொ :—நான்கு வேதங்களிலும் சொல்லியுள்ள வழியில் இறுதிக் கடனைச் செய்யும் அந்தணர், தயரதன் உடம்பைச் சுற்றிலும் பற்றிக் கொண்டு அவ்விடத்திலிருந்து இரக்கத்தோடு எடுத்து, அரசனுக்குரிய மார்ச்சனையுடைய திரண்ட முரசம் முழங்க, ஒரு பொன்னால் இயன்ற பெரிய விமானத்தில் ஏற்றினர்கள்.

கு :—கேள்வியார் - வேதங்களைக் கேள்வியால் அறிந்த அந்தணவருணத்தார். கேள்வியார் மன்னனைச் சுற்றும் பற்றி வாங்கி மானம் ஏற்றினர் என்க. வாங்கினர், முற்றெச்சம். இறுதிக் கடனை உடனிருந்து செய்தற்குரிய அந்தணரே மன்னவன் உடம்பையும் எடுத்து விமானத்தில் ஏற்றினர் அவன் பெருமை தோன்ற வேண்டி. மண்கணை - மார்ச்சனையுடைய திரண்ட முரசு. கணை - திரட்சி; ஆகுபெயரான் முரசத்தையுணர்த்திற்று. குமுறல் - முழங்குதல். கொற்றவனுக்கு

உரிய முரசு ஆதலின் 'கொற்ற மண்களை' எனப்பட்டது. விமானம் முதற்குறைந்து மானம் என நின்றது. மற்று, அசை. (124)

### தயரதன் உடம்பை யானைமேல் வைத்துக்கொண்டு போதல்

2315. கரைசெய் வேலைபோ னகரி கையெடுத்
துரைசெய் பூசலிட் டுயிர்து ளங்குற
வரச வேலைசூழ்ந் தழுது கைதொழப்
புரசை யானையிற் கொண்டு போயினர்.

கரை செய் வேலை போல், நகரி கை எடுத்து,
உரை செய் பூசல் இட்டு, உயிர் துளங்குற,
அரச வேலை சூழ்ந்து, அழுது, கைதொழப்
புரசை யானையில் கொண்டு போயினர்.

பொ :—அயோத்தி நகரத்து மக்களெல்லாம் கரையையுடைய கடல் போலத் திரண்டு கைகளை உயர்த்தி மன்னனைப்பற்றிப் பலவகையாகச் சொல்லிப் புலம்புதலாகிய ஆரவாரம் செய்துகொண்டு உயிர் நடுங்கவும், அரசர்களாகிய கடல் சூழ்ந்து அழுதுகொண்டு கைதொழவும், கழுத்திடு கயிற்றையுடைய யானைமேல், தயரதனை வைத்துக் கொண்டுபோனார்கள்.

கு :—மேலைச் செய்யுளில் கூறிய அந்தணரையே இங்கும் எழுவாயாக்குக. நகரி ஆகுபெயரால் மக்களையுணர்த்திற்று. மதில் சூழ்ந்த அயோத்தி நகரத்துக்கு உவமையாதல் வேண்டிக் 'கரைசெய் வேலை போல்' என்றார். நகர மக்களின் திரளுக்கும் ஆரவாரத்திற்கும் கடல் உவமை. அழுது பல கூறிப் புலம்புங்கால் கைகளை யுயர்த்திப் புலம்புதல் இயல்பு. பூசல் – துன்ப ஆரவாரம். உரைசெய் பூசல் என்றது, மக்கள் மன்னனைப் பற்றி மனத்தில் தோன்றியவற்றைச் சொல்லி அழுகின்ற ஆரவாரத்தை. மன்னனை உயிராக நினைந்தவராதலின் நகர மாந்தர் உயிர் துளங்குவாராயினர். அரசர்களின் மிகுதி தோன்ற 'அரச வேலை' என்றார். வேலை – கடல். தயரதன் உடம்பிற்கு அணுக்கராக அரசர்கள் வந்தமை தோன்றச் 'சூழ்ந்து' என்றார். தயரதன், மன்னர் மன்னன் ஆதலின், மன்னரெல்லாம் அழுது கைதொழுது வரலாயினர். புரசை - யானையின் கழுத்திடு கயிறு. (125)

இச்செய்யுளுக்குப் பின், சில சுவடிகளிலும் 46 என்னும் குறியீடுள்ள அச்சுப் புத்தகத்திலும்,

2315 (அ) உந்து பொற்றடந் தேர்வ லானெடும்
மந்திரப் பெருந் தலைவர் மற்றுளோர்
தந்தி ரத்தனித் தலைவர் நண்பினோர்
வந்து சுற்ற முற்று அழுது மாழ்கினர்.

என்ற செய்யுள் காணப்படுகின்றது. இது இடைச் செருகல் என்பது இதன் அமைப்பால் விளங்குதலின் விடப்பட்டது.

### வாத்தியங்களின் இரக்க ஒலி

**2316.** சங்கு பேரியுந் தழுவு சின்னமு
மெங்கு மெங்குநின் றிரங்கி யேங்குவ
மங்கு றோய்நகர் மகளி ராமெனப்
பொங்கு கண்புடைத் தழுவ போன்றவே.

சங்கு பேரியும், தழுவு சின்னமும்,
எங்கும் எங்கும் நின்று இரங்கி ஏங்குவ,
மங்குல் தோய் நகர் மகளிராம் எனப்
பொங்கு கண் புடைத்து அழுவ போன்றவே.

பொ :—சங்கும், முரசும், அவற்றைத் தழுவிவரும் சின்னம் என்ற வாத்தியமும், எல்லாவிடங்களிலும் நின்று இரக்கக் குறிப்புடன் முழங்குகின்றவை, மேகம் தவழும் உயர்ச்சியையுடைய அயோத்தி நகரமே பெண்டிர்போலப் பெரிய கண்களில் மோதிக்கொண்டு அழுவதைப் போன்றிருந்தன.

கு :—சங்கும் என எண்ணும்மை விரிக்க. சின்னம் – காளம். கண் புடைத்தல், மகளிர்க்கும் முரச முதலிய வாத்தியங்கட்கும் பொருந்துமாறு அமைந்து இரு பொருள் தருகின்றது ; வாத்தியங்களில் குறுந்தடியால் அடிக்கும் இடமும் கண் எனப்படும் மகளிர் அழுங்கால் கண்களில் அடித்துக்கொண்டு அழுவார்கள் ஆதலின் வாத்தியங்களின் கண்களில் குறுந்தடி கொண்டு அடிக்க ஏங்குகின்ற ஒலியையுடைய நகரத்தின் தோற்றத்திற்கு அவர்களை உவமை கூறினர். 'நகர் அழுவபோன்ற' என்றது, தற்குறிப்பேற்றம். கண்புடைத்தழுதல் என்ற சிலேடை அணி அதற்கு உறுப்பாய்நின்றது. நகரமாகிய பெண்ணுக்கு மேகம் கூந்தல் போல அமைந்துளது என்ற குறிப்புத் தோன்ற, 'மங்குல் தோய் நகர்' என்றார். மங்குல்-மேகம். (126)

### தயரதன் உடலம்கொண்டு சரயுநதியை அடைதல்

**2317.** மாவும் யானையும் வயங்கு தேர்களுங்
கோவு நான்மறைக் குழுவு முன்செலத்
தேவி மாரொடுங் கொண்டு தெண்டிரை
தாவு வார்புனற் சரயு வெய்தினர்.

மாவும், யானையும், வயங்கு தேர்களும்,
கோவும், நான்மறைக் குழுவும், முன்செலத்
தேவிமாரொடும் கொண்டு, தெண் திரை
தாவு வார் புனல் சரயு எய்தினர்.

பொ :—குதிரைப்படையும், யானைப்படையும், விளக்கமுடைய தேர்ப் படையும், பரதனும், அந்தணர் கூட்டமும் முன்னே செல்லா நிற்க, தயரதன் உடம்பை யானைமேல் வைத்துக்கொண்டு உடன் வரும் தேவிமாரோடும் தெளிவான அலைகள் வீசுகின்ற பெரும்புனலையுடைய சரயுநதியை அடைந்தார்கள்.

கு :—தயரதன் கொடுத்த வரத்தின்படி அரசன் ஆனான் பரதன் ஆகலின் அவனைக் 'கோவும்' என்று சிறப்பித்தார். அரசனுக்கு முன் படைகள் அணிவகுத்துச் சென்றன ; பரதன் தந்தையின் இறுதிக் கடன் இயற்றும் உரிமையோடு முன் சென்றான் ; இறுதிக்கடன் செய்விக்கும் நான்மறைவல்ல அந்தணர் குழு அவனுக்குப் பின் சென்றது ; தயரதனோடு உடன்கட்டையேறும் உரிமைவேட்கையுடைய அறுபதினாயிரம் மனைவியரும் அவ்வுடலைச் சூழ்ந்து உடன் வந்தனர் என்க. எய்தினர் என்பதற்கு எழுவாய் மானமேற்றிய அந்தணரையே கொள்க. (127)

### ஈமப்பள்ளியில் தயரதனை ஏற்றிப் பரதனைக் கடன்செய அழைத்தல்

**2318.** எய்தி நூலுளோர் மொழிந்த யாவையுஞ்
செய்து தீக்கலந் திருத்திச் செல்வனை
வெய்தி னேற்றினர் வீர நுந்தைபாற்
பொய்யின் மாக்கடன் கழித்தி போந்தென்றார்.

எய்தி, நூலுளோர் மொழிந்த யாவையும்
செய்து, தீக்கலம் திருத்திச் செல்வனை,
வெய்தின் ஏற்றினர் ; 'வீர! நுந்தைபால்
பொய் இல் மாக் கடன் கழித்தி போந்து' என்றார்.

போ :—அவ்வாறு சரயுநதியை அடைந்து நூல்வல்ல மேலோர் சொன்ன எல்லாச் சடங்குகளையும் செய்து முடித்து ஈமப்பள்ளியைத் திருத்தமாக அமைத்துத் தயரதனை விரைவாக அப்பள்ளியில் ஏற்றினராய் (பரதனைப் பார்த்து) 'வீர! நீ வந்து நின் தந்தையிடத்துச் செய்தற்குரியதாய்ப் பொய்ம்மையில்லாத சிறந்த இறுதிக்கடனைக் கழிப்பாயாக' என்று கூறினர்.

கு :—என்றார் என்பதற்கும் எழுவாய், மேற்கூறிய அந்தணரே யாவர். தீக்கலம்-தீயிடுதற்குரியதாய் விறகு அடுக்கிய ஈமப்பள்ளி. 'செல்வனை' என்றது தயரதன் உடம்பை; உடம்பும் மன்னவனின் வேறன்றி அவனாக எண்ணப்படுதலின் செல்வனை என்றார். 'உயிர் நீத்து ஒரு மகன் கிடந்தான்' என்புழிப்போல. பதினான்கு நாள் கழிந்த உடம்பாகலின் விரைந்து ஏற்றினர். தந்தையை நல்லுலகு அடைவிக்கும் கடன் ஆகலின், பொய்யில் மாக்கடன் என ஈரடையால் சிறப்பித்தார். (128)

### கடன்செய எழுந்த பரதனை வசிட்டன் தடுத்தல்

**2319.** என்னும் வேலையி லெழுந்த வீரனை
யன்னை தீமையா லரச னின்னையுந்
துன்னு துன்பத்தாற் றுறந்து போயினான்
முன்ன ரேயென முனிவன் கூறினான்.

என்னும் வேலையில், எழுந்த வீரனை,
'அன்னை தீமையால் அரசன் நின்னையும்
துன்னு துன்பத்தால், துறந்து போயினான்,
முன்னரே' என முனிவன் கூறினான்.

போ :—என்று அந்தணர் சொன்னபொழுது, எழுந்த பரதனை, (நோக்கி, 'பரத!) நின் அன்னையின் தீய செயலால் தன் மனத்து நெருங்கிய பெருந் துன்பத்தால் அரசன் நின்னையும் ('உரிமைக்கு ஆகான்' என) முன்னமே துறந்து இறந்தான்' என்று வசிட்ட முனிவன் கூறினான்.

கு :—வேலை-பொழுது. வீரன் என்றது பரதனை. அன்னை என்றது கைகேயியை. பரதன் மனம் புண்படாதவாறு வசிட்டன், 'அன்னை தீமையால் துன்னுதுன்பத்தால் நின்னையும் துறந்து போயினான்' எனப் பரதன்பால் தவறின்மை தோன்றக் கூறிய சொற்றிறன் காண்க. நின்னையும் என்ற உம்மை கைகேயியை மட்டும் அன்றி என்று பொருள் படுதலின் இறந்தது தழியது. குற்றமற்ற நின்னையும் எனப் பொருள்

கொண்டு உயர்வுசிறப்பும்மையாக்கலுமாம். "சொன்னேன் இன்றே இவளென் தாரமல்லள் துறந்தேன், மன்னே யாவான் வரும் அப்பரதன் தனையும் மகனென்று உன்னேன் முனிவா அவனென் உரிமைக்காகான் என்றான்" (1743) என முன்னர் வசிட்டமுனிவனைச் சான்றாக வைத்துத் தயரதன் கூறியுள்ளதால் இன்று அம்முனிவன் அதைக்கூற வேண்டிய கடப்பாடு உடையன் ஆனான். (129)

## பரதன் துயர்நிலை 2320—2324

**2320.** துறந்து போயினா னெனவே தோன்றனீ
பிறந்து பேரறம் பிழைத்த தென்றல்போ
லிறந்து போயினா னிருந்த தாண்டது
மறந்து வேறொரு மைந்த னாங்கொலாம்.

'துறந்து போயினன்' எனவே, 'தோன்றல் நீ
பிறந்து பேர் அறம் பிழைத்தது' என்றல் போல்,
இறந்து போயினன்; இருந்தது ஆண்டு அது
மறந்து வேறு ஒரு மைந்தன் ஆம் கொல் ஆம்!

பொ :—'நின் தந்தை நின்னைத் துறந்து போயினன்' என்று வசிட்டன் சொல்லவே, அச்சொல், பரதா! நீ பிறந்த பின் பெரிய அறமே பிழைபட்டுவிட்டது என்று சொல்வதுபோல இருந்தமையால், பரதன் இறந்தே போனான்; அங்கு இருந்தது அதை மறந்து இருந்த வேறு ஒரு மைந்தன்போலும். (என்று பிறர் எண்ணவேண்டியதாயிற்று.)

கு :—தந்தை, உரிமைக்கு ஆகான் எனத் துறந்துபோயினன் என்ற சொல் பரதனுக்கு, 'நீ பிறந்தமையால் பேரறம் பிழைத்தது' என்று சொன்னதுபோல இருந்தது என்க. மூத்தவற்கு உரித்து அரசு என்ற முறை, பரதன் காரணமாக மாற்றப்பட்டமையால், தயரதன் வெகுண்டு உரிமைக்கு ஆகான் பரதனும் எனச் சொல்லவேண்டியதாயிற்று; ஆகவே, அவ்விரண்டும் காரணகாரியத் தொடர்புடையதாதல் காண்க. இறந்தவன்போல உணர்ச்சியற்றவன் ஆனான் என்பார், 'இறந்து போயினன்' என்றார். துன்ப மிகுதியால் முகம் வேறுபட்டு வேறு ஒரு மைந்தன் போலவே பரதன் காட்சியளித்தான் என்க. (130)

இச் செய்யுளின்பின், 2, 4, 5, 12, 13, 17, 18, 24–26, 39–41, 45, 52 என்னும் எண்ணுள்ள சுவடிகளில்,

2320 (அ) என்று கொண்டுமா தவனி யம்பலும்
நின்று நின்றுதா னெடிது யிர்த்தனன்
நன்று நன்றெனு நகைமு கிழ்த்தனன்
குன்று குன்றுறக் குலவு தோளினன்.

என்று ஒரு செய்யுள் காணப்படுகிறது. அது, கதைத் தொடர்புக் கியையாமையின் மூலத்தோடு சேர்க்காமல் இங்கே பதிக்கப்பட்டது.

**2321.** இடிக்கண் வாளரா விடைவ தாமெனப்
படிக்கண் வீழ்ந்தகம் பதைக்கு நெஞ்சினன்
றடுக்க லாகலாத் துயரந் தன்னுளே
துடிக்க விம்மிநின் றழுது சொல்லுவான்.

இடிக்கண் வாள் அரா இடைவது ஆம் எனப்
படிக்கண் வீழ்ந்து அகம் பதைக்கும் நெஞ்சினன்,
தடுக்கல் ஆகலாத் துயரம் தன் உளே
துடிக்க, விம்மி நின்று அழுது சொல்லுவான்.

பொ :—இடி இடிக்கும்போது கொடிய பாம்பு அவ்வொலிக்குத் தோற்று நடுங்குவதுபோல(த் தந்தை, தன்னைத் துறந்துபோயினன் என்பதைக் கேட்டவுடன்) தரையில் வீழ்ந்து உள்ளே நடுங்கும் உள்ளம் உடைய பரதன், வெளிப்படுத்தாமல் தடுக்க இயலாத துன்பம் தன்னுள்ளே இருந்து வெளிப்படத் துடிக்கின்றமையால் விம்மி நின்று, அழுதுகொண்டு சொல்லலானன்.

கு :—இடிக்கண் என்புழிக் கண் காலப்பொருள் உணர்த்திற்று. வாள் அரா – கொடிய பாம்பு. கண்ணையே செவியாகக் கொண்டமையின் பாம்பு இடியொலிக்கு அஞ்சி நடுங்கி இறத்தலுமுண்டு. “ பாம்பு பட இடிக்கும் கடுவிசையுருமு ” (குறுந்.–158.), “ இடியேறுண்ட நாகம் போல ” (பெருங்.-2. 10 : 112.) என்பன காண்க. உள்ளத்துறு துயரம் வெளிப்படுத்தாதவழி மிகுதியாகும் ஆகலின், ‘ துயரம் தன்னுள்ளே துடிக்க ’ என்றார். (131)

**2322.** உரைசெய் மன்னர்மற் றுன்னி லென்னில்யா
ரிரவி தன்குலத் தெந்தை முந்தையோர்
பிரத பூசனைக் குரிய பேறிலே
னரசு செய்யவோ வாவ தாயினேன்.

'உரைசெய் மன்னர் மற்று உன்னில் என்னில் யார்?
இரவி தன் குலத்து எந்தை முந்தையோர்
பிரத பூசனைக்கு உரிய பேறு இலேன்,
அரசு செய்யவோ ஆவதாயினேன்?'

பொ :—'தந்தையின் பிரேத பூசனை செய்தற்குரிய பேறு இலாத யான், அரசுசெய்யமட்டுமோ உரிமையுடையவனானேன்? இதை நினைக்குமிடத்து, சூரிய குலத்தில் பிறந்த என் தந்தை முதலிய முன்னோரில் என்னைப்போலப் புகழ்தற்குரிய மன்னர் யார் இருக்கின்றார்கள்? (யாருமில்லை.)'

கு :—உரை-புகழ். உன்னில்-நினைக்குமிடத்து. பிரதம் - பிணம்; பிரேதம் என்பதன் மரூஉ. பிரேத பூசனையாகிய கருமத்தைச் செய்தோர்க்கே சொத்துரிமையுண்டு என்ற முறையும் மாறிச் சொத்துக்கு உரிமையுண்டு; கருமம் செய்ய உரிமையில்லை என்று முடிதலின் இத்தகைய முரண்களுக்குக் காரணமான என்னைப்போலச் சூரிய குலத்தில் யாருமே இதுகாறும் பிறந்திருக்கமாட்டார்கள் என்பான், இகழ்ச்சிக் குறிப்புத் தோன்ற 'உரைசெய் மன்னர்மற்று உன்னில் என்னில் யார்?' என்றான். இது புகழ்வதுபோல் இகழ்தல்; தந்தையின் பிரேத பூசனைக்கு உரிமையில்லை என்பதை நினைந்து பரதன் வருந்திக் கூறியவாறு. (132)

**2323.** பூவி னான்முகன் புதல்வ னாதியாந்
தாவின் மன்னர்தந் தரும நீதியாற்
றேவ ராயினர் சிறுவ னாகியே
யாவ நான்பிறந் தவத்த னனவா.

'பூவில் நான்முகன் புதல்வன் ஆதியாம்
தாவு இல் மன்னர், தம் தரும நீதியால்
தேவர் ஆயினர்; சிறுவன் ஆகியே,
ஆவ! நான் பிறந்து அவத்தன் ஆனவா!'

பொ :—'தாமரை மலரில் இருக்கும் பிரமன் புதல்வனாகிய காசிபன் முதலாகத் தோன்றிய குற்றம் அற்ற அரசர்கள், தம்முடைய தரும நெறி தவறாத நீதியை மேற்கொண்டு ஒழுகினமையால் தேவர்கள் ஆனார்கள்; ஐயோ! அவர்கள் குலத்துப் புதல்வனாய் நான் பிறந்து பயனற்றவன் ஆனவாறு என்னே!'

கு :—நான்முகன் புதல்வன்-காசிபன் அவன் மகன் விவசுவான் என்ற சூரியன்; அவன் மகன் வைவசுவத மனு எனச் சூரியகுலம்

காசிபனை முதலாகக் கொண்டு வருதலின், 'நான்முகன் புதல்வனுதியாம் தாவில் மன்னர்' என்முன். தேவராயினர் என்றது மனிதப் பிறப்பி லிருக்கும்போதே ஒழுக்கத்தால் தேவராக மதிக்கப்பட்டார் என்றவாறு. சூரியகுல மன்னர் யாவரும் தரும நீதியால் தேவராகவும், அவர் வழித் தோன்றலாய்ப் பிறந்த நான்மட்டும் வீணன் ஆனவாறு என்னே என இரங்கியவாறு. சிறுவன் என்றது புதல்வன் என்னும் பொருளது. 'ஆவ' இரக்கக் குறிப்புணர்த்தும் இடைச்சொல். ஆனவாறு என்பது இறுதிகுறைந்துநின்றது. அவத்தன் - பயன் அற்றவன்; வீணன். நரகன் எனப் பொருள்கொண்டு, 'மக்கள் வடிவத்திலிருந்தே தேவர் என மதிக்கப்பட்டோர் மரபில் பிறந்து மனித வடிவத்திலிருந்தே நரகன் ஆன இழிவுதான் என்னே!' எனக் கூறினும் ஆம். (133)

**2324.** துன்னு தாள்வளஞ் சுமந்த தாழையிற்
பன்னு வான்குலைப் பதடி யாயினே
னென்னை யென்னையே யீன்று காத்தவென்
னன்னை யாரெனக் கழகு செய்தவா.

'துன்னு தாள் வளம் சுமந்த தாழையில்
பன்னு வான் குலைப் பதடி ஆயினேன்
என்னை, என்னையே ஈன்று காத்த என்
அன்னையார் எனக்கு அழகு செய்தவா!'

பொ:—'நெருங்கிய வளந்தாங்கிய அடிப்பாகத்தையுடைய தென்னை யில் உள்ள சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற உயர்ந்த தேங்காய்க் குலையில் உள்ளீடு இல்லாத காய் போன்றவன் ஆகிய என்னை, என் அன்னையார் பெற்றுப் பாதுகாத்து எனக்கு அழகு செய்தவாறு எத்தகையது!'

கு:—தாழை - தென்னை. குலையில் நல்ல காய்களுக்கு இடையில் உள்ளீடற்ற காயும் இருப்பது போல், நல்ல அரசர்கள் தோன்றிய குலத் தில் பயனற்ற யானும் பிறந்தேன் என மேற்கூறியதையே உவமை முகத்தால் விளக்கியவாறு. பதடி - உள்ளீடு இல்லாதது; உள்ளீ டில்லாத தேங்காயைத் தேரை ஏறிய காய் என்பர். ஆயினேனாகிய என்னை என்க. அழகு செய்தவா என்னையே என இயையும். அன்னையார் அழகு செய்தவாறு என்றது, பிரேதபூசனைக் குரிமையில்லாதவனுகுமாறு வரத்தால் வருவித்த வஞ்சனைச் செயல்களை நினைந்து. தேங்காய் பதடியாதற்குத் தேரை என்னும் நோய் காரணமன்றி அக்காயால் குறையிலாதவாறு போலப் பரதன் பிரேதபூசைக்குரிமையில்லாதவ னுதற்குக் காரணம் தாயின் வஞ்சனைச்செயலே என்பதும் புலப்படுத்திய வாறு. (134)

சத்துருக்கனுல் இறுதிக்கடனை நிறைவேற்றுதல்

2325. என்று கூறிநின் றிடரின் மூழ்குமத்
துன்று தாரவற் கிளைய தோன்றலா
லன்று நேர்கட னமைவ தாக்கினு
னின்று நான்மறை நெறிசெய் நீர்மையான்.

என்று கூறிநின்று இடரில் மூழ்கும் அத்
துன்று தாரவற்கு இளைய தோன்றலால்
அன்று நேர் கடன் அமைவது ஆக்கினுன்,
நின்று நான்மறை நெறிசெய் நீர்மையான்.

பொ :—என்று சொல்லி நின்று துன்பக் கடலில் மூழ்குகின்ற அந்த நெருங்கிய மாலையையுடைய பரதனுக்கு இளைய தோன்றலாகிய சத்துருக்கனுல், நான்கு வேதங்களும் கூறும் நெறியிலே நின்று சடங்கினைச் செய்கின்ற தன்மையனுகிய வசிட்டன், அன்று செய்தற் குரிய கடனை அமையுமாறு செய்வித்து முடித்தான்.

கு :—நீர்மையான் என்றது வசிட்டனை. இறுதிக் கடனுக்குப் பரதனை விலக்கிய வசிட்டனே சத்துருக்கனைக் கொண்டு அன்றைக் கடனை முடித்தான் என்க. இளைய தோன்றல் - சத்துருக்கன். நான்மறை நெறி நின்று செய் நீர்மையான் என இயையும். இறுதிச் சடங்கு செய் தற்குரிய அந்தணர்க்கு வசிட்டன் தலைவன் ஆதலின் ஆக்கினுன் என அவன் வினையால் கூறினுர். (135)

இச்செய்யுளின் பின் ஒரு சுவடியில் கீழ்வரும் செய்யுள் காணப் படுகின்றது.

2325 (a) ‘அன்ன தாகவங் காறு பத்தெனச்
சொன்ன வாயிரந் தோகை மார்களும்
துன்னி வந்தனர் சோர்வி லாதவர்
மின்னு வாளெரி மீது வீழவே.’

தயரதனுடைய தேவிமார் அறுபதினுயிரவரும் தீப்புகுதல்

2326. இழையு மாரமு மிடையு மின்னிடக்
குழையு மாமலர்க் கொம்ப னுர்கடாந்
தழையின் முண்டகந் தழுவு கானிடை
நுழையு மஞ்ஞைபோ லெரியின் மூழ்கினுர்.

இழையும் ஆரமும் இடையும் மின்னிடக்
குழையும் மா மலர்க் கொம்பு அனுர்கள்தாம்,
தழை இல் முண்டகம் தழுவு கானிடை
நுழையும் மஞ்ஞைபோல், எரியில் மூழ்கினர்.

பொ :—பொன்னணிகளும் முத்தாரங்களும் இடையும் மின்னொளி வீசத் துவண்டு நடக்கின்ற பூங்கொம்பு போன்ற மன்னன் தேவிமார் அறுபதினுயிரவரும், இலையில்லாது மலர்ந்துள்ள தாமரை மலர்கள் நெருங்கியுள்ள தாமரைக் காட்டுக்கிடையில் நுழைகின்ற மயில்களைப் போல் ஈமத் தீயில் குளித்தார்கள்.

கு :—இடை மின்னல் போன்றது ஆதலின், 'இடையுமின்னிட' என்ருர். ஈம எரிக்கு உவமையாக வேண்டித் தழை இல்லாத தாமரைக் காட்டைக் கூறினர். முண்டகம் - தாமரை; பொதுவாகக் கூறியிருப் பினும் செந்தாமரையே கொள்க; நெருப்பிற்குவமையாதற்கேற்றது அதுவே ஆதலின். "நீந்தரும் புனலிடை நிவந்த தாமரை யேந்திய கோயிலி லெய்துவாளென" (6. 36: 85) "பெருந்தோட் கணவன் மாய்ந்தென அரும்பற, வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை, நள்ளிரும் பொய்கையுந் தீயுமோரற்றே" (புறநா. 246) "நளியிரும் பொய்கை யாடுநர் போல, முளியெரிப் புகூஉம் முதுகுடிப் பிறந்த, பத்தினிப் பெண்டிர்" (மணி. 18. 11-13) என்பன இங்கு ஒப்புநோக்கத்தகுவன. கணவனெடு தீயில் மூழ்குவதில் பத்தினிப் பெண்டிர்க்குள்ள மகிழ்ச்சி இதனுல் புலப்படும். 'மாதரார்க ளறுபதினுயிரருமுள்ளம் வலித்திருப்ப' (2002) என முன்னரே அவர்கள் தீப்புகத் துணிந்திருந்தமை கூறப் பட்டிருத்தல் காண்க. (136)

2327. அங்கி நீரினுங் குளிர வம்புயத்
திங்கள் வாண்முகந் திருவி ளங்குறச்
சங்கை தீர்ந்துதங் கணவர் பின்செலு
நங்கை மார்புகு முலக நண்ணினுர்.

அங்கி நீரினும் குளிர, அம்புயத்
திங்கள் வாள் முகம் திரு விளங்குறச்
சங்கை தீர்ந்து, தம் கணவர்பின் செலும்
நங்கைமார் புகும் உலகம் நண்ணினுர்.

பொ :—ஈமத்தீ தண்ணீரினும் குளிர்ச்சியுடையதாகவும், தாமரை மலர்களுக்கு இடையேயுள்ள சந்திரனைப் போல (த்தீக்கொழுந்திற்கு இடையே தோன்றும்) ஒளி பொருந்திய முகம் அழகோடு விளங்கவும்

அவ்வறுபதினுயிரரும் ஐயம் தீர்ந்து தம் கணவர்க்குப்பின் எரிபுகுகின்ற பெண்டிர் புகுதற்குரிய நல்லுலகத்தை அடைந்தார்கள்.

கு :—கணவர் உடம்பைத் தழுவிக்கொண்டு மாய்தலில் உள்ள மகிழ்ச்சியால் நெருப்பு நீரினும் தண்ணிதாயிற்று. திங்கள்போல முகம் ஒளிமிக்கன என்க. நெருப்புக் கொழுந்துக்கு இடையில் காணப்படும் முகத்திற்கு உவமையாக வேண்டி 'அம்புயத் திங்கள்' கூறினர்; தாமரை மலர்களுக்கு இடையில் தோன்றும் சந்திரன் என்பது பொருள். கணவனோடு தீப்புகுந்தால் நற்கதியடைவேமோ? அடையோமோ? என்ற ஐயம் சிறிதும் இன்றித் துணிந்து தீப்புகுவார்க்கே நற்கதியுண்டு என்பார், 'சங்கை தீர்ந்து' என்ருர். இவ்வறுபதினுயிரம் மனைவிமாரும் பிள்ளைப்பேறு இல்லாதவர்கள் ஆதலின் கணவனைப் பிரிந்து வாழ விரும்பாமைக்கு மேலும் நற்கதியடைதற்கு விரும்பித் தீப்புக்கனர் என்க. கோசலை முதலிய கோப்பெருந்தேவியர் மக்களையுடையராதலின் அவர்பொருட்டுக் கணவனைப் பிரிந்தும் உயிர்வாழ்ந்தனர் என்று கொள்ளலாம். (137)

### ஈமக்கடன் முடித்த பரதன் மனையை அடைதல்

2328. அனைய செய்கையா லரசர் கோமகற்
கினைய தன்மையா லியைவ செய்துபின்
மனையி னெய்தினுன் மரபின் வாழ்வினை
வினையி னெய்துமோர் பிணியின் வெஃகலான்.

அனைய செய்கையால், அரசர் கோமகற்கு
இனைய தன்மையால் இயைவ செய்து, பின்,
மனையின் எய்தினுன்—மரபின் வாழ்வினை
வினையின் எய்தும் ஓர் பிணியின் வெஃகலான்.

பொ :—தன் அரச மரபின்படி மேற்கொள்ளும் அரச வாழ்வினைத் தீவினையால் வந்த பெரும் பிணியை விரும்பாதவாறுபோல விரும்பாத பரதன், அந்தச் செய்கையோடு மன்னர்மன்னனுகிய தயரதனுக்கு இந்தத் தன்மையால் பொருந்துவனவற்றை யெல்லாம் சத்துருக்கனைக் கொண்டு செய்துமுடித்துப் பின் மனையை அடைந்தான்.

கு :—செய்கையால் என்புழி ஆல் உடனிகழ்ச்சியில் வந்தது. அனைய செய்கை யென்றது ஈமத்தீப்புகுந்த செய்கையை. பெரும் பிணியை வெறுப்பது போல அரசர் பதவியை வெறுத்தான் பரதன். (138)

### பரதன் இறுதிக்கடனை முடித்தல்

2329. ஐந்து மைந்துநா ளூழி யாமென
மைந்தன் வெந்துயர்க் கடலின் வைகினன்
றந்தை தன்வயிற் றருமம் யாவையு
முந்து நூலுளோர் முறையின் முற்றினன்.

ஐந்தும் ஐந்தும் நாள் ஊழி ஆம் என,
மைந்தன், வெம் துயர்க் கடலின் வைகினன்;
தந்தைதன்வயின் தருமம் யாவையும்
முந்து நூலுளோர் முறையின் முற்றினன்.

பொ :—ஈமச்சடங்குக்குப்பின் கழிய வேண்டிய பத்து நாளும் பத்து ஊழிக்காலம்போல் அரிதிற் கழியப் பரதன் கொடிய துன்பக் கடலில் தங்கி யிருந்தான்; பத்தாம் நாள் தந்தையின் திறத்துச் செய்ய வேண்டிய சடங்குகள் எல்லாவற்றையும் முற்பட்ட அறநூலோர் கூறிய முறையில் செய்து முடித்தான்.

கு :—இராமனைப் பிரிந்திருக்கும் துன்பம் மிகுதியால் பத்துநாள் கழிப்பது பத்து ஊழிக்காலத்தைக் கடப்பது போலிருந்தது என்க. மைந்தன்-பரதன். முற்றினன் என்றது சத்துருக்கனைக் கொண்டு செய்து முடித்ததை. (139)

### வசிட்டன் பரதனை அடைதல்

2330. முற்று முற்றுவித் துதவி மும்மைநூற்
சுற்றம் யாவையுந் தொடரத் தோன்றினன்
வெற்றி மாதவன் வினைமு டித்தவக்
கொற்ற வேனெடுங் குமரற் கூடினன்.

முற்றும் முற்றுவித்து உதவி, மும்மை நூல்
சுற்றம் யாவையும் தொடரத் தோன்றினன்;
வெற்றி மாதவன், வினை முடித்த அக்
கொற்ற வேல் நெடுங் குமரற் கூடினன்.

பொ :—எல்லாச் சடங்குகளையும் உடனிருந்து உதவி முற்றுப்பெறச் செய்துவிட்டு, முந்நூல் அணிந்த அந்தணர் சுற்றம் யாவும் பின் தொடர்ந்துவரப் புறப்பட்ட வெற்றியையுடைய பெருந்தவ முனிவனாகிய வசிட்டன், தந்தையின் கருமத்தைத் தம்பியைக்கொண்டு செய்து முடித்த அந்த வெற்றிநெடுவேலையுடைய பரதனை அடைந்தான்.

கு :—உதவி முற்றுவித்து என்க. மும்மை - மூன்று. நூல், வேதமும் ஆம்; இருக்கு, யசுர், சாமம் என்ற மூன்று வேதங்களே பழையனவாதலின், அவற்றை வல்லோர் திரிவேதிகள் எனப்படுதலும் உண்டு. தோன்றினன் ஆகிய மாதவன் என இருபெயரொட்டு ஆக்குக. விசுவாமித்திரனைத் தவவலியால் வென்றவன் ஆகலின் வசிட்டன், 'வெற்றி மாதவன்' எனப்பட்டான். வினை - கருமம் கொற்ற நெடுவேல் என்க. சத்துருக்கனினும் பரதன் நெடியவன் ஆனமை நினைந்து 'நெடுங் குமரன்' என்றார் எனலுமாம். கருமத்தை முடித்துவிட்டு மேல் செய்வது யாதெனச் சிந்தித்திருந்த பரதனை வசிட்ட முனிவன் அடைந்தான் என்க. (140)

### மந்திரிமார் நகரப் பெருமக்களோடு பரதனை அடைதல்

**2331.** மன்ன ரின்றியே வையம் வைகருந்
றொன்மை யன்றெனத் துணியு நெஞ்சின
ரன்ன மாநிலத் தறிஞர் தம்மொடு
முன்னை மந்திரக் கிழவர் முந்தினர்.

'மன்னர் இன்றியே வையம் வைகல்தான்
தொன்மை அன்று' எனத் துணியும் நெஞ்சினர்,
அன்ன மாநிலத்து அறிஞர்தம்மொடும்,
முன்னை மந்திரக்கிழவர் முந்தினர்.

பொ :—பழைய மந்திரிமார்கள், மன்னர் இல்லாமல் நாடு இருப்பது மரபன்று என்று தெளிந்த மனமுடையவராய், அந்த நாட்டில் உள்ள அறிஞர்களோடும் பரதனிடம் செல்ல முற்பட்டனர்.

கு :—தொன்மை - மரபு. துணிதல் - தெளிதல். துணியும் நெஞ்சினர் எனவே தம் கருத்தை முடிக்கவே முற்பட்டனர் என்பது கருத்து. கிழவர் நெஞ்சினராய் முந்தினர் என்க. தயரதனுடைய அமைச்சரே என்பார், 'முன்னை மந்திரக் கிழவர்' என்றார். (141)

### பள்ளி படைப் படலம் முற்றிற்று.

---

# 10. ஆறு செல் படலம்

பரதன், இராமபிரானை அழைத்துவர வழிச்சென்ற நிகழ்ச்சியைக் கூறுதலின் இப்படலம் ஆறுசெல்படலம் எனப் பெயர் பெறுகின்றது. ஆறு – வழி. ஆற்றுப்படலம் எனச் சில சுவடிகளிலும், பரதன் எழுச்சிப் படலம் எனச் சில சுவடிகளிலும், கங்கையாற்றுப்படலம் என ஒரு சுவடியிலும் இப்படலத்திற்குப் பெயர் காணப்படுகின்றது. இப்படலம்முதல் இக்காண்ட முடிவுவரையில் உள்ள பகுதிக்கு ஆறு சென்று அடி தொழுத படலம் என ஒரு சுவடியில் பெயர் வரையப்பட்டுளது.

## படலக் கதைச் சுருக்கம்

'பரதனுக்கு அருகில் வசிட்டனும் உளன்' என்று வந்து சேர்ந்த மந்திரிமார் முதலியோர் பரதனை வணங்கிவிட்டுச் சுற்றிலும் அமர் கின்றனர். சுமந்திரன், வசிட்டன் முகத்தைத் தன் குறிப்புத் தோன்ற நோக்குகின்றான். அவன் நோக்கிய குறிப்புணர்ந்த வசிட்டன், பரதனை நோக்கி, 'உலகு காக்குதி; இது உனக்குக் கடன்; அரசின்றி எவ்வுலக மும் எவ்வுயிரும் இருப்பது மரபன்று; அறம் அரசனால்தான் நிலைபெற வேண்டும். மன்னர்க்கு மன்னனாய நின் தந்தை இறந்தான்; அவனுக் குப் பின் நாடுகாத்தற்குரிய நின் தமையனும் காடு புக்கான்; வரத்தினால் பெற்ற அரசை நீ காப்பாயாக; இதுவே எங்கள் கருத்து' என்று கூறுகின்றான். அது கேட்ட பரதன், நஞ்சுண்டவன்போல நடுங்கி மூச்சற்று விழுந்து பின் தெளிந்து, 'எனக்கு முன் தோன்றிய என் அண்ணன் இருக்க யான் முடிசூடுதல் தருமமே எனச் சான்றோர் சொல்லலானபோது என் தாயின் செயலில் குற்றம் ஏது? இது கலி காலமோ? மூத்தவன் இருக்க இளையவன் அரசு செய்தல் எப்பொழு தேனும் எங்கேனும் நிகழ்ந்திருப்பின் காட்டுக; யான் அரசாள்வது நன்னெறியே என நீவிர் நிறுவினாலும் யான், அரசனாய் வாழேன்; இராமனை அழைத்துவந்து முடிசூட்டுவதைக் காண்பீர்களாக. ஒருகால் அவன் வர மறுத்தால் யானும் காட்டில் தங்கித் தவஞ்செய்வேன்; நீவிர் வேறு கூறின் உயிர் துறப்பேன்' என்று கூறுகின்றான். அதுகேட்ட அவையோர் பரதன் பண்பினை வியந்து பாராட்டுகின்றனர். பரதன் சத்துருக்கனை அழைத்து, 'இராமனை மீட்டுவரக் காடு செல்வதுபற்றி முரசறைந்து கூறிப் படையையும் விரைவில் எழுவதாக எனப் பணிக்க' என்றானாக, சத்துருக்கனும் அவ்வாறே செய்ய, நகர மக்கள் அனைவரும் மனக்கிளர்ச்சியோடு புறப்படுகின்றனர்.

தாயரும், தவத்தினரும், அரசரும், அந்தணரும் உடன்வரப் பரதன் மரவுரிதரித்துப் புறப்பட்டு மதில்வாயிலைக் கடந்து செல்கின்றான்.

அப்பொழுது கூனியும் வழிச் செல்வாரோடு உந்திச் செல்வதைச் சத்துருக்கன் கண்டு வெகுண்டு எற்ற எண்ணி அவள் கையைப் பற்றுகின்ருன். அவன் செயல் கண்ட பரதன் தடுத்து, ‘முன்னையர் முறை கெடச் செய்த பாவியாகிய என் அன்னையைச் சின்னபின்னம் செய்திருப்பேன்; அண்ணன் முனியும் என்று எண்ணியே அங்ஙனம் செய்யாது விடுத்தேன்; இக்கூனியை வெகுண்டோமாயினும் அண்ணன் முனிவான் என்று எண்ணி இவளை விடுத்துப்போவோம்’ என்று அமைதி கூறி அழைத்துச் செல்கின்ருன். முன் இராமன் தங்கிய சோலையில் பரதனும் தங்குகின்ருன். இராமன் படுத்திருந்த புல்லணையின் பக்கத்தில் புழுதியில் படுத்துக்கொள்கின்ருன். அங்கிருந்து இராமன் காலால் நடந்து சென்றமையறிந்து பரதனும் தேரில் செல்லாது நடந்தே செல்கின்ருன் என்பது இப்படலத்தில் கூறப்படுகின்றது.

## கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. சத்துருக்கன் கூனியைக் கொல்ல முயன்றபோது பரதன தடுத்தது.

தந்தையின் இறுதிக் கடனை முடித்த பரதன், தன் குல முறைமைக்கு இழுக்கு வந்ததையும், தன் தமையனுகிய இராமன் காடு புக நேர்ந்ததையும் நினைந்து துன்பத்தால் துடித்துக்கொண்டிருந்தபோது, சத்துருக்கன் அருகிருந்து, ‘இராமன், ஒரு பெண்ணின் கொடுமையால் வனம் புகலாமா? இப்பெண்ணின் எண்ணத்தைத் தன் திறமையால் வென்றிருத்தல் கூடாதா? அல்லது ஆற்றல் மிக்க இலக்குவனேனும் தந்தையைக் கண்டித்துப் பேசி இராமனைக் காடு புகாமல் செய்திருக்கலாமே; இவ்வாறு செய்யாமல் ஏனே அவ்விருவரும் காடு புகுந்தனர்?’ என்று சொல்லிக்கொண்டிருக்கின்ருன். அப்பொழுது கூனி அரசிக்கு ஏற்ற உடைகளையும், அணிகலன்களையும் அழகுற அணிந்துகொண்டு சந்தனக் குழம்பைப் பூசிக்கொண்டு ஒரு பெண் குரங்குபோல் வாயிலில் தோழியருடன் நின்றுகொண்டிருக்கின்ருள்; அது கண்ட வாயிற் காவலன் ஒருவன், அவளைப் பிடித்து இழுத்துக்கொண்டுவந்து சத்துருக்கனுக்குக் காட்டி, ‘இராமபிரான் வனம் புக்கதும், நும் தந்தையார் வானம் புக்கதும் இவளாலேயே; இவளுக்கு அறிவுவருமாறு செய்யுங்கள்’ என்று சொன்னுன். அச்செய்தி அறிந்த சத்துருக்கன் மிக்க கோபங்கொண்டு அவள் கையைப்பற்றி வேகமாக இழுத்து, ‘இவள் பாவச் செயலுக்கேற்ற பயனை இன்றே அடைவாளாக’ என்று கூறிக்கொண்டு அவளைக் கீழே தள்ளினுன். தோழிகளுடன் இருந்த கூனி அம்மாளிகையில் எதிரொலி உண்டாகுமாறு கூவினுள். சத்துருக்கனுடைய கோபத்தைக் கண்ட தோழியர் எல்லாம் அஞ்சி, ‘நம்மை இவர் விடாது தண்டித்திடுவார்; அருள் உள்ளமுடைய கோசலையே இனி

நமக்குச் சரண்; அவனை அடைக்கலம் புகுவோம்' என்று கூறிக் கொண்டே நாலு பக்கங்களிலும் ஓடினர். வெகுளியால் சிவந்த கண் களையுடைய சத்துருக்கன், அஞ்சி அலறுகின்றவளாய்த் தரையிற் கிடந்த கூனியைப்பற்றி இழுத்தான். அப்பொழுது அவள் அணிந்துகொண் டிருந்த அணிகலன்கள் எல்லாம் தரையில் சிதறின. அவ்வணிகலன்கள் சிதறிய தரை, நட்சத்திரங்கள் ஒளி வீசும் ஆகாயம்போலக் காட்சி அளித்தது. கூனியின் கூக்குரல் கேட்டுவந்த கைகேயி அவள் அருகில் இருந்தும், அக்கூனியைத் தொலைவில் கொண்டுசெல்லச் சத்துருக்கன் இழுத்துக்கொண்டே இகழ்ந்து கூறிய வன்சொற்களைக் கேட்டு மனம் நொந்து அவனிடத்தில் கொண்ட அச்சத்தால் உடல் நடுங்கிப் பரத னிடம் அடைக்கலம் புகுந்தாள்.

பரதன், சினங்கொண்ட சத்துருக்கனைக் கண்டு, ' எல்லா உயிர்க ளுள்ளும் பெண்டிர் துன்புறுத்தத் தகாதவர்கள்; ஆதலால், இக்கூனியை மன்னித்துவிடுக. அருள்மனமுடைய இராமபிரான் என்னை ' அன்னை யைக் கொன்றவன் ' என்று வெகுளானெனின் தீய ஒழுக்கமுடைய இப்பாவியாகிய கைகேயியை நான் முன்னரே கொன்றிருப்பேன். அறத்தின் உருவாகிய இராமபிரான், நீ கூனியைத் துன்புறுத்தியதை அறிந்தால் இனி எக்காலத்திலும் உன்னையும் என்னையும் வெகுள்வ தோடு, முகம்பார்த்தும் பேசான்' என்றுரைக்கச் சத்துருக்கன் தன் தமையன் சொல்லைத் தலைமேற்கொண்டு சினம் தவிர்ந்து அக்கூனியை விடுத் தான். கூனியும் தன்னைக் காப்பாற்றிய கைகேயியின் காலில் விழுந்து கதறி அழுதாள். சத்துருக்கன் மேலும் என்ன செய்வானோ என்ற அச்சத்தோடு கைகேயி தன் காலில் விழுந்து அழுகின்ற கூனியைப் பார்த்து மெல்லப் பேசித் தேற்றினாள்: என வான்மீகத்தில் விரிவாகக் காணப்படுகின்றது.

கம்பர், இந்நிகழ்ச்சியை மிகச் சுருக்கியதோடு காடு செல்லுங்கால் வழியில் நிகழ்ந்ததாகவும் மாற்றி அமைத்துள்ளார். இராமன் கான் புகு தற்குக் காரணமாய்க் கலகம் செய்த அக்கூனியே அவ்விராமனைக் காட்டி லிருந்து அழைத்து வரவும், உடன் வருகின்ற வஞ்சகச் செயலைச் செய்வ தாகக் காட்டிச் சத்துருக்கனின் வெகுளி மிகுதற்கு வழி வகுக்கவும், முன் இராமனுடைய இளமை நிகழ்ச்சியை மனத்திற்கொண்டிருந்து கலக மூட்டிய கூனியும் அப்பகையை நீங்கி அவ்விராமனை அழைக்க உடன் வந்தாள் என்று காட்டவும் இந்நிகழ்ச்சியைக் கம்பர் இவ்வாறு இடமாற்றி அமைத்தார் போலும்.

2. பரதன், தன் தமையனை அழைத்துவரச் செல்லுங்கால் படைகள் செல்வதற்காக வழி அமைப்போரை முன்னரே அனுப்பப் பூமியின் அமைப்பினை அறிந்தவர்களும், பூமியை வெட்டுபவர்களும், கிணறு வெட்டுபவர்களும், தச்சரும், கட்டடம் கட்டுபவர்களும், இயந்திரம் பூட்டு

பவர்களும் மூங்கில்வேலை செய்பவர்களும், மரம் அறுப்போர்களும் ஆகிய வேலைக்காரர்கள் முன்னமே கருவிகளுடன் சென்று, மரங்களையும், செடிகளையும், வேர்களையும், தூர்களையும் வெட்டி நீக்கியும், கற்களை அப்புறப்படுத்தியும், மரங்கள் இல்லாத இடங்களில் மரங்களை வைத்தும், பள்ளங்களை மணல்கொண்டு நிரப்பியும், மேடுகளைத் தகர்த்தும், பெரிய நீர்நிலைகளைக் கால்வாய்களாகப் பிரித்தும், நீர் இல்லாத இடங்களில் நடைவாவிகள் வெட்டியும், வழியைத் திருத்தி அழகுபடுத்தினர்கள். அவ்வழி முழுமையிலும் பனிநீரையும் மலர்களையும் தெளித்து நடத்தற்கு இனிதாகச் செய்தார்கள். அயோத்தியிலிருந்து கங்கைக்கரை வரையிலும் அவர்கள் அமைத்த வழி, சிறந்த நகரத் தெருப்போல அழகுடையதாய்ப் படைகள் நடத்தற்கினிதாய் அமைந்தது' என ஒரு சருக்கத்தால் வான்மீகி விரிவாகக் கூறிய வழியமைப்பையெல்லாம் கம்பர்,

பெருந்திரை நதிகளும் வயலும் பெட்புறு
மரங்களும் மலைகளும் மண்ணும் கண்ணுறத்
திருந்தலில் அயோத்தியாந் தெய்வ மாநகர்
அருந்தெரு வொத்தது அப்படைசெல் ஆறரோ. (2377)

என்ற பாடலில், 'திருந்தலில்' என்ற ஒரு சொல்லால் வழியைத் திருத்துவோர் பலரால் அவ்வழி பல்வகையிலும் திருந்தியது என்பதை உய்த்துணர்ந்துகொள்ளுமாறு சுருங்கக் கூறியுள்ளார். வான்மீகி வழியின் அமைப்பை விரித்துக் கூறக் கம்பர், அவ்வழியில் செல்வோரின் துன்ப உணர்ச்சிகளையும், அத்துன்ப உணர்ச்சியால் அவர்கள் அணிகலன் முதலியன அணியாமையையும் விரித்துக்கூறி, அம்மக்களின் பண்புகளை உயர்த்தியுள்ளார் என்பதை உளங்கொளல்வேண்டும். காவியப் போக்கிற்கு வழியின் அமைப்பைப்பற்றிக் கூறுவதைக் காட்டிலும் நாட்டு மக்களின் அன்புணர்ச்சியைப் புலப்படுத்தல் அழகு தருவதாகவும் பின் வரும் மக்களின் பண்பு வளர்ச்சிக்குக் காரணமானதாகவும் விளங்குதல் காணலாம். முதல் நூலில் விரித்துக் கூறியதைச் சுருக்குதலும், சுருங்கக் கூறியதை விரித்தலும் வழி நூலுக்கு இலக்கணமாதலும் இங்கு நினைதல்வேண்டும்.

3. பரதன், அயோத்தியிலிருந்து படைகளோடு புறப்பட்டுச் சென்று கங்கைக் கரையில் முதலில் தங்கியதாகவும், அவன் தங்குவதற்காக வழியமைப்போரால் அலங்காரமிக்க உறையுள் செய்யப்பட்டிருந்ததாகவும், அழகு மிக்க அவ்விடத்தில் பரதன் தங்கியிருந்ததாகவும் வான்மீகம் கூறுகின்றது.

கம்பர், அயோத்தியிலிருந்து புறப்பட்ட பரதன், கங்கைக் கரையை அடைவதற்கு முன்னமே இடையில் பிறிதோரிடத்தில் தங்கியதாகக் கூறுகின்றர். அவ்விடம் இராமன் வனம் புக்கபோது தங்கிய இடம்

என்றும், அங்கு இராமன் படுத்த புல்லணையின் பக்கத்தில் புழுதியில் பரதன் படுத்திருந்தான் என்றும், அங்கு நின்று இராமன் காலால் நடந்து சென்றமையறிந்து பரதன் தன் ஊர்திகள் பல உடன் வரவும் அவற்றில் ஊர்ந்து செல்லாமல் காலால் நடந்து சென்றான் என்றும் கூறிப் பரதனுடைய இராம பத்தியைச் சிறப்பித்துக் காட்டுகின்றார். வான்மீகத்தில் காணப்படாத இக்கம்பரின் படைப்பு பரதனுடைய பெருமையை மிகுத்துக் காட்டிப், படிப்பவரின் மனத்தை உருக்கித் திருத்துவதாகவும், காவியத்தின் அழகையும் நோக்கத்தையும் புலப்படுத்துவதாகவும், அமைந்துள்ளமை காணலாம்.

## படலப் பொருட் சிறப்பு

### உரையாடல்

'வசிட்டமுனிவனும் அமைச்சரும் நகரப் பெருமக்களும் வந்து பரதனை முடிசூட்டிக்கொள்ளுமாறு வற்புறுத்த, அவன் உடன்படாது, இராமனை அழைத்துவந்து அவனுக்கு முடிசூட்டலே முறை என்பதை அறிவித்து நகர மக்களும் படைகளும் உடன்வரக் காடு நோக்கி நடந்து கங்கைக் கரையை அடைந்தான்' என்ற சுருங்கிய நிகழ்ச்சியைக் கம்பர் தம் புலமையுள்ளத்தால் ஐம்பத்தொன்பது செய்யுட்களால் விரித்துரைத்திருக்கின்றார்.

தந்தை மரணமுற்றதும், தமையன் காடு நண்ணியதும் தன் காரணத்தால் நிகழ்ந்ததாக நினைந்து வருந்திக்கொண்டிருக்கும் பரதனை முடிசூட்டிக்கொள்ளுமாறு வசிட்டன் கூறும்போது, துன்பமிக்க அவன் மனநிலை அறிந்து அடிப்படையமைத்துக்கொண்டு பல சொல்லி முடிவில் தன் கருத்து வெளியிடுவது அவ்வசிட்டனுடைய நுண்ணிய அறிவையும் சொல்லும் திறனையும் புலப்படுத்துவதாக அமைந்திருக்கின்றது. 'உன் தந்தையோ இறந்தான்; உன் தமையனோ காடு புக்கான்; உன் தாயின் வரத்தால் வந்த பேரரசை நீயேற்று நடத்துக; எங்கள் கருத்து அதுவேயாகும்' என்று வசிட்டன் கூறும் கருத்துச் செறிவுமிகவுடையதாகும்.

'நின் தந்தை நினக்கு அரசு தருவதாகக் கூறி இறந்துவிட்டமையாலும் நின் தமையனும் தந்தையின் கருத்துப்படி நீ அரசு ஏற்பாய் என்று கருதிக் காடு புகுந்தமையாலும், நின் தாய் விரும்பிக் கேட்ட வரத்தால் இப்பேரரசு நினக்கு வந்துள்ளமையாலும், நின் தந்தை, தமையன், தாய் ஆகிய மூவரும் நீ அரசாளவேண்டும் என்ற கருத்தினராதல் தெளிவு. நின் குல குருவாகிய எனக்கும், சுமந்திரன் முதலிய அமைச்சர்கட்கும், நகரப் பெருமக்கட்கும் இதுவே கருத்தாகும்; எனவே எல்லோருடைய கருத்தும் நீ முடி சூட்டிக்கொள்ளவேண்டும் என்பதில் ஒன்றியிருக்கின்றமை உணரலாம். ஆதலால் முடிவில்லாத கோசல நாட்டுப் பேரரசை நீ ஏற்றுக்கொள்வதே தருமம்' என்ற கருத்தெல்லாம்

அவன் சொல்லில் பொதிந்துகிடப்பன காணலாம். தயரதன் மரணத்தாலும், இராமன் காடு புகுந்ததாலும் அரசன் இன்றி நாடு கலங்கும் நிலையைக் கருத்தில்கொண்டு காண்போமாயின், வசிட்டன் சொல்லின் பொருத்தமும் திருத்தமும் புலனும்.

ஆயின், பரதனுக்கு வசிட்டன் கூறிய அக்கூற்று வருத்தந்தரும் கூற்ருகவே காணப்படுகின்றது. விண்ணுடு புக்க தந்தையை மீட்டழைக்க இயலாததுபோலக் காடுபுக்க இராமனை மீட்டும் அழைத்து வரல் இயலாததன்று. 'மூத்தவற்குரித்து அரசு என்ற முறைக்கு இழுக்கு வராதவாறு இராமனை அழைத்துவந்து முடிசூட்டுக' என்று வசிட்டன் முதலிய சான்ருேர்கள் சொல்லுவார்கள் என்று பரதன் எதிர்பார்த்திருந்தான். ஒரு குடிப்பிறந்த பல்லோருள்ளும் மூத்தவர்க்குரித்து அரசு என்ற முறையை மீறுதல் பெருங்குற்றம் என்பது அவன் முடிந்த முடிபாகும். இம்முடிவைக் கைகேயியும் கூனியை நோக்கி,

'மயின்மு றைக்குலத் துரிமையை மனுமுதன் மரபைச்
செயிரு றப்புலைச் சிந்தையா லென்சொனுய் தீயோய்' (1559)

எனவும்,

'நிறந்திறம்பினும் நியாயமே திறம்பினும் நெறியின்
திறந்திறம்பினும் செய்தவந் திற ்பினும் செயிர்தீர்
மறந்திறம்பினும் வரன்முறை திறம்புதல் வழக்கோ' (1561)

எனவும்,

'நீதியல்லவும் நெறிமுறை யல்லவும் நினைந்தா யாதி' (1562)

எனவும், வெகுண்டும், கடிந்தும் கூறியதும், 'எம்பி பரதனே துங்கமா முடி சூடுகின்ருன்' (1697)என இராமன் சொல்லக் கேட்ட கோசலையும், 'முறைமை யன்றென்ப தொன்றுண்டு' (1698) என்று கூறியதும் இங்கு நினைக்கத்தகும். இவ்வாறு பெண்டிரும் முறைமையன்று என்பதை உணர்ந்து கூறியிருக்க, மறை முழுதுணர்ந்த வசிட்டன் முதலிய சான்ருேர்கள் அந்நெறியை நினையாது, 'காக்குதி யுலகு நின் கடன்' (2335) எனவும், 'அந்தமில் பேரரசு அளித்தி' (2342) எனவும் கூறித் தன்னை வற்புறுத்தியது பரதனுக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை; அவர் கூற்று அளவிலா வருத்தத்தை உண்டாக்கியது. மூத்தவன் இருக்கவும் அரசு தன் மகனுக்கு வரவேண்டும் என ஈன்றதாய் எண்ணியதையேனும் பெண்மையுள்ளத்தால்—தாயன்பினல் நிகழ்ந்ததென அமைதிகூற வழியுண்டு; கற்றுத் தெளிந்த சான்ருேர் அது கூறின் என்செய்வது? எனப் பரதன் எண்ணுகின்ருன்.

மூன்றுல கினுக்குமோர் முதல்வனுய் முதல்
தோன்றின னிருக்கயான் மகுடஞ் சூடுதல்
சான்றவர் உரைசெயத் தரும மாயதேல்,
ஈன்றவள் செய்கையி னிழுக்குண் டாகுமோ! (2345)

அடைவருங் கொடுமையென் அன்னை செய்கையை
நடைவருந் தன்மைநீர் நன்றிது என்றிரேல்
இடைவருங் காலமீண் டிரண்டு நீத்திது
கடைவருந் தீநெறிக் கலியி னாட்சியோ? (2346)

என நயமாக நாகரிகமாகப் பழிகரப்பு அங்கதமாகக் கூறுகின்றான். வெளிப்படையாக இகழும் இகழ்ச்சியினும் குறிப்பால் இகழும் இப்பரதன் கூற்று அவர்கட்கு வேதனையை விளைத்திருக்கும். தவறான செயலைச் சான்றவர் தருமம் என்று கூறுவாராயின், என்னைப் பெற்றவள் செயலில் இழுக்கேதும் இல்லை என்பது பட முன்னர்க் கூறிப் பின் அவள் செய்கை அடைவருங்கொடுமையுடையது என்பதை விளக்கி அச்செயலை ஒழுக்கமிக்க நீவிர் நன்று என்பீராயின், இக்காலம் கலிகாலமோ? எனக் காலத்தின்மேல் பழியை ஏற்றி அவர்களைக் குறிப்பால் இகழ்வது சுவை நலமுடைய பழித்துரையாக விளங்குதல் காணலாம். இக்கூற்றினால் பரதன் மனவுறுதியையும், பண்டை முறைமையிலுள்ள பற்றினையும், இராமன் மேலுள்ள அயரா அன்பினையும், சொல்லும் திறனையும் நன்குணரலாம்.

உவமை

துன்பத்தால் உயிரற்றவர்போல் இருந்த நகர மக்கள், ‘இராமனை அழைத்து வந்து முடிசூட்டுவோம்’ எனச் சத்துருக்கன் சொல்லக் கேட்டவுடன் மகிழ்ந்து ஆரவாரிக்கும் தன்மைக்கு, ‘உயிரில் யாக்கையைச் சொல்லெனும் அமிழ்தினால் துளித்த தென்னவே’ (2353) என உவமை கூறியது மிகப் பொருத்தமாக—சிறப்பாகவுள்ளது. உயிர் நீங்கிய உடம்பு அமிழ்தினால் உயிர்பெற்று எழுவதும் உண்டு; மந்திரச் சொல்லாகிய அமிழ்தத்தால் உயிர்பெற்று எழுவதும் உண்டு. இவ்விரு திறனும் புலப்பட இவ்வுவமை அமைந்து அழகு செய்கின்றது

படைகள் வழிநடக்கும்போது, முரசு முதலிய வாச்சியங்கள் ஒலி செய்யாது செல்கின்றன; துன்ப உணர்ச்சி தோன்ற அவை அவ்வாறு ஒலியின்றிச் செல்கின்றமைக்கு ‘பூரியர் குழாத்திடை அறிஞர்போலவே’ (2364) என உவமை கூறியுள்ளார். கீழ்மக்கள் நிறைந்துள்ள இடத்தில் தம் தூய சிறப்புடைய சொற்கள் அங்கணத்துக்க அமிழ்துபோல் பயனற்றவாய்ப் போகலாகாது என்று அறிஞர்கள் ஒன்றும் பேசாது வாய் வாளாமை மேற்கொள்வார்கள்; அவர்கள் போலவே துன்ப உணர்ச்சியுடன் செல்லும் படையிலுள்ள வாச்சியங்களும் ஒலியின்றிச் சென்றன என்பது நயமிக்க உவமையாய்—வருங்கால அறிஞர்க்கும் கூறிய அறிவுரையாய் அமைந்திருத்தல் காணலாம்.

சுவைநலம்

பரதன் படையுடன் சென்ற மகளிர், இராமனைப் பிரிந்த துன்பத்தால் அணிகலன்களை அணியாதுசென்ற நிலையைக் கூறியிருப்பது, இளங்கோ

வடிகள் கோவலனைப் பிரிந்த கண்ணகி நிலையை விளக்கும் பகுதியை நினைவூட்டித் துன்பச் சுவையைத் தோற்றுவிக்கின்றது. துன்பச் சுவையை விரித்துக் கூறிச் செல்லும் இப்படலத்தில் நினைக்குந்தோறும் நகத்தக்கவாறு நகைச்சுவை அமைத்துக் கைகேயியை இகழும் குறிப்பை மிக நுட்பமாகத் தோற்றுவித்துள்ளமை, கம்பரின் புலமையுள்ளத்தின் நுட்பத்தை அறிவிக்கின்றது. மகளிர், தலையில் மலர்க்கண்ணி சூடாமலும், மார்பில் முத்துமாலை முதலியன அணியாமலும் வனம் நோக்கிப் போகின்றார்கள் ; அணியாமையால் அவர்கள் இடைகட்குப் பாரம் குறைகின்றது ; அவர்களின் இடைகள் அணிகலன்களால் நெரியாமல் பாரம் குறைய உதவிசெய்தது எது ? எனின் கைகேயியின் வரமாகிய சொல்லேயாகும் ; எனவே கைகேயியின் வாசகம் நன்மை நல்கியது பெண்டிர் இடைக்குத்தான்போலும் என அவளைப் புகழ்வார்போல இகழ்கின்றார்.

மல்கிய கேகயன் மடந்தை வாசகம்
நல்கியது அரிவையர் நடுவிற்கே கொலாம்
புல்கிய மலர்வடம் பூண்கி லாமையால்
ஒல்கிய ஒருவகை பொறையு யிர்த்தவே. (2372)

என்பது காண்க. அவள் வாசகம் நல்கியது அரிவையர் நடுவிற்கே கொலாம் என்றதால், மற்றை யார்க்கும் அவள் வாசகம் எந்த நன்மையையும் நல்கவில்லை என்பதும் புலப்படுதல் காணலாம். யார்க்காக அரசை வரத்தால் வாங்கினளோ அப்பரதனே அதை ஏற்க மறுத்தமையால், அவள் வரத்தால் யாதும் பயனின்மை அறியலாம். கைகேயியின் சொல், மகளிர் அணிகளைக் களைந்து செல்லச்செய்து அவர்கள் இடைகட்குப் பாரமில்லாமல் உதவி செய்தது என்ற இக்கருத்துச், சிலப்பதிகாரத்தில் கனக விசயர் தலைமேல் கண்ணகி வடிவமைக்கக் கல் கொண்டு வரும் சேரன்செங்குட்டுவனிடம் மாடல மறையோன், 'மாதவியின் கானற்பாணி கனக விசயர்தம் முடித்தலை நெரித்தது' என்று கூறிய நகைத் திறத்தை நினைப்பிக்கின்றமை காணலாம்.

இராமனைக் காணச்செல்லும் மைந்தரும் மகளிரும் காமநுகர்ச்சிக்கு உரிய இளமையும் வனப்பும் உடையவராயிருந்தும் அவ்வுணர்ச்சியை மறந்து தவத்தினர்போலச் செல்லும் தன்மையைப் பல செய்யுள்களால் பல வகையாக விளக்கியிருக்கின்றார் ; பரம்பொருளைப் பார்க்க விரும்புவோர் மாரனை வென்ற வீரராக மாறிவிடுவார்கள் என்ற உண்மையையும் இந்நிகழ்ச்சி ஒருவாறு குறிப்பிடுவதாகக்கொள்ள இடமுண்டு.

---

# 10. ஆறு செல் படலம்

## மந்திரிமார் முதலியோர் பரதனை அடைதல்

2332. வரன்முறை தெரிந்துணர் மறையின் மாதவத்
★ தருமறை முனிவனு மாண்டை யானென
விரைவின்வந் தீண்டினர் விரகி னெய்தினர்
பரதனை வணங்கினர் பரியு நெஞ்சினர்.

வரன்முறை தெரிந்து உணர் மறையின் மாதவத்து
அருமறை முனிவனும், ஆண்டையான் என,
விரைவின் வந்து ஈண்டினர்; விரகின் எய்தினர்;
பரதனை வணங்கினர்; பரியும் நெஞ்சினர்.

2333. மந்திரக் கிழவரு நகர மாந்தருந்
தந்திரத் தலைவருந் தரணி பாலரு
மந்தர முனிவரோ டறிஞர் யாவருஞ்
சுந்தரக் குரிசிலை மரபிற் சுற்றினர்.

மந்திரக் கிழவரும், நகர மாந்தரும்,
தந்திரத் தலைவரும், தரணி பாலரும்,
அந்தர முனிவரோடு அறிஞர் யாவரும்,
சுந்தரக் குரிசிலை மரபில் சுற்றினர்.

பொ :—அரசர்க்கு உரிய வரன்முறைகளை ஆராய்ந்து உணர்ந்தவனும், மறைகளைப் பயின்றவனும், பெரிய தவத்தினையுடையவனும் அரிய மந்தணங்களைச் சொல்லுதற்கு உரியவனும் ஆகிய வசிட்டன் அங்கு (பரதனுக்கு அருகில்) இருக்கின்றான் எனக் கேள்விப்பட்டு மந்திரிமார்களும், நகரப் பெருமக்களும், படைத்தலைவரும், அரசர்களும், வான வெளியில் செல்லும் ஆற்றலுடைய முனிவரோடு அறிஞர்கள் எல்லோரும் விரைவாக வந்து ஒருங்கு சேர்ந்தவர்களாய்ப் பணிவோடு பரதனை அடைந்து வருந்தும் நெஞ்சினராய் வணங்கிப் பின், அவ்வழகிய தோற்றமுடைய பரதனை முறையாகச் சுற்றி அமர்ந்தனர்.

கு :—இவ்விரண்டு செய்யுளும் ஒரு தொடர். தெரிந்துணர் முனிவன் என்க. மறை இரண்டனுள் முன்னது வேதத்தையும், பின்னது இரகசியத்தையும் உணர்த்தியது. முனிவனும் ஆண்டையான் எனக் கேள்விப்

பட்ட அறிஞர் யாவரும், விரைவின் வந்து ஈண்டி, எய்திப் பரியும் நெஞ்சினராய்ப் பரதனை வணங்கினராய் அவனை மரபிற் சுற்றினர் என்று இயையும். ஈண்டினர், எய்தினர், நெஞ்சினர். வணங்கினர் என்ற முற்றெச்சங்கள் சுற்றினர் என்ற வினைகொண்டு முடிந்தன. பரதன் படும் துன்பத்தைக் கண்டாராகலின் பரியும் நெஞ்சினராயினர். விரகு-திறமை ; இங்குப் பணிவையுணர்த்தியது. மரபிற் சுற்றுதலாவது அவர் அவர் தகுதிக்கேற்ற இடத்தில் சூழ அமர்தல். சுந்தரக் குரிசில் என்றது சுட்டின் அளவாய்நின்றது. அப்பரதனை மரபிற் சுற்றினர் என்பதே கருத்து. (1, 2)

### சுமந்திரன் வசிட்டன்முகத்தைக் கருத்துடன் நோக்குதல்

**2334.** சுற்றின ரிருந்துழிச்
சுமந்தி ரப்பெயர்ப்
பொற்றடந் தேர்வலான்
புலமை யுள்ளத்தான்
கொற்றவற் குறுபொருள்
குறித்த கொள்கையான்
முற்றுணர் முனிவனை
முகத்து நோக்கினான்.

சுற்றினர் இருந்துழிச் சுமந்திரப் பெயர்ப்
பொன் தடந் தேர்வலான், புலமை உள்ளத்தான்,
கொற்றவற்கு உறு பொருள் குறித்த கொள்கையான்
முற்றுணர் முனிவனை முகத்து நோக்கினான்.

பொ :—மேற்கூறியாங்குச் சுற்றி அமர்ந்தபோது, சுமந்திரன் என்ற பெயரையுடையவனும், அழகிய பெரிய தேரைச் செலுத்துதலில் வல்லவனும், புலமையுள்ளம் படைத்தவனுமாகிய அமைச்சன், பரதனுக்கு இனி நிகழவேண்டிய நிகழ்ச்சியைப்பற்றிக் குறிப்பிடும் கருத்தோடு, முற்றும் உணர்ந்த முனிவன் முகத்தை நோக்கினான்.

கு :—சுமந்திரன், தேர்ப்பாகனும் அமைச்சனுமாக இருந்ததற்குக் காரணம் கூறுவாராய்த் 'தேர்வலான்' எனவும், 'புலமையுள்ளத்தான்' எனவும் கூறினர். கொற்றவன் என்றது இங்குப் பரதனை ; தாயின் வரத்தால் அரசு பெற்றவன் ஆதலின் அவனை அப்பெயரால் கூறினர். உறுபொருள் என்றது இனி உறவேண்டிய முடிபுனைவை. கொள்கையோடு நோக்கினான் என்க. ஆன் உடனிகழ்ச்சியில் வந்தது. கொள்கையோடு நோக்குதலாவது, தன் பார்வையால் தான் கருதியதை முனிவன்

உணருமாறு செய்தல். 'முகநோக்கி நிற்க அமையும் அகம் நோக்கி, உற்றது உணர்வார்ப் பெறின்' (708) என்ற குறளை விளங்க வைப்பது போல் பின்னிரண்டடி அமைந்துள்ளமை காணலாம். குறிப்பில் குறிப் புணரும் தன்மையன் முனிவன் என்பது தோன்ற, 'முற்றுணர் முனிவனை' என்றார். குருவும் அமைச்சனுமாக இருக்கின்ற வசிட்டன் கூறுதலே தகுதி என்ற கருத்தால் சுமந்திரன் தான் கூறாது வசிட்டனைக் கூறச் செய்தான். (3)

### சுமந்திரன் நோக்கினால் கூறியதை வசிட்டன் வாக்கால் பரதனுக்கு உரைத்தல் 2335-2342

**2335.** நோக்கினாற் சுமந்திர னுவல லுற்றதை
வாக்கினா லன்றியே யுணர்ந்த மாதவன்
காக்குதி யுலகுநின் கடன தாமெனக்
கோக்குமா ரனுக்கது தெரியக் கூறுவான்.

நோக்கினால் சுமந்திரன் நுவலல் உற்றதை,
வாக்கினால் அன்றியே உணர்ந்த மாதவன்,
'காக்குதி உலகு! நின் கடன் அது ஆம்' எனக்
கோக் குமரனுக்கு அது தெரியக் கூறுவான்.

பொ:—சுமந்திரன் வாக்கினால் கூறாது நோக்கினால் கூறியதை உணர்ந்த வசிட்டன், 'உலகத்தைக் காப்பாயாக! அது நின் கடமை யாகும்' என அரசகுமாரனாகிய பரதனுக்குச் சுமந்திரன் கருத்துத் தெரியுமாறு கூறுகின்றான்.

கு:—பின்வரும் ஏழு செய்யுளில் அதைக் கூறுகின்றான். வாக்கினா லன்றி நோக்கினால் நுவலலுற்றதை என்க. 'வாக்கினால் கூறாமலே உணர்ந்த மாதவன்' என்று இயைத்துப் பொருள்கொள்ளுதலுமாம். குறித்தது கூறாமைக் கொள்ளும் நுண்ணறிவினன் வசிட்டன் ஆதலின் நோக்கினால் நுவலல் உற்றதை யுணர்ந்தான். உலகத்தைக் காப்பாற்று தலை அறம் எனக்கொண்டு பரதன் ஏற்றுக்கொள்வான் என்ற நினைவால் முடிபுனைந்துகொள்க எனக்கூறாது, 'காக்குதியுலகம்' என்று கூறினான். தயரதன் இராமனுக்குக் கூறும்போதும் 'இந்த நல்லறம் புரக்க நினையல் வேண்டும்' (1467) எனக் கூறியதும் நினைக்க. கோக்குமரன் கோவாதல் கடமையாகும் என்பது புலப்படப் பரதனைக் கோக்குமரன் என்று கூறினான். தவறாது செய்யத்தக்கது என்பது தோன்றக் 'கடன்' என்றான். 'உறுதி யுழையிருந்தான் கூறல் கடன்' (குறள்-638) என்புழியும் 'கடன்' இப்பொருளது ஆதல் காண்க. (4)

2336. வேதிய ரருந்தவர் விருத்தர் வேந்தர்க
ளாதியர் நின்வயி னடைந்த காரிய
நீதியுந் தருமமு நிறுவ நீயிது
கோதறு குணத்தினுய் மனத்துட் கோடியால்.

'வேதியர், அருந்தவர், விருத்தர், வேந்தர்கள்,
ஆதியர் நின் வயின் அடைந்த காரியம்,
நீதியும் தருமமும் நிறுவ; நீ இது,
கோது அறு குணத்தினுய்! மனத்துள் கோடியால்.'

பொ:—குற்றமற்ற குணத்தையுடைய பரத! வேதியரும், அருந்தவ முனிவரும், முதியவர்களும், வேந்தர்களும் முதலாகவுள்ள பெருமக்கள் நின்னிடத்து வந்த காரியம் யாதெனின், நாட்டில் நீதியையும் தருமத்தையும் நிலைபெறச்செய்யவே; இதை நின் மனத்துள் கொள்க.

கு:—'பங்கமில் குணத் தெம்பி பரதனே' என்று முன் இராமன் கூறியதுபோலவே வசிட்டனும் 'கோதறு குணத்தினுய்' என விளித்தான். விருத்தர்–முதியவர். நீதியாவது, மக்கள் பிறர் பிறர் நலியாது வேற்றுப் பொருள் வெஃகாது இருக்கச் செய்தல். தருமமாவது, மக்கள் மையில் அறிவினராய்ச் செவ்விதின் நடந்து தம் அமர் துணைப் பிரியாது பாத்துண்ணச்செய்தல். அரசன் இல்வழி இந்த நீதியும் தருமமும் நாட்டில் நிலைபெறச் செய்தல் இயலாது; ஆகவே, அடைந்த காரியம் நீதியும் தருமமும் நிறுவ, நீ மன்னனுகவேண்டும் என்பதை வற்புறுத்தலே என்பது கருத்து. நிறுவுதலாகிய காரியம் அதற்குக் காரணமான அரசாட்சியை யுணர்த்திநின்றது. குற்றமேயில்லாத குணக்கடல் நீயாதலின் இக்கருத்தை மனத்துக்கொண்டால் எம் கருத்திற்கு இசைவாய் என்ற குறிப்புக் காண்க. (5)

2337. தருமமென் றெருபொரு டந்து நாட்டுத
லருமையென் பதுபெரி தறிதி யையநீ
யிருமையுந் தருவதற் கியைவ தீண்டிது
தெருண்மனத் தார்செயுஞ் செயலி தாகுமால்.

தருமம் என்று ஒரு பொருள் தந்து நாட்டுதல்
அருமை என்பது பெரிது அறிதி; ஐய! நீ;
இருமையும் தருவதற்கு இயைவது; ஈண்டு இது,
தெருள் மனத்தார் செயும் செயல் இது ஆகுமால்.

பொ:—ஐய! தருமம் என்ற ஒரு பொருளை மக்களுக்குத் தெளிவித்து அவர்கள் வாழ்க்கையில் அத்தருமம் நிலைபெறுமாறு செய்தலாகிய

அரசாட்சி பெறுதற்கு அருமையானது என்பதை நீ பெரிதும் அறிந்து கொள்க; இங்குக் கூறிய இத்தருமத்தை நிலை நாட்டுவதாகிய அரசாட்சி இம்மைப் பயனையும், மறுமைப் பயனையும் தருதற்கேற்றதாகும்; தெளிந்த மனமுடையார் செய்யும் செயல் இவ்வரசாட்சியேயாகும்.

கு :—தருமத்தைத் தருதலாவது, மக்கள் மனத்தில் பதியுமாறு அதன் உயர்வை விளக்குதல். நாட்டுதற்குக் காரணமான அரசாட்சியை நாட்டுதல் எனக் காரியமாகக் கூறினர். அரசை வெறுத்திருக்கின்ற பரதனுக்கு அரசின் பெருமையை விளக்குவானாய்த் தருமத்தை நாட்டுதல்தான் அரசாட்சி எனவும், அது பெறுதற்கரியது எனவும், அது இருமைப் பயனையும் தர வல்லது எனவும், அது தெருண்ட மனத்தவரே செய்தற்குரிய அருஞ்செயல் எனவும் கூறுகின்றான். தருமத்தை நிலை நாட்டும் அரசாட்சியும் தருமமேயாதலின், அது இம்மை இன்பத்தையும், மறுமையில் வீட்டின்பத்தையும் தருவதற்குரியது என்றான். 'சிறப்பீனும் செல்வமுமீனும் அறத்தினூஉங்கு, ஆக்கமெவனோ உயிர்க்கு' (குறள்–31) எனவும், 'வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன் வாழ்நாள் வழியடைக்கும் கல்' (குறள்-38) எனவும் அறம் இம்மைப் பயனையும் மறுமையில் வீட்டின்பத்தையும் தரும் என்பது விளக்கப்படுதல் காணலாம். (6)

**2338.** வள்ளுறு வயிரவா ளரசில் வையக
நள்ளுறு கதிரிலாப் பகலு நாளொடுந்
தெள்ளுறு மதியிலா விரவுந் தேர்தரி
னுள்ளுறை யுயிரிலா வுடலு மொக்குமே.

'வள் உறு வயிர வாள் அரசு இல் வையகம்
நள் உறு கதிர் இலாப் பகலும், நாளொடும்
தெள் உறு மதி இலா இரவும், தேர்தரின்
உள் உறை உயிர் இலா உடலும் ஒக்குமே.

பொ :—உறையில் பொருந்திய கூரிய வாளையுடைய அரசன் இல்லாத உலகம், ஆராயுமிடத்து எல்லோரும் விரும்புகின்ற சூரியன் இல்லாத பகலும், நாள்மீன்களோடு தெளிவு பொருந்திய சந்திரன் இல்லாத இரவும், உள்ளே பொருந்திய உயிர் இல்லாத உடலும் போலும்.

கு :—இதனால், மன்னன் இல்லாத நாட்டின் இழிவு புலப்படுத்திய வாறு. வள்-வாளின் உறை. வயிரம்-கூர்மை. பிறரைக் கொல்லுங் கருவியாக்காது பகைவரை அச்சுறுத்துங் கருவியாக மட்டுமே அரசன் வாளைக்கொள்ளவேண்டும் என்பது புலப்பட, 'வள்ளுறு வயிரவாள்'

என்றார். 'நள்ளுறுகதிர்' என்றார்; உயிர்கள் எல்லாம் கதிரொளியை விரும்பி நிற்றலின். 'பலர் புகழ் ஞாயிறு' (திருமுருகாற்றுப்படை. 2) என்றலும் காண்க. நாள் - நட்சத்திரம். அரசுஇல் வையகத்திற்கு மூன்றுவமை கூறினர்; பல்பொருள் உவமை. உள்ளுறை உயிர் என்றது உயிரின்தன்மை புலப்படுத்தியவாறு. அரசுஇல் வையகம் உயிரிலா உடல்போலும் எனவே அரசன் உலகிற்கு உயிர்போன்றவன் என்பது பெறப்படும். 'மன்னனுயிர்த்தே மலர்தலையுலகம்' (புறநா.–186) என்பதும் நினைக்க. (7)

**2339.** தேவர்தம் முலகினுந் தீமை செய்துழன்
மாவலி யவுணர்கள் வைகு நாட்டினு
மேவெவை யுலகமென் றிசைக்கு மன்னவை
காவல்செய் தலைவரை யின்மை கண்டிலம்.

**தேவர்தம் உலகினும், தீமை செய்து உழல்**
**மா வலி அவுணர்கள் வைகும் நாட்டினும்,**
**ஏவெவை உலகம் என்று இசைக்கும் அன்னவை**
**காவல் செய் தலைவரை இன்மை கண்டிலம்.**

போ :—பிறர்க்கு நன்மை செய்யுந்தன்மையுடைய தேவர்கள் வாழும் உலகத்தினும், பிறர்க்குத் தீமைசெய்து திரிகின்ற பெரிய வலிமையுடைய அவுணர்கள் வாழும் நாட்டிலும், இன்னும் எவை எவை உலகம் என்று சொல்லப்படுகின்றனவோ அவ் அவற்றிலும் காவல் செய்கின்ற தலைவர் இல்லாமையைக் கண்டிலேம்.

கு :—அவுணர்க்குத் தீமைசெய்துழலுவதை அடையாகக் கூறினமையின், தேவர்க்கு, நன்மைசெயுந் தன்மை வருவித்துரைக்கப்பட்டது. உலகம் என்றது இங்குத் தேயத்தை; 'மாயோன் மேய காடுறை யுலகமும்' (தொல். பொருள். 5.) என்பதும் காண்க. எவ்வெவை என்பது ஏவெவை என எதுகைநோக்கி விகாரப்பட்டது. இசைத்தல்–சொல்லுதல். மேலைச் செய்யுளில் அரசர்கள் இல்லாத நாட்டின் இழிவைக் கூறி இச் செய்யுளால் அரசர் இல்லாத நாடே இல்லை என்பதைப் புலப்படுத்தியவாறு. (8)

**2340.** முறைதெரிந் தொருவகை முடிய நோக்குறின்
மறையவன் வகுத்தன மண்ணில் வானிடை
நிறைபெருந் தன்மையி னிற்ப செல்வன
விறைகளை யில்லன யாவை காண்கிலம்.

முறை தெரிந்து ஒருவகை முடிய நோக்குறின்,
மறையவன் வகுத்தன, மண்ணில், வானிடை,
நிறை பெருந்தன்மையின் நிற்ப, செல்வன,
இறைகளை இல்லன யாவை? காண்கிலம்.

பொ :—முறைமை தெரிந்து ஒருவகையாக முழுதும் நோக்குவோமாயின், அயனால் படைக்கப்பட்டனவாய மண்ணிலும், விண்ணிலும் நிறைந்த பெருந்தன்மையோடு நிற்பனவாகிய உயிர்களுள்ளும், இயங்குவனவாகிய உயிர்களுள்ளும் அரசுகளை இல்லாதன யாவை உள்ளன? அரசு இல்லாதவற்றைக் கண்டிலேம்.

கு :—மேல் உயர்திணையாகவுள்ள தேவர்களும், அவுணர்களும் தலைவரையின்றி யில்லை என்பது கூறி, இங்கு நிற்பனவாகிய தாவரங்களும் இயங்குவனவாகிய விலங்கு முதலியனவும் ஆகிய அஃறிணை உயிர்களும் அரசினையுடையவாகவே உள்ளன என்பதைப் புலப்படுத்தியவாறு. மரங்களுக்குத் தலைமையாக அரச மரமும், விலங்குகளுக்குத் தலைமையாகச் சிங்கமும், பறவைகளுக்குத் தலைமையாகக் கருடனும் இருப்பதை நினைக்க. ஓரறிவுயிர்கட்கும் அரசு வேண்டுமாயின் ஆறறிவுடைய மக்களுக்கு அரசன் வேண்டும் என்பது சொல்லவேண்டுமோ என்றவாறு. (9)

**2341.** பூத்தநாண் மலரய னாதிப் புண்ணிய
ரேத்துவான் புகழின ரின்று காறுங்கூக்
காத்தனர் பின்னொரு களைக ணின்மையா
னீத்தநீ ருடைகல நீர தாகுமால்.

பூத்த நாள் மலர் அயன் ஆதிப் புண்ணியர்
ஏத்து வான் புகழினர், இன்றுகாறும் கூக்
காத்தனர்; பின், ஒரு களைகண் இன்மையால்
நீத்த நீர் உடைகல நீரது ஆகுமால்.

பொ :—திருமாலின் உந்தியில் பூத்த செவ்வியுள்ள தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமன் முதலிய புண்ணியர்கள் புகழ்தற்குக் காரணமான புகழையுடைய நின்குல மன்னர்கள், இன்றுவரையில் பூமியைக் காத்தார்கள்; அவர்கட்குப் பின் ஒரு பற்றுக்கோடும் இல்லாமையால் உலகம், கடலில் உடைந்த கப்பலின் தன்மையதாகும்.

கு :—நாண்மலர் என்றது செவ்வியழியாத மலரை. அயனாதிப் புண்ணியர் ஏத்துதல் கூறினர், நல்லரசரை ஏத்துதற்குரியார் அவரேயாதலின். அயனை ஆதியாகக் கொண்ட நின்குலப் புண்ணியராகிய

மன்னர்கள், மக்கள் ஏத்துகின்ற சிறந்த புகழினையுடையராய் இன்று காறும் கூக்காத்தனர் என்று இயைத்துக் கூறலும் ஆம். 'பூவினன் முகன் புதல்வனாதியாம், தாவின் மன்னர் தம் தரும நீதியால் தேவ ராயினார்' (2323) எனப் பரதன் கூறுவதால் பரதன் பிறந்த குலத் திற்கு முதல்வன் நான்முகன் புதல்வன் என்பது பெறப்படுதல் காண லாம்; எனவே பரதன் பிறந்த குலத்து மன்னரை மலரயன் ஆதிப் புண்ணியர் என்றல் பொருந்துவதேயாம். கூ-பூமி. களைகண்-பற்றுக் கோடு. கடல்நடுவே மரக்கலம் உடைந்தால் அம்மரக்கலத்துள்ளார் பற்றுக்கோடின்றித் துன்புற்று அழிதல்போல மன்னர் இல்லாத கோசல நாட்டு மக்களும் பற்றுக்கோடின்றித் துன்புறுவர் என்பது கருத்து. நீத்த நீர் என்றது கடல் நீரை. (10)

**2342.** உந்தையோ விறந்தன னும்மு னீத்தனன்
வந்தது மன்னைதன் வரத்தின் மைந்தநீ
யந்தமில் பேரர சளித்தி யன்னது
சிந்தனை யெமக்கெனத் தெரிந்து கூறினான்.

'உந்தையோ இறந்தனன்; உம்முன் நீத்தனன்;
வந்ததும் அன்னைதன் வரத்தில், மைந்த! நீ,
அந்தம் இல் போ அரசு அளித்தி; அன்னது
சிந்தனை எமக்கு' எனத் தெரிந்து கூறினான்.

பொ:—'மைந்த! உன் தந்தையோ இறந்துவிட்டான்; உன் அண்ணனாகிய இராமனே நாட்டைத் துறந்து காட்டை அடைந்தான்; நினக்கு அரசு வந்ததும் அன்னையின் வரத்தினாலாகும்; ஆதலால் நீ அந்த அழிவில்லாத பெரிய அரசை ஏற்றுக் காப்பாயாக; அதுவே எமக்குக் கருத்தாகும்' என்று ஆராய்ந்து கூறினான்.

கு:—ஆண்ட மன்னன் மாண்டமையாலும், ஆளுதற்குரிய இராமன் காடு புக்கமையாலும், இயல்பாகவே நின்னைச் சார்ந்தது அரசு; அதற்கு மேலும் அன்னைதன் வரத்தினால் வந்தது அவ்வரசாகலின் அப்பேரரசை நீ ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று வற்புறுத்தியவாறு. சாபத்தால் வந்ததன்று என்பான், 'வரத்தின்' என்றும், பகைவரால் வந்தது அன்று என்பான் 'அன்னைதன் வரத்தின்' என்றும் கூறினான். ஏற்றுக் கொள்ளும் தகுதி மிகவுடைமை புலப்படுத்தியவாறு. உந்தை உனக்கு அரசை அளித்து இறந்தமையானும், உன் அண்ணனும் உனக்கே அரசு உரித்தாக வனம் புக்கமையானும், நின் தாயும் உனக்காகவே அவ்வரசை வரத்தால் வாங்கியதாலும் அம்மூவரும் நின்னை அரசனாக்கினர். யாமும் அப்பேரரசை நீ ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றே விரும்புகின்றோம்;

ஆகவே நீ அரசனுதலை விரும்பாதோர் எவருமிலர்; ஏற்றுக்கொள்க என்றவாறு. அந்தம்-முடிவு. வசிட்டன் ஞானத்தந்தை ஆதலின் பரதனை, 'மைந்த' என்று அம்முறைமை தோன்ற விளித்துத் தன் கட்டளை தப்பாது ஏற்றுக்கொள்ளத்தக்கது என்பதைப் புலப்படுத்திய வாறு; 'தந்தைசொல் மிக்க மந்திரமில்லை' என்பது காண்க. பரதன் அரசு ஏற்பதே தக்கது என்பதைப் பல காரணத்தான் வசிட்டன் ஆராய்ந்து வற்புறுத்திக் கூறலின், 'தெரிந்து கூறினன்' என்ருர். தெரிதல்-ஆராய்தல். (11)

### வசிட்டன் சொல்லைக் கேட்ட பரதன் நிலை 2343-2344

**2343.** தஞ்சமிவ் வுலகநீ தாங்கு வாயெனச்
செஞ்செவே முனிவரன் செப்பக் கேட்டலு
நஞ்சினை நுகரென நடுங்கு வாரினு
மஞ்சின னயர்ந்தன னருவிக் கண்ணினன்.

'தஞ்சம் இவ் உலகம், நீ தாங்குவாய்' எனச்
செஞ்செவே முனிவரன் செப்பக் கேட்டலும்,
'நஞ்சினை நுகர்' என, நடுங்குவாரினும்
அஞ்சினன் அயர்ந்தனன் அருவிக் கண்ணினன்.

பொ:—இந்த உலகம் அரசன் இன்மையால் எளிய நிலையில் உள்ளது; ஆதலால் நீ இதைத் தாங்குவாயாக என வசிட்ட முனிவன் நேரே வெளிப்படையாகச் சொல்லக் கேட்டவுடன் பரதன், 'நஞ்சினை உண்' என்று ஒருவர் சொல்லக் கேட்டு நடுங்குகின்றவரைக் காட்டிலும் மிகுதியாக அஞ்சினுன்; அருவி சோரும் கண்ணையுடையவனுய்ச் சோர் வடைந்தான்.

கு:—தஞ்சம்-எளிமை. 'தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே' (தொல். சொல். 268) என்பது காண்க. மேற்கவிகளில் குறிப்பாகச் சொல்லிவந்த வசிட்டன் முன் கவியில் வெளிப்படையாகப் 'பேரர சளித்தி' எனக் கூறினமை தோன்றச் 'செஞ்செவே செப்ப' என்ருர். செஞ்செவே-செம்மையாக; வெளிப்படையாக. பற்றுள்ள மற்றையோர் கூறினும் பற்றுக் காரணமாகக் கூறினர் எனக் கொள்ள இடமுண்டு; பற்றற்ற முனிவரன் இங்ஙனம் கூறியது அடாது என்னும் கருத்துத் தோன்ற வசிட்டன் என்னுது, 'முனிவரன்' என்ருர். பிறர்க்கு அமுதாகத் தோன்றும் அரசு, பரதனுக்கு நஞ்சாகத் தோன்றிற்று ஆதலின், 'இவ்வுலகம்...தாங்குவாய்' என்ற வசிட்டன் சொல், 'நஞ்சினை நுகர்' என்பதினும் வருத்தம் செய்தது என்பது கருத்து. (12)

**2344.** நடுங்கின ஞத்தடு
மாறி நாட்டமு
மிடுங்கினன் மகளிரி
னிரங்கு நெஞ்சின
ஞெடுங்கிய வுயிரின
னுணர்வு கைதரத்
தொடங்கின னரசவைக்
குள்ளஞ் சொல்லுவான்.

நடுங்கினன்; நாத் தடுமாறி, நாட்டமும்
இடுங்கினன்; மகளிரின் இரங்கும் நெஞ்சினன்;
ஒடுங்கிய உயிரினன்; உணர்வு கைதரத்
தொடங்கினன், அரசவைக்கு உள்ளம் சொல்லுவான்.

பொ :—பெண்டிரைப் போல அழுகின்ற இரக்கமிக்க நெஞ்சினனுகிய பரதன், ஒன்றும் கூற முடியாது நாக்குத் தடுமாறி நடுங்கினன்; கண்களும் மலர்ச்சியின்றி இடுங்கினனாய் ஒடுங்கிய உயிருடையவனாய் மூச்சற்றவன், பின் உணர்வு வந்து உதவ, அரசவையோர்க்குத் தன்னுடைய உள்ளக்கருத்தை உரைக்கத்தொடங்கினன்.

கு :—துன்பமிகுதியால் நாக்குத் தடுமாறலும், உடல் நடுங்குதலும் நிகழ்ந்தன. தடுமாறி என்னும் சினைவினை நடுங்கினன் என்னும் முதல் வினையோடு முடிந்தது. நாட்டம்-கண். துன்பத்தில் கண்கள் இடுங்குதல் இயல்பு. அதுபற்றியே இடுக்கண் என்ற பெயர் துன்பத்திற்கு உரித்தாயிற்று. ஒடுங்கிய உயிரினன் என்றது மூச்சற்ற நிலையை. நெஞ்சினன், நடுங்கினன், இடுங்கினன், உயிரினன், உணர்வு கைதரத் தொடங்கினன் என்று இயையும். (13)

### பரதன் தன் உள்ளக்கருத்தை உரைத்தல் 2345-2349

**2345.** மூன்றுல கினுக்குமோர் முதல்வ ஞய்முதற்
ரேன்றின னிருக்கயான் மகுடஞ் சூடுதல்
சான்றவ ருரைசெயத் தருும மாதலா
லீன்றவள் செய்கையி னிழுக்குண் டாகுமோ.

மூன்று உலகினுக்கும் ஓர் முதல்வன் ஆய் முதல்
தோன்றினன் இருக்க, யான் மகுடம் சூடுதல்,

சான்றவர் உரைசெயத் தருமம் ஆதலால்,
ஈன்றவள் செய்கையின் இழுக்கு உண்டாகுமோ ?

பொ :—மூன்று உலகத்தார்க்கும் ஒரு முதல்வனுகி முன்னே பிறந்த இராமன் இருக்க, இளையவனுகிய யான், முடி சூடிக்கொள்ளுதல் தக்கது என்று சான்ருேர்கள் சொல்லுமாறு தருமம் ஆய்விட்டபடியால், என்னைப் பெற்ற கைகேயியின் செயலில் குற்றம் உளதாமோ ?

கு :—உலகம் மூன்று ஆவன : விண்ணும் மண்ணும் பாதலமும் ஆம் ; அவை, ஆகுபெயராய் அவ்வுலகில் உள்ளாரைக் குறித்தன. மண்ணுலக மன்னனே ஒரொருகால் விண்ணுலகத்துள்ளாரையும், பாதலத்துள்ளாரையும் காக்கும் பணியை மேற்கொள்ளவேண்டி வருத லின், 'மூன்றுலகினுக்குமோர் முதல்வனய் முதல் தோன்றினன்' என இராமனைக் கூறினன். அங்ஙனமன்றி அவன் முன்னைய தெய்வநிலையை எண்ணி அவ்வாறு கூறினன் எனலும் ஆம். தயரதனுக்கு முதல் மக னுய்த் தோன்றும்போதே உலகினுக்கு முதல்வனுதற்குரிய உரிமையும் உடன் தோன்றினமையின் முதல்வனய் என இறந்த காலத்தால் கூறினர். இளையவனுகிய யான் என்க. சான்றவர் என்றது, முன்னிலைப் புறமொழியாக வசிட்டன் முதலாயினேரைக் குறித்தது. மூத்தவன் இருக்க இளையவன் முடிசூடுதல் தருமம் எனச் சான்ருேர்கள் சொல்லு கின்றபோது, கைகேயி அவ்வரத்தைப் பெற்றதும் தருமம் ஆவதன்றி இழுக்காகுமோ என்றது, குறிப்பினல் வசிட்டனை இகழ்ந்தவாறு. மூத்தவன் இருக்க இளையவனுக்கு அரசுரிமை பெற்ற கைகேயியின் செயல் குற்றமேயாகலின், முதல் தோன்றினன் இருக்கப் பரதன் முடி சூடுதல் தக்கது என்று கூறும் வசிட்டன் முதலியோர் உரையும் குற்ற மேயாம் என்பது கருத்து. இது அடுத்த செய்யுளாலும் பெறப் படும். (14)

2346. அடைவருங் கொடுமையென்
னன்னை செய்கையை
நடைவருந் தன்மைநீர்
நன்றி தென்றிரே
லிடைவருங் காலமீண்
டிரண்டு நீத்திது
கடைவருந் தீநெறிக்
கலியி னுட்சியோ.

'அடைவு அருங் கொடுமை என் அன்னை செய்கையை
நடை வரும் தன்மை நீர், 'நன்று இது' என்றிரேல்,

இடை வரும் காலம் ஈண்டு இரண்டும் நீத்து இது
கடை வரும் தீ நெறிக் கலியின் ஆட்சியோ ?'

பொ :—நல்லொழுக்க நெறியில் செல்லும் நீங்கள், கொடுமை வாய்ந்த என் அன்னையின் முறையற்ற செயலையும் நன்று இது என்று உடன்படுவீர்போல் கூறுவீராயின், இக்காலம் இடையில்வருதற்கு உரிய திரேதாயுகம், துவாபரயுகம் என்கின்ற காலம் இரண்டும் கடந்து கடைசியில் வருவதற்குரிய தீயநெறிகள் மலிந்த கலிபுருடனின் ஆட்சிக்குரிய காலமோ ?

கு :—அடைவு அரும் செய்கை என்று இயையும். அடைவு-முறை. நடை – ஒழுக்கம். நல்லொழுக்கமுடையோர் முறையற்றசெயலை நன்று என்று கொள்ளார். நன்னெறி ஒழுகும் நீங்கள் என் அன்னையின் செயலை நன்று என்பீர்போல என்னை அரசாளச் சொல்லுதலால் இக்காலம் முறை வழாத திரேதாயுகமாக இருத்தல் இயலாது; தீ நெறி மலிந்த கலியுகம்போலும் என வசிட்டன் முதலியோரைக் குறிப்பான் இகழ்ந்தவாறு. கலிகாலத்தில் வாழவேண்டிய நீங்கள் திரேதாயுகத்தில் வாழ்கின்றீர்கள் என்றவாறு. நீங்கள் கூறியது முறையற்றது என வெளிப்பட இகழ மனமிலனாய் இது கலியின் ஆட்சியோ என்ற வினாவால் அவ்விகழ்ச்சியைப் புலப்படுத்தினான் என்க. 'ஒலிகடல் உலகந்தன்னில் ஊர்தரு குரங்கின்மாடே கலியது காலம் வந்து பரந்ததோ' (கிட்கிந். வாலிவதை-80) என்பதும் காண்க. யுகங்கள் நான்கில் இரண்டாவது யுகமாகிய திரேதாயுகத்தில் பரதன் பேசுகின்றான் ஆகலின் கடையுகமாகிய கலியுகத்திற்கு இடையில் இரண்டு யுகங்கள் நீங்கவேண்டியதாயிற்று. (15)

**2347.** வேத்தவை யிருந்தநீர் விமல னுந்தியிற்
பூத்தவன் முதலிய புவியுட் டோன்றினார்
மூத்தவ ரிருக்கவே முறைமை யானிலங்
காத்தவ ருளரெனிற் காட்டிக் காண்டிரால்.

வேத்தவை இருந்த நீர், விமலன் உந்தியில்
பூத்தவன் முதலிய புவியுள் தோன்றினார்,
மூத்தவர் இருக்கவே, முறைமையான் நிலம்
காத்தவர் உளர் எனின் காட்டிக் காண்டிரால்.

பொ:—இதுகாறும் அரசவையில் இருந்து பழகிய நீவிர், திருமாலின் உந்தித்தாமரையில் தோன்றிய பிரமன் முதலாகக் கொண்ட இவ்வுலகில் பிறந்த மன்னவருள், மூத்தவர் இருக்கப் பூமியை முறைமையால் காத்தவர் உளர் எனின் எடுத்துக்காட்டுங்கள்.

கு :—வேத்தவை - அரசர் அவை ; என்றது தயரதன் அவையை ; தன்முன் கூடிய அவையை அன்று. விமலன் என்றது திருமாலே. பூத்தல் - தோன்றுதல். உந்தியில் பூத்தவனை முதலாக உடைய புவி என்க. முறைமையான் காத்தவர் என்று இயையும். காட்டிக் காண்டிர் என்றது, ஒரு சொல் நீர்மையது. இருசொல்லாக்கி விளக்கிக்காட்டுங்கள் என்றும், உளர் எனில் எனக்குக் காட்டி என்னைப் பின்னர் அரசனுக்கப் பாருங்கள் என்றும் பொருள்கூறலாம். (16)

**2348.** நன்னெறி யென்னினு
நானிந் நானில
மன்னுயிர்ப் பொறைசுமந்
திருந்து வாழ்கிலே
னன்னவன் றனைக்கொணர்ந்
தலங்கன் மாமுடி
தொன்னெறி முறைமையிற்
சூட்டக் காண்டிரால்.

நல் நெறி என்னினும், நான் இந் நானில
மன் உயிர்ப் பொறை சுமந்திருந்து வாழ்கிலேன் ;
அன்னவன்தனைக் கொணர்ந்து, அலங்கல் மா முடி
தொல் நெறி முறைமையின் சூட்டக் காண்டிரால்.

பொ :—மூத்தவன் இருக்க இளையவன் அரசாள்வது நீங்கள் கூறிய வாறு நல்ல நெறியே ஆயினும், நான் இவ்வுலகத்து மன்னுயிர்களாகிய பாரத்தைச் சுமந்துகொண்டிருந்து அரசனாக வாழமாட்டேன் ; ஆதலால் அவ்விராமபிரானைக் காட்டிலிருந்து அழைத்துவந்து மலர்மாலையோடு கூடிய சிறந்த முடியைப் பழமையான முறைப்படி சூட்டுவதைப் பாருங்கள்.

கு :—நன்னெறி என்னினும் என்றது நன்னெறி அன்மை யுணர்த் திற்று ; ‘ நல்லாறெனினும் கொளல் தீது ’ (குறள்-222) என்புழிப்போல. நானில மன்னுயிர் - உலகத்து நிலைபெற்ற உயிர்கள். உலகத்துயிர்க ளின் துன்பங்களைத் தன் துன்பமாகக் கொண்டொழுகுவது அரசியல் ஆதலின் அவ்வரசியலையே மன்னுயிர்ப் பொறை என்றான். பொறை- பாரம் ‘ அருந்துயர்ப் பெரும்பரம் ’ (1467) என முன்னர் வந்திருத்தலும் காண்க. வாழ்கிலேன் என்புழிக் ‘கில்’ ஆற்றல் உணர்த் திற்று. வாழும் ஆற்றல் இலேன் என்றவாறு. அன்னவன் என்றது நெஞ்சறி சுட்டாய் இராமனை உணர்த்திற்று. அலங்கல் - மாலை.

தொன்னெறி முறைமை என்றது மூத்தவற்குரித்து அரசு என்ற முறைமையை. (17)

**2349.** அன்றெனி னவனொடு மரிய கானிடை
நின்றினி திருந்தவ நெறியி னாற்றுவெ
னொன்றினி யுரைக்கிலென் னுயிரை நீக்குவெ
னென்றன னென்றபோ திருந்த பேரவை.

"அன்று எனின், அவனொடும் அரிய கானிடை
நின்று, இனிது இருந்தவம் நெறியின் ஆற்றுவென்;
ஒன்று இனி உரைக்கில் என் உயிரை நீக்குவென்"
என்றனன் ; என்றபோது, இருந்த பேரவை.

பொ :—'இராமன் வருதற்கு உடன்படானாயின், அவனுடன் தங்குதற்கு அரிய கடுங்கானில் தங்கி, இனிமையாகப் பெரிய தவத்தை நெறிப்படி செய்வேன் ; இதற்குமேல் நீங்கள் ஏதேனும் ஓரமைதி உரைப்பதாயின் என்னுயிரை இவ்வுடம்பில் நின்று நீக்கிக்கொள்வேன்' என்று தன் உறுதியைக் கூறினன் ; அவ்வாறு அவன் கூறியபோது அங்கிருந்த பெரிய சபையோர்,

கு :—பேரவை ஆகுபெயராய் அவையிலிருந்தோரையுணர்த்திற்று. அவையோர், என்று வாழ்த்தினர் என இருபதாவது செய்யுளில் முடியும். இங்குப் பரதன் கூறியவாறே இராமன், வருதல் முறையன்று என்று மறுத்தலும், பரதனும் நந்திக்கிராமத்தில் தவம் நெறியின் ஆற்றுதலும் நிகழ்வது காணலாம். ஆற்றுதல் – செய்தல். இராமனைக் கொணர்ந்து முடிசூட்டுதலே பரதன் கருத்தாகலின் அதற்கு மாறாக அவையோர் ஏதேனும் கூறிவிடுவரோ என்னும் அச்சத்தால் 'ஒன்று இனி உரைக்கில் என் உயிரை நீக்குவென்' என்றான். (18)

### அவையோர் மகிழ்ச்சி 2350—2351

**2350.** ஆன்றபே ரரசனு மிருப்ப வையனு
மேன்றனன் மணிமுடி யேந்த வேந்தனீ
வான்றொடர் திருவினை மறுத்தி மன்னிளந்
தோன்றல்கள் யாருளர் நின்னிற் றோன்றினர்.

ஆன்ற பேர் அரசனும் இருப்ப, ஐயனும்
ஏன்றனன் மணி முடி ஏந்த, ஏந்தல் நீ,

வான் தொடர் திருவினை மறுத்தி ; மன் இளந்
தோன்றல்கள் யார் உளர் நின்னின் தோன்றினர்.

பொ :—குணங்களால் நிறைந்த பேரரசனாகிய தயரதனும் இருக்கவே இராமனும் மணிமுடி சூடிக்கொள்ளுதற்கு உடன்பட்டான் ; பெருமையுடையவனே! நீ வானளவு உயர்ந்த அரச செல்வத்தை ஏற்றுக்கொள்ளாமல் மறுக்கின்றாய் ; அரச குடும்பத்தில் பிறந்த இளையவர்களில் நின்னைப் போலச் சிறந்த குணத்துடன் தோன்றினவர்கள் யார் இருக்கின்றார்கள் ? யாரும் இல்லை.

கு :—ஆன்ற - குணங்களால் நிறைந்த. பேரரசன் என்றது, தயரதனை. மூத்தவன் இருக்க இளையவன் அரசுபுரிதல் முறையன்று என்பது பரதன் கொள்கையாதலின் அதனைப் புகழவேண்டி முதுமையுடைய தயரதன் இருக்கும்போதே அவனின் இளையவனாகிய இராமனும் மணிமுடி ஏந்துதற்கு ஏன்றுகொண்டான் ; நீயோ, மூத்தவனாகிய இராமன் நாட்டில் இல்லாதபோதும் அரசேற்க மறுக்கின்றாய் என இராமனைக் காட்டிலும் பரதனுக்கு ஏற்றமுண்மை காட்டினர் அவையோர். ‘ புகழினோய் தன்மைகண்டால் ஆயிரமிராமர் நின்கேழ் ஆவரோ தெரியினம்மா ’ (குகப்-35) எனக் குகனும் பரதனைப் புகழ்ந்திருத்தல் காணலாம். “மூத்தவற்குரித் தரசெனும் முறைமையினுலகம், காத்த மன்னனில் இளையனன்றோ கடல்வண்ணன், ஏத்துநீண்முடி புனைவதற் கிசைந்தனன் என்றால், மீத்தருஞ் செல்வம் பரதனை விலக்குமாறு எவனோ ? ” (1564) எனக் கூனியும் இக்காரணத்தைக் கூறியுள்ளமை காணலாம். ஒரு தந்தைக்குப் பிறந்த மக்களுள் மூத்தவனுக்கு அரசு உரியது என்பது முறையே அன்றிக் காலத்தால் மூத்த தந்தைக்கே அரசு உரியது என்பது அன்று. முதுமையுள்ள தந்தைக்கே அரசு உரியது எனின் தந்தையுள்ளபோது மகன் அரசு பூணுதலே நிகழாததாய் முடியும் என்பதை நினைவில் கொண்டு காணின் இவ்விரு திறத்தார் கூறியனவும் வெறும் உபசாரமே என்பது புலனாகும். ஏந்த-சூட. ஏந்தல்-பெருமையுடையவன். வான்தொடர்திரு என்பது ‘ வானுயர்தோற்றம் ’ (குறள்-272) என்புழிப்போல இலக்கணை வழக்கு; உயர்ந்த அரசச் செல்வம் என்பதே பொருள். (19)

**2351.** ஆழியை யுருட்டியு மறங்கள் போற்றியும்
வேள்வியை யியற்றியும் வளர்க்க வேண்டுமோ
வேழினோ டேழெனு முலகு மெஞ்சினும்
வாழிய நின்புக ழென்று வாழ்த்தினர்.

'ஆழியை உருட்டியும், அறங்கள் போற்றியும்,
வேள்வியை இயற்றியும், வளர்க்கவேண்டுமோ ?
ஏழினெடு ஏழ் எனும் உலகும் எஞ்சினும்
வாழிய நின் புகழ் !' என்று வாழ்த்தினர்.

பொ :—'ஆணைச் சக்கரத்தை உருட்டியும், தருமங்களைப் பாது காத்தும், வேள்விகளைச் செய்தும் புகழை நீ வளர்க்கவேண்டுமோ? வேண்டுவது இல்லை ; பதினன்கு உலகங்களும் அழிந்தாலும் நின் குணத் தால் வரும் புகழ் அழியாது வாழ்க' என்று கூறி வாழ்த்தினர்கள்.

கு :—அரசனுய் முயன்று பெறும் புகழினும் அரசைத் துறந்துபெற்ற புகழ் பெரியது ; அழியாதது என்பது கருத்து. 'வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை, ஆண்டு மஃதொப்பதில்' (குறள்-363) என் பதும் நினைக்க. ஆதாரமாகிய உலகமழிய ஆதேயமாகிய புகழ் அழியும் ஆதலின் அப்பொழுதும் அழிதல் கூடாது என்ற கருத்தால் 'ஏழினெ டேழெனும் உலகும் எஞ்சினும், வாழிய நின்புகழ்' என வாழ்த்தினர். (20)

## பரதன், இராமனை அழைத்துவரல்பற்றி முரசறைவிக்கச் சத்துருக்கனிடம் கூறல்

**2352.** குரிசிலுந் தம்பியைக் கூவிக் கொண்டலின்
முரசறைந் திந்நகர் முறைமை வேந்தனைத்
தருதுமீண் டென்பது சாற்றித் தானையை
விரைவினி லெழுகென விளம்பு வாயென்ருன்.

குரிசிலும் தம்பியைக் கூவிக் 'கொண்டலின்
முரசு அறைந்து, "இந்நகர் முறைமை வேந்தனைத்
தருதும் ஈண்டு" என்பது சாற்றித் தானையை,
விரைவினில் எழுக! என விளம்புவாய்' என்ருன்.

பொ :—பரதனும், தம்பியாகிய சத்துருக்கனை அழைத்து, மேகத்தின் முழக்கம்போல முரசை முழக்கி, 'இந்நகர்க்கு முறைமைப்படி வேந்த ஞகிய இராமனை இங்கு அழைத்து வருவோம்' என்பதைச் சொல்லிச் சேனையையும் விரைவில் புறப்படுமாறு எழுப்புக என வள்ளுவர்க்குச் சொல்வாயாக எனக் கூறினன்.

கு :—குரிசில்-உபகாரி ; இங்குப் பரதனை அப்பெயரால் கூறினர் ; இராமனை மீட்டும் அழைத்து மக்களுக்கு நன்மை செய எண்ணி னமையின். கூவுதல்-விளித்தல். முரசொலிக்குக் கொண்டல் இடியொலி

யால் உவமையாயிற்று. தன் தாயின் வரத்தால் பரதனே வேந்தன் எனப் பிறர் எண்ணியிருப்பார்கள் ஆதலின் அக்கருத்தை விலக்க, ‘முறைமை வேந்தன்’ என இராமனைக் குறிப்பிட்டான். ஈண்டுத் தருதும் என மாறுக. ஈண்டு என்றது அயோத்திநகரத்தை. தருத லாவது அழைத்துவருதல். முரசறைந்து சொல்லுதற்கு வள்ளுவர் இருக்கவும், வியக்கத்தக்க இச்செய்தியை நகர மக்கள் ஐயுருது ஏற்றுக் கொள்ளும்பொருட்டுச் சத்துருக்கனையே உரைக்கச் செய்தான் பரதன். பின் அவன் ஏவலின்படி வள்ளுவரும் சொல்லுவர். ‘எழுக’ என்பது எழுப்புக என்னும் பிறவினைப் பொருளில் வந்தது. (21)

### சத்துருக்கன் சொல்லக் கேட்ட மக்கள் மகிழ்ச்சி

**2353.** நல்லவ னுரைசெய நம்பி கூறலு
மல்லலி லழுங்கிய வன்பின் மாநக
ரொல்லென வொலித்ததா லுயிரில் யாக்கையைச்
சொல்லெனு மமிழ்திஞற் றுளித்த தென்னவே.

நல்லவன் உரைசெய, நம்பி கூறலும்
அல்லலில் அழுங்கிய அன்பின் மா நகர்,
ஒல் என ஒலித்ததால்; உயிர் இல் யாக்கையைச்
சொல் எனும் அமிழ்தினுல் துளித்தது என்னவே.

பொ :—நல்லவனுகிய பரதன் சொல்ல, அச்சொல்லைச் சத்துருக்கன் நகர மக்கட்குத் தெரிவித்தவுடன் உயிரில்லாத உடம்பைச் சொல்லாகிய அமிழ்துகொண்டு தெளித்தாற்போலத் துன்பத்தில் தோய்ந்து வருந் திக்கொண்டிருந்த அன்புமிக்க அயோத்திமாநகரம் கேட்டு எழுந்து ஒல்லென மகிழ்ச்சி ஆரவாரம் செய்தது.

கு :—நல்லவன் என்றது பரதனை. ‘நிறை குணத்தவன் நின்னினும் நல்லன்’ (1698) எனக் கோசலை இராமனை நோக்கிக் கூறியதும் இங்கு நினைக்க. நம்பி-ஆடவரிற் சிறந்தோன்; இங்குச் சத்துருக்கனை உணர்த் திற்று. அன்பின் மாநகர் என்றது இராமனிடத்தில் அன்புகொண்டுள்ள நகர மக்களை. மன்னனுயிர்த்து மலர்தலையுலகமாதலின் இராமனுகிய மன்னவனைப் பிரிந்திருந்த மாநகர்க்கு உயிரில் யாக்கையை உவமை கூறினர். இறந்தவர்போல வருந்திக்கிடந்த நகர மக்களின் உயிராகிய இராமனை வரச்செய்வதாகச் சொன்ன சொல்லை அமிழ்தமாக உருவகம் செய்தார் ; இறந்தவரை எழுப்பும் ஆற்றல் அமிழ்தத்திற்கு உண் மையின். உயிர் நீங்கிய உடம்பின்மேல் அமிழ்தத் துளிகளைத் தெளித்தல் உண்டு. சிவபிரான் தன் சடையில் உள்ள சந்திரனிலுள்ள

அமிழ்தத் துளிகளைப் பாம்பின் நஞ்சால் சாம்பிய மதுரை மக்கள்மேல் தெளித்தாராக அவர்கள் உயிர்பெற்று எழுந்து மகிழ்ந்த நிலையை நாக மெய்த திருவிளையாடலால் அறியலாம். (22)

## கவிக் கூற்று 2354—2355

**2354.** அவித்தவைம் புலத்தவ
ராதி யாயுள
புவித்தலை யுயிரெலா
மிராமன் பொன்முடி
கவிக்குமென் றுரைக்கவே
களித்த லாலது
செவிப்புல நுகர்வதோர்
தெய்வத் தேன்கொலாம்.

அவித்த ஐம்புலத்தவர் ஆதியாய் உள
புவித்தலை உயிர் எலாம், "இராமன் பொன்முடி
கவிக்கும்" என்று உரைக்கவே களித்தலால், அது
செவிப்புலம் நுகர்வது ஓர் தெய்வத் தேன்கொலாம்.

பொ :—'இராமன் பொன்னாலாய முடியைச் சூடுவான்' என்று சத்துருக்கன் சொல்லவே, ஐம்புலன் அடக்கிய முனிவர் முதலாக உலகில் உள்ள உயிர்கள் எல்லாம் களிப்பு எய்தினமையால், அச்சொல் செவிப் பொறியால் நுகர்வதற்குரிய தெய்வத்தன்மை வாய்ந்த தேன்போலும்!

கு :—அவித்தல் - அடக்குதல். 'அவித்த ஐம்புலத்தவர்' என்றது 'அருங்கேடன்' (குறள்-210) என்பதுபோல வந்தது. களித்தற்கு உரிய ரல்லாரும் களித்தனர் என்பது தோன்ற முனிவரை முற்கூறினர். தலை, ஏழன் உருபு. 'முறைமை வேந்தனைத் தருதும்' என்றதன் கருத்து இராமனுக்கு முடிசூட்டுவோம் என்பது ஆகலின் அதையே சத்துருக்கன் சொன்னதாகக் கூறினர். மக்கள் களிப்பிற்குக் காரணம் ஆயினமையின் அச்சொல் தேன் கொலாம் என்றும், தேனால் விளையும் மயக்கந்தரும் களிப்புப்போலாது தெளிவும் உயர்வுமுள்ள களிப்பைத் தருதலின் அச்சொல்லைத் தெய்வத்தேன்கொலாம் எனவும் நாவின்புலத்தால் நுகரும் தேனை விலக்கவேண்டிச் செவிப்புலம் நுகர்வதோர் தெய்வத் தேன்கொலாம் என்றும் சிறப்பித்தார். (23)

2355. படுமுர சறைந்தனர் பரதன் றம்முனைக்
கொடிநகர்த் தருமவற் கொணரச் சேனையு
முடுகுக வென்றசொன் மூரி மாநக
ருடுபதி வேலையி னுதயம் போன்றதே.

படு முரசு அறைந்தனர், "பரதன் தம்முனைக்
கொடி நகர்த் தரும்; அவற்கொணரச் சேனையும்
முடுகுக" என்ற சொல் மூரி மா நகர்,
உடுபதி வேலையின் உதயம் போன்றதே.

பொ :—வள்ளுவர் ஒலிக்கின்ற முரசினை முழக்கிப், 'பரதன் தன் அண்ணனாகிய இராமனைக் கொடிகள் கட்டியுள்ள அயோத்தி நகரத்திற்கு அழைத்துவருவான்; அவ்விராமனை அழைத்துவரச் சேனையும் விரைவதாக, எனச் சேனையை நோக்கி அவர்கள் கூறிய சொல், வலிமையுள்ள பெரிய அயோத்தி நகரமாகிய கடலில் சந்திரன் உதயம் போன்றதாய் மக்களை மகிழ்ந்து பூரிக்கச் செய்தது.

கு :—முரசறைதற்கு வள்ளுவர் தோன்றா எழுவாய். தம்முன் – அண்ணன்; இராமன். முடுகுக - விரைக. மூரிமாநகராகிய வேலையில் உடுபதி உதயம் என்க. உடுபதி - சந்திரன்; அசுவனி முதலாகிய இருபத்தேழு நாண்மீன்களுக்கும் கணவன் சந்திரன் என்பது புராண மரபு ஆதலின் அவனை அப்பெயராற் கூறினர். சொல் உடுபதி உதயம் போன்றது என்க. சந்திரனின் உதயங் கண்டு கடல் ஆரவாரித்துப் பொங்குதல் போல வள்ளுவர் சொல்லைக் கேட்டவுடன் நகரமக்கள் ஆரவாரித்துப் பூரித்தலின் மாநகரைக் கடலாக உருவகம் செய்தும், சொல்லிற்குத் திங்களின் உதயத்தை உவமித்தும் கூறினர். மூரி – வலிமை. சத்துருக்கன் நகரப் பெருமக்களிடையில் வள்ளுவரிடம் கூற வள்ளுவர் சேனைக்கும் நகர்க்கும் கூறினர் என்று கொள்க. (24)

## படையின் புறப்பாடு

2356. எழுந்தது பெரும்படை யேழு வேலையின்
மொழிந்தபே ரூழியின் முழங்கி முந்தெழ
வழிந்தது கேகயன் மடந்தை யாசைபோய்க்
கழிந்தது துயர்நெடுங் காத றூண்டவே.

எழுந்தது பெரும்படை, ஏழு வேலையின்
மொழிந்த பேர் ஊழியில் முழங்கி; முந்து எழ

அழிந்தது கேகயன் மடந்தை ஆசை; போய்க்
கழிந்தது துயர், நெடுங்காதல் தூண்டவே.

பொ :—நூல்களில் சொல்லப்பட்ட பெரிய ஊழிக்கால இறுதியில் பொங்கி எழும் எழுகடலைப்போலப் பெரும்படை முழங்கிக்கொண்டு எழுந்தது ; அதைக்கண்டு அச்சேனைக்கு முந்தி எழுமாறு கேகயன் மகளாகிய கைகேயியின் ஆசை பெருகிற்று ; இராமனிடம் நெடுங்காலமாகக் கொண்டிருந்த பேரன்பு உள்ளிருந்து தூண்டுவதால் பரதன் முடி சூடாமையால் அவள் கொண்ட துயரம் போய்க் கழிந்தது.

கு :—பெரும்படை முழங்கி எழுந்தது என்க. படையின் ஆரவாரத்திற்கும் பரப்பிற்கும் ஊழியின் ஏழ்கடல் உவமை. சேனையின் எழுச்சியைக் கண்ட கைகேயிக்கு அப்படைக்குமுன் புறப்பட்டு இராமனைக் காண ஆசை பெருகிற்று. கைகேயி தான் செய்த செயலுக்கு இரங்கி இராமனை அழைத்துவர மகிழ்ந்து முற்பட்டாள் என வான்மீகம் கூறுதலும் இங்கு நினைக்க. அழிந்தது–பெருகிற்று ; இச்சொல் இப்பொருள் தருதலை, 'அழியும் புனல் அஞ்சன மாநதியே' (சீவக–1193) என்புழியும் காணலாம். கைகேயி, இராமனையே தன்மகனைக் கொண்டு நெடுங்காலமாகச் செய்துவந்த அன்பினையே நெடுங்காதல் என்றார். அப்பழைய அன்பு உள்நின்று தூண்டுவதால், இடையில் கூனியின் கற்பனையின்படி பரதன் முடிசூடாமையால் அவள் கொண்டிருந்த துயரம் கழிந்தது என்க. 'தாயரும், அருந்தவத்தரும்............ சூழ்வரப்போயினன்' (2384) எனப் பின்னர்க் கைகேயியின் புறப்பாட்டையும் அடக்கிக்கூறுவர். இங்கு ஆசை பெருகியது மட்டும் கொள்க. இவ்வாறு அன்றி, 'இராமனை அரசனைப் பெறவில்லையே என்ற துயர் கழிந்ததாக அவனைக் காண வேண்டும் என்ற பெருங்காதல் தூண்டுவதால் எழுந்ததாகிய பெரும்படை, பெரிய ஊழி இறுதியில் ஏழு வேலை முழங்குவதுபோல முழங்கிக்கொண்டு முந்திப் புறப்படக், கைகேயியின் ஆசைபோய் அழிந்தது' எனக் கொண்டு கூட்டிப் பொருள் கூறலும் ஆம். (25)

## படையின் செலவு 2357—2384

**2357.** பண்ணின புரவிதேர் பகடு பண்டியு
மண்ணினை மறைத்தன; வளர்ந்த மாக்கொடி
விண்ணினை மறைத்தன விரிந்த மாத்துகள்
கண்ணினை மறைத்தன கமலத் தோனையே.

பண்ணின புரவி தேர் பகடு பண்டியும்
மண்ணினை மறைத்தன ; வளர்ந்த மாக்கொடி

விண்ணினை மறைத்தன ; விரிந்த மாத்துகள்
கண்ணினை மறைத்தன, கமலத்தோனையே.

பொ :—அலங்கரிக்கப்பெற்ற குதிரையும், தேரும், யானையும், வண்டியும் தரை முழுமையையும் மறைத்துவிட்டன ; உயர்ந்த பெரிய துகிற்கொடிகள் விண் முழுவதையும் மறைத்துவிட்டன ; படை செல்வதால் விரிந்து எழுந்த பெரிய புழுதி பிரமனுடைய கண்ணையும் மறைத்துவிட்டன.

கு :—பண்ணுதல்-அலங்கரித்தல். பகடு-யானை. கமலத்தோனது கண்ணினை என உருபு வேறுபடுத்துக. கமலத்தோன் – பிரமன். தரையில் படை செல்வதால் எழுந்த துகள் பிரமனுலகம் சென்று அவன் கண்ணை மறைத்தது என அப்புழுதியின் மிகுதி புலப்படுத்திய வாறு. இச்செய்யுள் உயர்வுநவிற்சியணி. (26)

2358. ஈசனிவ் வுலகினை யழிக்கு நாளெழு
மோசையி னிமிர்ந்துள தொல்லென் பேரொலி
காசையிற் கரியவற் காண மூண்டெழு
மாசையி னிமிர்ந்ததவ் வனிக ராசியே.

ஈசன் இவ் உலகினை அழிக்கும் நாள் எழும்
ஓசையின் நிமிர்ந்துளது, ஒல்லென் பேர் ஒலி ;
காசையில் கரியவற் காண மூண்டு எழும்
ஆசையின் நிமிர்ந்தது, அவ் அனிக ராசியே.

பொ :—உருத்திரன் இந்த உலகத்தை அழிக்கின்ற மகாசங்கார காலத்தில் எழுகின்ற ஓசையைக் காட்டிலும் படை எழுச்சியில் எழும் ஒல் என்கின்ற பேரொலி மிக்குள்ளது ; காயாம்பூப்போன்ற கரிய நிறத்தை யுடைய இராமனைக் காணவேண்டும் என்று ஒவ்வொருவர் உள்ளத்தி லும் மூண்டு எழுகின்ற ஆசையைக் காட்டிலும் அந்தச் சேனையின் கூட்டம் மிக்கதாயிற்று.

கு :—உலகை அழிக்கும்போது அண்டகடாகங்கள் வெடிப்பதால் பேரொலி உண்டாகும். காசை-காயா மரம்; கரிய நிறத்திற்குக் காயாம்பூ உவமை. அனிகம் – சேனை. ராசி – கூட்டம். சேனையின் மிகுதிக்கு உறழ் பொருவாகக் காட்டிய ஆசையின் மிகுதியும் இங்குப் புலப்படுத்திய வாறு. அருவப்பொருளாகிய ஆசையை இவ்வாறு உவமிப்பது உண்டு என்பதை, ‘ அம்மன்னர் சேனைதம தாசைபோல் ஆயிற்றால் ’ (771) என்புழியும் காணலாம். (27)

2359. படியொடு திருநகர் துறந்து பன்மரஞ்
செடியொடு தொடர்வன நோக்கிச் சீதையாங்
கொடியொடு நடந்தவக் கொண்ட லாமெனப்
பிடியொடு நடந்தன பெருங்கை வேழமே.

படியொடு திருநகர் துறந்து, பல் மரம்
செடியொடு தொடர் வனம் நோக்கி, சீதையாம்
கொடியொடு நடந்த அக் கொண்டல் ஆம் எனப்
பிடியொடு நடந்தன பெருங்கை வேழமே.

பொ :—கோசல நாட்டோடு அழகிய அயோத்தி நகரையும் துறந்து, பலவகை மரங்கள் செடிகளோடு தொடர்ந்துள்ள காடு நோக்கிச் சீதை ஆகிய பூங்கொடியோடு நடந்த அக் கொண்டல்வண்ணனாகிய இராமனைப்போலப் பெரிய கையையுடைய களிற்றுயானைகள் பிடிகளோடு காடு நோக்கி நடந்தன.

கு :—படி – பூமி ; இங்குக் கோசல நாட்டைக் குறித்தது. சீதையின் நடை, பிடிகளின் நடைக்கும், இராமன் நடை களிற்று யானைகளின் நடைக்கும் உவமை. சீதை உடன்வரச் சென்ற இராமன்போலப் பிடியுடன் வரக் களிறு சென்றது என்பது கருத்து. 'நாகந்தனி வருகின்றது பிடியோடு என நடவா' (2019) என முன்னர்ச் சீதையோடு இராமன் நடந்தமைக்குப் பிடியுடன் வரும் களிற்றை உவமை கூறியிருத்தலும் இங்கு நினைக்க. கொண்டல் போல்வானைக் கொண்டல் என உவமையாகுபெயரால் கூறினர். கொடியொடு கொண்டல் சென்ற வனத்தில் மரங்கள் தனிமையாக இன்றிச் செடியொடு தொடர்ந்தே இருப்பதாகக் கூறிய அழகு நினைக்கத்தகும். (28)

2360. சேற்றிள மரைமலர் சிறந்த வாமெனக்
காற்றளம் பொலிதரு கன்னி மாரொடு
மேற்றிளம் பிடிக்குல மிகலின் மென்னடை
தோற்றிள மகளிரைச் சுமப்ப போன்றவே.

சேற்று இள மரை மலர் சிறந்த ஆம் எனக்
கால் தளம் பொலிதரு கன்னிமாரொடும்
ஏற்று, இளம் பிடிக்குலம், இகலில் மெல் நடை
தோற்று, இள மகளிரைச் சுமப்ப போன்றவே.

பொ :—சேற்றில் வளர்ந்த இளமையான தாமரைமலர்கள், தம்மினும் சிறந்தனவாம் என்று பாராட்டுமாறு பாதங்கள் சிவந்து விளங்கு

கின்ற இளமங்கையரோடும் இளமையான பெண்யானைகளின் கூட்டம் நடையால் எதிர்த்துப், போரில் அவர் மெல்லிய நடைக்குத் தோற்று, அவ்விளமகளிரைச் சுமப்பனபோல மங்கையரைச் சுமந்து சென்றன.

கு :—மங்கையர் பிடியானைகளில் சென்ருர்கள் என்பதை ஏதுத் தற்குறிப்பேற்றமாகக் கூறியவாறு. சிவப்பின் உயர்வு தோன்றத் தாமரைமலர்க்குச் சேற்றிருப்பும் இளமையும் கூறினர். 'கால்தளம்' என்றது பாதத்தை. ஏற்று - எதிர்த்து. இகலில் - போரில். போரில் தோற்றவர் வென்றவரைச் சுமப்பது வழக்கு. "ஓதரு மவைக்களத் திங்....................சோதிசேர் கானம் பாடுந் தோற்றவர் சுமக்க வென்றே" (திருவால. திருவிளையாடல், 57 : 12.) என்பது காண்க. களிறும் ஆண்மகன் போன்றது ஆதலின் அதன்மேல் ஏறிச்செல்லுதல் பெண்மைக்கும் கற்பிற்கும் ஏற்றதன்று என்று மகளிர் பிடிமிசைச் செல்லுதல் மரபு. (29)

**2361.** வேதனை வெயிற்கதிர் தணிக்க மென்மழைச்
சீதநீ ரொடுநெடுங் கொடியுஞ் சென்றன
கோதைவெஞ் சிலையவன் கோலங் காண்கிலா
மாதரி னுடங்குவ வரம்பில் கோடியே

வேதனை வெயில் கதிர் தணிக்க, மென் மழைச்
சீத நீரொடு நெடுங்கொடியும் சென்றன;
கோதை வெம் சிலையவன் கோலம் காண்கிலா
மாதரின் நுடங்குவ, வரம்பு இல் கோடியே.

பொ :—வேதனை தருகின்ற சூரிய கிரணங்களின் வெப்பத்தைத் தணிக்குமாறு விண்ணில் மெல்லிய மேகத்தில் உள்ள குளிர்ந்த நீரில் தோய்ந்து அந்நீர்த் துளிகளோடு நீண்ட கொடிகளும், மாலையணிந்த கொடிய வில்லையுடைய இராமனழகைக் காணுது மெலியும் பெண்டிரைப் போல அசைவனவாய் அளவில்லாமல் கோடிக்கணக்காகச் சென்றன.

கு :—வேதனை - துன்பம். கொடிகள், சேனைக்கு நிழல் செய்வதுமட்டு மன்றித் தம் நீட்சியால் மேகத்தில் தோய்ந்து அங்குள்ள குளிர்ந்த நீர்த் துளிகளைச் சொரிந்தும் அச்சேனைக்குத் தண்மை செய்தன என்க. இதனுல் துகிற்கொடிகளின் உயர்ச்சி தோற்றுவித்தவாறு. சீதம் - குளிர்ச்சி. முன், பிடிகள் சென்றதன்றிக் கொடியும் வரம்பில் கோடி சென்றன என்று பொருள்படுதலின் உம்மை இறந்தது தழீஇய எச்ச வும்மை. கோதை - வில்லுக்கிட்ட மாலை. சிலையின் கொலைத்தன்மை தோற்ற, 'வெஞ்சிலை' என்ருர். இராமன் வடிவழகைக் கண்டு மன

நிறைவு பெற்றிருந்த மகளிர், அவன் கானம் புக்கமையால் அவன் கோலங் காணுது, அசைந்தும் கண்ணீர்விட்டுக்கொண்டும் செல்வது போல இக்கொடிகளும் அசைந்து, மேகத்திலுள்ள நீர்த்துளிகளோடு சென்றன என்க. மாதரின் நுடக்கமும் கண்ணீரும் கொடிகட்கும் இருந்தன என்பது கருத்து. கொடியும் நுடங்குவனவாய் வரம்பில் கோடியாகச் சென்றன என்று இயைக்க. கோடி என்பது பேரெண். (30)

2362. வெண்மதி மீச்செல
மேக மூர்ந்தென
வண்ணல்வெங் கதிரவ
னளவின் மூர்த்தியாய்
மண்ணிடை யிழிந்தொரு
வழிக்கொண் டாலென
வெண்ணரு மன்னவர்
களிற்றி னேகினர்.

வெண் மதி மீச் செல மேகம் ஊர்ந்தென
அண்ணல் வெம் கதிரவன், அளவு இல் மூர்த்தியாய்,
மண்ணிடை இழிந்து, ஒரு வழிக்கொண்டாலென,
எண் அரு மன்னவர் களிற்றின் ஏகினர்.

பொ :—வெண்மையான சந்திரன் மேலே செல்ல, பெருமை வாய்ந்த, எல்லோராலும் விரும்பத்தக்க சூரியன், அளவில்லாத வடிவங்களையுடையனுய் மேகத்தை ஊர்ந்து, தரையில் இறங்கி ஒரு வழியே பயணமானுற்போல அளவு இல்லாத அரசர்கள் வெண்குடைக் கீழ் யானைகள்மேல் சென்ருர்கள்.

கு :—'வெண்மதி மீச்செல' என்பதற்கேற்ப உவமேயத்தில் வெண் குடை வருவிக்க. மேகம் யானைக்குவமை. மன்னர் ஒவ்வொருவரும் சூரியனைப் போன்று ஒளியும் பெருமையும் உடையராய் வெண்கொற்றக் குடைக்கீழ் யானைமேல் சென்ற தோற்றம், சூரியன் பல வடிவங்களைக் கொண்டு, மேலே சந்திரன் செல்ல மேகத்தையூர்ந்து தரையில் இறங்கி ஒருசேரப் பயணமானுற்போல இருந்தது என இல்பொருள் உவமை கூறியவாறு. 'ஊர்ந்து என' என்புழி 'என' சாரியை. வெங்கதிரவன், வெம்மையுள்ள சூரியன் எனலும் ஆம். மூர்த்தி – வடிவம். மன்னவர் பலர்க்கு உவமையாகவேண்டிக் கதிரவன், அளவில் மூர்த்தியாய் மண்ணிடை வழிக்கொண்டமை கூறினர். (31)

2363. தேர்மிசைச் சென்றதோர் சிந்து செம்முகக்
கார்மிசைக் கழிந்ததார் கலியொர் கார்க்கட
லேர்மிசை யிவுளிமே லேகிற் றெங்கணும்
பார்மிசைப் படர்ந்தது பதாதிப் பௌவமே.

தேர் மிசைச் சென்றது ஓர் சிந்து; செம்முகக்
கார்மிசைக் கழிந்தது ஆர்கலி; ஓர் கார்க் கடல்
ஏர்மிசை இவுளிமேல் ஏகிற்று; எங்கணும்
பார்மிசைப் படர்ந்தது, பதாதிப் பௌவமே.

பொ :—தேர்வீரராகிய ஒருகடல் தேர்மேல் சென்றது; யானை வீரராகிய ஒருகடல் சிவந்த புள்ளிகள் நிறைந்த முகத்தையுடைய, மேகம் போன்ற யானைமேல் சென்றது; குதிரை வீரராகிய ஒருகடல் அழகிற் சிறந்த குதிரைமேற் சென்றது. காலாட்படையாகிய கடல் பூமி மேல் எவ்விடத்தும் நடந்துசென்றது.

கு :—கடல் என்ற ஒரு பொருளையுடைய சிந்து, ஆர்கலி, பௌவம் என்ற சொற்களையும், சென்றது, என்ற பொருளையுடைய கழிந்தது, ஏகிற்று, படர்ந்தது என்ற சொற்களையும் அமைத்தது பொருட்பின்வரு நிலை அணி. நால்வகைப்படையுள் ஒவ்வொரு படையும் கடல்போன்ற பெருமையுடையன என்பது கருத்து. செம்முகங் கூறினர் செம்புள்ளிகள் உண்மையின். கார்க்கடல் என்புழிக் கார், கருமையுணர்த்திக் கடலுக்கு இயற்கை அடையாய்நின்றது. பதாதி - காலாட்படை. (32)

2364. தாரையுஞ் சங்கமுந் தாளங் கொம்பொடு
வார்விசி பம்பையுந் துடியு மற்றவும்
பேரியு மியம்பல சென்ற பேதைமைப்
பூரியர் குழாத்திடை யறிஞர் போலவே.

தாரையும், சங்கமும், தாளம், கொம்பொடு,
வார் விசி பம்பையும், துடியும், மற்றவும்,
பேரியும் இயம்பல சென்ற—பேதைமைப்
பூரியர் குழாத்திடை அறிஞர் போலவே.

பொ :—தாரையும், சங்கும், தாளமும், ஊதுகொம்பும், வாரால் கட்டப்பட்ட பம்பையும், உடுக்கையும், பேரியும், மற்ற வாச்சியங்களும் ஒலி செய்யாதனவாய் அறிவில்லாத கீழ்மக்களுக்கு இடையில் அறிஞர் பேசாது செல்லுதல்போலச் சென்றன.

கு :—தாரை – ஊது கருவி. வார்விசி – வாரால் கட்டப்பட்ட. துடி- உடுக்கை. இயம்பலவாய்ச் சென்றன என்று முற்றெச்சமாக்குக. பேதைமைப் பூரியர் – அறிவில்லாத கீழ்மக்கள். அறிஞர், கீழ்மக்களிடையில் பேசின் அச்சொல்லிற்குப் பயன் இன்மையின் வாய்வாளாமை மேற்கொள்வது இயல்பு. 'புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க' (குறள்-719.) எனவும், 'அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தங்கணத்தர் அல்லார்முன் கோட்டிகொளல்' (720) எனவும் வள்ளுவர் கூறியதும் நினைக்க. வாச்சியங்கள் துன்ப நிலைக்கு அறிகுறியாக ஒலி செய்யாது சென்றன என்பது கருத்து. இராமனை அழைத்துவருங்கால் இயம்புதற்காகவே அவை இப்பொழுது உடன் செல்கின்றன. (33)

**2365.** தாவரு நாண்முத லணிய லாற்றகை
மேவரு கலங்களை வெறுத்த மேனியர்
தேவரு மருள்கொளத் தெரியுங் காட்சியர்
பூவுதிர் கொம்பென மகளிர் போயினர்.

தா அரு நாண் முதல் அணி அலால், தகை
மேவரு கலங்களை வெறுத்த மேனியர்,
தேவரும் மருள் கொளத் தெரியும் காட்சியர்,
பூ உதிர் கொம்பு என மகளிர் போயினர்.

பொ :—குற்றம் அற்ற மங்கலநாண் ஆகிய முதன்மையான அணியை அன்றி, அழகு பொருந்திய மற்றைய அணிகலன்களைப் பூணாது வெறுத்த மேனியராய்த் தேவரும் மயங்குமாறு விளங்கும் இயற்கையழகுடையராய்ப் பெண்டிர், பூவுதிர்ந்த கொம்புகள் போலப் போயினர்.

கு :—தா – குற்றம் நாண் – மங்கல நாண் ; இது எல்லா அணிகட்கும் முதன்மையுடையதாய்ச் சிறத்தலின், 'முதலணி' என்றார். மங்கலமகளிர் என்றும் பிரித்தற்கரிய அணியாதலின் அந்த மங்கல நாணைமட்டும் அணிந்து பிற கலன்களை வெறுத்து நீக்கினர். தகை - அழகு. இராமனைப் பிரிந்த துன்பந் தோன்றக் கலன்களை அணியாத நிலையிலும், தேவமகளிரே எனத் தேவரும் மயங்குமாறு இயற்கையழகில் சிறந்து இருந்தனர் மகளிர் என்பது கருத்து. காட்சி - அழகு. அணிகலனை அணியாத பெண்டிர்க்குப் பூவுதிர் கொம்பு உவமையாதலை, 'பூவுதிர்ந்ததொர் கொம்பெனப் புவிமிசைப் புரண்டாள்' (1582) என முன் கூறியுள்ளமையானும் அறியலாம். நாண்முதல் அணி என்பதற்கு நாணம் முதலிய குணங்களாகிய அணி என்று கூறின் மங்கலநாணும் பூணாது மகளிர் போயினர் என்று பொருள் படுதலின் அப்பொருள்

பொருந்தாமை தெளியலாம். இதனால் பெண்டிர் மங்கலவணியிற் பிறிதணி மகிழாமை கூறினர். (34)

**2366.** அதிர்கடல் வையக மனைத்துங் காத்தவன்
விதிவருந் தனிக்குடை மீதி லாப்படை
பொதிபல கவிகைமீன் பூத்த தாகிலுங்
கதிர்மதி நீங்கிய கங்குல் போன்றதே.

அதிர் கடல் வையகம் அனைத்தும் காத்தவன்
விதி வரும் தனிக் குடை மீது இலாப் படை,
பொதி பல கவிகை மீன் பூத்தது ஆகிலும்
கதிர் மதி நீங்கிய கங்குல் போன்றதே.

பொ :—ஒலிக்கின்ற கடலால் சூழப்பட்ட உலகம் முழுமையும் காத்த சக்கரவர்த்தியின், முறையாக வருதற்குரிய ஒப்பற்ற குடை மேல் கவிக்கப் படாத படை, நெருங்கியுள்ள பல குடைகளாகிய மீன்கள் தோன்றி யிருந்தாலும் ஒளிக் கதிர்களையுடைய சந்திரன் நீங்கிய இரவைப் போன்றது.

கு :—காத்தவன் தனிக்குடை, விதிவரும் தனிக்குடை என இயையும். காத்தவன் என்றது சக்கரவர்த்தியை. சிற்றரசர்களின் கொற்றக் குடை களுக்குமேலாகச் சக்கரவர்த்தியின் பெருங்குடை இடை வருவதே முறை யாகலின் 'விதிவரும் தனிக்குடை' என்றார். படை, கங்குல் போன்றது என்க. சிற்றரசர்களின் பல கொற்றக் குடைகளை விண்மீன்களாக உருவகம் செய்தார்; அவை சக்கரவர்த்தியின் குடையினும் சிறியவாக லின். காத்தவன் தனிக்குடை இல்லாத படைக்குக் கதிர்மதி யில்லாத கங்குலை உவமித்தார், பொலிவும் அழகும் இன்மையின். இதனால் சக்கர வர்த்தியின் குடை சந்திரனைப்போன்றது என்பது பெறப்படும். விண் மீன்கள் பல்கோடி யுண்டேனும் வெண்மதி யில்லாத இரவு சிறவாதது போலச் சிற்றரசர் குடைகள் பல நெருங்கியிருப்பினும் சக்கரவர்த்தியின் குடையைப் பரதன் தாங்காமையால் படை சிறப்பாகத் தோன்றவில்லை என்பது கருத்து. பொதிதல் – நெருங்குதல். குவிதல் எனலும் ஆம். கவிகை – குடை. (35)

**2367.** செல்லிய செலவினற் சிறிய திக்கெனச்
சொல்லிய சேனையைச் சுமந்ததே யெனி
லொல்லொலி வேலைநீ ருடுத்த பாரையோர்
மெல்லிய லென்றவர் மெய்யரே கொலாம்.

செல்லிய செலவினுல், 'சிறிய திக்கு' எனச்
சொல்லிய சேனையைச் சுமந்ததே எனில்,
ஒல்லொலி வேலை நீர் உடுத்த பாரை, 'ஓர்
மெல்லியல்' என்றவர் மெய்யரே கொலாம்?

பொ :—பரவிய செலவினுல் திக்குகள் சிறியன எனப் புலப்படுத்திய படையைச் சுமந்தது என்ருல், ஒல்லென்று ஒலிக்கின்ற கடல் நீரை ஆடையாக உடுத்துள்ள பூமியை நிலமகள் என ஒரு மெல்லியலாகக் கூறியவர் மெய் கூறியவர் ஆவரோ? ஆகார்.

கு: —செல்லிய - பரவிய. செல்லுதல் பரத்தல் என்னும் பொருளது ஆதலை 'உரைசெல முரசு வெளவி' (புறநா. 26-7.) என்புழியும் காண லாம். படை. திக்கெலாம் பரவிச் சென்றமையே திக்குகள் சிறியன எனப் புலப்படுத்தியதாக அமைந்தது. 'சொல்லிய சேனை' என்றது கிளக்குனபோலக் கூறிய இலக்கணை வழக்கு. படையின் பெருமையினுல் வரம்பிலாத் திசையும் சிறியதாகத் தோன்றிற்று என்பது கருத்து. 'படை பெருத்தலின் பார் சிறுத்ததோ' (கலிங் 348) என்று படையின் பெரு மையைச் செயங்கொண்டார் விளக்கியுள்ளமையும் காணலாம். திக்கு களும் சிறியன என்னுமாறு பெருத்த சேனையைத் தாங்கிய வன்மை யுடைய நிலத்தை, பாரந்தாங்கவியலாத மெல்லியல்பையுடைய பெண்ணு கச் சொன்னவர்கள் மெய் சொன்னவர்கள் ஆகமாட்டார்கள் என்பது கருத்து. உடுத்த என்ற வினையால் வேலை நீரை ஆடையாகக் குறிப் பான் உருவகஞ்செய்தமை பெறப்படும். "நீருடை யாடை யாளும் நெளித்தனள் முதுகை யென்ருல், பார்பொறை நீக்கினுனென்று உரைத் தது எப்பரிசு மன்னே?" (896) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். இதனுல் படையின் பெருமை கூறினர். (36)

2368. தங்குசெஞ் சாந்தகில் கலவை சார்கில
குங்குமங் கோட்டில கோவை முத்தில
பொங்கிளங் கொங்கைகள் புதுமை வேறில
தெங்கிள நீரெனத் தெரிந்த காட்சிய.

தங்கு செஞ்சாந்து அகில் கலவை சார்கில,
குங்குமம் கோட்டில, கோவை முத்து இல,
பொங்கு இளங்கொங்கைகள் புதுமை வேறு இல,
தெங்கு இளநீர் எனத் தெரிந்த காட்சிய.

பொ :—பெருத்த இளமையான நகில்கள், தம்மிடத்துத் தங்குதற் குரிய செம்மையான சந்தனமும், அகிலும் கலந்த கலவைச் சாந்தும்

அப்பப்படவில்லை ; குங்குமக் குழம்புகொண்டு தொய்யிலும் எழுதப்படவில்லை ; முத்துக்கோவையும் அணியப்பெறவில்லை; புதுமையான அலங்காரங்கள் வேறு ஏதும் பெறவில்லை ; ஆதலால் தெங்கின் இளநீர் என்னுமாறு காணப்பட்ட காட்சியையுடையவாயின.

கு :—செஞ்சாந்து முதலியவற்றால் மறைக்கப்பட்டிருந்தபோது கொங்கைகளைத் தெங்கிளநீர் என்று சொல்லுதற்குரிய காட்சி தடையுண்டிருந்தது ; இராமனைப் பிரிந்த துன்பத்தால் அவை யாவும் அணியப் பெறாமையின் அக்கொங்கைகள் இளநீர் என்னுமாறு காணப்படும் காட்சியையுடையவாயின. காட்சிய, குறிப்புவினைமுற்று. ‘ செம்மாந்த தெங்கின் இளநீரை ஓர் செம்மல் நோக்கி, அம்மா இவை மங்கையர் கொங்கைகள் ஆகும் என்ன ’ (991) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும். குங்குமங்கோட்டுதலாவது, குங்குமக் குழம்புகொண்டு கொங்கையில் தொய்யில் எழுதுதல். இச்செய்யுளிலும் இனிவரும் செய்யுட்களிலும் அணிசெய்யப் பெறாத மகளிரைப்பற்றிக் கம்பர் கூறுவதும் அணிசெயப் பெறாத கண்ணகியைப்பற்றி இளங்கோவடிகள் கூறுவதும் ஒப்புமை உடையவாதல் காணலாம். “அஞ்செஞ் சீறடி அணிசிலம்பு ஒழிய, மென்துகில் அல்குல் மேகலை நீங்கக், கொங்கை முன்றில் குங்குமம் எழுதாள், மங்கல வணியிற் பிறிதணி மகிழாள், கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள், திங்கள் வாண்முகம் சிறுவியர் பிரியச், செங்கயல் நெடுங்கண் அஞ்சன மறப்பப், பவள வாணுதல் திலகம் இழப்பத், தவள வாணகை கோவலன் இழப்ப, மையிருங்கூந்தல் நெய்யணி மறப்பக், கையறு நெஞ்சத்துக் கண்ணகி ” (சிலப்.-அந்திமாலைச். 47–57) என்றது காண்க. இவற்றுள் மகளிர் கொங்கைமுன்றில் குங்குமம் எழுதாமை இச்செய்யுளால் புலப்படுத்தியவாறு. (37)

**2369.** இன்றுணை யவர்முலை யெழுது சாந்தினு
மன்றலந் தாரினு மறைந்தி லாமையாற்
றுன்றிளங் கொடிமுதற் றூறு நீங்கிய
குன்றெனப் பொலிந்தன குவவுத் தோள்களே.

இன் துணையவர் முலை எழுது சாந்தினும்
மன்றல் அம் தாரினும் மறைந்திலாமையால்,
துன்று இளங்கொடி முதல் தூறு நீங்கிய
குன்று எனப் பொலிந்தன குவவுத் தோள்களே.

பொ :—மைந்தர்களின் திரண்ட தோள்கள், தமக்கு இனிய துணையாய மனைவியரின் நகில்களில் தொய்யில் எழுதப்பட்ட குங்குமச் சாந்தினாலும், அவர்கள் அணிந்த மணமிக்க அழகிய மலர்மாலையாலும் மறைக்

கப்படாமையால், நெருங்கிய இளமையான கொடி முதலாகிய புதர்கள் நீங்கிய குன்றுகள் போல விளங்கின.

கு :—மேல் மங்கையர் துன்ப உணர்ச்சியால் சந்தனம் முதலிய அணியாமை கூறியவர், இச்செய்யுளால் மைந்தர், அம்மங்கையர் கூட்டுறவு இன்மையால் சாந்தும் மாலையும் நீங்கிய தோள்களையுடைய ராயினமை கூறினர். எழுது சாந்திற்கு இளங்கொடியும், மாலைக்குத் தூறும் உவமை. தொய்யில் கொடிபோல் எழுதப்படுவதாகலின் அதற்குக் கொடி உவமையாயிற்று. எழுது சாந்தினும் மாலையினும் மறைக்கப் படாத தோள்கள், கொடி முதல் தூறு நீங்கிய குன்றுகளைப் போன்றன என்க. இதனுல், இத்துன்ப வுணச்ச்சி இல்லாதபோழ்தாயின் மைந்தர் தோள்கள் எழுது சாந்தினும் மணமாலையினும் மறைப்புண்டு துன்றிளங் கொடி முதல் தூறுகள் ஓங்கிய குன்றுகள்போலக் காணப்படும் என்பதும் உய்த்துணரலாம். மன்றல் – மணம். துன்று – நெருங்கிய. தூறு–புதர். குவவு – திரட்சி. (38)

**2370.** நறையறு கோதையர் நாட்செய் கோலத்தின்
றுறையற வஞ்சனந் துறந்த நாட்டங்கள்
குறையற நிகர்த்தன கொற்ற முற்றுவான்
கறையறக் கழுவிய கால வேலையே.

நறை அறு கோதையர் நாள் செய் கோலத்தின்
துறை அற, அஞ்சனம் துறந்த நாட்டங்கள்
குறை அற நிகர்த்தன கொற்றம் முற்றுவான்,
கறை அறக் கழுவிய கால வேலையே.

பொ :—மணப்புகை ஊட்டப்பெருத கூந்தலையுடைய பெண்டிர், நாட்காலையில் செய்துகொள்கின்ற அலங்காரத்தின் துறையை மேற் கொள்ளாதுவிட்டமையால் மையைத் துறந்துள்ள கண்கள், வெற்றி யடையும்பொருட்டுக் கறை நீங்கச் சாணைபிடித்த காலவேலைக் குறை வின்றி முழுதும் ஒத்திருந்தன.

கு:—நறை என்றது அகிற்புகை முதலியவற்றின் மணத்தை. கோதை- கூந்தல். அஞ்சனம் - மை. நாட்டங்கள் - கண்கள். கண்கள் வேற் படையை வடிவாலும் தொழிலாலும் ஒத்தனவாயினும், மைதீட்டப்பெற்ற போது முற்றுவமையாதற்குக் குறையாய் அழகுமிக்கிருந்தன ; துன்ப உணர்ச்சியால் கண்கள் இப்போது மை தீட்டப் பெருமையால் தீட்டிய வேலை முற்றும் நிகர்த்தன என்க. வேலைக் கறையறக் கழுவுதலாவது, துரு நீங்கச் சாணைபிடித்தல். மை நீத்த கண்கள் கறை நீத்த வேலை

ஒத்தன என்பது கருத்து. காலவேல் - காலனைப்போலப் பகைவரைக் கொல்லும் வேல். வேலினைச் சிறப்பித்து அடையாக நின்றது. கண்கள் வெற்றிபெற மைக்கறை படிந்திருக்கவேண்டும்; வேல் வெற்றிபெறக் கறையறக் கழுவவேண்டும் என்பதை உளங்கொண்டு நோக்கின் கண்கள், தம் அழகும் வலிமையும் குறைந்த நிலையில் வெற்றிபெறத் தீட்டிய வேலை ஒத்தன என்பதும், வேலினும் கண்கள் சிறந்தன என்ப தும் புலனும். முற்றுவான் - முற்றுதற்கு; கொற்றம் முற்றுதலாவது வெற்றிபெறுதல். இதனுல் செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறந்தமை கூறினர். (39)

**2371.** விரிமணி மேகலை விரவி யார்க்கில
தெரிவைய ரல்குலு ரொலியி றேரெனப்
பரிபுர மார்க்கில பவளச் சீறடி
யரியின மார்க்கிலாக் கமல மென்னவே.

விரி மணி மேகலை விரவி ஆர்க்கில
தெரிவையர் அல்குல், தார் ஒலி இல் தேர் என;
பரிபுரம் ஆர்க்கில பவளச் சீறடி,
அரி இனம் ஆர்க்கிலாக் கமலம் என்னவே.

பொ :—கிண்கிணியின் ஒலியில்லாத தேரைப்போலப் பெண்டிரின் அல்குல், விரிந்த மணிமேகலை கலந்து ஒலிக்கப்பெறவில்லை; வண்டினம் மொய்த்து ஒலி செய்யாத தாமரை மலரைப்போல, அப் பெண்டிரின் பவழம்போன்ற சிவந்த சிறிய அடிகள், சிலம்புகள் ஒலிக்கப் பெறவில்லை.

கு :—மணிமேகலை – எண்கோவைகளையுடையதாய் இடையில் அணி தற்குரிய அணி; அதன் பரப்புத் தோன்ற 'விரிமணிமேகலை' என்ருர். விரவுதலாவது இடையில் கட்டப்பெறுதல். தார் - கிண்கிணி. தாரொலி இல்லாத தேர், மேகலைஒலி இல்லாத அல்குலுக்கும், வண்டின் ஒலி யில்லாத தாமரைமலர், சிலம்பொலி இல்லாச் சீறடிக்கும் உவமை. பரிபுரம் – சிலம்பு. தெரிவையர், பருவம் குறிக்காது பெண்டிர் என்னும் துணையாய்நின்றது. அரியினம் – வண்டினம். 'அல்குல் மேகலை ஆர்க்கில'; 'சீறடி பரிபுரம் ஆர்க்கில' என்புழி, இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றன; 'ஊருணி நீர் நிறைந்தற்று' என்புழிப்போல. இதனுல் மகளிர் அஞ்செஞ்சீறடி அணி சிலம்பு ஒழிந் தமையும், மென்துகில் அல்குல் மேகலை நீங்கினமையும் கூறியவாறு. (40)

**2372.** மல்கிய கேகயன் மடந்தை வாசக
நல்கிய தரிவையர் நடுவிற் கேகொலாம்
புல்கிய மலர்வடம் பூண்கி லாமையா
லொல்கிய வொருவகைப் பொறையு யிர்த்தவே.

மல்கிய கேகயன் மடந்தை வாசகம்
நல்கியது அரிவையர் நடுவிற்கே கொலாம்!
புல்கிய மலர் வடம் பூண்கிலாமையால்
ஒல்கிய ஒருவகைப் பொறை உயிர்த்தவே.

பொ :—வளமிக்க கேகயநாட்டு மன்னன் மகளாகிய கைகேயியின் வரமாகிய சொல், நன்மை செய்தது பெண்டிரின் இடைகட்குமட்டுமே போலும்! ஏனெனின்? நெருங்கிய மலர் மாலையையும், முத்துவடங்களையும் அவர்கள் பூணாமையால், முன் பூண்டு மெலிந்த அவர் இடைகள், ஒருவகைப் பாரத்தை நீங்கப்பெற்றன ஆதலின்.

கு :—இதனால் கைகேயியின் வரம் பயனற்றமை கூறுவார்போல மகளிர், மலரும் வடமும் பூணாமல் சென்றமை கூறினர். மல்கிய கேகயன் என்றது வளமிக்க கேகய நாட்டையுடையவன் என்னுங் கருத்தினது. மடந்தை – கைகேயி. அவள் வாசகமாவது, இராமன் காடாளப் பரதன் நாடாளப் பெற்ற வரமாகிய சொல். அச்சொல்லால் அரிவையர் இடைகள் பொறையுயிர்த்தன என்றது பரம்பரை ஏதுவாகக் கூறியது; 'மாதவி மடந்தை கானற்பாணி கனகவிசயர்தம் முடித்தலை நெரித்தது' (சிலப்.-27: 49–51) என்புழிப்போல. மாதவியின் பாணி, தலை நெரித்தது; இவள் வாசகம் பாரத்தால் இடை நெரியாமல் நல்கியது என்க. கைகேயியின் வரத்தால் இராமன் கானம் புகுந்தான்; அதனால் தயரதன் வானம் புகுந்தான்; அவன் வானம் புகுந்தமையின் வரத்தால் உரிமை பெற்ற பரதனை முடிசூடுமாறு பெருமக்கள் வற்புறுத்துகின்றனர்; அவர்கள் வற்புறுத்தலால் முடிசூடுதற்கு உரியவன் இராமனே ஆதலின் அவனை அழைத்து வருவேம் எனப் படையுடன் பரதன் புறப்படுகின்றான்; அவனுடன் புறப்பட்ட மகளிர் மன்னனையும் இராமனையும் பிரிந்த துன்ப உணர்ச்சியால், மலரும் வடமும் முதலியன பூணாது செல்கின்றனர்; அவர்கள் பூணாமையால் அவர்களுடைய இடைக்குப் பாரம் குறைகின்றது; எனப் பரம்பரை ஏதுவை விரிக்க. கைகேயி பெற்ற வரத்தின்படி பரதன் முடி சூடுதல் நிகழா என்பது பரதன் புறப்பாட்டால் புலப்படுதலின், அவள் வரத்தால் வேறு யார்க்கும் பயன் இல்லை; மகளிர் இடைக்குச் சிறிது பாரம் குறைந்தது அவ்வளவே என்பதை நகைச்சுவை தோன்றப் பெறவைத்த திறம் காண்க. மகளிர் இடை பொறையுயிர்க்குமாறு அவள் வாசகம் நல்கியது என்றது, அவர்கள் மலர் முதலிய சூடாமல் வருந்திச் செல்வதற்கு ஏதுவாயிற்று என்பது கருத்தாகலின், புகழ்வதுபோலப்

பழித்ததாயிற்று. ஒல்கிய - மெலிந்த இடைகள்; வினைப்பெயர். இதனால் பெண்டிர்மையிருங் கூந்தல் நெய்யணி மறந்தமை கூறினர். (41)

2373. கோமகன் பிரிதலிற் கோல நீத்துள
தாமரைச் செல்வியுந் தவத்தை மேவினாள்
காமனு மருந்துயர்க் கடலின் மூழ்கினு
னுமென நிகழ்ந்ததவ் வளவில் சேனையே.

'கோமகன் பிரிதலின், கோலம் நீத்துள
தாமரைச் செல்வியும், தவத்தை மேவினாள்;
காமனும், அருந்துயர்க் கடலில் மூழ்கினான்
ஆம்' என நிகழ்ந்தது அவ் அளவில் சேனையே.

பொ :—அரசகுமாரனாகிய இராமன் பிரிந்தமையால் அழகு நீங்கப் பெற்ற தாமரையில் தங்கும் திருமகளும் தவமேற்கொண்டு சென்று விட்டாள்போலும் என்றும், மன்மதனும் தீர்திறனில்லாத் துன்பக்கடலில் மூழ்கியுள்ளான்போலும் என்றும் கூறுமாறு அந்த அளவு இல்லாத சேனை செல்வப் பொலிவும், உள்ளக்கிளர்ச்சியும் இன்றிச் சென்றது.

கு :—கோமகன் என்றது இராமனை. திருவுடை மன்னரைத் திருமாலாக எண்ணும் மரபுபற்றி அரசச் செல்வத்தைத் திருமகளாகக் கூறினர். அரசன் இல்லாமையால் பொலிவிழந்துள்ள அரசச் செல்வம், பரதன் தவக்கோலம் பூண்டு காடுசெல்கின்றமையின் மேலும் அழகிழந்து தவமேற்கொண்டதுபோல் ஆயிற்று என்பது கருத்து. மைந்தரும் மகளிரும் காதற் குறிப்புச் சிறிதும் இன்றிச் செல்கின்றமையால் அக் காதற்கிளர்ச்சியை உண்டாக்குகின்ற மன்மதன் துன்பக் கடலில் மூழ்கிக் கிடக்கின்றான்போலும் என்று எண்ண நேர்ந்தது என்க. மேவினாள் ஆம் என்க. படையில் செல்வப் பொலிவும், காதற்கிளர்ச்சியும் இல்லாமை விளக்கியவாறு. இனி, அயோத்தி நகரில் உள்ள மைந்தரும் மகளிரும் திருமகளையும், மன்மதனையும் ஒத்த பேரழகினர் ஆதலின் அவர்கள் துன்ப உணர்ச்சியோடு காடு செல்லும் தோற்றம் திருமகள் தவக்கோலம் பூண்டதுபோலவும் மன்மதன் துயர்க்கடலில் மூழ்கியது போலவும் காணப்பட்டது என்றும் பொருள் கூறலாம். இப்பொருட்குக் 'கோலம் நீத்துள அளவில் சேனை' என இயைத்தல் வேண்டும். நிகழ்ந்தது - சென்றது. (42)

2374. மண்ணையும் வானையும் வயங்கு திக்கையு
முண்ணிய நிமிர்கட லொக்கு மென்பதென்

கண்ணினு மனத்தினுங் கமலத் தண்ணற்
றெண்ணினு நெடிதவ ணெழுந்த சேனையே.

மண்ணையும், வானையும், வயங்கு திக்கையும்,
உண்ணிய நிமிர் கடல் ஒக்கும் என்பது என்?
கண்ணினும் மனத்தினும் கமலத்து அண்ணல் தன்
எண்ணினும் நெடிது அவண் எழுந்த சேனையே!

பொ :—அங்கு எழுந்த சேனை, மண்ணுலகத்தையும், விண்ணுலகத்தையும், விளங்குகின்ற எட்டுத் திசைகளையும் உண்ணுதற்காக நிமிர்ந்து பொங்கிவருகின்ற ஊழிகாலக் கடலை ஒக்கும் என்று கூறுவது என்னை? தாமரையில் தங்கியுள்ள பிரமனுடைய கண் பார்வையைக் காட்டிலும், அவன் மனத்தைக் காட்டிலும், அவன் மனத்துள் நின்ற கருத்தைக் காட்டிலும் நெடியது என்று கூறலே அமைவுடைத்து.

கு :—பிரளய வெள்ளம் போன்றது அச்சேனை என்பதைக்காட்டிலும் அவ்வெள்ளத்தையும் படைக்கின்ற படைப்புக் கடவுளாகிய பிரமன் கண்ணினும், மனத்தினும், எண்ணினும் நெடிது என்று சொல்லுதலே பொருத்தம் என்பது கருத்து. பிரமன் விண்ணுலகினும் மேற்பட்டதாகிய தன் உலகத்திலிருந்து தனக்குக் கீழ்ப்பட்ட எல்லா உலகங்களையும் பார்க்கவேண்டியிருத்தலின் அவன் கண்பார்வை நெடிதாதல் துணியலாம்; பிரமன் படைத்த உலகங்கள் யாவும் அவன் மனத்தகத்தே தங்கியிருந்தனவே ஆகலின் அம்மனம் அவ்வுலகங்களினும் நெடிதாதலும் அம்மனத்துள் எண்ணும் எண்ணம் அம்மனத்தினும் நுண்ணிதாய்ப் பரவும் தன்மையதாதலின், அம்மனத்தினும் நெடிதாதலும் பெறப்படும். கண்ணும், மனமும், எண்ணும் ஒன்றின் ஒன்று நுண்ணிதாய் நெடிதாய்ப் பரவும் தன்மையவாகலின் அம்முறையே எண்ணி உறழ்பொருவாக்கினர். மனத்தின் வேருக எண்ணம் எண்ணப்படுவதை, 'மனத்தானை மனத்துள் நின்ற கருத்தானை' (6-19-8) என ஆளுடை அரசு கூறியிருத்தலானும் உணரலாம். கண் என்றது பார்வையை. கமலத் தண்ணல்தன் கண்ணினும் மனத்தினும் என மாறுக. எழுந்த சேனை ஊழிக் கடலினும் அயன் கண்ணினும் மனத்தினும் எண்ணினும் நெடிது என்பது உயர்வுநவிற்சி. (43)

2375. அலைநெடும் புனலறக் குடித்த லாலக
நிலைபெற நிலைநெறி நிறுத்த லானெடு
மலையினை மண்ணுற வழுத்த லாற்றமிழ்த்
தலைவனை நிகர்த்ததத் தயங்கு தானையே.

அலை நெடும் புனல் அறக் குடித்தலால், அகம்
நிலைபெற நிலை நெறி நிறுத்தலால், நெடு
மலையினை மண் உற அழுத்தலால், தமிழ்த்
தலைவனை நிகர்த்தது அத் தயங்கு தானையே.

பொ :—அந்த விளக்கமுடைய சேனை, அலைகளையுடைய பெரிய ஆறு முதலியவற்றின் நீரை அறக்குடித்தலானும், மனம் வழியில் நிலைபெறு மாறு நிலைநிறுத்திச் செல்லுதலானும், மண்ணில் அழுந்துமாறு நீண்ட மலையை மிதித்து அழுத்திச் செல்லுதலானும் தமிழ்த் தலைவனாகிய அகத்தியமுனிவனை ஒத்தது.

கு :—அகத்தியன், இந்திரன் வேண்டுகோளின்படி விருத்திராசுரனை வெளிப்படுத்தவேண்டி அலைகடலைக் குடித்தான் என்பதும், சிவபிரான் திருமணத்தில் தென்திசை உயர்ந்து மக்கள் நெருக்கத்தால் வடதிசை தாழ்ந்ததாக அச்சிவபிரான் கட்டளையால் அகத்திய முனிவன், தென்கோடியிலுள்ள பொதியமலையில் தங்கிப் பூமி சமமாக நிலைபெறு மாறு நெறியே நிறுத்தினன் என்பதும், அவன் வடதிசையிலிருந்து தென்திசை வருங்கால் வழியில் குறுக்கிட்டு உயர்ந்திருந்த விந்திய மலையை மண்ணில் அழுந்துமாறு அழுத்தினன் என்பதும் புராண வரலாறு. இம்மூன்று செயல்களையும் இச்சேனையும் செய்தது எனச் சிலேடைவகையால் கூறி அகத்தியனை உவமையாக்கியவாறு. அகத்தியனுக்குப் பொருந்துமாறு அலைநெடும்புனல் கடலாகவும், அகம் பூமியாகவும், நெடுமலை விந்தியமாகவும் கொள்க. படைக்கு, அகம் மனமாகவும், அம்மனத்தை வழியின்கண் நிலைபெற நிறுத்தியதாகவும் கொள்க. இதனல் சேனை, வழியில் கிடைத்த நீரை உண்டு, மலையினும் காட்டினும் நடந்து வழிமேல் கருத்துடையதாய்ச் சென்றது என்பது பெறப்படும். (44)

**2376.** அறிஞருஞ் சிறியரு
மாதி யந்தமாச்
செறிபெருந் தானையுந்
திருவு நீங்கலாற்
குறியவன் புனலெலாம்
வயிற்றிற் கொண்டநாண்
மறிகட லொத்ததவ்
வயோத்தி மாநகர்.

அறிஞரும் சிறியரும் ஆதி அந்தமாச்
செறிபெருந் தானையும் திருவும் நீங்கலால்,
குறியவன் புனல் எலாம் வயிற்றில் கொண்ட நாள்,
மறி கடல் ஒத்தது அவ் அயோத்தி மாநகர்.

பொ :—அறிவுடைய பெரியவர்கள் முதலாக இளைஞர் ஈருக நெருங்கியுள்ள சேனையும் செல்வப்பொலிவும் நீங்கினமையால் அயோத்திமா நகர், குறியவனாகிய அகத்தியன் நீரையெல்லாம் குடித்த போது நீரில்லாதிருந்த கடலை ஒத்தது.

கு :—திரு - செல்வப் பொலிவு. மக்களும் செல்வப் பொலிவும் இல்லாத அயோத்திமாநகர், நீர் இல்லாக் கடல் போன்றது என்க. குறியவன் - அகத்தியன். வயிற்றிற் கொள்ளுதலாவது, குடித்தல். மறிகடல் என்புழி, அலை மடங்கி மடங்கி வீசுதலை யுணர்த்தும் மறி இங்கு அப்பொருளை உணர்த்தாது கடலுக்கு இயற்கையடையாக நின்றது; குருதிக்கோட்டுக் குஞ்சர நகரம் என்புழிப்போல. நீர் இல்லாக் கடலில் அலை மறிதல் இன்மை நோக்குக. பரதன் படை செல்லும் தன்மையைக் கூறுங் கம்பர், இங்கு இடையில் அயோத்தியின் வறிய நிலையை உணர்த்தியது, அகத்தியனை மீண்டும் உவமை கூறும் விருப்பால்போலும். (45)

2377. பெருந்திரை நதிகளும் வயலும் பெட்புறு
மரங்களு மலைகளு மண்ணுங் கண்ணுறத்
திருந்தலி லயோத்தியாந் தெய்வ மாநக
ருருந்தெரு வொத்ததப் படைசெல் லாறரோ.

பெருந்திரை நதிகளும், வயலும், பெட்புறு
மரங்களும், மலைகளும், மண்ணும், கண் உறத்
திருந்தலில், அயோத்தி ஆம் தெய்வ மா நகர்
அருந்தெரு ஒத்தது அப்படை செல் ஆறு அரோ!

பொ :—அந்தச் சேனை செல்லும் வழி, பெரிய அலைகளையுடைய ஆறுகளும், வயல்களும், விரும்பத்தக்க மரங்களும், மலைகளும், அவை யில்லாத வெறுநிலங்களும், யாவரும் விரும்பிக் காணுமாறு படைகளால் நன்கு திருந்தப்பெற்றுள்ளமையால், அயோத்தி ஆகிய தெய்வத் தன்மைவாய்ந்த பெரிய நகரின் அருமையான தெருக்களைப் போன்று நடப்பதற்கு ஏற்ற நலமுடையதாயிற்று.

கு :—சேனை செல்வதற்குத் தகுதியில்லாது ஆறும், வயலும், மரங்களும், மலைகளும், மண்ணுமாய்க் கிடந்த வழி, இப்போது வழி

அமைப்போரால் நன்கு திருத்தப்பட்டு அயோத்தி நகரத் தெருப்போல நடப்பதற்கு இனியதாய் அமைந்தது என்பது கருத்து. கண்ணுறத் திருந்தலாவது, யாவரும் விரும்பிக் காணுமாறு திருத்தம் அடைதல். படைசெல் ஆறு அருந்தெரு ஒத்தது என்க. (46)

**2378.** தார்கடாங் கோதைதாங் தாமந் தாந்தகை
யேர்கடாங் கலவைதாங் கமழ்ந்தின் றென்பராற்.
கார்கடா மெனமிகக் கடுத்த கைம்மலை
வார்கடா மல்லதம் மன்னன் சேனையே.

'தார்கள் தாம், கோதை தாம், தாமம் தாம், தகை
ஏர் கடாம், கலவை தாம், கமழ்ந்தின்று' என்பரால்—
கார்கள் தாம் என மிகக் கடுத்த கைம்மலை
வார்கடாம் அல்லது, அம்மன்னன் சேனையே.

பொ :—மேகங்களே என்று எண்ணுமாறு மிகவும் ஒப்புமையுடைய யானைகள் ஒழுக்குகின்ற மதநீரின் நாற்றம் அல்லது, மக்கள் மார்பில் அணியும் அடையாள மாலைகளோ, தலையில் சூடும் கண்ணிகளோ, அழகுக்கு அணியும் மலர்மாலைகளோ, அழகுமிக அமைத்த கலவைச் சந்தனமோ அவ்வயோத்தி மன்னன் சேனை கமழவில்லை என்பர். ஆல், அசை.

கு :—தார் - அடையாளமாலை. கோதை - தலையில்சூடுங் கண்ணி. தாமம் - அழகுக்காக மட்டும் அணியும் மாலை. தகை, ஏர் - அழகு; ஒருபொருட் பன்மொழி. கடவுதல் – அமைத்தல். சேனை கமழ்ந்தின்று என இடத்துநிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் ஏற்றி முடிக்கப் படுதலின் ஒருமை முடிபு ஏற்றது. அன்றுயின் தார் முதலியன கமழ்ந் தில என்றே பன்மைவினையான் முடியும். யானையின் மதநாற்றம் தவிர வேறு மணம் ஏதும் கமழவில்லை என்பது கருத்து. மக்கள் துன்ப வுணர்ச்சியால் தார் முதலியன அணிந்திலர் என்பது புலப் படுத்தியவாறு. கடுத்த – ஒத்த. நிறத்தாலும், மழை பொழியும் தொழி லாலும், ஒலியாலும் யானைக்கும் மேகத்திற்கும் ஒப்புமை உண்மையின் 'மிகக் கடுத்த' என்றார். கையையுடைய மலைபோலுதலின் யானை கைம்மலை எனப்பட்டது. கமழ்ந்ததின்று எனற்பாலது கமழ்ந்தின்று எனத் தொகுத்தல்விகாரம் பெற்றது. (47)

**2379.** ஆளுலாங் கடலினு மகன்ற வக்கட
ரேளுலாங் குண்டல முதல தொல்லணி

கேளுலா மின்னொளி கிளர்ந்த தில்லையால்
வாளுலா நுதலியர் மருங்கு லல்லதே.

ஆள் உலாம் கடலினும் அகன்ற அக் கடல்,
தோள் உலாம் குண்டலம் முதல தொல் அணி
கேள் உலாம் மின் ஒளி கிளர்ந்தது இல்லையால்;
வாள் உலாம் நுதலியர் மருங்குல் அல்லதே.

பொ :—நீருலாங் கடலினும் அகன்றதாகிய ஆள் உலாவுகின்ற அப் படைக்கடலில் ஒளி பொருந்திய நெற்றியையுடைய பெண்டிர் இடை, மின்னொளியுடன் விளங்கியதன்றி, மைந்தர் தோள்களில் வந்து உலாவுகின்ற குண்டல முதலாகிய பழமையான அணிகலன்கள் நிறம் பொருந்திய மின்னொளியுடன் விளங்கித் தோன்றவில்லை.

கு :—நீருலாம் கடலினும் ஆளுலாங் கடல் அகலமானது என்பது கருத்து. மகளிர் மருங்குல் உறுப்பாகலின் அது நீக்கமுடியாமையால் மின்னலைப்போல விளங்கிற்றேயன்றி, மைந்தர் குண்டல முதலிய அணிகளை நீக்கிவிட்டமையால் அவ்வணிகளின் மின் ஒளி விளங்கி வீசுதல் இல்லையாயிற்று. மருங்குல் அல்லது கிளர்ந்ததில்லையால் என்க. மருங்குலே மின்னொளியுடன் விளங்கிற்று. குண்டலம் காதணியே யாயினும் நெடுமையால் தோளில் வந்து உலாவுவது இயல்பாகலின், ‘தோளுலாம் குண்டலம்’ என்றார். கேழ் – நிறம்; ளகரம் போலியாக வந்தது; எதுகை நோக்கி. கிளர்தல் - விளங்கி வீசுதல். வாள் - ஒளி. மேல், கடாம் அல்லது தார் முதலியன கமழவில்லை என்று கூறியது போலவே இங்கும் மருங்குல் அல்லது குண்டல முதலியன மின்னொளி தோற்றவில்லை என்று கூறியதாகக் கொள்க. (48)

2380. மத்தள முதலிய வயங்கு பல்லிய
மொத்தன சேறலி னுரையி லாமையிற்
சித்திரச் சுவர்நெடுஞ் சேனை தீட்டிய
பத்தியை நிகர்த்ததப் படையி னீட்டமே.

மத்தளம் முதலிய வயங்கு பல் இயம்
ஒத்தன சேறலின், உரை இலாமையின்,
சித்திரச் சுவர் நெடுஞ் சேனை தீட்டிய
பத்தியை நிகர்த்தது அப்படையின் ஈட்டமே.

பொ :—அச்சேனையின் தொகுதி, மக்கள் பேச்சு இல்லாமல் செல்வ தாலும், மத்தளம் முதலியவாய் விளங்கும் பல வாத்தியங்களும்

அவர்களை ஒத்தனவாய் ஒலி அடங்கிச் செல்லுதலாலும், சுவரில் நெடிய சேனையை வரைந்த சித்திரப் பத்தியை ஒத்தது.

கு :—மக்கள் துன்ப வுணர்ச்சியால் உரையாடாது சென்றனர்; அவர்களைப்போலவே வாத்தியங்களும் ஒலி அடங்கிச் சென்றன. எனவே எவ்வகை ஒலியும் இல்லாத சேனையின் தோற்றம் ஓவியத்தில் வரைந்த சேனையின் உருவம்போலக் காணப்பட்டது என்க. 'சேனை தீட்டிய சித்திரப் பத்தி' என்க. பத்தி-வரிசை. ஈட்டம் – தொகுதி. மேல், (2364) தாரையும் சங்கமும் முதலிய வாத்தியங்கள் இயம்பலவாய்ச் சென்றமை கூறினர்; இங்கு அவை இயம்பாமையாலும், மக்கள் உரையாடாமையாலும், படையின் தோற்றம் இத்தகையது என்பதை கூறினர்; ஆதலின் கூறியது கூறலன்மை அறிக. (49)

2381. ஏடறு கோதையர் விழியி னெய்தகோ
லூடுற வுரந்தொளைத் துயிரு ணுவகை
யாடவர்க் கரும்பெருங் கவச மாயது
காடுறை வாழ்க்கையக் கண்ண னண்ணலே.

ஏடு அறு கோதையர் விழியின் எய்த கோல்
ஊடு உற உரம் தொளைத்து உயிர் உணுவகை,
ஆடவர்க்கு அரும் பெரும் கவசம் ஆயது—
காடு உறை வாழ்க்கை அக் கண்ணன் நண்ணலே.

பொ :—அவ் இராமன் காட்டில் தங்கும் வாழ்க்கையை மேற்கொண்டது, மலர் அணியாத கூந்தலை உடைய மகளிர் தம் கண்ணால் எய்த பார்வையாகிய அம்பு, தம் மார்பில் பொருந்தித் தொளைத்துத் தம்முடைய உயிரை உண்ணுதபடி ஆண்மக்களுக்கு அரிய பெரிய கவசமாக அமைந்தது.

கு :—நண்ணல் கவசம் ஆயது என்க. ஏடு, ஆகுபெயராய்ப் பூவை உணர்த்தியது. 'புல்கிய மலர்வடம் பூண்கிலாமையால்' (2372) என மகளிர் மலரணியாமையை முன்னும் கூறியது காண்க. இன்ப உணர்ச்சியும், துன்ப உணர்ச்சியும் பகலும் இருளும்போன்று மாறுபட்டதாகலின் இராமன் காடு சென்றமையால் துன்புற்றுச் செல்லும் மைந்தர் உள்ளத்தில் மகளிர் பார்வையால் உண்டாகும் இன்ப உணர்ச்சி இலதாயிற்று என்பது கருத்து. காரியமாகிய துன்ப உணர்ச்சி கவசமாயதைக் கண்ணன் நண்ணல் ஆகிய காரணத்தின்மேல் ஏற்றி, 'நண்ணல் கவசமாயது' என்றார். மகளிர் பார்வையை அம்பாக உருவகம் செய்தமைக்கேற்பக் கண்ணன் நண்ணலைக் கவசமாக உருவகம் செய்தார்; அக்

கோல் தொளைக்காதபடி தடுத்தலின். ஆடவர் துன்ப உணர்ச்சியால் காமக்குறிப்பு இலராயபோது மகளிர்மட்டும் அத்துன்ப உணர்ச்சியின்றிக் காதற்பார்வை பார்த்தார்கள் என்பது யாங்ஙனம் பொருந்தும் எனின்? அவர்களும் துன்ப உணர்ச்சியுடையவர்களே என்பதை, 'ஏடறு கோதையர்' என்பதால் அறிவித்துள்ளார்; இவ்வாறு கூறியதன் நோக்கம் அப்பெண்டிரும் பொதுவகையால் நோக்கினரேயன்றிக் காதற்குறிப்பான் நோக்கவில்லை என்பதைப் பெறவைப்பதேயாகும். முன்னர் மகளிரின் பொதுநோக்கைக் கண்டும் காதல் மீக்கூர்ந்து வருந்துகின்ற மைந்தர் துன்ப உணர்ச்சியால் இப்பொழுது அந்நிலை எய்திற்றிலர் என்பதே கருத்து. (50)

**2382.** கனங்குழைக் கேகயன் மகளிற் கண்ணிய
சினங்கிடந் தெரிதலிற் றீய்ந்தவே கொலா
மனங்கனைங் கொடுங்கணை கடந்த வாடவர்
மனங்கிடந் துண்கில மகளிர் கொங்கையே.

கனங்குழைக் கேகயன் மகளின் கண்ணிய
சினம் கிடந்து எரிதலின் தீய்ந்தவே கொலாம்—
அனங்கன் ஐங் கொடுங்கணை கடந்த ஆடவர்
மனம், கிடந்து உண்கில மகளிர் கொங்கையே.

பொ :—மன்மதனுடைய ஐந்து கொடிய மலர்க்கணைகளையும் துன்ப உணர்ச்சியால் வென்ற மைந்தர்களின் மனங்கள், மகளிர் கொங்கைகளில் கிடந்து அவற்றின் அழகை நுகர்தல் இலவாயின; (ஆதலின்,) கனமான குழையை அணிந்த கைகேயியின் காரணமாக இடம்பெற்ற சினம், தம்மிடத்துக்கிடந்து எரிதலால் அந்த மனங்கள் தீய்ந்துவிட்டன போலும்!

கு :—கேகயன் மகள் – கைகேயி; அவளுக்குக் கனங்குழை அடை. மகளிற் கண்ணிய சினம் – மகளால் இடம்பெற்ற வெகுளி. கைகேயியின் செயல் காரணமாக மைந்தர்க்குச் சினம் மனத்தில் மூண்டு எரிந்தது என்பது கருத்து. இராமன் முடி சூடுவதில் மகிழ்ச்சிகொண்ட மைந்தர்க்கு நம்பி தம்பியரை (1648) உவமை கூறியிருத்தலின், அவ்விராமன் முடி தவிர்ந்தமைக்குக் காரணமாயிருந்த கைகேயியின்மேல் சினங்கொள்ளும் நிலையிலும், அவன் தம்பியராகிய பரத இலக்குவரைப் போல அவர் மனங்கள் சினத்தீயால் எரிந்தன என்று கொள்க. மனங் கிடந்துண்கிலாமையால் தீய்ந்தனவே போலும் என்க. மனங்கள் தீய்ந்திலவாயின் கிடந்துண்கிலாமை கூடாது என்ற அருத்தாபத்தி அளவையால் அவை தீய்ந்தனவேபோலும் என்பார் அதற்கு ஏதுவாகச் சினம்

கிடந்து எரிதல் கூறினர். 'சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி' (குறள்-306) எனச் சினத்தை நெருப்பாகக் கூறியிருத்தலாலும் 'தன்னையே கொல்லும் சினம்' (குறள்-305) எனச் சினம் தனக்கிடமானவரைக் கொல்லுதல் கூறியிருத்தலானும், சினம் தீய்த்தற்கு உரியது என்பது பெறப்படும்; ஆயினும் அருவப்பொருளாய மனம் தீய்ந்தது என்றல் பொருந்தாமை நோக்கித் தீய்ந்தவேகொலாம் என ஐயந்தோன்றக் கூறியவாறு. காமுகர்களாகிய மைந்தர்கள் மக்கள் கூட்டத்திற்கிடையிலும் தம் காதலியர் நகில்களைக் கண்டு மகிழ்வது உண்டு என்பதையும் அத்தன்மையோரை அறிஞர் இகழ்வதுமுண்டு என்பதையும், 'கோட்டியுள் கொம்பர் குவிமுலை நோக்குவான் ஓட்டை மனவன் உரம்இலி என்மரும்' (பரிபாடல். 12-50) என்பதால் அறியலாம். அத்தகைய மைந்தரும் இங்கு அது செய்திலராயினர் என்பது கம்பர் கருத்தாகும். ஐங்கணைகள்: தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, நீலம் என்பன. (51)

2383. இன்னண நெடும்படை யேக வேந்தலுந்
தன்னுடைத் திருவரைச் சீரை சாத்தினன்
பின்னிளை யவனொடும் பிறந்த துன்பொடு
நன்னெடுந் தேர்மிசை நடத்தன் மேயினன்.

இன்னணம் நெடும்படை ஏக, ஏந்தலும்,
தன்னுடைத் திரு அரைச் சீரை சாத்தினன்;
பின் இளையவனொடும், பிறந்த துன்பொடும்,
நல் நெடுந்தேர்மிசை நடத்தல் மேயினன்.

பொ :—இவ்வாறு நெடியபடை செல்லாநிற்கப் பரதனும் தன் அழகிய அரையில் மரவுரி தரித்துக்கொண்டவனாய்ச் சத்துருக்கனோடும் மனத்தே தோன்றிய துன்பத்தோடும் நல்ல உயர்ந்த தேர்மேல் ஏறிச் செல்லத் தொடங்கினன்.

கு :—ஏந்தல் - ஆண்மையிற் சிறந்தவன்; பரதன். சீரை-மரவுரி. சாத்தினன் என்ற முற்றெச்சம், மேயினன் என்பதுகொண்டு முடியும். முன்னிளையவனாகிய இலக்குவனை விலக்கப் பின்னிளையவன் எனச் சத்துருக்கனைக் குறித்தார். பிறந்த துன்பொடு எனத் துன்பத்திற்கு அடையாக்குக. இராமன் வனத்தில் வாழ நேர்ந்ததே என்று நினைக்குந் தொறும் மிகும் துன்பத்திற்கு இடமாகவே பரதன் இருந்தான் என்பது கருத்து. பரதன் சீரை சாத்தினமை கூறவே, அவன் நிழலனைய சத்துருக்கனும் சீரை சாத்தினமை பெறப்படுதலின் அது கூறாராயினர். நடத்தல் - செல்லுதல். (52)

## தாயர் முதலியோர் உடன்வரப் பரதன் செல்லுதல்

**2384.** தாயரு மருந்தவத் தவருந் தந்தையி
னுயமந் திரியரு மளவில் சுற்றமுந்
தூயவந் தணர்களுந் தொடர்ந்து சூழ்வரப்
போயினன் றிருநகர்ப் புரிசை வாயிலே.

தாயரும், அருந் தவத்தவரும், தந்தையின்
ஆய மந்திரியரும், அளவு இல் சுற்றமும்,
தூய அந்தணர்களும், தொடர்ந்து சூழ்வரப்
போயினன்—திரு நகர்ப் புரிசை வாயிலே.

பொ :—தாயர் மூவரும் அரிய தவசியரும், தந்தையின் மந்தணத்திற்குரிய மந்திரியர் அறுபதினுயிரரும், அளவில்லாத சுற்றத்தவரும், தூய்மையுடைய அந்தணர்களும் தன்னைத் தொடர்ந்து சூழ்ந்துவர, அழகிய அயோத்திநகரின் மதில்வாயிலைக் கடந்து சென்றான்.

கு :—கோசலை, கைகேயி, சுமித்திரை ஆகிய மூவரும் உடன் சென்றமை புலப்படத் 'தாயரும்' என்று பொதுவகையால் கூறினர். ஆயம் - இரகசியம், மந்தணம். பரதன், மன்னனாகவில்லை ஆதலின் அவன் மந்திரியர் என்னாது தந்தையின் மந்திரியர் என்றார். இனி, தந்தையின் ஆய மந்திரியர் என்பதற்குத் தந்தைபோல அன்பினராய மந்திரியர் எனலுமாம். 'அளவில் சுற்றம்' என்பதற்கு ஐம்பெருங் குழுவிலும் எண்பேராயத்திலும், அமைச்சர் ஒழிந்தோர் எனப் பொருள் கூறலுமாம். புரிசை வாயிற்குப் போயினன் என நான்கனுருபு வருவித்துரைப்பினும் ஆம். (53)

## சத்துருக்கன் கூனியைக் கொல்ல முயலுதல்

**2385.** மந்தரைக் கூற்றமும் வழிச்செல் வாரொடு
முந்தியே போதல்கண் டிளவ லோடியார்த்
தந்தரத் தேற்றுவா னழன்று பற்றலுஞ்
சுந்தரத் தோளவன் விலக்கிச் சொல்லுவான்.

மந்தரைக் கூற்றமும், வழிச்செல்வாரொடும்
உந்தியே போதல் கண்டு, இளவல் ஓடி ஆர்த்து,
அந்தரத்து ஏற்றுவான் அழன்று. பற்றலும்,
சுந்தரத் தோளவன் விலக்கிச் சொல்லுவான்.

பொ :—மந்தரையாகிய எமனும் வழியில் செல்லுவாரோடு சேர்ந்து உந்திச் செல்வதை இளவலாகிய சத்துருக்கன் பார்த்து, விரைந்து சென்று, ஆரவாரித்துக்கொண்டு, அவளை விண்ணுலகிற்கு அனுப்ப எண்ணிக் கோபித்துப் பற்றுதலும், அழகிய தோளையுடைய பரதன் அத் தம்பியை விலக்கிச் சொல்லுகின்றான்.

கு :—இராமனைக் காட்டிற்கு அனுப்பித் தயரதன் உயிர்விடக் காரண மாயிருந்தவள் ஆதலின், 'மந்தரைக் கூற்றமும்' என அவளைக் கூற்ற மாக உருவகஞ் செய்தார். மந்தரைக் கூற்றமும் என்புழி உம்மை இழிவு சிறப்பும்மை ; இராமனைக் காடு புகுமாறு சூழ்ச்சி செய்தவளும் அவனை மீட்கச் செல்வாரோடு போதல் இழிவாதல் காண்க. கூனியாதலின் உந்திச்செல்லுதல் கூறினர். அந்தரத்தேற்றுதலாவது, கொல்லுதல். அழன்று – கோபித்து. குற்றம் செய்தாரையும் தண்டிக்காத தோள் ஆதலின் அதன் பெருமை தோன்ற, 'சுந்தரத்தோள்' என்று சிறப் பித்தார். தோளவன் – பரதன். (54)

### பரதன் தடுத்துக் கூறுதல் 2386—2387

**2386.** முன்னையர் முறைகெட
முடித்த பாவியைச்
சின்னபின் னஞ்செய்தென்
சினத்தைத் தீர்வெனே
லென்னையின் றென்னையன்
றுறக்கு மென்றலா
லன்னையென் றுணர்ந்திலெ
னையநா னென்றான்.

"முன்னையர் முறைகெட முடித்த பாவியைச்
சின்னபின்னம் செய்து என் சினத்தைத் தீர்வெனேல்,
'என்னை இன்று என் ஐயன் துறக்கும்' என்று அலால்,
'அன்னை' என்று உணர்ந்திலென் ஐய! நான்" என்றான்.

பொ :—ஐய ! நம் மரபில் தோன்றிய முன்னோர் ஒழுகிய முறை கெடுமாறு முடித்த (தாயாகிய) பாவியைச் சின்னபின்னம் செய்து நான் என் வெகுளியைத் தீர்த்துக்கொள்வேனாயின், என்னை இப்பொழுது என் ஐயனாகிய இராமபிரான் துறப்பான் ; என்று எண்ணி அது செய்தி லேன் அலால், 'அன்னை' என்று நினைந்திலேன் என்று கூறினன்.

கு :—முன்னையர் முறை என்றது 'மூத்தவற்குரித்து அரசு' என்ற முறைமையை. முறைகெட இராமனைக் காட்டுக்கனுப்பித் தந்தையைக் கொன்று, உலக மக்களைக் கலக்கமுறச் செய்த பெரும்பாவத்தையுடையவள் கைகேயி ஆதலின் அவளைப் 'பாவி' என்றான். சின்னபின்னஞ் செய்தலாவது வாளால் ஒரு வீச்சால் கொல்லாது சிறிது சிறிதாக அவள் உடலைச் சிதைத்தல். அவ்வாறு செய்யவேண்டும் என்று அவன் உள்ளம் விரும்பினாலும், இராமன் துறப்பானே என்ற அச்சத்தால் அது செய்யாது விடுத்தானே அன்றி அன்னை என்ற உணர்ச்சியால் அன்று என்பது கருத்து. 'தாயெனும் பெயர் எனைத் தடுக்கற் பாலதோ?' (2262) என்றதும் இங்கு நினைக்க. (55)

**2387.** ஆதலான் முனியுமின் றைய னந்தமில்
வேதனைக் கூனியை வெகுண்டு மென்னினுங்
கோதிலா வருமறை குலவு நூல்வலாய்
போதுநா மென்றுகொண் டரிதிற் போயினான்.

'ஆதலால், முனியும் இன்று ஐயன்; அந்தம் இல்
வேதனைக் கூனியை வெகுண்டும் என்னினும்,
கோது இலா அருமறை குலவு நூல் வலாய்!
போதும் நாம்' என்று கொண்டு அஃதில் போயினான்.

பொ :—'குற்றம் அற்ற அரிய வேதங்களோடு விளக்கம் உடைய மற்றைய நூல்களையும் கற்று வல்லவனே! முடிவிலாத வேதனைக்குக் காரணமாகிய கூனியை வெகுண்டோமாயினும், ஐயன் இன்று நம்மை வெகுள்வான்; ஆதலால், நாம் போவோம்' என்று அமைதி கூறி அரிதில் அழைத்துக்கொண்டு போனான்.

கு :—கூனி செய்த குற்றம் பெரிதாயினும், நாம் அவளை வெகுண்டு கூறுதலும் கூடாது என்பது கருத்து. கூனியை வெகுண்டுமென்னினும் ஐயன் இன்று முனியும் ஆதலால் நாம் போதும் என்று கொண்டு அரிதிற் போயினான் என்று இயையும். வெகுண்டோமாயினும் ஐயன் முனியும் என்றால் அவளைக் கொல்லுதல் கூடுமோ என்பது உணர்த்திய வாறு. மறை நூல் வல்ல உனக்குத் தாழ்ந்த பிறப்பினளாகிய கூனியைக் கொல்லுதல் பொருந்துமோ என்ற கருத்துப் புலப்பட 'நூல் வலாய்' என்று விளித்தான். இலக்குவன் கைகேயியை வெகுண்ட போது இராமன் கூறிய அமைதி மொழிகள் இங்கு எண்ணத் தகுவன. இலக்குவன் நிலையில் சத்துருக்கனும், இராமன் நிலையில் பரதனும் இங்குத் திகழ்வது காணலாம். (56)

## இராமன் தங்கிய சோலையில் பரதன் தங்குதல் 2388—2389

**2388.** மொய்பெருஞ் சேனையு மூரி ஞாலமுங்
கைகலந் தயலொரு கடலிற் சுற்றிட
வையனுந் தேவியு மிளைய வாளியும்
வைகிய சோலையிற் றானும் வைகினன்.

மொய் பெருஞ் சேனையும் மூரி ஞாலமும்
கை கலந்து அயல் ஒரு கடலின் சுற்றிட,
ஐயனும் தேவியும் இளைய ஆளியும்
வைகிய சோலையில் தானும் வைகினன்.

பொ :—நெருங்கிய பெரிய சேனையும், பெருமையுடைய உலக மக்களும் உடன் கலந்து தனக்கு அருகில் கடல்போலச் சுற்றித் தங்க, இராமனும் சீதையும், இளைய சிங்கமாகிய இலக்குவனும் தங்கிய சோலையில், பரதன் தானும் தங்கினன்.

கு :—மொய்த்தல் – நெருங்குதல். மூரி - பெருமை. ஞாலம், ஆகுபெயராய் ஞாலத்துள்ள மக்களையுணர்த்திற்று. கைகலத்தல், ஒருசொல் நீர்மைத்து. இராமன் தங்கிய சோலை இதுவென்பதைச் சுமந்திரன் சொல்ல அறிந்து, அச்சோலையில், பரதனும் தன் சேனையுடன் தங்கினன் என்க. இராமன் தங்கிய இடம், இராமனைப்போன்று சிறப்பினதாகப் பரதன் கருதி, அவ்விடத்தில் தங்கினன். சுற்றிடத் தானும் வைகினன் என இயையும். ஆளி, உவமை ஆகுபெயராய் இலக்குவனை உணர்த்திற்று. வைகுதல் - தங்குதல். (57)

**2389.** அல்லணை நெடுங்கணீ ரருவி யாடினன்
கல்லணை கிழங்கொடு கனியு முண்டிலன்
வில்லணைத் துயர்ந்ததோள் வீரன் வைகிய
புல்லணை மருங்கிற்றான் பொடியின் வைகினன்.

அல் அணை நெடுங் கண் நீர் அருவி ஆடினன்,
கல் அணை கிழங்கொடு கனியும் உண்டிலன்,
வில் அணைத்து உயர்ந்த தோள் வீரன் வைகிய
புல் அணை மருங்கில், தான் பொடியின் வைகினன்.

பொ :—பரதன் அன்றிரவு, பெருகிய நெடிய கண்ணீராகிய அருவி ஆடினனாய், மலையில் பொருந்திய கிழங்கோடு கனியும் உண்ணாதவனாய், வில்லை அணைத்துக்கொண்டுள்ள உயர்ந்த தோளையுடைய வீரனாகிய

இராமன் படுத்திருந்த புல்லால் ஆகிய அணையின் பக்கத்தில் புழுதியில் படுத்தான்.

கு :—அல் – இரவு. நெடுங்கண் அணைநீர் என இயைத்து, அணைதலாவது பெருகுதல் எனக் கொள்க. கண்ணீராகிய அருவி என உருவகித்துப் பரதனுடைய துன்பக் கண்ணீரின் மிகுதி தோற்றுவித்து அவ்வருவியில் அவன் ஆடினன் எனவும் கூறினர். நீராடினவர் உண்ணுதலே முறையாகவும், அருவியாடிய பரதன், கிழங்கொடு கனியும் உண்ணுதவனாய்ப் பொடியில் வைகினன் என அவன் துன்ப உணர்ச்சியைப் புலப்படுத்தியவாறு. அறுசுவை உண்டியேயன்றி விரதிகள் உண்ணற்குரிய கிழங்கும் கனியும் கூட உண்ணுதவனானன் எனப் பொருள்படுதலின் கனியும் என்புழி உம்மை இழிவுசிறப்பும்மை. வில் அணைத்த தோள் - உயர்ந்த தோள் என்க. அகரம் தொகுத்தல். தன் அண்ணன் வைகிய புல்லணை ஆகலின் அவ்வணைமேலுள்ள நன்மதிப்பால் அதில் வைகுதலும் செய்யாது, அதனை அகலவுங்கில்லாது அப்புல்லணையின் அருகில் புழுதியிலேயே பரதன் படுத்தான் என்க. புல் பரப்பிய அணை ஆகலின் புல்லணை எனப்பட்டது. தான் என்றது பரதனை. ஆடினன், உண்டிலன் என்ற முற்றெச்சங்கள் வைகினன் என்ற வினையைக் கொண்டு முடிந்தன. (58)

### பரதன் ஊர்திகளை விடுத்துக் காலால் நடத்தல்

**2390.** ஆண்டுநின் றூண்டகை யடியி னேகினு
னீண்டிய நெறியெனத் தானு மேகினன்
றூண்டிடு தேர்களுந் துரக ராசியுங்
காண்டகு கரிகளுந் தொடரக் காலினே.

ஆண்டு நின்று, ‘ஆண் தகை, அடியின் ஏகினன்
ஈண்டிய நெறி’ எனத் தானும் ஏகினன்;
தூண்டிடு தேர்களும் துரக ராசியும்
காண்தகு கரிகளும் தொடரக் காலினே.

பொ :—ஆண்மையிற் சிறந்த இராமன் அங்கு நின்று நெருங்கிய வழியில் காலால் நடந்துசென்றான் என அறிந்து, பரதனும், தூண்டி ஓட்டுதற்குரிய தேர்களும் குதிரைகளின் தொகுதியும் காணத்தக்க அழகுடைய யானைகளும் தன் பின் தொடர்ந்துவர அங்குநின்று காலால் நடந்து சென்றான்.

கு :—ஆண்டகை என்றது இராமனை. அவன் காடு நண்ணும் நிலையில் ஊர்தியொன்றும் இன்றிக் காலால் நடந்துசென்ற வழியாகலின் பரதன், தேர் முதலிய ஊர்திகள் இருந்தும் அவற்றில் ஊர்ந்து செல்லாது காலால் நடந்துசென்ருன் என்பது தோன்ற, தேர்களும் துரக ராசியும், கரிகளும் தொடரக் காலின் ஏகினுன் என்ருர். இச்செயல்களால் பரதன் இராமனிடம் கொண்டுள்ள நன்மதிப்புப் புலனும். (59)

ஆறுசெல் படலம் முற்றிற்று.

# 11. குகப்படலம்

பரதனும், அவனுடன் வந்தோரும், படைகளும் கங்கை கடந்து செல்லக் குகன் உதவியமை பேசுதலின் இது குகப்படலம் என்று பெயர் பெற்றது. இப்பகுதிக்கு, கங்கைப் படலம், கங்கைகாண் படலம், குகன் பரதனை எதிர்கொண்டு வழிவிடு படலம், பரதனைக் குகன் எய்து படலம் என்றும் சில சில சுவடிகளில் தலைப்பு வரையப்பட்டுள்ளது. இப்படலத்துள் அமைந்த பாடல் 72. மிகைப் பாடல்கள் 2. சந்தம் 6.

இராமனை வனத்தினின்று அழைத்துவந்து முடிசூட்டுவிக்க எண்ணிய பரதன், முனிவரும், அமைச்சரும், நகர மக்களும், நால்வகைச் சேனையும் உடன்வரப் புறப்பட்டுக் கங்கையின் வடகரையை நெருங்கித் தங்குகிறான். பரதன் படையொடு போந்தமைகொண்டு, இராமனை ஒழித்து அரசுரிமையைத் தனக்கே நிலைத்ததாக ஆக்கிக்கொள்ளக் கருதி வந்தான் என்று பிறழ உணர்ந்த குகன், சினம் அடைகிறான். தன் படையினரையெல்லாம் அழைத்து, அவரை நோக்கிப் பரதன் வந்திருத்தலையும், அவன் வந்ததனால் விளையும் தீமையினையும் விரித்துக் கூறி, அவற்றை விலக்கத் தானும் தன் படையினரும் மேற்கொள்ளவேண்டிய கடமைகளையும் உணர்த்திக்கொண்டு கங்கையின் தென்கரையில் நிற்கிறான். அதுகண்ட சுமந்திரன், பரதனிடம் சென்று குகன் பெருமைகளைக் கூறி, அவன் உன்னைக் காண விரும்பிக் கங்கையின் தென்கரையில் நிற்கின்றான் என்பதனையும் உணர்த்துகிறான்.

அதுகேட்ட பரதன் மகிழ்ந்து, 'குகன் இராமபிரானால் தழுவிக் கொள்ளப்பட்ட தோழனாயின் அவனும் எனக்கு அண்ணனே. ஆதலால் யானே சென்று அவனைக் காண்பேன்' என்று காதல் மிக்கெழத் தம்பி பின் தொடரக் கடிது சென்று கங்கையின் வடகரையை அடைந்து நிற்கிறான். அவனுடைய மாசடைந்த மெய்யும், மரவுரியுடையும், நகையிழந்த முகமும், மிக எழுந்த துயரும் கண்ட குகன், கையில் நின்று வில் நழுவிக் கீழே விழத் துணுக்கமும் வியப்பும் ஒருங்கெய்துகிறான். பரதனும், சத்துருக்கனும் முறையே இராமலக்குவர்களைப்போல் விளங்குதலையும், அவர் பூண்ட தவக்கோலத்தினையும், பரதன் அடைந்த எல்லையற்ற துன்பத்தினையும், அவன் இராமன் சென்ற தென்றிசை நோக்கித் தொழுது நின்ற நிலையினையும் கண்டு, அவன்பால் தவறு நினைந்தமைக்கு இரங்குகிறான். தன் படையினரை நோக்கிப் பரதன் இராமன்பால் கொண்ட அன்பும், அவன் பிரிவால் அடைந்த துன்பும், அவன் மேற்கொண்டுள்ள தவநிலையும் கூறித் தான் சென்று, அவன் கருத்தறிந்து திரும்பும் வரை யாரும் கங்கையினைக் கடந்து செல்லாதவாறு நெறிகளைக் காக்கும்படி கட்டளையிட்டுவிட்டுக் கங்கையின் வடகரை நோக்கி, ஒரு நாவாயில் வருகிறான். வந்து, எதிரே தொழுதுகொண்டு

நின்ற பரதனை நிலமிசை விழுந்து வணங்குகிருன். பிரமனும் வணங்கும் பெருமை வாய்ந்த பரதனும் குகனடிகளில் விழுந்து வணங்குகிருன். தக்கோருடைய தலையினும் நினைவினும் தங்கிய சிறப்பினையுடைய குகன், தன்னை வணங்கிய பரதனை மனங்களிசிறப்ப வாரித்தழுவுகிருன். தழுவிய குகன், இராமனை அழைத்துச் சென்று, முடிசூட்டுவிக்கும் பொருட்டுப் பரதன் வனம் நோக்கி வந்தது தெரிந்து, அவன்பால் தவறு நினைந்ததற்கு வருந்தி, அவனை மீட்டும் நிலமிசை விழுந்து வணங்கி மகிழ்ச்சி மிக அவன் அடித்தலங்களை இறுகப் பற்றியவனுகி, 'தாய்சொற் கொண்டு தந்தை உதவிய நாட்டைத் தீவினையினின்று நீங்குதல் போலத் துறந்து நீங்கிக் கவலை தோய்ந்த முகத்துடன் வந்த உன் இயல்புகொண்டு நோக்கினல், ஆயிரம் இராமரும் உனக்கு ஒப்பாகார்; ஏழை வேடனுகிய யான் உன்னை எவ்வாறு புகழ்வது? சூரியனுடைய ஒளி மற்றைக்கோள்களின் ஒளியினும் விஞ்சி நின்று விளங்குதல்போல, நீயும் சூரியன் வழி வந்த மிக்க பெருமையினையுடைய அரசர் புகழ்களினும் மிக்க புகழ்பெற்று, அவரினும் மேம்பட்டு விளங்குகின்றனை!' என்று இன்னேரன்ன இயைபுடைய பல பாராட்டுரைகளைக் கூறி, அவனிடம் அன்புசெய்வானுயினுன்.

அப்பொழுது பரதன், தென்றிசை நோக்கித் தொழுது, குகனை நோக்கி, 'நம் அண்ணன் எங்கே தங்கினுன்?' என்று வினவிக் குகனெடு விரைந்து சென்று, அவன் காட்ட, இராமன் தங்கிய புற்பாயல் கண்டு, கண்ணீர் பெருக நின்று, மீட்டும் 'இராமன் துயின்ற இடம் இதுவாயின், அவன்பால் மிக்க நேயம் பூண்டு தொடர்ந்து வந்த இலக்குவன் தங்கி யிரவைக் கழித்த இடமும் காட்டுக' என்று வினவ, குகன், வில்லையூன்றிப்பிடித்த கையோடு, பெருமூச்செறிந்து, கண்கள் நீர் சொரிய, இரவு கழியும் வரை இலக்குவன், கண் இமைத்தலும் செய்யாது இராமனைக் காத்து நின்றமை கூறினுன். அதுகேட்ட பரதன் 'இராமன் தம்பியர் என்று ஒத்த தோற்றமுடைய எங்களுள், யான், இராமனுக்கு எல்லையற்ற துன்பம் விளைதற்குக் காரணமாயினேன்; இலக்குவன் அத்துன்பங்களைத் துடைக்க நின்ருன்; அவன் அன்புக்கு எல்லையுண்டோ?' என்று பாராட்டித் தன்னிலை நோக்கி வருந்தி, அன்று அங்கே புழுதியில் தங்கி, குகனை நோக்கி 'நீ நாங்கள் கங்கை கடந்தேறச் செய்தால் எங்களைத் துயர்க்கடலினின்று கரையடைவித்து, இராமன்பால் சேர்வித்ததாகும்' என்ருன். எனலும், குகன் கட்டளையால், வெள்ளிமலையும், பொன்மலையும், குபேரனுடைய புட்பக விமானமும் போன்ற ஓடங்கள், கங்கையும் போதிய இடமில்லாததாம்படி வந்து நெருங்கின. அவற்றில் சுமந்திரன், பரதனுடன் வந்தவர்களையும், படைகளையும் முறையால் ஏற்றிக் கங்கையின் தென்கரை அடைவிக்கிருன். முனிவர்கள், தேவர்களைப்போல வான்வழிச்சென்று அக்கரை யடைகின்றனர். உடன் வந்தோரும், படைகளும் கங்கை

கடந்தமை அறிந்த பரதன், தானும், தம்பியுடனும், தாய்மாருடனும் படகில் கங்கை கடப்பானுயினன். படகு செல்லும்பொழுது குகன் பரதனே வினவ, பரதன், குகனுக்குத் தாய்மாரையும், தாய்மார்க்குக் குகனையும் அறிமுகமாக்குகிருன். குகன் வணங்கக் கோசலை ஆசியுரை வழங்குகிருள். படகு தென்கரையடைகின்றது. படகினின்றிறங்கிய தாய்மார் சிவிகையிற் செல்கின்றனர். பரதன், குகன் உடன்வரக் கண்ணீர் வெள்ளத்திடை பலகாதவழி காலால் நடந்து சென்று பரத்துவாச முனிவனுடைய தவப்பள்ளியை அணுகுகின்றனன். அம்முனிவன் வேதியர்களோடு பரதனை எதிர்கொள்வானுயினன் என்பது இப்படலத்தின் கதைச் சுருக்கம்.

இவ் அயோத்தியா காண்டத்துள் சிறந்த பகுதியாய்த் திகழ்வது குகப்படலம். இதன்கண் வரும் கதா பாத்திரங்களின் பேச்சுக்கள் சந்தருப்பத்துக்கு ஏற்ற சந்தந்தழுவியமைந்து மெய்ப்பாடுகளொடு இணைந்து சிந்தைக்கினிய செவிக்கினியவாய் விளங்குகின்றன.

இப்படலத்துள்ள, 'வந்தெதிரே தொழுதானை' என்று தொடங்கும் பாடல், நீண்ட காலமாய்ப் புலவர் குழுவில் விவாதிக்கப்படுவது. அது, குகனும் பரதனும் ஒருவரையொருவர் கிட்டி வணங்கித் தழுவியிணங்கியமை பேசுவது. இதனுள் வணங்கினவர் இவர்; தழுவினவர் இவர் என்று அவரவர் இயற்பெயரால் கூருமல், மலர் இருந்த அந்தணனும் தனை வணங்குமவனும் அவனடி வீழ்ந்தான் எனவும், தகவுடையோர் சிந்தையினும், சென்னியினும் வீற்றிருக்கும் சீர்த்தியான் தழுவினுன் எனவும் புனைபெயரால் கூறி, ஆசிரியர் உய்த்துணர வைத்திருப்பது ஊன்றிநோக்கி உணரத்தக்கது.

பரதன் கங்கையை அடைந்து குகனெடு தொடர்புகொண்டு கங்கை கடந்ததனை வான்மீகம், 84 முதல் 89 வரையுள்ள சருக்கங்களால் பேசுகிறது. அங்கே குகன் வரவைச் சுமந்திரன் தெரிவிக்க, குகனைக்காணப் பரதன் இசைந்ததாக மட்டும் உளது. இராமாவதாரம், பரதன் குகனை எதிர்கொண்டு சென்றதனையும் கூறுகிறது. வான்மீகத்துள் குகன் பரதனை வணங்கியது மட்டும் காணப்படுகிறது. கம்பர், இருவரும் ஒருவரை ஒருவர் வணங்கினமை பேசுகிருர். குகனுக்கும் இலக்குவனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடல்களும், இராமனும் இலக்குவனும் இரவில் பொழுதுகழித்தமை குகன் கூறக் கேட்ட பரதன் துயர் நிலையும் வான்மீகத்துள் விரித்துப் பேசப்பட்டுள்ளன. தாய்மாரைக் குகனுக்குப் பரதன் அறிமுகப்படுத்தும் பகுதி வான்மீகத்துள் இல்லை. பரதன் கங்கை கடக்க உதவிய குகன் மரக்கலங்கள் ஐந்நூறு என்கிறது வான்மீகம். வரம்பில் நாவாய் என்பர் கம்பர். குகன் பரதன் முதலியவர்களை ஏற்றிச்சென்ற படகின் பெயர் ஸ்வஸ்திகம் என்று வான்மீகத்தால் தெரிகிறது.

---

# 11. குகப்படலம்

### பரதன் கங்கையையடைதல்

**2391.** பூவிரி பொலன்கழற் பொருவி ருனையான்
காவிரி நாடன்ன கழனி நாடொரீஇத்
தாவர சங்கம மென்னுந் தன்மைய
யாவையு மிரங்கிடக் கங்கை யெய்தினன்.

பூ விரி பொலன் கழல் பொரு இல் தானையான்
காவிரிநாடு அன்ன கழனி நாடு ஒரீஇத்
தாவர சங்கமம் என்னும் தன்மைய
யாவையும் இரங்கிடக் கங்கை எய்தினன்.

பொ :—பொன்னுற் செய்த பூவேலைப்பாடுகள் பரவிய வீரக் கழலணிந்த ஒப்பற்ற படையினையுடைய பரதன், காவிரிநாடுபோலும் மருத நில வளம்வாய்ந்த கோசல நாட்டைவிட்டு நீங்கி, நிலைத்திணையும் இயங்குதிணையும் ஆக வழங்கப்படும் தன்மை வாய்ந்த எல்லாவுயிர்களும் இரங்கும்படி கங்கையாற்றை அடைந்தான்.

கு:—பொலன் - பொன். கழல் – செருப்பு, வீரக்கழலும் ஆம். பொலன் பூ விரிகழல் என இயையும். 'பூவரு பொலன்கழல் பொருவில் மன்னவன்' (1403) என்றார் முன்னும். கழனி – வயல். ஒரீஇ - விட்டு நீங்கி. தாவரம் சங்கமம் என்பவை முறையே ஸ்தாவரம், ஜங்கமம் என்னும் வடமொழிகளின் திரிவு. தாவரம் – நிலைத்திணை. சங்கமம்– இயங்குதிணை. இராமனைப் பிரிந்தமையால் விளைந்த பரதனது சோக நிலைகண்டு நிற்பனவும், திரிவனவுமாகிய உயிரினங்களெல்லாம் இரங்கின என்றவாறு. (1)

### பரதனொடு சென்ற சேனையுள் யானையின் மிகுதி

**2392.** எண்ணருஞ் சுரும்புதம் மினத்துக் கல்லது
கண்ணகன் பெரும்புனற் கங்கை யெங்கணு
மண்ணல்வெங் கரிமதத் தருவி பாய்தலா
லுண்ணவுங் குடையவு முரித்தன் றாயதே.

எண்ணரும் சுரும்புதம் இனத்துக்கு அல்லது
கண் அகன் பெரும் புனல் கங்கை எங்கணும்
அண்ணல் வெம் கரி மதத்து அருவி பாய்தலால்
உண்ணவும் குடையவும் உரித்தன்று ஆயதே.

பொ :—அகன்ற இடத்திற் பாயும் நீர்ப்பெருக்கினையுடைய கங்கையின் எல்லாத்துறைகளிலும், பெருமைபொருந்திய விரும்பத்தக்க யானைகளின் மத அருவி பாய்தலால், அக்கங்கை நீர், அளவிடற்கரிய வண்டின் இனத்துக்குமட்டும் உண்ணவும் குடையவும் உரித்தாயினதன்றி, மற்றை உயிர்களுக்கு உண்ணவும் முழுகவும் உரியதன்றாயிற்று.

கு :—சுரும்பென்றது வண்டினத்துள் ஒருவகையின. தம் - அசை. குடைதல் - முழுகுதல். யானைமதநீர் பாய்ந்து கங்கைநீர் உண்ணவும் குடையவும் உரித்தன்றாயது என்றது, பரதனுடுவந்த யானைப்படையின் மிகுதி கூறியவாறு. உரித்தாதல் - தகுதியுடையதாதல். (2)

## குதிரைகளின் மிகுதி

2393. அடிமிசைத் தூளிபுக் கடைந்த தேவர்தம்
முடியுறப் பரந்ததோர் முறைமை தேர்ந்திலே
நெடிதுயிர்த் துண்டவு நீந்தி நின்றவும்
பொடிமிசைப் புரண்டவும் புரவி யீட்டமே.

அடி மிசைத் தூளி, புக்கு, அடைந்த தேவர்தம்
முடி உறப் பரந்தது ; ஓர் முறைமை தேர்ந்திலேம் ;
நெடிது உயிர்த்து உண்டவும் நீந்தி நின்றவும்
பொடி மிசைப் புரண்டவும் புரவி யீட்டமே.

பொ :—(பரதனைத் தொடர்ந்து சென்ற) குதிரைக்கூட்டம், நெடிதாக மூச்சுவிட்டுக் கங்கைநீரை உண்டனவும், அந்நீருள் நீந்தி நின்றனவும், புழுதியிற் புரண்டனவும் ஆயின ; அவை அடியிடுதலால் எழுந்த தூசியானது, (பரதன் செல்லுதல் காண) வந்தடைந்த தேவர்களுடைய முடியிலே மிகவும் பொருந்திப் பரவிற்று ; அவ்வாறு பரவினமைக்கு ஓரியையும் அறிந்தேமில்லை.

கு :—தூளி, பொடி என்பவை புழுதி என்னும் பொருளுடையன. முறைமை - இயைபு. புரவி யீட்டம் - குதிரைத் தொகுதி. புரவியீட்டம் உண்டவும், நீந்தி நின்றவும், புரண்டவும் ஆயின என ஒரு முற்றுச் சொல் வருவித்து முடிக்க. குதிரைகளின் அடியிடுதலால் எழுந்த தூளி

தேவர்களின் முடியுறப் பரந்தது என்றது அக்குதிரைகளின் மிகுதி கூறியவாறு. (3)

## காலாட்படையின் மிகுதி

2394. பாலையேய் நிறத்தொடு பண்டு தான்பட
ரோலையேய் நெடுங்கட லோடிற் றில்லையான்
மாலையேய் நெடுமுடி மன்னன் சேனையாம்
வேலையே மடுத்ததக் கங்கை வெள்ளமே.

பாலை ஏய் நிறத்தொடு பண்டு தான் படர்,
ஓலை ஏய் நெடுங்கடல் ஓடிற்றில்லையால்;
மாலை ஏய் நெடுமுடி மன்னன் சேனையாம்
வேலையே மடுத்தது அக் கங்கை வெள்ளமே.

பொ :—மாலை பொருந்திய நீண்ட முடியினையணிந்த தசரத சக்கரவர்த்தியின் காலாட்படையாகிய கடலே அந்தக் கங்கைநீர்ப்பெருக்கு முழுவதையும் உண்டுவிட்டது; ஆதலால் பால்போன்ற வெண்மை நிறத்தொடு முன்பு சென்று சேரும் ஒலிமிக்க பெருங்கடலினிடத்து அக்கங்கை அன்று விரைந்து சேரவில்லை.

கு :—இங்கு, 'மாலையேய் நெடுமுடி மன்னன்' என்றது தசரத சக்கரவர்த்தியை. வேலை - கடல். மடுத்தல் - உண்ணல். திரைக்கடல் உட்கொள்ளும் கங்கை வெள்ளத்தைப் படைக்கடல் உண்டொழித்தது என்று பரதனுடன் வந்த காலாட்படையின் மிகுதி கூறியவாறு. முன் பாடல்களில் முறையே ஆனைப் படையின் மிகுதியும், குதிரைப்படையின் மிகுதியும் கூறப்பட்டமையால் இங்கு, 'சேனையாம் வேலை' என்பதற்குக் காலாட்படையாகிய கடல் என்று பொருள் கொள்ளலாயிற்று. கங்கைநீர் வெண்மைநிறமுடையது என்பது, 'ஆறெலாம் கங்கையே ஆய' (1049) என ஆசிரியர் முன் கூறியதனாலும் விளங்கும். ஏய்தல்- ஒத்தல், பொருந்துதல் என்று பொருள்படும். ஓல் - ஒலி. (4)

## பரதன் பின் சென்ற படையின் அளவு

2395. கான்றலை நண்ணிய காளை பின்படர்
தோன்றலை யவ்வழி தொடர்ந்து சென்றன
வான்றவ ருணர்த்திய வக்கு ரோணிகண்
மூன்றுபத் தாயிரத் திரட்டி முற்றுமே.

கான்தலை நண்ணிய காளை பின் படர்
தோன்றலை, அவ்வழி தொடர்ந்து சென்றன
ஆன்றவர் உணர்த்திய அக்குரோணிகள்
மூன்று பத்தாயிரத்து இரட்டி முற்றுமே.

பொ :—(கணிதநூல் வல்ல) அறிஞர் வரையறுத்துத் தெரிவித்த அறுபதினாயிரம் அக்குரோணி படை முழுவதும், காட்டை அடைந்த இராமன் பின் செல்லுகின்ற பரதனை அப்போது பின்பற்றிச் சென்றன.

கு :—கான் – காடு. தலை, இடப்பொருளில் வந்த ஏழனுருபு. காளை, உவமையாகுபெயராய் இங்கே இராமனை உணர்த்திற்று. படர்தல் - செல்லுதல். தோன்றல் - தலைவன்; இங்கே பரதனை உணர்த்தி நின்றது. அவ்வழி - அப்போது. ஆன்றவர் – நிரம்பிய அறிஞர். அக்குரோணி – படையளவு. மூன்று பத்தாயிரம் – முப்பதாயிரம். மூன்று பத்தாயிரத்து இரட்டி – அறுபதினாயிரம். 21870 தேரும், 21870 யானையும், 65610 குதிரையும், 109350 காலாளும் உடையது ஒரு அக்குரோணி என்பர். அக்ஷௌஹிணீ என்னும் வடசொல் அக்குரோணி எனச் சிதைந்து நின்றது. மூன்று பத்தாயிரத்திரட்டி அக்குரோணி முற்றும், காளைபின் படர் தோன்றலை அவ்வழி தொடர்ந்து சென்றன என இயையும். (5)

### படைவரக்கண்ட குகன் நினைவும் செயலும் 2396-2401

2396. அப்படை கங்கையை யடைந்த வாயிடைத்
துப்புடைக் கடலினீர் சுமந்த மேகத்தை
யொப்புடை யண்ணலோ டுடற்ற வேகொலா
மிப்படை யெடுத்ததென் றெடுத்த சீற்றத்தான்.

அப்படை கங்கையை அடைந்த ஆயிடைத்
'துப்பு உடைக் கடலின் நீர் சுமந்த மேகத்தை
ஒப்பு உடை அண்ணலோடு உடற்றவேகொலாம்
இப்படை எடுத்தது' என்று எடுத்த சீற்றத்தான்.

பொ :—அந்தப் படை கங்கைக் கரையையடைந்த அப்பொழுது, 'பவளத்தையுடைய கடனீரையுட்கொண்ட மேகத்தை ஒத்த இராமனுடன் போர் செய்தற்கே இப்படை யெழுந்தது' என்று மிக்க சினத்தையுடையவனும்.

கு :—இது முதல் ஆறு செய்யுட்கள் ஒரு தொடர். சீற்றத்தான், நோக்குவான், புருவப்போர்விலான், தானையான், கல்வியான், தோளி

ஞன் (ஆகிய) குகனெனும் பெயரிய கூற்றின் ஆற்றலான், சுரிகையன், வாயினன், மொழியினன், தீயினன், துடியினன், கொம்பினன் ஆகி, கூவினன் தென்கரைவந்து தோன்றினன் என இயையும். ஆயிடை - அப்பொழுது. துப்பு – பவளம். அண்ணல்-பெருமையிற் சிறந்தோன்; இராமன். உடற்றுதல் – போர் செய்தல். கொல் ஆம் என்பவை அசை நிலைகள். எடுத்தல் - உயர்தல்; மிகுதல். (6)

2397. குகனெனும் பெயரிய கூற்றி னாற்றலான்
றொகைமுரட் சேனையைத் துகளி னோக்குவா
னகைமிகக் கண்கடீ நாற நாசியிற்
புகையுறக் குனிப்புறும் புருவப் போர்விலான்.

குகன் எனும் பெயரிய கூற்றின் ஆற்றலான்,
தொகை முரண் சேனையைத் துகளின் நோக்குவான்,
நகை மிகக் கண்கள் தீ நாற நாசியில்
புகை உறக் குனிப்புறும் புருவப் போர் விலான்.

2398. மையுற வுயிரெலா மிறுதி வாங்குவான்
கையுறு கவரயில் பிடித்த காலன்றா
னையைநூ றுயிர முருவ மாயின
மெய்யுறு தானையான் வில்லின் கல்வியான்.

மை உறவு உயிர் எலாம் இறுதி வாங்குவான்,
கை உறு கவர் அயில் பிடித்த காலன்தான்
ஐ ஐநூறுயிரம் உருவம் ஆயின
மெய் உறு தானையான், வில்லின் கல்வியான்.

பொ :—கூட்டமான வலிய படையைத் துகள்போல இகழ்ந்து நோக்குபவனும், (வெகுளியால்) சிரிப்பு மிக, கண்களில் கனல் தோன்ற, மூக்கிலே புகையெழ, வளைந்த புருவத்தினையும், போர் செய்தற்குரிய வில்லினையும் உடையவனும், குற்றத்தோடு தொடர்புடைய உயிர்களை யெல்லாம் அவ்வுயிர்களின் வாழ்நாள் முடிவில் கவர்பவனான சினத்தினை யுடைய கவர்த்த சூலப்படையினை யேந்திய இயமன், வியக்கத்தக்க ஐந்திலக்கம் உருவுகொண்டாற்போலத் தோன்றும் உண்மையான படையினரை யுடையவனும், விற்றொழிற் கல்வியுடையவனும், குக னென்று வழங்கும் பெயரினையுடையனுமான கூற்றுவனுடைய ஆற்றல் வாய்ந்தோன்.

கு :—பொருளியைபு கருதி 7, 8 ஆகிய இரண்டு செய்யுட்களும் இங்கே சேர்த்துத் தரப்பட்டுள்ளன. நோக்குவான், புருவப்போர்விலான், தானையான், கல்வியான், குகன் எனப் பெயரிய கூற்றினுற்றலான் என இயைக்க. தொகை - கூட்டம் ; 'நின்னடியார் தொகை நடுவே' (44, 1.) என்பது திருவாசகம். முரண் - வலிமை. துகள் - தூசி= புழுதி. பெருங்கூட்டமான வலிய படையினை ஒரு பொருட்டாயெண்ணாத குகனது தறுகண்மை தோன்றத் 'தொகை முரட்சேனையைத் துகளின் நோக்குவான்' என்றார். நகை – சிரிப்பு. நாறுதல் – தோன்றுதல். சிரிப்பு மிகுதலும், கண்களில் கனல் தோன்றுதலும், மூக்கிற் புகை தோன்றலும், புருவம் வளைதலும் வெகுளியால் நிகழ்வன. புருவம் வளையும்போதே வில்லும் வளைந்ததென்பார், 'குனிப்புறும் புருவப் போர்விலான்' என்றார். மையுறவு - குற்றத்தின் தொடர்பு. மை - குற்றம். உறவு - தொடர்பு. உயிர்களுக்குக் குற்றத் தொடர் பாவது, தீவினையுடையவாதல். இயமன் தீவினை செய்த உயிர்களை உடல் கழிந்தபின், தன் உலகில் உய்த்து, அவ்வினைப்பயனுகர்விப்பதலின், 'மையுற வுயிரெலாம் இறுதி வாங்குவான்' என்றார். கைத்தல் – வெகுளல் ; 'மருவலரைக் கைக்கும்' (423) என்பது தஞ்சை வாணன்கோவை. கைத்தல் இங்கே கையென முதனிலையளவாய் நின்றது. ஐ - வியப்பு. ஐ நூறாயிரம் - ஐந்திலட்சம். தானை–காலாட் படை. குகன் ஐந்திலட்சம் படையினரையுடையவன் என்பது, 'ஐயிரு பத்தோடைந்தாயிரருளராணை, செய்குநர் சிலைவேடர் தேவரின் வலியார்' (2072) என்று ஆசிரியர் முன்னே கூறியமையாலும் விளங்கும். ஐந்திலக்கம் படை வீரருள் ஒவ்வொருவரும் காலனை ஒப்பார் என்பார், 'காலன்றான் ஐயை நூறாயிரம் உருவமாயின மெய்யுறுதானை' என்றார்.

(7, 8)

2399. கட்டிய சுரிகையன் கடித்த வாயினன்
வெட்டிய மொழியினன் விழிக்குந் தீயினன்
கொட்டிய துடியினன் குறிக்குங் கொம்பினன்
கிட்டிய தமரெனக் கிளருந் தோளினான்.

கட்டிய சுரிகையன், கடித்த வாயினன்,
வெட்டிய மொழியினன், விழிக்கும் தீயினன்,
கொட்டிய துடியினன், குறிக்கும் கொம்பினன்
'கிட்டியது அமர்' எனக் கிளரும் தோளினான்.

பொ :—உடைவாளை இடைவாரில் பிணித்து, உதட்டைக் கடித்து, கடிய மொழிகளைக் கூறி, தீயெழ விழித்து, துடியைக் கொட்டி, கொம்

பினை ஊதி, போர் நெருங்கியது என்று பூரிக்கின்ற தோள்களை உடையவனாகி,

கு:—சுரிகை - உடைவாள். கட்டிய சுரிகையன் என்பது குகன் போர்க்கு ஆயத்தமானமை குறித்தது. வாய் இங்கே உதடு. சினம் மூண்ட நிலையில் உதட்டைப் பல்லால் கடித்தல் இயல்பு. கடித்த வாயினன் என்பதற்கு நெறுநெறென்ற ஒலியெழக் கடித்தபல்லையுடையனாகி என்று பொருளுரைத்தலும் ஆம். இப்பொருளில் வாய், பல் என்று பொருள்பட நின்றது; சினம் மூண்ட நிலையில் பல்லைக் கறித்தலும் இயல்பு. வாள் வீச்சுப்போலத் துன்பந்தரும் மொழியினை வெட்டிய மொழி என்றார். விழிக்குந் தீயினன் என்பது, பகைவர்பால் எரிதவழ நோக்கும் இயல்பு குறித்தது; 'நீ உடன்று நோக்கும்வாய் எரிதவழ' (புறநானூறு. 38. 5) என்பதும், 'தீவிழித்து' (திருப்பாவை. 23) என்பதும் இங்கு நோக்கத் தகும். துடி - ஒரு வகைப் பறை. கொம்பு - துளைக்கருவியில் ஒன்று; ஊதுகொம்பு. குறித்தல் – ஊதுதல். துடி கொட்டியதும், கொம்பு ஊதியதும் படையினர் ஓரிடத்தில் தொகும் பொருட்டு. அமர் கிட்டியது என மாற்றி இயைக்க. அமர் - போர். கிளர்தல் - பூரித்தல். 'கிட்டியது அமர் எனக் கிளரும் தோளினன்' என்பதனுடன், 'போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலங்கொள் திண்டோள்' என ஆசிரியர் முன்னே (992) கூறியதும் நோக்கத் தகும். (9)

**2400.** எலியெலா மிப்படை யரவம் யானென
வொலியுலாஞ் சேனையை யுவந்து கூவினன்
வலியுலா முலகினில் வாழும் வள்ளுகிர்ப்
புலியெலா மொருவழிப் புகுந்த போலவே.

'எலி எலாம் இப்படை; அரவம் யான்' என,
ஒலி உலாம் சேனையை உவந்து கூவினன்;
வலி உலாம் உலகினில் வாழும் வள் உகிர்ப்
புலி எலாம் ஒருவழிப் புகுந்த போலவே.

**2401.** மருங்கடை தென்கரை வந்து தோன்றினா
னெருங்கடை நெடும்படை ஒல்லெ னார்ப்பினோ
டருங்கடை யுகந்தனி லசனி மாமழை
கருங்கடல் கிளர்ந்தெனக் கலந்து சூழவே.

மருங்கு அடை தென் கரை வந்து தோன்றினன்;
ஒருங்கு அடை நெடும் படை ஒல் என் ஆர்ப்பினோடு
அருங் கடையுகம் தனில், அசனி மா மழை
கருங்கடல் கிளர்ந்தெனக் கலந்து சூழவே.

பொ :—'இச்சேனை யெல்லாம் எலிகள்; யான் (அவ் எலிகளை உண்ணும்) பாம்பு' என்று கூறி, ஆரவாரம் மிக்க தன் படையினரை மகிழ்ந்து கூவி, உலகில் வாழும் வலிமிக்க கூரிய நகத்தையுடைய புலிகளெல்லாம் ஓரிடத்தே திரண்டாற்போலவும், துன்பத்தை விளைக்கும் ஊழி யிறுதியில் இடியுடைய கரிய மேகங்களும், கரிய கடலும் மிக்கெழுந்தாற்போலவும் திரண்டுவந்த பெரும்படை ஒல்லென்னும் பேரொலியோடு தன்னைக் கிட்டிச் சூழ, அடுத்துள்ள கங்கையின் தென்கரையில் வந்து தோன்றினன்.

கு :—பொருள் இயைபு கருதி 10, 11 ஆகிய இரண்டு செய்யுட்களும் இங்கே சேர்த்துத் தரப்பட்டுள்ளன. 'எலியெலாம் இப்படை அரவம் யான்' என்பது குகனுடைய வஞ்சினக்கூற்று; எவ்வளவு பெரிய படையாயினும் என்? பாம்பின் எதிர்ப்பட்ட எலிக்கூட்டம்போல் என்முன் அழிந்தொழியும் என்றவாறு. இது 'ஒலித்தக்கா லென்னும் உவரி எலிப்பகை, நாகம் உயிர்ப்பக் கெடும்' (763) என்னும் திருக்குறளின் அடியொற்றியமைந்தது. ஒலி - படைவீரர்களின் வஞ்சினக் கூற்றால் எழுந்த ஆர்ப்பு. உலாவுதல் - பரத்தல். உலகில் வாழும் வலியுலாம் வள்ளுகிர்ப் புலியெலாம் என இயையும். புலியெலாம் ஒருவழிப் புகுந்த போல, மழை கருங்கடல் கிளர்ந்தென படை கலந்து சூழ என இயைக்க. அருங்கடையுகம் என்பதனுள், அருமை துன்பம் என்னும் பொருளிற் பயின்றது; 'கான்புறஞ் சேறலி லருமை காண்டலால்' (1959) என்பதனுள் அருமை துன்பம் என்னும் பொருளிற் பயின்றமையும் நோக்கத்தகும். அசனி - இடி. மழையும் கடலும் என உம்மை விரிக்க. வீரத்தால் புலிகளும், முழக்கத்தால் மேகமும், அளவுபடாமையால் கடலும் படைக்கு உவமையாகும். எனா, கூவினன், படை கலந்து சூழ, தென்கரை வந்து தோன்றினன் என இயைந்து முடிவுறும். (10, 11)

குகன் தன் படையினர்க்கு இட்ட கட்டளை 2402-2403

2402. தோன்றிய புளிஞரை நோக்கிச் சூழ்ச்சியி
னூன்றிய சேனையை யும்ப ரேற்றுதற்
கேன்றனெ னென்னுயிர்த் துணைவற் கீகுவா
னுன்றபே ரரசுநீ ரமைதிரா மென்றான்.

தோன்றிய புளிஞரை நோக்கிச் 'சூழ்ச்சியின்
ஊன்றிய சேனையை உம்பர் ஏற்றுதற்கு
ஏன்றனென்; என் உயிர்த்துணைவற்கு ஈகுவான்
ஆன்ற பேர் அரசு; நீர் அமைதிர் ஆம்' என்றான்.

பொ:—(குகன்) வந்த (தன்னுடைய படைவீரராகிய) வேடர்களை நோக்கி, 'என் உயிர்த்தோழ(னாகிய இராம)னுக்கு அமைந்த பெரிய அரசுரிமையைக் கொடுக்கும் பொருட்டு, நம் முன் சூழ்ச்சியின் வந்து தங்கிய (பரதனுடைய) படையை (க் கொன்று) மேலுலகத்தில் ஏற்றுதற்கு அமைந்தேன்; ஆதலால் நீவிர் ஆயத்தமாவீராக' என்று கூறினான்.

கு:—குகன், தோன்றிய புளிஞரை நோக்கி, 'என் உயிர்த் துணைவற்கு ஆன்ற பேரரசு ஈகுவான், சூழ்ச்சியின் ஊன்றிய சேனையை உம்பர் ஏற்றுதற்கு ஏன்றனென்; நீர் அமைதிர்' என்றான் என இயைக்க. புளிஞர் – வேடர். சூழ்ச்சி - உபாயம்; அது 14 ஆண்டு கழித்துவந்து இராமன் அரசுரிமை யடையாதபடி ஒழித்தல். ஊன்றுதல் – தங்குதல். உம்பர் - மேலுலகு; சுவர்க்கம். போரில் இறந்தார் வீரசுவர்க்கம் புகுவராதலின், சேனையை உம்பரேற்றுதற்கு ஏன்றனென் என்றான். ஏன்றனென் - அமைந்து நின்றேன். 'ஏன்றேன் அடிமை' (திவ். இயற்பா. நான்முகன். 95) என்பது திருமழிசையாழ்வார் பாசுரம். ஆன்ற - அமைந்த; 'ஆன்ற பெரியார்' (694) என்னும் திருக்குறளடியில், பரிமேலழகர் ஆன்ற என்பதற்கு அமைந்த என்று பொருள் கொண்டமையும் நோக்குக. அமைதிராம் என்பதனுள் ஆம் அசை. (12)

**2403.** துடியெறி நெறிகளுந் துறையுஞ் சுற்றுற
வொடியெறி யம்பிகள் யாது மோட்டலிர்
கடியெறி கங்கையின் கரைவந் தோர்களைப்
பிடியெறி படவெனப் பெயர்த்துங் கூறுவான்.

"துடி எறி; நெறிகளும் துறையும் சுற்றுற
ஒடி எறி; அம்பிகள் யாதும் ஓட்டலிர்;
கடி எறி; கங்கையின் கரை வந்தோர்களைப்
பிடி; எறி பட" எனப் பெயர்த்தும் கூறுவான்.

பொ:—'போர்ப்பறை கொட்டுமின்; வழிகளும் நீர்த்துறைகளும் ஆகியவற்றைச் சூழ (அயலார் புகாதபடி) மரங்களை வெட்டி யெறிந்து தடை செய்ம்மின்; ஓடங்களுள் ஒன்றையும் செலுத்தன்மின்; காவலை மிகுத்திடுமின்; கங்கைக்கரை அடைந்தவர்களைப் பற்றுமின்; அவர்கள் இறக்கும்படி வெட்டுமின்' என்று கூறி, மேலும் சொல்லுவான்.

கு :—ஒடியெறிதல்-மரங்களை வெட்டி வீழ்த்தி, வழிகளை அடைத்தல்; இது, 'ஒடியெறியத் தீரா பகை' (387) எனப் பழமொழியினும், 'நெறியினை ஒடியெறிகிற்பவரொத்து' (424) எனக் கலிங்கத்துப் பரணியினும், 'ஒடியெறிந்து வாரொழுக்கி' (கண்ணப்ப நாயனுர் புராணம் 75) எனப் பெரிய புராணத்தும், 'ஒடியெறிந்து மூரிவார் ஒழுக்கி' (சிந்தாமணி விநாயகர். 78) என விநாயக புராணத்தும், பயின்றமை காணலாம். 'ஊடியார் நலந்தேம்ப ஒடியெறிந்து' (68, 12) என்னும் கலித்தொகைப் பாட்டடியின் உரையுள், 'ஒடிய எறிந்து' என்பது ஒடியெறிந்தென விகாரமாயிற்று என்ருர் நச்சினர்க்கினியர். அம்பி-ஓடம். கடி-காவல். எறிதல்-செறித்தல்; மிகுவித்தல். கடியெறி கங்கை என்று கங்கைக்கு அடையாக்கலுமாம். இங்கு கடி, நறுமணம் என்று பொருள்படும். இதனுள், துடி எறி, ஒடியெறி, கடி எறி, பிடி எறி, ஓட்டலிர் என ஒருமைப் பன்மை மயங்கியவாறு. துடி எறி, ஒடி யெறி, பிடி எறி என்பவை, தன் முன் நின்ருேருள் ஒரொருவரை நோக்கிக் குகன் கூறியது எனவும், ஓட்டலிர் என்பது படகு செலுத்துவோர் பலரையும் நோக்கிக் கூறியது எனவும் கொள்ளலும் அமையும். (13)

### குகன் மீட்டும் கூறல் 2404–2413

**2404.** அஞ்சன வண்ணனென் ஞருயிர்
★ நாயக ஞளாமே
வஞ்சனை யாலர செய்திய
மன்னரும் வந்தாரே
செஞ்சர மென்பன தீயுமிழ்
கின்றன செல்லாவோ
வுஞ்சிவர் போய்விடி ஞய்குக
னென்றெனை யோதாரோ.

அஞ்சன வண்ணன், என் ஆர் உயிர்
நாயகன், ஆளாமே,
வஞ்சனையால் அரசு எய்திய
மன்னரும் வந்தாரே!
செஞ்சரம் என்பன தீ
உமிழ்கின்றன, செல்லாவோ?
உஞ்சு இவர் போய்விடின், "நாய் குகன்"
என்று எனை ஓதாரோ?

பொ :—அஞ்சன வண்ணனும், என் அரிய உயிர்க்குத் தலைவனும் ஆகிய இராமன், அரசு செய்யாமல், சூழ்ச்சியால் அரசாட்சி பெற்ற மன்ன(ணுகிய பரத)னும், (நாம் இருக்கும் இடம்) வந்தான் ; என்னுடைய செந்நிறம் வாய்ந்த அம்புகள், தீயை உமிழ்கின்றனவாய் (அவன்மீது) பாயாவோ ? இவன் (இங்கே மடிந்தொழியாது) தப்பிச் சென்றுவிட்டால் உலகத்தார், 'குகன் நாய்' என்று என்னைப் பழிப்பரன்றோ ?

கு :—அஞ்சனவண்ணன், ஆருயிர் நாயகன் என்பவை இராமனைச் சுட்டி நின்றன. அஞ்சனம் – மை. வண்ணம் – நிறம். வஞ்சனையால் அரசு எய்துதலாவது முன் தயரதன் தந்த வரத்தை அப்போது பெறுவதுபோல் நடித்து அரசுரிமை பெறுதலாம். மன்னர், வந்தார், இவர் என்பவற்றுள் பன்மை இழிவு குறித்து நின்றது. வந்தாரே என்றது, வஞ்சனையால் அரசெய்தியவனை நாம் அவனிருக்குமிடம் சென்று அழிக்கவேண்டிய நிலையில் அவனே நம்மிடம் வந்தமையால் நம்பணி எளிதாயிற்று என்றவாறு. சரத்துக்குச் செம்மை பகைவருடலிற் பாய்ந்து குருதி படிந்தமையான் வந்தது. சரத்தின் பெருமைதோன்ற சரம் என்பன என்ருன். சரம் தீ உமிழ்கின்றன என்று உடையானது சினத்தீ உடைமையாகிய சரத்தின்மேலேற்றிக் கூறப்பட்டது. உஞ்சு, உய்ந்து என்பதன் போலி. உலகத்தார் ஓதுவர் என்று எழுவாய் வருவித்துரைக்க. செய்யத் தக்கதும், தவிரத் தக்கதும் அறியாமை, நாயின் இயல்பு. 'செய்கை தேர்கிலா நாய்' (திருவடிசூட்டு படலம் 127.) என்பர் பின்னும். வஞ்சனையால் அரசு கவர்ந்ததன்றி, என் தலைவனை ஒழித்துவிடவும் கருதிப் படையெடுத்துவந்த இவனை இப்பொழுதே ஒழிப்பேன் ; ஒழியாது இவன் உய்ந்துபோக விடுவேனுயின், 'குகன் செய்வன, தவிர்வன அறியாத நாய்போல்பவன்' என்று உலகத்தாரால் இகழப்படுவேன் என்றவாறு. (14)

**2405.** ஆழ நெடுந்திரை யாறு
கடந்திவர் போவாரோ
வேழ நெடும்படை கண்டு
விலங்கிடும் வில்லாளோ
தோழமை யென்றவர் சொல்லிய
சொல்லொரு சொல்லன்ருே
வேழமை வேடனி றந்தில
னென்றெனை யேசாரோ.

ஆழ நெடுந்திரை ஆறு கடந்து இவர் போவாரோ?
வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ?
தோழமை என்று அவர் சொல்லிய சொல் ஒரு சொல் அன்றோ?
'ஏழைமை வேடன் இறந்திலன்' என்று, எனை ஏசாரோ?

பொ :—ஆழமான பெரிய அலைகளையுடைய கங்கையாற்றை இவன் (என் உதவியின்றிக்) கடந்துசெல்ல முடியுமோ? நான் இவனுடைய பெரிய யானைப் படையினைக் கண்டு, (அஞ்சி) விலகிநிற்கும் வில்லாளனோ? என் ஆருயிர் நாயகன், (நாம்) 'தோழமையுடையோம்' என்று சொல்லிய சொல் பிறழாத சொல்லன்றோ? (இவனைத் தப்பிச் செல்ல விடுவேனாயின்) 'அறியாமை மிக்க வேடனாகிய குகன், (தன் கடமையின் நீங்கி இவனைத் தப்பிச் செல்லவிட்டு உயிர் வாழ்தலினும் இறத்தல் நலம். அவ்வாறு) இறந்தானில்லையே' என்று உலகத்தார் என்னை இகழ்வரன்றோ?

கு :—ஆழநெடுந்திரையாறு என்றது கங்கையினை. வில்லாள் - வில்லை ஆள்பவன்; வீரன். ஏழைமை - ஏழையாந்தன்மை. ஏழை - அறிவிலி. (15)

**2406.** முன்னவ னென்று நினைந்திலன்
மொய்புலி யன்னானோர்
பின்னவ னின்றன னென்றில
னன்னவை பேசானே
லென்னிவ னென்னை யிகழ்ந்ததிவ்
வெல்லை கடந்தன்றோ
மன்னவர் நெஞ்சினில் வேடர்
விடுஞ்சரம் வாயாவோ.

முன்னவன் என்று நினைந்திலன்;
மொய் புலி அன்னான், ஓர்
பின்னவன் நின்றனன் என்றிலன்;
அன்னவை பேசானேல்,
என் இவன் என்னை இகழ்ந்தது? இவ்
எல்லை கடந்து அன்றோ?
மன்னவர் நெஞ்சினில், வேடர்
விடும் சரம் வாயாவோ?

பொ :—பரதன், இராமனைத் தன் அண்ணன் என்று எண்ணவில்லை; வலிய புலிபோல்பவனான தம்பி ஒருவன் (இராமனைக் காத்து) நின்றான் என்றும் நினைக்கவில்லை ; அவற்றை எண்ணாயினும், இவன் என்னை இகழ்ந்தது எதனால் ? இவன் இராமன்பாற்போவது யான் இருக்கும் இந்த எல்லை கடந்தபின் அன்றோ ? வேடர் எய்யும் அம்பு அரசர் மார்பில் பாயாவோ ?

கு :—முன்னவன் என்று நினைந்திலன், பின்னவன் நின்றனன் என்றிலன் என்றது அவ்வாறு எண்ணி யிருப்பானாயின் படையெடுத்து வாரான் என்றவாறு. இவன் என்றது பரதனை. அன்னவை பேசானேல் இவன் என்னை இகழ்ந்தது என் என இயையும். பேசானேலும் என உம்மை விரிக்க. அண்ணன் என்று எண்ணானேனும், தம்பி இராமனைக் காத்து நின்றான் என எண்ணாயினும் ஆகுக ; இராமனால் நண்புகொள்ளப்பெற்ற யான் ஒருவன் இங்கிருப்பதையும் நினையாமல் வந்தது என்னை இகழ்ந்ததாகுமன்றோ ? அவ்வாறு இகழ்ந்தது எதனால் ? என்றவாறு. இவ் எல்லை கடந்தன்றோ ? என்றது இவன் இராமன்பாற் செல்வது, யான் இருக்கும் இந்நிலவெல்லையைக் கடந்தபின் அன்றோ ? அவ்வாறு கடக்க யான் விடேன் என்றவாறு. மன்னவர் நெஞ்சினில் வேடர் விடும் சரம் வாயாவோ என்றது அரசர் மார்பில் வேடர்விடும் அம்பு பாயாது என்பது இல்லை; என் அம்பால் பரதன் மார்பைப் பிளந்து, அவன் இராமன்பாற் செல்லாதபடி தடுப்பேன் என்றவாறு. வாய்த்தல் - சேர்தல் ; 'வருடையைப் படிமகன் வாய்ப்ப' (11-55) என்னும் பரிபாடலடியுள் வாய்த்தல், சேர்தல் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். வாய்த்தல் இங்கே தைத்தலை யுணர்த்தி நின்றது. (16)

**2407.** பாவமு நின்ற பெரும்பழி
யும்பகை நண்போடு
மேவமு மென்பவை மண்ணுல
காள்பவ ரெண்ணாரோ
வாவது போகவென் னாருயிர்த்
தோழமை தந்தான்மேற்
போவது சேனையு மாருயி
ருங்கொடு போயன்றோ.

**பாவமும் நின்ற பெரும்பழியும் பகை நண்போடும் ஏவமும் என்பவை மண்ணுலகு ஆள்பவர் எண்ணாரோ ?**

ஆ! அது போக! என் ஆர் உயிர்த் தோழமை தந்தான்மேல்
போவது, சேனையும் ஆர் உயிரும் கொடுபோயன்றே?

பொ :—மண்ணுலகை ஆளும் அரசர், தம் செயல்களில் தீவினையையும், அதனால் உண்டாய் நிலைபெறும் பெரிய பழியையும், இவர் பகைவர், இவர் நட்பினர் என்பதனையும், (தம் செயல்களால் உண்டாகும்) குற்றத்தையும் எண்ணமாட்டார்களோ? ஐயோ! அது கிடக்க, தன் அரிய உயிரையும் படையையும் அழியவிடாது கொண்டுசென்றன்றே அரிய உயிர்த்தோழனும் நிலையை எனக்கு அளித்த நாயகனை இராமன்மேல் இவன் செல்வது?

கு :—பாவம் என்றது அரசு கவர்ந்து இராமனை வனம் புகுவித்தது மன்றி, அவன்மேற் படையெடுத்துச் செல்வது; பழியாவது அவ்வாறு படையெடுத்துச் செல்வது கண்டு உலகம் கூறும் வசை. ஏவம்-குற்றம். 'ஏவம் பாராய்' (1621), 'ஏவம் என் பழிதான் என்னே' (சடாயு உயிர்நீத்த. 86) என்புழியும் ஏவம் குற்றம் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். மண்ணுலகு ஆள்பவர், பாவமும் பழியும் பகை நண்போடும் ஏவமும் என்பவை எண்ணுரோ என இயையும். மண்ணுலகாள்பவர் அவற்றை எண்ணுவராயின், அவருள் ஒருவனுன பரதன், இவ்வாறு படையெடுத்து வாரான் என்றவாறு. ஆ இரக்கத்தின்கண் வந்தது. அது என்பது எண்ணுமை சுட்டிநின்றது. சேனையும் ஆருயிரும் கொடுபோயன்றே தோழமை தந்தான்மேற்போவது என்றது, அவ்வாறு போகவிடேன்; சேனையையும், இவன் உயிரையும் ஒழிப்பேன் என்றவாறு. (17)

2408. அருந்தவ மென்றுணை யாள
விவன்புவி யாள்வானே
மருந்தெனி னன்றுயிர் வண்புகழ்
கொண்டுபின் மாயேனே
பொருந்திய கேண்மை யுகந்தவர்
தம்மொடு போகாதே
யிருந்தது நன்று கழிக்குவெ
னென்கட னின்றேடே.

அருந்தவம் என் துணை ஆள,
இவன் புவி ஆள்வானே?
மருந்து எனின் அன்று உயிர்; வண் புகழ்
கொண்டு பின் மாயேனே?

பொருந்திய கேண்மை உகந்தவர்
தம்மொடு போகாதே
இருந்ததும் நன்று கழிக்குவென்
என்கடன் இன்றேடே.

பொ :—என் துணைவனை இராமன் செய்தற்கரிய தவத்தைச்செய்ய, இந்தப் பரதன் பூமியை ஆள்வானே ? என் உயிர் அமுது(போல் அரியதோ) எனின் அன்று ; ஆதலால் சிறந்த புகழைக்கொண்டு, என் எளிய உயிரை விட்டொழிப்பேன்; என்னொடு இசைந்த நட்பைவிரும்பிய இராமனொடு வனம் புகாமல் இங்கே தங்கியதும் நல்லதாயிற்று ; என் கடமையை இன்றேடு செய்து கழிப்பேன்.

கு :—என்துணை அருந்தவம் ஆள என்றது, அரசு செலுத்திப் போகங்களை நுகரவேண்டிய என் துணைவன் செயற்கரிய தவத்தைச் செய்தும், காயும் கிழங்கும் உண்டும் துன்புற என்றவாறு. இவன் புவியாள்வானே ? என்றது, இராமன் கட்டளைப்படி ஒழுகும் கடமை யுடைய இவன் புவியை ஆண்டு, விரும்பிய போகமெல்லாம் வேண்டிய வாறு துய்த்து இன்புறுவதோ என்றவாறு. இக்கருத்து, பின், 'இயன்ற தென் பொருட்டினல் இவ்விடர் உனக்கு என்ற போதும், அயின்றனை கிழங்கும் காயும்' எனப் பரதன் கூற்றுள் நிகழ்வதும் நோக்கத்தகும். மருந்து – அமுதம். என் உயிர் மருந்துபோல் இனியது எனின், அன்று என்று உரைத்தலும் ஆம். பொருந்திய கேண்மை-முகமும் அகமும் மலர நிகழும் நட்பு. பொருந்திய கேண்மை யுகந்தவர் தம்மொடு (வனம்) போகாதே இருந்தது தீது என்று முன்பு வருந்தியிருந்த குகன் பரதன் படையொடு வரக்கண்ட இன்று அதுவும் நன்று என்று மகிழ்ந்தான் என்க. 'மெய்வீரர் பெயர்ந்ததுவும் நலமாயிற்று' (2457) என்ற கோசலை கூற்றும் இங்கு நோக்கத்தகும். என் கடன் இன்றேடே கழிக்குவென் என்றது இற்றைப் பொழுதொடு என் கட மையும் நிறைவுறும் என்றவாறு. கடன் கழித்தலாவது உயிர் கொடுத்தேனும் கடமையை நிறைவேற்றுதலாம் ; பரதனையும், அவ னுடன் வந்த படையினையும், இராமன்மேற் செல்லவிடாமல் அழித் தலையே குகன் தன் கடனாகச் சுட்டுகிறான். பொருந்திய கேண்மை யுகந்தவர் தம்மொடு போகாதே இருந்ததனால் என் கடன் இன்றேடே நன்று கழிக்குவென் என்று இயைத்துரைத்தலும் ஆம். இதன் இரண்டாம் அடி, 'மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந் தகைமை பீடழிய வந்த இடத்து.' (968) என்னும் திருக்குறட் கருத்தைத் தழுவியமைந்தது. (18)

**2409.** தும்பியு மாவு மிடைந்த
பெரும்படை சூழ்வாரும்
வம்பிய ரூரிவர் வாள்வலி
கங்கை கடந்தன்றே
வெம்பிய வேட ருளீர்துறை
யோடம் விலக்கீரோ
நம்பிமுன் னேயினி நம்முயிர்
மாய்வது நன்றன்றே.

தும்பியும் மாவும் மிடைந்த பெரும்படை சூழ்வாரும்
வம்பு இயல் தார் இவர் வாள் வலி கங்கை கடந்தன்றே?
வெம்பிய வேடர் உளீர்! துறை ஓடம் விலக்கீரோ
நம்பி முன்னே இனி நம் உயிர் மாய்வது நன்று அன்றே?

பொ :—யானைகளும், குதிரைகளும் நெருங்கிய பெரிய படையால் சூழப்பெற்ற, நறுமணம் பொருந்திய மாலையணிந்த இவனுடைய வாள் வலி அமைவது, கங்கையை இவன் கடந்த பின்னன்றே? (இவ்வாறு வந்த இவன் செயல் கண்டு) கொதிக்கும் மனம் உடையவர்களாயுள்ள வேடர்களே! (இவன் கங்கை கடக்க உதவாமல்) துறையிலுள்ள ஓடங்களை விலக்குங்கள்; இனி (அவ்வாறு விலக்குதல் கண்டு, இவன் வெகுண்டெழுவனாயின், இவனோடு போர் செய்து தடுப்போம்; இயலாதாயின்,) நம்பிக்கு ஊறுநேருமுன் (நம் உயிரை விடுவோம்; அவ்வாறு) நம் உயிர் மாய்வது நல்லதன்றே?

கு :—தும்பி – யானை. மா – குதிரை. மிடைதல் – நெருங்குதல். வம்பு – மணம். இயலுதல் – பொருந்துதல். தார் – மாலை. வாள்வலி என்றாரேனும் உபலக்கணத்தால் பிற படைவலிகளும் கொள்ளத்தகும். வாள்வலி அமைவது எனப் பயனிலையாக ஒரு சொல் வருவித்துரைக்க. துறையோடம் விலக்கீர் என்றது துறையிலுள்ள ஓடங்களை, (பரதனும் படைகளும் கங்கை கடக்கும்படி) செலுத்தாது விலக்குங்கள் எனவும், துறையிலுள்ள ஓடங்களை, (பரதனும் படைகளும் எளிதாகக் கைப்பற்றித் தாங்களே செலுத்தாதவாறு) துறையை விட்டு வேறிடத்துக்கு நீக்குங்கள் எனவும் இருபொருளும் கொள்ள நின்றது. ஓ அசை. (19)

**2410.** போன படைத்தலை வீரர்
தமக்கிரை போதாவிச்
சேனை கிடக்கிடு தேவர்
வரிற்சிலை மாமேகஞ்

சோனை படக்குடர் சூறை
படச்சுடர் வாளோடுந்
தானை படத்தனி யானை
படத்திரள் சாயேனோ.

போன படைத் தலைவீரர் தமக்கு இரை போதா இச்
சேனை கிடக்கிடு ; தேவர் வரின், சிலை மா மேகம்
சோனை படக் குடர் சூறைபடச் சுடர் வாளோடும்
தானை படத் தனி யானை படத் திரள் சாயேனோ.

போ :—(வனம் நோக்கிச்) சென்ற, படையில் முன்னணியில் நிற்கும் வீரரான இராமலக்குவர் வலிமைக்கு இரையாதற்கும் பற்ருத (இழிந்த) இச்சேனை கிடக்க. (சிறப்புடைய) தேவர்களே பரதனுக்காக ஏன்று கொண்டு வரினும், என் வில்லாகிய பெரிய மேகமானது விடாத அம்பு மழையைப் பொழிதலால், குடல்கள் (சுழல்காற்றெழுதலால் அதன்முன் துரும்புபோல்) சிதற, ஒளிர்கின்ற வாள்களுடன் காலாள்கள் அழியவும், சிறந்த யானைப்படை அழியவும், குவியல் குவியலாய்க் கொன்று சாய்ப்பேன்.

கு :—போன வீரர், படைத்தலை வீரர் என இயையும். கிடக்கிடு – கிடக்க ; இது வேடர் குழு வழக்கு. தேவர் வரினும் என உம்மை விரிக்க. சிலைமாமேகம் என்பது உருவகவணி தழுவியது. சோனை – விடாமழை. குடர் - குடல் ; இறுதிப்போலி. சூறை – சுழல்காற்று. பட - தோன்ற. தானை – காலாள். இறைபோதா என்பது ஒரு பிரதியிற் கண்ட பாடம். இரை போதா என்ற பாடத்தினும், இறைபோதா என்ற பாடம் பொருட்சிறப்புடையதாகத் தோன்றுகிறது. இறை என்பதில் உள்ள (வல்லின) றகரம் ஏடெழுதுவோரால் (இடையின) ரகரமாக எழுதப்பட்டு, இரைபோதா என்று மாறியிருத்தலும் கூடும். இறை போதா என்பது, சிறுபொழுதைப் போர்க்கும் போதாத என்று பொருள் படும். (20)

2411. நின்ற கொடைக்கையென் னன்ப
னுடுக்க நெடுஞ்சீரை
யன்று கொடுத்தவண் மைந்தர்
பலத்தையென் னம்பாலே
கொன்று குவித்த நிணங்கொள்
பிணக்குவை கொண்டோடித்
துன்று திரைக்கடல் கங்கை
மடுத்திடை தூராதோ.

நின்ற கொடைக் கை என் அன்பன் உடுக்க, நெடுஞ்சீரை
அன்று கொடுத்தவள் மைந்தர் பலத்தை, என் அம்பாலே
கொன்று குவித்த நிணம் கொள் பிணக் குவை கொண்டு ஓடித்
துன்று திரைக் கடல், கங்கை மடுத்து இடை தூராதோ?

போ :—நிலைத்த கொடைக்கையினையுடைய, என்னுடைய அன்புக்குரியவனான இராமன் உடுக்கும்படி பெரிய மரவுரியை அன்று கொடுத்தவளான கைகேயியின் மகனான பரதன் படையினை என் அம்புகளாலே கொன்று குவித்த கொழுப்புள்ள பிணக்குவியல்களைக் கங்கையாறு இழுத்துக்கொண்டு சென்று, அலை செறிந்த கடலிலே புகவிட்டு அக்கடலிடத்தை நிரப்பிவிடாதோ?

கு :—நின்ற கொடை – என்றும் நீங்காது நிலைத்த கொடை. கொடைக்கை அன்பன், என் அன்பன் என இயையும். சீரை – மரவுரி. சீரம் என்ற பாடத்தினும் சீரை என்ற பாடம் சிறப்புடைத்து. 'சீரை தைஇய உடுக்கையர்' (திருமுருகாற்றுப்படை. 126) என்பது நக்கீரர் கூற்று. அன்று - முடி சூட்டக்குறித்த அந்நாளில். மைந்தர் என்பதனுள் பன்மை இகழ்ச்சி குறித்தது. பலம் – படை ; 'தன் பெரும் பலத்தைச் சார்ந்தான்' (யுத்த. கும்பகன்னன். 128) எனப் பின்னும் இப்பொருளிற் பயின்றுள்ளமை காணலாம். நிணம் - கொழுப்பு. (21)

**2412.** ஆடு கொடிப்படை சாடி
யறத்தவ ரேயாள
வேடு கொடுத்தது பாரெனு
மிப்புகழ் மேவீரோ
நாடு கொடுத்தவென் னுயக
னுக்கிவர் நாமாளுங்
காடு கொடுக்கில ராகி
யெடுத்தது காணீரோ.

"ஆடு கொடிப் படை சாடி, அறத்தவரே ஆள
வேடு கொடுத்தது, பார்" எனும் இப் புகழ் மேவீரோ?
நாடு கொடுத்த என் நாயகனுக்கு இவர், நாம் ஆளும்
காடு கொடுக்கிலர் ஆகி, எடுத்தது காணீரோ?

போ :—நாட்டைத் தனக்குக் கொடுத்த என் தலைவனான இராமபிரானுக்கு இவன், நாம் ஆட்சி செய்யும் காட்டையும் கொடாதவனாய்ப் படையெடுத்துவந்ததைக் காண்மின்; (அவ்வாறு நெறிதவறிப் படை

யெடுத்து வந்தமையால்) "அசைகின்ற கொடிகளையுடைய இவன் படைகளைத் தாக்கி அழித்து, அறநெறி நின்ற இராமனே அரசு ஆளும்படி, வேட்டுவர் கூட்டம் நாட்டை மீட்டுக்கொடுத்தது" என்று உலகம் சொல்லும் இப்புகழை அடையீரோ? (அடைமின்.)

கு :—பின்னிரண்டடியால் பரதன் கொடுமையும், முன்னிரண்டடியால், அக்கொடுமை நீக்கி மேற்கொள்ளவேண்டிய கடமையும் விரித்தவாறு. காடும் என உம்மை விரிக்க. எடுத்தல் - படையெடுத்தல். (22)

**2413.** மாமுனி வர்க்குற வாகி
வனத்திடை யேவாழுங்
கோமுனி யத்தகு மென்று
மனத்திறை கொள்ளாதே
யேமுனை யுற்றிடி லேழு
கடற்படை யென்றாலு
மாமுனை யிற்சிறு கூழென
விப்பொழு தாகாதோ.

மா முனிவர்க்கு உறவு ஆகி, வனத்திடையே வாழும்
கோ முனியத் தகும் என்று, மனத்து இறை கொள்ளாதே,
ஏ முனை உற்றிடில், ஏழு கடல் படை என்றாலும்
ஆ முனையின் சிறு கூழ் என இப்பொழுது ஆகாதோ?

பொ :—சிறந்த முனிவர்களுக்கு உறவினனாகி, வனத்தில் வாழ்கின்ற தலைவனை இராமன் சினங்கொள்ளத்தக்கதாய்விடும் என்று சிறிதும் மனங்கொள்ளாமல், அம்பெய்யும் போரில் நான் புகுந்தால் ஏழு கடல்களும் (ஒன்றுபட்டாற்)போலும் பெரிய கடத்தற்கரிய படையென்றாலும், பசு முனைந்தால் அதன் எதிர்ப்பட்ட இளம்பயிர் (அழிதல்) போல இப்பொழுதே அழிந்ததாகாதோ? (அழிந்ததாகிவிடும்).

கு :—'தம்பியொடு போர் செய்யலாமா' என்று நம் தலைவனை இராமன் முனியக்கூடும் என எண்ணாமல் நான் போர்செய்யப் புகுந்தால், இப்படையல்ல, இன்னும் ஏழுகடலும் ஒன்றுபட்டாற்போலும் பெரிய — பிறரால் கடத்தற்கரிய — படையாயினும், பசுவின்முன் எதிர்ப்பட்ட இளம்பயிர் (அதன் வாயாலும் காலாலும்) அழிதல்போல (என் கை வாள்வீச்சாலும் என் கால் துகைத்தலாலும்) அழிந்துவிடும் என்றவாறு. இறை – சிறிதும். ஏ - அம்பு. முனை – போர். ஆ - பசு. முனையின் – முனைந்தால்; தின்ன முண்டெழுந்தால். சிறு கூழ் – இளம்பயிர். இப்பொழுதே ஆகாதோ என ஏகாரம் விரிக்க. (23)

சுமந்திரன் பரதனிடம் குகன் தன்மை சொல்லல் 2414-2416

**2414.** என்பன சொல்லி யிரும்பன
மேனிய ரேனோர்முன்
வன்பணை வில்லினன் மல்லுயர்
தோளினன் வாள்வீரற்
கன்பனு நின்றன னின்றது
கண்டரி யேறன்ன
முன்பனில் வந்து மொழிந்தனன்
மூரிய தேர்வல்லான்.

என்பன சொல்லி, இரும்பு அன மேனியர் ஏனோர் முன்
வன் பணை வில்லினன், மல் உயர் தோளினன், வாள் வீரற்கு
அன்பனும், நின்றனன்; நின்றது கண்டு, அரியேறு அன்ன
முன்பனில் வந்து, மொழிந்தனன் மூரிய தேர்வல்லான்.

பொ :—வலிய பெரிய வில்லையுடையவனும், மற்போர்ப் பயிற்சி பெற்ற உயர்ந்த தோள்களை யுடையவனும், வாளையுடைய வீரனாகிய இராமனிடம் அன்பு பூண்டவனுமாகிய குகன், இரும்புபோலும் உடம்புடைய மற்றை வேடர்களுக்கு எதிரே, மேற்பாடல்களில் கூறியவற்றைச் சொல்லி, (கங்கையின் தென்கரையில்) நின்றான்; அவன் நின்றதைக் கண்டு, வலிய தேரை ஓட்டுவதில் ஆற்றல் வாய்ந்தவனான சுமந்திரன், சிங்க ஏறுபோலும் ஆற்றலுடைய பரதன்பால் வந்து கூறினான்.

கு :—என்பன என்றது, மேற்பாடல்களிற் குகன் கூற்றாக வந்தவற்றைச் சுட்டி நின்றது. இரும்பு, நிறத்தாலும், வன்மையாலும் குகன் படையினரின் மேனிக்கு உவமமாயிற்று. ஏனோர் – மற்றைவேடர். பணைத்தல் - பருத்தல். மல்லுயர் தோளினன் என்பதற்கு மற்றொழில் உயர்தற்குக் காரணமான தோள் என உரை கூறலும் ஆம். (24)

**2415.** கங்கையிரு கரையுடையான்
★ கணக்கிறந்த நாவாயா
னுங்கள்குலத் தனிநாதற்
குயிர்த்துணைவ னுயர்தோளான்
வெங்கரியி னேறனையான்
விற்பிடித்த வேலையினான்
கொங்கலரு நறுந்தண்டார்க்
குகனென்னுங் குறியுடையான்.

"கங்கை இருகரை உடையான்,
கணக்கு இறந்த நாவாயான்,
உங்கள் குலத் தனி நாதற்கு
உயிர்த்துணைவன், உயர்தோளான்,
வெம் கரியின் ஏறு அனையான்,
வில் பிடித்த வேலையினன்,
கொங்கு அலரும் நறும் தண் தார்க்
குகன் என்னும் குறி உடையான்"

2416. கற்காணுந் திண்மையான்
கரைகாணுக் காதலா
னற்காணிற் கண்டனைய
வழகமைந்த மேனியான்
மற்காணுந் திருநெடுந்தோண்
மழைகாணு மணிநிறத்தாய்
நிற்காணு முள்ளத்தா
னெறியெதிர்நின் றனனென்றான்.

"கல் காணும் திண்மையான்,
கரை காணுக் காதலான்,
அல் காணில் கண்டனைய
அழகு அமைந்த மேனியான்,
மல் காணும் திரு நெடுந்தோள்
மழை காணும் மணி நிறத்தாய்!
நின் காணும் உள்ளத்தான்,
நெறி எதிர் நின்றனன்" என்றான்.

பொ :—(சுமந்திரன், பரதனை நோக்கி,) "மற்றொழிற் பயிற்சிபெற்ற கொற்றவை உறையும் நீண்ட தோள்களையும், மேகம்போற் காணப்படு கின்ற அழகிய கரு நிறத்தையும் உடையாய்! கங்கையின் இருகரைகளை யும் உடையவனும், அளவு கடந்த ஓடங்களையுடையவனும், உங்கள் குலத் தனிநாதனான இராமனுக்கு உயிர்த்தோழனும், உயர்ந்த தோள் களையுடையவனும், (பகைவர்களாகிய) கொடிய (மத) யானைகளி னிடையே சிங்கம் போல்பவனும், வில்லேந்திய படைக்கடலை யுடையவ னும், மலைபோலும் திண்மையையுடையவனும், (கடல்போலும்) எல்லை யற்ற அன்புடையவனும், நோக்குமிடத்து, இருளைக் கண்டாலொத்த அழகிய மேனியையுடையவனும், தேன் பரவிய நறுமணம் வாய்ந்த குளிர்ந்தமாலையை அணிந்தவனுமான குகன் என்னும் பெயரையுடைய

வேடர் தலைவன், நின்னைக் காணும் கருத்தினனாய், வழியில் எதிரே நின்றான்" என்று கூறினான்.

கு:—இவ் இரண்டு செய்யுட்களும் ஒரு தொடர்; பொருளியைபு கருதி, இணைத்துத் தரப்பட்டன. மணி நிறத்தாய்! கரையுடையான், நாவாயான், துணைவன், தோளான், ஏறனையான், வேலையினான், திண்மையான், காதலான், மேனியான் குகன் என்னும் குறியுடையான், உள்ளத்தான், நின்றனன் என இயையும். மல் - மற்போர்ப் பயிற்சி. திரு என்றது இங்கே கொற்றவையை. கங்கையிரு கரை என்றது கங்கையாற்றின் இரு கரைகளையும் அடுத்துள்ள நிலப்பரப்பை. கணக்கு - அளவு; 'கணக்கிலாத்திருக்கோலம்' (30. 1.) என்பது திருவாசகம். இறத்தல் - கடத்தல். நாவாய் - ஓடம். உங்கள் குலம் என்றது சூரிய குலத்தை. உங்கள் குலத் தனிநாதன் – சூரிய குலத்தில் தோன்றிய ஒப்பற்ற தலைவனான இராமன். வெங்கரியின் ஏறனையான் என்றது, பகைவர்களாகிய மதயானைகளினிடையே சிங்கவேறு போல்பவன் என்றவாறு. கரி என்னும் பால்பகா அஃறிணைப் பெயர் இங்கே கரிகள் எனப் பன்மையுணர நின்றது. இன், ஏழன் உருபு. 'அது புறனடையாற் கொள்ளப்படும்' என்பர் திருக்கோவையார் உரையாசிரியர் (19). ஏறு – ஆண் சிங்கம். ஆண் சிங்கத்தை 'ஏறு' என்றும், அரியேறு என்றும் வழங்குதல் உண்டு. 'ஏறுபோற் பீடுநடை' (திருக்குறள். 59) என்பதன் உரையில் ஏறு என்பதற்குச் சிங்கவேறு என்று பரிமேலழகர் உரை வரைந்தமையும், 'அரியேறன்ன முன்பன்' (2414) என ஆசிரியரே வழங்குதலும் காணலாம். இனி விலங்கினத்தின் ஆண்களுட் சிலவற்றுக்கு ஏறு என்னும் பெயர் வழக்குண்மை கொண்டு ஆண் சிங்கத்தினை அரியேறு என்று வழங்குதல்போல, ஆண்யானையினையும் கரியின் ஏறு என்று வழங்கல் கூடும் என்று கருதி, 'வெம் கரியின் ஏறு அனையான்' என்பதற்கு '(மதத்தால்) வெவ்விய ஆண் யானையை ஒத்தவனும்' என்று பொருள்கொண்டாரும் உளர். இங்கு இன் அல்வழிச் சாரியையாகும். இங்கே களிற்றியானை, இனந்தழுவிக் காத்தலால் குகனுக்கு உவமையாயிற்று எனக் கொள்ளல் தகும். விற்பிடித்த வேலை என்றது குகனுடைய காலாட்படையின் மிகுதி கூறியவாறு. கல் - மலை. திண்மை-நிலை கலங்காமை. காதல்-அன்பு. கானில் அல் கண்டனைய மேனி அழகு அமைந்த மேனி என இயையும். அல்–இருள்; 'அல்லையாண்டமைந்த மேனி' (2432) என்பது காண்க. மேனி–உடம்பு. குகன் மேனிக்கு இருள் உவமை; 'எண்ணெய் உண்ட இருள் புரை மேனியான்' (2048) என்றார் முன்னும். உள்ளம் - கருத்து; 'என்னுங்கட்குள்ளம்' (2347) என்பது சீவக சிந்தாமணி. நெறி - வழி. (25, 26)

பரதன் குகனைக்காண விரைதல்

2417. தன்முன்னே யவன்றன்மை
தன்றுணைவன் முந்துரைத்த
சொன்முன்னே யுவக்கின்ற
துரிசிலாத் திருமனத்தான்
மன்முன்னே தழீஇக்கொண்ட
மனக்கினிய துணைவனே
லென்முன்னே யவற்காண்பென்
யானேசென் றெனவெழுந்தான்.

தன்முன்னே, அவன் தன்மை
தன் துணைவன் முந்து உரைத்த
சொல் முன்னே உவக்கின்ற
துரிசு இலாத் திரு மனத்தான்,
'மன் முன்னே தழீஇக் கொண்ட
மனக்கு இனிய துணைவனேல்,
என் முன்னே; அவற் காண்பென்
யானே சென்று' என எழுந்தான்.

பொ :—தன் நட்பினனான சுமந்திரன் அக்குகனியல்பைத் தன் எதிரே முந்திவந்து சொன்ன சொற்களுக்கு முன்னே மகிழ்கின்ற குற்றம் அற்ற நன் மனமுடைய பரதன், நம் தலைவன் (இராமன்) முன்னே தழுவிக்கொண்ட மனத்துக்கு இனிய நண்பனாயின், அவன் என் அண்ணனே; ஆதலால் யானே அவன் இருக்குமிடஞ் சென்று, அவனைக் காண்பேன் என்று புறப்பட்டான்.

கு :—அவன் என்றது குகனை. அவன் தன்மை, 'கங்கையிருகரை யுடையான்' 'கற்காணும் திண்மையான்' என்று தொடங்கும் பாடல் களிற் கூறியவை. துணைவன் - நட்பினன், சுமந்திரன். இந்நூலிற் கூறியபடி இராமன் குகனைச் சந்தித்து நட்புக் கொள்ளு முன்னே சுமந் திரன் அயோத்தி அடைந்துவிட்டானாயினும், இராமன்பால் பேரன் புடைய அவன், இராமன் செயல்களை அவ்வப்போது அறிந்துகொண்ட முறையில் இராமன் குகனொடு தோழமை கொண்டதனையும் தெரிந்திருந் தான் என்று கொள்ளல் தகும். சொல் முன் உவத்தலாவது குகன் இயல்பாகச் சுமந்திரன் கூறிய சொற்கள் செவிப் புகுமுன் மகிழ்த லாம். துரிசு - குற்றம். மன் - தலைவன். மனத்துக்கு இனிய துணைவன் என்பது அத்துச்சாரியை கெட்டு, மனக்கினிய துணை வன் என நின்றது, விகாரம். முன் - முன்னவன்; அண்ணன்.

குகனைப் பரதன் தமையனாகக் கொண்டமை, "இன்துணைவன் இராகவனுக்கு, இலக்குவற்கும், இளையவற்கும் எனக்கும் மூத்தான், குன்றனைய திருநெடுந்தோட் குகன் என்பான் இந்நின்ற குரிசில்" (2456) என்று பின்னும் பரதன் கூறுமாற்றால் புலனாகும். 'அங்குள கிளை காவற்கு அமைதியின் உளன் உம்பி, இங்குள கிளைகாவற் கியாருளர் இசையாய் நீ' (2086) என இராமன் குகனை நோக்கிக் கூறுதலும் இம்முறையினை ஆதரித்து நிற்றல் காணலாம். யானே சென்று அவற் காண்பென் என இயையும். இது, அண்ணனாகிய அவன் யான் இருக்குமிடம் வந்த பின் அவனைக் காண்பது முறையாகாது; யானே அவன் இருக்குமிடம் சென்று அவனைக் காண்பதே முறை என்பது விளக்கியவாறு. (27)

### பரதன் தோற்றங்கண்ட குகன் நிலையும் செயலும் 2418—2421

**2418.** என்றெழுந்து தம்பியொடு
மெழுகின்ற காதலொடுங்
குன்றெழுந்து சென்றதெனக்
குளிர்கங்கைக் கரைகுறுகி
நின்றவனை நோக்கினான்
றிருமேனி நிலையுணர்ந்தான்
றுன்றுகரு நறுங்குஞ்சி
யெயினர்கோன் றுண்ணென்றான்.

என்று எழுந்து தம்பியொடும் எழுகின்ற காதலொடும்
குன்று எழுந்து சென்றது எனக் குளிர் கங்கைக்கரை குறுகி
நின்றவனை நோக்கினான், திருமேனி நிலை உணர்ந்தான்,
துன்று கரு நறுங்குஞ்சி எயினர்கோன் துண்ணென்றான்.

பொ:—என்று கூறிப் புறப்பட்டு, தம்பியோடும், மேலும் மேலும் வளர்கின்ற அன்பினோடும் மலை எழுந்து சென்றாற்போலச் சென்று, குளிர்ந்த கங்கைக் கரையை அடைந்து நின்ற பரதனை, அடர்ந்த கரிய நல்ல மயிர்முடியினையுடைய வேடர் தலைவனாகிய குகன், நோக்கி, அவனுடைய திருமேனியின் (பொலிவிழந்த) நிலையை அறிந்து நடுங்கினான்.

கு:—என்று எழுந்து என்பது, முன்பாட்டிறுதியிற் பயின்றதனை அநுவதித்தது. தம்பி என்றது, சத்துருக்கனை. குன்று, துளக்கலாகா நிலையாலும் தோற்றத்தாலும் பரதனுக்கு உவமை; 'கருமலை செம்மலையனைய காட்சியர்' (ஆரணிய. சடாயுப். 15) என்பர் பின்னும். நோக்கினான், உணர்ந்தான் என்பவை முற்றெச்சம். துன்றுதல் –

அடர்தல். எயினர்கோன்-வேடர் தலைவன், குகன். அஞ்சனவண்ணன் என்று தொடங்கும் பாடல் முதல் பல பாடல்களில் பரதன்பால் தீய குணங்களை ஏறிட்ட குகன், பரதனுடைய துன்பத் தோற்றங்கண்டு துணுக்கமுற்ருன் என்க. (28)

2419. வற்கலையி னுடையானை
மாசடைந்த மெய்யானை
நற்கலையின் மதியென்ன
நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக் கனிகின்ற
துயரானைக் கண்ணுற்ருன்
விற்கையினின் றிடைவீழ
விம்முற்று நின்ருெழிந்தான்.

வற்கலையின் உடையானை மாசு அடைந்த மெய்யானை
நல் கலை இல் மதி என்ன நகை இழந்த முகத்தானை
கல் கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்ருன்,
வில் கையின் நின்று இடைவீழ, விம்முற்று நின்ருெழிந்தான்.

பொ :—மரவுரியுடை யுடையவனும், அழுக்கடைந்த வுடம்புடையவனும், நல்ல கலையில்லாத திங்கள்போல ஒளி யிழந்த முகமுடையவனும், கல்லும் இளகும்படி முதிர்கின்ற துயரையுடையவனும், ஆகிய பரதனைக் கண்டு (குகன்) தன் கையினின்று இடப்பக்கத்தே வில் நழுவி விழ ஏங்கிச் செயலற்று நின்ருன்.

கு :—வற்கலை – மரவுரி. பரதன் மரவுரியாடை புனைந்தமை ‘தன்னுடைத் திருவரைச் சீரை சாத்தினன்’ (2383) என முன்னரே கூறப்பட்டது. மாசு-அழுக்கு. இராமன் வனம் புகுந்தமையால் விளைந்த துக்கத்தால், நன்னீராடாது கண்ணீராடி, உண்ணுது உறங்காது, தரையிடைக் கிடந்து போந்தமையால் மெய் மாசடைந்ததாயிற்று; முகம் பொலிவிழந்ததாயிற்று. கல்லும் என உம்மை விரிக்க. பரதனுடைய துயரநிலை, உயிருடையனவேயன்றி உயிரற்ற வலிய கல்லும் கனியுமாறு மிக்கது என்பது தோன்றக் ‘கற்கனியக் கனிகின்ற துயர்’ என்ருர். “தாவர சங்கமம் என்னும் தன்மைய யாவையும் இரங்கிடக் கங்கை யெய்தினன்” (2391) என முன்னரும், “அவலம் ஈதென எழுதிய படிவம் ஒத்து எய்துவான்” (திருவடி சூட்டு 49) என்று பின்னரும் கூறுதலும் இங்கு நோக்கத் தகும். கனிதல்-முன்னது இளகுதல்; ‘விஞ்சையர் கனிந்து சோர்ந்தார்’ (727) என்பது சீவக சிந்தாமணி.

பின் வந்த கனிதல் – முதிர்தல் ; 'கன்னிமை கனியா' (11. 36) என்பது பரிபாடல். இடை-இடப்பக்கம் ; 'எங்கள் பெம்மானிடையாளே' (84) என்பது அபிராமியந்தாதி. விம்முதல் - ஏங்குதல். "நெஞ்சில் சிறிய தோர் விம்மல் கொண்டான்" (சுந்தர. 996) என்பர் பின்னும். எயினர் கோன் என்னும் எழுவாய் முன்பாட்டிலிருந்து கொள்ளத்தகும். (29)

**2420.** நம்பியுமென் னுயகனை
யொக்கின்ரு னயனின்ருன்
றம்பியையு மொக்கின்ருன்
றவவேடந் தலைநின்ருன்
றுன்பமொரு முடிவில்லை
திசைநோக்கித் தொழுகின்ரு
னெம்பெருமான் பின்பிறந்தா
ரிழைப்பரோ பிழைப்பென்ருன்.

"நம்பியும் என் நாயகனை ஒக்கின்ருன்; அயல் நின்ருன்
தம்பியையும் ஒக்கின்ருன்; தவவேடம் தலைநின்ருன் ;
துன்பம் ஒரு முடிவு இல்லை; திசைநோக்கித் தொழுகின்ருன்;
எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு?" என்ருன்.

பொ :—உயர்ந்தோனை பரதனும் என்னுடைய தலைவனை (இராமனை)ப் போலிருக்கிருன் ; அவன் பக்கத்தே நிற்கின்றவ(னை சத்துருக்க)னும் என் நாயகன் பக்கத்தில் உள்ள தம்பியை(இலக்கு வனை)ப் போலிருக்கிருன் ; (மேலும் இந்த நம்பி) தவவேடம் மேற்கொண் டுள்ளான் ; (இவன் உற்ற) துன்பத்துக்கு எல்லையில்லை ; (இராமன் சென்ற) திசை நோக்கி வணங்குகின்ருன் ; என் தலைவன்பின் பிறந் தோர் தவறு செய்வரோ ? செய்யார்.

கு :—நம்பி என்னும் சொல்லுக்கு, 'கல்யாணகுண பூரணன்' என்பது பெரிய வாச்சான் பிள்ளை கூறும்பொருள் (பெரியதிருமொழி 7. 1. 1.). என் நாயகன், எம்பெருமான் என்பவை இராமனைக் குறித்து நின்றன. நம்பிக்கும், நாயகனுக்கும், எழிலாலும், குணத்தாலும் ஒப்புமை கொள்ளத்தகும். 'நம்பியும் என் நாயகனை ஒக்கின்ருன்' என்பது, 'எள்ளரிய குணத்தாலும், எழிலாலும், இவ்விருந்த வள்ளலையே அனையான்' (741) என்று விசுவாமித்திர முனிவர் கூறியதை நினைவூட்டு வதாயிருக்கிறது. தவவேடம் தலை நிற்றல்-தவவேடம் மேற்கொள்ளல். முடிவு – எல்லை. திசை நோக்கித் தொழுதல், பெரியோர் திறத்தும் தேவர்திறத்தும் செய்யும் சிறப்புவழிபாடு. 'மன்பெரிய மாமனடி

மகிழ்ந்து திசை வணங்கி ' (849) என்னும் சீவக சிந்தாமணிச் செய்யுளும், அதனுள், ' திசை வணங்கி ' என்பதற்கு, ' திசைநோக்கி வணங்கி' என நச்சினார்க்கினியர் எழுதிய பொருளும் இங்கு நோக்கத்தகும். இமைப்பரோ என்பதனுள் ஓகாரம் எதிர்மறை. பிழைப்பு-தவறு. (30)

**2421.** உண்டிடுக்க ணொன்றுடையா
னுலையாத வன்புடையான்
கொண்டதவ வேடமே
கொண்டிருந்தான் குறிப்பெல்லாங்
கண்டுணர்ந்து பெயர்கின்றேன்
காமின்க ணெறியென்னாத்
தண்டுறையோர் நாவாயி
லொருதனியே தான்வந்தான்.

“ உண்டு இடுக்கண் ஒன்று ; உடையான்,
உலையாத அன்புடையான்
கொண்ட தவவேடமே
கொண்டிருந்தான்; குறிப்பெல்லாம்
கண்டு உணர்ந்து பெயர்கின்றேன் ;
காமின்கள் நெறி ;” என்னாத்
தண் துறை ஓர் நாவாயில்
ஒருதனியே தான் வந்தான்.

பொ :—எயினர்கோ(னை குக)ன், இந்தப் பரதனுக்கு ஒரு துன்பம் உண்டு ; என் தலைவனும், என்பால் அன்புடையவனும் ஆன இராமன் பூண்ட தவவேடத்தையே இவனும் பூண்டுள்ளான் ; இவன் கருத்தெல்லாம் நோக்கி அறிந்து திரும்புகின்றேன். (யான் திரும்பிவரும்வரை) வழியைக் காவல் செய்ம்மின்' என்று கூறிக் குளிர்ந்த நீர்த்துறையிலுள்ள ஒரு படகில் (கங்கையின் தென்கரை நின்று வடகரை நோக்கி) தான் ஒருவனே தனித்துவந்தான்.

கு :—இடுக்கண் – துன்பம். இடுக்கண் ஒன்று உண்டு என இயைக்க. உடையான் - தலைவன். உலைதல்-கெடுதல். உடையான், உலையாத அன்புடையான் என்பவை இராமனைக்குறித்து நின்றன. உடையானும் உலையாத அன்பு உடையானும் ஆன இராமன் கொண்ட தவ வேடமே கொண்டிருந்தான் என்க. குறிப்பு – கருத்து. கண்டு உணர்ந்து என இருவினைபெய்தது ஐயமகலத் தெளிந்து எனற் பொருட்டு. (31)

### பரதன் வணங்கக் குகன் தழுவுதல்

2422. வந்தெதிரே தொழுதானை
 வணங்கினன் மலரிருந்த
அந்தணனுந் தனைவணங்கு
 மவனுமவ னடிவீழ்ந்தான்
தந்தையினுங் களிகூரத்
 தழுவினன் தகவுடையோர்
சிந்தையினுஞ் சென்னியினும்
 வீற்றிருக்குஞ் சீர்த்தியான்.

**வந்து, எதிரே தொழுதானை வணங்கினன்; மலர் இருந்த அந்தணனும் தனை வணங்குமவனும், அவனடி வீழ்ந்தான்; தந்தையினும் களி கூரத் தழுவினன், தகவுடையோர் சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும் சீர்த்தியான்.**

பொ :—வந்து, எதிரே (திசை நோக்கித்) தொழுத பரதனை வணங்கினன் ; தாமரைப் பூவில் தங்கிய பிரமனும் தன்னை வணங்கும் பெருமை வாய்ந்த பரதனும், அந்தக் குகனுடைய அடிகளில் விழுந்து வணங்கினன் ; தக்கோர் சிந்தையினும், சிரத்தினும் வீற்றிருக்கும் மிக்க புகழையுடைய குகன், தந்தை தழுவுதலால் மைந்தற்கு உளதாகும் மகிழ்ச்சியினும் மிக்க மகிழ்ச்சி உண்டாகும்படி பரதனைத் தழுவினன்.

கு :—வந்து என்பது முன்பாட்டில் வந்தான் என்றதனை எச்சமாக்கி அநுவதித்தவாறு. அது வணங்கினன் என்னும் வினைகொண்டு முடியும். தொழுதல், வணக்கம், அடிவீழ்தல் என்பவை இங்கே எட்டுறுப்பும் நிலந் தோய விழுந்து பணிதலைக் குறித்துநின்றன. அந்தணனும் தனைவணங்கு மவனும் அவன் அடி வீழ்ந்தான் என்பதனுள் உம்மையால் குகனும் அடி வீழ்ந்து வணங்கினமை பெறப்படும். மலர் இருந்த அந்தணனும் தனை வணங்குமவன் என்றது பரதனை. பரதன், மூவுலகும் ஈன்ற பிரமனை முன் ஈன்ற இராமனுக்குத் தம்பியாய், அவனனைய சிறப்புடையனாதலின் பிரம னும் வணங்கும் பெற்றியுடையனாயினன். 'எனைத்துள மறையவை இயம் பற்பாலன, பனைத்திரள் கரக்கரிப் பரதன் செய்கையே' (திருவடி சூட்டு 44) என்று பரதன் பெருமை பேசுவதும் இங்கு நோக்கத் தகும். அவன் அடி–அக் குகனுடைய தாள்களை. அவன் என்பது இங்கு குகனைச் சுட்டி நின்றது. தந்தையினும் களிகூரத் தழுவினன் என்பதற்கு, தந்தையாகிய தசரத சக்கரவர்த்தி தன் மைந்தர்களைத் தழுவுங்கால் அடையும் மகிழ்ச்சி யினும் மகிழ்ச்சி மிகத் தழுவினன் என உரைகொள்ளலும் ஆம். தகவுடை யோர் சிந்தையினும், சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான், தந்தை யினும் களிகூரத் தழுவினன் எனஇயையும். தகவுடையோர் சிந்தையினும்

சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான் என்றது குகனை. தகவு - பெருமை. தகவுடையோர்-பெருமையுடையோர். இராமனால் தோழமை கொள்ளப்பட்டவனாதலின், குகன் தகவுடையோர் சிந்தையினும் சென்னி யினும் வீற்றிருக்கும் சீர்த்தி உடையனாயினன். தகவுடையோரால் நினைந்து வாழ்த்தி வணங்கும் பெருமையுடையான் குகன் என்றவாறு.

பெரியோரைச் சிறியோர் வணங்குதல் உலகியல்; இது பொதுவான ஒழுக்கமாகும். அடியார்களுள், சாதியும் வயதும் கொண்டு பெரியர் சிறியர் என்று மதிப்பிடாமல் ஒருவரையொருவர் வணங்குவது முறை; இது சிறப்பொழுக்கமாகும். இச்சிறப்பொழுக்க முறைக்கிசையவும், ஆசிரியர் பரதன் கூற்றாக முன்னும் பின்னும் பேசியவற்றுக்கு இசைய வும், இப்பாடலுக்குப் பொருள் கொள்ளுதல் அமைவுடையதாகும்.

பரதனும், குகனும் இராமனுடைய அழகும், குணமும், செயலும் கண்டு, அவன் திறத்துப் பேரன்பு பூண்டவர்கள் என்பது சொல்லாமே அமையும். ஆகவே அவர்கள் ஒருவரையொருவர் வணங்குதல் முறையே யாகும். ஆதலால், ' வந்து, எதிரே தொழுதானை (குகன்) வணங்கினான். அவ்வாறு வணங்கின குகனை, மலர் இருந்த அந்தணனும் தனை வணங்கு மவனான பரதனும் அடிவீழ்ந்து வணங்கினான். வணங்கின பரதன் உள்ளத்தே, குகன் இராமனிடம் பேரன்பு பூண்டவன் என்பதனால், அவன்பால் எழுந்த பத்திமையோடு, இராமனால் தழுவிக் கொள்ளப்பெற்ற தோழன் என்ற நிலையில், இராமனைத் தான் வணங்கி வழிபடுதல்போலக் குகனும் தன்னால் வணங்கி வழிபடத்தக்க முன்னவன் என்ற உணர்வும் மேலோங்கியமையால், குகன் தன்னை வணங்குதலை விரும்பாது, தான் குகனை வணங்கி, அவனடிக்கீழ்க் கிடந் தானாக, குகன் பரதனைத் தழுவிக்கொண்டனன் என்க. " மன் முன்னே தழீஇக்கொண்ட மனக்கினிய துணைவனேல், என் முன்னே; அவற் காண்பென் யானே சென்று, என வெழுந்தான்" (2417) "இன் துணைவன் இராகவனுக்கு இலக்குவற்கும், இளையவற்கும் எனக்கும் மூத்தான்" (2456) என்று பரதன் கூற்றாக ஆசிரியர் கூறியனவும் இங்கு நோக்கத்தகும்.

இவ்வாறு குகன் பரதனைத் தழுவிக்கொண்டாலும், அவனுடைய உள்ளத்தே பரதன் எம்பெருமான் பின் பிறந்தான் என்ற நினைவும் அவன்மீது தான் தவறு நினைந்ததனால் எழுந்த துணுக்கமும் உரம் பெற்றெழுந்து, அவன் பரதனை மீண்டும் வணங்கும்படி செய்தன. இதனை ' மீட்டும் மண்ணதனில் வீழ்ந்தான்' (2424) என்று ஆசிரியர் பின்னும் கூறுவாராயினர். இவ்வாற்றான் நோக்குமிடத்து இச்செய்யு ளுக்கு மேல் உரைத்த பொருள் அன்பர் நெறிக்கும், ஆசிரியர் கருத் துக்கும் ஏற்றதாய் அமைதல் காணலாம். (32)

குகன் வினவும் பரதன் கூறும் விடையும்

2423. தழுவின புளிஞர் வேந்தன்
★ றாமரைச் செங்க ணனை
யெழுவினு முயர்ந்த தோளா
யெய்திய தென்னை யென்ன
முழுதுல களித்த தந்தை
முந்தையோர் முறையி னின்றும்
வழுவின னதனை நீக்க
மன்னனைக் கொணர்வா னென்றான்.

தழுவின புளிஞர் வேந்தன்
தாமரைச் செங்கணனை
'எழுவினும் உயர்ந்த தோளாய்!
எய்தியது என்னை?' என்ன,
'முழுது உலகு அளித்த தந்தை
முந்தையோர் முறையில் நின்றும்
வழுவினன், அதனை நீக்க
மன்னனைக் கொணர்வான்' என்றான்.

பொ:—தழுவிய வேடர்தலைவனாகிய குகன், தாமரை மலர்போன்ற சிவந்த கண்களையுடைய பரதனை (நோக்கி), 'கணைய மரத்தினும் நீண்ட கைகளையுடையாய்! (நீ வனம்நோக்கி) வந்தது ஏன்?' என்று வினவ, (பரதன்), 'உலக முழுதும் காத்த தந்தை (யாகிய சக்கரவர்த்தி), முன்னோர் முறையினின்றும் தவறினான்; அப்பிழையை நீக்கும்பொருட்டு அரச(னாகிய இராம)னை அழைத்துக்கொண்டு போதற்கு (வந்தேன்)' என்றான்.

கு:—புளிஞர் - வேடர். தாமரைச் செங்கணன் என்றது பரதனை. பரதன் இராமனனையான் ஆதலின், இராமனுக்கு வழங்கும் தாமரைச் செங்கணன் என்னும் பெயர்கொண்டு பரதனையும் சுட்டினார், எழு — கணைய மரம். பரதன் தோளுக்குக் கணையமரம் உவமை. திரண்டு உருண்டு நீண்ட தன்மையும், வன்மையும் உடைமை பொதுத்தன்மை. உலக முழுது என முன் பின்னாக மாற்றியமைத்து உம் விரித்து, உலக முழுதும் எனக் கொள்க. அளித்தல் - காத்தல். முந்தையோர் முறை— (மூத்தவற்கு முடி சூட்டும்) முன்னோர் நடை முறை. வழுவுதல் - பிழைபடல். வழுவினன் என்பதற்கு நழுவினன் என்று பொருள்கொள்ளலுமாம். (33)

## பரதன்பால் தீதின்மை கண்ட குகன் வணங்கிக் கூறல் 2424—2426

**2424.** கேட்டனன் கிராதர் வேந்தன்
கிளர்ந்தெழு முயிரனாகி
மீட்டுமண் ணதனில் வீழ்ந்தான்
விம்மின னுவகை வீங்கத்
தீட்டரு மேனி மைந்தன்
சேவடிக் கமலப் பூவிற்
பூட்டிய கையன் பொய்யி
லுள்ளத்தன் புகல லுற்றான்.

கேட்டனன் கிராதர் வேந்தன்;
கிளர்ந்து எழும் உயிரன் ஆகி,
மீட்டும் மண்ணதனில் வீழ்ந்தான்;
விம்மினன், உவகை வீங்கத்
தீட்டரு மேனி மைந்தன்
சேவடிக் கமலப் பூவில்
பூட்டிய கையன் பொய் இல்
உள்ளத்தன் புகலலுற்றான்.

பொ :—பரதன் கூறியதனை வேடர்க்கு அரசனான குகன் கேட்டு வீறுபெற்றெழுந்த உயிரையுடையனாகி, மீண்டும் மண்ணில் (எட்டுறுப்பும் தோய) விழுந்து (பரதனை) வணங்கி, (அவன்பால் தவறு நினைந்தமைக்கு) வருந்தி, (பரதனுடைய தூய தன்மை கண்டு) மகிழ்ச்சி மிக, (ஓவியராலும்) எழுதுதற்கரிய வடிவழகு வாய்ந்த பரதனுடைய செவ்விய அடித்தாமரை மலரில் இறுகப் பிணித்த கைத்தலங்களையும் குற்றம் அற்ற மனத்தினையும் உடையனாய்க் கூறுவானாயினன்.

கு :—கிராதர் - வேடர். கிளர்ந்தெழுதல் - வீறுபெற்றெழுதல். முன் பாட்டில் 'வந்து எதிரே தொழுதானை (குகன்) வணங்கியது 'எம்பெருமான் பின் பிறந்தார் என்று அன்பர் நெறிபற்றி; இப்பாட்டில் மீட்டும் குகன் வணங்கியது பரதன்பால் குற்றங்கண்ட தன் பிழை தீர்தற் பொருட்டு என்று கொள்ளத்தகும். கேட்டனன், வீழ்ந்தான், விம்மினன் என்பவை முற்றெச்சம். விம்முதல் இங்கே வருந்துதல் என்னும் பொருளிற் பயின்றது. உவகை - மகிழ்ச்சி. தீட்டருமேனி என்றது, பரதனுடைய வடிவழகு மிகுதி கூறியவாறு. 'எழுதரிய திருமேனிக் கருங்கடல்' (740) என்று இராமனை முன்பு கூறியதும் நோக்கத்தகும். (34)

**2425.** தாயுரை கொண்டு தாதை
யுதவிய தரணி தன்னைத்
தீவினை யென்ன நீத்துச்
சிந்தனை முகத்திற் றேக்கிப்
போயினை யென்ற போழ்து,
புகழினோய் தன்மை கண்டா
லாயிர மிராமர் நின்கே
ழாவரோ தெரியி னம்மா.

தாய் உரை கொண்டு, தாதை
உதவிய தரணி தன்னைத்
தீவினை என்ன நீத்துச்
சிந்தனை முகத்தில் தேக்கிப்
போயினை என்ற போழ்து,
புகழினோய்! தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின்கேழ்
ஆவரோ? தெரியின் அம்மா!

பொ :—புகழுடையாய்! அன்னை சொல்லால் தந்தை உதவிய ராச்சியத்தைத் தீவினைபோலப் பற்றற நீக்கி, மனக்கவலை முகத்தில் நிறைவித்து, (இராமனை அழைக்க வனம் நோக்கிச்) சென்றாய் என்ற போது, நின்னியல்பினை நோக்கினால் ஆயிரம் இராமரும் ஆராயுமிடத்து நினக்கு ஒப்பாவரோ? ஆகார்.

கு :—தாய் என்றது கைகேயியை. தாயுரைகொண்டு தாதை உதவிய தரணி என்றது, தாயும் தந்தையும் இசைந்து கொடுத்த ராச்சியம் என்றவாறு; எனவே அது தீவினைபோல நீக்கத்தக்கதன் றென்பது குறிப்பு. சிந்தனை-(மனக்) கவலை. தேக்குதல்-நிறைவித்தல். சிந்தனை முகத்தில் தேக்கி என்றது மனக்கவலை முகத்திலே (நன்கு புலப்பட) மிகுவித்து என்றவாறு; "நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம்" என்பது திருக்குறள் (706). ஆயிரம் இராமரும் என உம்மை விரிக்க. கேழ் - ஒப்பு. ஆயிரம் இராமர் நின்கேழாவரோ என்றது இராமனிலும் நீ ஆயிரம் மடங்கு மேம்பாடுடையை என்றவாறு. 'எண்ணில்கோடி யிராமர்களென்னினும், அண்ணல் நின் அருளுக்கருகாவரோ' (யுத்த. மீட்சிப். 232) என்னும் கோசலை கூற்றும் நோக்கத்தகும். அம்மா வியப்பிடைச்சொல். (35)

**2426.** என்புகழ் கின்ற தேழை
யெயினனே னிரவி யென்பான்
றன்புகழ்க் கற்றை மற்றை
யொளிகளைத் தவிர்க்கு மாபோன்
மன்புகழ் பெருமை நுங்கண்
மரபினோர் புகழ்க ளெல்லா
முன்புக ழாக்கிக் கொண்டா
யுயர்குணத் துரவுத் தோளாய்.

என் புகழ்கின்றது ஏழை
எயினனேன்? இரவியென்பான்
தன் புகழ்க் கற்றை மற்றை
ஒளிகளைத் தவிர்க்குமாபோல்,
மன் புகழ் பெருமை நுங்கள்
மரபினோர் புகழ்களெல்லாம்
உன் புகழ் ஆக்கிக்கொண்டாய்
உயர்குணத்து உரவுத்தோளாய்!

பொ:—உயர்ந்த குணங்களும், வலிய தோள்களும் உடையாய்! சூரியன் என்று சிறப்பித்துச் சொல்லப்படுகின்றவனுடைய புகழாகிய ஒளித் தொகுதி, மற்றை ஒளிகளை அடக்கித் தான் மேம்பட்டு நிற்றல் போல, அரசர் பாராட்டும் பெருமையினையுடைய உங்கள் முன்னோர்களான அரசர் புகழையெல்லாம் உன் புகழாக ஆக்கிக்கொண்டுவிட்டாய்; அறிவற்ற வேடனாகிய யான் எவ்வாறு புகழ்வேன்?

கு:—உயர்குணத்து உரவுத்தோளாய்! இரவி யென்பான்தன் புகழ்க்கற்றை மற்றை ஒளிகளைத் தவிர்க்குமாபோல், நுங்கள் மரபினோர் புகழ்கள் எல்லாம் உன் புகழாக்கிக்கொண்டாய்! ஏழை எயினனேன் என் புகழ்கின்றது? என இயையும். மற்றை ஒளி என்றது, பிற கோள்களும், நாண்மீன்களும் ஆகியவற்றின் ஒளியினை. தவிர்க்குமாறு போல என்பது தவிர்க்குமாபோல என நின்றது விகாரம். இரவி யென்பான்தன் புகழ்க்கற்றை மற்றை ஒளிகளைத் தவிர்த்தலாவது: சூரியனுடைய ஒளித்தொகுதி மற்றைக் கோள்கள் முதலியவற்றின் ஒளிகளின் மேம்பட்டுத் தன் முன் அவை ஒளியிழந்து மங்கச் செய்தல். நுங்கள் மரபினோர் புகழ்களெல்லாம் உன் புகழாக்கிக் கொண்டாய் என்றதற்கு, உங்கள் மரபிற்றோன்றிய அரசர் ஒரொருவர் ஒரொரு வகையால் புகழெய்தினராக, நீ அவ்வெல்லாவகையாலும் புகழெய்தி, உன் புகழ்முன் அவர் புகழ் குன்றச் செய்தாய் என்று உவமையொடு பொருந்த உரை கொள்ளத்தகும். "ஆர்கலி யகழ்ந்தோர் கங்கை

யவனியிற் கொணர்ந்தோர் முந்தைப், போர்கெழு புலவர்க்காகி அசுர ரைப் பொருது வென்ஞேர், பேர்கெழு சிறப்பின் வந்த பெரும்புகழ் நிறப தையன், தார்கெழு திரள்தோள் தந்த புகழினைத் தழுவி' என்று முன்னே (1675) இராமன் புகழ் பேசப்படுதலும் இங்கு நோக்கத்தகும். (36)

## பரதன்பால் குகன் ஒப்பற்ற அன்பு கொள்ளுதல்

**2427.** எனவிவை யன்ன மாற்ற
மியைவன பலவுங் கூறிப்
புனைகழற் புலவு வேற்கைப்
புளிஞர்கோன் பொருவில் காத
லனையவற் கமைவிற் செய்தா
ஞரவற் கன்பி லாதார்
நினைவருங் குணங்கொ டன்ஞே
விராமன்மே னிமிர்ந்த காதல்.

என இவை அன்ன மாற்றம்
இயைவன பலவும் கூறிப்
புனை கழல் புலவு வேல் கைப்
புளிஞர்கோன் பொரு இல் காதல்
அனையவற்கு அமைவில் செய்தான்;
ஆர் அவற்கு அன்பு இலாதார்?
நினைவு அரும் குணம் கொடு அன்ஞே
இராமன்மேல் நிமிர்ந்த காதல்.

பொ :—அணிந்த வீரக்கழலையும், புலால் நாற்றம் பொருந்திய வேற்படையையும் உடைய வேடர்க்கரசஞன குகன், என்று இவை போலும் பொருந்திய பல உரைகளையும் உரைத்து, அப்பரதன்பால் பொருந்துமாற்ருல் ஒப்பற்ற அன்பினைச் செய்வாஞயினன்; அவன் பால் அன்பில்லாதவர் எவர்? எண்ணி அளவிடற்கரிய குணங்களா லன்ஞே முன்பு இராமன் மீதும் அவனுக்கு அன்பு பெருகியது?

கு :—இச்செய்யுள் கவிக்கூற்ருய் அமைந்தது. புனைகழல் புலவு வேற்கைப் புளிஞர்கோன், என இவையன்ன இயைவன பல மாற்றமும் கூறி, அனையவற்கு, பொருவில் காதல் அமைவிற் செய்தான்; அவற்கு அன்பிலாதார் ஆர்? நினைவருங்குணங்கொடன்ஞே இராமன்மேலும் நிமிர்ந்த காதல்? என இயைத்துமுடிக்க. மாற்றம் - உரை.

பகைவருடலிற் குளித்து, தசை முதலியவற்ருேடு அளைந்தமையின் வேல் புலால் நாற்றம் உள்ளதாயிற்று. காதல் - அன்பு. அனையவன், அவன் என்ற சுட்டுக்கள் பரதனை உணர்த்தின. இராமன்மேலும் என உம்மை விரிக்க. 'நினைவருங் குணங்கொடன்ருே இராமன் மேல் நிமிர்ந்த காதல்' 'ஆர் அவற்கன்பிலாதார்' என்னுந் தொடர்கள், புளிஞர்கோன் பொருவில் காதல் அமைவிற் செய்தான் என்பதனை நிறுவுவன ஆயின. குகன் இராமனிடம் குணங்கண்டு அன்பு செய்ததுபோலப் பரதனிடமும் குணங்கண்டு அன்பு செய்வா ஞயினன் என்றவாறு. குணங்கண்டு அன்பு செய்தாலும், இராமன் பால் நிமிர்ந்த காதலாகவும், பரதன்பால் பொருவில் காதலாகவும் அமைந்ததென அவ்வன்பின் இயல்புதோன்ற அடைபுணர்த்த நயம் காணத்தகும். **(37)**

## இராமன் உறைந்த இடத்தைப் பரதனுக்குக் குகன் காட்டுதல்

**2428.** அவ்வழி யவனை நோக்கி
யருடரு வாரி யன்ன
செவ்வழி யுள்ளத் தண்ண
றென்றிசைச் செங்கை கூப்பி
யெவ்வழி யுறைந்தா னம்மு
னென்றலு மெயினர் வேந்த
னிவ்வழி வீர யானே
காட்டுவ லெழுக வென்ருன்.

அவ்வழி அவனை நோக்கி,
அருள்தரு வாரி அன்ன
செவ்வழி உள்ளத்து அண்ணல்,
தென்திசைச் செங்கை கூப்பி,
'எவ்வழி உறைந்தான் நம் முன்?'
என்றலும், எயினர் வேந்தன்,
'இவ்வழி வீர! யானே
காட்டுவல்; எழுக' என்ருன்.

பொ :—அருளைத் தருகின்ற, கடல்போன்ற, செவ்விய நெறியிற் செல்லுகின்ற உள்ளத்தையுடைய பரதன், அவ்விடத்தே அக்குகனைப் பார்த்து, தென்றிசை நோக்கிக் கைகுவித்து வணங்கி, 'நம் அண்ண ஞன இராமன் எங்கே தங்கினுன்' என்று வினவுதலும், வேடர்க்கு

வேந்தனுன குகன், (பரதனே நோக்கி) 'வீர ! இப்பொழுது யானே காட்டுவல் ; புறப்படுக' என்றனன்.

கு :—அவ்வழி எவ்வழி என்பவற்றுள் வழி என்பது இடம் என்னும் பொருளிற் பயின்றது. அவ்வழி-அவ்விடம். அவன் என்றது குகனே. வாரி-கடல். அருள் தரும் உள்ளம், வாரி அன்ன உள்ளம், செவ்வழி உள்ளம் என இயையும். செவ்வழி-நன்னெறி. அண்ணல் என்றது பரதனே. இவ்வழி-இப்பொழுது. (38)

### இராமன் பள்ளிகொண்ட இடம் கண்ட பரதனுடைய செயலும் சொல்லும் 2429—2430

**2429.** காரெனக் கடிது சென்ருன்
கல்லிடைப் படுத்த புல்லின்
வார்சிலேத் தடக்கை வள்ளல்
வைகிய பள்ளி கண்டான்
பார்மிசைப் பதைத்து வீழ்ந்தான்
பருவரற் பரவை புக்கான்
வார்மணிப் புனலான் மண்ணே
மண்ணுநீ ராட்டுங் கண்ணுன்.

கார் எனக் கடிது சென்ருன்;
கல்லிடைப் படுத்த புல்லின்
வார் சிலேத் தடக்கை வள்ளல்
வைகிய பள்ளி கண்டான்;
பார் மிசைப் பதைத்து வீழ்ந்தான்;
பருவரல் பரவை புக்கான்.
வார் மணிப் புனலால் மண்ணே
மண்ணுநீர் ஆட்டும் கண்ணுன்

பொ :—(பரதன்) மேகம்போல விரைந்து சென்று, நீண்ட விற்பிடித்த பெரிய கையினேயுடைய வள்ளலான இராமன் பள்ளிகொண்ட கற்றலத் தமைத்த புற்பாயலேப் பார்த்து, மண்மிசை நடுக்குற்று வீழ்ந்து, துன்பக் கடலுள் அழுந்தி, ஒழுகுகின்ற முத்துப்போன்ற கண்ணீரினுல் நிலத்தை மாசு நீங்க நீராட்டுகின்ற கண்களேயுடையவனுய்.

கு :—புல்-தருப்பை. கல்லிடைப்படுத்த புல்லின் பள்ளி, வள்ளல் வைகிய பள்ளி என இயையும். பருவரல் – துன்பம். பரவை – கடல்.

மணி - முத்து. மண்ணுதல் - மாசு நீங்கக் கழுவுதல். சென்றான், கண்டான், வீழ்ந்தான், புக்கான், கண்ணன் என்பவை எச்சப் பொருளில் பயின்றன. (39)

2430. இயன்றதென் பொருட்டி னாலிவ்
விடருனக் கென்ற போழ்து
மயின்றனை கிழங்குங் காயு
மமுதென வரிய புல்லிற்
றுயின்றனை யெனவு மாவி
துறந்திலென் சுடருங் காசு
குயின்றுயர் மகுடஞ் சூடுஞ்
செல்வமுங் கொள்வென் யானே!

இயன்றது என்பொருட்டினால் இவ்
இடர் உனக்கு என்ற போழ்தும்,
அயின்றனை கிழங்கும் காயும்
அமுது என, அரிய புல்லில்
துயின்றனை எனவும், ஆவி
துறந்திலென்; சுடரும் காசு
குயின்று உயர் மகுடம் சூடும்
செல்வமும் கொள்வென் யானே.

பொ :—'கானுறைதலாகிய இத்துன்ப நிலை என் நிமித்தம் உனக்கு நேர்ந்தது என்று அறிந்த காலத்தும், கிழங்குகளையும் காய்களையும் அமுதுபோல உண்டு துயிலுதற்கரிய புல்லில் உறங்கினை என்று சொல்லக் கேட்ட காலத்தும், யான் உயிர் துறந்தேனில்லை. அவ்வாறு உயிர் துறவாதிருந்தமையால் ஒளிவிடுகின்ற மணிகள் அழுத்திச் செய்த சிறந்த மகுடம் சூடும் அரசச் செல்வத்தையும் நான் அடைபவனாவேன்' என்றான்.

கு :—இராமன் வைகிய புல்லின் பள்ளி கண்ட பரதனுக்கு இராமனையே கண்டாற்போன்ற உணர்ச்சி பிறக்கிறது. இராமனெதிர் நின்று பேசுவதுபோலப் பேசுகிறான். என் பொருட்டால் உனக்குப் பூழி வெங்கானம் நண்ணும் நிலை நேர்ந்தது என்பது அறிந்த அன்றே யான் உயிர் துறந்திருக்கவேண்டும். அவ்வாறு செய்தேனில்லை. மேலும், நீ புசித்தற்கரிய காய்களையும், கிழங்குகளையும் அமுதுபோல உண்டு, துயிலுதற்கேலாத புல்லில் பஞ்சணையில் துயிலுதல்போலத் துயின்றனை என்று சொல்லக்கேட்ட இன்றும் உயிர்துறந்தேனில்லை; ஆதலால் மணிமுடி

சூடும் அரசச்செல்வத்தையும் யான் ஏற்பவனுவேன்: என்றவாறு. இயலுதல் - நிகழ்தல். இவ்விடர் என்றது, பூழி வெங்கான் புகுதலைக் குறித்தது. அரிய புல்லில் துயின்றனை என்றுனேனும், கிழங்கும் காயும் அயின்றனை என்னுது கிழங்கும் காயும் அமுதென அயின்றனை என்றதற் கேற்பத் துயிலுதற்கரிய புல்லில் பஞ்சணை எனத் துயின்றனை எனவும், பின் புல்லில் துயின்றனை என்னுது, அரிய புல்லில் துயின்றனை என்றதற்கேற்ப, முன் அயிலுதற்கரிய கிழங்கும் காயும் அமுதென அயின்றனை யெனவும் விரித்துரைத்துக்கொள்ளத்தகும். சுடர்தல் - ஒளிவிடுதல். காசு - மணி. மகுடஞ் சூடும் செல்வம் என்றது அரசச் செல்வத்தை. (40)

## பரதன், இலக்குவன் இரவை எங்கே கழித்தான்? எனக் குகன் கூறல் 2431—2432

**2431.** தூண்டர நிவந்த தோளான்
பின்னருஞ் சொல்லுவானந்
நீண்டவன் றுயின்ற சூழ
லிதுவெனி னிமிர்ந்த நேயம்
பூண்டவன் றொடர்ந்து பின்னே
போந்தவன் பொழுது நீத்த
தியாண்டென வினிது கேட்டா
னெயினர்கோ னிதனைச் சொன்னன்.

தூண் தர நிவந்த தோளான்
பின்னரும் சொல்லுவான், 'அந்
நீண்டவன் துயின்ற சூழல்
இது எனில், நிமிர்ந்த நேயம்
பூண்டவன், தொடர்ந்து பின்னே
போந்தவன், பொழுது நீத்தது
யாண்டு?' என இனிது கேட்டான்;
எயினர்கோன் இதனைச் சொன்னன்.

போ:—தூண்போல் உயர்ந்த தோள்களையுடையனுன பரதன், மீட்டும் கூறுவானுய், அந்த நெடியோனுன இராமன் உறங்கிய இடம் இதுவென்றுல், (இராமன்பால்) அளவுகடந்த அன்பு பூண்டவனும், பின் தொடர்ந்துவந்தவனும் ஆன இலக்குவன் இரவை எங்கே கழித்தான்? என இனிதாகக் கேட்க, வேடர்கோனுன குகன், பின்வருமாறு கூறுவானுயினன்.

கு :—உருண்டு திரண்டு உயர்ந்த தோற்றத்தாலும், பாரம் தாங்கும் ஆற்றலாலும் தூண் தோளுக்கு உவமையாயிற்று. நிவத்தல்-உயர்தல்; 'மாக்கடல் நிவந்தெழுதரும் செஞ்ஞாயிற்றுக் கவினை' (4) என்பது புறநானூறு. சூழல் – இடம். நேயம் – அன்பு. (41)

2432. அல்லையாண் டமைந்த மேனி
யழகனு மவளுந் துஞ்ச
வில்லையூன் றியகை யோடும்
வெய்துயிர்ப் போடும் வீரன்
கல்லையாண் டுயர்ந்த தோளாய்
கண்கணீர் சொரியக் கங்கு
லெல்லைகாண் பளவு நின்று
னிமைப்பில னயன மென்றான்.

'அல்லை ஆண்டு அமைந்த மேனி
அழகனும் அவளும் துஞ்ச,
வில்லை ஊன்றிய கையோடும்
வெய்துயிர்ப்போடும் வீரன்,
கல்லை ஆண்டு உயர்ந்த தோளாய்!
கண்கள் நீர்சொரியக் கங்குல்
எல்லை காண்பளவும் நின்றான்;
இமைப்பு இலன் நயனம்' என்றான்.

பொ :—'மலையைக் கீழ்ப்படுத்தி உயர்ந்த தோள்களையுடையாய்! இருளை வென்றுயர்ந்த கரிய திருமேனியினையுடைய அழகனான இராமனும் பிராட்டியும் உறங்காநிற்க, வீரனாகிய இலக்குவன், வில்லை நிலத்தே ஊன்றிப் பற்றிய கைத்தலத்தோடும், வெம்மையுடன் வெளிப்படுகின்ற பெருமூச்சுடனும், (இராமனும் வனம்புக நேர்ந்ததே என்ற துன்பவுணர்ச்சியால்) கண்கள் நீரைச் சொரிய, இரவின் முடிவு காணுமளவும் கண் இமையாதவனாய் (விழித்தகண் விழித்தபடியே) நின்றான்' என்றான்.

கு :—அவள் என்பது பண்டறி சுட்டாய்ச் சீதா பிராட்டியை உணர்த்திநின்றது. துஞ்சுதல் - உறங்குதல். வீரன் என்றது இலக்குவனை. இமைத்தல் கண்ணின் தொழில். இமைத்தில நயனம் என்னாது, இமைப்பிலன் நயனம் என்றது சினைவினை முதலோடும் செறிந்தது. (42)

## பரதன் இலக்குவன் நிலைகண்டு பாராட்டுதலும் தன் நிலைகண்டு நொந்து கூறலும்

**2433.** என்பத்தைக் கேட்ட மைந்த
னிராமனுக் கிளையா ரென்று
முன்பொத்த தோற்றத் தேமில்
யானென்று முடிவிலாத
துன்பத்துக் கேது வானே
னவனது துடைக்க நின்று
னன்பத்துக் கெல்லை யுண்டோ
வழகிதென் னடிமை யென்றான்.

என்பத்தைக் கேட்ட மைந்தன்,
"'இராமனுக்கு இளையார்' என்று
முன்பு ஒத்த தோற்றத்தேமில்,
யான் என்றும் முடிவு இலாத
துன்பத்துக்கு ஏது ஆனேன்;
அவன் அது துடைக்க நின்றான்;
அன்பத்துக்கு எல்லை உண்டோ?
அழகிது என் அடிமை" என்றான்.

பொ :—என்று குகன் கூறியதைக் கேட்ட பரதன், இராமனுக்குத் தம்பியர் என்று முன்னே ஒத்த பிறப்பினராகிய எங்களுள், இராமன் எக்காலத்தும் தீர்தல் இல்லாத துன்பம் உறுதற்கு யான் காரணமானேன். இலக்குவன் அத்துன்பத்தைப் போக்குதற்கு உறுதி பூண்டு நின்றான்; அவன் அன்புக்கு எல்லை இல்லை ; என் அடிமைத்திறம் அழகிது.

கு :—என்பதைக் கேட்ட எனற்பாலது எதுகைநோக்கி என்பத்தைக் கேட்ட என்றானது விகாரம் ; என்பதை என்பது மேற்பாட்டில் குகன் கூறியதை. முன்பு - பெருமையும் ஆம். அன்பத்துக்கு என்பதில் அத்து சாரியை ; அன்றி அது என்னுஞ் சுட்டு எதுகை நோக்கி விகாரப்பட்டது எனினும் ஆம் ; சுட்டாக்குமிடத்து அன்பாகிய அதற்கு என்று பொருள். அவன் அன்பத்துக்கு எல்லை உண்டோ என அவன் என்பதைப் பின் னும் கூட்டுக. அழகிது என்பது இகழ்ச்சிப் பொருள் தந்தது. (43)

பரதன், கங்கை கடத்துவிக்குமாறு குகன்பால் வேண்டுதல்

**2434.** அவ்விடை யண்ண லானு
மன்றரும் பொடியின் வைகித்
தெவ்விடை தரநின் றார்க்குஞ்
செறிகழற் புளிஞர் கோமா அ
னிவ்விடைக் கங்கை யாற்றி
னேற்றினை யாயி னெம்மை
வெவ்விடர்க் கடனின் றேற்றி
வேந்தன்பால் விடுத்த தென்றான்.

அவ்விடை, அண்ணல் தானும்,
அன்று அரும் பொடியின் வைகித்
'தெவ் இடைதர நின்று ஆர்க்கும்
செறிகழல் புளிஞர் கோமாஅன்!
இவ்விடைக் கங்கையாற்றின்
ஏற்றினையாயின், எம்மை
வெவ் இடர்க்கடல் நின்று ஏற்றி,
வேந்தன்பால் விடுத்தது' என்றான்.

பொ :—பெருமையிற் சிறந்தோனாகிய பரதனும், அவ்விடத்தில் அன்று தங்குதற்கரிய புழுதியிலே தங்கி, (குகனை நோக்கி) 'பகைவர் வருந்தும்படி நிலைபெற்று ஒலிக்கின்ற கட்டப்பெற்ற வீரக்கழலினையுடைய வேடர் கோமானே! இவ்விடத்துக் கங்கையாற்றின் தென்கரையை அடைவிப்பாயாயின், எங்களைக் கொடிய இடர்க்கடலினின்று கரையேற்றி அரசனாகிய இராமன்பால் அடைவித்ததாகும்' என்று கூறினான்.

கு :—அண்ணல் என்றது பரதனை. பொடி - புழுதி. தெவ்-பகை. இடைதரல்-வருந்தல். ஆர்த்தல் - ஒலித்தல். செறித்தல் - கட்டுதல். வேந்தன் என்றது இராமனை. (44)

குகன் கட்டளையால் நாவாய்கள் வருதல் 2435—2436

**2435.** நன்றெனப் புளிஞர் வேந்த
னண்ணினன் றமரை நாவாய்
சென்றினித் தருதி ரென்ன
வந்தன சிவன்சேர் வெள்ளிக்

குன்றெனக் குனிக்கு மம்பொற்
குவடெனக் குபேரன் மான
மொன்றென நாணிப் பல்வே
றுருவுகொண் டனைய வான.

'நன்று' எனப் புளினர் வேந்தன்
நண்ணினன் தமரை; 'நாவாய்
சென்று இனித்தருதிர்' என்ன,
வந்தன; சிவன் சேர் வெள்ளிக்
குன்றெனக் குனிக்கும் அம்பொற்
குவடெனக் குபேரன் மானம்
ஒன்று என நாணிப் பல்வேறு
உருவு கொண்டனைய ஆன.

போ :—வேடர்க்கு அரசனுன குகன், 'நன்று' என்று கூறித் தன் சுற்றத்தாரைக் கிட்டி, 'இனி நீயிர் சென்று நாவாய் தருதிர்' எனச் சிவபிரான் எழுந்தருளியுள்ள கயிலை என்னும் வெள்ளிமலையும், அப்பெருமான் வளைத்த மேரு என்னும் அழகிய பொன்மலையும் குபேரன் விமானமான புட்பகமும் ஆகிய இவை, தனித்தனி ஒவ்வொன்றுயுள்ளன என்று (உலகம்) கூறு நிலைக்கு நாணிப் பலவேறு உருவம் கொண்டாற் போன்றனவான நாவாய்கள் வந்தன.

கு :—நன்று என்றது குகன், பரதன் கூறியதற்கு இசைந்தமை கூறியவாறு. நண்ணினன் - நண்ணி ; முற்றெச்சம். தமரை நண்ணினன் என மாற்றிக் கூட்டுக. இனி என்றது பரதன்பால் குற்றமின்மை தெளிந்த இப்பொழுது என்றவாறு. இனி, சென்று நாவாய் தருதிர் என இயைக்க. முன், 'அம்பிகள் யாதும் ஓட்டலிர்' (2403), 'துறையோடம் விலக்கீர்' (2409), 'குறிப்பெல்லாம் கண்டுணர்ந்து பெயர்கின்றேன் காமின்கள் நெறி' (2421) என்று கட்டளையிட்டுப் போந்தவனுதலின், இனி, சென்று நாவாய் தருதிர் என்று கூறுவானுயினன். சிவன் என்பதனைப் பின்னும் கூட்டி, சிவன் குனிக்கும் அம்பொற்குவடு என இயைக்க. குனித்தல் - வளைத்தல். பொற்குவடு - பொன்மலை ; மேரு. குன்றென, குவடென என்பவற்றுள், என என்பது எண்ணிடைச்சொல். குபேரன் மானம் என என்று முன் பயின்ற என என்னும் எண்ணிடைச் சொல்லைப் பிரித்துப் பின்னும் கூட்டுக. மானம் - விமானம் ; முதற்குறை. குபேரன் மானம் என்றது புட்பகத்தினை. நிறமும், தோற்றமும், பெருமையும், இடப்பரப்பும் உடைமையால் நாவாய்களுக்கு வெள்ளிமலையும் பொன்மலையும் உவமையாயின. இடப்பரப்பாலும், தோற்றத்தாலும், பெருமையாலும் புட்பகம் உவமையாயிற்று. வெள்ளி மலையும், பொன் மலையும், புட்பகமும் பலவாகாமல்

ஒவ்வொன்ருகவே உள்ளன; குகனுல் வருவிக்கப்பட்ட நாவாய்களுள் வெள்ளிய (கயிலேபோன்ற) ஓடங்கள் பல; பொன்னிறம் வாய்ந்த, (மேருமலேபோன்ற) ஓடங்கள் பல; புட்பகம் போல்வன பல; எனவே ஒவ்வொன்ருகவுள்ள வெள்ளி மலேயும், பொன் மலேயும், புட்பகமும் அந் நிலேக்கு நாணிப் பலவுருக்கொண்டன போல்வனவாயின நாவாய்கள் என்ருர். நாவாய் என்பதனேப் பின்னும் கூட்டிப் பல்வேறு உருவு கொண்டனேயவான நாவாய் வந்தன என முற்றுவிக்க. (45)

**2436.** நங்கையர் நடையி னன்ன
நா ணுறு செலவி ஞவாய்
கங்கையு மிடமி லாமை
மிடைந்தன கலந்த வெங்கு
மங்கொடிங் கிழித்தி யேற்று
மமைதியி னமரர் வையத்
திங்கொடங் கிழித்தி யேற்று
மிருவினே யென்ன லான.

நங்கையர் நடையின் அன்னம்
நாண் உறு செலவின் நாவாய்,
கங்கையும் இடம் இலாமை,
மிடைந்தன கலந்த எங்கும்;
அங்கொடு இங்கு இழித்தி ஏற்றும்
அமைதியின் அமரர் வையத்து
இங்கொடு அங்கு இழித்தி ஏற்றும்
இருவினே என்னல் ஆன.

பொ :—அன்னங்கள் நாணுகின்ற நங்கையர் நடைபோலும் நடையினேயுடைய நாவாய்கள், அக்கரையிலுள்ளாரை இக்கரையிலும், இக்கரையிலுள்ளாரை அக்கரையிலும் ஏற்றி இறக்குந் திறத்தால், தேவருலகினின்று இவ்வுலகினும், இவ்வுலகினின்று தேவருலகினும் மக்களே இறக்கி யேற்றுகின்ற இருவினேயென்று சொல்லத்தக்க அமைதி யினேயுடையனவாய், கங்கையும் இடம் போதாமல் சுருங்கும்படி எங்கும் நெருங்கி நிறைந்தன.

கு :—அன்னம் நாணுறு நங்கையர் நடையின் செலவின் நாவாய் என இயையும். நடையின் - நடைபோல. அன்னமும், என உயர்வு சிறப்பும்மை விரிக்க. கங்கையும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பு. மிக்க இடப்பரப்புடைய கங்கையும் என்றவாறு. மூன்ரும் அடியில்

அங்கு இங்கு என்பவை, அக்கரை இக்கரை என்று பொருள்பட நின்றன. இழித்தி-இறக்கி. அமரர் வையம் – தேவருலகு, துறக்கம். நான்காம் அடியில் இங்கு அங்கு என்பவை இவ்வுலகம்(பூமி) அவ்வுலகம்–(துறக்கம்) என்று பொருள்பட நின்றன. இருவினை - பாவ புண்ணியங்கள். புண்ணியம் மேலுலகையும், பாவம் கீழுலகையும் அடைவிப்பன. (46)

குகன் நாவாய்கள் வந்தமை கூற, அவற்றில்
படைகளை யேற்றும்படி பரதன் சுமந்திரனிடம் சொல்லுதல்

**2437.** வந்தன வரம்பி ளுவாய்
வரிசிலைக் குரிசின் மைந்த
சிந்தனை யாவ தென்று
சிருங்கிபே ரியர்கோன் செப்பச்
சுந்தர வரிவி லானுஞ்
சுமந்திரன் றன்னை நோக்கி
யெந்தையித் தானை தன்னை
யேற்றுதி விரைவி னென்றான்.

'வந்தன வரம்பு இல் நாவாய்;
வரிசிலைக் குரிசில் மைந்த!
சிந்தனை யாவது?' என்று
சிருங்கிபேரியர்கோன் செப்பச்
சுந்தர வரி விலானும்
சுமந்திரன் தன்னை நோக்கி,
'எந்தை! இத் தானை தன்னை
ஏற்றுதி, விரைவின்' என்றான்.

பொ:—'சிருங்கிபேரம்' என்னும் ஊரிலுள்ளார்க்குத் தலைவனாகிய குகன், (பரதனை நோக்கி,) 'கட்டமைந்த வில்லினையுடைய தசரத சக்கரவர்த்தியின் புத்திரனே! கணக்கற்ற நாவாய்கள் வந்தன; நின் நினைவு யாது?' என்று சொல்ல, அழகிய கட்டமைந்த வில்லினையுடைய பரதனும், சுமந்திரனை நோக்கி, 'எம்முடைய தந்தையே! இந்தப் படையை விரைவில் நாவாய்களின் மூலம் அக்கரையடையச்செய்க' என்றான்.

கு:—சிருங்கிபேரியர்கோன், 'வரிசிலைக் குரிசின் மைந்த! வரம்பில் நாவாய் வந்தன; சிந்தனை யாவது?' என்று செப்ப என இயையும்.

சிருங்கிபேரம் - குகனுடைய ஊர். ‘சிருங்கிபேரம் எனத் திரைக்கங்கையின் மருங்கு தோன்றும் நகர் உறை வாழ்க்கையன்’ (2051) என்றார் முன்னும். சிருங்கிபேரத்தில் உள்ளார் - சிருங்கிபேரியர். சிந்தனை - நினைவு; ‘சிந்தனையுரைசெய்வான்’ (2068) என்றார் முன்னும். யாது என்பது யாவது என்றானது; விரித்தல் விகாரம். ‘வரிசிலைக் குரிசில்’ என்றது தயரதனையும், ‘சுந்தரவரிவிலான்’ என்றது பரதனையும் சுட்டி நின்றன. தன் இரண்டும் சாரியை. சுமந்திரன் தசரதனொடு நெருங்கிய நட்பினனும், அமைச்சனுமானமையால், பரதன் ‘எந்தை’ என்றான். எந்தை, அண்மை விளி; எந்தை போல்வாய் என்பது பொருள். ‘இதற்கிரங்கல் எந்தை நீ’ (1960) என்று இராமன் கூற்றால் முன்னே கூறியதும் காணலாம். (47)

### படைகள் கங்கையைக் கடத்தல்

2438. குரிசில தேவ லாலக்
குரகதத் தேர்வ லானும்
வரிசையின் வழாமை நோக்கி
மரபுளி வகையி னேற்றக்
கரிபரி யிரதங் காலாள்
கணக்கறு கரையில் வேலை
யெரிமணி திரையின் வீசுங்
கங்கையா றேறிற் றன்றே.

குரிசிலது ஏவலால் அக்
குரகதத் தேர் வலானும்
வரிசையின் வழாமை நோக்கி,
மரபு உளி வகையின் ஏற்றக்
கரி பரி இரதம் காலாள்
கணக்கு அறு கரையில் வேலை
எரி மணி திரையின் வீசும்
கங்கையாறு ஏறிற்று அன்றே.

பொ:—உயர்ந்தோனான பரதன் கட்டளையால், குதிரை பூட்டிய தேரைச் செலுத்துந் தொழிலில் வல்லவனான அச்சுமந்திரனும், ஒழுங்கு பிறழாமல் நோக்கி முறையால் வகைப்படுத்தி ஏற்ற, யானையும், குதிரையும், தேரும், காலாளும் ஆகிய அளவற்ற கரையில்லாத படைக்கடல், விளக்கம் மிக்க மணிகளை அலைக்கரத்தால் (கரையில்) வீசும் கங்கையாற்றைக் கடந்து கரையேறிற்று.

கு :—குரிசில் என்றது பரதனை. குரகதம் - குதிரை. தேர்வலான்-தேர் செலுத்துதலில் வல்லவன்; சுமந்திரன். மரபுளி – (இதன்பின் இதனை ஏற்றல் தகும் என்னும்) முறையால். உளி என்பது ஆல் என்னும் மூன்றனுருபின் பொருள்படுவதோர் இடைச்சொல். கணக்கின்மை தனித்தனி கரி, பரி, இரதம், காலாள்களுக்கும், கரையின்மை அவை ஒருங்கு இயைந்த படைத்தொகுதிக்கும் கொள்ளத்தகும். வேலை - கடல். படையைக் கடல் என்று உருவகவாய்பாட்டால் கூறினர். கடல் ஆற்றைறிற்று என்ற நயம் காணத்தகும். இதனல் நால்வகைப் படையும் கங்கை கடந்தமை தொகுத்துக் கூறப்பட்டது. பின்வரும் பாடல்களுள் படைவகையுள் ஒவ்வொன்றும் கங்கை கடந்தமை விரிக்கப்படும். கங்கையாறேறிற்று என்பதற்கு, படைக்கடல் கங்கையிலுள்ள நாவாய்களில் ஏறிற்று என்று பொருளுரைத்தலுமாம். (48)

## யானைகள் கங்கையை நீந்திக் கடத்தல் 2439—2441

**2439.** இடிபடு முழக்கம் பொங்க
வினமழை மகர நீரை
முடிவுற முகப்ப வூழி
யிறுதியின் மொய்ப்ப போலக்
கொடியொடு வங்கம் வேலைக்
கூம்பொடு படர்வ போல
நெடியகை யெடுத்து நீட்டி
நீந்தின நெடுங்கை வேழம்.

இடி படு முழக்கம் பொங்க, இன மழை மகர நீரை
முடிவு உற முகப்ப, ஊழி இறுதியில் மொய்ப்ப போலக்
கொடியொடு வங்கம் வேலைக் கூம்பொடு படர்வ போல
நெடியகை எடுத்து நீட்டி நீந்தின நெடுங்கை வேழம்.

பொ :—நீண்ட ஒழுங்குபடக் கங்கையாற்றுள் இறங்கிய யானைகள், இடியேறு படுதலால் எழும் பேரொலி மிக, யுக முடிவில் கடல் வற்றும்படி பருக மேகக்கூட்டம் அதனிடை நெருங்கினாற்போல(க் கங்கையில்) நெருங்கிநின்று கப்பலானது, கொடியொடும், பாய்மரத்தோடும் கடலில் செல்லுதல்போலத் தம் நீண்ட கைகளைத் தூக்கி, உயர நிறுத்தி நீந்தி(க் கடந்த)ன.

கு :—கை – ஒழுங்கு, வரிசை; 'கையமை விளக்கம்' (49) என்பது முல்லைப்பாட்டு. படுதல் - உண்டாதல். பொங்குதல் - மிகுதல். மகர

நீர் - கடல். ஊழியிறுதி – உகமுடிவு. வங்கம் – கப்பல். வேலை-கடல். கூம்பு-பாய்மரம். படர்தல்–செல்லுதல். இனமழை ஊழியிறுதியின், இடிபடு முழக்கம் பொங்க, மகரநீரை முடிவுற முகப்ப மொய்ப்பபோல எனவும், வங்கம் கொடியொடு கூம்பொடு வேலைப்படர்வபோல எனவும், வேழம் நெடிய கை யெடுத்து நீட்டி நீந்தின எனவும் இயைக்க. கங்கைக் குக் கடலும், கங்கையில் இறங்கிப் பெரு முழக்கொடு நெருங்கிநின்ற யானைகளுக்கு, ஊழி யிறுதியில் கடலும் வற்றும்படி பருக, அதனிடை இடி முழக்கொடு நிறைந்த மேகங்களும், துதிக்கையினை மேலெடுத்து நிறுத் திக் கங்கையில் நீந்தும் யானைகளுக்கு, கொடியொடும், பாய்மரத்தோடும் கடலிடை செல்லும் நாவாய்களும் உவமையாகும். ஊழியிறுதியில் மேகங்கள் கடலில் இடி முழக்கொடு திரண்டு மொய்த்தல், 'அருங் கடை யுகந்தனில் அசனி மாமழை—கருங்கடல் கிளர்ந்தென' (2401) என்று முன்னும் கூறப்பட்டது. (49)

### யானைகள் இறங்கி நீந்துதலால் கங்கைநீர் கரைகடந்தோடுதல்

**2440.** சங்கமு மகர மீனுந்
தரளமு மணியுந் தள்ளி
வங்கநீர்க் கடலும் வந்து
தன்வழிப் படர மானப்
பொங்குவெங் களிறு நூக்கக்
கரையொரீஇப் போயிற் றம்மா
கங்கையு மிராமற் காணுங்
காதல தென்ன மாதோ.

சங்கமும் மகர மீனும் தரளமும் மணியும் தள்ளி,
வங்கநீர்க் கடலும் வந்து தன் வழிப் படர, மானப்
பொங்கு வெம் களிறு நூக்கக் கரை ஒரீஇப் போயிற்று: அம்மா!
கங்கையும் இராமற் காணும் காதலது என்ன மாதோ.

பொ :—பெரிய சினம் மிக்க யானைகள் உந்தி நீந்துதலால், கங்கை யாறும், இராமனைக் காணும் விருப்புடையது என்று சொல்லும்படி, சங்குகளையும், மகர மீன்களையும், முத்துக்களையும், பிற இரத்தினங்களை யும் கரையில் வீசி, விசையினால், கப்பல்கள் செல்லும் நீரையுடைய கடலும் தன்னிடம் வந்து தன்னைப் பின்பற்றிவரத் தென் கரைகடந்து சென்றது.

கு :—மகர மீன் - சுரு மீன். தாளம் - முத்து. மணி-முத்தல்லாத பிற இரத்தினங்கள். தள்ளி - வீசி. நூக்குதல் - உந்திநீந்துதல். கரை ஒரீஇ - கரை கடந்து. அம்மா வியப்பிடைச் சொல். கங்கையும் என்பதனுள் உம்மை எச்சப்பொருளது; இராமனைக் காணுங் காதல் பரதற்கேயன்றிக் கங்கைக்கும் உளதாயிற்றென்னுமாறு அது தென் கரைகடந்து சென்றது என்றவாறு. இராமனைக் காணப் பரதன் படைக் கடல் பின்வரச் சென்றாற்போலக் கங்கையும் திரைக்கடல் பின் வரச் சென்றது என்பது தோன்ற நின்றமை காணத்தகும். கடலும் என்பதனுள் உம்மை உயர்வுசிறப்புணர்த்தியது. கங்கை சென்று கலக்கும் கடலும், கங்கையில் வந்து கலந்து அதனைப் பின்பற்றிச் செல்ல என்றவாறு. மானப் பொங்கு வெங்களிறு நூக்க, கங்கையும் இராமற்காணும் காதலதென்ன, சங்கமும் மகரமீனும் தரளமும் மணியும் தள்ளி, வங்க நீர்க் கடலும்வந்து தன்வழிப்படரக் கரை ஒரீஇப் போயிற்று என இயையும். (50)

### கங்கையில் நீந்தும் யானைகளின் மத்தகத் தோற்றம்

**2441.** பாங்கினுத் தரிய மானப்
  படர்திரை தவழப் பாரின்
வீங்குநீ ரழுவந் தன்னுள்
  விழுமதக் கலுழி வெள்ளத்
தோங்கல்க டலைக டோன்ற
  வொளித்தவ ணுயர்ந்த கும்பம்
பூங்குழற் கங்கை நங்கை
  முலையெனப் பொலிந்த மாதோ.

பாங்கின் உத்தரியம் மானப் படர் திரை தவழப் பாரின்
வீங்கு நீர் அழுவம் தன்னுள் விழும் மதக் கலுழி வெள்ளத்து
ஓங்கல்கள் தலைகள் தோன்ற ஒளித்து, அவண் உயர்ந்த கும்பம்,
பூங்குழல் கங்கை நங்கை முலை எனப் பொலிந்த மாதோ!

பொ :—கரை கடந்து நிலத்திலே மிக்குப் பாயும் கங்கையின் ஆழமான நீருள், சிந்துகின்ற மதநீராகிய கலங்கிய வெள்ளத்தினையுடைய யானைகள், தலைமட்டும் வெளியே தோன்ற நீருள் மறைந்து நீந்துதலால் நீர்மட்டத்துக்கு மேலே தோன்றிய மத்தகம், நல்ல மேலாடை போலப் பரவிய அலைகள் தவழ, அழகிய கூந்தலையுடைய கங்கையாகிய நங்கையின் தனங்களைப்போல விளங்கின.

கு:—பாரின் வீங்கும் நீரழுவந் தன்னுள், விழும் மதக்கலுழி வெள்ளத்து ஓங்கல்கள் தலைகள் தோன்ற ஒளித்து, அவண் உயர்ந்த கும்பம், பாங்கின் உத்தரியம் மானப் படர் திரை தவழ, கங்கை நங்கை முலையெனப் பொலிந்தது என இயையும். அழுவம் - ஆழம். கலுழி - கலங்கல் நீர். ஓங்கல் - யானை. ஒளித்து என்னும் எச்சத்தை ஒளிக்க எனத் திரிக்க. கும்பம் - யானையின் மத்தகம். யானைகள் தலைமட்டும் வெளியே தோன்ற, மற்றை உடலுறுப்புக்கள் நீருள் மறைய நீந்திச் சென்ற நிலையில், தவழும் அலைகளால் மறைந்து தோன்றும் மத்தகம் மேலாடையால் மறைந்து தோன்றும் கங்கையின் தனங்கள் போல விளங்கின என்றது தற்குறிப்பேற்ற அணி தழுவியது.

சில அச்சுப் புத்தகங்களிலும் ஓலைச் சுவடிகளிலும் இச்செய்யுள், இப்படலத்தின் 54-ஆம் பாடலாக உள்ளது. அது முன் பின் பாடலில் நுவல் பொருளொடு இயைபுடையதாயின்மையின் முன்பாடலில் நுவல் பொருளொடு பொருந்த இங்கே அமைக்கப்பட்டது. (51)

### தேருறுப்புக்கள் நாவாயில் அக்கரை சேர்தல்

**2442.** கொடிஞ்சொடு தட்டு மச்சு
மாழியுங் கோத்த மொட்டு
நெடுஞ்சுவர் கொடியும் யாவு
நெறிவரு முறையி னீக்கி
விடுஞ்சுவற் புரவி யோடும்
வேறுவே றேற்றிச் சென்ற
மடிஞ்சபி னுடம்பு கூட்டும்
வினையென வயிரத் தேர்கள்.

கொடிஞ்சொடு தட்டும் அச்சும் ஆழியும் கோத்த மொட்டும்
நெடுஞ்சுவர் கொடியும் யாவும் நெறி வரும் முறையின் நீக்கி,
விடும் சுவல் புரவியோடும் வேறு வேறு ஏற்றிச் சென்ற
மடிஞ்சபின் உடம்பு கூட்டும் வினை என வயிரத் தேர்கள்.

பொ:—கொடியும், செருகிய மொட்டும், கொடிஞ்சியும், பெரிய சுவரும், தட்டும், அச்சும், ஆழியும் மற்றும் எல்லா வுறுப்புக்களும், கத்தரித்து விடப்பட்ட பிடரி மயிரையுடைய குதிரைகளோடும் நூல் விதியால் முன் பூட்டிய முறையே பிரித்து, வலிய தேர்களை, உடலழிந்த பின் உயிர்களை வேறு உடம்பில் சேர்விக்கின்ற வினைபோல, வெவ்வேறு நாவாய்கள் ஏற்றிச்சென்றன.

கு :—செய்யுளாதலின், தேரின் உறுப்புக்கள் முறைபிறழ்ந்துள்ளன. அவற்றை, கொடி, மொட்டு, கொடிஞ்சு, சுவர், தட்டு, அச்சு, ஆழி : எனத் தேரின் உச்சியுறுப்பு முதல் அடியுறுப்புவரை வரிசையாக அமைத்துக்கொள்ளல் தகும். கொடி-தேரின் உச்சியில் கட்டப்படுவது. பலநிறப் பட்டாலும், நூலாடையாலும் அமைந்தது ; அவற்றில் உருவங்களும் வரையப்பட்டிருக்கும். மொட்டு - தேரின் கூம்பு ; இது, தேரின் உச்சியில் தாமரை அரும்பின் வடிவமாகச் செய்து அமைக்கப்படுவது. கொடிஞ்சு - தேரின் மேல் முகடு ; 'கொடிஞ்சொடு கொடியின் காடறுப்புண்ட காலியல் தேர்' (ஆரணிய. கரன்வதைப். 149), 'நெரிந்தன கொடிஞ்சிகள்' (சுந்தர. 838) என்று பின்னும் கூறுவர். இது கொடிஞ்சு, கொடிஞ்சி, கொடுஞ்சு, கொடுஞ்சி எனவும் வழங்கப்படும். "கொடிஞ்சி - தாமரைப்பூவாகப் பண்ணித் தேர்த்தட்டின் முன்னே நடுவது" என்பர் நச்சினார்க்கினியர். 'கொடிஞ்சி நெடுந்தேர்' (பத்துப். மதுரைக். 752), 'நெடுந்தேர்க் கொடிஞ்சிபற்றி' (அகநானூறு. 111. 24), 'நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய நின்றோன்' (புறநானூறு. 77. 5), 'மணித்தேர்க் கொடுஞ்சி கையாற்பற்றி' (மணிமேகலை. 4. 48), 'மணித்தேர்க் கொடுஞ்சியும்' (சிலப்பதிகாரம். 14. 168), 'கொடுஞ்சி நெடுந்தேர்' (சிலப். 26. 132), 'நெடுந்தேர்க் கொடுஞ்சியும்' (சிலப். 26. 213), 'திண்டேர்க் கொடுஞ்சியொடு தேரோர் வீழ' (சிலப். 27, 37), 'கொடுஞ்சுங் கோலுமா' (சூளாமணி. 1403) என, இவ்வுறுப்பு, பழந்தமிழ் நூல்கள் பலவற்றினும் பயின்றமை காணலாம். சுவர் - 'தேரின் சுற்றுப் பக்கங்களில் மரத்தால் அமைத்த மறைப்பு, 'நெறிந்தன தடஞ்சுவர்' (சுந்தர. 838) என்பதும் இங்கு நோக்கத் தகும். தட்டு - தேரில் வீரன் இருக்குமிடம். அச்சு – 'உருள் கோத்த மரம்.' (திருக்குறள் 667 பரிமேலழகர் உரை.) ஆழி-தேரின் உருள். சுவல் - பிடரிமயிர். வேறு வேறான நாவாய்கள் என்க. வயிரத் தேர்கள், வருநெறி முறையின், கொடிஞ்சொடு தட்டும் அச்சும் ஆழியும் கோத்த மொட்டும் நெடுஞ் சுவரும் கொடியும் யாவும் புரவியோடும், நீக்கி, மடிஞ்சபின், உடம்பு கூட்டும் வினைபோல, வேறு வேறு நாவாய்கள் ஏற்றிச்சென்றன' என இயையும். நெடுஞ்சுவரும் என எண்ணும்மை பிரித்துக் கூட்டுக. மடிந்தபின் என்பது எதுகை நோக்கி, மடிஞ்சபின் என்றாயிற்று. மடிஞ்ச பின் உடம்புகூட்டும் வினை என என்றது உடம்போடுதோன்றிய உயிரை அவ்வுடம்பு அழிந்தபின் வேறு உடம்பில் சேர்விக்கும் வினைபோல என்றவாறு. கங்கையின் வடகரையில் வந்து திரண்ட தேர்களுக்கு, உயிர்கள் உடம்பொடு ஓரிடத்தே தோன்றிய நிலையும், அத்தேர்களைத் தனித்தனி உறுப்புக்களாகப் பிரித்த நிலைக்கு உயிர்கள் உடலிழந்த நிலையும், பிரித்த தேரின் உறுப்புக்கள் நாவாய்கள் மூலம் கங்கையின் தென்கரையடைந்து இணைக்கப்பட்ட நிலைக்கு உடம்பிழந்த உயிர்கள் வினையால் வேற்று நிலத்தில் வேறு உடம்பைப் பெறுதலும் உவமமாகும். (52)

## குதிரைகள் நாவாய் மீது அக்கரை சேர்தல்

2443. நாலிரண் டாய கோடி
நவையிஞ வாய்கண் மீதாச்
சேறிரண் டனைய வாய
கதியொடு நிமிரச் சென்ற
பாறிரண் டனைய மெய்ய
பயந்திரண் டனைய நெஞ்ச
காறிரண் டனைய கால
கடுநடைக் கலினப் பாய்மா.

நால் இரண்டு ஆய கோடி நவை இல் நாவாய்கள் மீதாச்
சேல் திரண்டனைய ஆய கதியொடு நிமிரச் சென்ற;
பால் திரண்டனைய மெய்ய, பயம் திரண்டனைய நெஞ்ச,
கால் திரண்டனைய கால, கடுநடைக் கலினப் பாய்மா

பொ :—பால் திரண்டாற்போன்ற உருவம் உடையனவும், அச்சம் திரண்டாற்போன்ற மனம் உடையனவும், காற்றுத் திரண்டாற்போன்ற கால்களையுடையனவும், விரைந்த நடையினையுடையனவும், கடிவாளம் பூண்டனவும் ஆன எட்டுக்கோடி குதிரைகள் தம்மீது பொருந்தக் குற்ற மற்ற நாவாய்கள், சேல் மீன்கள் திரண்டு சென்ருற்போன்ற விரைவொடு நீண்டு சென்றன.

கு :—பால்திரண் டனைய மெய்ய, பயம்திரண் டனைய நெஞ்ச, கால்திரண் டனையகால, கடுநடைக் கலினப் பாய்மா, நாலிரண்டாய கோடி மீதா(க), நவையில் நாவாய்கள், சேல்திரண் டனையவாய கதியொடு நிமிரச் சென்ற என இயையும். நிமிர்தல் – நீளுதல். 'திரையெனும் நிமிர்கையால்' (2077) என்பது காண்க. பால் திரண்டனைய என்றதனுல் குதிரைகளின் நிறமும், பயந்திரண்டனைய என்றதனுல், அவற்றின் மருட்சியும், கால் திரண்டனைய என்றதனுல் அவற்றின் வேகமும் கூறியவாறு. திரண்டால் அனைய என்பது திரண்டனைய என்ருனது விகாரம். கலினம் – கடிவாளம். நாலிரண்டாயகோடி என்பதனை நாவாய்களுக்கு அடையாக்கலும் ஆம். 'ஆயிரம் அம்பிக்கு நாயகன்' என்று முன் (2043) கூறினமையின், இங்கு நாலிரண்டாய கோடி என்று பாய்மாவின் தொகை சுட்டியதாகக் கொள்ளலாயிற்று. நாலிரண்டு – எட்டு. 'கணக்கிறந்த நாவாயான்' என்று இப்படலத்து முன் (2415) கூறியது, குகனுடைய நாவாய்கள் இவ்வளவின என வரையறுத்துணர்த்தாமையும் நோக்கத்தகும். (53)

ஓடத்திற் செல்லும் மாதர்களின் தோற்றம் 2444—2446

**2444.** ஊடுற நெருக்கி யோடத்
தொருவர்முன் னொருவர் கிட்டிச்
சூடகத் தளிர்க்கை மாதர்
தழுவினர் துவன்றித் தோன்றப்
பாடியல் களிநல் யானைப்
பந்தியங் கடையிற் குத்தக்
கோடுகண் மிடைந்த வென்ன
மிடைந்தன குவவுக் கொங்கை.

ஊடு உற நெருக்கி, ஓடத்து ஒருவர்முன் ஒருவர் கிட்டிச் சூடகத் தளிர்க்கை மாதர் தழுவினர், துவன்றித் தோன்றப் பாடு இயல் களி நல் யானைப் பந்தி அம் கடையின் குத்தக் கோடுகள் மிடைந்த என்ன, மிடைந்தன குவவுக் கொங்கை.

பொ :—வளையணிந்த தளிர்போன்ற கைகளையுடைய மகளிர் நாவாயினிடையே மிகவும் நெருக்கி ஒருவர்க்கு முன்னே ஒருவர் சென்று தழுவி நிறைந்து நிற்றலால், பெருமை பொருந்திய மதச் செருக்குடைய நல் இலக்கணம் அமைந்த யானை வரிசையில் அழகிய நுனியால் தாக்குதற்குக் கொம்புகள் செறிந்தாற்போல (அம்மகளிருடைய) திரண்ட தனங்கள் செறிந்தன.

கு :—சூடகத் தளிர்க்கை மாதர், ஓடத்தூடு உறநெருக்கி, ஒருவர் முன் ஒருவர் கிட்டி, தழுவினர், துவன்றித் தோன்ற எனவும், குவவுக் கொங்கை மிடைந்தன எனவும் இயையும். சூடகம் - முன் கையில் அணியும் வளை. தழுவினர் – தழுவி; முற்றெச்சம். துவன்றுதல் - நிறைதல். தோன்றுதல் - நிலைகொள்ளல்; நிற்றல். பாடு-பெருமை. இயலுதல் - பொருந்துதல். பந்தி-வரிசை. கடை-நுனி. மிடைதல்-செறிதல். மகளிர் தனங்களுக்கு யானையின் கொம்புகள் உவமை கூறப்படுவது உண்டு. ஓடத்திலே மகளிர் ஒருவர்முன் ஒருவர் நெருங்கித் தழுவி நின்ற நிலையில் அவர் தனங்கள், எதிர் எதிராக நின்ற யானை வரிசையில் அவற்றின் கொம்புகள் நுனியால் ஒன்றையொன்று தாக்க நெருங்கினமைபோல இருந்தன என்றவாறு. (54)

**2445.** பொலங்குழை மகளிர் நாவாய்ப்
போக்கினொன் றொன்று தாக்க
மலங்கின ரிரண்டு பாலு
மறுகினர் வெருவி நோக்க

அலங்குநீர் வெள்ளந் தள்ளி
யழிதர வங்கு மிங்குங்
கலங்கின வெருவிப் பாயுங்
கயற்குல நிகர்த்த கண்கள்.

பொலம் குழை மகளிர், நாவாய்ப் போக்கின் ஒன்று ஒன்று தாக்க,
மலங்கினர், இரண்டு பாலும் மறுகினர், வெருவி நோக்க,
அலங்கு நீர் வெள்ளம் தள்ளி அழிதர, அங்கும் இங்கும்
கலங்கின வெருவிப் பாயும் கயற்குலம் நிகர்த்த கண்கள்.

பொ :—ஓடங்கள் செல்லுங்கால் ஒன்றினோடொன்று தாக்குதலால், (அவற்றிலுள்ள) பொன்னாலான குண்டலங்களை அணிந்த மகளிர், மனங் கலங்கி வருந்தி அஞ்சினவர்களாய் இருபக்கத்தும் நோக்க, அவர் கண்கள், விளங்குகின்ற வெள்ள நீரால் தள்ளப்பட்டு வலிகெடுதலால், குழப்பம் உற்று, அஞ்சி அங்கும் இங்கும் தாவும் கயல் மீன்களை ஒத்தன.

கு: —பொலம் - பொன். மலங்கினர் மறுகினர் என்பவை மலங்கி, மறுகி என எச்சப்பொருள்பட நின்றன. மலங்குதல் - கலங்குதல். மறுகுதல்—வருந்துதல். அலங்குதல் – விளங்குதல் ; அசைதலும் ஆம். கலங்கல் - குழம்புதல். நாவாய்ப் போக்கின் ஒன்று ஒன்று தாக்க, பொலம் குழை மகளிர் மலங்கினர், மறுகினர், வெருவி இரண்டுபாலும் நோக்க, (அவர்களுடைய) கண்கள், அலங்குநீர் வெள்ளம் தள்ளி அழி தர, கலங்கின வெருவி அங்கும் இங்கும் பாயும் கயல் குலம் நிகர்த்த : என இயையும். ஓடம் ஒன்றுடன் ஒன்று மோதுதலால் அஞ்சி நோக்கும் மகளிர் கண்கள், வெள்ளத்தால் தள்ளப்பட்டு அஞ்சிய கயல் மீன்கள் போன்றன என்றவாறு. (55)

2446. இயல்வுறு செலவி னாவா
யிருகையு மெயினர் தூண்டத்
துயல்வன துடுப்பு வீசுந்
துவலைகண் மகளிர் மென்றா
சுயல்வுறு பரவை யல்கு
லொளிப்பறத் தளிப்ப வுள்ளத்
தயர்வுறு மதுகை மைந்தர்க்
கயாவுயிர்ப் பளித்த தம்மா.

இயல்வு உறு செலவின் நாவாய்
இருகையும் எயினர் தூண்டத்
துயல்வன துடுப்பு வீசும்
துவலைகள், மகளிர் மென் தூசு
உயல்வு உறு பரவை அல்குல்
ஒளிப்பு அறத் தளிப்ப, உள்ளத்து
அயர்வு உறும் மதுகை மைந்தர்க்கு
அயாவுயிர்ப்பு அளித்தது அம்மா!

பொ :—பொருந்திய போக்கினையுடைய ஓடங்களை இருபக்கத்தும் (இருந்து) எயினர் செலுத்துதலால் அசையும் துடுப்புக்கள் இறைக்கும் நீர்த்துளிகள், மாதர்களின் அசைகின்ற மெல்லிய ஆடையின்கண் பரந்த அல்குல் மறையாமல் நன்கு தெரியும்படி துளித்தலால், இராமன் பிரிவால் மனத்தளர்ச்சியுற்ற வலியரான ஆடவர்க்கு அத்தளர்ச்சி நீங்கச் செய்தது.

கு :—கை - பக்கம். எயினர் என்றது படகு செலுத்துபவர்களை. துயல்வுறுதல் – அசைதல். துவலைகள் - நீர்த்துளிகள். உயல்வுறல் – அசைதல். ஒளிப்புறல் - மறைதல். தளித்தல் – துளித்தல். மதுகை – வலிமை. அயாவுயிர்ப்பு – தளர்ச்சி நீக்கம். அம்மா வியப்பிடைச் சொல். இச்செய்யுள், 'நான நீரிற் கலந்து நலங்கொள் பூம்பட் டொளிப்ப, மேனிதோன்ற விளங்கி' (923) என்னும் சீவகசிந்தாமணிப் பாடலைத் தழுவியமைந்தது. (56)

### நாவாய்கள் சென்று சென்று திரும்புந் தோற்றம்

2447. இக்கரை யிரைத்த சேனை
யெறிகடன் முகந்த வேகி
யக்கரை யடைய வீசி
வறியன வணுகு நாவாய்
புக்கலை யாழி நன்னீர்
பொறுத்தன போக்கிப் போக்கி
யக்கண முவரி மீளு
மகன்மழை நிகர்த்த வம்மா.

இக்கரை இரைத்த சேனை எறிகடல் முகந்த ஏகி,
அக்கரை அடைய வீசி, வறியன அணுகும் நாவாய்,
புக்கு அலை ஆழி நல் நீர் பொறுத்தன, போக்கிப் போக்கி,
அக்கணம் உவரி மீளும் அகல் மழை நிகர்த்த; அம்மா!

போ :—கங்கையின் இக்கரையிலே ஆரவாரித்த படைகளாகிய மோதுகின்ற கடலை முகந்தனவாய்ச் சென்று, கங்கையின் அக்கரையிலே சேரும்படி வீசிவீசி, வறியனவாகி அக்கணமே திரும்புகின்ற ஓடங்கள், அலையொடுகூடிய கடலுள் புகுந்து, அள்ளிக்கொண்ட நல்ல நீரை (மலையேறச் சென்று முழுதும் பொழிந்து) போக்கிப் போக்கி, அக் கணமே (நீர் முகந்து சென்று பொழிவதற்காகக்) கடலை நோக்கி மீட்டும் வருகின்ற பரவிய மேகங்களை ஒத்தன.

கு :—இக்கரை என்றது கங்கையின் வடகரையினை. அக்கரை என்றது கங்கையின் தென்கரையினை. சேனை எறிகடல் – சேனையாகிய மோதுகின்ற கடல் ; உருவகம். படையைக் கடலாக உருவகித்தமைக்கு இசைய வீசி என்றார். உவமையில் போக்கிப் போக்கி என்றதற்கேற்பப் பொருளில் வீசி என்பது மீட்டும் கூட்டப்பட்டது. அலை ஆழி புக்கு எனவும் பொறுத்தன நன்னீர் எனவும் மாற்றிக் கூட்டுக. கணம் - கால நுட்பம். உவரி – கடல். மழை – மேகம். (57)

### நாவாய்கள் கப்பல்கள் போலச் செல்லுதல்

**2448.** அகிலிடு தூப மன்ன
வாய்மயிற் பீலி யார்த்த
முகிழுடை முரண்மாத் தண்டு
கூம்பென முகிலின் வண்ணத்
துகிலொடு தொடுத்த செம்பொற்
றகட்டிடைத் தொடுத்த முத்த
நகுகொடி நெடிய பாயி
னவ்வெனச் சென்ற நாவாய்.

அகில் இடு தூபம் அன்ன
ஆய் மயில் பீலி ஆர்த்த
முகிழ் உடை முரண் மாத் தண்டு
கூம்பு என, முகிலின் வண்ணத்
துகிலொடு தொடுத்த செம்பொன்
தகட்டிடைத் தொடுத்த முத்தம்
நகு கொடி நெடிய பாயின்
நவ் எனச் சென்ற; நாவாய்.

போ :—அகிற்றுகளை நெருப்பில் இடுதலால் உளதாகும் புகை போன்ற சிறந்த மயிற்றோகை கட்டப்பட்டனவும், உச்சியில் அரும்பின்

வடிவினையுடையனவும் ஆகிய வலிய பெரிய துடுப்புக்கள், கூம்புகள் போலத் தோன்ற, நீல நிறத்துகிலாற் கட்டப்பட்டனவும் நல்ல பொன் தகட்டில் பதிக்கப்பட்ட முத்துக்கள் விளங்குகின்றனவுமான கொடிக ளாகிய நெடிய பாய்களால் பெரிய மரக்கலங்கள் செல்லுதல்போல நாவாய்கள் சென்றன.

கு :—முகிழ் - அரும்பு. தண்டு - ஓடத்தைச் செலுத்துதற்குதவும் துடுப்பு. கூம்பு - பாய்மரம். முகிலின் வண்ணமாவது, - நீல நிறம். தொடுத்தல் - 1. கட்டுதல். 2. இணைத்தல். நகுதல் - விளங்குதல். நாவாய் - ஓடம். நவ் - (கடலிற் செல்லும்) பெரிய மரக்கலம். முகிலின் வண்ணத் துகிலொடு தொடுத்த கொடி, செம்பொற்றகட்டிடை தொடுத்த முத்தம் நகு கொடி என்க. துகிலொடு – துகிலால். தண்டும் கொடியும் நாவாயின் உறுப்புக்கள் ; கூம்பும் பாயும் நவ் என்னும் மரக்கலத்தின் உறுப்புக்கள். நவ் என்பது நவ்வி என வழங்கப்படுவதும் உண்டு. துடுப்பு கூம்பாக, கொடி பாயாக நாவாய்கள் நவ் எனச் சென்றன என்றவாறு. நவ் கடலிற் செல்லும் பெரிய கப்பல் என்பது, ‘ நாயக ராளொடு மடிய நவ்விகள், பாயொடு வேலையிற் றிரியும் பண்பின ’ (யுத்த. 19. படைத்தலைவர் வதை. 46.) என ஆசிரியர் பின் கூறுதலால் விளங்கும். (58)

மகளிர் ஏறிய ஓடங்கள் வானவூர்திபோல விளங்குதல்

**2449.** ஆனனங் கமலத் தன்ன
மின்னன்ன வமிர்தச் செவ்வாய்த்
தேனணை குழலா ரேறு
மம்பிகள் சிந்து முத்த
மீனென விரிந்த கங்கை
விண்ணெனப் பண்ணை முற்றி
வானவர் மகளி ரூரு
மானமே நிகர்த்த மாதோ.

ஆனனம் கமலத்தன்ன, மின் அன்ன அமிர்தச் செவ்வாய்த்
தேன் நணை குழலார் ஏறும் அம்பிகள் சிந்தும் முத்தம்
மீன் என, விரிந்த கங்கை விண் எனப் பண்ணை முற்றி,
வானவர் மகளிர் ஊரும் மானமே நிகர்த்த மாதோ !

பொ :—கங்கைநீர்ப்பரப்பு ஆகாயப் பரப்பாக, (கங்கை அலைகளால்) சிந்துகின்ற முத்துக்கள் பரவிய விண்மீன்களாக, தாமரை மலர்போலும் முகத்தையும் அமுதம் ஊறும் செய்யவாயினையும், (சூடிய பூக்களில்

உள்ள) தேனல் நனைந்த கூந்தலினையும் உடைய மின்னற்கொடி போலும் மகளிர் ஏறிய ஓடங்கள், நீர் விளையாட்டு முடிந்து, தேவ மாதர் ஏறிச் செலுத்தும் விமானங்களே போல விளங்கின.

கு :—''கங்கை விண் என, (கங்கை) சிந்தும் முத்தம் விரிந்த மீன் என, குழலார் ஏறும் அம்பிகள், பண்ணை முற்றி வானவர் மகளிர் ஊரும் மானமே நிகர்த்த'' என இயைக்க. விண் - ஆகாயம். கங்கை என்பது மீட்டும் கூட்டப்பட்டது. மீன் நட்சத்திரம். கமலம் அன்ன என்பது இடையே அத்துச் சாரியை பெற்றுக் கமலத்தன்ன என்று ஆயிற்று. அம்பி-ஓடம். பண்ணை – விளையாட்டு. 'கெடவரல் பண்ணை யாயிரண்டும் விளையாட்டு' (உரியியல். 23.) என்பது தொல்காப் பியம். 'மன்றலந் தோழி மாருள் வனத்திடைப் பண்ணை யாட' (1579) என்பது சீவக சிந்தாமணி. பண்ணை இங்கே நீர்விளையாட் டைச் சுட்டியது. மானம் - விமானம்; முதற்குறை. கங்கை நீர்ப் பரப்புக்கு ஆகாயமும், கங்கை சிந்தும் முத்துக்களுக்கு விண் மீன் களும், மகளிர்க்குத் தேவமாதரும், மகளிர் ஏறிய ஓடங்களுக்குத் தேவ மாதர் ஊரும் விமானமும் உவமை. (59)

### ஓடங்கள் உயிர்படைத்தவைபோல நடத்தல்

**2450.** துளிபடத் துழாவு திண்கோற்
றுடுப்பிரு காலிற் றோன்ற
நளிர்புனற் கங்கை யாற்றி
னண்டெனச் செல்லு நாவாய்
களியுடை மஞ்ஞை யன்ன
கனங்குழைக் கயற்கண் மாத
ரொளிரடிக் கமலந் தீண்ட
வுயிர்படைத் தனவே யொத்த.

துளி படத் துழாவு திண் கோல் துடுப்பு இரு காலில் தோன்ற, நளிர் புனல் கங்கை யாற்றில் நண்டு எனச் செல்லும் நாவாய், களி உடை மஞ்ஞை அன்ன கனம் குழைக் கயல் கண் மாதர் ஒளிர் அடிக் கமலம் தீண்ட, உயிர் படைத்தனவே ஒத்த.

பொ :—நீர்த்துளிகள் சிதறும்படி துழாவுகின்ற வலிய மரக்கொம் பாகிய துடுப்புக்கள், இரண்டு பக்கங்களிலும் தோன்ற, குளிர்ந்த நீரை யுடைய கங்கையாற்றில் நண்டு சென்றாற்போலச் செல்லும் நாவாய்கள், பருத்த குண்டலங்களையும், கயல்போலும் கண்களையும் களிப்பினையும்

உடைய மயில்போலும் சாயல் வாய்ந்த மகளிரின் விளக்கம் மிக்க அடித் தாமரைகள் தீண்டுதலால் உயிர் பெற்றவைபோல விளங்கின.

கு :—கோலாகிய துடுப்பு என்க. நளிர் – குளிர்ச்சி. மஞ்ஞை – மயில் நண்டெனச் செல்லும் நாவாய் என்பதனோடு, 'காலுடை நெடு ஞெண்டிற் சென்றது கடிதம்மா' (2076) என முன்னே கூறினமையும் நோக்கத்தகும். (60)

முனிவர் வான்வழிச் சென்று கங்கையினைக் கடத்தல்

2451. மையறு விசும்பின் மண்ணின்
மற்றுமோ ருலகின் முற்று
மெய்வினை தவமே யன்றி
மேலுமொன் றுளதோ கீழோர்
செய்வினை நாவா யேறித்
தீண்டலர் மனத்திற் செல்லு
மொய்விசும் போட மாகத்
தேவரின் முனிவர் போனார்.

**மை அறு விசும்பில் மண்ணில் மற்றும் ஓர் உலகில் முற்றும்**
**மெய் வினை தவமே; அன்றி, மேலும் ஒன்று உளதோ? கீழோர்**
**செய்வினை நாவாய் ஏறித் தீண்டலர், மனத்தில் செல்லும்**
**மொய் விசும்பு ஓடம் ஆகத் தேவரின் முனிவர் போனார்.**

பொ :—(பரதனுடன் வந்த வசிட்டர் முதலிய) முனிவர்கள், (தவச் செல்வர்களாதலால்) கீழ்மக்கள் செலுத்துகின்ற நாவாய்களைப்பற்றி ஏறாமல், மனத்தைப்போல விரைந்து செல்லும் வலிய வான்வழிச்செலவே ஓடத்திற் செல்வதாகத் தேவர்களைப் போலச் சென்றார்கள்; ஆதலால், குற்றமற்ற விண்ணுலகினும், மண்ணுலகினும், வேறுள்ள எந்த ஒரு உலகத்திலும் முழுதும் உண்மையான செயல் எனப்படுவது தவமேயன்றி, அதனினும் சிறந்த வேறு ஒரு செயலும் இல்லை.

கு :—'முனிவர், கீழோர் வினைசெய் நாவாய் தீண்டி ஏறலர், மனத்திற் செல்லும் மொய் விசும்பு ஓடமாக, தேவரில் போனார். ஆதலால், விசும்பினும் மண்ணிலும் வேறு எந்த உலகத்திலும் தவமே முற்றும் மெய்வினை (ஆகும்;) அன்றி அதன்மேலும் ஒன்று உளதோ? என இயையும். மை – குற்றம். விசும்பு – விண்ணுலகு. (61)

படையாவும் நகர மக்கள் அனைவரும் கங்கை கடந்தமை

2452. அறுபதி னுயிர மக்கு ரோணியென்
★ றிறுதிசெய் சேனையு மெல்லை தீர்நகர்
மறுவறு மாந்தரு மகளிர் வெள்ளமுஞ்
செறிதிரைக் கங்கைபின் கிடக்கச் சென்றவே.

'அறுபதினுயிரம் அக்குரோணி' என்று
இறுதி செய் சேனையும், எல்லை தீர் நகர்
மறு அறு மாந்தரும், மகளிர் வெள்ளமும்,
செறி திரைக் கங்கை பின் கிடக்கச் சென்றவே.

பொ :—அறுபதினுயிரம் அக்குரோணி என்று எல்லை கட்டப்பட்ட படைகளும், இறுதியில்லாத அயோத்தி நகரத்தில் வாழும் குற்றமற்ற மாந்தரும், மகளிர் கூட்டமும், அலை செறிந்த கங்கை பின் கிடக்க முன்னே சென்றன.

கு :—முதல் இரண்டடிகளால் கங்கை கடந்த படைகளின் அளவு குறிக்கலாயிற்று. இதனுள் உயர்திணையும் அஃறிணையும் விரவி அஃறிணை முடிபேற்றன. (62)

பரதன் நாவாயில் ஏறுதல்

2453. சுழித்துநீர் வருதுறை யாற்றைச் சூழ்படை
கழித்துநீங் கியதெனக் கள்ள வாசையை
யழித்துவே றவனிபண் டாண்ட வேந்தரை
யிழித்துமே லேறினன் றானு மேறினன்.

சுழித்து நீர் வரு துறை ஆற்றைச் சூழ் படை
கழித்து நீங்கியது எனக் கள்ள ஆசையை
அழித்து, வேறு அவனி பண்டு ஆண்ட வேந்தரை
இழித்து, மேல் ஏறினன், தானும் ஏறினன்.

பொ :—(தன்னைச்) சூழ்ந்து வந்த சேனை, நீர் சுழியைச் செய்து கொண்டு வருகிற துறைகளையுடைய கங்கையைத் தாண்டிக் கடந்ததாக, வஞ்சனையொடு கூடிய ஆசையை அழித்து, முன்பு உலகாண்ட பிற அரசர்களைத் தாழச் செய்து மேன்மையுற்றவனான பரதனும் (படகில்) ஏறினன்.

கு :—சூழ்படை, நீர் சுழித்து வரு துறை ஆற்றைக் கழித்து நீங்கிய தென எனவும் பண்டு அவனி ஆண்ட வேறு வேந்தரை எனவும்

இயைக்க. நீங்கியது என என்று கொண்டு, நீங்கியது என்று (ஓடம் விடுவோர்) சொல்ல என்று பொருள் கூறலும் ஆம். கள்ளம்–வஞ்சனை. கல்வியும், ஒழுக்கமும், ஆற்றலும், அழகும், அறிவும், வீரமும், நற் குணங்கள் பிறவும், மற்றை அரசர்கள்பால் அமைந்தவற்றினும் பரதன் பால் மிக அமைந்தமையின், பரதன் மேம்பட, மற்றை அரசர்கள் தாழ்வாராயினர். ‘தானும் ஏறினன்’ என்பதில் உம்மை தாயர் முதலிய பிறரும் படகில் ஏறினமை சுட்டி நின்றது. (63)

இச்செய்யுளின் பின் பல பதிப்புக்களிலும்,

2453 (1) தன்னன தம்பியும் தாயர் மூவரும்
சொன்னதேர் வலவனும் தூய தோழனும்
துன்னினர் ஏறலும் துழா துடுப்பெனும்
நன்னயக் காலினன் நடத்தன் மேயினன்.

என்று ஒரு செய்யுள் காணப்படுகிறது. இது, ‘சுழித்துநீர் வருதுறை’ என்று தொடங்கும் இப்பாட்டுக்கும், ‘சுற்றத்தார்’ என்று தொடங்கும் பின் பாட்டுக்கும் இடையே இயைபுடையதாய் அமைந்ததுபோற் காணப்படினும், பெரும்பான்மையான சுவடிகளில் இல்லை. ஒரு சாரார், இதனுள், நடத்தல் மேயினன் என்றது குகனை என்கின்றனர். குகன் படகு செலுத்தினன் என்று கொண்டால், அவன் கங்கையினிடையே படகு செலுத்தலைக் கைவிட்டுக் கோசலை முதலியவரை அறிய முற்பட்டு வினவுதலும், அவர்களை வணங்குதலும் இயலாவாம். மற்றொரு சாரார் படகினையே உருவக வாய்பாட்டால் உயர்திணை ஆண்பாலாக்கி, துடுப் பெனும் நல் நயக் காலினன், என்பதனை எழுவாயாகக்கொண்டு நடத்தல் மேயினன் என்பதனைப் பயனிலையாக்கி முடித்துக் காட்டுவர். மற்றொரு வர், ‘நாவாய்’ என்பது தோன்றா எழுவாய் என்று கொண்டு, ‘நாவா யாகிய புருடன் சொல்லத் தொடங்கினன்’ என்று பொருள் வரைந்து, ‘..........................................................................................

இருபுறமும் துழாவும் இரண்டு துடுப்புக் கால்களையுடைமை யாலும் நாவாயைப் புருஷனாகக் குறித்தார்’ என்று விளக்கமும், ‘மற்றொரு சாரார் பரதன் என்பது எழுவாய் என்ப’ என்று பிறர் கூறும் முடிபும் தருவர். இவ்வாறு இடர்ப்பட்டுப் பொருள்செய்வதில் சிறப் பில்லை. அன்றியும், பிறர் படகேறியமை முன் பாடலில் உம்மையாற் பெறப்படும். படகு கங்கையிற் சென்றமையும், அவ்வாறு செல்லுங் கால் குகன் வினவத் தொடங்கினமையும் ஆகிய முன்பாட்டுக்கும் பின் பாட்டுக்கும் இடையே கூறப்படவேண்டிய செய்தி தானே புலனாகும். அதற்குத் தனியே ஒரு செய்யுள் வேண்டா. ஆதலால் இது மிகைச் செய்யுள் என்று கொண்டு இங்கே காட்டலாயிற்று.

மேலும், 45 என்னும் குறியீடுள்ள அச்சுப் புத்தகத்தில், ‘இச் செய்யுளின் பின்,

2453 (b) ஏறின ரிளவலோ டிரங்கு நெஞ்சுகொண்
டூறிய தாயரு முரிய சுற்றமும்
பேறுள பெருநதி நீங்கிப் பெட்பொடுங்
கூறுதென் கரையிடைக் குழீஇய போதிலே.

என்னும் செய்யுளும், அதன்பின் கங்கை நீங்கு படலம் முற்றும் என்ற தொடரும் ஒரு பிரதியிற் காணப்படுகின்றன' என்று ஒரு குறிப்பு உளது. இச்செய்யுள் வேறு எந்தப் பிரதியிலும் காணப்படவில்லை. கவி நடையும் சிறந்ததாயில்லை. இதன் 4 ஆம் அடி பரதன் முதலியோர் கங்கையின் தென்கரையடைந்து குழீஇயினர் என்கிறது. பின் இப்படலத்தின் 71-ஆம் செய்யுளில், பரதன் ஏறிய படகு தென்கரையடைந்தமை பேசப்படுதலால், இச்செய்யுளில் தென்கரையடைந்தமை பேசுவது பொருந்தாது. ஆதலால் இதனையும் மிகைச் செய்யுளென்று கொண்டு இங்கே காட்டலாயிற்று.

### பரதன் குகனுக்குக் கோசலையை அறிமுகமாக்குதல்

2454. சுற்றத்தார் தேவரொடுந் தொழநின்ற
★ கோசலையைத் தொழுது நோக்கிக்
கொற்றத்தார்க் குரிசிலிவ ராரென்று
குகன்வினவக் கோக்கள் வைகு
முற்றத்தான் முதற்றேவி மூன்றுலகு
மீன்றானை முன்னீன் றானைப்
பெற்றத்தாற் பெறுஞ்செல்வம் யான்பிறத்த
லாற்றுறந்த பெரியா ளென்றான்.

சுற்றத்தார் தேவரொடும் தொழ நின்ற
கோசலையைத் தொழுது நோக்கிக்
'கொற்றத்தார்க் குரிசில்! இவர் ஆர்?' என்று
குகன் வினவக் 'கோக்கள் வைகும்
முற்றத்தான் முதல் தேவி, மூன்று உலகும்
ஈன்றானை முன் ஈன்றானைப்
பெற்றத்தால் பெறும் செல்வம் யான்பிறத்த
லால் துறந்த பெரியாள்' என்றான்.

பொ:—உறவினரும், தேவர்களும் வணங்கும்படி தங்கிய கோசலையைக் குகன் வணங்கி நோக்கி, (பரதனைப் பார்த்து,) "வெற்றிமாலையணிந்த ஆடவர் திலகனே! 'இவர் யார்?' என்று வினவ, (பரதன்

குகனை நோக்கி) அரசர்கள் தங்கிய முன்றிலையுடைய சக்கரவர்த்தியின் மூத்த மனைவி, மூன்றுலகத்தையும் படைத்த பிரமனை முன்னே தோற்று வித்தவனான திருமாலை மகனாகப் பெற்றதனால் அடையவேண்டிய செல்வத்தை யான் தோன்றினமையால் இழந்த பெரியவள் '' என்று கூறினான்.

கு :—சக்கரவர்த்தியின் முதற்றேவியாதலால் சுற்றத்தார் தொழுவா ராயினர். அரக்கரால் அடைந்த இன்னலெலாம் தீரும்படி, பெருவீரனும் குணக்கடலுமான இராமனைப் பெற்றுத்தந்த உதவி குறித்துத் தேவர் தொழுவாராயினர். கற்பு மேம்பாடுடைமையால் கோசலையைத் தேவர் தொழுவாராயினர் எனலுமாம். சுற்றத்தார் தொழ நின்றமையால் பேரரசி யென்பது புலப்பட்டமையின் தொழுது நோக்கி வினவுவா னாயினன். 'இவர் யார்' என்பது சிறப்பு வகையால் அறியலுறும் குகன் வினா. சக்கரவர்த்தியை வணங்குதற்குச் சமயங் கிட்டாமையின் தசரதன் மாளிகை முன்றிலில் அரசர் தங்குவர் என்க. மூன்றுலகு-மண், விண், பாதாளம் என்பவை. மூன்றுலகும் ஈன்றான் என்றது பிரமனை. பெற்றத்தால் என எதுகை நோக்கித் தகரம் இரட்டித்தது. இராமனைப் பெற்றதனால் பெறும் பேருவது, சக்கரவர்த்தியின் முதல்தேவி என்பதன் மேலும் வருங்காலச் சக்கரவர்த்தியின் தாய் என்னும் நிலையில் உள தாகும் சிறப்பு. (64)

### பரதன் கோசலைக்குக் குகனை அறிமுகமாக்குதல்

**2455.** என்றலுமே யடியின்மிசை நெடிதுவீழ்ந்
தழுவானை யிவன்யா ரென்று
கன்றுபிரி காராவின் றுயருடைய
கொடிவினவக் கழற்கான் மைந்த
னின்றுணைவ னிராகவனுக் கிலக்குவற்கு
மிளையவற்கு மெனக்கு மூத்தான்
குன்றனைய திருநெடுந்தோட் குகனென்பா
னிந்நின்ற குரிசி லென்றான்.

என்றலுமே அடியின் மிசை நெடிது வீழ்ந்து
அழுவானை, "இவன் யார்" என்று
கன்று பிரி காராவின் துயர் உடைய
கொடி வினவக் கழல் கால் மைந்தன்

இன் துணைவன் இராகவனுக்கு; இலக்குவற்கும்
இளையவற்கும் எனக்கும் மூத்தான்;
குன்று அனைய திரு நெடுந்தோள் குகன் என்பான்,
இந்நின்ற குரிசில் என்றான்.

பொ :—முன்பாட்டில் கூறியவாறு பரதன் குகனுக்குக் கோசலையை அறிமுகப்படுத்தினவளவில், அந்தக் கோசலையின் அடிகளில் விழுந்து மிகவும் அழுத குகனை, கன்றைப்பிரிந்த புனிற்றாவின் துயரனைய துயருடைய கொடிபோல்பவளான அக்கோசலை, 'இவன் யார்?' என்று வினவ, கழலணிந்த கால்களையுடைய பரதன், 'இங்கே நின்ற நம்பி, இராகவனுக்கு இனிய தோழன்; இலக்குவனுக்கும், சத்துருக்கனுக்கும், எனக்கும் அண்ணன்; மலைபோன்ற அழகிய நீண்ட தோள்களையுடைய குகன் என்று (பெயர்) கூறப்படுபவன்' என்று கூறினான்.

கு :—அடியின் மிசை வீழ்ந்து நெடிது அழுவானை என இயைக்க. நெடிதழுதது இராமன் பிரிவாலும், தசரதன் மரணத்தாலும், கோசலை யுற்ற துயர்நிலை கண்டமையாலும் என்க. நெடிது வீழ்ந்து என்று கொண்டு (நிலத்தே தண்டத்தைச் சாய்த்ததுபோல) நெடிதாக வீழ்ந்து என்று உரைத்தலும் அமையும். கன்று பிரி கார் ஆ - கன்றைப்பிரிந்த செவ்விப் பசு; கார் - செவ்வி. கார் ஆ - புனிற்றா; அப்பொழுதீன்ற பசு. கன்றைப் பிரிந்து துயருறும் தாய்ப்பசு இராமனைப் பிரிந்து துயருறும் கோசலைக்கு உவமை. மைந்தன் என்றது பரதனை. இரகுவின் வழிவந்தவனாதலின் இராகவன் என்றான். (65)

### கோசலை கூறிய வாழ்த்துரை

2456. நைவீர லீர்மைந்தீ ரினித்துயரா
நாடிறந்து காடு நோக்கி
மெய்வீரர் பெயர்ந்ததுவு நலமாயிற்
றாமன்றே விலங்கற் றிண்டோட்
கைவீரக் களிறனைய காளையிவன்
றன்னோடு கலந்து நீங்க
ளைவீரு மொருவீரா யகலிடத்தை
நெடுங்கால மளித்தி ரென்றாள்.

நைவீரலீர் மைந்தீர்! இனித் துயரால்
நாடு இறந்து காடு நோக்கி
மெய்வீரர் பெயர்ந்ததுவும் நலமாயிற்றாம்
அன்றே? விலங்கல் திண் தோள்

கை வீரக் களிறு அனைய காளை இவன்
தன்னோடு கலந்து நீங்கள்
ஐவீரும் ஒருவீராய், அகல் இடத்தை
நெடுங்காலம் அளித்திர் என்றாள்.

பொ :—' புதல்வர்களே ! இனித் துன்பத்தால் வருந்துதற்குரியீரல்லீர் ; தவறாத வீரர்களான இராமலக்குவர், நாடு கடந்து காடு நோக்கிச் சென்றதும் நல்லதாயிற்று ; மலைபோன்ற திண்ணிய தோள்களையுடைய, கையால் வீரச்செயல்களைச் செய்யும் களிறுபோன்ற, காளையாகிய இக்குகனோடு கூடி நீங்கள் ஐவீரும் ஒருவர்தன்மையினையுடையீராய்ப் பரந்த இடத்தையுடைய நிலம் முழுவதையும் நெடுங்காலம் ஆள்வீராக ' என்று கூறினாள்.

கு :—மைந்தீர் என்றது பரதன் சத்துருக்கன், குகன் என்போரை. மைந்தீர் ! இனித் துயரால் நைவீரலீர் என இயையும். துயர் - மனத் துன்பம். இறத்தல் - கடத்தல். பெயர்தல் – செல்லுதல். இதுவரை தீதாயிருந்து வருத்திய இராமலக்குவர் பிரிவு, குகன் நட்பினை விளைத் தமையின், இதுபொழுது நன்றாய் மகிழ்ச்சி தருவதாயிற்று என்பாள், ' வீரர் பெயர்ந்ததுவும் நலமாயிற்று, நைவீரலீர் ! என்றாள். இங்கு, ' பொருந்திய கேண்மை யுகந்தவர் தம்மொடு போகாதே இருந்ததும் நன்று ' என்ற குகன் கூற்றும் (2408) நோக்கத்தகும். ஆம், அன்று, ஏ என்பவை அசைகள். இனம் தழுவிப் புரத்தலினால் குகனுக்குக் களிறு உவமையாயிற்று. விலங்கல் - மலை. மூன்று நான்காம் அடிகள், இராமன் பிரிவால் வருந்தியிருந்த பரதசத்துருக்கரையும், வருந்தி வணங்கிக் கிடந்த குகனையும் நோக்கிக் கோசலை கூறிய வாழ்த்துரை யாகும். (66)

சுமித்திரையை அறிவித்தல்

2457. அறந்தானே யென்கின்ற வயனின்றா
னைநோக்கி யைய வன்பி
னிறைந்தானை யுரையென்ன நெறிதிறம்பாத்
தன்மெய்யை நிற்ப தாக்கி
யிறந்தான்ற னிளந்தேவி யாவர்க்குந்
தொழுகுலமா மிராமன் பின்பு
பிறந்தானு முளனென்னப் பிரியாதான்
றனைப்பயந்த பெரியா ளென்றான்.

அறம் தானே என்கின்ற அயல் நின்ருள்
தனை நோக்கி, 'ஐய! அன்பின்
நிறைந்தாளை உரை' என்ன, "நெறி திறம்பாத்
தன் மெய்யை நிற்பது ஆக்கி,
இறந்தான்தன் இளந்தேவி, யாவர்க்கும்
தொழுகுலம் ஆம் 'இராமன் பின்பு
பிறந்தானும் உளன்' என்னப் பிரியாதான்
தனைப் பயந்த பெரியாள்" என்ருன்.

பொ :—(குகன்), கோசலையின் பக்கத்தே நின்ற, தருமமே என்று சொல்லத்தக்கவளான சுமித்திரையை நோக்கி, (பரதனிடம்) 'ஐய! அன்பினால் நிறைந்த இவரை (இன்னார் என்று) கூறுக' என்று சொல்ல, 'முறை கடவாத தன் வாய்மையை நிலைநிறுத்தி இறந்த சக்கரவர்த்தியின் இளந்தேவி; எல்லார்க்கும் தெய்வமான "இராமனுக்குத் தம்பியும் உண்டு" என்று உலகத்தார் சொல்லும்படி (இன்பக் காலத்தும், துன்பக காலத்தும்) அவனைப் பிரியாதவனாகிய இலக்குவனைப் பெற்ற பெரியாள்.' என்று (பரதன்) கூறினான்.

கு :—அயல் நின்ற அறமே என்கின்ருளை நோக்கி என இயைக்க. தான் தன் என்பவை சாரியைகள். அறம் என்றது இங்கே அதன் உருவத்தை. நெறி - முறை. திறம்பா - கடவாத. திறம்புதல் - கடத்தல். இராமன் பிரிவால் விழிநீர் சுரக்க நின்ருளாதலின் 'அன்பின் நிறைந்தாள்' என்ருன். மெய்யை நிற்பதாக்கி, இறந்தான் என்ற நயம் நோக்கத்தகும். மெய் என்னும் சொல், வாய்மை, உடம்பு என்னும் இருபொருளும் தரும். தொழுகுலம் - தெய்வம்; 'எம் தொழு குலம் தாங்களே' (திருவாய்மொழி. 3-7-8) என்பது அருளிச்செயல்.

(67)

குகன் கைகேயியைச் சுட்டி, இவர் யார்? என்று வினவுதல்

**2458.** சுடுமயானத் திடைதன் றுணையேகத்
தோன்றறுயர்க் கடலி னேகக்
கடுமையார் கானகத்துக் கருணையார்
கலியேகக் கழற்கான் மாய
னெடுமையா லன்றளந்த வுலகெல்லாந்
தன்மனத்தே நினைந்து செய்யுங்
கொடுமையா லளந்தாளை யாரிவரென்
றுரையென்னக் குரிசில் கூறும்.

சுடும் மயானத்திடை தன் துணை ஏகத்
தோன்றல் துயர்க் கடலின் ஏகக்,
கடுமை ஆர் கானகத்துக் கருணை ஆர்
கலி ஏகக் கழல் கால் மாயன்
நெடுமையால் அன்று அளந்த உலகு எல்லாம்
தன் மனத்தே நினைந்து செய்யும்
கொடுமையால் அளந்தாளை "'யார் இவர் ?'
என்று உரை" என்னக் குரிசில் கூறும்.

போ :—எரிக்கின்ற சுடுகாட்டிலே தன் துணைவன் செல்லவும், மகன் துயர்க்கடலிலே புகவும், கருணைக்கடலான இராமன் கொடிய வனத்திலே செல்லவும், வீரக் கழலணிந்த தாள்களையுடைய திருமால் பண்டு நெடுமையால் அளந்த உலக முழுவதையும் தன் மனத்து நினைந்து செய்யும் கொடுமையால் அளந்த கைகேயியை (நோக்கி) குகன் "'இவர் யார்' என்று கூறுக" எனப் பரதன் கூறுவான்.

கு :—துணை - துணைவன்; நாயகன். தோன்றல், குரிசில் என்பவை பரதனைச் சுட்டி நின்றன. கைகேயி பெற்ற வரம், அவள் கணவனை சக்கரவர்த்தி இறத்தற்கும், அவள் மகன் பரதன் துயர் உறுதற்கும், கருணைக்கடலான இராமன் வனம் புகுதற்கும், காரணமாயினமை தோன்றச் சுடுமயானத்திடை தன் துணையேகத் தோன்றல் துயர்க் கடலின் ஏகக் கடுமையார் கானகத்துக் கருணையார்கலி யேக...... உலகெல்லாம் கொடுமையால் அளந்தாள் என்றார். இது கவிக்கூற்று. 'கல்நிறைந்து தீய்ந்து கழையுடைந்து கால் சுழன்று, பின்னும் திரை வயிற்றுப் பேயே திரிந்துலவாக் கொன்னவிலும் வெங்கானம்' (பெரிய திருமடல். 49-50.) ஆதலின் கடுமையார் கானகம் என்றார். 'கானகத்தே கருணை ஆர்கலி யேக' என்பதனுள், 'காட்டிலே கடல் செல்ல' என்பதும் தொனித்தல் காணலாம். ஆர்கலி - கடல். கருணையார்கலி என்றது இராமனை. 'கருணையங்கடல் துயின்றது கருங்கடல் நோக்கி' (யுத்த. வருணனை வழிவேண்டு. 5) என்பர் பின்னும். உலகெல்லாம் தன் மனத்தே நினைந்து செய்யும் கொடுமையால் அளந்தாள் என்றது கைகேயியின் ஆசை மிகுதியை விளக்கியவாறு. அளத்தல்—வரையறை செய்து பெறுதல். உலகளந்த செயலால் திருமாலும் கைகேயியும் ஒப்பாவரேனும் திருமால் உலகளந்தது, முறைதிறம்பாமல், இடம் பெயர்ந்து, நெடுமையால், இரண்டு மாணடியால்; கைகேயி உலகளந்தது முறை திறம்ப, இருந்த நிலையில், கொடுமையால், இரண்டு தீய வரங்களால். திருமால் உலகளந்தமையால் மூவுலகத்துயிரும் உய்ந்தன; கைகேயி அளந்தமையால் மூவுலகத்துயிர்களும் துயருற்றன; மேலும், அவள் காதற் கணவனை சக்கரவர்த்தி இறந்தான்; அவளுடைய அரும்பெறற் புதல்வர்களுள் பரதன் துயருற்றான்; இராமன் வனம்

புக்கான் என அவ்விருவரும் உலகளந்த நிலையில் வாசி விரித்துரைத்துக் கொள்ளத்தகும். இங்கு, 'மாலும் குறளாய் வளர்ந்திரண்டு மாண் அடியால், ஞாலம் முழுதும் நயந்தளந்தான்' (திருவள்ளுவமாலை 6) என்னும் பரணர் பாட்டும் நோக்குக. 'அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும், துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழி மடமான், இரக்கமின்மையன்றோ இன்று இவ்வுலகங்கள் இராமன், பரக்கும் தொல் புகழமுதினைப் பருகுகின்றனவே' என்று பாராட்டியகவி, இங்கே இவ்வாறு கைகேயியை நிந்தித்தது, இராமன் பக்கல் எழுந்த பத்திப் பெருக்கால் என்று கொள்ளலாம். அடுத்துவரும் பரதன் கூற்றும் அவ்வாறு தோன்றியதே. (68)

பரதன் குகனுக்குக் கைகேயியை அறிமுகமாக்குதல்

**2459.** படரெலாம் படைத்தாளைப் பழிவளர்க்குஞ்
செவிலியைத்தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலங் கிடந்தேற்கு
முயிர்ப்பாரங் குறைந்து தேய
வுடரெலா முயிரிலா வெனத்தோன்று
முலகத்தே யொருத்தி யன்றே
யிடரிலா முகத்தாளை யறிந்திலையே
லிங்நின்றா ளென்னை யீன்றாள்.

படர் எலாம் படைத்தாளைப் பழி வளர்க்கும்
செவிலியைத் தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலம் கிடந்தேற்கும்
உயிர்ப் பாரம் குறைந்து தேய,
உடர் எலாம், 'உயிர் இலா எனத் தோன்றும்
உலகத்தே ஒருத்தி அன்றே
இடர் இலா முகத்தாளை அறிந்திலையேல்
இந் நின்றாள் என்னை ஈன்றாள்.

பொ :—'துன்பங்களை யெல்லாம் தோற்றுவித்தவளும், பழியினை வளர்க்கும் செவிலியும், தன்னுடைய பாழ்பட்ட தீய வயிற்றினுள் நெடுங் காலம் கிடந்த எனக்கும் சுமையாகிய உயிர் (நாளும் நாளும்) குறைந்து மெலிய, உடல்களெல்லாம் உயிரற்றன என்று சொல்லும்படி தோன்றுகின்ற இவ்வுலகத்தில் துன்பமற்ற முகத்தையுடையளாயுள்ள ஒருத்தியும் ஆகிய இவளை நீ அறிந்திலையாயின், இங்கே நின்றவள் என்னைப் பெற்றவள் '

கு :—ஈன்ருள் என்னக்கேட்டு எனப் பின்வரும் பாடலொடு தொடரும். படர் - துன்பம். சக்கரவர்த்தி இறந்தமையாலும் இராமன் வனம் புகுந்தமையாலும் உயிர்கள் உற்ற துன்பங்கள் பலவாகலின் படரெலாம் என்ருன். படைத்தல் - தோற்றுவித்தல். பழி - நிந்தை : அதாவது முன்னேயோர் முறை கெட இராமனே வனம் புகுவித்தமை யால் உலகங் கூறும் இகழ்ச்சி ; 'தாயுடைக் கொடிய சூழ்ச்சியால், வழி யுடைத்தாய் வரும் மரபை மாய்த்தொரு பழியுடைத்தாக்கினன்' (2264) என்ருன் முன்னும். பாழ்த்தல் - பயனறுதல். குடர் உடர் என் பவை முறையே குடல் உடல் என்பவற்றின் போலிகள். குடர் இங்கே வயிறு என்னும் பொருளிற் பயின்றது. 'கொன்மின் கொன்மின் கொன்றுகுவித்துக் குடர் ஆரத் தின்மின்' (சுந்தர. 482) எனப் பின் வருதலும் காண்க. இராமன் வனம் புகுதற்குத் தன் தோற்றமும் ஒரு காரணமாகக் கருதித் தன்னைத் தாங்கிய வயிற்றைப் 'பாழ்த்த பாவிக் குடர்' என்ருன் ; 'உன் பாவிக் கும்பிவயிற்றினிடை வைகித் தோன்றும் தீராப் பாதகம்' (2276) என்ருன் முன்னும். உலகியற்கைக்கு மாருகப் பன்னிரண்டு மாதம் தாய் வயிற்றிலே தங்கினமையின் 'நெடுங்காலம்' என்ருன் ; தயரதன் மனைவியர் பன்னிரண்டு மாதம் கருவைத் தாங்கி யிருந்தனர் என்று வான்மீகமும் கூறுகின்றது. கிடந்தேற்கும் என்பதனுள் உம்மை இழிவு குறித்தது ; அக்குடற்ருெடக் கால் இராமன் பிரிவைத் தாங்கியிருக்கவல்ல எனக்கும் என்றவாறு. இராமன் பிரிவால் வருந்திய தனக்கு உயிரும் சுமையாதலின் உயிர்ப் பாரம் என்ருன். உயிர் குறைந்து தேய்தல் - உயிர் மெலிந்து ஒடுங்கி அழிதல். உலகுக்கு உயிராய் விளங்கிய சக்கரவர்த்தியையும், அவ் வுலகத்துயிர்களுக்குள் உயிராய் விளங்கிய இராமனேயும், பிரிந்து செய லற்றமையால் 'உடரெலாம் உயிரிலா எனத் தோன்றும் உலகம்' என்ருன். 'ஆவி நீத்த வுடலென லாயதே' (2217) என்று முன் னும் கூறினன். சக்கரவர்த்தி இறந்தமையாலும், இராமன் பிரிந் தமையாலும் யாவரும் துயர் உற, துயர் சிறிதும் உருதவள் இவள் ஒருத்தியே. இவளே இவள் முகங்கொண்டே இன்னர் என்று அறிய லாம் என்பான், 'உடரெலாம் உயிரிலா எனத் தோன்று முலகத்தே ஒருத்தியன்றே இடரிலா முகத்தாள்' என்ருன். ஒருத்தி அன்றே என்பதில் அன்று ஏ என்பவை அசை நிலைகள். முகத்தாளே என்பத னுள் ஐயுருபைப் பிரித்து, ஒருத்தி என்பதனேடு கூட்டி, 'உலகத்தே இடரிலா முகத்தாள் ஒருத்தியை' என இயைக்க. தேய என்னும் எச்சம் தோன்றும் என்னும் வினை கொண்டது. (69)

பரதன் ஏறிய ஓடம் தென்கரை அடைதல்

2460. என்னக் கேட்டவ் விரக்கமி லாளையுந்
★ தன்னற் கையின் வணங்கினன் ருயென
வன்னப் பேடை சிறையில தாய்க்கரை
துன்னிற் றென்னவும் வந்தது தோணியே.

என்னக் கேட்டு அவ் இரக்கம் இலாளையும்,
தன் நல் கையின், வணங்கினன் தாயென;
அன்னப் பேடை சிறை இலதாய்க் கரை,
துன்னிற்று என்னவும் வந்தது தோணியே.

பொ :—என்று (பரதன்) கூறக்கேட்டு, இரக்கமற்றவளான அக் கைகேயியையும் தாயென்று தன்னுடைய நல்ல கைகளால் குகன் வணங்கினன்; அப்போது ஒரு பெண் அன்னம் இறக்கையில்லாததாய்க் கரையை அடைந்தாற்போல அவ்வோடமும் அக்கரை சேர்ந்தது.

கு :—என்ன என்பது முன் பாட்டிற் கூறியவாறு அறிமுகப்படுத்த என்றவாறு. கைகேயியின் மீது உள்ள குற்றம் இராமன்பால் இரக்க மின்மையே என்பது தோன்ற இரக்கமிலாள் என்றுர். ‘மடமான் இரக்கமின்மையன்றே இன்றிவ்வுலகங்கள் இராமன் பரக்குந் தொல் புகழ் அமுதினைப் பருகுகின்றனவே’ (1573) என்றுர் முன்னும். இராமனுல் உடன் பிறப்புரிமை வழங்கப்பெற்றவனாதலின் கைகேயி யைத் தாயெனக் கருதுவானாயினன். அன்னத்தின் கதியினை நாவாயின் கதிக்கு உவமை கூறுவர். அன்னத்துக்கு இறக்கை உண்டு; நாவாய்க்கு அஃதில்லையாதலின், ‘அன்னப் பேடை சிறையிலதாய்க் கரை துன்னிற்றென்னவும் வந்தது தோணியே’ என்றுர். (70)

தாய்மார் சிவிகையில் வரப் பரதன் நடந்து செல்லுதல்

2461. இழிந்த தாயர் சிவிகையி னேகத்தான்
பொழிந்த கண்ணீர்ப் புதுப்புனற் போயினு
னொழிந்தி லன்குக னும்முட னேகினுன்
கழிந்த னன்பல காவதங் காலினே.

இழிந்த தாயர் சிவிகையின் ஏகத் தான்
பொழிந்த கண்ணீர்ப் புதுப்புனல் போயினுன்;
ஒழிந்திலன் குகனும், உடன் ஏகினுன்;
கழிந்தனன் பல காவதம் காலினே.

போ :—(ஓடத்தினின்று கரையில்) இறங்கிய தாய்மார், சிவிகையில் (ஏறிச் சித்திரகூடம் நோக்கிச்) செல்ல, பரதன், கண் பொழிந்த நீராகிய புது வெள்ளத்தில் காலால் நடந்து சென்று பல காதவழியைக் கடந்தான்; குகனும் நீங்காது பரதனுடன் சென்ருன்.

கு :—தாயர் சிவிகையின் ஏக, தான், பொழிந்த கண்ணீர்ப் புதுப் புனல் காலில் போயினன், பல காவதம் கழிந்தனன் என இயைக்க. இழிதல் - இறங்குதல். தான் என்றது பரதனை. பொழிதல் - பெய்தல். பொழிந்த கண்ணீர்ப் புதுப்புனல்—கண்பொழிந்த நீராகிய புது வெள்ளம்; 'பொழியும் கண்ணீர்ப் புதுப்புனல்' (2029) என்ருர் முன்னும். கங்கை வெள்ளங் கடந்தவன் கண்ணீர்வெள்ளத்திலே செல்வானுயினன் என்றவாறு; இராமன் பிரிவாற்ருமல் அழுது கொண்டே சென்ருன் என்பதாம். (71)

### பரதன் வரப் பரத்துவாச முனிவன் எதிர்கொள்ளல்

**2462.** பரத்தி னீங்கும் பரத்துவ னென்னும்பேர்
வரத்தின் மிக்குயர் மாதவன் வைகிட
மருத்தி கூர வணுகின ஞண்டவன்
விருத்தி வேதிய ரோடெதிர் மேவினன்.

பரத்தின் நீங்கும் பரத்துவன் என்னும் பேர்
வரத்தின் மிக்கு உயர் மாதவன் வைகு இடம்
அருத்தி கூர அணுகினன்; ஆண்டு அவன்,
விருத்தி வேதியரோடு எதிர் மேவினன்.

போ :—(பரதன்), வினைச் சுமையற்ற பரத்துவாசன் என்னும் பெயரையுடைய வரத்தால் மிகவுயர்ந்த பெரிய முனிவன் தங்கும் தவ வனத்தை ஆசை மிக அடைந்தான்; அவ்விடத்து அப்பரத்துவாசன், அறுதொழிலாளராகிய வேதியருடன் (பரதனை) எதிர்கொண்டான்.

கு :—பரம் – பாரம்; (வினைச்) சுமை. 'இப்பரந்துடைத்தவ ரெய்தும் இன்பத்தை' (1313) என்ருர் முன்னும். பரத்துவன் என்பது பரத்துவாசன் என்னும் வடசொல்லின் சிதைவு. பரத்தினிற்கும் என்று பாடங்கொண்டு கடவுளிடத்தே தங்கிய (மனமுடைய) என்று பொருள் கூறுவாரும் உண்டு. வரம் - தெய்வத்தாற் பெறும் பேறு. அருத்தி – ஆசை; பரத்துவாச முனிவனைக் காணும் விழைவு. கூர்தல் – மிகுதல். அவன் என்பது பரத்துவாச முனிவனைச் சுட்டி நின்றது. விருத்தி –

தொழில்; அது, ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறுவகைத் தொழிலையும் குறித்தது. 'அறுதொழிலோர் நூன் மறப்பர்' (560) என்னும் திருக்குறளும் இங்கு நோக்கத்தகும். விருத்த வேதியர் என்று பாடங்கொண்டு, அறிவாலும், வயதாலும், ஒழுக்கத்தாலும் பெரியோரான வேதியர் என்று பொருள் கூறுவாரும் உண்டு. விருத்தர் – முதியோர். (72)

குகப்படலம் முற்றிற்று.

# 12. திருவடிசூட்டு படலம்

பரதன் சித்திரகூடம் சென்று இராமனைக் கண்டு அவன் திருவடி நிலைகளை இரந்து பெற்றுத் தலைமேற் சூடியவனாய் நந்திக்கிராமம் சென்று, அங்கு அத்திருவடிநிலைகள் அரசியற்ற வழிபட்டிருந்த பகுதியைக் கூறும் படலம் இது ஆகலின், இது திருவடிசூட்டு படலம் என்னும் பெயர்பெற்றது. இது கிளைகண்டு நீங்கு படலம் என்றும் சில சுவடிகளிற் காணப்படுகிறது. மற்றுமோர் ஏட்டுச் சுவடியில், இப்படலத்து முதல் இருபது பாடல்களைக் கொண்ட பகுதி 'பரத்துவன் இருக்கை மேவு படலம்' என்றும், எஞ்சிய பகுதி 'பரதன் காட்சி பெற்று மீள் படலம்' என்றும் குறிக்கப்பெற்றுள்ளது. இங்கே திருவடி சூட்டுதல் என்பது இராமன் பாதுகைகளைப் பரதன் தனது முடிக் கணியாய்ச் சூட்டிச் சுமந்து செல்லுதலையும், பின் நந்திக்கிராமத்தில் அப் பாதுகைகளுக்குப் பட்டம் சூட்டி அரசியற்றுதலையும் குறிப்பதாகும்.

இப்படலப்பொருளின் சுருக்கம் வருமாறு :—குகன் உதவியால் கங்கையைக் கடந்துவந்த பரதன் பரத்துவாச முனியின் இருக்கையை அடைகிறான். பரதனின் நல்லமனம் கண்டு மகிழ்ந்த பரத்துவன் அவன் சேனைக்கு அன்றிரவு விருந்தளிக்கிறான். மறுநாட் காலையில் அனைவரும் சித்திரகூடம் செல்கின்றனர். படைகளைக் கண்ட இலக்குவன் பரதனைத் தவறாக எண்ணிப் போர்செய்யத் துணிகிறான். இராமன் அவன் தவற்றை உணர்த்துகிறான். பரதன் முதலில் வந்து இராமன் அடிகளை வணங்குகிறான். தந்தை பிரிவை அறிந்த இராமன் புலம்புகிறான். அங்கு வந்த வசிட்டன் தேற்றவும், நீர்க்கடன் செலுத்திவந்து, சீதைக்குத் தெரிவிக்கிறான். அவளும் வருந்துகிறாள். எல்லோரும் கூடி வருந்துகின்றனர். மறுநாட் காலையில் இராமன் பரதனிடம் அவன் தவக்கோலம் பூண்டதுபற்றி வினவுகிறான். பரதன் இராமனை அரசாள வேண்டுகிறான். இராமன் மறுக்கிறான். வசிட்டனும் இராமனை மீண்டு அரசேற்கும்படி கூறுகிறான். தந்தை கட்டளையை நிறைவேற்ற வேண்டும் என்று இராமன் வற்புறுத்துகிறான். பரதன் தானும் காட்டில் தங்கப்போவதாகப் பிடிவாதம் செய்கிறான். விசும்பில் தேவர்கள் வந்து கூடி, இராமன் காடுறையவும், பரதன் நாடாளவும் பணிக்கின்றனர். அதன்படி இராமன் பரதனைப் பதினான்காண்டளவும் அரசாளும்படி வேண்டுகிறான். அப்பதினான்காமாண்டின் இறுதியில் இராமன் மீளாவிடில்தான் உயிர் நீப்பதாகப் பரதன் கூறுகிறான். இராமன் இசைகிறான். பரதன் இராமனுடைய பாதுகைகளை வேண்டிப்பெற்று, தலைமேற் சுமந்துகொண்டு, கண்ணீர் வழிய மீண்டுவந்து, அயோத்தி நகரினுட் புகாது, நந்திக் கிராமத்தில் பாதுகைகளின் அடிமையாயிருந்து அரசை

நடத்துகிருன். பரதனை அனுப்பிய பின் இராமன் சீதையையும் இலக்கு வனையும் கூட்டிக்கொண்டு தென்திசை நோக்கிக் காட்டில் செல்கிருன்: என்பதோடு இப்படலம் முடிகின்றது. இதோடு அயோத்தியா காண்டமும் முடிவடைகின்றது.

காவியச் சுவைக்குப் பொருத்தமற்றனவாயும், பாத்திரங்களின் குண சித்திரங்களுக்கு முரண்பட்டனவாயும், வான்மீகத்திற் கண்ட பல செய்திகளைக் கம்பன் இப்படலத்திற் கூருமல் விடுத்திருப்பது அறிந்து கொள்ளவேண்டுவதாகும். இப்பகுதியிற் கண்ட செய்திகளாய், கம்பனிற் காணப்படாதனவாய் வான்மீகத்தில் வழங்கும் செய்திகள் வருமாறு :—

பரதன் பரத்துவரின் ஆசிரமத்துக்கு இரண்டு மைலுக்கப்பாலேயே சேனைகளை நிறுத்திவிட்டு, வசிட்டர், மந்திரிகளோடு, வெண்பட்டுடையை உடுத்தியவனுய்க் கால்நடையாகச் சென்ருன். பரத்துவர் பலருடைய நலங்களையும் விசாரித்த பின்னர், 'இராமனுக்குக் கொடுமை விளைவிக்க நீ இங்கு வரவில்லையென்று நினைக்கிறேன்' என்று கூறுகிருர். கண்ணீராற் கலங்கிய பரதன் தான் வந்த நோக்கத்தைக் கூறி இராமன் இருக்கும் இடத்தை வினவுகிருன். அது கேட்டு மகிழ்ந்த பரத்துவர், 'சேனைகளை ஏன் இங்குக் கூட்டி வரவில்லை?' என்று கேட்கிருர். அங்குள்ள ஆசிரமங்களின் மரங்களையும், தூய நீரையும் படைகளும், படை விலங்குகளும் அழித்துவிடுமோ என்று பயந்துதான் அழைத்துவரவில்லை என்கிருன் பரதன். பின் முனியின் கட்டளைப்படி சேனை யாவும் அங்கு வரவும், முனிவர் மந்திரத்தால் விசுவகருமாவை அழைத்து அதிதி பூசை ஏற்பாடுகளைச் செய்கிருர். மதுவும் இறைச்சியும் படைக்கப்படுகின்றன. பரதன் இரத்தின மயமான மாளிகையில் தங்குகிருன். ஆடலும் பாடலும் கண்டு களிக்கிருன். பிரமனுலும், குபேரனுலும் அனுப்பப்பட்ட நாற்பதினுயிரம் பெண்கள் வருகிருர்கள். நாரதரும், தும்புருவும், கோபரும் பரதன்முன் இசை மீட்டுகின்றனர். அலம்புஸை, மிச்ரகேசி, புண்டரீகை, வாமனை என்னும் பெண்கள் பரதன் முன் ஆடி மகிழ்விக்கின்றனர். மறுநாட் காலை பரதன் முனியிடம் தான் இரவை இனிது கழித்து மகிழ்ந்ததாகக் கூறி, இருபது மைலுக்கப்பால் இராமன் இருக்கும் இடத்தைக் கேட்டுக்கொண்டு புறப்படுகிருன். அப்பொழுது பரதன் முனிக்குத் தன் தாய்மார்கள் மூவரையும் இன்னின்னுர் என்று அறிமுகப்படுத்துகிருன். அப்பொழுது பரத்துவர், கைகேயி உண்மையில் கெட்டவள் இல்லையென்றும், அவள் செயல் நன்மையாகவே ஆகப்போகிறது என்றும் தெரிவித்து அனுப்பி வைக்கிருர். பரதன் அழகான சிவிகையில் ஏறிச்செல்கிருன். பரத்துவர் பரதனேடு இராமனைக் காணச்செல்லவில்லை.

அவ்வேளையில் இராமன் சீதைக்குச் சித்திரகூட மலையின் எழிலையும் மந்தாகினியாற்றின் சிறப்பையும் விளக்கிக்கொண்டிருக்கிறான். பரதன் சேனையின் ஆரவாரத்தைக் கேட்டு, இராமன், இலக்குவனை நோக்கி 'யாரோ அரசன் வேட்டைக்கு வந்துளனோ? அல்லது வேறோ? பார்!' என்று ஏவுகிறான். இலக்குவன் ஆச்சா மரமொன்றின்மீது ஏறிச் சேனையைக் காண்கிறான். உடனே அவன் இராமனிடம், 'நெருப்பை அணை, சீதையை மறைத்துவை, வில்லை யெடுத்துத் தயார் செய்துகொள். தேரின்மேல் மலையகத்திக்கொடி தோன்றுகிறது. ஆதலால் பரதன் தான் வருகிறான். அவனைக் கொன்றுவிடவேண்டும்.' என்று கூக்குரலிடுகிறான். பரதன் விற்றிறனை வெல்ல முடியாது என்றும், தாம் பரதனைக் கொன்றால் அரசு வேண்டுமென்ற ஆசையால் அங்ஙனம் செய்ததாகப் பழிவரும் என்றும், பரதன் அன்பு காரணமாக வரவேண்டும், அல்லது தம்முடைய தந்தையே வந்து கொண்டிருக்கவேண்டும் என்றும் கூறி இராமன் தம்பியை அடக்கி வைக்கிறான்.

அப்பொழுது பரதன் ஓர் ஆச்சா மரத்தின் மீது ஏறித் தொலைவில் புகையைக் கண்டு இராமன் இருப்பிடத்தை உணர்ந்து, சத்துருக்கனையும், சுமந்திரனையும் அழைத்துக்கொண்டு முதலில் செல்கிறான். வந்து வணங்கிய பரதனிடம் அவன் இராச்சியத்தை அரசாளும் முறையைப் பற்றி இராமன் பல கேள்விகளைக் கேட்டு நீண்ட நேரத்தைச் செலவிடுகிறான். ஓர் அரசன் நாட்டை எவ்வாறு ஆளவேண்டும் என்பதுபற்றி விரிவாக வினவுவதுபோல் இராமன் பேசி முடிக்கிறான். அவற்றைப் பொறுமையாய்க் கேட்டுவந்த பரதன் தான் பேசத் தொடங்கியதும், 'எல்லாத் தருமத்தினின்றும் பிறழ்ந்த எனக்கு இராச தருமம் வேறு கேடா?' என்று கூறித் தன் கருத்தைத் தெரிவிக்கிறான். தந்தையின் பிரிவைக் கேட்டதும் இராமன் மூர்ச்சையாகிறான். தம்பியரும், சீதையும் நீரைத் தெளித்து அறிவு பிறக்கச் செய்கின்றனர். நீர்க்கடன் செலுத்த ஆற்றுக்குச் செல்லுகையில், முதலில் சீதையை அனுப்பிப் பின் இலக்குவன் செல்ல, அவன் பின்னே இராமன் நடக்கிறான். இராமன் ஆற்றில் நீராடி இலந்தையுடன் கூடிய இங்குணப் பிண்ணாக்கைத் தருப்பையில் வைத்துத் தந்தைக்கு அளிக்கிறான்.

பரதன் எவ்வளவோ வேண்டியும் இராமன் அயோத்திவர மறுத்துவிடுகிறான். அப்பொழுது அங்கு வந்திருந்த ஜாபாலி முனிவர் நாத்திகக் கொள்கைகளை எடுத்துக் கூறி, தந்தைதாய் என்று கொண்டாடும் உறவெல்லாம் பொருளற்றவை; உலகில் செல்வத்தை நன்கு நுகர்ந்து வாழ்வதுவே பொருள் என்று கூறி, இராமனை அரசை ஏற்றுக்கொள்ளும்படி வற்புறுத்துகிறார். இராமன் பெருஞ்சினங்கொண்டு ஜாபாலியையும், நாத்திகக் கொள்கையையும் வன்மையாகக் கண்டிக்கிறான். ஜாபாலி பணிந்து கெட்ட எண்ணம் ஏதும் தமக்குக் கிடையாது என்பதைத் தெளிவுபடுத்துகிறார். இந்த இடத்தில், வசிட்டரும் ஜாபாலிக்

காகப் பரிந்துபேசிப் பின் உலக உற்பத்தியை எடுத்துக்கூறி, மனுக்குல மரபைக்காட்டி, மூத்தவனே அரசாள்வது முறை என்கிறார். இராமன் கேட்கவில்லை. பரதன் தருப்பையை விரித்து அதில் படுத்துக்கொண்டு பட்டினிகிடக்கத் தொடங்கினன். அதற்கு இராமன், பிராமணன்மட்டுமே அவ்விதம் செய்தற்கு உரிமையுற்றவன் என்று கூறிப் பரதனை எழச் சொல்கிறான். இராமனுக்குப் பதில் தானே வனவாசம் செய்வதாகப் பரதன் கூறுகிறான். இராமன் அதையும் மறுக்கிறான். சித்தர்களும் தேவ இருடிகளும் பரதனுக்குக் கட்புலனகி அரசை ஏற்கச் சொல்கின் றனர். இராமனும் வற்புறுத்திக் கூறுகிறான். பரதன் பாதுகையைப் பெற்றுப் புறப்படுகின்றான். இராமன் தன்மீதும், சீதைமீதும் ஆணை யிட்டுக் கைகேயியைப் பெருமையாய் வைத்துக்கொள்ள வேண்டுகிறான். வரும் வழியில் மீண்டும் பரத்துவனைப் பரதன் சந்திக்கிறான். பின் பரதன் அயோத்தி நகருக்குள் சென்று அங்குத் தாய்மாரைவிட்டுப் பின் நந்திக்கிராமம் சென்று, பாதுகையை அரியணையேற்றி, இராமனின் பிரதிநிதியாக அமர்த்தி அபிடேகம் நடத்தித் தான் தர்மகர்த்தா நிலையில் அவைகளின் அடிமையாக இருந்து அரசை நடத்தி வரலானன்.

இராமன் இருந்த இடத்து முனிவர்கள், குலபதி யென்னும் முனிவரை முதன்மையாகக்கொண்டு, கரன் என்னும் அரக்கனின் கொடுமை தாங்காதவராய் இராமனிடம் சொல்லிவிட்டுக் கண்வரது இடத்துக்குச் சென்றுவிட்டனர். பின்னர் அவ்விடத்துத் தனியே யிருந்த இராமனுக்கு உற்றார் உறவினர் நினைவே பெருங்கவலையா யிருந்தது. பரதன் சேனைகள் வந்து போனதன் காரணமாய் அவ்விட மும் அசுத்தமாக்கப்பட்டிருந்ததால் அவ்விடத்தைவிட்டு அத்திரி முனிவ ரின் ஆசிரமத்தை அடைந்தான். அம்முனிவர் பெரிதும் விரும்பி வரவேற்றார். அவர் மனைவியாரான கற்பிற்சிறந்த அனசூயை, பத்தாண்டு மழையில்லாதிருந்தபோது கனிகளையும், கிழங்குகளையும் படைத்து, கங்கையையும் பெருகச் செய்தவர். பதினயிரம் ஆண்டு கடுந்தவம் செய்தவர். பத்து இரவை ஓரிரவாகச் செய்தவர். அத்தவச் செல்வி சீதைக்குக் கற்பின் பெருமையை எடுத்துக் கூறினர். அவர் வினவியபடி சீதையும் தன் பிறப்பு வளர்ப்பு வரலாற்றை விரித்துக் கூறினள். பின்னர் அனசூயை விலைமதிக்கமுடியாத அணிகலன்களையும், பட்டாடைகளையும் அளித்துச் சீதையை நன்கு அலங்கரித்து மகிழ்ந் தார். பின்னர் இராமன் முதலிய மூவரும் தண்டகவனம் நோக்கிச் சென்றனர். வான்மீகத்திற்கண்ட இவ்வரலாற்றுச் செய்திகளில் பல வற்றை விடுத்தும், சிலவற்றை மாற்றியும் கம்பன் அழகுபடுத்தியிருக்கும் சிறப்பினை இப்படலத்தைக் கூர்ந்து நோக்கித் தெரிந்துகொள்ளலாம்.

இப்படலத்தில் பரதன் இராமன்மீது கொண்டுள்ள பேரன்பும், தூய மனமும், உறுதிப்பாடும் நன்கு புலனகின்றன. முதலில் பரத்துவன்

பரதனுடைய அழுக்கற்றுயர்ந்த மனப்பான்மையைக் கண்டு வியக்கின்ருன். பரதனுடைய துயரத்தின் உண்மை நிலேயும், தவ ஒழுக்கத்தின் பிறழா நிலேயும் பரத்துவனுடைய விருந்தினிடையே நன்கு புலனுகின்றன. பரதனின் தவக்கோலம் கண்டு இலக்குவனும் நாணித் தலே குனிந்து போற்றும்படியாயிருக்கின்றது. இராமனே பரதனின் உண்மை நிலேயைக்கண்டு விம்மிதம்கொண்டு வாயாரப் போற்றுகிருன்.

அடுத்தபடியாக, தந்தை தாயரின் பணியைத் தலேமேற்கொண்டு விடாப்பிடியாய் நிற்கும் நிலேயில் இராமனுடைய கொள்கையும், தம்பியர் மீது அவன் கொண்டுள்ள அன்பும் நன்கு தெளிவாகின்றன. அறநெறிப்படி ஒழுகவேண்டும் என்ற கடமையுணர்ச்சி இராமனிடம் நன்கு விளங்குகிறது. இராமன் பரதனுக்கும் வசிட்டனுக்கும் எடுத்துக் கூறும் நீதிகள் பொன்னெழுத்துக்களால் பொறிக்கவேண்டியவையாகும். யாக்கை நிலேயாமையைப்பற்றி வசிட்டன் கூறும் வாசகங்கள் நம் சிந்தனேயைத் தூண்டிவிட வல்லனவாய்த் திகழ்கின்றன. இதுபோன்ற சுவையுள்ள பகுதிகள் பலவற்றையும் இப்படலத்துட் காணலாம்.

---

# 12. திருவடிசூட்டு படலம்

### பரதன் வணங்க முனிவன் ஆசி கூறுதல்

**2463.** வந்த மாதவத் தோனையம் மைந்தனுந்
தந்தை யாமெனத் தாழ்ந்து வணங்கின
னிந்து மோலியன் னனு மிரங்கின
னந்த மின்னலத் தாசிகள் கூறினான்.

வந்த மாதவத்தோனை அம் மைந்தனும்,
தந்தை ஆம் எனத் தாழ்ந்து வணங்கினன்;
இந்து மோலி அன்னனும், இரங்கினன்,
அந்தம் இல் நலத்து ஆசிகள் கூறினன்.

பொ :—(தன்னை நோக்கி) வந்த பெருந்தவமுடைய பரத்துவாச முனிவனை அப்பரதனும் தன் தந்தையைப்போல நினைத்துக் கீழே விழுந்து வணங்கினன்; சந்திரனைத் தலையில் அணிந்த சிவபெருமானை யொத்த அம்முனிவனும், அன்புகொண்டவனாய், அழியா நலங்களைத் தரவல்ல, வாழ்த்துமொழிகளைக் கூறினன்.

கு :—இந்துமோலி, சிவபெருமானுக்கு ஒரு பெயர். சிவனோடு முனிவனுக்கு ஒப்புமை, சடைமுடி தரித்தல், தவவொழுக்கம் பூணுதல், காமனை வெல்லல் முதலியன. இரங்குதல் - பரிவுகாட்டுதல். (1)

### பரத்துவன் பரதனை வினுதல்

**2464.** எடுத்த மாமுடி சூடிநின் பாலியைந்
தடுத்த பேரர சாண்டிலை யையநீ
முடித்த வார்சடைக் கற்றையை மூசுதூ
சுடுத்து நண்ணுதற் குற்றுள தியாதென்றான்.

'எடுத்த மா முடி சூடி, நின்பால் இயைந்து
அடுத்த பேர் அரசு ஆண்டிலை, ஐய! நீ,
முடித்த வார் சடைக் கற்றையை, மூசு தூசு
உடுத்து நண்ணுதற்கு உற்றுளது யாது?' என்றான்.

பொ :—(பின்பு பரத்துவாசன் பரதனை நோக்கி) 'ஐய! உன் பக்கல் வந்தடைந்த பெரிய இராச்சியத்தை, ஓங்கிய பெரிய பொன்முடியைத் தரித்துக்கொண்டு ஆளாமல், முடித்த நீண்ட சடைத்தொகுதியை யுடையவனாய் (வற்கலையின் அழுக்கு) மொய்த்த ஆடையைக் கட்டிக் கொண்டு வருதற்குரிய காரணம் என்ன ?' என்று கேட்டான்.

கு :—எடுத்த – மேலாக ஓங்கிய. மூசு – மொய்த்த: அதாவது அழுக்குச் செறிந்த; 'வற்கலையினுடையானை மாசடைந்த மெய்யானை' (2419) என முன்னரும் வந்துள்ளது. (2)

## பரதன் விடையிறுத்தல் 2465-2466

**2465.** சினக்க டுந்திறற் சீற்றவெங் தீயினுன்
மனக்க டுப்பினன் மாதவத் தோங்கலை
யெனக்க டுப்பதி யம்பிலை நீயென்று
னுனக்க டுப்பதன் றுலுர வோயெனு.

சினக் கடும் திறல் சீற்ற வெம் தீயினால்
மனக் கடுப்பினன், மா தவத்து ஓங்கலை,
'எனக்கு அடுப்பது இயம்பிலை நீ என்தான்?
உனக்கு அடுப்பது அன்று, ஆல், உரவோய்!' எனா.

பொ :—(அதுகேட்ட பரதன்) கோபமானது விரைந்து வலிய வெகுளி என்னும் வெவ்விய கனலாய் மாறவும் அதனால் மனம் கொதித் தவனாய், மலைபோன்ற, பெருந்தவத்தையுடைய அம்முனிவனை (நோக்கி), 'அறிவிற் சிறந்தவனே! நீ எதனால் எனக்குத் தகுதியானதைக் கூற வில்லை? (இது) உனக்குத் தகாது' என்று கூறி.

கு :—எனா என்பது அடுத்துவரும் பாடலில் என்றான் என்பதனோடு முடியும். கோபமானது மனத்தினுள்ளே தோன்றும் நிலையில் சினம் என்றும், புறத்தே வெளிப்படும்போது சீற்றம் என்றும் கொள்ளப்படும். "இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச், சீறிற் சிறுகுந் திரு." (திருக்குறள்-568) என வருதல் காண்க. மாதவத்து ஓங்கல் – பெரிய தவக்குன்று. அல்லது மலை: இங்கே பரத்துவாச முனிவனைக் குறித்து நின்றது. "மேருவரையின் மேம்பட்ட தவத்தான்" (பெரிய புராணம் ஏயர்கோன். 239) என வருதல் ஒப்புநோக்கத் தகும். ஆல், அசை. (3)

**2466.** மறையின் கேள்வற்கு
மன்னிளங் தோன்றல்பின்
முறையி னீங்கி
முதுநிலங் கொள்கிலே
னிறைவன் கொள்கில
னுமெனின் யாண்டெலா
முறைவென் கானத்
தொருங்குட னேயென்றான்.

மறையின் கேள்வற்கு மன் இளம் தோன்றல், பின்,
'முறையின் நீங்கி முது நிலம் கொள்கிலேன்;
இறைவன் கொள்கிலன் ஆம் எனின், யாண்டு எலாம்
உறைவென் கானத்து ஒருங்கு உடனே' என்றான்.

பொ :—வேதங்களுக்குத் தலைவனான இராமனுக்குப் பொருந்தின தம்பியான பரதன் பின்னும், '(மூத்த மகனுக்கு அரசு உரியது என்ற) நியதியினின்றும் வழுவித் தொன்றுதொட்டு வந்த நாட்டை நான் அடையமாட்டேன்; தலைவனான இராமன் பெற மறுத்தால், (அவனுறை யும்) ஆண்டுகள் முழுதும் நானும் அவனுடன் சேர்ந்து கூடவே காட்டில் வாழ்வேன்' என்று கூறினான்.

கு :—மறையின் கேள்வன் என்றது இராமனை: பாலகாண்டம், 493-ஆம் பாடலில் 'வேதநாயகன்' என்று கூறியதும் காண்க. தயரதனுக்குப் பின் இராமனே முறைப்படி அரசன் என்று பரதன் கருதியதால், அவனை 'இறைவன்' என்றான். (4)

பரதன் உரையால் முனிவர்கள் மகிழ்தல்

**2467.** உரைத்த வாசகங் கேட்டலு முள்ளெழுந்
திரைத்த காத லிருந்தவத் தோர்க்கெலாங்
குரைத்த மேனியொ டுள்ளங் குளிர்ந்தவா
லரைத்த சாந்துகொ டப்பிய தென்னவே.

உரைத்த வாசகம் கேட்டலும், உள் எழுந்து
இரைத்த காதல் இரும் தவத்தோர்க்கு எலாம்
குரைத்த மேனியொடு உள்ளம் குளிர்ந்தவால்,
அரைத்த சாந்துகொடு அப்பியது என்னவே.

பொ :—அவ்வாறு பரதன் கூறிய வார்த்தையைக் கேட்டதும், மனத்தில் தோன்றிப் பொங்கியெழுந்த அன்பையுடைய பெரிய தவத்தை யுடைய முனிவர்கள் எல்லோர்க்கும் அரைத்த, சந்தனத்தைக்கொண்டு அப்பியதுபோல, பூரித்த உடலும் மனமும் குளிர்ந்தன.

கு :—குரைத்தல் - பூரித்தல். (5)

## அந்தி வந்தடைதல்

**2468.** அன்ன காத லருந்தவ ராண்டகை
நின்னை யொப்பவர் யாருளர் நீயலா
லென்ன வாழ்த்திடு மேல்வை யிரவியும்
பொன்னின் மேருவிற் போய்மறைந் திட்டதே.

அன்ன காதல் அருந்தவர், 'ஆண்டகை!
நின்னை ஒப்பவர் யார் உளர் நீ அலால்?'
என்ன வாழ்த்திடும் ஏல்வை, இரவியும்
பொன்னின் மேருவில் போய் மறைந்திட்டதே.

பொ :—அத்தகைய அன்பையுடைய (உள்ளங் குளிர்ந்த) அரிய தவத்தினராகிய அம்முனிவர்கள் (பரதனை நோக்கி) 'பெருமையிற் சிறந்தவனே! உன்னை ஒத்தவர்கள் நீயலாது வேறு யார் உள்ளார்கள்?' என்று பாராட்டிப் போற்றியபொழுது, ஞாயிறும் பொன்மயமான மேரு மலைக்கு அப்பாற்போய் மறைந்தது.

கு :—இப்பாடல் அந்திப்பொழுது வந்தது என்பதைக் குறிப்ப தாகும். இது ஒரே ஏட்டுச் சுவடியிற் காணப்படுவதாக அடையாற்றுப் பதிப்பிற் கூறப்படுகிறது. அச்சிட்ட பிரதிகளில் இது மூல பாடத்தோடு சேர்க்கப்படவில்லை. ஆயினும், கதைத் தொடர்போடு பொருத்தம் கொண்டதாயும், அந்திப்பொழுது வந்த செய்தியைக் குறிப்பதாயும், பரதன் சேனை அங்குத்தங்க நேர்ந்தமைக்கும், பரத்துவன் விருந்து அளித்தமைக்கும், தக்க காரணத்தைப் புலப்படுத்துவதாயும் அமைந் திருத்தலின் இங்கு மூலத்தோடு சேர்க்கப்பட்டு உரையும் வரையப் பட்டது. பின்னல் 'நீலவல்லிருள்' என்று தொடங்கும் பாடலில் காலைப்பொழுது வந்து சூரியன் உதித்த செய்தி கூறப்படுதலின், அதற்கியைய இங்குச் சூரியன் மறைந்த செய்தி கூறப்படுவது இன்றி யமையாது வேண்டப்படுதலும் நோக்கத்தகும். (6)

பரதன் சேனைக்குப் பரத்துவன் விருந்து அளித்தல் 2469–2479

**2469.** ஆய காலையி லையனைக் கொண்டுதன்
றூய சாலை குறுகினன் றோமிலான்
மேய சேனைக் கமைப்பென் விருந்தெனத்
தீயி னாவுதி செங்கையி னோக்கினான்.

**ஆய காலையில் ஐயனைக் கொண்டு தன்**
**தூய சாலை குறுகினன் தோம் இலான்;**
**'மேய சேனைக்கு அமைப்பென் விருந்து' எனத்**
**தீயின் ஆவுதி செங்கையின் ஓக்கினான்.**

பொ :—அப்பொழுது குற்றமில்லாதவனாகிய பரத்துவாச முனிவன் தன்னுடைய தூய்மையான பர்ணசாலைக்குப் பரதனை அழைத்துச் சென்று, (அவனுடன்) 'வந்த சேனைக்கு விருந்து செய்வேன்' என்று கூறித் தன் சிவந்த கைகளினால் ஓமத் தீயில் ஆகுதிகளைக் கொடுத்தான்.

கு :—ஓக்குதல் – வரைந்துவைத்தல் அல்லது கொடுத்தல். ''ஒண்ணிணப்பலி ஒக்குவல்'' (திருக்கோவையார்-325) என்ற பாடற் பகுதியும் அதன் உரையும் ஒப்புநோக்கத்தகும். (7)

**2470.** துறந்த செல்வ னினையத் துறக்கந்தான்
பறந்து வந்து படிந்தது பல்சனர்
பிறந்து வேறொ ருலகுபெற் றாரென
மறந்து வைகினர் முன்னைத்தம் வாழ்வெலாம்.

**துறந்த செல்வன் நினையத் துறக்கம்தான்**
**பறந்து வந்து படிந்தது; பல்சனர்,**
**பிறந்து வேறு ஓர் உலகு பெற்றார் என,**
**மறந்து வைகினர் முன்னைத் தம் வாழ்வு எலாம்.**

பொ :—(அவ்வாறு ஓமத்தீயில் ஆவுதி நல்கிய) துறவுச் செல்வத்தை உடையவனான பரத்துவாச முனிவன் நினைத்த மாத்திரத்தில், துறக்க உலகம் கீழே இறங்கி வந்து தங்கியது; (பரதன் சேனையிலுள்ளவர்களாகிய) பல மக்களும் மாறிப் பிறந்து வேறோர் உலகைப் பெற்றவர்களைப்போல, மண்ணுலகத்தில் முன்னுள்ள தம் வாழ்க்கையை மறந்து (புதுவாழ்வு) வாழ்வாரானார்கள்.

கு :—இவ்வாறு சுவர்க்க போகம் தனக்கு எளிதிற் கிட்டுவதாயிருந்தும் அதிலே பற்று வையாது, யாவற்றையும் துறந்து தவக்கோலம் பூண்டு வீட்டின்பத்திலே தலைப்பட்டு நின்ருன் பரத்துவன் என்பதைக் குறிக்க, அவன் துறந்த செல்வன் என்னப்பட்டான். (8)

**2471.** நந்த லில்லற நந்தின ராமென
வந்த ரத்தி னரம்பைய ரன்பினர்
வந்து வந்தெதி ரேற்றனர் மைந்தரை
யிந்து விற்சுடர் கோயில்கொண் டேகினர்.

நந்தல் இல் அறம் நந்தினர் ஆம் என,
அந்தரத்தின் அரம்பையர், அன்பினர்,
வந்து உவந்து எதிர் ஏற்றனர், மைந்தரை,
இந்துவின் சுடர் கோயில் கொண்டு ஏகினர்.

பொ :—(அச்சேனையிலுள்ள) ஆடவர்களைக் கெடுதலில்லாத அறப் பயனைச் செழிக்கப்பெற்றவர்கள் என்று சொல்லும்படியாக, துறக்கத்தில் உறைகின்ற தேவமாதர்கள் அன்புடையவர்களாய் எதிர்வந்து ஒவ்வொருவரையும் விருப்புடன் (தனித்தனி) ஏற்றுக்கொண்டு சந்திரன்போல் விளங்கிக்கொண்டிருந்த மாளிகைக்கு அழைத்துக்கொண்டுபோனர்கள்.

கு :—நந்தல் – கேடு. நந்தினர் – செழிக்கப்பெற்றவர். முழுக்க அறம் செய்தோர் மறுமையிற் பெறும் பயனை, அங்ஙனம் செய்து முடிக்காத அச்சேனை மைந்தர்கள் இம்மையிலேயே பெற்றனர் என்றவாறு. மாளிகை என்றது அங்கு வந்து தோன்றிய துறக்க வுலகிற் காணப்பட்ட ஒரு மாளிகை. (9)

**2472.** நான நன்குரைத் தார்நளிர் வானிடை
யான கங்கை யரும்புன லாட்டினர்
கான மாமணிக் கற்பகந் தாங்கிய
வூன மின்மல ராடை யுடுத்தினர்.

நானம் நன்கு உரைத்தார், நளிர் வானிடை
ஆன கங்கை அரும்புனல் ஆட்டினர் ;
கான மா மணிக் கற்பகம் தாங்கிய
ஊனம் இல் மலர் ஆடை உடுத்தினர்.

பொ :—(அவ்வாறு மாளிகைக்கு அழைத்துச் சென்ற மைந்தரை அவ்வரம்பையர்) வாசனைப் பொடிகளை நன்ருக உடம்பில் தேய்த்து, வானிலே ஓடக்கூடிய குளிர்ந்த கங்கையாற்றின் அருமையான நீரிலே குளிப்பாட்டினர்கள் : (பின்னர்) நறுமணங்கொண்ட பெரிய அழகிய கற்பக மரங்கள் ஏந்தியுதவிய குற்றமற்ற பூப்போலும் மெல்லிய ஆடைகளை உடுத்தினர்கள்.

கு :—நளிர்கங்கை எனக் கூட்டுக. (10)

**2473.** கொம்பி னின்று நுடங்குறு கொள்கையார்
செம்பொ னின்கல ராசி திருத்தினு
ரம்ப ரத்தி னரம்பைய ரன்பொடு
மும்பர் கோனுக ரின்னமிழ் தூட்டினர்.

கொம்பின் நின்று நுடங்குறு கொள்கையார்,
செம் பொனின் கல ராசி திருத்தினர்;
அம்பரத்தின் அரம்பையர், அன்பொடும்,
உம்பர் கோன் நுகர் இன் அமிழ்து ஊட்டினர்.

பொ :—பூங்கொம்புபோல நிலைத்துத் துவள்கின்ற இயல்பையுடைய வானுலகத்துத் தேவமகளிர் (நீராடி ஆடையணிந்த அம்மைந்தர்க்குச்) சிவந்த பொன்னாலாகிய இனிய பலவகை உண்கலன்களைத் திருந்த அமைத்து, தேவர்களுக்கரசனான இந்திரன் உண்ணும் இனிய அமிழ்தம் போன்ற நல்லுணவை உண்பித்தார்கள்.

கு :—கொள்கை - இயல்பு. கலராசி - உண்கலவகை. (11)

**2474.** அஞ்ச டுத்த வமளி யலத்தகப்
பஞ்ச டுத்த பரிபுரப் பல்லவ
நஞ்ச டுத்த நயனியர் நவ்வியிற்
றுஞ்ச வத்தனை மைந்தருந் துஞ்சினர்.

அஞ்சு அடுத்த அமளி, அலத்தகப்
பஞ்சு அடுத்த பரிபுரப் பல்லவம்,
நஞ்சு அடுத்த நயனியர், நவ்வியின்
துஞ்ச, அத்தனை மைந்தரும் துஞ்சினர்.

பொ :—ஐந்து பொருள்களை உள்வைத்துத் தைத்த மெத்தென்ற படுக்கையில், செம்பஞ்சுக் குழம்பு ஊட்டப்பெற்ற சிலம்பணிந்த தளிர்

போன்ற அடிகளையும் விடத்தையொத்த கண்களையுமுடைய அத்தேவ மகளிர் பெண்மான்கள்போல் படுத்து உறங்க, (சேனையிலுள்ள) ஆடவர் அனைவரும் (உடன்) உறங்கினுர்கள்.

கு :—மெத்தையினுள் வைத்துத் தைக்கும் ஐந்து பொருள்கள் "சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேணம், உறுதூவி சேக்கையோ ரைந்து" என்பதால் அறியலாம். "மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி" (திருப்பாவை-19) என வருதலும் காண்க. ஐந்து பொருள் களையன்றிப் பதினைந்து பொருள்கொண்டு மெத்தை தைப்பதும் உண்டு என்பதை, "பதினைந் தமைத்த படையமை சேக்கை" (பெருங் கதை. 4-5-51) என்பதால் அறியலாம். (12)

**2475.** ஏந்து செல்வத் திமையவ ராமெனக்
கூந்த றெய்வ மகளிர்கொண் டாடினுர்
வேந்த ராதி சிவிகையின் வீங்குதோண்
மாந்தர் காறும் வரிசை வழாமலே.

ஏந்து செல்வத்து இமையவராம் எனக்
கூந்தல் தெய்வ மகளிர் கொண்டாடினுர்,
வேந்தர் ஆதி, சிவிகையின் வீங்கு தோள்
மாந்தர் காறும், வரிசை வழாமலே.

பொ :—மன்னர்கள்முதல் பல்லக்கையே சுமந்து வீங்கிப்போன தோள்களையுடைய வேலையாட்கள்வரை (யாவரையும்) முறைமை தவருமல் மிக்க செல்வத்தையுடைய தேவர்களே என்று சொல்லும்படியாக, அழகிய கூந்தலையுடைய தேவமகளிர் உபசரித்தார்கள்.

கு :—உபசாரத்தில் ஏற்றத்தாழ்வுகள் இல்லாதபடி எல்லாரையும் ஒக்கக் கொண்டாடினுர்கள் என்றவாறு. "அரசரேயாதியாக அடியவ ரந்தமாக" (யுத்தகாண்டம், மீட்சிப் படலம்) என்று பின்னரும் வந் துள்ளது. இதனுல், பாலகாண்டம், கடிமணப் படலத்தின் தொடக்கப் பாடலாகிய 1245-ல், "கடம்படு களிற்றரச ராதியிடை கண்டோர், தடம்படு புயத்தர்சிறு கம்மியர்கள் தாமும்" என்றுள்ள பாடம் சிறக்கும் என்பது நன்கு போதரும். (13)

**2476.** மாதர் யாவரும்
வானவர் தேவியர்
கோதில் செல்வத்து
வைகினர் கொவ்வைவாய்த்

தீதி றெய்வ
மடந்தையர் சேடியர்
தாதி மாரெனத்
தம்பணி கேட்பவே.

மாதர் யாவரும் வானவர் தேவியர்
கோது இல் செல்வத்து வைகினர், கொவ்வை வாய்த்
தீது இல் தெய்வ மடந்தையர், சேடியர்,
தாதிமார், எனத் தம் பணி கேட்பவே.

பொ :—கொவ்வைக்கனிபோன்று சிவந்த வாயையுடைய குற்றமில்லாத அழகையுடைய தேவமகளிர், தோழிகளும், பணிப்பெண்களும் போல் தம் ஏவலைக் கேட்டுச் செய்ய, தேவமகளிருக்குரிய குற்றமில்லாத இன்பவாழ்க்கையில் (அச்சேனையிலுள்ள) பெண்கள் யாவரும் தங்குவாரானார்கள்.

கு :—சேடி - தோழி. தாதி - வேலைக்காரி. சேடிகள் தலைவியரது ஏவலாட்டிகள் என்றும், தாதிமார் அவரது ஏவலாட்டிகள் என்றும் யாழ்ப்பாண வுரையொன்றில் கூறப்படுகின்றது. (14)

2477. நந்த நந்த வனங்களி ளுண்மலர்க்
கந்த முந்திய கற்பகக் காவினின்
றந்தர் வந்தென வந்திதன் கைதர
மந்த முந்த நடந்தது வாடையே.

நந்து அம் நந்த வனங்களில், நாள் மலர்க்
கந்தம் உந்திய கற்பகக் காவில், நின்று
அந்தர் வந்தென, அந்தி தன் கை தர
மந்தம் முந்த, நடந்தது வாடையே.

பொ :—தழைக்கின்ற அழகிய பூந்தோட்டங்களினின்றும், அன்றலர்ந்த மலர்களின் மணம் வீசிய கற்பகச் சோலைகளினின்றும், இரவுப் பொழுது கைகொடுத்துதவக் குருடர் வந்ததுபோலத் தென்றற்காற்றானது முற்பட்டு வர, வாடைக்காற்றானது விலகிச் சென்றது.

கு:—நந்தம் நந்தவனங்களில் (நின்று), நாள் மலர்க் கந்தம் உந்திய கற்பகக்காவில் நின்று, அந்தி தன் கைதர, அந்தர் வந்தென மந்தம் முந்த, வாடை நடந்தது எனக் கொண்டுகூட்டிப் பொருள்கொள்க. நந்துதல் - தழைத்தல்: "கான நந்திய

செந்நிலப் பெருவழி'' (முல்லைப்பாட்டு-97). அந்தி - இரவு: "அந்தி காவலன்'' (திவ். பெரியதிருமொழி-8, 5, 1). மந்தம் – தென்றல்: "மந்தம் வந்துலவுசீர் மழபாடியே'' (தேவாரம்–316, 3). இன்பம் விளைப்பது தென்றல் ஆதலானும், இன்ப நுகர்ச்சிக்கு வாடை இடையூறு விளைக்குமாதலானும், தென்றல் வரவும் வாடை (வெளியே) நடந்தது என்றார். (15)

2478. மான்ற ளிக்குல மாமதம் வந்துணத்
தேன்ற ளிர்த்த கவளமுஞ் செங்கதிர்
கான்ற நெற்றழைக் கற்றையுங் கற்பக
மீன்ற ளிக்க நுகர்ந்தன யானையே.

மான்று அளிக் குலம் மா மதம் வந்து உணத்
தேன் தளிர்த்த கவளமும், செங்கதிர்
கான்ற நெல் தழைக் கற்றையும், கற்பகம்
ஈன்று அளிக்க, நுகர்ந்தன யானையே.

பொ:—கற்பக மரங்கள் தேனை மிகுதியாகக் கலந்த உணவுத் திரளையும், சிவந்த கதிர்களை யீன்ற நெற்பயிர்த் தழைகளின் தொகுதியையும் உண்டாக்கிக் கொடுக்க, (அச்சேனையிலுள்ள) யானைகள், வண்டின் கூட்டங்கள் மயங்கிவந்து உண்ணும்படியாக மிகுத்த மதம் பெருகத் தாம் உண்டன.

கு:—பெருக என்று ஒரு சொல் வருவித்து உரைக்க. கற்பகம் கவளமும் கற்றையும் ஈன்று அளிக்க, அளிக்குலம் வந்து உண மாமதம் (பெருக) யானை நுகர்ந்தன எனக் கொண்டுகூட்டுக. (16)

2479. நரக தர்க்கற நல்கு நலத்தநீர்
கரக தக்கரி காநிமிர்த் துண்டன
மரக தத்தின் கொழுந்தென வார்ந்தபுல்
குரக தத்தின் குழாங்களுங் கொண்டவே.

நரகதர்க்கு அறம் நல்கும் நலத்த நீர்
கர கதக் கரி கால் நிமிர்த்து உண்டன;
மரகதத்தின் கொழுந்து என வார்ந்த புல்
குரகதத்தின் குழாங்களும் கொண்டவே.

பொ :—நரகத்தை அடையக்கூடிய பாவிகளுக்கும் (அவ்விதம் அடையாதபடி) புண்ணியப் பயனைத் தரவல்ல நன்மை படைத்த(கங்கை)நீரைத் துதிக்கையையும் சினத்தையுமுடைய (பரதன் படையின்) யானைகள் கால்களை நிமிர்த்த வண்ணமே குடித்தன ; பச்சை நிற இரத்தினமான மரகதத்தின் இளவொளிபோன்று பசுமையாய் நீண்டு வளர்ந்த புல்லை (அங்குள்ள) குதிரைக் கூட்டங்களும் அருந்தின.

கு :—நரகதர்க்கும் என்பது உம்மை தொக்கு நரகதர்க்கு என நின்றது. யானைகள். வயிறுரவுண்டு நீருண்ணும்பொழுது காலைத் தூக்கிக்கொண்டு உண்ணல் இயல்பாகலின், 'கால்நிமிர்ந்துண்டன' என்றார் : என்பது யாழ்ப்பாணத்து உரைக்குறிப்பு. இளம்புல்லுக்கு மரகதத்தின் கொழுந்து உவமை. "மணி வார்ந்தன்ன மாக்கொடி யறுகு" (குறுந்தொகை-256) என்ற ஒப்புமை காண்க. யானைகள் ஆற்றுநீரைப் பருக, குதிரைகள் அதன் கரைமேலுள்ள புல்லை அருந்தின என்பதாம். (17)

பரதன் காய்கிழங்கு உண்டு புழுதியில் வதிதல்

2480. இன்ன ரின்னணம் யாவரு மிந்திரன்
றுன்னு போகங்க டுய்த்தனர் தோன்றலு
னன்ன காயுங் கிழங்குமுண் டவ்விராப்
பொன்னின் மேனி பொடியுறப் போக்கினன்.

இன்னர், இன்னணம் யாவரும், இந்திரன்
துன்னு போகங்கள் துய்த்தனர்; தோன்றல்தான்,
அன்ன காயும் கிழங்கும் உண்டு, அவ் இராப்
பொன்னின் மேனி பொடி உறப் போக்கினன்.

பொ :—எல்லோரும் இத்தன்மையராய் இவ்வாறு இந்திரனுக்குப் பொருந்திய இன்பங்களை நுகர்ந்தார்கள் ; (ஆனால்) பரதன்மட்டும் இராமன் முன்பு உண்டவைபோன்ற காய், கிழங்குகளை உண்டு, அவனது பொன்போன்ற உடலம் புழுதியிலே தோயத் தரையிற் படுத்து அந்த இரவுப் பொழுதைக் கழித்தான்.

கு :—வான்மீகத்தில் பரதனும் இன்பம் துய்த்து மகிழ்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது. அது பரதன் பூண்ட உயர் தவவேடத்துக்கு ஒவ்வாதெனக் கம்பர் கண்டு மாற்றியிருப்பது நோக்கத்தகும். இராமன் பிரிவால் வருந்தியிருந்த பரதனது பிறழாத தவவொழுக்கம் இதனால் நன்கு புலனாகிறது. பரதன் மனநிலையைச் சோதிப்பதற்காகவும் அசையாத அவன் உறுதிப்பாட்டை மேலும் திடப்படுத்தற்காகவுமே பரத்துவன்

இவ்விருந்தினை நடத்தியுள்ளான் எனலாம். இறைவன் அடியாரை உபசரிக்கு முறையை முனிவன் புலப்படுத்தினுன் எனலுமாம். அன்ன காயும் என்பதற்கு, அவ்விடத்தில் துறவிகள் உண்டற்குரிய காயும் என்றும் பொருள் கூறலாம். (18)

### இரவு நீங்கிக் கதிரவன் தோன்றுதல்

2481. நீல வல்லிரு ணீங்கலு நீங்குறு
மூல மில்கன விற்றிரு முற்றுற
வேல நல்வினை துய்ப்பவர்க் கீறுசெல்
கால மென்னக் கதிரவன் றோன்றினான்.

நீல வல் இருள் நீங்கலும், நீங்குறும்
மூலம் இல் கனவில், திரு முற்றுற,
ஏல நல்வினை துய்ப்பவர்க்கு ஈறுசெல்
காலம் என்னக் கதிரவன் தோன்றினுன்.

பொ :—கரிய வலிய இருள் நிறைந்த இராப்பொழுது நீங்கியவளவில் அடிப்படையின்றித் தோன்றும் கனவு மறைவதைப்போல (அச்சேனையிலுள்ளார் இன்புற்ற) செல்வ வாழ்க்கை முடிந்துவிட, பொருந்துகின்ற நல்வினைப்பயனை நுகர்பவர்களுக்கு அந்நுகர்ச்சிமுடிய வருகின்ற காலம்போல வந்து சூரியன் உதித்தான்.

கு :—நல்வினையின் வயத்தால் துறக்கவுலகம் முறையே சென்று இன்பம் துய்ப்பவர்களுக்கும் ஒரு முடிவு உண்டு என்பது இதனுல் விளங்கும். (19)

### துறக்கம் நீங்கப் படையினர் உறக்கம் நீங்கல்

2482. ஆறி நின்றற மாற்றலர் வாழ்வெனப்
பாறி வீந்தது செல்வம் பரிந்திலர்
தேறி முந்தைத்தஞ் சிந்தைய ராயினர்
மாறி வந்து பிறந்தன்ன மாட்சியார்.

ஆறி நின்று அறம் ஆற்றலர் வாழ்வு எனப்
பாறி வீந்தது செல்வம்; பரிந்திலர்
தேறி, முந்தைத் தம் சிந்தையர் ஆயினர்,
மாறி வந்து பிறந்தன்ன மாட்சியார்.

பொ :—(ஐம்புலன்களும்) அடங்கி நின்று புண்ணியத்தைச் செய்யாதவர்களுடைய நல்வாழ்வு அழிதல்போல (அச்சேனையிலுள்ளார் பெற்ற துறக்கச்) செல்வம் நிலைமாறி ஒழிந்தது ; தேவலோகப் பிறப்பு நீங்கி மண்ணுலகில் வந்து பிறந்தது போன்ற தன்மையுடையவர்களாய் (அவ்வின்பம் இழந்ததற்கு) வருந்தாது மனம் தெளிந்து, முன்பு தாம் கொண்டிருந்த மன நிலையை யுடையவர்களானார்கள்.

கு :—முந்தை என்றது முந்திய இரவில் துறக்கம் வருமுன் தாம் கொண்டிருந்த நிலையை உணர்த்தும். எனவே, இராமனைக் காண வேண்டுமென்னும் மனத்தராயினர் என்பதாம். (20)

இதன்பின் ஓர் ஏட்டுச் சுவடியில் பின்வரும் ஓர் அதிகப் பாடல் காணப்படுகின்றது :—

2482 (a) 'இன்ன வாய வெறிகடற் சேனையும்
மன்னர் யாவரும் மன்னிளந் தோன்றலும்
அன்ன மாமுனி யோடெழுந் தாண்டகை
துன்னு நீள்வரைக் கேகிய சொல்லுவாம்.'

இப்பாடலுக்குப்பின், பரத்துவன் இருக்கைமேவு படலம் முற்றும் என்றும் எழுதப்பட்டுள்ளது.

## சேனை எழுந்து பாலையை யடைதல்

**2483.** காலையென் றெழுந்தது கண்டு வானவர்
☆ வேலையென் றனிகமென் றேங்கி விம்முறச்
சோலையுங் கிரிகளுஞ் சுண்ண மாயெழப்
பாலைசென் றடைந்தது பரதன் சேனையே.

காலை என்று எழுந்தது; கண்டு, வானவர்,
'வேலை' என்று, 'அனிகம்' என்று ஏங்கி விம்முறச்
சோலையும் கிரிகளும் சுண்ணமாய் எழப்
பாலை சென்று, அடைந்தது பரதன் சேனையே.

பொ :—காலைப்பொழுதில் சூரியன் உதயமானது ; (சேனையினிடையே சூரியன் உதிப்ப, அதனைப்) பார்த்துத் தேவர்கள் "இது கடல்" என்றும் "சேனையே" என்றும் தமக்குள் ஏங்கித் தவிக்கவும், பரதனுடைய சேனையானது, சோலைகளும், மலைகளும் புழுதியாய் எழும்படி போய்ப் பாலை நிலத்தை அடைந்தது.

கு :—சேனையின் பரந்துபட்ட தன்மையாலும், அதில் சூரியன் தோன்றுவதாலும் கடல் என்றும், புழுதி எழுந்ததால் சேனை என்றும், தேவர்கள் மனம் திகைத்து, ஒருநிலைப்படாராயினர் என்றவாறு. 'வேலையன் றனிகமே என்று விம்மற' எனப் பாடங்கொண்டு 'கடல் அன்று, சேனையே என்று வருத்தம் நீங்க' என்று பொருள்கூறலுமாம். இரவெல்லாம் பிரளயகாலக் கடலே முழங்கி வருகின்றதென்று வருத்த முற்றவர், இப்பொழுது படைவரவு காணப்படலால் விம்மலற்றார் என்று பொருள்படும்.

ஓர் ஏட்டுச் சுவடியில் இப்பாடல் முதல் 'பரதன் காட்சியேற்று மீள் படலம்' என்று பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. (21)

## சேனை பாலையைக் கடத்தல் 2484-2486

**2484.** எழுந்தது துகளதி னெரியும் வெய்யவ
னழுந்தின னவிப்பரும் வெம்மை யாறினன்
பொழிந்தன கரிமதம் பொடிவெங் கானக
மிழிந்தன வழிநடந் தேறு ணுமையே.

எழுந்தது துகள்; அதின், எரியும் வெய்யவன்
அழுந்தினன், அவிப்பரும் வெம்மை ஆறினன்;
பொழிந்தன கரி மதம், பொடி வெங் கானகம்
இழிந்தன, வழி நடந்து ஏறுணுமையே.

பொ :—(பரதன் சேனை செல்வதால்) தூசி கிளம்பியது; அதில் கொதிக்கின்ற சூரியன் மூழ்கினவனாய்த் தணித்தற்கு அரிய வெப்பம் தணிந்தான்; புழுதியையுடைய வெவ்விய அக்காட்டில் வழி நடந்து செல்ல முடியாதபடி யானைகள் சொரிந்த மதநீர் பெருகி ஓடின.

கு :—யானைகள் தூசியைக் கிளப்பிக் கதிரவனின் வெப்பத்தைத் தணித்ததோடன்றி, மதநீரைப் பொழிந்து காட்டு வெப்பத்தையும் அவித்தன என்றவாறு. (22)

**2485.** வடியுடை யயிற்படை மன்னர் வெண்குடை
செடியுடை நெடுநிழல் செய்த தீப்பொதி
படியுடைப் பரலுடைப் பாலை மேலுயர்
கொடியுடைப் பந்தரிற் குளிர்ந்த தெங்குமே.

வடி உடை அயில் படை மன்னர் வெண் குடை
செடி உடை நெடு நிழல் செய்த; தீப் பொதி
படி உடைப் பரல் உடைப் பாலை, மேல் உயர்
கொடி உடைப் பந்தரின், குளிர்ந்தது எங்குமே.

பொ :—கூர்மையையுடைய வேற்படையையுடைய அரசர்களின் வெள்ளைநிறக் குடைகள் நெருக்கத்தையுடைய நீண்ட நிழலைப்பரப்பின; (அதனால்) தீயின் வெப்பத்தைத் தம்மகத்தே கொண்டு படிந்துகிடக்கிற பரற்கற்களையுடைய (அந்தப்) பாலை நிலம், மேலே உயர்ந்த கொடிகளை யுடைய பந்தலைப்போல, எவ்விடமும் குளிர்ச்சிபெற்றது.

கு: —செடி - நெருக்கம்; "செடிகொள் வான்பொழில்சூழ்" (திருவாசகம்–29, 5) ; ஒளி என்றும் பொருள்கொள்ளலாம். (23)

2486. பெருகிய செல்வநீ பிடியென் றுருள்வயிற்
றிருகிய சீற்றத்தாற் செம்மை யாய்நிறங்
கருகிய வண்ணலைக் கண்டு காதலி
னுருகிய தளிர்த்தன வுலவை யீட்டமே.

'பெருகிய செல்வம் நீ பிடி' என்றுள் வயின்
திருகிய சீற்றத்தால் செம்மையாய், நிறம்
கருகிய அண்ணலைக் கண்டு, காதலின்
உருகிய, தளிர்த்தன உலவை ஈட்டமே.

பொ :—'மிக்கு நிறைந்த (அரசச்) செல்வத்தை நீ ஏற்றுக்கொள்' என்று கூறினவளான (தன் தாயாகிய) கைகேயியினிடத்தில் மாறு பட்டுப் பொங்கிய சினத்தால் (முகம்) சிவந்து, உடல் கருமையான வண்ணம் கொண்ட பெரியோனாகிய பரதனைப் பார்த்து (அப்பாலையி லுள்ள) பட்டுப்போன மரங்களும் அன்பால் நெகிழ்ந்தமையால், துளிர்த்துச் செழித்தன.

கு :—உலவை – பட்டமரம். (24)

## சேனை சித்திரகூடம் சேர்தல்

2487. வன்றெறு பாலையை மருத மாமெனச்
சென்றது சித்திர கூடஞ் சேர்ந்ததா
லொன்றுரைத் துயிரினு மொழுக்க நன்றெனப்
பொன்றிய புரவலன் பொருவில் சேனையே.

வன் தெறு பாலையை மருதம் ஆம் எனச்
சென்றது, சித்திரகூடம் சேர்ந்தது ஆல்;
ஒன்று உரைத்து, 'உயிரினும் ஒழுக்கம் நன்று' எனப்
பொன்றிய புரவலன் பொரு இல் சேனையே.

பொ :—உயிரைவிட ஒழுக்கமே மேலானது எனக்கொண்டு, (முன்னுக்குப்பின் முரணாது) ஒன்றாகிய வாய்மையையே கூறி உயிரை விட்ட அரசனாகிய தசரதனின் ஒப்பற்ற சேனை, கொடிதாய்க் கொதிக்கின்ற பாலை நிலத்தை (அது) மருத நிலமே என்னும்படி (வெப்பமின்றிக் குளிர்ந்த நிலையிலே) கடந்து சென்று சித்திரகூடமலையை அடைந்தது.

கு :—'' ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்கம், உயிரினு மோம்பப் படும் '' (131) என்ற திருக்குறளைக் கருதி, 'உயிரினும் ஒழுக்கம் நன்று' என்றார். சேனை கடந்து செல்வதற்குப் பாலை நிலம் மருதம்போற் குளிர்ந்திருந்தது என்றவாறு. (25)

### பரதன் சேனையை இலக்குவன் காணுதல் 2488–2489

**2488.** தூளியின் படலையுந் துரகந் தேரொடு
மூளிருஞ் சினக்கரி முழங்கு மோதையு
மாளிருங் குழுவின ரார வாரமுங்
கோளிரும் படையிதென் றுணரக் கூறவே.

தூளியின் படலையும், துரகம், தேரொடு,
மூள் இருஞ் சினக் கரி முழங்கும் ஓதையும்,
ஆள் இருங் குழுவினர் ஆரவாரமும்,
'கோள் இரும் படை இது' என்று உணரக் கூறவே.

பொ :—(அவ்வாறு சேனை சித்திரகூடத்தை அடைந்தபொழுது மேலே கிளம்பிய) தூசியின் தொகுதியும், குதிரைகளும், தேர்களும், பொங்கியெழுகிற பெருங்கோபத்தையுடைய யானைகளும், ஒலித்த முழக்கமும், பெருங்கூட்டமாகிய வீரர்களின் பேச்சொலியும் (நெடுந் தொலைவிலுள்ளவர்களுக்கும்) வலிய பெருஞ் சேனையொன்று வருகிறது என்று தெரியும்படி கூற.

கு :—கூற 'எழுந்தனன் இளையவன்' என வருங்கவியோடு தொடரும். (26)

2489. எழுந்தன னிளையவ
னேறி னனிலங்
கொழுந்துயர்ந் தனையதோர்
நெடிய குன்றின்மேற்
செழுந்திரைப் பரவையைச்
சிறுமை செய்தவக்
கழுந்துடை வரிசிலைக்
கடலை நோக்கினன்.

எழுந்தனன் இளையவன், ஏறினன் நிலம்
கொழுந்து உயர்ந்து அனையது ஓர் நெடிய குன்றின்மேல்,
செழும் திரைப் பரவையைச் சிறுமை செய்த அக்
கழுந்து உடை வரி சிலைக் கடலை நோக்கினன்.

பொ :—(ஒரு சேனை வருகிறது என்பதை உணர்ந்த) இளையவனான இலக்குவன் எழுந்து, பூமியானது கொழுந்துவிட்டு உயர்ந்தாற்போன்றதொரு பெரிய குவட்டின்மேல் ஏறி, நிறைந்த அலைகளையுடைய கடலையும் சிறிதாகச்செய்து பரந்துள்ள, பழகியதால் வழுவழுப்பான கைப்பிடியையுடைய வரிந்துகட்டின விற்படையையுடைய கடலைப் பார்த்தான்.

கு :—கழுந்து – அடிக்கடி கைபடுவதால் வழுவழுப்பேறிய கைப்பிடி : அதனையுடைய விற்படை யென்றது, விற்றொழிலில் வல்ல படை யென்றவாறு. (27)

## இலக்குவன் சீற்றம் கொள்ளல்

2490. பரதனிப் படைகொடு பார்கொண் டான்மறங்
கருதியுட் கிடந்ததோர் கறுவு காதலால்
விரதமுற் றிருந்தவன் மேல்வந் தானிது
சரதமற் றிலதெனத் தழங்கு சீற்றத்தான்.

'பரதன், இப் படை கொடு, பார் கொண்டான், மறம்
கருதி, உள் கிடந்தது ஓர் கறுவு காதலால்,
விரதம் உற்று இருந்தவன் மேல், வந்தான்; இது
சரதம், மற்று இலது' எனத் தழங்கு சீற்றத்தான்.

பொ :—'இராச்சியத்தைப் பற்றிக்கொண்டவனாகிய பரதன், தன் மனத்தே நெடுநாளாய் எண்ணிக்கொண்டிருக்கும் வைரம் வாய்ந்த

கொல்லுகை காரணமாகப் போர் கருதி (இப்பொழுது) இச்சேனையைக் கூட்டிக்கொண்டு நோன்புகொண்டிருப்பவனாகிய இராமன்மேல் படையெடுத்து வருகிறான் : இது நிச்சயம், வேறு இல்லை' என்று மிகுகின்ற சினமுடையவனாய் ('குதித்தனன்' என வருங் கவியோடு தொடரும்.)

கு :—மறம் - போர். கறுவு - மன வைரம். காதல் - கொல்லுகை. தழங்கு – மிகுகின்ற. (28)

## இலக்குவன் இராமனை அடைதல்

2491. குதித்தனன் பாரிடைக் குவடு நீறெழ
மிதித்தன னிராமனை விரைவி னெய்தினான்
மதித்திலன் பரதனின் மேல்வந் தான்மதிற்
பதிப்பெருஞ் சேனையின் பரப்பி னானென.

குதித்தனன் பாரிடைக் குவடு நீறு எழ
மிதித்தனன், இராமனை விரைவின் எய்தினான்,
'மதித்திலன், பரதன் நின்மேல் வந்தான், மதில்
பதிப் பெருஞ் சேனையின் பரப்பினான்' என.

பொ :—(அவ்வாறு சினங்கொண்ட இலக்குவன்) அம்மலைச் சிகரம் தூள் பறக்கும்படி காலால் மிதித்துக் கீழே தரையில் குதித்து, இராமனை விரைவில் அடைந்து, "மதிலையுடைய அயோத்தி நகரத்திலுள்ள பெரிய படையைத் திரட்டிக்கொண்டு, உனது பெருமையை மதிக்காமல், பரதன் உன்மேல் (போருக்கு) வந்துகொண்டிருக்கிறான்" என்று கூறி, ("கட்டினன்......சொல்லினான்" என வருஞ் செய்யுளோடு இயையும்.) (29)

## இலக்குவன் போர்க் கோலம் கொள்ளல்

2492. கட்டினன் சுரிகையுங் கழலும் பல்கணைப்
புட்டிலும் பொறுத்தனன் கவசம் பூட்டமைத்
திட்டன னெடுத்தனன் வரிவி லேந்தலைத்
தொட்டடி வணங்கிநின் றினைய சொல்லினான்.

கட்டினன் சுரிகையும் கழலும்; பல் கணைப்
புட்டிலும் பொறுத்தனன்; கவசம் பூட்டு அமைத்து
இட்டனன்; எடுத்தனன் வரிவில்; ஏந்தலைத்
தொட்டு அடி வணங்கி நின்று, இனைய சொல்லினான்.

பொ :—(பின்பு இலக்குவன் விரைந்து, இடுப்பில்) உடைவாளையும் (காலில்) வீரக் கழலையும் கட்டினான் ; பல அம்புகள் நிறைந்த அம்பறாத் தூணியையும் தாங்கினான் ; (உடம்பில்) போர்க்கவசத்தையும் பூட்டினை மாட்டி இட்டுக்கொண்டான் ; கட்டமைந்த வில்லையும் (கையில்) எடுத்துக்கொண்டான் ; இராமனைத் திருவடிதொட்டு வணங்கி (எழுந்து) நின்று இவ்வார்த்தைகளைச் சொன்னான். (அவன் சொல்லியவற்றை வரும் பன்னிரண்டு கவிகளிற் காணலாம்.) (30)

## இலக்குவன் வீரவுரை பகர்தல் 2493-2504

**2493.** இருமையு மிழந்தவப் பரத னேந்துதோட்
பருமையு மன்னவன் படைத்த சேனையின்
பெருமையு நின்னொரு பின்பு வந்தவென்
னொருமையுங் கண்டினி யுவத்தி யுள்ளநீ.

‘இருமையும் இழந்த அப் பரதன் ஏந்து தோள்
பருமையும், அன்னவன் படைத்த சேனையின்
பெருமையும், நின் ஒரு பின்பு வந்த என்
ஒருமையும் கண்டு, இனி உவத்தி உள்ளம் நீ.’

பொ :—‘இம்மை மறுமை என்னும் இரண்டின் இன்பங்களையும் ஒருங்கே இழந்த அந்தப் பரதனுடைய உயர்ந்த தோள்களின் பருத்திருக்கையையும், அவன் பெற்றிருக்கிற படையின் பெருமையையும், ஒப்பற்ற உனது பின்னே பிறந்த எனது தனிமையையும் இப்பொழுது நீ பார்த்து மனம் மகிழ்வாயாக.’

கு :—ஒருமை - தனிமை ; ஒப்பற்ற தன்மை என்றும் கொள்ளலாம். (31)

**2494.** படரெலாம் படப்படும் பரும யானையின்
றிடரெலா முருட்டின தேரு மீர்த்தன
குடரெலாந் திரைத்தன குருதி யாறுகள்
கடரெலா மடுப்பன பலவுங் காண்டியால்.

‘படர் எலாம் படப் படும் பரும யானையின்
திடர் எலாம் உருட்டின, தேரும் ஈர்த்தன,
குடர் எலாம் திரைத்தன, குருதி ஆறுகள்
கடர் எலாம் மடுப்பன பலவும் காண்டியால்.’

பொ :—‘ (பாகர் பரிக்கோற்காரர் முதலிய) படைவீரர்கள் எல்லாரும் மடிய மடிந்துபோகும் பருமையையுடைய யானைகளாகிய மேடுகளை யெல்லாம் உருட்டினவாய், தேர்களையும் இழுத்துக்கொண்டனவாய், குடல்களையெல்லாம் அலைத்துக்கொண்டனவாய், கடல் முற்றிலும் பாய்கின்ற இரத்த ஆறுகள் பலவற்றையும் காண்பாய்.’

கு :—படர் - படைவீரர். பருமம் - பருமை ; சேணம் என்றும் ஆம். இங்கே யானைக்குரிய அலங்காரம். திடர் - மேடு. திரைத்தல் - அலைத்துக்கொள்ளுதல். குடர், கடர் என்பன குடல், கடல் என்பவற்றின் போலி. (32)

2495. கருவியுங் கைகளுங் கவச மார்பமு
முருவின வுயிரினோ டுதிரந் தோய்வில
திரிவன சுடர்க்கணை திசைக்கை யானைகள்
வெருவரச் செய்வன காண்டி வீரநீ.

‘கருவியும், கைகளும், கவச மார்பமும்,
உருவின உயிரினோடு, உதிரம் தோய்வு இல.
திரிவன, சுடர்க் கணை, திசைக் கை யானைகள்
வெருவரச் செய்வன, காண்டி, வீர ! நீ.’

பொ :—‘ வீரனே ! (எனது) ஒளியையுடைய அம்புகள் (பகைவரின்) படைக்கலங்களையும், கைகளையும், கவசம் அணிந்த மார்புகளையும் (அவர்களின்) உயிருடனே ஊடுருவிச் சென்றனவாய், (செல்லும் வேகத்தால்) இரத்தக் கறை பிடியாதபடி, எங்கும் திரிந்துகொண்டிருப்பனவாய், துதிக்கையையுடைய எட்டுத்திக்கு யானைகளும் அஞ்சும்படி செய்பவற்றைக் காண்பாய்.’ (33)

2496. கோடகத் தேர்படு குருதி தாவிய
வாடகத் தட்டிடை யலகை யற்றுகு
கேடகத் தடக்கைகள் கவ்விக் கிந்தின
நாடக நடிப்பன காண்டி நாதநீ.

‘கோடகத் தேர்படு, குருதி தாவிய
ஆடகத் தட்டிடை, அலகை, அற்று உகு
கேடகத் தடக்கைகள் கவ்விக் கிந்தின,
நாடகம் நடிப்பன காண்டி, நாத ! நீ.’

போ :—'அண்ணா! இரத்தம் பரந்த குதிரை பூட்டிய தேரின் பொன்னாலாகிய மேல் தட்டிலே பேய்கள், அறுந்து விழுந்த கேடகம் தாங்கிய பெரிய கைகளை வாயில் கவ்விக்கொண்டு, படங்கிந்தி நடந்தனவாய்க் கூத்தாடுவனவற்றை நீ காண்பாய்.'

கு :—கோடகம் - குதிரை. தாவிய - பரந்த ; 'மலர்தாய பொழி னண்ணி' (கலித்தொகை-35) என வருதல் காண்க. ஆடகத்தட்டு - பொன்னாலாகிய தேர்த்தட்டு. கிந்துதல் – பெருவிரலை ஊன்றிக்கொண்டு நடத்தல், அல்லது, நொண்டுதல். இது பேய்க்குரவை என்னும் துறை யாகும். (34)

**2497.** பண்முதிர் களிற்றொடு பரந்த சேனையி
னெண்முத லறுத்துநா னிமைப்பி னீக்கலால்
விண்முது குளுக்கவும் வேலை யாடையின்
மண்முது காற்றவுங் காண்டி வள்ளனீ.

'பண் முதிர் களிற்றொடு பரந்த சேனையின்
எண் முதல் அறுத்து, நான் இமைப்பின் நீக்கலால்,
விண் முதுகு உளுக்கவும், வேலை ஆடையின்
மண் முதுகு ஆற்றவும் காண்டி, வள்ளல்! நீ.'

போ :—'வண்மைக்குணமுடையோய்! (எதிரியின்) விரிந்த சேனையிலுள்ள அலங்காரம் முற்றுப்பெற்ற யானையோடு சேர்த்து எண்ணப்படும் தொகுதிகளான நால்வகைப் படைகளையும் அடியோடு தொலைத்து ஒழித்தலால் வானுலகம் முதுகு நெளிக்கவும், கடலை ஆடையாகவுடைய நிலவுலகம் முதுகில் (பாரம் நீங்கி) இளைப்பாற்றிக்கொள்ளவும் நீ காண்பாய்.'

கு :—'கசரததுரகமாட்கடல்' என்று முன்னே (201) வருதல் காண்க. (35)

**2498.** நிவந்தவான் குருதியி னீத்த நீந்திமெய்
சிவந்தசா தகரொடு சிறுகட் கூளியுங்
கவந்தமு முலகநின் கைய தாயதென்
றுவந்தன குனிப்பன காண்டி யும்பர்போல்.

"நிவந்த வான் குருதியின் நீத்தம் நீந்தி மெய்
சிவந்த சாதகரொடு சிறு கண் கூளியும்,

கவந்தமும், 'உலகம் நின் கையது ஆயது' என்று,
உவந்தன குனிப்பன காண்டி, உம்பர் போல்."

போ :—" மேலோங்கிய பெரிய இரத்த வெள்ளத்திலே நீந்துதலால் உடல் சிவந்த பூதகணங்களுடனே சிறிய கண்களையுடைய பேய்களும், தலையற்ற உடல்களும், 'இராச்சியம் மீண்டும் உன் கைக்கு வந்து விட்டது' என்று தேவர்கள்(மகிழ்தல்)போல் மகிழ்ந்தனவாய்க் குதித்துக் கூத்தாடுவனவற்றைக் காண்பாய்.''

கு :—நிவந்த – ஓங்கிய. சாதகர் – பூதகணங்கள். கூளி – குறும் பூதம் அல்லது பேய். கவந்தம் – தலையறுந்த உடல்கள். உலகம், இங்கே இராச்சியத்தைக் குறித்துநின்றது. தேவர்களும் பேய்களும் மகிழ்ந்து கூத்தாடுவர் என்றவாறு. (36)

2499. சூழிவெங் கடகரி துரக ராசிகள்
பாழிவன் புயத்திகல் வயவர் பட்டற
வாழிவெங் குருதியா லழிந்த வேலைக
ளேழுமொன் றாகிநின் றிரைப்பக் காண்டியால்.

'சூழி வெம் கட கரி, துரக ராசிகள்,
பாழி வன் புயத்து இகல் வயவர் பட்டு அற,
ஆழி வெம் குருதியால் அழிந்த வேலைகள்
ஏழும், ஒன்றாகி நின்று இரைப்பக் காண்டியால்.'

போ :—' முகபடாத்தையணிந்த கொடிய மத யானைகளும், குதிரையினங்களும், பெருமையுடைய வலிய தோளையுடைய போர்வீரர்களும் இறந்தொழிய(ப் பெருகியெழும்) கடல்போன்ற வெம்மையான இரத்த வெள்ளத்தால் ஏழு கடல்களும் தம் நிலையழிந்தனவாய் ஒரே (இரத்தக்) கடலாகி நின்று ஒலிக்கக் காண்பாய்.'

கு: —பாற்கடல், தயிர்க்கடல் என்ற பாகுபாடு நீங்குவதால் 'அழிந்த' என்றும், இரத்தவெள்ளம் பெருகி எல்லாக் கடலும் ஒரே செந்நிறங் கொள்வதால் 'ஒன்றாகி' என்றும் கூறினன். (37)

2500. ஆளற வலங்குதே ரழிய வாடவர்
வாளற வரிசிலை துணிய மாக்கரி
தாளறத் தலையறப் புரவி தாளொடுந்
தோளற வடிக்கணை தொடுப்பக் காண்டியால்.

'ஆள் அற, அலங்கு தேர் அழிய, ஆடவர்
வாள் அற, வரிசிலை துணிய, மாக்கரி
தாள் அறத் தலை அறப் புரவி, தாளொடும்
தோள் அற வடிக்கணை தொடுப்பக் காண்டியால்.'

பொ :—'காலாள் வீரர்கள் அறுபடவும், அசைகின்ற தேர்கள் அழியவும், பெரிய யானைகளும், குதிரைகளும் கால்கள் அறுபடவும், தலைகள் அறுபடவும், (தேர், யானை, குதிரைமீதுற்ற) ஆடவர்களாகிய வீரர்களின் வாட்படைகள் அறுபடவும் விற்படைகள் அறுபடவும், (அவர்களுடைய) கால்களும் தோள்களும் அறுபடவும், கூரிய அம்புகளை நான் தொடுத்துச் செலுத்தக் காண்பாய்.'

கு :—இது கொண்டுகூட்டுப் பொருள்கோள். (38)

2501. தழைத்தவான் சிறையன தசையுங் கவ்வின
வழைத்தவான் பறவைகளலங்கு பொன்வடிம்
பிழைத்தவான் பகழிபுக் கிருவர் மார்பிடைப்
புழைத்தவான் பெருவழி போகக் காண்டியால்.

'தழைத்த வான் சிறையன, தசையும் கவ்வின,
அழைத்த வான் பறவைகள், அலங்கு பொன் வடிம்பு
இழைத்த வான் பகழி புக்கு இருவர் மார்பிடைப்
புழைத்த வான் பெருவழி போகக் காண்டியால்.'

பொ :—'(என்னுடைய) ஒளி பொருந்திய கரும்பொன்னினால் விளிம்பு அமைக்கப்பெற்ற வலிய அம்புகள் புகுந்து துளைத்த (பரத சத்துருக்கராகிய) இரண்டு பேர் மார்பிலும் சதைத் துண்டங்களைக் கவ்விக்கொண்டும் (தம் இனத்தைக்) கூவி அழைத்துக்கொண்டும், சிறந்த (கழுகு, பருந்து முதலிய) பறவைகள், செழித்த பெரிய இறகுகளை விரித்தனவாய் வானத்தின் பெரிய வழியூடே பறந்துபோகக் காண்பாய்'.

கு :—வான்சிறை – பெரிய இறகுகள். வான் பறவைகள் – சிறந்த பறவைகள் : (போர்க்களத்திற்சென்று, இரைதேடுவதிற் சிறந்த கழுகு, பருந்து, காகம் போன்ற பறவைகள் என்றவாறு.) வான் பகழி – வலிமையுடைய அம்பு. வான் பெருவழி – வானத்தின் பெரிய வழி. அலங்கு பொன் வடிம்பு இழைத்தவான் பகழிபுக்கு புழைத்த இருவர் மார்பிடை, தசையும் கவ்வின, அழைத்த, வான் பறவைகள் தழைத்த வான் சிறையன, வான்பெருவழி போகக் காண்டியால் என இயையும். (39)

**2502.** ஒருமகள் காதலி னுலகை நோய்செய்த
பெருமக னேவலிற் பரதன் முன்பெறு
மிருநில மாள்கைவிட் டின்றென் னேவலா
லருநர காள்வது காண்டி யாழியாய்.

'ஒரு மகள் காதலின் உலகை நோய் செய்த
பெருமகன் ஏவலின் பரதன் தான் பெறும்
இரு நிலம் ஆள்கை விட்டு, இன்று, என் ஏவலால்
அரு நரகு ஆள்வது காண்டி, ஆழியாய்!'

பொ :—' சக்கரப்படையுடைப் பெரியோய் ! (கைகேயி யென்னும்) ஒரு பெண்ணின் மேற்கொண்ட ஆசையால் உலகம் முழுதையும் வருந்தும்படி செய்த (தசரதனுகிய) பேரரசனின் ஆணையால் பரதன்தான் அடைந்துள்ள இந்தப் பெரிய இராச்சியத்தை ஆளுதலை நீங்கி, இன்று என்னுடைய கட்டளையால் மீளுதற்கரிய நரகத்தை அடையப் போவதைக் காண்பாய்.' (40)

**2503.** வையகந் துறந்துவந் தடவி வைகுத
லெய்திய துனக்கென நின்னை யீன்றவ
ணைதல்கண் டுவந்தவ ணவையி னோங்கிய
கைகயன் மகள்விழுந் தரற்றக் காண்டியால்.

" ' வையகம் துறந்து வந்து அடவி வைகுதல்
எய்தியது உனக்கு ' என, நின்னை ஈன்றவள்
நைதல் கண்டு உவந்தவள், நவையின் ஓங்கிய
கைகயன் மகள், விழுந்து அரற்றக் காண்டியால்."

பொ :—" ' இராச்சியத்தைக் கைவிட்டுப் போய்க் காட்டிலே வாழும்படியாக உனக்கு நேர்ந்துவிட்டதே' என்று உன்னைப் பெற்றவள் (கோசலை) வருந்துவதைப் பார்த்து மகிழ்ந்தவளாகிய பழியின் மிக்க கைகேயி கீழே விழுந்து அழுதுபுலம்பக் காண்பாய்." (41)

**2504.** அரஞ்சுட வழனிமி
ரலங்கல் வேலினய்
விரஞ்சொரு நொடியிலிவ்
வனிக வேலையை

யுரஞ்சுடு வடிக்கணை
யொன்றில் வென்றுமுப்
புரஞ்சுடு மொருவனிற்
பொலிவென் யானென்றான்.

"அரம் சுட அழல் நிமிர் அலங்கல் வேலினாய்!
விரஞ்சு ஒரு நொடியில், இவ் அனிக வேலையை
உரம் சுடு வடிக்கணை ஒன்றில் வென்று, முப்
புரம் சுடும் ஒருவனின், பொலிவென் யான்" என்றான்.

பொ :—"அரத்தால் (அராவி) வருத்துதலால் ஒளி எழுகின்ற, வெற்றிமாலை சூடிய வேலையுடையவனே! விரைந்து ஒரு மாத்திரைப் பொழுதிலே (பகைவர்) வலிமையை அழிக்குந் தன்மையுள்ள கூரிய அம்பு ஒன்றினால் இப்படைக்கடலை முறியடித்து, முப்புரத்தை எரித்த ஒப்பற்றவனாகிய சிவபெருமான்போல யான் விளங்குவேன்" என்று (இலக்குவன்) கூறினான்.

கு :—சுட - வருத்த; "சுடச்சுட நோற்கிற்பவர்க்கு" (குறள்–267). அழல் – ஒளி; "மணி விளக்கழலும் பாயலுள்" (1312) என்றார் முன்னும். உரம் – வலிமை; இங்கு எதிரிகளின் வலிமையைக் குறித்தது. (42)

## இராமன் இலக்குவனை மறுத்துக் கூறல் 2505—2510

2505. இலக்குவ வுலகமோ ரேழு மேழுநீ
கலக்குவ னென்பது கருதி னாலது
விலக்குவ தரிதது விளம்ப வேண்டுமோ
புலக்குரித் தொருபொருள் புகலக் கேட்டியால்.

'இலக்குவ! உலகம் ஓர் ஏழும் ஏழும் நீ
கலக்குவன் என்பது கருதினால், அது
விலக்குவது அரிது; அது விளம்ப வேண்டுமோ?
புலக்கு உரித்து ஒரு பொருள் புகலக் கேட்டியால்'

பொ :—'இலக்குவனே! நீ ஒருவனே பதினான்கு உலகங்களையும் அழிப்பேன் என்று எண்ணினால், அத்தொழில் (யாவர்க்கும்) தடுத்தற்கு முடியாததொன்றாம்: அதைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ? (ஆயினும்) அறிவுக்கு ஏற்றதொரு செய்தியை (யான்) கூறக் கேட்பாயாக. (43)

2506. நங்குலத் துதித்தவர் நவையி னீங்கினு
ரெங்குலப் புறுவர்க ளெண்ணின் யாவரே
தங்குலத் தொருவருந் தரும நீங்கினர்
பொங்குலத் திரளொடும் பொருத தோளினுய்.

'நம் குலத்து உதித்தவர், நவையின் நீங்கினுர்,
எங்கு உலப்புறுவர்கள்? எண்ணின், யாவரே
தம் குலத்து ஒருவரும் தருமம் நீங்கினுர்?
பொங்கு உலத் திரளொடும் பொருத தோளினுய்!'

பொ:—'பருத்த திரண்ட கற்றூணையொத்த தோள்களையுடையவனே! நமது குலத்திற் பிறந்தவர்களாய்க் குற்றமற்றவர்களாய அரசர்கள் எவ்வாறு எண்ணி அளவிடப்படுவார்கள்? ஆராய்ந்து பார்த்தால், தமது குலத்தினின்றும் பிரிக்கமுடியாத அறத்தினின்றும் தவறியவர்கள் யார் உள்ளார்?' (யாரும் இல்லை).

கு:—இப்பாடலின் அடிகளும் கருத்தும் பயின்றுவந்துள்ள செய்யுள் தசரதன் கூற்ருக முன் மந்திரப்படலத்துள் வருமாறு:

"நங்குலக் குரவர்க ணவையி னீங்கினுர்
தங்குலப் புதல்வரே தரணி தாங்கப்போய்
வெங்குலப் புலன்கெட வீடு நண்ணினுர்
எங்குலப் புறுவரென் றெண்ணி நோக்குகேன்." (1415) (44)

2507. எனைத்துள மறையவை யியம்பற் பாலன
பனைத்திரள் கரக்கரிப் பரதன் செய்கையே
யனைத்திற மல்லன வல்ல வன்னது
நினைத்திலை யென்வயி னேய நெஞ்சினுல்.

'எனைத்து உள மறை அவை இயம்பற்பாலன,
பனைத்திரள் கரக் கரிப் பரதன் செய்கையே;
அனைத்திறம் அல்லன அல்ல; அன்னது
நினைத்திலை, என்வயின் நேய நெஞ்சினுல்.'

பொ:—'வேதங்கள் எத்தனையுள்ளனவோ அவையெல்லாம் சொல்லத்தக்கன பனைபோல் திரண்ட துதிக்கையையுடைய யானை போல்கின்ற பரதன் ஒழுக்கமே; அவன் ஒழுக்கச் செயல் அல்லாதனவற்றை அவை இயம்பா; அவ்வுண்மையை (நீ) என்மீது கொண்ட மன அன்பினுல் நினையாதுவிட்டாய்.'

கு :—' அனைத்திறம் அல்லன அல்ல ' என்பதற்கு ' (நீ சொல்லும்) அத்தன்மையனவான தகுதியற்ற காரியங்கள் அல்ல ' என்றும் பொருள் கூறலாம். (45)

**2508.** பெருமக னேவலிற் பிறந்த காதலின்
வருமென நினைகையு மண்ணை யென்வயிற்
றருமென நினைகையுந் தவிரத் தானையாற்
பொருமென நினைகையும் புலமைப் பாலதோ.

'பெருமகன் ஏவலின், பிறந்த காதலின்
வரும் என நினைகையும், மண்ணை என் வயின்
தரும் என நினைகையும் தவிரத் தானையால்
பொரும் என நினைகையும் புலமைப் பாலதோ ?'

பொ :—'(நமது தந்தையாகிய) அரசன் தசரதனது கட்டளையினுலும் உடன் பிறந்ததால் உண்டாகும் அன்பினுலும் வருவான் என்று எண்ணுதலும் இராச்சியத்தை என்னிடத்துக் கொடுப்பான் என்று எண்ணுதலும் ஒழிய, (நீ சொல்வதுபோற் பரதன்) படைகளோடு போர் செய்வான் என்று எண்ணுவதும் அறிவின்பாற்பட்டதாகுமோ ?'

கு :—முன்பாடலில்......இலக்குவன் பெருமகன் என்று தன் தந்தையைக் குறித்துள்ளது கருதி, அச்சொல்லையே ஈண்டும் அனுவாதம் செய்து இராமன் பேசினன் என்க. தசரதன் இறந்தமை இன்னும் இராமன் அறிந்திலன் ஆதலின் இவ்வாறு கூறினுன். பரதன் விற்ரெழிலில் ஒருவராலும் வெல்லப்படாதவன் என்றும், பரதனைக் கொன்ருல் இராச்சியத்தைக் கைப்பற்றும் ஆசையால் அவ்வாறு செய்ததாகப் பழி நேரும் என்றும், பரதன் போர் கருதாது அன்பு கருதி வரவும் கூடும் என்றும், தந்தை ஏவி, அவன் வருதலும் கூடும் என்றும் இராமன் இலக்குவனுக்குக் கூறியதாக வான்மீகத்திற் காணப்படும். (46)

**2509.** பொன்னெடும் பொருகழற்
பரதன் போந்தன
னன்னெடும் பெரும்படை
நல்க லன்றியே
யென்னெடும் பொருமென
வியம்பற் பாலதோ
மின்னெடும் பொருவுற
விளங்கும் வேலினுய்.

'பொன்னொடும் பொரு கழல் பரதன் போந்தனன்,
நல் நெடும் பெரும்படை நல்கல் அன்றியே,
என்னொடும் பொரும் என இயம்பற் பாலதோ ?
மின்னொடும் பொருவுற விளங்கும் வேலினாய் !'

பொ :—'மின்னலோடு ஒப்ப ஒளிசெய்கின்ற வேற்படையையுடையவனே ! பொன்னையொத்து விளங்குகின்ற கழலையணிந்த பரதன் வந்து நன்மையும், நெடுமையும், பெருமையும் உடைய சேனையை எனக்குக் கொடுப்பதல்லாமல், என்னோடு போர்செய்வான் என்பது சொல்லத் தகுமோ ?'

கு :—சேனையின் நன்மை நேர்மைக்கும், நெடுமை ஆற்றலுக்கும், பெருமை அளவிற்குமாகக் கொள்க. முன் பாடலில் நினைத்தலுங் கூடாது என்ற இராமன், இங்குப் பரதன் பொரும் என வாயாற் சொல்லுதலும் கூடாது என்கின்றான். (47)

2510. சேணுயர் தருமத்தின்
றேவைச் செம்மையி
னாணியை யன்னது
நினைக்க லாகுமோ
பூணியன் மொய்ம்பினாய்
போந்த தீண்டெனைக்
காணிய நீயிது
பின்னுங் காண்டியால்.

'சேண் உயர் தருமத்தின் தேவைச் செம்மையின்
ஆணியை, அன்னது நினைக்கல் ஆகுமோ ?
பூண் இயல் மொய்ம்பினாய் ! போந்தது ஈண்டு எனைக்
காணிய ; நீ இது பின்னும் காண்டியால் !'

பொ :—'அணிகலம் பொருந்திய தோள்களையுடையாய் ! மிக உயர்ந்த அறக்கடவுள் போல்பவனும், நன்மைக்குணத்திற்கு உரையாணி போல்பவனுமாகிய பரதனை (நீ குறித்தபடி) அப்படி எண்ணல் தகுமோ? அவன் இங்கு வருவது என்னைக் காண்பதற்காகவே ; நீ இதனைப் பின்னும் காண்பாய் !'

கு :—செம்மையின் ஆணி என்பதற்கு, நன்மைக்குணமாகிய தேரை நிலை நிறுத்தும் அச்சாணி என்றும் பொருள்கொள்ளலாம். (48)

## பரதனும் தம்பியும் முதலில் வருதல்

**2511.** என்றன னிளவலை நோக்கி யேந்தலு
நின்றனன் பரதனு நிமிர்ந்த சேனையைப்
பின்றரு கென்றுதன் பிரிவில் காதலிற்
றன்றுணைத் தம்பியுந் தானு முந்தினான்.

**என்றனன், இளவலை நோக்கி, ஏந்தலும்**
**நின்றனன்; பரதனும், நிமிர்ந்த சேனையைப்**
**'பின் தருக' என்று, தன் பிரிவு இல் காதலின்**
**தன் துணைத் தம்பியும் தானும் முந்தினான்.**

பொ :—பெருமையிற் சிறந்தோனாகிய இராமன், தம்பியாகிய இலக்குவனைப் பார்த்து என்று (இவ்வாறு) கூறி, (பரதன் வருகையை எதிர் நோக்கி) நின்றான்; பரதனும் பெரிய சேனையைப் பிற்பட வருக என்று ஏவி, தன்னைவிட்டு என்றும் பிரியாத அன்பையுடைய தனக்குத் துணைவனான தம்பியாகிய சத்துருக்கனுடன் தான் முற்பட்டுவந்தான்.

கு :—'என்றனன்' என்றது முன் 2505 முதல் 2510 வரையுள்ள பாடல்களில் இராமன் கூறியவற்றைக் குறித்து நின்றது. (49)

## இராமன் பரதனை நோக்குதல்

**2512.** தொழுதுயர் கையினன் றுவண்ட மேனிய
னழுதழி கண்ணின னவல மீதென
வெழுதிய படிவமொத் தெய்து வான்றனை
முழுதுணர் சிந்தையான் முடிய நோக்கினான்.

**தொழுது உயர் கையினன், துவண்ட மேனியன்,**
**அழுது அழி கண்ணினன், 'அவலம் ஈது' என**
**எழுதிய படிவம் ஒத்து, எய்துவான்தனை,**
**முழுது உணர் சிந்தையான் முடிய நோக்கினான்.**

பொ :—தொழுதபடி உயர்த்திய கைகளையுடையவனும், மெலிந்த உடம்பையுடையவனும், (இடைவிடாது) அழுதலாற் பொலிவிழந்த கண்களையுடையவனும், துன்பமே இது என்று (சித்திரத்தில்) எழுதிக் காட்டிய வடிவம்போன்று வருபவனுமான பரதனை, எல்லாவற்றையும் அறிந்த திருவுள்ளத்தையுடைய இராமன் (முடிமுதல் அடியின்காறும்) முழுவதும் (நன்றாகப்) பார்த்தான். (50)

## இராமன் இலக்குவனிடம் கூறுதல்

2513. கார்ப்பொரு மேனியக்
கண்ணன் காட்டினு
ஞர்ப்புறு வரிசிலை
யிளைய வையநீ
தேர்ப்பெருந் தானையப்
பரதன் சீறிய
போர்ப்பெருங் கோலத்தைப்
பொருந்த நோக்கெனு.

கார்ப் பொரு மேனி அக் கண்ணன் காட்டினுன்,
'ஆர்ப்பு உறு வரி சிலை இளைய! ஐய! நீ.
தேர்ப் பெருந் தானை அப் பரதன் சீறிய
போர்ப் பெருங் கோலத்தைப் பொருந்த நோக்கு' எனு.

பொ :—(அவ்வாறு நோக்கியபின்) நீருண்ட மேகத்தை ஒத்த திருமேனியையுடைய இராமன் (இலக்குவனை நோக்கி) 'ஒலி மிக்க கட்டமைந்த வில்லையுடைய தம்பியே! அப்பா! தேர்களோடுங் கூடிய பெரிய படையையுடைய அப்பரதன் நம்மீது கோபித்து வந்த பெரிய போர்க்கோலத்தை நீ நன்ருகப் பார்' என்று கூறிக் காட்டினுன். (51)

## இலக்குவன் கண்ணீர் வடித்து நிற்றல்

2514. எல்லொடுங் கியமுகத் திளவ னின்றனன்
மல்லொடுங் கியபுயத் தவனை வைதெழுஞ்
சொல்லொடுஞ் சினத்தொடு முணர்வு சோர்தர
வில்லொடுங் கண்ணினீர் நிலத்து வீழவே.

எல் ஒடுங்கிய முகத்து இளவல் நின்றனன்,
மல் ஒடுங்கிய புயத்தவனை வைது எழும்
சொல்லொடும் சினத்தொடும் உணர்வு சோர்தர,
வில்லொடும் கண்ணின் நீர் நிலத்து வீழவே.

பொ :—(பரதனைப் பார்த்த இலக்குவன்) வலிமை குன்றிய தோள் களையுடையவனுன பரதனைப் பழித்துத் தோன்றிய சொற்களும், கோப மும், அறிவும் தளர்ந்தொழியவும், வில்லும் கண்ணீரும் மண்ணில் விழவும், பொலிவு மழுங்கிய முகத்துடனே நின்றனன்.

கு :—பரதனை ஏசியெழுந்த சொல்லும், சீறியெழுந்த சினமும் நீங்கவும், அறிவு அழியவும், வில் நழுவவும், கண்ணீர் வழியவும் இலக்குவன் வாடிய முகத்துடன் நின்ஞன் என்றவாறு. (52)

## தொழுதுகொண்டே பரதன் தோன்றுதல்

2515. கோதறத் தவஞ்செய்து குறிப்பி னெய்திய
நாதனைப் பிரிந்தன ணலத்து நீங்கினுள்
வேதனைத் திருமகண் மெலிகின் ருள்விடு
தூதெனப் பரதனுந் தொழுது தோன்றினுன்.

கோது அறத் தவம் செய்து குறிப்பின் எய்திய
நாதனைப் பிரிந்தனள், நலத்து நீங்கினுள்,
வேதனைத் திருமகள் மெலிகின்ருள் விடு
தூது எனப் பரதனும் தொழுது தோன்றினுன்.

பொ :—குற்றமில்லாதபடி தவஞ்செய்து (தன்) கருத்தின்படி அடையவேண்டிய தலைவனை இராமனை நீங்கி, (அதனுல்) எல்லா நன்மைகளையும் இழந்தவளாய்த் துன்பத்தால் வாடுகின்றவளான மண் மகளாகிய இராச்சிய லட்சுமி (அத்தலைவனிடம்) அனுப்பிய தூதனைப் போல், பரதனும் வணக்கம் செய்துகொண்டே (இராமனது) திருமுன் னர்த் தோற்றம்செய்தான். (53)

## பரதன் இராமனடியில் விழுதல்

2516. அறந்தனை நினைந்திலை
யருளை நீத்தனை
துறந்தனை முறைமையை
யென்னுஞ் சொல்லினுன்
மறந்தனன் மலரடி
வந்து வீழ்ந்தன
னிறந்தனன் ருதையை
யெதிர்கண் டென்னவே.

‘அறம்தனை நினைந்திலை! அருளை நீத்தனை!
துறந்தனை முறைமையை!’ என்னும் சொல்லினுன்,
மறந்தனன், மலர் அடி வந்து வீழ்ந்தனன்,
இறந்தனன் தாதையை எதிர்கண்டு என்னவே.

பொ :—(அவ்வாறு தோன்றிய பரதன்) '(உனக்குரிய கடமையாகிய) அறத்தை (நீ) நினைக்கவில்லை! அருளைக் களைந்துவிட்டாய்! உறவு முறையை உதறிவிட்டாய்!' என்று சொல்லிக்கொண்டே, இறந்துபோன தன் தந்தையை எதிரே பார்த்ததுபோல எண்ணி மெய் மறந்தவனாகி (இராமனுடைய) தாமரைமலர்போன்ற திருவடிகளில் சென்று வீழ்ந்தான். (54)

## இராமனும் அழுதல்

2517. உண்டுகொ லுயிரென வொடுங்கி னானுருக்
கண்டன னின்றனன் கண்ணன் கண்ணெனும்
புண்டரீ கம்பொழி புனல வன்சடா
மண்டல நிறைந்துபோய் வழிந்து சோரவே.

உண்டு கொல் உயிர் என ஒடுங்கினான் உருக்
கண்டனன், நின்றனன் கண்ணன், கண் எனும்
புண்டரீகம் பொழி புனல் அவன் சடா
மண்டலம் நிறைந்துபோய் வழிந்து சோரவே.

பொ :—உயிர் இருக்கிறதோ (இல்லையோ) என்று ஐயுறும்படி மெலிந்துள்ளவனான பரதனது வடிவத்தைப் பார்த்தவனாய்த் தன் கண்கள் என்கிற தாமரை மலர்கள் சொரிகின்ற நீர் (காலடியிற் கிடக்கும்) பரதனது சடைமுடியிற்போய் நிரம்பிப் பெருகியொழுக, இராமன் (கண்ணீர் பெருக்கி) நின்றான். (55)

## இராமன் பரதனைத் தழுவுதல்

2518. அயாவுயிர்த் தழுகணீ ரருவி மார்பிடை
யுயாவுறத் திருவுள முருகப் புல்லினா
னியாயமத் தனைக்குமோர் நிலய மாயினான்
றயாமுத லறத்தினைத் தழீஇய தென்னவே.

அயாவுயிர்த்து, அழு கண் நீர் அருவி மார்பிடை
உயாவுறத் திரு உளம் உருகப் புல்லினான்,
நியாயம் அத்தனைக்கும் ஓர் நிலயம் ஆயினான்,
தயா முதல் அறத்தினைத் தழீஇயது என்னவே.

பொ :—அருளாகிய முதல் அறத்தைத் தழுவினாற்போல, எல்லா நீதிகளுக்கும் ஓர் இருப்பிடமாகிய இராமன், பெருமூச்சுவிட்டு, அழுது சொரிகின்ற கண்ணீரானது அருவிபோல் மார்பினிடத்தில் பெருகி ஓட, மனம் கரைய(ப் பரதனை)த் தழுவினன்.

கு :—தயையாகிய முதல் அறமாகிய சினையைத் தழுவினாற்போலத் தழுவினன் என்க. 'தயாமூல தன்மம்' என அப்பர் தேவாரத்தில்வரும் சொற்றொடரும் ஈண்டுச் சிந்திக்கற்பாற்று. இராமன் அருளுக்கு நிலைக்களமாதல்போற் பரதன் அறத்திற்கு நிலைக்களம் ஆயினன் என்க. (56)

### இராமன் தந்தையின் நலத்தை வினவுதல்

2519. புல்லின னின்றவன் புனைந்த வேடத்தைப்
பன்முறை நோக்கினான் பலவு முன்னினா
னல்லலி னழுங்கினை யைய வாளுடை
மல்லுயர் தோளினன் வலிய னோவென்றான்.

புல்லினன் நின்று, அவன் புனைந்த வேடத்தைப்
பல் முறை நோக்கினான், பலவும் உன்னினான்;
'அல்லலின் அழுங்கினை, ஐய! ஆளுடை
மல் உயர் தோளினன் வலியனோ?' என்றான்.

பொ :—(இராமன் பரதனைத்) தழுவிநின்று, அப்பரதன் தரித்திருந்த கோலத்தைப் பல முறையும் உற்றுப்பார்த்துப் பலவாறு எண்ணியவனாய் 'ஐயனே! துன்பத்தில் மூழ்கியுள்ளாய்; ஆளுதலையுடைய வலிமையாலுயர்ந்த தோள்களையுடைய தந்தை திடமாயிருக்கின்றனனா?' என்று கேட்டான். (57)

### தந்தை இறந்ததைப் பரதன் கூறுதல்

2520. அரியவ னுரைசெயப் பரத னையநின்
பிரிவெனும் பிணியினா லென்னைப் பெற்றவக்
கரியவள் வரமெனுங் கால னாற்றனக்
குரியமெய்ந் நிறுவிப்போ யும்ப ரானென்றான்.

அரியவன் உரைசெயப் பரதன், 'ஐய! நின்
பிரிவு எனும் பிணியினால், என்னைப் பெற்ற அக்
கரியவள் வரம் எனும் காலனால், தனக்கு
உரிய மெய் நிறுவிப் போய், உம்பரான்' என்றான்.

போ :—(உணர்தற்கு) அரியவனான இராமன் (அவ்வாறு) சொல்லவும் (வினவவும்) பரதன், 'ஐயனே! உனது பிரிவு என்கிற நோயினாலும், என்னைப் பெற்றவளாகிய அந்தக் கொடியவளின் (கைகேயியின்) வரம் என்கிற கூற்றுவனாலும், தனக்கு இயல்பாகவுள்ள உண்மையை நிலைநிறுத்திச் சென்று (தந்தை) மேலுலகத்தை அடைந்துவிட்டான்' என்று கூறினான்.

கு :—அரியவன் என்பதை அரி அவன் எனப் பிரித்துத் திருமாலாகிய அவன் என்று பொருள்கூறுவாருமுளர். அரியவன் - பகைவரால் வெல்லுதற்கரியவன் என்றுமாம். கரியவள் என்னும் மூதேவிக்குரிய பெயர் மனம் இருண்டவள் அல்லது மனம் களங்கமுற்றவள் என்னும் பொருட்டாய்க் கைகேயியைக் குறித்தது. (58)

## இராமன் மயங்கி விழுதல்

2521. விண்ணிடை யடைந்தன
னென்ற வெய்யசொல்
புண்ணிடை யயிலெனச்
செவிபு காமுனங்
கண்ணொடு மனஞ்சுழல்
கறங்கு போலவாய்
மண்ணிடை விழுந்தனன்
வானி னும்பரான்.

'விண்ணிடை அடைந்தனன்' என்ற வெய்ய சொல்,
புண்ணிடை அயில் எனச் செவி புகாமுனம்,
கண்ணொடு மனம் சுழல் கறங்கு போல ஆய்,
மண்ணிடை விழுந்தனன் வானின் உம்பரான்.

போ :—'(தந்தை) வானுலகம் அடைந்தனன்' என்று பரதன் சொன்ன கொடிய மொழி, புண்ணில் (பாய்ந்த) வேல்போலக் காதில் நுழையுமுன்னே, வானுலகத்திற்கும் மேலான பரமபதத்திற்கு உரியவனான இராமன், கண்ணும் மனமும் சுற்றுகின்ற காற்றாடிபோற் சுழலப் பெற்றுத் தரையில் விழுந்தான்.

கு :—இராமன் வானின் உம்பரானாயினும் தந்தை விண்ணிடை அடைந்தனன் எனலும், தான்கொண்ட மனித வேடத்திற்குப் பொருந்த மண்ணிடை விழுந்தனன் என்றவாறு. பரதன் வேடத்தைக் கண்ணாற் கண்டு, இராமன் மனம் புண்பட்டிருந்தது. தந்தை இறந்தான் என்ற

சொல் அவன் செவிப் புகுந்து புண்ணில் வேல் நுழைந்ததுபோல் அவன் மனத்தை வருத்தியது. கறங்கு – காற்ருடி. வானின் உம்பரான் என்பதற்கு, தேவர்க்கு மேலவனுகிய இராமன் என்றும் பொருள்கொள்ளலாம். (59)

### தந்தை இறந்தமைக்கு இராமன் புலம்பல் 2522—2529

**2522.** இருநிலஞ் சேர்ந்தன னிறையு யிர்த்தில
னுருமினே யரவென வுணர்வு நீங்கினு
னருமையி னுயிர்வர வயாவு யிர்த்தகம்
பொருமினன் பன்முறை புலம்பி னுனரோ.

இரு நிலம் சேர்ந்தனன் இறை, உயிர்த்திலன்,
உரும் இனே அரவு என உணர்வு நீங்கினுன் ;
அருமையின் உயிர்வர அயாவுயிர்த்து, அகம்
பொருமினன் பல் முறை, புலம்பினுன் அரோ.

பொ :—(மேற்கூறியவாறு) பெரிய பூமியிலே விழுந்த தலைவனுகிய இராமன், மூச்சடங்கியவனுய், இடியினுல் வருந்துகிற பாம்புபோல அறிவிழந்தனன் ; (பின்) அரிய முயற்சியால் உயிர் மீண்டு, (உணர்வு வரப்) பெருமூச்சுவிட்டுக்கொண்டு, உள்ளம் பலமுறையும் விம்மலுறப் புலம்பத் தொடங்கினுன்.

கு :—இறை - (யாவர்க்கும்) தலைவனுன இராமன் ; சிறிதளவேனும் என்றும் பொருள்கொள்ளலாம். அங்ஙனமாயின் எழுவாய் வருவித்துரைக்க. உரும் இனே – இடியால் வருந்துகிற. அருமையின் உயிர்வர என்றது, அருகிருந்தோர் தண்ணீர் தெளித்தல், சூடுவரப் பண்ணுதல் முதலிய உதவிச் செயல்களால் மீண்டும் உணர்ச்சிபெற்று என்றவாறு. (60)

**2523.** ★ நந்தா விளக்கனைய
நாயகனே நானிலத்தோர்
தந்தாய் தனியறத்தின்
ருயே தயாநிலையே
யெந்தா யிகல்வேந்த
ரேறே யிறந்தனையே
யந்தோ வினிவாய்மைக்
காருளரே மற்றென்றுன்.

'நந்தா விளக்கு அனைய நாயகனே! நானிலத்தோர்
தந்தாய்! தனி அறத்தின் தாயே! தயாநிலையே!
எந்தாய்! இகல் வேந்தர் ஏறே! இறந்தனையே?
அந்தோ! இனி, வாய்மைக்கு ஆர் உளரே மற்று?' என்றான்.

பொ :—'அணையாத விளக்குப்போன்ற தலைவனே! பூமியிலுள்ளோர்க்குத் தந்தைபோல்பவனே! ஒப்பற்ற தருமத்திற்குத் தாயானவனே! அருளின் இருப்பிடமே! என்னுடைய தந்தையே! பகைமன்னர்களுக்கு ஆண்சிங்கம் போன்றவனே! (நீ) இறந்துவிட்டாயோ? ஐயோ! இனிமேல் சத்தியத்தைக் காப்பாற்றுவதற்கு அடுத்தபடியாக யார் இருக்கிறார்கள்?' என்று அழுதான்.

கு :—உலகிற்குத் தந்தைபோல்பவன் தயரதன் ஆதலின் 'நானிலத்தோர் தந்தாய்' என்னப்பட்டான். 'உலகுளோர் தந்தையே யனையவத் தகவினான்' (1129) என முன்னர் வந்ததும் காண்க. (61)

**2524.** சொற்பெற்ற நோன்பின்
றுறையோ னருள்வேண்டி
நற்பெற்ற வேள்வி
நவைநீங்க நீயியற்றி
யெற்பெற்று நீபெற்ற
தின்னுயிர்போய் நீங்கலோ
கொற்பெற்ற வெற்றிக்
கொலைபெற்ற கூர்வேலோய்.

'சொல் பெற்ற நோன்பின் துறையோன் அருள் வேண்டி,
நல் பெற்ற வேள்வி, நவை நீங்க, நீ இயற்றி,
என் பெற்று, நீ பெற்றது இன் உயிர் போய் நீங்கலோ?
கொல் பெற்ற வெற்றிக் கொலை பெற்ற கூர் வேலோய்!'

பொ :—'கொல்லன் உலையிற் செய்த வெற்றிபொருந்திய கொலைத்தொழிலையுடைய கூர்மையான வேற்படையையுடையவனே! புகழ்பெற்ற தவத்துறையில் தேர்ந்த கலைக்கோட்டுமுனிவனின் அருளைப் பெற்று, நன்மைபெற்ற யாகத்தைக் குற்றமில்லாமல் நீ செய்து, என்னை மகனாகப் பெற்று நீ அடைந்த பயன் இனிய உயிர் நீங்கிப் போதல் தானோ?'

கு :—கொற்பெற்ற என்பதைக் கொன்பெற்ற எனப் பிரித்து, (பகைவர்க்கு) அச்சம் (தருதலைப்) பெற்றதும் என்று பொருள் கூறலுமாம். (62)

2525. மன்னுயிர்க்கு நல்குரிமை
மண்பார நான்சுமக்கப்
பொன்னுயிர்க்குந் தாரோய்
பொறையுயிர்த்த வாறிதுவோ
வுன்னுயிர்க்குங் கூற்ரு
யுலகாள வுற்றேனே
மின்னுயிர்க்குந் தீவாய்
வெயிலுயிர்க்கும் வெள்வேலோய்.

'மன் உயிர்க்கு நல்கு உரிமை
மண் பாரம் நான் சுமக்கப்
பொன் உயிர்க்கும் தாரோய்!
பொறையுயிர்த்த ஆறு இதுவோ?
உன் உயிர்க்கும் கூற்ருய்
உலகு ஆள உற்றேனே?
மின் உயிர்க்கும் தீவாய்
வெயில் உயிர்க்கும் வெள்வேலோய்!'

பொ :—'பொன்போன்ற மகரந்தப் பொடியைச் சிந்தும் மாலையையுடையவனே! மின்னலும் ஒப்பாகாமையால் பெருமூச்செறிதற்குக் காரணமான கொடிய முனையையுடைய ஒளி பொருந்திய வெள்ளிய வேற்படையையுடையவனே! நிலைபெற்ற உயிர்களுக்கு அருள் செய்கின்ற உரிமையையுடைய பூபாரத்தை (அரசாட்சியை) நான் ஏற்றுக்கொள்ள, (நீ அப்பாரம் நீங்கி) இளைப்பாறிய விதம் இதுதானே? உனது உயிருக்கும் கூற்றுவனுகி உலகத்தை ஆளவந்தேனே?'

கு :—முன் 1460-ஆம் பாடலில் தசரதன் இராமனிடம்,

"ஐய சாலவு மலசினெ னரும்பெரு மூப்பு
மெய்ய தாயது பியலிடம் பெரும்பரம் விசித்த
தொய்யன் மாநிலச் சுமையுறு சிறைதுறந் தினியா
னுய்ய லாவதோர் நெறிபுக வுதவிட வேண்டும்"

என்று கூறிய கூற்றினை இராமன் இப்பொழுது நினைந்துகொண்டு இவ்வாறு புலம்பினன் என்க. மின்னலும் என உம்மை விரிக்க. கொலைத்தொழிலால் வேல் மேம்பட்டமையின் மின் அதற்கு ஒப்பாகாது உயிர்த்ததென்க. உயிர்த்தல்-பெருமூச்சு விடுதல். (63).

2526. எம்பரத்த தாக்கி
யரசுரிமை யிந்தியங்க
டம்பரத்தில் வீழாத்
தவமிழைத்த வாறிதுவோ
சம்பரப்பேர்த் தானவனைத்
தள்ளிச் சதமகற்கன்
றம்பரத்தி னீங்கா
வரசளித்த வாழியாய்.

'எம் பரத்தது ஆக்கி அரசுரிமை, இந்தியங்கள்
தம் பரத்தில் வீழாத் தவம் இழைத்த ஆறு இதுவோ?
சம்பரப் பேர்த் தானவனைத் தள்ளிச் சதமகற்கு, அன்று,
அம்பரத்தின் நீங்கா அரசு அளித்த ஆழியாய்!'

பொ :—'முன்னொருநாள் சம்பரன் என்னும் பெயர்கொண்ட அசுரனை நீக்கி, இந்திரனுக்கு வானுலகத்தின் நிலையான அரசாட்சியைக் கொடுத்தருளிய ஆணைச் சக்கரத்தையுடையவனே! (கோசல நாட்டு) அரசாட்சியை எங்கள் வசத்தில் ஒப்புவித்து, ஐம்பொறிகளின் வசத்தில் விழாதபடி தவம் செய்த முறை இதுதானோ?'

கு :—பரம் - வசம். இந்திரியம் இந்தியம் எனத் திரிந்தது. சதமகன் - நூறுயாகம் செய்தவன், இந்திரன். முன் 1462-ஆம் பாடலில் தசரதன் இராமனிடம்,

"மைந்த நங்குல மரபினின் மணிமுடி வேந்தர்
தந்த மக்களே கடைமுறை நெடுநிலந் தாங்க
வைந்தொ டாகிய முப்பகை மருங்கற வகற்றி
யுய்ந்து போயின ருழிநின் றெண்ணினு முலவார்"

என்று கூறிய கூற்றினை நினைந்து இராமன் இவ்வாறு புலம்பினன் என்க. (64)

2527. வேண்டுந் திறத்தாரும்
வேண்டா வரசாட்சி
பூண்டிவ் வுலகுக்
கிடர்கொடுத்த புல்லனேன்
மாண்டு முடிவதல்லான்
மாயா வுடம்பிதுகொண்
டாண்டு வருவதினி
யார்முகத்தே நோக்கவோ.

'வேண்டும் திறத்தாரும் வேண்டா அரசாட்சி
பூண்டு, இவ் உலகுக்கு இடர் கொடுத்த புல்லனேன்,
மாண்டு முடிவது அல்லால், மாயா உடம்பு இது கொண்டு
ஆண்டு வருவது இனி, யார் முகத்தே நோக்கவோ?'

பொ :—' (எதிலும் ஆசைகொண்டு எப்பொருளையும்) விரும்புகின்றவர்களும் விரும்பாத அரசாளும் பொறுப்பை மேற்கொண்டு, (அதன் விளைவாக நீ இறக்க) இந்த உலகம் முழுமைக்கும் துன்பத்தைத் தந்த புன்மையேனாகிய நான் (இப்பொழுதே) இறந்து தொலையாமல், சாகாத உடம்பாகிய இதனைச் சுமந்துகொண்டு அவ்விடத்து (அயோத்திக்கு) இனித் திரும்பிச் செல்வது யார் முகத்தைப் பார்க்கவோ?'

கு :—தசரதன் இறந்ததால் உலகம் முழுவதும் துயருறுகின்றதாதலால், உலகுக்கு இடர் கொடுத்த புல்லனேன் என்றான். (65)

**2528.** தேனடைந்த சோலைத்
திருநாடு கைவிட்டுக்
கானடைந்தே னென்னத்
தரியாது காவலநீ
வானடைந்தா யின்ன
மிருந்தேனான் வாழ்வுகந்தே
ஊனடைந்த தெவ்வ
ருயிரடைந்த வொள்வேலோய்.

'தேன் அடைந்த சோலைத்
திருநாடு கைவிட்டுக்
கான் அடைந்தேன் என்னத்
தரியாது, காவல! நீ
வான் அடைந்தாய்; இன்னம்
இருந்தேன் நான், வாழ்வு உகந்தே;
ஊன் அடைந்த தெவ்வர்
உயிர் அடைந்த ஒள் வேலோய்!'

பொ :—' பகைவர்களுடைய உடலின் தசை தன்கண் கூடிச் செறியும் வண்ணம் அவர்கள் உயிரைக் கவர்கின்ற ஒள்ளிய வேலையுடையவனே! தேன் பொருந்திய சோலைகள் சூழ்ந்த அழகிய நாட்டைத் துறந்து வனத்துப் புகுந்தேன் என்பதைக் கேட்டவுடன், அரசனே! நீ அதனைப் பொறுக்காமல் (உடனே) விண்ணுலகைச் சேர்ந்துவிட்டாய்; (அதனைக் கேட்ட) நான் வாழ்வதை விரும்பி இன்னமும் உயிரோடு இருக்கிறேன்'.

கு :—தான் கானடைந்ததற்காகத் தசரதன் உயிர்விட்டான் என்று அவன்கண்ணுள்ள பேரன்பினையும், அவன் உயிர்விட்டும் தான் உயிர் விடாததால் தன்கண்ணுள்ள அன்பின்மையையும் இராமன் இவ்வாறு எடுத்துக் கூறினன் என்க. (66)

2529. வண்மையு மானமும்
 வானவர்க்கும் பேர்க்ககிலாத்
திண்மையுஞ் செங்கோ
 னெறியுந் திறம்பாத
வுண்மையு மெல்லா
 முடனேகொண் டேகினையே
தண்மை தகைமதிக்கு
 மீந்த தனிக்குடையோய்.

'வண்மையும், மானமும், வானவர்க்கும் பேர்க்ககிலாத்
திண்மையும், செங்கோல் நெறியும், திறம்பாத
உண்மையும், எல்லாம் உடனே கொண்டு ஏகினையே!
தண்மை தகை மதிக்கும் ஈந்த தனிக்குடையோய்!'

பொ :—'அழகிய சந்திரனுக்கும், குளிர்ச்சியைக் கொடுக்கும்படியான ஒப்பற்ற குடையை உடையவனே! ஈகைக் குணத்தையும், மானத்தையும், தேவர்களுக்கும் நீக்கமுடியாத வலிமையையும், நீதி தவறாத அரசாட்சி முறைமையையும், பிறழாத சத்தியத்தையும், மற்றும் எல்லா நற்குணங்களையும் கூடவே எடுத்துக்கொண்டு (இவ்வுலகை விட்டுப்) போய்விட்டாயே!'

கு :—தகை - அழகு : 'தகைமாண் வழுதி' (புறநானூறு-59). (67)

இராமனைப் பலரும் தாங்கித் தேற்றுதல்

2530. என்றெடுத்துப் பற்பலவும்
 பன்னி யிடருழக்குங்
குன்றெடுத்த போலுங்
 குவவுத்தோட் கோளரியை
வன்றடக்கைத் தம்பியரும்
 வந்தடைந்த மன்னவருஞ்
சென்றெடுத்துத் தாங்கினர்
 மாவதிட்டன் றேற்றினன்.

என்று எடுத்துப் பற்பலவும் பன்னி, இடர் உழக்கும்
குன்று எடுத்த போலும் குவவுத் தோள் கோளரியை,
வன் தடக்கைத் தம்பியரும், வந்து அடைந்த மன்னவரும்,
சென்று எடுத்துத் தாங்கினர்; மா வதிட்டன் தேற்றினன்.

பொ :—என்று உரக்கப் பலவற்றையும் பன்முறை கூறி (அழுது) துயருற்று வருந்திய, மலைகள் உருவெடுத்தாற்போன்ற திரண்ட தோள்களையுடைய சிங்கம் போன்றவனை இராமனை, வலிய பெரிய கைகளையுடைய தம்பிமார் மூவரும் (அப்போது அங்கு) வந்து சேர்ந்த மன்னர்களும் அருகிற்போய் எடுத்து அணைத்தார்கள்; பெருமை பொருந்திய வசிட்ட முனிவன் தேறுதல் கூறுபவனானான்.

கு :—இதனால், இராமன் புலம்பிக்கொண்டிருக்கையில் மன்னர்களிற் சிலரும் வசிட்டனும் அவ்விடம் வந்துவிட்டார்கள் என்பது தெரிய வரும். (68)

### முனிவர் மன்னர் முதலியோர் வருதல்

2531. பன்னரிய நோன்பிற்
பரத்துவனே யாதியாம்
பின்னுசடை யோரும்
பேருலக மோரேழின்
மன்னவரு மந்திரிய
ரெல்லாரும் வந்தடைந்தார்
தன்னுரிமைச் சேனைத்
தலைவோருந் தாமடைந்தார்.

பன் அரிய நோன்பின் பரத்துவனே ஆதியாம்
பின்னு சடையோரும், பேர் உலகம் ஓர் ஏழின்
மன்னவரும், மந்திரியர் எல்லாரும், வந்து அடைந்தார்;
தன் உரிமைச் சேனைத் தலைவோரும் தாம் அடைந்தார்.

பொ :—சொல்லுதற்கரிய தவத்தினையுடைய பரத்துவாசன் முதலான திரித்துவிட்ட சடையையுடைய முனிவர்களும், ஏழுமண்டலங்களாக (தீவுகளாக) வுள்ள பெரிய வுலகிலுள்ள அரசர்களும், எல்லா மந்திரிகளும் (அங்கு) வந்து சேர்ந்தார்கள்; இராமனிடத்துப் பற்றுடைய சேனைத் தலைவர்களும் வந்து சேர்ந்தார்கள்.

கு :—பன்ன அரிய என்பது பன்னரிய எனச் செய்யுள் விகாரத்தால் தொக்கது. தன் என்பது இங்கே இராமனைச் சுட்டி நின்றது.

உரிமை – பற்று. மன்னர்களிற் சிலரும், வசிட்டனும் வந்தமை இதற்கு முந்திய பாடலால் பெறப்பட்டமையின், எஞ்சிய மன்னரும், பரத்துவன் முதலிய முனிவரும், சேனைத் தலைவரும் வந்தமை இங்கே கூறப்பட்டது பரத்துவன் பரதனுடன் வரவில்லை என்று வான்மீகம் கூறும். (69)

வசிட்டன் பேசத் தொடங்குதல்

2532. மற்றும் வரற்பால
ரெல்லாரும் வந்தடைந்து
சுற்று மிருந்த
வமைதியினிற் றுன்புழக்குங்
கொற்றக் குரிசின்
முகநோக்கிக் கோமலரோன்
பெற்ற பெருமைத்
தவமுனிவன் பேசுவான்.

மற்றும் வரற்பாலர் எல்லாரும் வந்து அடைந்து,
சுற்றும் இருந்த அமைதியினில், துன்பு உழக்கும்
கொற்றக் குரிசில் முகம் நோக்கிக் கோ மலரோன்
பெற்ற பெருமைத் தவ முனிவன் பேசுவான்.

பொ :—இன்னும் வரக்கூடியவர்கள் எல்லாரும் வந்து சேர்ந்து சுற்றிலுமிருந்தபொழுது, துன்புற்று வருந்துகின்ற வெற்றித் தலைவனாகிய இராமனுடைய முகத்தைப் பார்த்து (எல்லா மலர்களினும்) சிறந்த மலராகிய தாமரையில் வீற்றிருக்கும் நான்முகன் பெற்ற மகனாகிய பெருமையோடு கூடிய தவத்தைக்கொண்ட முனிவனான வசிட்டன் கூறலுற்றான்.

கு :—பூவினுக் கருங்கலம் பொங்குதாமரையாதலின், அது கோமலர் என்னப்பட்டது. பிரமனது நகத்திற் பிறந்தவனாதலின் வசிட்டன் 'கோமலரோன் பெற்ற பெருமைத் தவமுனிவன்' என்னப்பட்டான். (70)

வசிட்டன் மரணத்தின் உண்மையைக் கூறுதல் 2533—2539

2533. துறத்தலு நல்லறத் துறையு மல்லது
☆ புறத்தொரு துணையிலை பொருந்து மன்னுயிர்க்
கிறத்தலும் பிறத்தலு மியற்கை யென்பதை
மறத்தியோ மறைகளின் வரம்பு கண்டநீ.

"'துறத்தலும் நல் அறத் துறையும் அல்லது,
புறத்து ஒரு துணை இலே, பொருந்தும் மன்னுயிர்க்கு,
இறத்தலும் பிறத்தலும் இயற்கை' என்பதை
மறத்தியோ, மறைகளின் வரம்பு கண்ட நீ?"

பொ :—" '(இவ்வுலகை) அடைந்துள்ள நிலேபேறுடைய உயிர்களுக்குச் சாதலும், தோன்றுதலும் இயல்பாகும்; (ஆதலால்) உலக இன்பங்களேத் துறத்தலும், நல்ல அறநெறியின்கண்ணே நிற்றலும் அல்லது வேறு ஒரு பற்றுக்கோடும் கிடையாது' என்ற (நூல்களிற் சொல்லப்படும்) உண்மையை, வேதங்களின் எல்லேயை அளவிட்டறிந்த நீ மறந்துவிட்டாயோ ?"

கு :—'சாதலும் பிறத்த ருனுந் தம்வினேப் பயத்தினுகும், ஆதலு மழிவு மெல்லா மவைபொருட் கியல்பு கண்டாய்' (சீவக சிந்தாமணி-269) என்பது ஒப்புநோக்கத்தகும். (71)

**2534.** உண்மையில் பிறவிக ளுலப்பில் கோடிக்
டண்மையில் வெம்மையிற் றழுவி னவ்வெனும்
வண்மையை நோக்கிய வலிய கூற்றின்பாற்
கண்மையு முளதெனக் கருத லாகுமோ.

"உண்மை இல் பிறவிகள் உலப்பு இல் கோடிகள்
தண்மையில் வெம்மையில் தழுவின எனும்
வண்மையை நோக்கிய, வலிய கூற்றின்பால்
கண்மையும் உளது எனக் கருதல் ஆகுமோ?"

பொ :—" (உயிர்கள்) அளவில்லாத கோடிக்கணக்கான நிலேயுதல் இல்லாத பிறப்புக்களே இன்பத்திலும், துன்பத்திலுமாகத் தழுவுகின்றன என்று (நூல்களில்) மிகுதியாகக் கூறிய தன்மையை அறிந்தபின், (அதற்கியைய உயிரையும் உடலேயும் பிரிக்கும்) வல்லமையையுடைய கூற்றுவனிடத்துக் கண்ணேட்டம் (இரக்கம்) உள்ளதென்று எண்ணுதலும் கூடுமோ ?"

கு :—கண்மை – கண்ணேட்டம். (பிங்கலந்தை). காலனேக் 'கண்ணிலி' என்று புறநானூறு கூறும். (புறம்–240). " தவத்துறை மாக்கள் மிகப் பெருஞ் செல்வர், ஈற்றிளம் பெண்டி ராற்ருப் பாலகர், முதியோ ரென்னு னிளேயோ ரென்னுன், கொடுந்தொழிலாளன் கொன்றனன் குவிப்ப " (மணிமேகலே–6-97-100). (72)

2535. பெறுவதன் முன்னுயிர் பிரிதல் காண்டியால்
மறுவறு கற்பினில் வையம் யாவையு
மறுவதி னுயிர மாண்டு மாண்டவ
னிறுவது கண்டவற் கிரங்கல் வேண்டுமோ.

"பெறுவதன் முன் உயிர் பிரிதல் காண்டியால்,
மறு அறு கற்பினில் வையம் யாவையும்
அறுவதினுயிரம் ஆண்டும் ஆண்டவன்
இறுவது கண்டு, அவற்கு இரங்கல் வேண்டுமோ?"

பொ :—"(தாய்) பெறுவதற்கு முன்னரே (குழந்தை) உயிர்நீங்கி விடுவதைப் பார்க்கிறாய்; குற்றமில்லாத கற்பின் தன்மை அமையும்படி பூமி முழுவதையும் அறுபதினுயிரம் ஆண்டளவும் அரசாட்சி புரிந்தவனாகிய தசரதன் இறந்தது தெரிந்து, அவனுக்காக வருந்துதல் தக்கதோ?"

கு :—பூமிக்குக் கற்பு அமைவது, பல அரசர்களுக்கும் பொதுவாகாமல், தசரதப் பேரரசனுக்கே உரியதாயிருத்தல். (73)

2536. சீலமுந் தருமமுஞ் சிதைவில் செய்கையாய்
சூலமுந் திகிரியுஞ் சொல்லுந் தாங்கிய
மூலம்வந் துதவிய மூவர்க் காயினுங்
காலமென் றொருவலை கடக்க லாகுமோ.

"சீலமும், தருமமும் சிதைவு இல் செய்கையாய்!
சூலமும், திகிரியும், சொல்லும் தாங்கிய,
மூலம் வந்து உதவிய, மூவர்க்கு ஆயினும்,
காலம் என்று ஒரு வலை கடக்கல் ஆகுமோ?"

பொ :—"நல்லொழுக்கமும், அறமும் கெடாதபடி செயலாற்றுபவனே! முதற்பொருளாயுள்ள பரம்பொருள் பொருந்தி அருள்செய்கிற சூலப்படையையும், சக்கரத்தையும், வேத நூல்களையும் தரித்த (உருத்திரன், திருமால், பிரமன் என்னும்) மும்மூர்த்திகளுக்கேயானாலும், காலம் எனப்படும் வலையினின்றும் தப்புதல் கூடுமோ? (கூடாது)."

கு :—சொல் என்பதற்குக் கலைமகள் என்றும் பொருள் கூறலாம். (74)

2537. கண்முதற் காட்சிய கரையி னீளத்த
வுண்முதற் பொருட்கெலா மூற்ற மாவன
மண்முதற் பூதங்கண் மாயு மென்றபோ
தெண்முத லுயிர்க்குநீ யிரங்கல் வேண்டுமோ.

"கண் முதல் காட்சிய, கரை இல் நீளத்த,
உள் முதல் பொருட்கு எலாம் ஊற்றம் ஆவன,
மண் முதல் பூதங்கள் மாயும் என்ற போது,
எண் முதல் உயிர்க்கு நீ இரங்கல் வேண்டுமோ?"

பொ :—"கண் முதலிய பொறிகட்கு அறியப்படுவனவாய்த் தோன்றுவனவும், எல்லையில்லாத நீளத்தையுடையனவும், இவ்வுலகினுள் காணப்படும் தலையாய எல்லாப் பொருள்கட்கும் பற்றுக்கோடானவுமான மண் முதலாக எண்ணப்படும் (ஐந்து) பூதங்களுமே அழிந்து போகும் என்று சொல்லப்படும்போது, இவ்வளவு என்று எண்ணி முதலிலேயே வரையறுக்கப்பட்ட ஆயுளையுடைய ஓர் உயிர்க்கு நீ வருந்துதல் தகுமோ?"

கு :—எல்லாப் பொருள்களும், ஐந்து பூதங்களின் சேர்க்கை என்பது முதலிரண்டு அடிகளிற் கூறப்பட்டது. (75)

2538. புண்ணிய நறுநெயிற் பொருவில் காலமாந்
திண்ணிய திரியினில் விதியென் றீயினி
லெண்ணிய விளக்கவை யிரண்டு மெஞ்சினு
லண்ணலே யவிவதற் கையம் யாவதோ.

"புண்ணிய நறு நெயில், பொரு இல் காலம் ஆம்
திண்ணிய திரியினில், விதி என் தீயினில்,
எண்ணிய விளக்கு அவை இரண்டும் எஞ்சினுல்,
அண்ணலே! அவிவதற்கு ஐயம் யாவதோ?"

பொ :—"சிறந்தவனே! நல்வினை என்னப்படும் மணமுடைய நெய்யில், ஒப்பில்லாத காலம் என்னப்படும் வலிய திரியினில், ஊழ் என்னப்படும் தீயால் (ஒளிவிடும் உயிர்வாழ்வு என்று) கருதப்படும், விளக்கு, முன்னர்க் கூறிய நெய்யும் திரியும் என்னும் இரண்டும் நீங்கினுல், அணைந்துவிடுவதற்கு ஐயமும் ஏதோ?" (ஐயம் இல்லை என்றவாறு.)

கு :—புண்ணியம் இருப்பினும், வரைந்திட்ட காலத்தையன்றி உயிர்வாழ்தல் கூடாமையின், காலத்தைத் திரியாக உருவகித்தார். (76)

2539. இவ்வுல கத்தினு மிடரு ளேகிடந்
தவ்வுல கத்தினு நரகி லாழ்ந்துதம்
வெவ்வினை துய்ப்பன விரிந்த யோனிக
ளெவ்வள விற்செல வெண்ண லாகுமோ.

"இவ் உலகத்தினும் இடர் உளே கிடந்து,
அவ் உலகத்தினும் நரகில் ஆழ்ந்து, தம்
வெவ் வினை துய்ப்பன விரிந்த யோனிகள்,
எவ் அளவில் செல எண்ணல் ஆகுமோ?"

பொ :—"(உயிர் இம்மையிலும் துன்பத்திலேயே அழுந்தியிருந்து, மறுமையிலும் நரகத்தில் அழுந்தித் தம்முடைய கொடிய தீவினைப் பயனை நுகர்வதற்காகவுள்ள பல பிறப்பு வகைகள் எந்தக் கணக்கில் அடங்க எண்ணுதல் கூடும்?"

கு :—உயிர், தோன்ரு வெழுவாய். இவ்வுலகம், அவ்வுலகம் என்பன இம்மை மறுமைகளைக் குறித்தன. யோனிகள் - பிறப்பு வகைகள். (77)

தயரதன் விண்டுவின் உலகினை அடைந்தான் எனல்

2540. உண்டுகொ லிதுவல துதவி நீசெய்வ
தெண்டகு குணத்தினய் தாதை யென்றலாற்
புண்டரீ கத்தனி முதற்கும் போக்கரு
விண்டுவி னுலகிடை விளங்கி னனரோ.

"உண்டுகொல் இது அலது உதவி நீ செய்வது?
எண் தகு குணத்தினய்! தாதை என்றலால்,
புண்டரீகத் தனி முதற்கும் போக்கு அரு
விண்டுவின் உலகிடை விளங்கினன் அரோ!"

பொ :—"(யாவராலும்) நன்கு மதிக்கத்தக்க நற்குணங்களை யுடையவனே! (தசரதன் உனக்குத்) தந்தை யென்ற காரணத்தால், தாமரை மலரில் தோன்றிய ஒப்பற்ற படைப்புக் கடவுளான நான்முக னுக்கும் செல்லுதற்கரிய விட்டுணு லோகத்தில் (சென்று) விளக்கமடைந் தான்; இதுவன்றி நீ (தந்தைக்குச்) செய்யத்தக்க உதவி (வேறு) உண்டோ?"

கு :—எண்தகு குணம்-பலகாலும் நினைத்து இன்புறுதற்குரிய திருக் கலியாண குணங்கள் எனலுமாம். இராமன் தந்தை என்ற ஒன்றுமே தசரதனுக்குப் பரமபதத்தை அளித்துவிட்டது என்றவாறு. (78)

தந்தைக்கு நீர்க்கடன் செலுத்தக் கூறுதல் 2541—2542

2541. ஐயநீ யாதொன்று மவலிப் பாயலை
யுய்திற மவற்கினி யிதனி னூங்குண்டோ
செய்வன வரன்முறை திருத்திச் சேந்தநின்
கையினு லொழுக்குதி கடனெ லாமென்ருன்.

"ஐய! நீ யாது ஒன்றும் அவலிப்பாய் அலை;
உய் திறம் அவற்கு இனி இதனின் ஊங்கு உண்டோ?
செய்வன வரன் முறை திருத்திச் சேந்த நின்
கையினுல் ஒழுக்குதி கடன் எலாம்" என்ருன்.

பொ:—"ஐயனே! நீ எதுவும் கவலைப்படவேண்டாம்; (நூல்களிற் சொல்லிய) ஒழுங்கு முறைப்படி (நீ தந்தைக்குச்) செய்யவேண்டிய கடன்களைச் செவ்விதாகச் செய்து, உன்னுடைய சிவந்த கையால் நீர்க்கடன் எல்லாவற்றையும் செலுத்துவாயாக; (தசரதனை) அவனுக்கு ஈடேறும் வகை இதைவிட மேலாக யாதுதான் உண்டு?" என்று கூறினுன்.

கு:—'செய்வன வரன்முறை திருத்திச் சேந்த நின் கையினுல்' என்பதற்கு, செய்யவேண்டுவனவற்றையெல்லாம் ஒழுங்காக நன்முறையிற் செய்து செய்து சிவந்துபோயிருக்கும் உன்னுடைய கைகளால், என்றும் பொருள் கூறலாம். கடன் என்றது இங்கே நீர்க்கடனை: அதாவது, தருப்பணம். (79)

2542. விண்ணுநீர் மொக்குளின் விளியும் யாக்கையை
யெண்ணிநீ யழுங்குத லிழுதைப் பாலதால்
கண்ணினீ ருகுத்தலிற் கண்ட தில்லைபோய்
மண்ணுநீ ருகுத்திநீ மலர்க்கை யாலென்ருன்.

"விண்ணு நீர் மொக்குளின் விளியும் யாக்கையை
எண்ணி நீ அழுங்குதல் இழுதைப் பாலதால்;
கண்ணின் நீர் உகுத்தலின் கண்டது இல்லை; போய்
மண்ணு நீர் உகுத்தி, நீ, மலர்க்கையால்" என்ருன்.

பொ:—"வானத்திலிருந்து விழும் நீரில் தோன்றுகிற குமிழி போன்று அழிந்துபோகிற உடலைக் குறித்து நீ சிந்தித்து வருந்துதல் அறியாமையாகும்; கண்ணீரைச் சிந்துவதால் ஒரு பயனும் ஏற்படப் போவதில்லை; நீ சென்று உன்னுடைய தாமரைப்பூப்போன்ற கைகளால்

தூய்மைப்படுத்தும் தருப்பண நீரைச் சொரிவாயாக'' என்று (மீண்டும்) கூறினன்.

கு :—இழுதை - அறிவின்மை. 'கண்ணினீருகுத்தலிற் கண்ட தில்லை' என்பதோடு 'இருந்தழுதியாவருய்ந்தார்' (509) என்ற சீவக சிந்தாமணியடியையும் 'ஆண்டாண்டுதோறு மழுதுபுரண்டாலு, மாண்டார் வருவரோ மாநிலத்தீர்' என்ற மூதுரை வாக்கையும் ஒப்பிடலாம். மண்ணுநீர் – தருப்பணநீர். (80)

## இராமன் நீர்க்கடன் செலுத்துதல் 2543—2544

**2543.** என்றபி னேந்தலை
யேந்தி வேந்தரும்
பொன்றிணிந் தனசடைப்
புனித னோடும்போய்ச்
சென்றனர் செறிதிரைப்
புனலிற் செய்கென
நின்றன ரிராமனு
நெறியை நோக்கினன்.

என்ற பின், ஏந்தலை ஏந்தி, வேந்தரும்,
பொன் திணிந்து அன சடைப் புனிதனோடும், போய்ச்
சென்றனர் செறி திரைப் புனலில்; 'செய்க' என.
நின்றனர் இராமனும், நெறியை நோக்கினன்.

பொ :—என்று (வசிட்டன்) கூறியபின், தலைவனான இராமனைத் தாங்கியவண்ணம், மன்னர்கள், தங்கத்தைத் திணித்து வைத்தது போன்ற சடையையுடைய தூயவனான வசிட்டனோடும்போய், அலைகளை மிகவும் உடைய நீர்த்துறையை அடைந்தனர்; '(நீர்க்கடனைச்) செய்வாயாக' என்று (வசிட்டன்) கூறவும், (அது செய்யும்) முறையை அறிந்தவனாய் இராமனும் (ஒருப்பட்டு) நின்றான்.

கு :—செம்பொன்னின் நிறத்தைக்கொண்ட செஞ்சடையாதலின் பொன்றிணிந்தன சடை என்றார். (81)

**2544.** புக்கனன் புனலினின் முழுகிப் போந்தனன்
றக்கநன் மறையவன் சடங்கு காட்டத்தான்

முக்கையி னீர்விதி முறையி னீந்தன
னொக்கநின் றுயிர்தொறு முணர்வு நல்குவான்.

புக்கனன் புனலினில், முழுகிப் போந்தனன்.
தக்க நல் மறையவன் சடங்கு காட்டத் தான்
முக்கையின் நீர் விதி முறையின் ஈந்தனன்,
ஒக்க நின்று உயிர் தொறும் உணர்வு நல்குவான்.

பொ :—ஒவ்வோர், உயிரினுள்ளும் ஒரே தன்மையாக அமைந்து அறிவை அருளுபவனான (திருமாலின் அமிசமான) இராமன் நீரில் இறங்கி நீராடி வந்து, தகுதி வாய்ந்த நல்ல வேதங்களையுணர்ந்தவனாகிய வசிட்டன் கிரியை முறைகளைத் தெரிவிக்க, அவன் தெரிவித்த ஒழுங்குப்படி கைகளால் மூன்றுமுறை தருப்பண நீரை எடுத்து (இறந்த தன் தந்தைக்கு)க் கொடுத்தான்.

கு :—எல்லா உயிரினுள்ளும் ஒக்க இருந்து உணர்வைக் காட்டி நிற்கும் கடவுளின் அவதாரமான இராமனுக்கு, அவன்கொண்ட மானுட வேடத்திற்கு ஏற்ப, நல்ல மறையவனான வசிட்டன் நீத்தார் கடனுக்குரிய கிரியைகளை முன்னின்று காட்டினன் என்றவாறு. (82).

## இராமன் பன்னசாலைக்குத் திரும்புதல்

**2545.** ஆனவன் பிறவுள யாவு மாற்றிப்பின்
மானமந் திரத்தவர் மன்னர் மாதவ
ரேனையர் பிறர்களுஞ் சுற்ற வேகினன்
சானகி யிருந்தவச் சாலை யெய்தினான்.

ஆனவன் பிற உள யாவும் ஆற்றிப் பின்
மான மந்திரத்தவர், மன்னர், மாதவர்,
ஏனையர் பிறர்களும், சுற்ற ஏகினன்,
சானகி இருந்த அச் சாலை எய்தினான்.

பொ :—(அவ்வாறு தருப்பணஞ் செய்தவன்) ஆன இராமன், மற்றுமுள்ள எல்லாக் கிரியைகளையும் செய்து, பின்னர், பெருமையையுடைய மந்திரிகளும், அரசர்களும், முனிவர்களும், மற்றையோர் எல்லாரும் சூழச்சென்று, சீதை தங்கியிருந்த (தன்னுடைய) பன்னசாலையை அடைந்தான்.

கு :—இராமன் நீர்த்துறைக்குத் தருப்பணம் செய்யச்சென்றபோது, சீதையும் உடன் சென்றதாக வான்மீகத்திற் காணப்படுகிறது. (83).

பரதன் சீதையின் காலில் விழுந்து அழுதல் 2546-2547

**2546.** எய்திய வேலையிற் றமிய ளெய்திய
தையலை நோக்கினன் சாலை நோக்கினுன்
கைகளிற் கண்மலர் புடைத்துக் கான்மிசை
யையனப் பரதன்வீழ்ந் தரற்றி னுனரோ.

எய்திய வேலையில், தமியள் எய்திய
தையலை நோக்கினன், சாலை நோக்கினுன்,
கைகளின் கண்மலர் புடைத்துக் கால்மிசை,
ஐயன், அப்பரதன், வீழ்ந்து அரற்றினுன் அரோ.

பொ :—(அவ்வாறு அப் பன்னசாலையை) அடைந்த அளவில், தன்னந்தனியாக (வெளியில்) வந்த சீதையைப் பார்த்து, அப் பன்ன சாலையையும் பார்த்து, சிறப்புடையவனுன அந்தப் பரதன், தாமரைமலர் போன்ற தன் கண்களைக் கைகளால் அடித்துக்கொண்டு (சீதையின்) காலடியில் விழுந்து கதறினுன்.

கு :—பாங்கியர் பலருடன் அரண்மனையில் வாழவேண்டிய சீதை தமியளாய் அச்சாலையில் வாழ்வதைக் கண்ட பரதன் அக்காட்சியைக் கண்ட கண்களைப் புடைத்துக்கொண்டு துயருற்று அழுதான் என்க. (84)

**2547.** வெங்துயர் தொடர்தர விம்மி விம்மிநீ
ருந்திய நிரந்தர மூற்று மாற்றில
சிந்திய குரிசிலச் செம்மல் சேந்தக
ணிந்தியங் களிலெறி கடலுண் டென்னவே.

வெந்துயர் தொடர்தர, விம்மி விம்மி, நீர்
உந்திய நிரந்தரம், ஊற்று மாற்றில
சிந்திய, குரிசில் அச் செம்மல் சேந்த கண்,
இந்தியங்களில் எறி கடல் உண்டு என்னவே.

பொ :—(கண்களாகிய) பொறிகளில் அலைவீசுகின்ற கடல் உள்ளது என்று சொல்லும்படி, பெருமையிற் சிறந்த தலைமைக் குணம் படைத்த அந்தப் பரதன் கொடிய துன்பம் பற்றுதலால் மிகப் புலம்பவும் (அவனுடைய) சிவந்த கண்கள் நீரை இடைவிடாமல் கொட்டினவாய், சுரத்தல் மாருதனவாகிக் கண்ணீரை ஊற்றிக்கொண்டேயிருந்தன.

கு :—கண் சிந்திய எனக் கூட்டி முடிக்க. இந்தியங்கள்-பொறிகள்: இங்கே கண்கள். (85)

## இராமன் தந்தை இறந்தமை சீதைக்குக் கூறல்

**2548.** அங்நெடுங் துயருறு மரிய வீரனைத்
தன்னெடுங் தடக்கையா லிராமன் ருங்கிஞ
னன்னெடுங் கூந்தலை நோக்கி நாயக
னென்னெடும் பிரிவினுற் றுஞ்சினு னென்ருன்.

அந்நெடும் துயர் உறும் அரிய வீரனைத்
தன் நெடும் தடக்கையால் இராமன் தாங்கினன்,
நல் நெடும் கூந்தலை நோக்கி, 'நாயகன்,
என் நெடும் பிரிவினுல், துஞ்சினன்' என்ருன்.

பொ :—அப்படிப்பட்ட பெருந்துன்பத்தையடைந்த (பகைவரால் வெல்லுதற்கு) அருமையான வீரத்தையுடையவனுன பரதனை இராமன் தன்னுடைய நீண்ட பெரிய கைகளால் தாங்கிப் பிடித்துக்கொண்டு, அழகிய நீண்ட கூந்தலையுடையவளாகிய சீதையைப் பார்த்து, "(நம்) தலைவனுன தசரத மன்னன் என்னுடைய நீண்ட பிரிவுத்துயரால் இறந்தான்" என்று கூறினன்.

கு :—நன்னெடுங் கூந்தலை - அழகிய நீண்ட கூந்தலையுடையவளாகிய சீதையை. (86)

## தயரதன் மாண்டது கேட்டுச் சீதை துயருறல் 2549–2550

**2549.** துண்ணெனு நெஞ்சினு டுளங்கி ளுடுணைக்
கண்ணெனுங் கடனெடுங் கலுழி கான்றிட
மண்ணெனுஞ் செவிலிமேல் வைத்த கையினுள்
பண்ணெனுங் கிளவியாற் பன்னி யேங்கினுள்.

துண்ணெனும் நெஞ்சினுள் துளங்கினுள், துணைக்
கண் எனும் கடல் நெடும் கலுழி கான்றிட,
மண் எனும் செவிலிமேல் வைத்த கையினுள்,
பண் எனும் கிளவியால் பன்னி, ஏங்கினுள்.

பொ :—(அதுகேட்ட சீதை) திடுக்கிட்ட மனமுடையவளாய் நடுங்கித் தன்னுடைய இரண்டு கண் என்னும் கடலும் பெரும் வெள்ளத்தைச்

சொரிந்திடப் பூமி என்னும் செவிலித்தாயின்மேல் வைத்த கைகளை யுடையவளாய், இசைபோல் இனிய சொற்களால் பலவாறு சொல்லிப் புலம்பினுள்.

கு :—கலுழி – நீர்ப்பெருக்கு. சீதை மண்ணிற் பிறந்தவளாதலின் பூமி செவிலி என்னப்பட்டது. (87)

2550. கன்னகு திரள்புயக் கணவன் பின்செல
நன்னக ரொத்தது நடந்த கானமு
மன்னவன் றுஞ்சின னென்ற மாற்றத்தா
லன்னமுந் துயர்க்கட லடிவைத் தாளரோ.

கல் நகு திரள் புயக் கணவன் பின் செல,
நல் நகர் ஒத்தது நடந்த கானமும்;
'மன்னவன் துஞ்சினன்' என்ற மாற்றத்தால்,
அன்னமும் துயர்க்கடல் அடி வைத்தாள், அரோ!

பொ :—மலையை (நோக்கி ஒவ்வாமை கருதி) நகுகின்ற திரண்ட தோள்களையுடைய தன் கணவனுகிய இராமனது பின்னே செல்லுதலால், தான் நடந்துசென்ற காடும் (சீதைக்கு வருத்தந்தராமையால்) நல்ல நகரமாகிய அயோத்திபோலவே இருந்தது; அரசனுன தசரதன் இறந்தான் என்ற சொல்லினுல் அன்னம்போன்றவளான சீதை துன்ப மாகிய கடலில் கால் வைத்தாள்.

கு :—நாட்டைத் துறந்து காட்டினுள் நடந்தபோதும், தன் அன்புக் கணவனுடன் சென்றதால் சீதை துன்பமே அறியாதிருந்தாள். தசரதன் இறந்ததைக் கேட்டுத்தான் முதன்முதலாகத் துன்பம் என்ருல் என்ன என்பதை அறியலானுள். இனி அவளுக்கு வர இருக்கும் துன்பங்கள் கடல்போன்றனவாகலின் துயர்க்கடல் என்ருர். இது துன்பம் நுகரத் தொடங்கும் முதனிலையாதலில் 'அடி வைத்தாள்' என்ருர். நீரில் வதியும் அன்னத்தைத் துயர்க்கடலில் நெடுநாள் உறையப்போகும் சீதைக்கு ஒப்பிட்டது குறித்துணரத்தகும். (88)

## சீதை நீராடி மீளுதல்

2551. ஆயவ டன்னைநேர்ந் தங்கை யேந்தினர்
தாயரின் முனிவர்தந் தருமப் பன்னியர்
தூயநீ ராட்டினர் துயர நீக்கினர்
நாயகற் சேர்த்தினர் நவையு ணீங்கினுர்.

ஆயவள் தன்னை நேர்ந்து அங்கை ஏந்தினர்,
தாயரின், முனிவர் தம் தருமப் பன்னியர்,
தூய நீர் ஆட்டினர், துயரம் நீக்கினர்,
நாயகற் சேர்த்தினர், நவையுள் நீங்கினர்.

பொ :—(அப்பொழுது) குற்றமற்றவர்களான, முனிவர்களுடைய மனைவிமார், (பெற்ற) தாயரைப்போல (அன்புள்ளவராய்) அருகிற் சென்று, அச்சீதையைத் தம் அழகிய கைகளால் தாங்கிய வண்ணம் கொண்டுசென்று, தூய கங்கை நீரிலே குளிப்பாட்டி, அவள் வருத்தத்தைத் தணித்து, அவள் கணவனுன இராமனிடத்திலே கொண்டு சேர்த்தனர். (89)

தாயரும் சுமந்திரனும் வந்தடைதல்

2552. தேன்றருந் தெரியலச்
செம்ம னல்வரை
யீன்றவர் மூவரோ
டிருமை நோக்குறுஞ்
சான்றவர் குழாத்தொடுந்
தரும நோக்கிய
தோன்றல்பாற் சுமந்திரன்
றொழுது தோன்றினன்.

தேன் தரும் தெரியல் அச் செம்மல் நால்வரை
ஈன்றவர் மூவரோடு, இருமை நோக்குறும்
சான்றவர் குழாத்தொடும், தருமம் நோக்கிய
தோன்றல்பால், சுமந்திரன் தொழுது தோன்றினன்.

பொ :—தேன் பிலிற்றும் பூமாலையை யணிந்த பெருமைக் குணமுடைய அக்குமாரர் நால்வரைப் பெற்றவர்களான (கோசலை முதலிய தாய்மார்) மூவருடனும், பிறப்பு, வீடென்னும் இரண்டனது துன்ப வின்பக் கூறுபாடுகளை ஆராய்ந்தறிகின்ற பெரியோர் கூட்டத்தோடும், சுமந்திரன், (எப்பொழுதும்) அறத்தையே கருதியிருக்கும் இராமனிடம் வணங்கிய வண்ணம் வந்து சேர்ந்தான்.

கு :—"இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார், பெருமை பிறங்கிற் றுலகு" (23) என்ற திருக்குறளும் அதன் பரிமேலழகர் உரையும் நினைத்தல் தகும். 'இருமையு நோக்குறு மியல்பினற்கு' என்று கிட்கிந்தா காண்டம், வாலி வதைப்படலம், 23-ஆம் செய்யுளில்

வந்துள்ளது. இருமை என்பதற்கு இம்மை மறுமைப் பயன்களை என்றும் பொருள் கூறலாம். (90)

ஒரு பிரதியில் பின்வரும் அதிகப் பாடல் காணப்படுகிறது :—

2552 (a) " ஐய நின்னுடை யன்னை மூவரும்
வைய மன்னரு மற்று மாக்களுந்
துய்ய நாடொரீஇத் தோன்றி னூரவர்க்
குய்ய நல்லரு ளுதவு வாயென்றான்."

## தந்தை எங்கே என்று தாயரிடம் இராமன் அழுதல்

**2553.** எந்தை யாண்டையா னியம்பு வீரெனா
★ வந்த தாயர்தம் வயங்கு சேவடிச்
சிந்தி நின்றனன் சேந்த கண்ணநீர்
முந்தை நான்முகத் தவற்கு முந்தையான்.

'எந்தை யாண்டையான்? இயம்புவீர்!' எனா,
வந்த தாயர் தம் வயங்கு சேவடிச்
சிந்தி நின்றனன் சேந்த கண்ண நீர்,
முந்தை நான்முகத்தவற்கும் முந்தையான்.

பொ :—(அப்பொழுது எல்லாப் படைப்பிற்கும்) முற்பட்டவனான பிரமனுக்கும் முற்பட்டவனான இராமன், 'என் தந்தை எவ்விடத்தி லுள்ளான்? கூறுங்கள்!' என்று கதறியவனாய் அங்கு வந்த தாய்மார் களின் விளங்குகின்ற சிவந்த பாதங்களில் (விழுந்து) சிவந்த தன் கண்களின் நீரைச் சொரிந்து நின்றான்.

கு :—முதலடியால், இங்ஙனம் துக்கம் விசாரிக்கின்ற ஒரு வழக்கு அறியப்படும். இராமன் தன் கண்ணீரால் தாயர் கால்களைக் கழுவினன் என்றபடி. படைத்தற் கடவுளான நான்முகனை உந்தித் தாமரையி னின்றும் தோற்றுவித்ததால் 'முந்தை நான்முகத்தவற்கு முந்தையான்' என்றார். (91)

## எல்லோரும் வருந்துதல்

**2554.** தாய ருந்தலைப் பெய்து தாந்தழீஇ
யோய்வி றுன்பினு லூரற லோங்கினா
ராய சேனையு மணங்க னார்களுந்
தீயில் வீழ்ந்துதீ மெழுகிற் றேம்பினர்.

தாயரும் தலைப் பெய்து தாம் தழீஇ,
ஒய்வு இல் துன்பினுல் உரறல் ஓங்கினர் ;
ஆய சேனையும், அணங்கு அனர்களும்,
தீயில் வீழ்ந்து தீ மெழுகின், தேம்பினர்.

பொ :—(அப்பொழுது) அத்தாய்மார்களும் ஒருங்குகூடித் தாங்களும் (இராமனைத்) தழுவிக்கொண்டு தீராத்துயரத்தால் உரக்கக் கதறினர்கள் ; அச்சேனையிலுள்ளவர்களும் தேவமகளிரையொத்த (மற்றப்) பெண்களும் அனலில் விழுந்து உருகுகிற மெழுகுபோல வருந்தி விம்மியழுதார்கள்.

கு :—தலைப்பெய்து - ஒருங்குகூடி. உரறல் - முழங்கல். (92)

தாயர் சீதையைத் தழுவிக்கொண்டு வருந்துதல்

2555. பின்னவ் வீரரைப் பெற்ற பெற்றியப்
பொன்ன ஞர்களுஞ் சனகன் பூவையைத்
துன்னி மார்புறத் தொடர்ந்து புல்லினு
ரின்னல் வேலைபுக் கிழிந்த ழுந்துவார்.

பின் அவ் வீரரைப் பெற்ற பெற்றி அப்
பொன் அனர்களும் சனகன் பூவையைத்
துன்னி, மார்பு உறத் தொடர்ந்து புல்லினர்,
இன்னல் வேலை புக்கு இழிந்து அழுந்துவார்.

பொ :—பின்பு (இராமன் முதலிய) அந்த வீரர்களைப்பெற்ற பெருமையையுடைய, திருமகளையொத்த அத் தாய்மார்களும் சனகன் மகளான நாகணவாய்ப் பறவையின் சொற்போலும் இன் சொற்களையுடைய சீதையை நெருங்கி மார்பிற் பொருந்த விடாது அணைத்துக்கொண்டவர்களாய்த் துன்பக் கடலிற் புகுந்து உள்ளிறங்கி அழுந்துபவரானர்கள்.

கு :—வீரர் – வீரம் பொருந்திய இராமன் முதலிய நால்வர். தாய்மார் சீதையைத் தழுவிக்கொண்டு மிகவும் வருந்தினர்கள் என்றவாறு. பூவை - நாகணவாய்ப் புள் : பெண்ணுமாம். சனகன் பூவை என்றது, சனகன் மகளாகிய சீதையை. (93)

சேனையும் நகரமக்களும் எல்லோரும் வந்துசேர்தல்

2556. சேனை வீரருந் திருநன் மாநகர்
மானை மாந்தரு மற்று ளோர்களு

மேனை வேந்தரும் பிறரும் யாவருங்
கோனை யெய்தினர் குறையுஞ் சிந்தையார்.

சேனை வீரரும், திரு நல் மா நகர்
மால் நை மாந்தரும், மற்றுளோர்களும்,
ஏனை வேந்தரும், பிறரும், யாவரும்
கோனை எய்தினர், குறையும் சிந்தையார்.

பொ :—(பின்னர்) படை வீரர்களும், (மற்றும்) அழகிய சிறந்த பெரிய அயோத்தி நகரிலுள்ள (இராமன்பாலுள்ள) அன்பினல் வருந்துகிற ஆடவர்களும், மற்றுமுள்ளவர்களும் (மகளிரும்), மற்றும் அரசர்களும், (அமைச்சர் முதலிய) மற்றையோரும் (ஆகிய) எல்லோரும், வருந்தும் மனத்தையுடையவர்களாய்த் தங்கள் தலைவனை இராமனை அடைந்தார்கள்.

கு :—மானை என்பதற்கு, மானம் என்பது மானை யென ஈறு திரிந்தது எனக் கொள்ளலுமாம்; அங்ஙனம் கொள்ளின் மானம் என்பதற்குப் பெருமை என்று பொருள் கொள்க. அவ்வாறெனின் மானை மாந்தர் என்பது பெரிய மனிதரைக் குறிக்கும். (94)

மாலை வருதல்

2557. படஞ்செய் நாகணைப் பள்ளி நீங்கின
னிடஞ்செய் தொல்குலத் திறைவ னுதலாற்
றடஞ்செய் தேரினன் றானு நீரினற்
கடஞ்செய் வானெனக் கடலின் மூழ்கினன்.

படம் செய் நாகணைப் பள்ளி நீங்கினன்
இடம் செய் தொல் குலத்து இறைவன் ஆதலால்,
தடம் செய் தேரினன், தானும் நீரினல்
கடம் செய்வான் எனக் கடலின் மூழ்கினன்.

பொ :—படத்தை விரிக்குந் தன்மையுள்ள பாம்புப் படுக்கையில் படுத்தலை நீங்கி (இங்கு அவதரித்த திருமாலாகி)ய இராமன் பிறத்தற்கு இடமாகக் கொண்ட தொன்றுதொட்டு வருகிற குலத்துக்கு முதல்வன் ஆதலால், பெரியதேரையுடையவனன சூரியன் (தயரதனுக்குத்) தானும் நீரில் மூழ்கிச் செய்யவேண்டுங் கடமைகளைச் செய்பவன்போல மேற்குக் கடலில் முழுகினன்.

கு :—மாலைப் பொழுதில் சூரியன் மறைந்தான் என்றவாறு. கடம் – கடன். (95)

இதன்பின் ஒரு சுவடியில் பின்வருமாறு ஒரு பாடல் காணப்படுகிறது :—

2557 (a) ''கங்குல் வந்திடக் கண்டி யாவரு
மங்க ணேதுயி லமைய வாரிருட்
பொங்கு வெம்பகை போக மற்றைநாட்
செங்க திர்குண திசையிற் றேன்றினன்.''

### மறுநாள் யாவரும் இராமனைச் சூழ்ந்திருத்தல்

2558. அன்று தீர்ந்தபின் னரச வேலையுந்
துன்று செஞ்சடைத் தவருஞ் சுற்றமுந்
தன்று ணைத்திருத் தம்பி மார்களுஞ்
சென்று சூழவாண் டிருந்த செம்மலுன்.

அன்று தீர்ந்தபின், அரச வேலையும்,
துன்று செஞ்சடைத் தவரும், சுற்றமும்,
தன் துணைத் திருத் தம்பிமார்களும்,
சென்று சூழ, ஆண்டு இருந்த செம்மல்தான்.

பொ :—அன்றைய நாள் கழிந்த பின்பு, (மறுநாள்) கடல்போன்ற அரசர் கூட்டமும், நெருங்கிய சிவந்த சடையையுடைய முனிவர்களும், சுற்றத்தார்களும், தனக்குத் துணைவரான சிறந்த தம்பியரும், வந்து தன்னைச் சூழ்ந்திருக்க, தலைவனுன இராமன் ('பரிந்து கூறினன்' என அடுத்த கவியோடு முடியும்.)

கு :—தான், அசை. (96)

### பரதனின் விரதவேடம் குறித்து இராமன் வினவல்

2559. வரதன் றுஞ்சினன் வைய மாணையாற்
சரத நின்னதே மகுடந் தாங்கலாய்
விரத வேடநீ யென்கொல் வேண்டுவான்
பரத கூறெனப் பரிந்து கூறினன்.

'வரதன் துஞ்சினன்; வையம் ஆணையால்
சரதம் நின்னதே; மகுடம் தாங்கலாய்,

விரத வேடம் நீ என் கொல் வேண்டுவான்?
பரத! கூறு' எனுப் பரிந்து கூறினுன்.

பொ :—' பரதா! (யாவர்க்கும்) வரம் அளிக்க வல்லவனுன மன்னன் இறந்தான்; இராச்சியம் அவனது கட்டளையால் உண்மையாக உன்னதேயாம்; (அவ்வாறிருந்தும்) நீ முடி சூடாமல் தவக்கோலத்தை விரும்பியது எதற்காக? சொல்வாய்!' என்று அன்போடு வினுவினுன்.

கு :—முன்னைப் பாடலில் வந்துள்ள 'செம்மல்' என்பதை எழுவாயாகக் கொண்டு 'கூறினுன்' என முடித்துக் காண்க. (97)

### பரதன் வருந்திக் கூறுதல் 2560-2565

**2560.** என்ற லும்பதைத் தெழுந்து கைதொழா
நின்று தோன்றலை நெடிது நோக்கிநீ
யன்றி யாவரே யறத்து ளோரதிற்
பின்று வாய்கொலா மென்னப் பேசுவான்.

என்றலும், பதைத்து எழுந்து, கைதொழா
நின்று, தோன்றலை நெடிது நோக்கி, 'நீ
அன்றி யாவரே அறத்து உளோர்? அதில்
பின்றுவாய் கொலாம்?' என்னப் பேசுவான்.

பொ :—என்று (இராமன்) கேட்டதும், (பரதன்) மனம் துடித்தெழுந்து கைகூப்பி வணங்கி நின்று, இராமனை நெடும்பொழுது முகம் பார்த்து, '(உலகத்தில்) நீயல்லால் தரும நெறியில் நிற்பவர் வேறு யார் உள்ளார்? அவ்வறத்தினின்றும் நீ பின்வாங்குவாயோ?' என்று சொல்லி மேலும் கூறுவானுனுன்.

கு :—இவ்வளவு நிகழ்ந்துவிட்ட பின்னரும், நாடெல்லாம் வருந்துவதைக்கண்டு சிறிதும் இரங்காது தான்கொண்ட கொள்கையை விடாப்பிடியாய்க் கொண்டு இராமன் தன்னை அவ்வாறு வினவியதைக்கேட்டுத் திடுக்கிட்டு மனம் துடித்து நின்றமையால், பரதன் உடன் பதில் கூருது நெடிது நோக்கி நின்றுன் என்க. (98)

**2561.** மனக்கொன் ருதன வரத்தி னின்னையு
நினக்கொன் ருநிலை நிறுவி நேமியான்
றனைக்கொன் ருடருந் தனைய னுதலா
லெனக்கொன் ருதவ மடுப்ப தெண்ணினுல்.

'மனக்கு ஒன்ருதன வரத்தின், நின்னையும்
நினக்கு ஒன்ரு நிலை நிறுவி, நேமியான்
தனைக் கொன்ருள் தரும் தனையன் ஆதலால்,
எனக்கு ஒன்ரு, தவம் அடுப்பது எண்ணினுல்.'

பொ :—'(பெரியோர்) மனத்துக்குப் பொருந்தாதனவாகிய வரங்களால் உன்னையும், உனக்குப் பொருந்தாத நிலையிலே நிறுத்தித் தசரத மன்னனை இறக்கச் செய்தவளான கைகேயி பெற்ற மகனுவேன் (யான்), ஆகையால், தவ வொழுக்கங்கள் மேற்கொள்வதை நினைந்தால்; (பாவியான) எனக்குப் பொருந்தமாட்டா.'

கு :—'நான் கெட்ட கேட்டுக்கு எனக்குத் தவம் ஒரு கேடா?' என்று நாட்டு வழக்கில் வைத்துப் பரதன் பேசியதுபோன்றதொரு தொனியையும் நான்காம் அடியில் வரும் 'எனக்கு ஒன்ரு' என்ற சொற்களிற் காணலாம். பெரியோர் மனத்தை வருத்தி, இராமனின் இன்பவாழ்வைக் குலைத்துத் தன் கணவனின் உயிரையும் குறைத்தவள் என்று தன் தாயின் கொடுமையை மிகக் கடுமையாக எடுத்து மொழிகிருன் பரதன். நல்லோர் செய்யுந் தவத்தைப் பிறப்பினுல் இழிவையடைந்ததான் மேற்கொள்ளுதல் தகாது என்று இரங்கியவாறு. (99)

2562. நோவ தாகவிவ் வுலகை நோய்செய்த
பாவ காரியிற் பிறந்த பாவியேன்
சாவ தோர்கிலேன் றவஞ்செய் வேனலேன்
யாவ ஞகியிப் பழிநின் றேறுவேன்.

'நோவது ஆக இவ்வுலகை நோய் செய்த
பாவ காரியின் பிறந்த பாவியேன்,
சாவது ஓர்கிலேன், தவம் செய்வேன் அலேன்,
யாவன் ஆகி, இப் பழி நின்று ஏறுவேன்?'

பொ :—'வருந்தும்படி இந்நிலவுலகத்தை (முழுதும்) வருத்தப் படுத்தின பாவியிடத்தினின்று பிறந்த தீவினையுடையனுன யான் இறக்கத் துணிந்தேனில்லை, தவஞ்செய்வேனுமாக அல்லேன்; (இனி) எத்தன்மையனுய் இப்பழிப்பினின்று நீங்கி ஈடேறுவேன்?'

கு :—தான் பூண்ட பழி எவ்வகையானும் தன்னைவிட்டு நீங்காது என்று இரங்கியவாறு. (100)

2563. நிறையி னீங்கிய மகளிர் நீர்மையும்
பொறையி னீங்கிய தவமும் பொங்கருட்
டுறையி னீங்கிய வறமுந் தொல்லையோர்
முறையி னீங்கிய வரசின் முந்துமோ.

'நிறையின் நீங்கிய மகளிர் நீர்மையும்,
பொறையின் நீங்கிய தவமும், பொங்கு அருள்
துறையின் நீங்கிய அறமும், தொல்லையோர்
முறையின் நீங்கிய அரசின் முந்துமோ?'

பொ :—'கற்புநெறியில் நின்று விலகிய மாதர்களின் குணமும், பொறுமையினின்று விலகிய தவவொழுக்கமும், மேற்கிளர்ந்தெழுகின்ற அருள்நெறியில் நின்று நீங்கிய தருமமும், முன்னோர்களின் முறைமையில் நின்று விலகிய அரசாட்சியினும் (கொடுமையில்) முற்படுமோ?'

கு :—கற்பு இல்லாத பெண்மையையும், பொறுமை இல்லாத தவத்தையும், அருள் இல்லாத அறத்தையும் விட முறைமை கெட்ட அரசாட்சி மிகக் கொடிது என்றவாறு. (101)

2564. பிறந்து நீயுடைப் பிரிவி றொல்லறந்
துறந்து மாதவந் தொடங்கு வாயென்றான்
மறந்து நீதியிற் றிறம்பி வாளிற்கொன்
றறந்தின் றானென வரச தாள்வெனோ.

'பிறந்து நீயுடைப் பிரிவு இல் தொல் அறம்
துறந்து மாதவம் தொடங்குவாய் என்றால்,
மறந்தும் நீதியில் திறம்பி, வாளின் கொன்று
அறம் தின்றான் என, அரசு அது ஆள்வெனோ?'

பொ :—'மூத்த மகனாகப் பிறந்து உனக்கேயுரித்தாகப்பெற்ற, உன்னிடமிருந்து பிரிக்கமுடியாத பழமையான (காத்தற்றொழிலாகிய) தருமத்தைக் கைவிட்டு, நீ பெரிய தவத்தைச் செய்யத் தொடங்குவாய் என்றால், நினைவு தப்பியும் முறைமையினின்று வழுவி, அறத்தை வாளினாற் கொன்று தின்றான் என்று சொல்லும்படி யான் அவ்வரசாட்சியைக் கொள்வேனோ?'

கு :—காத்தற் றொழிலையுடைய திருமாலின் அவதாரம் இராமன் ஆதலில், உலகையாளுந் தொழில் அவனினின்றும் பிரிக்கமுடியாத தொன்மையான அறமாயிற்று. இப்பொழுது அவன் தசரதனுக்கு மூத்த

மகனுகப் பிறந்த பிறப்புரிமையாலும் அரசனுக இருந்து உலகைக் காத்தல் அவனுடைய பழமையான தவிர்க்க முடியாத குலதரும மாயிற்று : ஆதலால் ‘பிறந்து நீயுடைப் பிரிவில் தொல்லறம்’ என்ருன் என்க. இத்தொல்லறத்தை இராமன் துறப்பது சரியல்ல என்னும் கருத்தே பரதன் எண்ணத்தில் மேலோங்கி நிற்றலால் “அறந்தனே நினைந்திலே” (2516) என்று சொல்லிய வண்ணமாய்ப் பரதன் முதலில் இராமனடி வீழ்ந்து மயங்கினன் என்க. (102)

**2565.** தொகையி லன்பினு லிறைவன் றுஞ்சநீ
புகையும் வெஞ்சுரம் புகுதப் புந்தியால்
வகையில் வஞ்சனு யரசு வெளவயான்
பகைவ னேகொலா மிறவு பார்க்கின்றேன்.

‘தொகை இல் அன்பினுல் இறைவன் துஞ்ச, நீ
புகையும் வெஞ்சுரம் புகுதப் புந்தியால்
வகை இல் வஞ்சனுய் அரசு வெளவ, யான்
பகைவனே கொலாம் இறவு பார்க்கின்றேன் ?’

பொ :—‘(உன்மேல் வைத்த) அளவிறந்த அன்பின் காரணமாக மன்னனுகிய தசரதன் இறக்க, நீ புகைந்தெரிகிற வெப்பமிகுந்த காட்டிற்குச் செல்லவும், மனத்தினுல் வகுத்தற்கரிய வஞ்சனையையுடை யவனுய் (உனக்குரிய) அரசாட்சியைக் கவர்ந்து கொள்ளுதற்கு, நான், சோர்கின்ற சமயம் பார்த்து நிற்கிற பகைவனு ?’

கு :—இறவு - அற்றம் : இறும் வழி என்றுமாம். (103)

மீண்டு அரசாள்க எனப் பரதன் இராமனே வேண்டுதல்

**2566.** உந்தை தீமையு முலகு ருதநோய்
தந்த தீவினைத் தாய்செய் தீமையு
மெந்தை நீங்கமீண் டரசு செய்கெனுச்
சிந்தை யாவதுந் தெரியக் கூறினுன்.

‘உந்தை தீமையும், உலகு உருத நோய்
தந்த தீவினைத் தாய்செய் தீமையும்,
எந்தை ! நீங்க, மீண்டு அரசு செய்க’ எனுச்
சிந்தை யாவதும் தெரியக் கூறினுன்.

போ :—'எமது தலைவனே! உனது தந்தையான தசரதன் செய்த தீங்கும், உலகிற்கு ஒரு காலமுமடையாத வருத்தத்தைச் செய்த கொடிய செயல் படைத்த (என்) தாயான கைகேயி செய்த தீங்கும் நீங்கும்படி (நீ அயோத்திக்குத்) திரும்பி வந்து அரசாள்வாயாக' என்று (தன்) மனக்கருத்து முழுவதும் (இராமனுக்கும்) மற்றும் அங்குள்ளவர் களுக்கும் விளங்கச் சொன்னான்.

கு :—தசரதன் பரதனை மகனல்லவென்று துறந்துவிட்டமையாலும், கைகேயிக்கு வரம் கொடுத்துத் தன்னைப் பெருந் துன்பத்திலும், சோதனையிலும் ஆழ்த்திவிட்டமையாலும், தனக்கேதும் தொடர்பில்லா தது போல், 'உந்தை' என்று கூறினான். தனக்குத் தந்தையாவான் இராமனே என்பதைத் தெரிவிக்க 'எந்தை' என்று விளித்தான். (104)

## இராமன் பரதனை மறுத்துக் கூறுதல் 2567-2574

**2567.** சொற்ற வாசகத் துணிவு ணர்ந்தபி
னிற்ற தோவிவன் மனமென் றெண்ணுவான்
வெற்றி வீரயான் விளம்பக் கேளென
முற்ற நோக்கினன் மொழிதன் மேயினன்.

சொற்ற வாசகத் துணிவு உணர்ந்த பின்,
'இற்றதோ இவன் மனம்!' என்று எண்ணுவான்,
'வெற்றி வீர! யான் விளம்பக் கேள்' என,
முற்ற நோக்கினன் மொழிதல் மேயினன்.

போ :—(இங்ஙனம் பரதன்) சொன்ன வார்த்தையின் உறுதியை அறிந்தபின்பு, (இராமன்) 'இவன் கருத்து இத்தன்மையதோ!' என்று கருதுபவனாய் (அவனை நோக்கி) 'வெற்றியோடு கூடிய வீரத்தையுடைய வனே! யான் (சில) சொல்லக் கேட்பாய்' என்று எல்லாவற்றையும் தீர ஆலோசித்துச் சொல்லத் தொடங்கினன்.

கு :—முற்ற நோக்கினன் என்பதற்கு எல்லாவித சாத்திரங்களையும் முற்ற அறிந்தவனான இராமன் என்றும் பொருள் கூறலாம். (105)

**2568.** முறையும் வாய்மையு முயலு நீதியு
மறையு மேன்மையோ டறனு மாதியாந்
துறையுள் யாவையுஞ் சுருதி நூல்விடா
விறைவ ரேவலா லியைவ காண்டியால்.

'முறையும், வாய்மையும், முயலும் நீதியும்,
அறையும் மேன்மையோடு அறனும் ஆதியாம்
துறையுள் யாவையும், சுருதி நூல் விடா
இறைவர் ஏவலால் இயைவ காண்டியால்.'

பொ :—'நல்லொழுக்கமும், சத்தியமும், (யாவரும் அடைய) முயலத் தக்க நியாயமும், சொல்லப்படுகிற மேன்மையும், தருமமும் முதலான நல்வழிகளிற் சேர்ந்தவையெல்லாம் வேத சாத்திரங்களின் பொருளை விடாமற்கொண்ட அரசர்களது கட்டளையாலே உண்டாவன; (இதனை) அறிவாய்.'

கு :—"முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட், கிறையென்று வைக்கப்படும்" (388) என்பது திருக்குறள். இறைமாட்சி யென்ற அதிகாரத்தின் தலைப்பில் "உலகபாலருருவாய் நின்று உலகங்காத்தலின் இறை என்றார்; 'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே யென்னும்' என்று பெரியாரும் பணித்தார்" என்று பரிமேலழகர் வரைந்துள்ளமையும் ஈண்டு நோக்கத்தகும். (106)

**2569.** பரவு கேள்வியும் பழுதின் ஞானமும்
விரவு சீலமும் வினையின் மேன்மையு
முரவி லோய்தொழற் குரிய தேவருங்
குரவ ரேயெனப் பெரிது கோடியால்.

'பரவு கேள்வியும், பழுது இல் ஞானமும்,
விரவு சீலமும், வினையின் மேன்மையும்,
உர விலோய்! தொழற்கு உரிய தேவரும்,
குரவரே எனப் பெரிது கோடியால்.'

பொ :—'வலிய வில்லையுடையவனே! சிறப்பித்துச் சொல்லப்படுகிற நூற்கேள்வியும், குற்றமில்லாத அறிவும், பொருந்தின நல்லொழுக்கமும், நல்வினையும், வணங்குதற்குரிய தேவர்களும் பெரியோர்களே என்று மிகவும் மனத்திற்கொள்வாய்.'

கு :—கேள்வியும், ஞானமும், சீலமும், மேன்மையும் குரவர் என்றது, குரவரால் இவையனைத்தும் உண்டாகும் என்பதாம். தொழற்கு உரிய தேவரும் குரவரே என்றது, குரவரால் தேவர்களின் அருள் எய்தும் என்றும் கொள்ளலாம். குரவர் குலதெய்வம்போலக் கொண்டாடத் தக்கவர் என்பது கருத்து. (107)

2570. அந்த நற்பெருங் குரவ ராரெனச்
சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினுற்
றந்தை தாயரென் றிவர்க டாமலா
லெந்தை கூறவே றெவரு மில்லையால்.

'அந்த நல் பெருங் குரவர் ஆர் எனச்
சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினல்,
தந்தை தாயர் என்று இவர்கள் தாம் அலால்,
எந்தை! கூற வேறு எவரும் இல்லையால்.'

பொ :—'என் ஐயனே! சிறந்த பெருமையையுடைய அப்பெரியோர் யாவர் என மனத்தில் நன்கு எண்ணிப் பார்த்தால் தந்தையும் தாயும் என்ற இவ்விருவருமேயல்லாமல் சொல்லுதற்கு வேறு எவரும் இல்லை.'

கு :—இங்குத் தன் அன்புக்குரியவன் பரதன் ஆகையால், அவனை இராமன் 'எந்தை' என்று விளித்தனன். (108)

2571. தாய்வ ரங்கொளத் தந்தை யேவலான்
மேய நங்குலத் தரும மேவினே
னீவ ரங்கொளத் தவிர்த னீர்மையோ
வாய்வ ரும்புலத் தறிவு மேவினுய்.

'தாய் வரம் கொளத் தந்தை ஏவலால்
மேய நம் குலத் தருமம் மேவினேன் :
நீ வரம் கொளத் தவிர்தல் நீர்மையோ?
ஆய்வு அரும் புலத்து அறிவு மேவினுய்!'

பொ :—'ஆராய்வதற்கரிய வேதங்களின் அறிவு பொருந்தியவனே! தாயான கைகேயி வரம்பெற்றுக்கொள்ளத் தந்தையின் கட்டளையால் பொருந்திய நம்முடைய குலத்திற்கேற்ற ஒழுக்கத்தை விரும்பி ஏற்றுக் கொண்டேன் ; (அதனை) நீ வேண்டிக்கொள்ளுதலால் (நான்) நீங்குதல் தக்கதாகுமோ ?'

கு :—புலம் - வேதம் : 'புலம்புரியந்தணர்' (பரிபாடல், 6-45) (109)

2572. தனைய ராயினுர் தந்தை தாயரை
வினையி னல்லதோ ரிசையை வேய்தலோ

நினைய லோவிடா நெடிய வன்பழி
புனைத லோவைய புதல்வ ராதருன்.

'தனையர் ஆயினர் தந்தை தாயரை
வினையின் நல்லது ஓர் இசையை வேய்தலோ,
நினையல் ஓவிடா நெடிய வன் பழி
புனைதலோ, ஐய! புதல்வர் ஆதல்தான்?'

பொ :—'ஐயனே! புதல்வரானவர்கள் (தாம்) மக்களாகப் பிறந்ததற்குப் பயன், (தங்கள்) தந்தையையும், தாயையும் (தங்கள்) செயல்களால் சிறந்ததொரு புகழை அடைவித்தலோ, (அன்றி) நினைப்பினின்றும் நீங்காத பெரிய கொடிய பழிப்பைச் சூட்டுதலோ?'

கு :—'ஐய! தனையராயினர் புதல்வராதல்தான் வேய்தலோ? புனைதலோ?' எனக் கொண்டுகூட்டிப் பொருள் காண்க. நீங்காது, என்றும் நிலைத்து நிற்கும் பழியை 'நினையலோவிடா நெடியவன்பழி' என்றான். (110)

2573. இம்மை பொய்யுரைத் திவறி யெந்தையா
ரம்மை வெம்மைசேர் நரக மாளயான்
கொம்மை வெம்மூலக் குவையின் வைகிவாழ்
செம்மை சேர்நிலத் தரசு செய்வெனோ.

'இம்மை பொய் உரைத்து இவறி, எந்தையார்
அம்மை வெம்மை சேர் நரகம் ஆள, யான்
கொம்மை வெம் மூலக் குவையின் வைகி வாழ்
செம்மை சேர் நிலத்து அரசு செய்வெனோ?'

பொ :—'எனது தந்தையானவர் மறுமையில் கொடுமைபொருந்தின நரகத் துன்பத்தையடையும்படி, நான் இப்பிறப்பிலே (தாயாகிய கைகேயிக்குச் சொன்ன வார்த்தையைப்) பொய்யாக்கிப் பேராசை கொண்டு, திரண்ட விரும்பத்தக்க மூலத்தொகுதியில் தங்கி வாழ்கின்ற இன்பச் செல்வம் அமைந்த நிலவுலகத்து அரசாள்வேனோ?'

கு :—'பொய்யுரைத்து' என்பது, முன் 'மன்னவன் பணியன்றாகில்' எனத் தொடங்கும் 1693-ஆம் பாடலில் உரைத்தவற்றைப் பொய்யாக்குதல். இவறுதல்—விரும்புதல். அவ்வாறு இராமன் பொய்யனாகி இவறுவனேயாகில், ஒழுக்கம் தவறிய தன்னைப் பெற்றமையால் தசரதன் நரகாளவேண்டிவரும் என இராமன்எண்ணி இவ்வாறு கூறினன் என்க.

இவ்வாறன்றி, 'இம்மை பொய்யுரைத்திவறி' என்பதைத் தசரதன் செயலாக்கிக் கூறுதல் பொருந்தாமை காண்க. (111)

2574. வரனி லுந்தைசொன் மரபி னுலுடைத்
தரணி நின்னதென் றியைந்த தன்மையா
லுரனி னீபிறந் துரிமை யாதலா
லரசு நின்னதே யாள்க வென்னவே.

'வரன் நில் உந்தை சொல் மரபினுல், உடைத்
தரணி நின்னது என்று இயைந்த தன்மையால்,
உரனின் நீ பிறந்து உரிமை ஆதலால்,
அரசு நின்னதே, ஆள்க' என்னவே.

பொ :—'(கைகேயிக்குக் கொடுத்த) வரத்திலே நிலைத்து நின்ற உன் தந்தை சொன்ன முறைமைப்படி, அவனுடையதான நிலம் உன்னுடையது என்று பொருந்தின தன்மையினுலும், நீ (அதனை ஆளுதற்கேற்ற) வலிமையோடுதோன்றி உரிமைபெற்றவனுதலாலும், இராச்சியம் உன்னுடையதேயாகும்; (அதனை நீ) அரசாள்க.' என்று (இராமன் பரதனை நோக்கிச்) சொல்லவும்.

கு :—'நீ பிறந்து உரிமையாதலால்' என்றது, கைகேயியின் மணத்தின்போது தசரதன் அவள் தந்தையிடம் 'இவள் வயிற்றிற் பிறக்கும் மகவுக்குப் பட்டம் சூட்டுகிறேன்' என்று வாக்குக் கொடுத்ததாக வான்மீகம், அயோத்தியா காண்டம், சர்க்கம் 107-ல் காணப்படும் செய்தியை நினைவுறுத்தியதாதல் வேண்டும் என்க. இச்செய்யுள் மேலிரண்டு செய்யுள்களில் தொடர்ந்து முடியும். (112)

பரதன் இராமனை மீண்டும் முடிபுனைய வேண்டுதல் 2575-2576

2575. முன்னர் வந்துதித் துலக மூன்றினு
நின்னை யொப்பிலா நீபி றந்தபா
ரென்ன தாகில்யா னின்று தந்தனென்
மன்ன போந்துநீ மகுடஞ் சூடெனு.

'முன்னர் வந்து உதித்து, உலகம் மூன்றினும்
நின்னை ஒப்பு இலா நீ பிறந்த பார்
என்னது ஆகில், யான் இன்று தந்தனென்;
மன்ன! போந்து நீ மகுடம் சூடு' எனு.

போ :—'(எனக்கு) முன்னே வந்து தோன்றி, மூவுலகங்களிலும் உன்னையொப்பவரில்லாத நீ பிறப்புரிமையாகப் பெற்ற இராச்சியம் (நீ சொன்னபடி) என்னுடையதானால், நான் இப்பொழுது (அதனை உனக்குக்) கொடுத்தேன்; அரசனே! நீ மீண்டு வந்து பொன்முடி தரிப்பாய்' என்று சொல்லி, ('வேண்டினன்' என அடுத்த செய்யுளோடு முடியும்.)

கு :—இராமன் எவ்வளவு மறுத்தாலும், உண்மையில், அவனே கருவிலே திருவுடைய மன்னவன் என்ற பரதனின் திடமான கொள்கை, அவன் கூறிய 'மன்ன' என்ற சொல்லால் நன்கு புலனாகிறது. (113)

**2576.** மலங்கி வையகம் வருந்தி வைகநீ
யுலங்கொ டோளுனக் குறுவ செய்தியோ
கலங்கு ருவணங் காத்தி போந்தெனப்
பொலங்கு லாவுதாள் பூண்டு வேண்டினன்.

'மலங்கி வையகம் வருந்தி வைக, நீ,
உலம் கொள் தோள் உனக்கு, உறுவ செய்தியோ?
கலங்குரு வணம் காத்தி போந்து' எனப்
பொலம் குலாவு தாள் பூண்டு, வேண்டினன்.

போ :—'உலகம் முழுவதும் மனங்கலங்கி வருத்தமுற்று நிற்க, கற்றூணையொத்த தோள்களையுடைய நீ உனக்கு விருப்பமானவற்றைச் செய்வாயோ? (உலகம்) கலக்கமடையாதபடி மீண்டு வந்து பாது காப்பாய்' என்றும் சொல்லி (இராமனுடைய) அழகு விளங்கும் திருவடிகளைத் தாங்கி நின்று வேண்டினன் (பரதன்).

கு :—உலம் – திரண்ட கல். தோள் உனக்கு - தோள்களையுடைய உனக்கு. (114)

பரதனை அரசாளும்படி இராமன் ஆணையிடுதல் 2577-2580

**2577.** பசைந்த சிந்தைநீ பரிவின் வையமென்
வசஞ்செய் தாலது முறைமை யோவசைக்
கசைந்த வெந்தையா ரருள வன்றுநா
னிசைந்த வாண்டெலா மின்றொ டேறுமோ.

'பசைந்த சிந்தை நீ பரிவின் வையம் என்
வசம் செய்தால், அது முறைமையோ ? வசைக்கு
அசைந்த எந்தையார் அருள, அன்று, நான்,
இசைந்த ஆண்டு எலாம் இன்ருெடு ஏறுமோ ?'

பொ :—'(என்னிடம்) அன்புகொண்ட மனத்தையுடைய நீ (உன்) விருப்பத்தின்படி உலகத்தை எனக்கு உரிமைப்படுத்திவிட்டால், அது ஒழுங்காகுமோ ? (ஆகாது). பழிக்கு அஞ்சிய நம் தந்தையார் (வரம்) அளிக்க (அதன்படி) அப்பொழுது நான் ஒப்புக்கொண்ட ஆண்டுகளெல்லாம் இற்றை நாளோடு முடிவடைந்துவிடுமோ ?

கு :—பசைந்த சிந்தை நீ – அன்பு மிக்க மனமுடைய நீ. பரிவின்– அன்பினுல். அசைந்த - நடுங்கிய. 'நீ இன்று அரசை எனக்கு உரிமைப்படுத்திவிட்டால் நான் புரியவேண்டிய பதினுன்கு ஆண்டு வனவாசம் இன்ரேடு முற்றுப்பெற்றுவிடாது' என்று இராமன் கூறினுன். (115)

**2578.** வாய்மை யென்னுமீ
தன்றி வையகந்
தூய்மை யென்றுமொன்
றுண்மை சொல்லுமோ
தீமை தானதிற்
றீர்த லன்றியே
யாய்மெய் யாகவே
றறைய லாவதே.

'வாய்மை என்னும் ஈது அன்றி, வையகம்
தூய்மை என்றும் ஒன்று உண்மை சொல்லுமோ ?
தீமை தான் அதில் தீர்தல்; அன்றியே,
ஆய், மெய்யாக, வேறு அறையல் ஆவதே ?'

பொ :—'வாய்மை என்னும் ஈதன்றித் தூய்மையுடையதாக வேறு ஒன்றும் உளது என்று உலகத்துப் பெரியோர் கூறுவார்களோ ? (கூருர்) ; அந்த வாய்மையினின்றுந் தவறுதல் தீமையேயாகும் ; அதுவல்லாமல் வேறு சொல்லவும் முடியுமா ? (இதனை) உண்மையாக ஆராய்ந்து பார்.'

கு :—"புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை, வாய்மையாற் காணப்படும்" (364.) எனவும், "தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது,

வாஅய்மை வேண்ட வரும்" (298.) எனவும் வந்துள்ள திருக்குறள்களின் கருத்து முதலிரண்டடிகளிற் பயின்று வந்தமை காணத்தகும். (116)

**2579.** எந்தை யேவவாண் டேழொ டேழெனு
வந்த காலநான் வனத்துள் வைகநீ
தந்த பாரகந் தன்னை மெய்ம்மையா
லந்த நாளெலா மாளென் ணாணையால்.

'எந்தை ஏவ, ஆண்டு ஏழொடு ஏழ் எனு
வந்த காலம் நான் வனத்துள் வைக, நீ,
தந்த பாரகம் தன்னை, மெய்ம்மையால்
அந்த நாள் எலாம் ஆள், என் ஆணை,ஆல்.'

பொ :—'எமது தந்தை கட்டளையிட்டபடி ஏழுடன் ஏழு கூடி வந்த பதினான்கு ஆண்டுக் காலமும் நான் காட்டில் வாழ்ந்துவர, அந்தக் காலம் முழுதும் (தந்தை) அளித்த நாட்டை (அவர்) உண்மை தவறாதபடி நீ ஆண்டுவருவாயாக ; (இது) என் கட்டளை.'

கு :—தந்த பாரகம் என்பதை, தந்தை தந்த பாரகம் எனக்கொள்க. 'தந்தை ஆணைப்படி நான் காட்டில் உறையவேண்டியுள்ளதால், நீ என் ஆணைப்படி நாட்டை ஆண்டுவரக்கடவாய்' என்றான் என்க. ஆல், அசை. (117)

**2580.** மன்னவ னிருக்க வேயு
★ மணியணி மகுடஞ் சூடு
கென்னயா னியைந்த தன்னா
னேயது மறுக்க வஞ்சி
யன்னது நினைந்து நீயென்
னாணையை மறுக்க லாமோ
சொன்னது செய்தி யைய
துயருழந் தயர லென்றான்.

'மன்னவன் இருக்கவேயும்,
"மணி அணி மகுடம் சூடுக"
என்ன, யான் இயைந்தது, அன்னான்
ஏயது மறுக்க அஞ்சி ;

அன்னது நினைந்து நீ என்
ஆணையை மறுக்கலாமோ?
சொன்னது செய்தி, ஐய!
துயர் உழந்து அயரல்!' என்றான்.

பொ:—'(தசரத சக்கரவர்த்தி) உயிரோடிருக்கும்பொழுதே "மணிகள் பதித்த அழகிய கிரீடத்தைத் தரிப்பாய்" என்று சொல்லவும், நான் அதற்கு உடன்பட்டது (எதனாலென்னில்) அத்தந்தையின் கட்டளையை மறுத்தற்கு அஞ்சியேயாகும்; (அரசாளவேண்டும் என்ற விருப்பத்தாலன்று, அவ்விதம் நான் உடன்பட்ட) அதனை நீ (பெரிதாக) நினைத்துக் கொண்டு நீ (இப்பொழுது) என் கட்டளையை மறுக்கலாமோ? நான் சொன்னபடியே செய்வாயாக; ஐய! துன்பத்தில் வருந்தித் தளராதே' என்று கூறினான்.

கு:—'நான் எவ்வாறு நம் தந்தையின் ஆணையை மறாது மகுடம் சூட இசைந்தேனோ, அதுபோல், நீயும் என்சொல் மறாது அரசாள வேண்டும்' என்று இராமன் சொன்னதாகவும் இப்பாடலில் கருத்து தொனிப்பதைக் காணலாம். (118)

வசிட்டன் கூறத் தொடங்குதல்

2581. ஒள்ளியோ னினைய வெல்லா
முரைத்தலு முரைக்க லுற்ற
பள்ளநீர் வெள்ள மன்ன
பரதனை விலக்கிப் பண்டு
தெள்ளிய குலத்தோர் செய்கை
சிக்கறச் சிந்தை நோக்கி
வள்ளியோய் கேட்டி யென்னு
வசிட்டமா முனிவன் சொன்னான்.

ஒள்ளியோன் இனைய எல்லாம்
உரைத்தலும், உரைக்கல் உற்ற
பள்ளம் நீர் வெள்ளம் அன்ன
பரதனை விலக்கிப் பண்டு
தெள்ளிய குலத்தோர் செய்கை
சிக்கு அறச் சிந்தை நோக்கி,
'வள்ளியோய்! கேட்டி' என்னு,
வசிட்ட மா முனிவன் சொன்னான்.

பொ :—அறிவுடையோனான இராமன் இவை போன்றவற்றை யெல்லாம் கூறியவுடனே, (அவற்றுக்கு) மறுமொழி கூறப் பள்ளத்திற் பாயும் வெள்ளப்புனல்போல் விரையலுற்ற பரதனைத் தடுத்து, (இராமனுடைய) தெளிந்த (குற்றமில்லாத) குலத்தில் வந்த முன்னோர் களின் செயல்களைக் கசடற மனத்திலே தெரியப் பார்த்து, (இராமனை நோக்கி) 'வண்மைக்குணமுடையவனே! (நான் சொல்வதைக்) கேட்பாயாக' என்று பெரிய வசிட்ட முனிவன் கூறலுற்றான்.

கு :—முன்னரும், பாலகாண்டம், குலமுறை கிளத்து படலத்தில், "தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும், பள்ளமெனுந் தகை யானைப் பரதனெனும் பெயரானை" என்று பரதன் கூறப்பட்டுள்ளான். (119)

## வசிட்டன் இராமன் ஆளுதலே முறை எனல் 2582-2587

**2582.** கிளரகன் புனலுணின் றரியொர் கேழலா
★ யிளையெனுந் திருவினை யேந்தி னனரோ
வுளைவரும் பெருமையோ ரெயிற்றி னுட்புரை
வளரிளம் பிறையிடை மறுவிற் றோன்றவே.

'கிளர் அகன் புனலுள் நின்று, அரி, ஓர் கேழல்ஆய்,
இளை எனும் திருவினை ஏந்தினன் அரோ,
உளைவு அரும் பெருமை ஓர் எயிற்றின் உள் புரை
வளர் இளம் பிறையிடை மறுவின் தோன்றவே.'

பொ :—' (ஆதியில்) திருமால், ஒப்பற்றதொரு பன்றிவடிவமெடுத்து அழிதலில்லாத பெருமையையுடைய ஒரு கோரப்பல்லின் உள்ளிடத்தில்,' வளரும் இளம்பிறைச் சந்திரனிடத்துக் களங்கம்போலக் காணப்படும்படி பொங்குகிற பரந்த கடலினின்றும் இளை என்னும் பெயருடைய திருப் போன்ற பூமாதேவியைத் தூக்கினான்.'

கு :—வராகமூர்த்தியின் எயிற்றுக்குப் பிறையையும், பூமிக்கு அப் பிறையிலுள்ள களங்கத்தையும் உவமை கூறியவாறு. "நிறக்குஞ் செழுஞ்சுடர்க் கோடுமிப் பாரு நிசாமுகத்துச், சிறக்கும் பிறையுங் களங்க மும் போலு மெனிற்சிறுகண், மறக்குஞ் சரஞ்செற்ற மாயோ னரங்கன் வராகமதாய்ப், பிறக்கும் பிறப்பின் பெருமையெவ் வாறினிப் பேசுவதே." (28) என்ற திருவரங்கத்து மாலைச் செய்யுளிலும் இவ்வுவமை எடுத் தாளப்பட்டுள்ளது. உளைதல் - அழிதல் : "உளையா வலியொல்க" (தேவாரம், 570, 8). (120)

2583. ஆதிய வமைதியி னிறுதி யைம்பெரும்
பூதமும் வெளியொழித் தெவையும் புக்கபி
ஞதனவ் வகன்புன னல்கி நண்ணருஞ்
சோதியாந் தன்மையிற் றுயிறன் மேயினுன்.

'ஆதிய அமைதியின் இறுதி, ஐம்பெரும்
பூதமும் வெளி ஒழித்து எவையும் புக்கபின்
நாதன் அவ் அகன் புனல் நல்கி, நண்ணரும்
சோதி ஆம் தன்மையின் துயிறல் மேயினுன்.'

பொ :—' முன் நடந்த அக்கல்ப காலத்தின் முடிவிலே ஐந்துபெரும் பூதங்களும் வெளிவருந் தன்மையை நீக்கி எல்லாத் தத்துவங்களும் (இறைவன் வடிவத்துள்ளே) புகுந்தபின், தலைவனை திருமால் பரந்த நீரைப் படைத்துப் (பிறர்க்குப்) பொருந்துதற்கரிய ஒளியுருவான தன்மையோடு அறிதுயில் செய்தலைப் பொருந்தினுன்.'

கு :—வெளி ஒழித்து என்பதற்கு, பருநிலை நீங்கி நுண்ணிலை யெய்தி யென்றும் கொள்ளலாம். (121)

2584. ஏற்றவித் தன்மையி னமரர்க் கின்னமு
தூற்றுடைக் கடல்வண னுந்தி யுந்திய
நூற்றிதழ்க் கமலத்தி னெய்தின் யாவையுந்
தோற்றுவித் துதவிட முதல்வன் றேன்றினுன்.

'ஏற்ற இத்தன்மையின், அமரர்க்கு இன் அமுது
ஊற்றுடைக் கடல்வணன் உந்தி உந்திய
நூற்று இதழ்க் கமலத்தின், நொய்தின் யாவையும்
தோற்றுவித்து உதவிட, முதல்வன் தோன்றினுன்.'

பொ :—' (இங்ஙனம் துயிலுதலை) ஏற்றுக்கொண்ட இந்தத் தன்மையையுடைய தேவர்களுக்கு இனிய அமிர்தத்தைச் சொரிதலையுடைய கடல்போலும் கரிய நிறத்தையுடைய திருமாலினது கொப்பூழ் தோற்றுவித்த நூறு இதழ்களையுடைய தாமரை மலரினின்று (படைப்பிற்கு) முதல்வனுகிய பிரமன் வெளிப்பட்டான்.'

கு :—' சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ், நூற்றித ழலரி னிரைகண் டன்ன ' (புறம்-27) என்பதாலும், நூறு இதழ்களையுடைய தாமரை மலர் உண்டென்பது தெரியவரும். (122)

2585. அன்றவ னுலகினை யளிக்க வாகிய
துன்றனிக் குலமுத லுள்ள வேந்தர்க
ளின்றள வினுமுறை யிகந்து ளாரிலை
யொன்றுள துரையின முணரக் கேட்டியால்.

'அன்று அவன் உலகினை அளிக்க, ஆகியது
உன் தனிக் குலம் முதல்; உள்ள வேந்தர்கள்
இன்று அளவினும் முறை இகந்துளார் இலை;
ஒன்று உளது உரை இனம், உணரக் கேட்டியால்.'

பொ :—'அக்காலத்தில் அப்பிரமன் உலகத்தைப் படைக்க, உன்னுடைய ஒப்பற்ற (சூரிய) குலம் முதலில் உண்டாயிற்று; (அக்குலத்தில்) உள்ள அரசர்களுள் முறைமை தவறினவர்கள் இன்றுவரையிலும் இல்லை; இன்னமும் சொல்ல வேண்டுவது ஒன்று உள்ளது; தெரியக் கேட்பாய்.'

கு :—முறை இகந்துளார் என்றது, மூத்தவனிருக்க இளையவன் முடிசூடுதல்.

'ஆதிமா லமல னுபிகமலத் தயனுதித்
தயன் மரீசியெனு மண்ணலை யளித்த பரிசுங்
காதல் கூர்தரு மரீசிமக னுகி வளருங்
காசிபன் கதிருருக்கனை யளித்த பரிசும்'

எனக் கலிங்கத்துப் பரணியும் சூரியகுலத்தோற்றத்தைக் காட்டுகின்றது.
(123)

2586. இதவிய லியற்றிய குரவர் யாரினு
மதவியல் களிற்றினுய் மறுவில் விஞ்சைகள்
பதவிய விருமையும் பயக்கப் பண்பினு
லுதவிய வொருவனே யுயரு மென்பரால்.

'இத இயல் இயற்றிய குரவர் யாரினும்
மத இயல் களிற்றினுய்! "மறு இல் விஞ்சைகள்
பதவிய இருமையும் பயக்கப் பண்பினுல்
உதவிய ஒருவனே உயரும்" என்பரால்.'

பொ :—'வலிய ஆண்யானை போன்றவனே! நன்மையான செயல்களைச் செய்த பெரியோர்கள் (ஐங்குரவர்கள்) யாரையும் விட, "குற்றமில்லாத கல்விகளைப் பதவியாகவுள்ள இம்மை மறுமை யென்னும்

இரண்டின்பங்களையும் விளக்குமாறு அன்போடு கற்பித்துக் கொடுத்த ஆசிரியன் ஒருத்தனே உயர்ந்தவன்'' என்று (நூலோர்) கூறுவர்.'

கு :—'அரச னுவாத்தியான் ருய்தந்தை தம்முன், நிகரில் குரவரிவர் (ஆசாரக்கோவை-17) என்பதால் ஐங்குரவரை அறியலாம். ''எழுத்தறி வித்தவ னிறைவ னாகும்'' என்பதையும் நோக்குக. ''தொழற்குரிய தேவரும், குரவரேயெனப் பெரிது கோடியால்,'' (2569) ''அந்த நற் பெருங் குரவராரெனச், சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினுல், தந்தை தாயர்'' (2570) என்று முன் இராமன் கூறினவற்றை மறுத்து வசிட்டன் இவ்வாறு கூறினன் என்க. மத என்னும் உரிச்சொல் வலிமை யென்னும் பொருட்டு. ''மதவே மடனும் வலியு மாகும்.'' (தொல். சொல்-377) (124)

**2587.** என்றலால் யானுனை யெடுத்து விஞ்சைக
ளொன்றலா தனபல வுதவிற் றுண்மையா
லன்றெனு தின்றென தாணை யையநீ
நன்றுபோந் தளியுனக் குரிய நாடென்றான்.

'என்றலால் யான் உனை எடுத்து விஞ்சைகள்
ஒன்று அலா தன பல உதவிற்று உண்மையால்,
அன்று எனுது, இன்று எனது ஆணை, ஐய! நீ
நன்று போந்து அளி, உனக்கு உரிய நாடு' என்றான்.

பொ :—'என்று (நூலோர்) கூறுதலால், ஐயனே! உன்னைத் தேர்ந்துகொண்டு ஒன்றல்லாதனவாகிய பலவிச்சை(கல்வி)களையும் உனக்குக் கற்பித்தது மெய் ஆதலால், இப்பொழுது என் கட்டளையை அல்லவென்று மறுக்காமல் நீ உனக்கு உரிய நாட்டினை நன்றாக வந்து காக்கக் கடவை' என்று சொன்னான்.

கு :—என்றலால் என்றது முந்திய பாடலிற் கூறப்பட்டதனை. எடுத்து என்பதற்குக் குழந்தை முதலே எடுத்து வளர்த்து என்றும், பாராட்டி என்றும் பொருள் கூறலாம். விஞ்சை - கல்வி: அது பல துறைப்பட்டிருத்தலின் பன்மையிற் கூறினர். (125)

இராமன் வசிட்டனை மறுத்து வினவுதல் 2588-2591

**2588.** கூறிய முனிவனைக் குளிர்ந்த தாமரை
சிறிய கைகளாற் றொழுது செங்கணு

ஞறிய சிந்தனை யறிஞ வொன்றுரை
கூறுவ துளதெனக் கூறன் மேயினுன்.

‘கூறிய முனிவனைக் குளிர்ந்த தாமரை
சீறிய கைகளால் தொழுது, செங்கணுன்,
‘ஆறிய சிந்தனை அறிஞ! ஒன்று உரை
கூறுவது உளது’ எனக் கூறல் மேயினுன்.

பொ :—(முந்திய பாடல்களிற் கண்டவாறு) சொன்ன வசிட்ட முனிவனைச் சிவந்த கண்களையுடைய இராமன், குளிர்ச்சி பொருந்திய செந்தாமரை மலர்களைப் பகையென்று சினந்த கைகளால் அஞ்சலித்து, ‘அடங்கிய மனத்தையுடைய அறிவிற் சிறந்தவனே ! (நான்) சொல்ல வேண்டுவது ஒன்று உளது’ என்று சொல்லி (அதனைச்) சொல்லத் தொடங்கினுன்.

கு :—சீறிய என்றது வென்ற என்றபடி. குளிர்ந்த தாமரையை இராமன் கைகள் ஒத்திருந்ததை, அக்கைகள் தாமரையைச் சீறின என்று கவிஞர் நயம்படக் கூறினர்: அதனுல் ஆறிய மனத்தனுகிய வசிட்டனையும் இராமன் சிறிது சீறியே பேசலுற்ருன் என்பதைக் குறிப் பாகக் காட்டியுள்ளார் என்க. குருவின் மொழியை மீறியே இங்கு இராமன் பேசுகின்ருன் என்பதையும் நினைவிற் கொள்ளுதல்வேண்டும். செந்தாமரைபோன்ற கண்ணையுடையவன் ஆதலின், இராமனுக்குச் செங்கணுன் என்றே ஒரு பெயர் உண்டு. ஆயினும், இவ்விடத்தில் அவன் அப்பெயரால் சுட்டப்பட்டது, அவன் கொண்ட சீற்றத்தால் கண்கள் கூடச் சிறிது சிவந்தனவோ என்னும்படி யிருந்தது என்றவாறு.

ஜாபாலி முனிவன் நாத்திக வாதத்தைக் கூறி இராமனை இசையச் சொன்னுன் என்றும், அதற்கு இராமன் அம்முனியை முனிந்து கொண்டான் என்றும், அப்பொழுது வசிட்டர் இராமன் முனிவை ஆற்று வித்து அரசாளும்படி வேண்டினுர் என்றும் வான்மீகத்திற் கூறப் படுகிறது. (126)

2589. சான்றவ ராகதன் குரவ ராகதாய்
போன்றவ ராகபொற் புதல்வ ராகதான்
றேன்றரு மலருளான் சிறுவ செய்வெனென்
றேன்றபி னவ்வுரை மறுக்கு மீட்டதோ.

‘சான்றவர் ஆக, தன் குரவர் ஆக, தாய்
போன்றவர் ஆக, பொன் புதல்வர் ஆக தான்,

தேன் தரு மலர் உளான் சிறுவ! செய்வென் என்று
ஏன்றபின், அவ் உரை மறுக்கும் ஈட்டதோ?'

பொ:—'தேன் பிலிற்றும் தாமரைமலரில் வீற்றிருக்கிற பிரமனது மகனே! சால்புடைப் பெரியோரேயாகட்டும், தனது ஆசிரியரே யாகட்டும், தாய்போன்றவரேயாகட்டும், பொன்போன்ற புதல்வரே யாகட்டும், (ஒன்றைச்) செய்வேன் என்று ஏற்றுக்கொண்ட பிறகு, அந்தச் சொல் தடுக்கத்தக்க தன்மையுடையதோ?'

கு:—சான்றவர் - எல்லா நற்குணங்களும் நிறைந்த பெரியோர். பொற்புதல்வர் - பொன்னைப்போன்ற புதல்வர். "பொன்போற் புதல்வர்" (புறம் - 9). பொற்புதல்வர் என்பதைப் 'பொய்ப்புதல்வர்' எனப் பிழைபட எழுதியும், பின்னர் அதனை 'மெய்ப்புதல்வர்' எனத் திருத்தியும் வெவ்வேறு பாடங்கொண்ட சுவடிகளும் உள. வசிட்டர் அறத்திற்குப் புறம்பாகப் பேசினர் எனக்கொண்டு, பிரமனுக்குச் சிறுவன் என்று கூறுமுகத்தான், அவரும் சிறுமை முற்றிலும் நீங்கின பாடில்லை எனக் குறித்தவாறும். (127)

**2590.** தாய்பணித் துவந்தன
தந்தை செய்கென
வேயவெப் பொருள்களு
மிறைஞ்சி மேற்கொளாத்
தீயவப் புலையனிற்
செய்கை தேர்கிலா
நாயெனத் திரிவது
நல்ல தல்லதோ.

'தாய் பணித்து உவந்தன, தந்தை செய்கென
ஏய, எப்பொருள்களும் இறைஞ்சி மேற்கொளாத்
தீய அப் புலையனின், செய்கை தேர்கிலா
நாய் எனத் திரிவது நல்லது அல்லதோ?'

பொ:—'தாய் மகிழ்ந்து கட்டளையிட்டவையும், தந்தை செய்வாய் என்று ஏவியவையுமாகிய எந்தக் காரியங்களையும் வணங்கித் தலைமேற் கொள்ளாத கொடிய அந்தப் புலையனைக் காட்டிலும், செய்யத் தக்க வற்றை அறியாத நாயாக எங்கும் அலைவது நல்லதன்றோ?'

கு:—இன்னவை செய்யத்தக்கவை யென்றும், இன்னவை செய்யத் தகாதவை யென்றும் ஆய்ந்துணரத்தக்க மானுடப் பிறப்பில் வந்தவன்,

அன்னையும் தந்தையும் முன்னறி தெய்வம் எனக்கொண்டு அன்னார் ஏவலை வழிபட்டு மேற்கொள்ளவேண்டும்; அல்லது நாயினுடைய சிறந்த குணமாகிய நன்றியறிதல் என்னும் உணர்வோடாவது பெற்றோர் ஆணையின்படி நடக்கவேண்டும்; அங்ஙனமும் செய்யானாகில் அவன் நாயினும் இழிந்தோனாகிய தீய புலையனேயாவான் என்று இராமன் கூறினன் என்க. (128)

**2591.** முன்னுறப் பணித்தவர் மொழியை யானென
சென்னியிற் கொண்டது செய்வெ னென்றதன்
பின்னுறப் பணித்தனை பெருமை யோயெனக்
கென்னினிச் செய்வகை யுரைசெ யீங்கென்றான்.

'முன் உறப் பணித்தவர் மொழியை யான் என
சென்னியில் கொண்டு, "அது செய்வென்" என்றதன்
பின் உறப் பணித்தனை, பெருமையோய்! எனக்கு
என் இனிச் செய்வகை? உரைசெய் ஈங்கு' என்றான்.

பொ:—'பெருமை வாய்ந்தவனே! முற்படக் கட்டளையிட்ட தாய் தந்தையரது சொல்லை யான் என் தலைமேற்கொண்டு "அதைச் செய்வேன்" என்று உடன்பட்டபின்னாக (நீ வேறு) கட்டளையிட்டாய்: இப்பொழுது எனக்குச் செய்யத்தக்கது யாது? இங்கு நீ சொல்லியருள்க' என்று (வசிட்டனை நோக்கி இராமன்) கூறினான்.

கு:—'தாய்தந்தையர் கட்டளையை நான் முதலில் ஏற்றுக்கொண்டேன். அதன் பின்னாகக் குருவாகிய நீ வேறு கட்டளையிடுகின்றாய். நான் எதைச் செய்வது என்று நீதான் சொல்லவேண்டும்' என்று கேட்குமுகத்தான் தாய்தந்தையர் கட்டளையின் மறுக்கமுடியாத முதன்மையை இராமன் வலியுறுத்தினன் என்க. (129)

### பரதன் தானும் காடுறைவதாகக் கூறல்

**2592.** முனிவனு முரைப்பதோர் முறைமை கண்டில
மினியென விருந்தன னிளைய மைந்தனு
மனையதே லாள்பவ ராள்க நாடுநான்
பனிபடர் காடுடன் படர்தன் மெய்யென்றான்.

முனிவனும் 'உரைப்பது ஓர் முறைமை கண்டிலம்
இனி' என இருந்தனன்; இளைய மைந்தனும்,

'அனையதேல் ஆள்பவர் ஆள்க நாடு; நான்
பனி படர் காடு உடன் படர்தல் மெய்' என்றான்.

பொ :—(இராமன் அவ்வாறு கூறவும்) வசிட்டனும் 'இனிக்கூறுவ தாகியதொரு முறைமையை யறிந்திலம்' என்று எண்ணி வாளா இருந்தனன். (அதையறிந்த) தம்பியாகிய பரதனும், 'அப்படியானல் நாட்டையாள்பவர்கள் ஆளட்டும் : நான் குளிர்ச்சி நீங்கிய காட்டில் இராமனுடன் செல்லுதல் உண்மை' என்று கூறினன்.

கு :—பனி – குளிர்ச்சி. படர்தல் - ஓடுதல்; செல்லுதல் : நீங்குதல். (130)

## இமையவர் விசும்பில் நின்று பரதன் நாடாள வேண்டும் எனல் 2593-2594

**2593.** அவ்வழி யிமையவ ரறிந்து கூடின
ரிவ்வழி யிராமனை யிவன்கொண் டேகுமேற்
செவ்வழித் தன்றுநஞ் செயலென் றெண்ணினர்
கவ்வையர் விசும்பிடைக் கழறன் மேயினர்.

அவ்வழி இமையவர் அறிந்து கூடினர்,
'இவ்வழி இராமனை இவன் கொண்டு ஏகுமேல்,
செவ்வழித்து அன்று நம் செயல்' என்று எண்ணினர்,
கவ்வையர், விசும்பிடைக் கழறல் மேயினர்.

பொ :—அவ்வேளையில் தேவர்கள் (இங்கு நடந்த யாவையும்) உணர்ந்து ஒன்று கூடி 'இப்பொழுது இராமனைப் பரதன் (அயோத்திக்கு) அழைத்துக்கொண்டு செல்வானாகில் (அரக்கரையொழித்தலாகிய) நமது செய்கை நல்ல வழியில் நிறைவேறாது' என்று எண்ணியவர்களாய், ஆரவாரம் செய்து வானிடையிலே நின்று சொல்லத் தொடங்கினர்கள்.

கு :—தேவர்கள் சொல்லியது வரும் பாடலிற் கூறப்படும். (131)

**2594.** ஏத்தரும் பெருங்குணத் திராம னிவ்வழி
போத்தருந் தாதைசொற் புரக்கும் பூட்சியா
னுத்தவாண் டேழினோ டேழு மங்கிலங்
காத்தலுன் கடனிவை கடமை யென்றனர்.

'ஏத்தரும் பெருங்குணத்து இராமன் இவ்வழி
போத்து அரும் தாதை சொல் புரக்கும் பூட்சியான்
ஆத்த ஆண்டு ஏழினேடு ஏழும் அந்நிலம்
காத்தல் உன் கடன்; இவை கடமை' என்றனர்.

பொ :—'புகழ்தற்கு அருமையான சிறந்த குணங்களையுடைய இராமன் இவ்விடத்தில் மனக்குற்றமில்லாத தந்தையின் சொல்லைப் பாதுகாக்கும் உரிமையையுடையவனுகின்ருன்; (தந்தையால்) நியமிக்கப்பட்ட அந்தப் பதினன்கு ஆண்டளவும் அவ்விடத்து இராச்சியத்தை ஆளுதல் உனது முறைமை; இவ்விரண்டும் (இருவராலும் தவருது ஆற்றுதற்குரிய) கடமைகளாம்' என்று கூறினர்கள் (தேவர்கள்).

கு :—பொத்து – மனக்குற்றம்: அது போத்தென்ருனது விகாரம்; "போத்தருர் புல்லறிவினர்" (நாலடியார் - 351). ஆத்த: யாத்த - நியமித்த. அரும்–இல்லாத: அருமை இன்மை மேற்று. வான்மீகத்தில் வேறுவிதமாகக் கூறப்படுகிறது. இராமன் இணங்காதது கண்டு பரதன் பன்னசாலை வாயிலின் முன் தருப்பையை விரித்து அதன் மீதிருந்து உண்ணுவிரதம் இருக்கப்போவதாகக் கூறி, சுமந்திரனைத் தருப்பைப் புல்லைப் பரப்பச்சொன்னதாகவும், சுமந்திரன் தயங்கி நின்றதாகவும், அது கண்டு பரதனே தருப்பையை விரித்துப் படுத்துக்கொண்டதாகவும், அப்பொழுது இராமன் பரதனைத் தடுத்து, அவ்வாறு நோன்பு கொள்ளுதல் பிராமணருக்கே உரியது என்றும் ஏனையோர் அவ்விதம் படுத்து ஆணையிட்டுத் தடுக்க உரிமையற்ருேர் எனவும் கூறி வேண்டிய தாகவும், அப்பொழுது பரதன் அங்கிருந்தோரை இராமனிடம் பரிந்து பேசச்சொன்னதாகவும், அதற்கு அவர்கள் இராமன் விரதத்தை ஒருவராலும் தடுக்க முடியாது என்பதை வற்புறுத்தியதாகவும், அவர்கள் கூறுவதை நோக்கியாவது பரதன் அரசாள இணங்கவேண்டும் என்று இராமன் கூறியதாகவும், பரதன் தானே வனவாசம் செய்வதற்குரியன் என்றதாகவும், இவர்களின் உரையாடலைக் கேட்டு மயிர் சிலிர்த்த இருடிகளும், சித்தர்களும், கந்தர்வர்களும் தோன்றி இராமன் கூறுவதே முறை என்று சொல்லிப் போனதாகவும் வான்மீகி பாடியுள்ளார். (132)

பதினன்காண்டும் ஆளும்படி இராமன் கட்டளையிடுதல்

2595. வானவ ருரைத்தலு மறுக்கற் பாலதன்
றியா னுனை யிரந்தனெ னினியென் ணுணையா
லானதோ ரமைதியி னளித்தி பாரெனுத்
தானவன் றுணைமலர்த் தடக்கை பற்றினன்.

வானவர் உரைத்தலும், 'மறுக்கற்பாலது அன்று ;
யான் உனை இரந்தனென், இனி என் ஆணையால்
ஆனது ஓர் அமைதியின் அளித்தி பார்' என,
தான் அவன் துணை மலர்த் தடக்கை பற்றினன்.

பொ :—(இவ்வாறு) தேவர்கள் கூறியவுடனே (இராமன் பரதனை நோக்கி, 'இத்தேவர் கட்டளை) மறுத்தற்குரியதன்று ; நான் உன்னை வேண்டிக்கொண்டேன் ; இப்பொழுது என் கட்டளைப்படி (பதினான் காண்டான) நியமிக்கப்பட்ட ஒரு காலவரையறையளவும் (நீ) பூமியை அரசாள்வாயாக' என்று சொல்லி இராமன் பரதனுடைய தாமரைமலர் போன்ற இரண்டு பெரிய கைகளையும் பிடித்துக்கொண்டான்.

கு :—கைகளைப் பிடித்துக்கொண்டு வேண்டுதல் மறுத்தலாகாது என்னும் பொருட்டு. (133)

பதினான்காண்டில் திரும்பாவிடில் பரதன் சாவேன் எனல்

2596. ஆமெனி லேழிரண் டாண்டி லையநீ
நாமநீர் நெடுநகர் நண்ணி நானிலங்
கோமுறை புரிகிலை யென்னிற் கூரெரிச்
சாமிது சரதநின் னாணை சாற்றினேன்.

'ஆம் எனில், ஏழ் இரண்டு ஆண்டில், ஐய ! நீ
நாம நீர் நெடு நகர் நண்ணி நானிலம்
கோ முறை புரிகிலை என்னின், கூர் எரிச்
சாம், இது சரதம் ! நின் ஆணை சாற்றினேன் !'

பொ :—'அப்படியானால், ஐயனே ! பதினான்கு ஆண்டுகள் கழிந்தவுடன் (பகைவர்கள்) அஞ்சுதற்குரிய அகழி நீர் சூழ்ந்த பெரிய அயோத்தி நகரினை நீ அடைந்து பூமியை அரசாளாவிடில், மிக்க தீயில் விழுந்து இறப்பேன், இது நிச்சயம் ! உன்மேல் ஆணையிட்டு உரைத்தேன் !' (என்று பரதன் கூறினான்.)

கு :—பதினான்கு ஆண்டுகளுக்குமேல் ஒரு நாள் தாழ்த்தலும் கூடாது என்பது பரதன் கருத்து. இவை வெற்றுரையல்லவென்பது பின் யுத்தகாண்டம், மீட்சிப் படலத்தில் பதினான்காமாண்டெல்லை கழிகையில் பரதன் தீ வளர்த்து விழத்தொடங்கியதால் அறியலாம். (134)

### இராமன் இசைதல்

**2597.** என்பது சொல்லிய பரதன் யாதுமோர்
துன்பில னவனது துணிவை நோக்கினு
னன்பின னுருகின னன்ன தாகென்றுன்
றன்புகழ் தன்னினும் பெரிய தன்மையான்.

என்பது சொல்லிய பரதன், யாதும் ஓர்
துன்பிலனவனது துணிவை நோக்கினுன்;
அன்பினன், உருகினன், 'அன்னது ஆக' என்ருன்,
தன்புகழ் தன்னினும் பெரிய தன்மையான்.

பொ :—என்ற இதனைச் சொன்ன பரதன், எத்தகையதான துன்பமும் இல்லாதவனுகிய இராமன் கூறும் முடிவை எதிர்பார்த்தான்; தன் புகழினும் மிக்க நற்குணங்களையுடையவனுகிய இராமன் அன்பினனுகி மனமுருகாநின்று 'அங்ஙனமேயாக' என்று கூறினுன்.

கு :—'துன்பிலன்' என்பது பரதனைக் குறிப்பதாகக் கொள்வாரும் உளர். 'விம்மினன் பரதனும்' என்று அடுத்து வருதலால் இது பொருந்தாதென்க. 'தன்புகழ் தன்னினும் பெரிய தன்மையான்' என்பதற்கு, 'தன்னைக்காட்டிலும் தன் புகழில் பெரியான்; என்றது, முற்றிலும் புகழவியலாதவன் என்றபடி' என்று பொருள் கூறுவாரும் உளர். அது அத்துணை சிறக்காது என விடுக்க. (135)

### இராமன் மரவடி நல்குதல்

**2598.** விம்மினன் பரதனும் வேறு செய்வதொன்
றின்மையி னரிதென வெண்ணி யேங்குவான்
செம்மையின் றிருவடித் தலந்தந் தீகென
வெம்மையுந் தருவன விரண்டு நல்கினுன்.

விம்மினன் பரதனும், வேறு செய்வது ஒன்று
இன்மையின், 'அரிது' என எண்ணி ஏங்குவான்,
'செம்மையின் திருவடித்தலம் தந்தீக' என
எம்மையும் தருவன இரண்டும் நல்கினுன்.

பொ :—பரதனும் வேறு செய்யக்கடவ தொன்றுமில்லாமையால், (இராமனைப் பிரிந்துசென்று அரசாளுதல்) மிகக் கடினம் என்று கலங்கித் திகைத்தவனுய் 'உன் திருவடி நிலையை அன்போடு கொடுத்தருள்வாய்' என்று வேண்டுதலும், எல்லா வுலக இன்பங்களையும் கொடுத்தருள்வன வான இரண்டு திருவடி நிலையையும் (இராமன்) கொடுத்தருளினுன்.

கு :—"சுவாமீ! பொன்னுலலங்கரிக்கப்பெற்ற பாதுகைகளில் திருவடிகளால் ஏறியருள்வீராக; ஏனெனில், இவைகள் எல்லா வுலகத்தின் யோக நலத்தையும் நடத்த வல்லவை" என்று பரதன் பாதுகைகளை முன் வைத்தலும், இராமன் பாதுகைகளில் ஏறி இறங்கி அவற்றைப் பரதனுக்கு அளித்தான் என்றும் வான்மீகத்தில் கூறப்படுகிறது. (136)

### பரதன் மரவடிகளைத் தலைமேற்கொண்டு செல்லுதல்

**2599.** அடித்தல மிரண்டையு
மழுத கண்ணினன்
முடித்தல மிவையென
முறையிற் சூடினன்
படித்தலத் திறைஞ்சினன்
பரதன் போயினன்
பொடித்தல மிலங்குறு
பொலங்கொண் மேனியான்.

**அடித்தலம் இரண்டையும் அழுத கண்ணினன்,**
**முடித்தலம் இவை என முறையின் சூடினன்;**
**படித்தலத்து இறைஞ்சினன், பரதன் போயினன்,**
**பொடித்தலம் இலங்குறு பொலம் கொள் மேனியான்.**

பொ :—அழுத கண்களையுடையவனும் புழுதி (படிந்து) விளங்குகிற அழகுகொண்ட திருமேனியையுடையவனுமாகிய பரதன், அத்திருவடிநிலை இரண்டினையும் கிரீடங்கள் இவையேயென்று முறைமைப்படி தலைமேற்கொண்டவனாய், தரையில் விழுந்து வணங்கி மீண்டு சென்றான்.

கு :—பாதுகைகளைத் தலைமேற்கொண்டவண்ணம் கீழே விழுந்து இராமனை வணங்கி யெழுந்து பரதன் மீண்டு சென்றான் என்றவாறு. (137)

### பரதனுடன் வந்த யாவரும் திரும்புதல் 2600-2601

**2600.** ஈன்றவர் முதலிய வெண்ணில் சுற்றமுஞ்
சான்றவர் குழுவொடு தவத்து ளோர்களும்
வான்றரு சேனையு மற்றுஞ் சுற்றுற
மூன்றுநூல் கிடந்ததோண் முனியும் போயினன்.

ஈன்றவர் முதலிய எண் இல் சுற்றமும்,
சான்றவர் குழுவொடு தவத்துளோர்களும்,
வான் தரு சேனையும், மற்றும் சுற்றுற,
மூன்று நூல் கிடந்த தோள் முனியும் போயினன்.

பொ :—பெற்ற தாய்மார் முதலான அளவில்லாத உறவினர்களும், பெரியோர் கூட்டமும், தவஞ்செய்கின்ற முனிவர்களும், பெருமையுடைய சேனையும், மற்றுமுள்ளோர்களும் சூழ்ந்து செல்ல, முப்புரிநூல் தங்கிய தோளையுடைய வசிட்ட முனியும் உடன் மீண்டு சென்றான்.

கு :—‘ மற்றும் ’ என்றது, ஏனை அரசர் முதலியோரை. (138)

**2601.** பண்டைநூ றெரிபரத் துவனும் போயினன்
மண்டுநீர் நெடுநகர் மாந்தர் போயினர்
விண்டுறை தேவரும் விலகிப் போயினர்
கொண்டறன் னாணையாற் குகனும் போயினன்.

பண்டை நூல் தெரி பரத்துவனும் போயினன் ;
மண்டு நீர் நெடு நகர் மாந்தர் போயினர் ;
விண்டு உறை தேவரும் விலகிப் போயினர்;
கொண்டல்தன் ஆணையால் குகனும் போயினன்.

பொ :—பழமையான வேத சாத்திரங்களை அறிந்த பரத்துவாச முனிவனும் (தன் இருப்பிடம்) சென்றான்; மிக்க அகழி நீர் சூழ்ந்த பெரிய அயோத்தி நகரத்து மக்களும் திரும்பிச் சென்றார்கள் ; வானில் வந்து கூடிய தேவர்களும் (அவ்விடம்விட்டு) நீங்கிச்சென்றார்கள் ; காள மேகம் போன்ற இராமனது கட்டளையால் குகனும் சென்றான்.

கு :—இறுதியில் குகனைக் கூறியது, அவன் இராமனைப் பிரிய மனமில்லாது பின் தங்கி, இராமனின் வற்புறுத்தலின்பின் சென்றான் என்றவாறு. (139)

### பரதன் அயோத்திநகருட் புகாதிருத்தல்

**2602.** பாதுகந் தலைக்கொடு பரதன் பைம்புனன்
மோதுகங் கையின்கரை கடந்து முந்தினன்
போதுகுங் கடிபொழி லயோத்தி புக்கில
னேதுகங் குலினெடி துறக்க நீங்கினன்.

பாதுகம் தலைக்கொடு பரதன் பைம் புனல்
மோது கங்கையின் கரை கடந்து முந்தினன்,
போது உகும் கடி பொழில் அயோத்தி புக்கிலன்,
ஒது கங்குலில் நெடிது உறக்கம் நீங்கினன்.

பொ :—பரதன் இராமனுடைய திருவடிநிலை இரண்டையும் தலைமேற் சுமந்துகொண்டு, பசுமையான நீர் வந்து எற்றுகிற கங்கையின் கரையைத் தாண்டி முற்பட்டு, மலர் சிந்துகிற மணமிக்க சோலைகள் சூழ்ந்த அயோத்தி நகரத்தினுட் செல்லாதவனாய், சொல்லப்பட்ட இரவில் மிகவும் தூக்கமொழிந்து. ('இருத்தன் மேயினன்' என அடுத்த கவியோடு முடியும்.)

கு :—இதுவும் அடுத்துவரும் செய்யுளும் ஒரு தொடர். (140)

இராமன் பாதுகை அரசாளப் பரதன் தொழுதிருத்தல்

**2603.** நந்தியம் பதியிடை
நாதன் பாதுகஞ்
செந்தனிக் கோன்முறை
செலுத்தச் சிந்தையா
னிந்தியங் களையவித்
திருத்தன் மேயின
னந்தியும் பகலுநீ
ரருத கண்ணினன்.

நந்தியம் பதியிடை, நாதன் பாதுகம்
செந் தனிக் கோல் முறை செலுத்தச் சிந்தையான்
இந்தியங்களை அவித்து இருத்தல் மேயினன்,
அந்தியும் பகலும் நீர் அருத கண்ணினன்.

பொ :—நந்திக்கிராமம் என்னும் இடத்திலே, தலைவனான இராமனுடைய திருவடிநிலை ஒப்பற்ற செங்கோலை முறைப்படி செலுத்த, (பரதன்) இரவும் பகலும் நீர்ப்பெருக்கு இடையருத கண்களையுடையவனாய், மனத்தினால் ஐம்பொறிகளையும் அடக்கித் தங்கியிருத்தலைப் பொருந்தினன்.

கு :—நந்திக்கிராமம் என்பது அயோத்திநகருக்கு அருகிலுள்ள தோர் ஊர். (141)

## இராமனும் இலக்குவனும் சீதையும் தெற்கே செல்லுதல்

**2604.** குன்றினி லிருந்தன னென்னுங் கொள்கையா
னின்றவர் நலிவரா னேயத் தாலெனுத்
தன்றுணைத் தம்பியுந் தானுந் தையலுந்
தென்றிசை நெறியினைச் சேறன் மேயினன்.

'குன்றினில் இருந்தனன் என்னும் கொள்கையால்
நின்றவர் நலிவரால் நேயத்தால்' எனுத்
தன் துணைத் தம்பியும், தானும், தையலும்,
தென் திசை நெறியினைச் சேறல் மேயினன்.

பொ :—'சித்திரகூடமலையிலுள்ளான் என்ற எண்ணத்தால் (அயோத்தி நகரத்தில்) உள்ளவர்கள் அன்பின் காரணமாக (அடிக்கடி வந்து) வருத்துவர்' என்று எண்ணி, இராமன், தனக்குத் துணையான தம்பி இலக்குவனோடும், சீதையோடும், தெற்குத் திக்கை நோக்கிய வழியில் நடத்தலைப் பொருந்தினன். (142)

திருவடிசூட்டு படலம் முற்றிற்று.

அயோத்தியா காண்டம் முற்றுப்பெற்றது.

## ஒப்பு நோக்கப்பெற்ற சுவடிகளும், அச்சுப்பிரதிகளும் அவற்றின் குறியீடுகளும்

| குறியீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | தஞ்சை சரஸ்வதி மால் | 367–8 | |
| 2 | ,, | 369 | |
| 3 | ,, | 370 | |
| 4 | ,, | 371 | |
| *5 | ,, | 372 | |
| 7 | ,, | 377 | |
| 12 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 30 | |
| 13 | ,, | 42 | |
| 15 | ,, | 471 | |
| 16 | ,, | 472 | |
| 17 | ,, | 672 | |
| 18 | ,, | 677 | |
| 19 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | |
| 20 | ,, | | |
| 21 | ,, | | |
| 22 | ,, | | |
| 23 | அண்ணுமலைப் பல்கலைக் கழகம் | T.R.D.L. 1150 | |
| 24 | திரு. C. கணேசையர், யாழ்ப்பாணம். | | |
| 25 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | |
| 26 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 27 | |
| 27 | ,, | 28 | |

* 6, 8-11, 14, 35-38, 48ஆம் ஏடுகளில் அயோத்தியா காண்டம் இல்லை.

| குறி யீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 28 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 33 | |
| 29 | ,, | 41 | |
| 30 | ,, | 540 | |
| 31 | அரசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலை, சென்னை. | 514 | |
| 32 | திரு. சா. கணேசன், கம்பன் கழகம், காரைக்குடி. | 5 | சித்தூர் வீராசாமி நாயுடு பதிப்பு 1884. |
| 33 | ,, | 8 | சாத்தம்பாக்கம் கிருஷ்ணசாமி முதலியார் பரிசோதித்தது. ஜீவரக்ஷாமிருதப் பதிப்பு 1886 |
| 34 | ,, | 16 | திருமயிலை சண்முகம் பிள்ளை பரிசோதித்தது. நிரஞ்சன விலாசப் பதிப்பு 1924. |
| 39 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 40 | |
| 40 | | | ஆழ்வார் திருநகரி ப்ரதிகளின் படி பெரியன் ஸ்ரீநிவாசையங் கார் பதிப்பித்தது 1942. |
| 41 | | | வை. மு. கோபாலகிருஷ்ண மாசாரியர் உரைப்பதிப்பு. 1955 |
| 42 | | | கவித்தலம் துரைசாமி மூப்பனர் பதிப்பு 1888. |
| 43 | அண்ணாமலைப் பல்கலைக் கழகம் | T.R.D.L. 1147 | |
| 44 | ,, | T.R.D.L. 1148 | |
| 45 | | | உ. வே. சாமிநாதையர் நூல் நிலையப் பதிப்பு, அடையாறு. |
| 46 | | | பூமகள் விலாசம் பதிப்பு 1928 |
| 47 | அண்ணாமலைப் பல்கலைக் கழகம் | | |
| 49 | ,, | T.R.D.L. 1149 | |
| 50 | | | திருமயிலை சண்முகம் பிள்ளை உரை 1909 |
| 51 | | | கடலூர் நாராயணசாமி நாயுடு கொடுத்தது. சென்னை ராஜ தானிப் பாடசாலைப் புத்தகச் சங்கத்தார் பதிப்பு. |
| 52 | | | மலிவுப் பதிப்பு (எஸ். ராஜம் வெளியிட்டது) 1958. |

## குறிப்பு

இப்பதிப்பில் மூலத்தில் எடுத்துக்கொண்ட பாடங்கள், செய்யுட்களின் தொடரெண் முறைப்படி அடிமுறையாகவும் சீர்முறையாகவும் தடித்த முதலெழுத்தோடு முன்னே காட்டப்பெற்றுள்ளன. அவற்றோடு வேறுபட்ட பாடங்கள் அவற்றின்பின் முறையே சேர்க்கப்பெற்றுள்ளன. பாடங்களின் பின்னே குறிக்கப்பட்டுள்ள எண்கள், அப்பாடங்கள் உள்ள சுவடிகளின் குறியீடுகள். 40, 41, 45 என்ற எண்கள், அக்குறியீடுள்ள அச்சுப்புத்தகங்களிலுள்ள மூலபாடங்களுக்கும், அப்புத்தகங்களில் பிரதிபேதங்களாகக் காட்டப்பட்ட பாடங்களுக்கும் உரியன. '46—' என்னும் குறியீடு, 46 என்னும் எண் இட்டுக் காட்டிய அச்சுப்புத்தகத்தோடு ஒத்த பாடம் உடைய ஏடுகளின் எண்களையும் குறிக்கும். பிழைபட்ட பாடங்களும் அவற்றைக் காட்டும் சுவடிகளின் எண்களும், சிதைந்த சுவடிகளின் எண்களும் விரிவஞ்சிக் குறிக்கப்படவில்லை.

---

# பாட வேறுபாடு

## 6. கங்கைப் படலம்

### 2016

தன்மேனியின்; 46—
தன்மேனியில்; 47.
தன்சீறின; 20.

விரிசோதியின்; 46—
விரிசோதியில்; 47.
மிளிர்சோதியின்; 41.

II இடையாளொடும்; 46—
இடையோளொடும்; 32.
இடையாள்வர; 4, 47.

இளையாளொடும்; 46—
இளையாளொடு; 29, 41.

போனான்; 46—
போவான்; 19, 22, 25.

III மரகதமோ; 46—
மரதகமோ; 5, 20, 28, 47.

மறிகடலோமழைமுகிலோ; 46—
மழைமுகிலோமறிகடலோ; 4, 12. 23, 27, 29, 41, 43, 47.

IV இவன்வடிவென்பதொர்; 46-
இவர்வடிவென்பதொர்; 4, 5, 26, 27, 31.
இவன்வடிவேதென; 1, 3, 7.

அழியாவழகுடையான்; 46—
அழியாவழகுடையோன் ; 31.
அறியாவழகுடையான் ; 1, 3, 4, 7.

### 2017

I அறலுன்னிய; 46—
அறல்பன்னிய; 1, 3-5, 7, 15, 17–20, 22, 23, 25-29, 40, 41, 43, 49.
அறல்பின்னிய; 16.
அறல்மன்னிய; 12, 13.
அறல்மின்னிய; 47.

கடலமுதின்; 52.
கடலமிர்தின்; 46—
கடலமுதம்; 20.

II தெளிவன்னதொர்; 46—
தெளியன்னதொர்; 2, 4, 20, 28, 30, 31, 39, 41, 44, 45, 47, 49.
தளியன்னதொர்; 41, 45.

மொழியாள்; 46—
மெய்யாள்; 20.

தவமன்னதொர்; 46—
தயவன்னதொர்; 13.

செயலாள்; 46—
பொறையாள்; 5, 12, 15-20, 22, 23, 27–29, 40, 41, 43, 45, 49, 51.

III இடையாளொடும்; 46—
இடையாளொடு; 3.

IV உடனாடுவ; 1, 3, 5, 7, 12, 13, 15-20, 22. 25-29, 40, 41, 44, 45, 47, 51.
நடமாடுவ; 46—
உடனோடுவ; 4.
விளையாடுதல்; 41.
விளையாடுவ; 23, 41, 43, 49.

### 2018

I ஐயன்றனது; 46—
ஐயன்கையில்; 5, 15-20, 22, 25, 27, 40, 41.
ஐயன்கயில்; 28, 29.

அலகம்பையும்; 46—
அழகம்பையும்; 27, 29, 41.

